மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

# திருவாசகம்

விளக்கவுரை

மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்





வெளியீடு: சிவஞான சுவாமிகள் பேரவை

விக்கிரமசிங்கபுரம் - 627 425



க்கூத்தனே என்று சொல்லிச் சிவச்சோதியிற் கலத்தல்

70-5

உ

சிவமயம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த

# திருவாசகம்

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A. B.T

திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான்
ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரைந்த

## குருவருள் விளக்கம்

என்னும் உரை

**1**




வெளியீடு : சிவஞான சுவாமிகள் பேரவை
505 E, பிரதான சாலை
விக்கிரமசிங்கபுரம் - 627425
திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு.

7025

உ
சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

அன்றே யென்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே.

திருச்சிற்றம்பலம்

இதயத்தாமரையில் இறையொளி விளங்குகின்றபோது சுரக்கின்ற இன்பத்தேன் அருட்கவிதை. அருட்கவிதைகள் அடியார்களுக்கும் எப்போதும் சுரப்பதில்லை. செந்தாமரை ஏழுநாட்கள்வரை அலர்ந்து குவிந்து அலருமாயினும் செஞ்ஞாயிற்றின் இளங்கதிர் அன்றன்று உதயத்தில் தீண்டுகின்ற போதுதான் செந்தேனைப் பிலிற்றும். கற்றா கன்று முட்டக் கனிவுகொண்டபோதுதானே தீம்பாலைச் சொரியும். அவை போல அடியார்களாக இருந்தாலும் அவர்கள் உலகியலிற் றோய்ந்து பசிக்கும் பிணிக்கும் உட்பட்டு, உடலோம்பும் தொழிலில் ஈடுபட்டுநிற்கும்போது மனத்தில் அருட்கவிதைகள் சுரப்பதில்லை. இறையொளி அவர்கள் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளவேண்டும். அவர்கள் உள்ளம் இறைவனைப் பற்றி நிற்கவேண்டும். இரண்டும் ஒத்த காலத்தே ஊறுவன கவிதைத்தேன். சமய அடிப்படையிற் சொன்னால் ஆன்மபோதம் கெட்டுச் சிவபோதம் மிக்குச் சிவனும் தானுமாய், ஏகபோகமாய் அத்துவிதக்கலப்பில் - அநுபூதிநிலையில் ஆழ்ந்திருக்கின்றபோதுதான் அருட்கவிதைகள் தோன்றுகின்றன எனலாம்.

அருட்கவிதைகள் அம்பலவாணனைப் போன்றவை; ஐந்தொழில் ஆற்றவல்லவை; ஆனந்தமே வடிவானவை; திருவருட்சத்தி உண்ணின்றுணர்த்த உணரக்கூடியவை; இன்பக் கடலுள் அழுத்தும் அன்புப் புணையாய்த் துன்பக் கடலைக் கடக்கத் துணைசெய்பவை; இறைவனுக்கும் நமக்கும் உள்ள இடைவெளியை மிகக் குறைத்து, இறைவனை ஒவ்வொருவர் உள்ளத்தும் ஓங்காரமாய் உறையச்செய்பவை; மிக அணுக்கத்தில் வைத்து இறைவனைக் காட்டுபவை; இறைவன் நாம் உய்ய - நம்மை ஆட்கொள்ள - நமக்காக எத்துணை அருள் விளையாடல்களைச் செய்கிறான் என்பதை அடிக்கடி நினைவூட்டி அவன் அருளாற்றல்களை அகங்கொளச் செய்பவை; நம்மை நன்றி மறவாதவர்களாகக் காப்பவை. இல்லாவிடின்,

'அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே!
அன்பினில் விளைந்த ஆரமுதே!'

என்று வாயாரப் பாடும்போது நம் கண்ணுக்கும் நாவிற்கும் உடலுக்கும் அவை விருந்தாகி இனிக்க நாம் ஆனந்தக்கண்ணீர் பெருக்குவோமா? வாய் குழறுவோமா? உடல் நடுங்குவோமா?. மெய்ம்மயிர் சிலிர்ப்போமா?

'பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கிப்
புழுத்தலைப் புலையனேன் தனக்கு'

என்கிறபோது, அப்பப்பா! வாழவேண்டிய நாட்களைப் பாழ் நாட்களாக்கிவிட்டோமே! என்றைக்கும் மாறாத - அழியாத உண்மையைக் கண்டு உவகைகொண்டு உயரவேண்டிய நாம் பொய்ம்மையைப் பெருக்கி, கவலையை வளர்த்து, துன்பக்கடலுள் துளைகின்றோமே! நம் காலம் எவ்வளவு கழிந்துவிட்டது? எஞ்சி நிற்பன எவ்வளவு? கொஞ்சகாலந்தானே! இத்தனை நாளும் நாம் தேடிக்கொண்டவை யாவை? இழிதகைமையும் - புழுத்தலையும் பாழ்பட்ட நிலைகளுந்தாமே என்று ஆத்தும சோதனை பண்ணிக்கொள்வோமா?

'செம்மையேயாய சிவபதம் அளித்த செல்வமே!'

ஆகா! சிவபதம் எத்துணைச் செம்மையானது; துன்பக் கலப்பில்லாதது; ஒளிமயமானது; உணர்வுமயமானது; நாம் இருந்த இடம் எங்கே? நம் உள்ளம் எங்கெங்கே சுற்றி அலைந்துகொண்டிருந்தது? நமக்கும் இத்தகைய இன்ப உலகத்தை எளிதில் உதவினனே சிவன்; எமக்கெல்லாம் என்றென்றும் செல்வமாயினனே என்று சிந்திப்போமா?. அவன்

செய்த உபகாரத்தை உன்னிப் பார்ப்போமா? இப்படியெல்லாம் நம் மனத்தை அன்பு நிலைக்களனாக - ஆண்டவன் உறையும் கோயிலாக - அருள்சுரக்கும் சுனையாக மாற்றியமைப்பன அருட்கவிதைகள்.

## உண்மையான அருட்கவிதைகள் எவை ?

அருட்கவிதைகளுக்கு அழிவேயில்லை. பசிக்கு உணவும், பிணிக்கு மருந்தும்போல அவ்வக்காலத் தேவைகளுக்கு ஏற்ப எழுந்து, தேவை முடிந்தவுடனே புற்றீசல்போல இருந்த சுவடே தெரியாமல் மறைவன அருட்கவிதைகள் ஆகா. உண்டவுடன் அறிவை மயக்கும் மதுப்போலப் படித்தவுடன் அறிவை மயக்கிக் களிப்பு ஊட்டிக் கருத்தழிப்பனவும் அருட்கவிதைகளாகா. பேய் பிடித்தவன் தன்செயலற்று ஆவேசங் கொள்வதுபோல வெறிபிடித்த நேரத்தில் கருத்தில் ஊறிக் கண்டபடி பிதற்றியவைகளும் அருட்கவிதைகள் ஆகா. பொழுது விடிந்தால் வேடம் கலைவதுபோல இக்கவிதைகள் தரும் உணர்ச்சிக்கூறுகள், அறிவு தெளிந்தபின் என்ன காரியம் செய்துவிட்டோம் என்று, பாடிய கவிஞனையே இரங்க வைப்பதை நம் கண்ணாலேயே பார்க்கிறோம். ஆகவே அருட்கவிதைகள் அறிவு, அருள், ஆசாரம், அடக்கம், ஆனந்தம் பயப்பனவாய் அழியாத் தன்மையைப்பெற்று ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நிலைபெறுவனவே என்பது தெளிவு.

அருளாளர்கள், மொழி சாதி முதலான பாகுபாடுகட்கு அப்பாற்பட்டவர்கள். அவர்கள் காண்பன உண்மையும் அருளும் அருளாற்பெறும் இன்பமுமே. இவை அவரவர்களுடைய தாய்மொழி வாயிலாக வெளிப்படுவது இயற்கை. ஆதலால் எம்மொழிகளிலும் அருட்கவிதைகள் தோன்றலாம்; தோன்றியிருக்கின்றன. ஆனால், சில மொழிகள், அன்பூட்டும் அருட்கவிதைகளாக உருவெடுக்கும் உரிமையை இயற்கையாகவே பெற்றுள்ளன. இனிமை, எளிமை, ஓசை, பொருளாழம் முதலான கூறுகள் அவைகட்கு இயல்பாகவே அமைந்துள்ளமையே காரணம். அத்தகைய மொழிகளுள் செந்தமிழ் சிறந்து விளங்குவதை மொழிப்பேரறிஞர்கள் நன்கு அறிவர்.

செந்தமிழ்க்குள்ள சிறப்பெல்லாம் பத்திப்பனுவல்கள்பலவுடைமையே எனலாம். செந்தமிழ், சைவ வைணவ சமயங்களைப்பற்றிய பனுவல்கள் பலவற்றைப் பெற்றுச் சிறந்தது. அவற்றுள் அன்பையே கடவுளாகக்கொண்டு விளங்கும் சைவ

சமயத்தில் பத்திப் பனுவல்கள் பன்னிரண்டு திருமுறைக ளாகப் பகுக்கப்பெற்றுள்ளன. முதல் பதினொரு திருமுறை களும் தோத்திரங்கள். பன்னிரண்டாம் திருமுறையாக விளங் கும் பெரியபுராணம் தோத்திரங்கள் எழுந்த வரலாற்றையும், அன்புநிலைக்களனாக நடந்துகாட்டிய நாயன்மார்கள் வரலாற் றையும் தெரிவிக்கும் வரலாற்றுநூல். அவற்றுள் திருவாசகம் என்னும் இது எட்டாந்திருமுறை.

இறைவனே ஞானகுருவாக எழுந்தருளிவந்து உண்மை ஞானத்தை உதவி ஆட்கொண்டதன்பின் ஞானச்சீடனுக்குச் சிவம் எங்ஙனம் சுவானுபூதிகம் ஆகின்றது என்பதை நன்கு விளக்குவது திருவாசகம்.

> 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவுமாய்த் தவத்தினின் உணர்த்தவிட்டு
> அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே'

என்ற சிவஞானபோத எட்டாஞ் சூத்திரத்தின் அநுபவப் பொருளையறிவிப்பது என ஆன்றோரால் கருதப்பெறுவது எது?

பலகாலும் பயின்று அழுந்தி அழுந்தி ஆனந்தத்தில் தோய்ந்த அநுபவத்தால் கற்றாரையும் மற்றாரையும் பிணிக் கும் பெருமை பெற்றுச் சொல்நடையும் பொருள்நடையும் அப்படியப்படியே பின்னிப் பிணைந்துள்ள பல ஆயிரம் பாடல் களைப் பாடவைத்து, வடலூர் இராமலிங்க அடிகளை ஆனந்தக் கூத்தன் அருட்டுறை ஆக்கியது எது?

பல்லாயிரம் கல் தொலைவிற்கப்பால் பிறந்து, புறச்சமயத் தொண்டராகச் செந்தமிழ்நாட்டில் அடிவைத்த போப் அவர் களைத் தனது பொதுமை உணர்ச்சியாலும், புதுமை அநுப வத்தாலும், செந்தமிழ் மாணவராகச் செய்து, சிறந்த மொழி பெயர்ப்பாளராக மாற்றி அமைத்தது எது?

உயர்தனிச் செம்மொழிக்கு அமைந்த ஆற்றல், கலக்கத் தக்க கடவுள் தன்மையோடு கலந்திருந்தாலன்றி இல்லை என்பதை நமக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல உணர்த்தி வருவது எது?

'எளிமையில் இன்பம் இருக்கிறது; ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் தீண்டித் தன்வசம் ஆக்கும் வன்மையிருக் கிறது; கருத்தைக் கரைத்துக் கண்ணீர் பெருக்கும் கனிவு இருக்கிறது' என்பதை உலகிற்கு உணர்த்துவது எது?

இன்ப அன்பே எங்கள் மொழியின் இயல்பு என்பதை எல்லாரும் என்றும் அறியத் துணையாகநின்று நிலவுவது எது?

தமிழ்மக்களின் தத்துவக் கூறுபாடுகளையும், முத்தியுபாயத்தையும், முத்தியின்பத்தையும் முற்றும் அநுபவத்திற்கு ஒத்தவகையில் மொழிவது எது? திருவாசகமாகிய இந்த நூலன்றோ!

இத்தகைய திருவாசகத்தில் வைத்த ஈடுபாட்டாலன்றோ இறைவன் பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படிபட்டார்; கடையூழி வருந்தனிமை கழிக்க, மானிடவடிவு தாங்கிக் கையேட்டெழுத்தாளராகி ஒருபிரதி எழுதி வைத்துக்கொண்டார்.

இதனை ஒவ்வொரு தமிழனும் ஞானக் கருவூலமாகக் கருத்திலும் கையிலும் எப்போதும் தாங்க வேண்டுவதன் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தே பல பதிப்புக்களைப் பெரியோர்கள் அன்றும் அளித்தார்கள்; இன்றும் அளித்து வருகிறார்கள். இன்று நாம் பெறும்பேறு இப்பதிப்பு.

திருவாசகம்

அடையடுத்த கருவியாகுபெயர்க்கு எடுத்துக்காட்டாக இலக்கணநூலில் இது இடம்பெற்றுளது. வாசகம் வார்த்தை என்பன, சொல் என்னும் பொருளை உணர்த்துஞ்சொற்கள். ஆயினும் வார்த்தை தனிச்சொல்லையும், வாசகம் தொடர்மொழியையும் மரபாக உணர்த்திவருகின்றது. அவ்வாற்றல் வாசகம் என்ற சொல்லிலேயே அமைந்திருக்கிறது. 'வச - பரிபாஷணே' என்னும் வேர்டியாகப் பிறந்து 'க' என்னும் பிரத்யயமும் பெற்ற சொல் வாசகம் என்பது. ஆகவே தொடர்மொழியாகப் பேசப்படுவது வாசகம் ஆம். இன்றும் 'முதல் வாசகம்' 'இரண்டாம் வாசகம்' என்ற வழக்குண்மையும் இம்மரபைப் புலப்படுக்கும். ஆகவே செய்யுளுக்கு முதற்கருவியாயமையும் தொடர்மொழியின் பெயர் செய்யுளுக்கு ஆகி, செய்யுளின்பெயர் செய்யுள் பல சேர்ந்த நூலுக்குப் பெயராயிற்று. ஆகவே வாசகம் என்னும் கருவியின் பெயர் காரியமாகிய செய்யுளையும், அதன் காரியமாகிய நூலையும் முறையே உணர்த்துதலின் அடையடுத்த கருவியாகுபெயர் ஆயிற்று. இருமடியும் ஆயிற்று.

திரு-திருவருள். வாசகம்-வாக்கு. திருவருள் உண்ணின்றுணர்த்தப் பசுகரணம் பதிகரணமாகி, அதாவது தன்செயல்

அற்றுத் தானற்றபின் நாதன்றன்செயலானநிலையில் விளைந்த வாக்கு திருவாசகம் என்பதாம்.

திரு - என்பது பிறவிததுன்பமகன்று எய்தப்பெறுவதாகிய வீடு. வாசகம் - குருமணியின் உபதேசமும் மறைபயின்ற வாசகமும் ஆகிய திருவைந்தெழுத்து. ஆகவே திருவாசகம் என்பது குருமணியின் உபதேசவார்த்தையாய் முத்தியருளுவதாகிய திருவைந்தெழுத்தும் அதன் பொருளாகிய சிவமுமாம் என்பர் சிலர்.

''பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானை'' என்னும் நாவலாரூரர் திருவாக்கு, 'பொன் தந்து போகத்தையும் மெய்ப்பொருள் தந்து திருவையும் புணர்ப்பானை' எனக் கொண்டுகூட்ட நிற்றலின் பொன்னாற் போகத்தையும், மெய்ப்பொருளால் திருவையும் இறைவன் கூட்டுவிக்கிறான் என்பது உணர்த்தப்பெறுகிறது. மெய்ப்பொருள் எது? அதுவே சிவஞானம். 'கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி' எனப் பாசஞானமே மெய்ப் பொருளென உலகியல் நூலால் ஓதப்பெறுதலும் காண்க. ஆகவே மெய்ப்பொருளாகிய சிவஞானத்தை உதவி வீட்டின்பத்தை உதவுபவன் இறைவன் என்பது அப்பாசுரத்தால் உணர்த்தப்பெறுகிறது.

## சிவஞானத்தால் எய்தும் பயன் யாது?

எய்தும்பயன் திரு. திருவாவது முத்திச்செல்வம். சேக்கிழார் பெருமானும் வீட்டின்பத்தைப் பெருகச்செய்வதான சிவஞானத்தைத் 'திருப்பெருகு சிவஞானம்' என அருளுதல் காண்க. இந்த அடிப்படைக் கருத்துக்களைக்கொண்டு திருவாசகம் என்பது முத்தியின்பத்தை அருளுவதாகிய சிவஞானத்தைப் பயக்கும் வார்த்தைகளின் தொகுதியான செய்யுளும், அதன் தொகுதியான நூலும் எனப் பொருள்படுதல் காண்க.

## நூலமைப்பு

இந்நூல் சிவபுராணம் முதலாக அச்சோப்பதிகம் ஈறாக ஐம்பத்தொரு பதிகங்களையும் அறுநூற்றைம்பத்தாறு திருப் பாடல்களையும்கொண்டது. இது வெண்பா, கலிவெண்பா, ஆசிரியம், கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்த வகைகள், தரவு கொச்சகக்கலிப்பா, கலிவிருத்தம், கலிநிலைத்துறை, பஃறொடை வெண்பா, கலித்தாழிசை முதலான பாவும் அதன்

இனங்களும் விரவத் தொகுக்கப்பெற்றது. இதனைப்பற்றிய விரிவான ஆய்வுக் கருத்துக்களை யாம் எழுதிய 'திருவாசகப் பேரொளி' என்ற நூலில் காணலாம்.

திருவாசகம் பூசைக்குரிய நூல். சைவமரபில் சிவபூசை செய்ய இயலாதவர்கள் திருவாசகபூசை செய்வது பெரு வழக்கு. அதனால் திருவாசக ஏடுகள் பெருகின. ஏடுகள் பெருகும்போது ஏடு எழுதுவோரால் நேரும் மாற்றங்களும் பெருகத்தானே செய்யும். அதனால் பாடபேதங்கள் மலிவ வாயின. உண்மையான பாடம் துணிவதில் மிகுந்த முயற்சி யும் முறைகளும் தேவையாயின.

திருமுறைகளையும் சங்கநூல்களையும் சைவ - வைணவ இலக்கியங்களையும் தொகுத்துப் பாதுகாத்து வந்த தொன்மை யான பெருமை திருவாவடுதுறை ஆதீனத்திற்கே உரியது. மூன்றாவது குருமகாசந்நிதானம் அவர்கள் காலத்திலிருந்து தொகுக்கப்பெற்ற 'சரஸ்வதிமால்' என்ற நூல்நிலையமே இதற்குச் சான்றாகும் என்பதை மகாமகோபாத்யாய ஐயர் அவர்களாலும், பிறராலும் இதுவரை வெளிவந்த தமிழ்நூற் பதிப்புக்களே கூறும். அதுபோலவே ஆதீனங்கள் பலவும் திருமுறைகளைப் பேணிவந்தன. ஆதீனங்களில் ஆன்மார்த்த பூசை முடிந்ததும் ஏட்டர்ச்சனை என்பது இன்றும் நடை பெற்றுவருகின்றது. அதற்குரிய திருமுறை ஏடுகள் மிகப் பழையகாலத்து எழுதப்பெற்றவை. அங்ஙனமே பிற மடங் களிலும் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்தின் வழியதாகக் கருதப்படுகின்ற ஏடுகள் பரம்பரையாகப் போற் றப்பெற்றன. இந்தச் சைவநிலையங்கள் மரபிலே வந்தனவே தமிழ்நாட்டிலுள்ள திருமுறையேடுகள் எனக் கூறலாம்.

இந்தச் சந்ததியிலே தோன்றியன அச்சுப் பதிப்புக்கள். முதன்முதலாக மர அச்சிலே பதிப்பிக்கப்பெற்ற திருவாசக மும் ஒன்று உண்டு. இதுவரை பல பதிப்புக்கள் வெளிவந் துள்ளன. இவற்றிலும் பாடபேதங்கள் நிகழாமலில்லை. ஆகவே பாடந்துணிவதில் துன்பந்தான்.

திருவாசகம் அருணூல்; அநுபவநூல். இந்நூலிலுள்ள ஒவ்வொரு சொல்லும் பழுத்த மனத்தடியவரின் பண்பட்ட உள்ளத்திலிருந்து சிவபோதமுதிர்ச்சியால் வெளிப்பட்டவை; பலநூறாண்டுகளாகத் தமிழ்மக்களால் பாராயணம் செய்யப் பட்டவை என்ற அடிப்படையை மனத்திலிருத்திப் பாடங் கொள்வதே முறையாக, இதுவரையில் சமயாசார சீலர்கள்

மேற்கொண்டனர். அதனால் இப்பதிப்பிலும் புதிய பாடங்களைத் தந்து மரபை மாற்றக்கூடாது; புதிய பாடங்களைவிடப் பெரும்பான்மையான பல பதிப்புக்களில்வந்த பழைய பாடங்கள் எவ்வகையிலும் குறைபாடுடையன அல்ல என்ற எண்ணத்தைத் திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து இவ்வாராய்ச்சிக்காகப் பெற்ற மூன்று ஏடுகளும், திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கப்பெருமான் கோயிலிலிருந்து கிடைத்த ஏடும், திருப்பெருந்துறை ஸ்ரீ ஆத்மநாதப்பெருமான்கோயில் ஏடும் வற்புறுத்தின. இந்த ஏடுகள் ஒரு மரபின்வழிவந்த தொன்மையுடையவை. ஆதலால் இதுவரை வெளிவந்த பதிப்புக்களில் சிறந்த புலவர் பெருமக்களான சிவாநுபூதிச் செல்வர்களாற் பதிப்பிக்கப் பெற்றவைகளில் உள்ள பாடங்களும் ஆதீன சம்பிரதாயங்களில் வருவனவும், சிவஞானமாபாடியம், ஞானவரண விளக்க மாபாடியம் முதலியவற்றுள் மேற்கோளாக ஆளப்பெற்ற பாடல்களிலுள்ளனவும் ஆகிய பாடங்களே ஒத்திருந்தன. ஆதலாலும், பழக்கத்தில் பயிலப்பெற்றுவரும் பாடத்தை மாற்றக்கூடாது, அருணூலை மாற்றி அமைக்க நமக்கு உரிமையும் ஆற்றலும் ஏது என்ற அச்சத்தாலும், பாடங்களின் சிறப்பாலும் பழகிவந்த பாடங்கள் அப்படியே கொள்ளப்பெற்றன. புதிய பாடங்களாகப் பிற்காலத்தார் கொண்ட சிலவற்றையேனும் ஏதுக்காட்டி இனிமை தெளித்தல் எமது கடமையாயினும் அதனை விரிவஞ்சி வேற்றிடத்தில் மேற்கொள்வேம்.

உரை

திருவாசகத்திற்கு உரை எழுதுதல் கூடாது என்ற மரபு பன்னெடுங்காலமாகச் சமயவுலகில் நிலவி வருகிறது. எந்த நூலுக்கும் உரை காண்பதாயின் நூலாசிரியனுடைய நிலை - அனுபவம் - அவன்கண்ட கண் (அறிவு)- அவனுக்குக் கிடைத்த அகச்சாதனங்கள் புறச்சாதனங்கள் இவை நமக்கும் கிடைக்கப்பெறின் எழுதலாம். திருவாசகமோ அறிவாற் சிவனேயான மாணிக்கவாசகர் அருளியது. அத்தகையநிலை பெற்றவர்கள் யாரும் எந்நாளிலும் தோன்றியதுமில்லை; தோன்றப் போவதுமில்லை. ஆகவே அவர்கள் நூலுக்கு உரை எழுதுதல் கூடாதுதான். ஆயினும் சுவாமிகளே 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர்; சிவபுரத்தின் உள்ளார்' என்கின்றார்கள். ஆகவே பாட்டின் பொருளையுணர்ந்து சொன்னாலன்றிப் பயனின்று என ஆணை தருகின்றார்கள். பொருளோ அவரவர்களுடைய அறிவுக்கும் அநுபவத்திற்கும் திருவருளுணர்த்தும் நிலைமைக்கும் ஏற்ற அளவினது. நின்ற

# திருவாசக உள்ளுறை

[பக்க எண்]

உ

சிவமயம்

# திருவாசகம்

## நூற்சிறப்பு

வெண்பா

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

---

மண்ணுக்குச் சோவை உழைத்த உழைப்பிற்கு ஊதியம் எனல் போலத் திருவாசகப் பாடல்கள் அவரவர்களுடைய தவத்திற்கும் அருளனுபவத்திற்கும் ஏற்பப் பொருளையுணர்த்தும். ஆதலால் பலகாற் பயின்று சிந்தித்துச் சிவனருள் வேண்டித் தெளியட்டும் என்று எண்ணினார்கள்போலும் இங்ஙனம் கூறினார்கள்.

ஆனால் இதன் விளைவு என்னவாயிற்று? மரபுவழி வாராதாரும், சிவநூல்களைக் கல்லாதாரும், இத்தகைய நூலுக்கு இன்னின்ன நூல்களைத்தான் துணை மேற்கோளாக எடுத்தாளலாம் என்ற மரபறியாரும், நூலாசிரியர் தெள்ளத்தெளியக் கூறும் சமயவுண்மைகளை மறைத்துத் தம் சமயக் கொள்கைகட்கு வலிந்திழுத்துச் செல்வாரும், உண்மை உணரவும் உரைகூறவுமாட்டாது பொதுமையினிற்கும் மக்கள் உள்ளத்தைப் புறத்தே ஈர்த்துச்செல்லப்புகுந்தனர்.

இந்நிலையில் மாதவச் சிவஞானசுவாமிகளும், கச்சியப்ப முனிவர் சிதம்பரமுனிவர் போன்றவர்களும், குமரகுருபர சுவாமிகள் வெள்ளியம்பலவாணர் மதுரைச்சிவப்பிரகாசர் போன்றவர்களும் தத்தம் இலக்கியங்களிலும் உரைகளிலும் திருவாசகப்பாடல்கள் பலவற்றிற்கு மரபு வழுவாத உரைக் குறிப்பை உதவினர். பெரும்பற்றப் புலியூர் நம்பி, பரஞ்சோதி முனிவர் முதலியோர்களும் தத்தம் திருவிளையாடல்களில், சில திருப்பாடற்குறிப்புக்களை விளக்கினர். கடவுள்மா முனிவரும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் திருவாதவூரர் புராணத்தும், திருப்பெருந்துறைப் புராணத்தும் சிலபாடல்களுக்கு விளக்கமும், சிலபகுதிகட்குச் சந்தர்ப்ப விளக்கமும் தந்துள்ளனர். பிள்ளையவர்களின் தலைமாணாக்கரான வித்வான் தியாகராசச்செட்டியார் அவர்களைத் திரிசிரபுரம் பட்டாபிராமபிள்ளை அவர்கள் திருவாசகத்துக்கு உரையெழுதித் தரவேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். ஒருநாள் சீரங்கத்துக் காவிரிப் பாலத்தில் தியாகராசச் செட்டியார் அவர்கள் வந்துகொண்டிருந்தபோது பட்டாபிராமபிள்ளை வழக்கம்போல வற்புறுத்தினார். ஸ்ரீமான் செட்டியார் அவர்கள், என்ன ஐயா! அதற்கு நானா உரை எழுதுவது? திருவாசகம் எங்கே? நான் எங்கே? அதற்கு உரை எழுதுவதற்கு என்னறிவு எம்மாத்திரம்? வேதம் ஆகமம் உபநிஷதம் புராணங்கள் சாஸ்திரங்கள் எல்லாம் தெரிந்தாலல்லவோ அதற்கு உரை எழுதமுடியும்; இனியும் வற்புறுத்துவீர்களானால் இதோ காவிரியில் விழுந்து உயிரை விட்டுவிடுவேன்

என்றூர்கள். இச்செய்தியை மகாமகோபாத்யாய ஐயரவர்கள் செட்டியாரவர்கள் வரலாற்றில் குறித்துள்ளார்கள். (பக்கம் 142—145)

தில்லைவாழந்தணர்கள் ஒருங்குகூடி, 'தில்லையில் எம்பெருமானைச் செப்பிய இத்தமிழ் மாலை, நல்லரும்பொருள் கேட்க வேண்டும் என நவின்றூர்களாக,

*ஓங்குபுகழ்த் திருவாத வூருறையெம் பெருமானும்*
*தேங்கியமெய்ச் சிவஞான சிந்தையுடன் களிகூர்ந்து*
*பூங்கனகப் பொதுவெதிரே போய்ப்புகல்வேன் எனப்போக*
*ஆங்கவர்முன் சென்றூரும் அன்பொடும்பின் சென்றூர்கள்.*

*நின்றபுகழ்ப் புலியூரர் நேயமுடன் புடைசூழச்*
*சென்று அருளுக்கிடமான செம்பொனின் அம்பலமெய்தி*
*ஒன்றியஇத் தமிழ்மாலைப் பொருள்இவர்என்று உரைசெய்து*
*மன்றதனிற் கடிதேகி மறைந்தனர்அங்கு அவர்காண.*

என்று திருவாதவூரர் புராணம் கூறுவதிலிருந்து திருவாசகப் பாடலுக்கு உரை எழுதமுடியாது; 'இது என்று' உபதேச வாயிலாக இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டமுடியும் என்பதை உணர்த்திற்றூதலைச் சிவாநுபூதிச் செல்வர்கள் உரைப்பர். இக்கருத்தை ஊன்றி உளங்காண முடியாதார் உரையே எழுதக்கூடாது என்று உரைத்ததாகக் கொள்வர். அநுபூதிநூல்கள் பாசஞானமாகிய வேதாகம புராண இதிகாச ஞானத்தால்மட்டும் உணரப்படுவதன்று; இவ்வளவும் படித்து உபதேச பரம்பரையில் வந்த நல்லாசிரியன்பால் அநுபவமும் பெற்று, அவன் காட்டியவழி நின்று தெளிந்தாரே இதுதான் பொருள் எனச் சுட்டற்று நின்ற சிவத்தை அவன் சுட்டிக் காட்டக்காணும் தரத்தினராவர் என்பதே உட்கிடை.

இங்ஙனமாகவும், திருவாசகத்திற்குப் பதவுரை பொழிப்புரை முதலியவற்றை எழுதத் தமிழுலகம் தலைப்பட்டது ஏனெனின், மான் அறியாதாற்கு ஆடுகாட்டி இதுபோன்றது அது எனத் தெளிவிப்பதுபோலவும், பெருவிரலளவினதாய் இதயத்தாமரையின் நடுவிலும் ஏற்றிய விளக்குப்போலப் புருவநடுவிலும் விளங்கும் சிவச்சோதியைச் சிவயோக சாதனையாற் காணவேண்டியிருக்க அதனை மந்ததரமுள்ள மாணுக்கற்குத் தியானபாவனையாற் பரிபாகம் பெறுவிக்க ஆசாரியன் உணர்த்துவது போலவும் திருவாசகத்தின் சொற்பொருள்களை ஓரளவுணர்த்தி அநுபவப்பொருளறிதற்கு வழிசெய்தல் கருதியேயாம் என்க.

அங்ஙனம் எழுதப்பெற்ற உரைகளுள் பழைமையானது, திருவாசக அநுபூதியுரை என்னும் திருவாசக வியாக்கியான மாகும். இவ்வுரைப்பெருமை அநுபூதியுரை என்றபெயரானே அறியப்பெறும். இவ்வுரை ஒவ்வொரு திருப்பாடலுக்கும் பொழிப்பநுபூதி, பதவநுபூதி, நுட்பவநுபூதி, விரிவநுபூதி என்ற முறையிற் செல்கிறது; தேவாரம் திருவாசகம் சிவ ஞானபோதம் திருமந்திரம் முதலான நூல்களையும், சுத்தாத் துவித சைவசித்தாந்த சற்சம்பிரதாயத்தின் வழிவழிவந்த ஆசிரியப் பெருமக்கள் அருளிய சாத்திர தோத்திரங்களையும் புராணங்களையுமே மேற்கோள்நூல்களாக எடுத்தாளுகிறது.

இத்தகைய வியாக்கியானம் என்ற பேருரையை உபகரித் தவர் சீகாழித்தாண்டவராயர் என்பார். இவரே திருவாரூரில் செங்கமல பொற்பாத கோத்திரத்து உதித்து ஆசாரிய பரம் பரையில் வந்த சிவகுருநாதரான குருசுவாமி அடிகள் சிவ ஞானேபதேசமும், திருவாசகத்திற்குத் திருவருள்மூலவநுபூதி யும், அகத்தியச் சூத்திரக்கருத்தும், அணிக்குப் பொழிப்புரை அநுபூதியும் உபதேசித்தபடி, அடியேன் சிவனடியாரான நாயன்மார்கள் அநுக்கிரகப்படி பதவநுபூதியும், நுட்பவநு பூதியும் அணிக்கு எடுத்துக்காட்டான சுருதி அநுபூதியும் சொல்லுகின்றனன் என்று தொடங்குவதால், இவருடைய குருபரம்பரையும், அவரருளுபதேசமும், அடியார்கள் ஆணை யுமே இவ்வுரை எழுதத் துணையாவன என்று உணர்த்தப் பெறுகின்றது. இங்ஙனம் இவ்வுரை எல்லாவகையானும் திருவருளும் குருவருளும் துணைக்கொண்டு எழுதப்பெற்றமை புலனும்.

அடுத்து வாசுதேவ முதலியார், இராமசாமி முதலியார், முருகேச முதலியார், சுந்தரமாணிக்க யோகீஸ்வரர், மறை மலையடிகள், கா. சுப்பிரமணியப் பிள்ளை, பண்டிதமணி கதிரேசச்செட்டியார், நவநீதகிருஷ்ணபாரதியார் முதலிய பல பெரியோர்களின் உரைகள் வெளிவந்துள்ளன. அவற்றுள் முதல் மூன்று உரைநூல்களும் ஒருவரானும் பலரானும் எழுதப்பெற்றவை; உரையளவிற்செல்பவை. சுந்தரமாணிக்க யோகீஸ்வரருரை முடிந்தவரை அட்டாங்க யோகமுறைகளை விளக்கும் நிலையில் எழுதப்பெற்றுளது. சுருங்கச்சொன்னல் இந்த உரை அன்புநூலாகிய திருவாசகத்தை யோகாநுபவ நூலாக மாற்றிவிட்டது எனவாம்.

சிவ - அருணகிரி முதலியார் அவர்கள், எல்லாப்பாடல் களுக்கும் தேவையான அளவு குறிப்புரைகளும், திருவாசக

விஷயசூசனம் அறுபது என்ற தலைப்பில் சில பகுதிகளுக்கு வேதாகம உபநிடதப் பிரமாணங்களுடன் தடைவிடை விளக்கமும் தந்திருக்கிறார்கள். இவ்வுரை மரபிற்கு மிக ஏற்றதாய்-அநுபவத்திற்கு வழிகாட்டியாய் அமைந்துள்ளது எனலாம்.

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் உரை பொழிப்புரை. இது மிகத் தெளிவாகச் சொற்பொருளை யாரும் எளிதிலுணர உதவி செய்வது. சிறந்த வழிகாட்டி. முற்றிலும் உள்ளது. இதில் தமிழ்ப்பற்றும், சித்தாந்தச் செந்நெறியின் கீர்த்தியும் இடமிடங்கடோறும் மிளிர்கின்றன.

மறைமலையடிகள், முதல் நான்கு பாடல்களுக்கு மட்டும் 'திருவாசக விரிவுரை' என்றபெயரான் மிகமிகச் சீரியமுறையில் ஒருரை எழுதியிருக்கிறார்கள். இதுவும் வடமொழி தென்மொழிச் சைவநூற் பிரமாணங்களோடு திருவாசகத்தின் உண்மைப்பொருளை உணர்தற்கு உறுதுணையாக இருக்கும் உயர்ந்தவுரை.

பண்டிதமணியவர்கள் திருச்சதகம், நீத்தல்விண்ணப்பம், திருவெம்பாவை என்ற பகுதிகட்குமட்டும் உரை எழுதியிருக்கிறார்கள். அவ்வுரையில் இடமிடங்கடோறும் சொன்னயங்களும், சாத்திரக் கருத்துக்களும், வரலாற்று நுணுக்கங்களும் ஒளிவிடும். இலக்கியப் பண்பாட்டை எடுத்து விளக்கும் சிறந்த உரை இது.

நவநீதகிருஷ்ணபாரதியார் உரை ஆராய்ச்சிப்பேருரை. இவ்வுரை அவர்களது அகன்ற புலமையையும், ஆழ்ந்த அனுபவத்தையும் புலப்படுத்துவது. இந்நூல் முழுவதும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் அகப்பொருள் நுதலிவருவனவே என்ற அடிப்படையில் இவ்வுரை நடத்தப்பெறுகிறது. சிவபுராணம் இந்நூற்குத் தற்சிறப்புப்பாயிரம்; திருச்சதகம் நுதலிய பொருள். நீத்தல் விண்ணப்பம் பிரிவுத் துன்பம்; மேல்வருவன காதற்பாவனை என்பது அவர்கள் தரும் குறிப்பு. கருத்து, பொழிப்பு, விசேடவுரை என்ற பாகுபாட்டுடன் இவ்வுரை எழுதப்பெற்றுள்ளது.

இவ்வண்ணம் பலவுரைகள் துணை செய்கின்றகாலத்து-சிவஞானசுவாமிகள் சிவப்பிரகாசசுவாமிகள் வெள்ளியம்பலவாண முனிவர் போன்றோர் ஆங்காங்குத் தந்த விளக்கங்கள் ஊன்றுகோலாக, எல்லாருடைய கருத்துக்களையும் சேர்த்துப் புதிய உரையும் எழுதலாமே என்ற எழுச்சி அடியேற்கும்

திருவருளின் வாய்ப்பாக எழுந்தது. எனது அரிய நண்பரும் மாணவருமான மெய்யப்பன் எம். ஏ., அவர்கள் எளிய இனிய நடையில் பொழிப்புரை எழுதித்தருக என ஊக்கினர். திருவருள் வேறுவிதமாக இருந்தது. இதனைத் திருவாவடுதுறை ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர் ஆதீனத்து இருபத்தோராவது குருமகாசந்நிதானம் அவர்களிடம் தெரிவித்தேன். பொழிப்புரை என்ன! பேருரையாக எழுதுக; ஆதீனவெளியீடாக வரட்டும் எனத் திருவருளாணை தந்தார்கள். அதனால் மிகமிக ஆழ்ந்து பலருரைகளையும் பலகாலும் ஓரளவு பயின்றேன். அப்போது புதிய கருத்துக்கள் பல தோன்றுமலில்லை. நூல்முழுமைக்கும் சொல்லடைவுகளை முதலில் தொகுத்து ஒழுங்குபடுத்திக் கொள்ளுதலும், இத்தகைய ஆட்சி ஏனைய திருமுறைகளில் எங்கெங்கே இடம் பெற்றுள்ளன என்பதை இணைத்துப் பார்த்தலும், வைணவசம்பிரதாய வியாக்யானங்கள் போன்ற ஏனைய சமய நூல்களில் காணப்பெறும் நுட்பக் கருத்துக்களை ஒப்புநோக்குதலும் ஆகிய முயற்சிகளில் திருவருள் அடியேனை ஈடுபடுத்தியது. இவற்றின் விளைவாகவே இவ்வுரை எழுந்தது.

நம்மனைவர்க்கும் காட்டுவானும் கூட்டுவானும் குருவாதலின், தமது ஆதீன முதற்குருமூர்த்திகளாகிய ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர்பால் இடைவிடாத பேரன்பு பூண்டவர்களும், சிவாலய தரிசனமும் சிவபூசையுமே தம் சிறந்த கடமையாகக் கொண்டவர்களும் ஆகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் வாயிலாக அடியேனிடம் வழிக்கொள்ள, பல ஆண்டுகளுக்குமுன் எழுதிவைத்திருந்த இவ்வுரைக்குக் 'குருவருள் விளக்கம்' என்று பெயர் சூட்டி, ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் குருபூசைத் தினமாகிய சுபகிருது ஆண்டு தை மாதம் அசுவதித் திருநாளில் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் சந்நிதியில் ஒழுங்குபடுத்தி எழுதக் கால்கொண்டேன். அம்முயற்சி இங்ஙனம் இனிது நிறைவெய்தியது.

நூல்களை நன்கு ஆய்ந்து பதிப்பிடுவதில் திருவாவடுதுறை ஆதீனத்துச் செந்தமிழ்த்தோன்றலாகிய மகாமகோபாத்யாய ஐயர் அவர்கள் சிறந்த புதியமுறையைத் செந்தமிழுலகுக்கே கற்பித்தவர்கள் என்பதை யாவரும் அறிவர். அவர்கள்பாற் கல்விபயின்ற காலத்திலே நூலாராய்ச்சி வகையில் காட்டிக் கொடுத்த முறைகளைப் பின்பற்றிப் பாடந்துணிந்து, சொல்லகராதி, ஆராய்ச்சிக் குறிப்பு முதலியவை தொகுக்கப் பெற்றன. புத்தகம் பெருத்துவிடுமே என்று அஞ்சவேண்டிய இன்றியமையாமை அடியேற்கு இல்லை. அடியேன் ஆதீனத்

திற்கு உபதேசவழிவந்த அடிமை. ஆதீனம் ஞானசாத்திரங்களை விலைக்கு விற்கக்கூடாது; எவ்வளவு பெரிய புத்தகமாயினும் இலவசமாகவே வழங்கும் குறிக்கோளுடையது; அருட்செல்வமும் பொருட்செல்வமும் பெற்று விளங்கிவருவது; இத்துறையில் மிகத் தாராளமாகச் செலவழிக்கும் பேரருட்டிறம்படைத்த தேசிகமூர்த்திகளின் அருளாட்சியைப் பெற்றது. ஆதலால் ஆய்வாளர்க்கும், தோய்வாளர்க்கும் பயன்படக் கூடியதாக எல்லா அழகும் பொருந்த ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் அச்சகத்தின் வாயிலாக இந்நூல் வெளிவருகிறது.

என் உழுவல் நண்பரும், சிறந்த கல்விமானும், இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் வல்லவரும், வழிவந்த மருத்துவ அறிஞரும், திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் மாணவரும், எமது பல்கலைக்கழகத்துக் கீழ்த்திசைப் பகுதி ஆசிரியப் பெருமகனுருமான திரு. வீ. உலகவூழியர் அவர்களிடம் அச்சுப்பிரதியைக் கொடுத்து ஊன்றிப்படித்துக் குற்றங்குறைகளைக் குறித்துக் கொடுங்கள் என்று கேட்டுக்கொண்டேன். அவர்களும் தமக்குக் கிடைத்த ஓய்வுநேரங்களில் படித்துச் சிற்சில மாற்றங்களைக் குறித்துக் கொடுத்தார்கள். அவை அடுத்தபதிப்பில் இடம்பெறும்.

இவ்வுரை எழுதுங்காலத்து, அடியேன் சிந்தித்தும், பல நூல்களை அவ்வப்போது எடுத்துப் படித்தும் எழுதுதலால் உளதாம் துன்பங்களால் ஓரளவேனும் விரைந்து எழுதமுடியாமையை அடிக்கடி உணர்ந்துவந்தேன். ஒருநாள் இதனை ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் தெரிவித்துக் கொண்டேன். புலவர் ஒருவரை உதவிக்கு வைத்துக்கொள்வதுதானே என்று ஆணையிட்டருளி அவருக்கு உரிய உதவித் தொகையையும் மாதங்கள்தோறும் உதவிவந்தார்கள். அவ்வண்ணமே, புத்தூர் வெங்கடேசம்பிள்ளை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர் கோவிந்தராசன் அவர்கள் உடனிருந்து படியெடுத்து வந்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்க்கலைப் பகுதியின் ஆசிரியர் புலவர் திரு. ந. இராமலிங்கம் அவர்கள் சொல்லடைவுக்குரிய சொற்களைப் பிரித்து எழுதித் தந்தனர்.

இவ்வண்ணம் பலருதவியால் இப்பெரிய பணி சிறப்புற்றது. ஆதலால் அவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் நல்லருளும், ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவருளும், செந்தமிழ் உலகத்தின் ஆதரவும் என்றென்றும் நிலைத்திருக்குமாக.

இப்பதிப்பு மிக நல்லமுறையில் வெளிவரவேண்டுமென்ற குறிக்கோளுடன் பதிப்புப்பணியிலும் நிர்வாகத்துறையிலும் உதவிய அனைவருக்கும் குருவருள் என்றென்றும் துணையிருந்து இயக்குமாக.

நமது தமிழக முதலமைச்சர் கனம் பக்தவத்சலம் அவர்கள் பல்வேறு வகையான பொதுமக்களின் குரல் - சமுதாய நலம் முதலான நிர்வாகப் பொறுப்புக்களினிடையே கல்வியமைச்சராகவும் விளங்குவதால் இவ்வுரை முழுமையுமே படித்துப் பார்த்து, திருவாவடுதுறை ஆதீனம் தமிழகத்திற்குச் செய்து வருகின்ற சீரிய தொண்டுகளைப் பாராட்டி மிகச்சிறந்ததோர் அணிந்துரையை வழங்கினார்கள். நல்லமைச்சராக விளங்கி ஞானநூலை வழங்கியருளிய ஞானாசாரியர் நூலுக்கு இயன்ற உரையைப் பாராட்டும் உரிமை, சமயப்பாதுகாப்புப் பணி புரியும் நல்லமைச்சருக்கே உண்டு என்பதை எடுத்துக்காட்டினார்கள். அவர்களுக்கு ஸ்ரீ ஞானமாநடராசப்பெருமான் நல்லருளும், ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் திருவருளும், ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பேரருளும் என்றும் எல்லா நலங்களும் அளித்தருள வேண்டுகின்றேன். அவர்கள் பெருந்தகைமையை மிகமிகப் பாராட்டுகிறேன்.

இவ்வண்ணம் எல்லாரையும் இயக்கித் திருவருளை அடியேனிடத்தில் பாய்ச்சி, அறிவுப்பயிர் தழைக்கச்செய்து, சிவபோகத்தைப் பெருக்கிச் செந்தமிழ் நாட்டைச் சிவஞான பூமியாகச் செழிக்கச் செய்துவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுடைய சிவஞானச் செங்கோல் நீடுவாழ ஸ்ரீ ஞானமா நடராசப்பெருமான் திருவருள் சுரப்பாராக.

கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிருமாந் திருந்தேனெம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே.

இங்ஙனம்,

திருவாவடுதுறை, 10—6—64.

ஆதீன மகாவித்துவான்,
ச. தண்டபாணி தேசிகர்.

# வாதவூரடிகள் வரலாறு

பழம்பதியாகிய பாண்டியநாட்டில், புனல்யாறு அன்று இது பூம்புனல்யாறெனப் புலவர்களால் போற்றப்படுகின்ற வையையாற்றங்கரையில் திருவாதவூர் என்னும் தலமுள்ளது. அதில் சிவநெறிபிறழாச் சிந்தையாளராகிய அந்தணர் ஒருவருக்கு அரும்பெறல் மகவாய் அவதரித்தவர் திருவாதவூரர். கலை ஏற வயதும் ஏறி எல்லாம் பதினாறாயின. நிறைமதியர் ஆனார். நல்லொழுக்கின் தலைநின்றார். உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருளுணரும் தன்மையரானார். இவரது அறிவுத்திறமும் நிர்வாக ஆற்றலும் அரிமர்த்தனபாண்டியன் செவியிற் சென்றடைந்தன. மன்னன் மந்திரியாக்கினான்; தென்னவன் பிரமராயன் என்ற பட்டத்தையும் சேர்ப்பித்தான்; முதன்மையும் அளித்தான்; அரசியல், அமைச்சியலால் அல்லல் இன்றி நடந்துவந்தது. அமைச்சர்க்கு ஆட்சிமுறை பற்றிய அல்லல் இல்லையாயினும், உலக வாழ்வும் வாழ்விற் கண்ட பெரும்போகமும் நிலையற்றன என்பதை அறிந்தமையின் உவர்ப்புத் தோன்றிற்று. கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமாறுபோல வாதவூரர் மேற்கொண்டுள்ள அமைச்சுரிமைக்கும் அன்புகனிந்த அகத்துரிமைக்கும் சிறிதும் தொடர்பின்றியிருந்தது. அதனால் குருவைத்தேடும் வேட்கை நாளுக்குநாள் மிகுந்துகொண்டே வந்தது. நாம் பிறந்ததன் பயனை அடைந்தோமா? அதற்குரிய வழி என்ன? என்பதிலேயே இவருடைய கருத்து ஓடிக்கொண்டிருந்தது.

ஒருநாள் குதிரைகாவலர் அரசவைக்கு வந்து, மன்ன! குதிரைப்படைகள் குறைந்துவிட்டனவே; அரசர்க்கு உரிய அங்கங்கள் ஆறனுள் படைக்கே வள்ளுவர் முதன்மைவழங்கியிருக்கிறார் என்பதை அரசர் உள்ளம் அறியுமே; நாங்கள் தெரிவித்துக்கொள்வது மிகையல்லவா; ஆனாலும் குதிரை கொள்ளுதற்கு ஏற்றதான சமயம் இது என்பதைமாத்திரம் நாங்கள் அறிவித்துக்கொள்கிறோம் என்றார்கள். அரிமர்த்தனன், முதலமைச்சரை நோக்கி, இப்பொழுதே சென்று குதிரை வாங்கி வருக என்று ஆணையிட்டான்.



பாதச்சிலம்பொலிகாட்டிய வாதவூர்க்கோயில்

அமைச்சரும் அவ்வண்ணமே சென்று பொற்பண்டாரத்தைத் திறந்து பெரும்பொருளை வாரிக்கொண்டு குதிரை கொள்ளப் புறப்பட்டார். வழியில் திருப்பெருந்துறையை அடைந்தார். அரகர முழக்கம் இவர் செவிவழியாகப் புகுந்து சிந்தையை உருக்கிற்று. ஒலிவழியே விரைந்து சென்றார். குருந்த மரத்தடியில் குருமூர்த்தியையும் சீடர்களையும் கண்டார். காந்தங்கண்ட இரும்புபோல் மனம் அவர்வசமாயிற்று. விரைந்து அணுகி அடிபணிந்தார். ஆட்கொண்டருளுக என வேண்டிக்கொண்டார். இறைவன் கருணைக்கண்ணோக்கஞ் செய்து கரத்தால் தீண்டி, திருவடிசூட்டிச் சிவஞானோபதேசம் செய்தார். அதனால் ஆவியும் உடைமையும் அவர்வசமாயின. குருநாதன் திருவுளக்குறிப்பின்படி, கொண்டுவந்த பொருள்களெல்லாவற்றையும் சிவாலயப் பணிக்கு ஆக்கினார். நாட்கள் சென்றன. அமைச்சர் அருளாரமுதத்தை உண்டுகொண்டே தெருளார் சிவானந்தபோகத்துத் திளைத்திருக்கின்றார்.

அமைச்சர் அருள் வாழ்க்கையை அரசன் மருளாட்சி அறியுமா? குதிரை வாங்கச்சென்ற மந்திரியைக் காணோமே யென்று ஆள்விட்டான். அரசன் ஏவலாளர்கள் மதியமைச்சருடைய நிலைமையை மன்னர்க்கு அறிவித்தார்கள். மன்னன் சினந்து, திரும்பிவர ஓலையனுப்பினான். வாதவூரர், பெருமானிடம் சென்று முறையிட்டார். இறைவன் விலை மதிக்க முடியாத ஒரு மாணிக்கத்தைக் கையுறையாகக் கொடுத்து அரசனிடம் சென்று இதனை அறிவித்து வருக என்று ஆணை தந்தார். அமைச்சரும் அவ்வாணையின் வண்ணமே, ஆவணி மூலநாளில் குதிரை அனைத்தும் வரும் என்று அறிவித்தார். அரசன் எதிர்நோக்கி இருந்தான். பின் ஒற்றர்கள் மூலமாகப் பொய்யென்றுணர்ந்தான். சிறையிலிருத்தி நிறைய ஒறுத்தான். கருணைக்கடவுள் நரிகளைப் பரிகளாக்கிப் பாண்டிய மன்னனிடம் ஒப்புவித்து மீண்டார். அன்று இரவே பரிகள் நரிகளாயின.

அவதி ஆற்றாத அரசன் அடிகளாரைச் சுடுமணலில் நிறுத்தி கல்லேற்றி ஒறுத்தான். அடிகளார் பொறுத்தார். ஆண்டவன் வெறுத்தான். ஆற்றுவெள்ளம் பெருகியது. மதுரை அழியுமோ என்ற வருத்தம் அனைவரையும் வாட்டியது. அரசன் அவரவர் கரையை அவரவர் அடைத்துக் கொள்ளும்படி ஆணையிட்டான். வந்தி பங்கு அடைபடாமல்

இருந்தது. இறைவன் வந்தி தந்த பிட்டமுதையுண்டு வையை அடைப்பார்போல, உண்டகளைப்பால் உறங்கினர். நூற்றைக் கெடுத்தது குறுணி என்றதுபோல, ஒருத்தி பங்கு ஊரார் பங்கையும் கரைத்தது. சினந்த அரசன் கைப்பிரம்புகொண்டு அறிவுருக்கொள்ளும் ஆளை அடித்தான். அவ்வடி சராசரப் பொருள்கள் அனைத்தின் மேலும் பட்டது. மன்னன் திருவாதவூரர் பெருமையை அறிந்தான். மன்னிப்பு வேண்டினன். அமைச்சியலைத் துறந்த வாதவூரடிகள் திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர் முதலிய தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடிக்கொண்டு தில்லை அடைந்து, பிச்சதேறி, நிச்சலும் வழிபாடுசெய்து கொண்டு எழுந்தருளியிருந்தார்; தில்லைவாழந்தணர்களோடு வாதுக்கு வந்த புத்தர்களை இறைவன் ஆணையின்வண்ணம் வென்றார்.

ஒருநாள் இறைவன் அந்தணவடிவுகொண்டு திருவாசகம் திருக்கோவையார் இரண்டையும் தாம் எழுதிக் கைக்சாத்திட்டுக் கனகசபையில் வைத்து மறைந்தார். திருவனந்தலில் திருவேட்டைக்கண்ட தில்லைவாழந்தணர்கள் மிகமிக வியந்து, அதனை எடுத்து அவிழ்த்துப் பார்த்தனர். அதில் அம்பலவாணன் கையெழுத்திருப்பதையறிந்து அடிகளாரை அணுகி நிகழ்ச்சியின் உண்மையையறிந்தனர். அடிகளாரைப் பொருள் விரிக்க வேண்டினர். அடிகளார் அனைத்திற்கும் பொருள் அம்பலவாணர் அடியிணையே என்று சொல்லி அவற்றோடு இரண்டறக்கலந்தார்.



திருவாவடுதுறை ஆதீன குருமுதல்வர்
ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள்

உ
சிவமயம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ
சிவமயம்
திருச் சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத்
திரு ஆவடுதுறை ஆதீனம்
23-ஆவது குரு மகாசன்னிதானம்
சீர்-வளர்-சீர் சிவப்பிரகாச தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்

திரு ஆவடுதுறை-609803
நாகை மாவட்டம்.
தொலைபேசி: 04364-232021

நாள்: 30-03-2002

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

# அருள் வாழ்த்துரை

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள்ளும் ஒவ்வொரு திருமுறையும் ஒவ்வொரு வகையில் தனித் தன்மை பெற்று விளங்கும். அவ்வகையில் பாடுவார், கேட்பாரையும், சிந்தித்து உணர்வாரையும் அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உயர்நிலையில் உறுதிபெறச் செய்யும் தனித்தன்மையில் விளங்கி நிற்பது மணிவாசகரின் திருவாசகமாகும்.

இதன் பெருமையும் பெரும்பயனும் எண்ணித் திரு ஆவடுதுறை ஆதீனம் 21 ஆவது குரு மகா சன்னிதானம் அவர்கள் அப்போதைய ஆதீன மகா வித்துவான் சிவத்திரு சு.தண்டபாணி தேசிகரவர்களைக் கொண்டு திருவாசகப் பாடல்களுக்கு விரிவானதோர் உரை செய்வித்து 1964ல் ஆதீனத்தின் உரிமையான ஆளுடையார் கோயில் திருப்பணிக்கு நன்கொடையளித்த அன்பர்க்கு அன்பளிப்பாக வெளியிட்டுக் கொடுத்தார்கள். அதனைப் பெற்றுப் பயனடைந்தார் பலர். அதன்பின் இதுவரை 38 ஆண்டுகளாக அந்நூலின் மீள் பதிப்பு வரவில்லை. இதுபோன்ற விரிவான உரைநூல் வேறொன்றும் திருவாசகத்திற்கு இதுகாறும் வரவில்லை. ஆதலால் சைவத் தமிழ் அன்பர் பலரிடத்தும் இந்நூலின் புதிய வெளியீடு காணும் வேட்கை பெருகி வந்தது. அவ்வேட்கை தணிவிக்கும் ஆர்வம் உடையரான, சித்தாந்த சைவத்துக்கு ஓர் சிறப்பிடம் என விளங்கும் அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள் தோன்றியருளிய இடமாகிய விக்கிரம சிங்கபுரத்தில் யோகிகள் பெயராலே தோற்றுவிக்கப்பட்ட சிவஞான சுவாமிகள் பேரவையினர் இந்நூலினை மறுபதிப்பு செய்து வெளியிட முன்வந்தது சைவப் பெருமக்களுக்கு மகிழ்ச்சியும் பயனும் உடைய செய்தியாகும்.

இந்தப் பேரவையினர் கடந்த ஆண்டு (10-04-2001) சிவஞான சித்தியார் சுபக்கம் ( சிவஞான சுவாமிகள் பொழிப்புரை, சுப்பிரமணிய தேசிக மூர்த்திகள் பதவுரை) என்னும் அரியதொரு நூலினை வெளியிட்டதும் பாராட்டுதற்குரியது.

இக்காலத்தில் இம்முயற்சி பெருஞ் செலவும் பேருழைப்பும் கொண்டதாயினும் கருதிய முயற்சியில் சிறிதும் தளராது வெற்றி கண்ட இச் சிவஞான சுவாமிகள் பேரவையை வாழ்த்தி மகிழ்கின்றோம். இது போன்ற அரிய தமிழ் சைவத் திருநூல்கள் பல சைவ உலகிற்குப் பயன்படுமாறு செய்து வர இப் பேரவையின் தலைவர் செயலர் முதலான அனைவர்க்கும் நீண்ட கால நலவாழ்வும் செயல்புரியாற்றலும் தழைத்தோங்க வேண்டுமென எம் வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப் பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

பெறுநர்:-

"சிவஞான சுவாமிகள் பேரவை"
505 E, மெயின் ரோடு,
விக்கிரமசிங்கபுரம்,
திருநெல்வேலி - 627 425



# பதிப்புரை

சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் எட்டாம் திருமுறையாகத் திகழ்வன திருவாசகமும், திருக்கோவையாரும். திருவாசகம் சிவானந்த மேலீட்டால், அடிகள் அவ்வப்போது பாடிப் பின்னர் இறைவன் திருக்கரத்தால் நூலாக எழுதப்பட்டது. திருக்கோவையார் இறைவன் விருப்பப்படி அடிகள் நூலாகவே அருளியது. இரண்டுமே இறை அனுபூதி பெற்றவர்களே உண்மைப் பொருள் உணரத் தக்கன.

பிரணவம் முதலாகக் கொண்டு அருளியது தேவாரம். பஞ்சாக்கரம் முதலாகக் கொண்டு அருளியது திருவாசகம். திருவாசகம் என்பது ஆகுபெயரா அல்லது அன்மொழித் தொகையா என்பது இலக்கண ஆராய்ச்சி உடையார் மேற்கொண்ட சர்ச்சை. உற்று நோக்குவார்க்கு அது அன்மொழித் தொகையேயாம் என்பது சபாபதி நாவலர் குறிப்பு.

திருவாசகம் எத்தனையோ சிறப்புக்கள் உடைத்தாயினும், அதிகம் குறிப்பிடப்படுவது, "ஓதற்கு எளிது; உணர்தற்கு அரிது" என்பது. இக்காரணம் பற்றியே திருவாசகம் முற்றோதல் நாடெங்கும் நடைபெறுகிறது.

தேவாரம் இசைத்தமிழ், திருவாசகம் இயற்றமிழ். ஆகவே இயற்றமிழ் யாப்புப்பெயரே ஒவ்வொரு பதிகத்தின் தொடக்கத்திலும் குறிப்பிடப்படுகிறது. பண்ணமைதி கூறப்படும் வழக்கம் இன்று.

திருக்கோவையாரை நோக்கத் திருவாசகம் எளிது.

"பல்காற் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும் ஆண்டினும் இலையேல்
வடமொழி வெளியெற வழங்கும் என்க"

என்று குறிப்பிட்டார், இலக்கணக் கொத்து, தசகாரியம், திருச்செந்திற் கலம்பகம் போன்ற அரிய நூல்கள் இயற்றிய திருவாவடுதுறை ஆதீனத்துச் சுவாமிநாத தேசிகர் பெருமான். தேவாரம், திருவாசகம் போன்ற திருமுறைகளுக்கு உரையே எழுதக் கூடாது என்ற மரபை தியாகராசச் செட்டியார் வரலாற்றிலிருந்து அறிகிறோம். அம்மரபிலேயே எல்லோரும் நின்றுவிட்டால், நம் போன்றவர்களை யார் உய்விக்க முடியும். எனவேதான் நம் போன்றவர்களை உய்விக்க எழுந்த முதல்

உரை சீகாழித் தாண்டவராயர் செய்த திருவாசக அனுபூதியுரை. இதைத் தொடர்ந்து வாசுதேவ முதலியார், இராமசாமி முதலியார், முருகேச முதலியார், சுந்தரமாணிக்க யோகீஸ்வரர், மறைமலையடிகள், கா.சு. பிள்ளை, பண்டிதமணி. கதிரேச செட்டியார், நவநீத கிருஷ்ண பாரதியார், சிவ. அருணகிரி முதலியார், சி. அருணைவடிவேலு முதலியார் முதலிய பெரியோர்கள் திருவாசகம் முழுவதற்கோ, சிற்சில பகுதிகளுக்கோ உரைவிளக்கம் செய்தனர். சைவ சித்தாந்த மரபிற்கு மாறாகவும் வேறு சில உரைகளும் வந்திருக்கின்றன.

ஜி.யு.போப், ஜி. வன்மீகநாதன் திருவாசகமணி K.M. பாலசுப்ரமணியம் போன்றோர் ஆங்கிலத்திலும் உரைவிளக்கம் தந்திருக்கின்றனர். திருவாசகத்தை "Sacred Utterances of the Tamil Poet, Saint, and Sage Manikkavasagar" என்று போப் குறிப்பிடுவார்.

சிவபெருமான் பெயரகராதி, உவமை அகராதி, சொல்லகராதி, சிறப்புப்பெயர் அகராதி, அரும்பொருள் அகராதி, தேவார ஒப்புமை அகராதி, தலக்குறிப்பு அட்டவணை, யாப்புவகை அட்டவணை, பாடபேதங்களின் அட்டவணை சாத்திர மேற்கோள் அகராதி போன்ற ஆராய்ச்சிக்குறிப்புகளோடு திருவாசகத்தை 1992ல் வெளியிட்ட, அம்பாசமுத்திரம் அகத்தியர் அருட்பணி மன்றத்தின் பணி பாராட்டுக்குரியது.

இப்படி பல திருவாசக வெளியீடுகள் வந்திருக்கின்றன. பேரவையின் இந்த வெளியீடு, பல சிறப்பு அம்சங்களை கொண்டு திகழுகின்றது.

பல ஞான நூற்களை வெளியிட்டு பெரும்புகழ் கொண்ட திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத்தில் ஞானச் செங்கோல் ஓச்சிய இருபத்து ஒன்றாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகளின் அருள் ஆணையின் வண்ணம் 1964 ல் 193-ம் வெளியீடாக மலர்ந்த உரைவிளக்க நூல், ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் ஐயா அவர்கள் எழுதி "குருவருள் விளக்கம்" என்ற உரைப்பெயரோடு வெளிவந்த உரையையே, எங்கள் பேரவை இப்போது வெளியிடுகிறது.

இந்த உரையாசிரியரை சைவ உலகத்தில் அறியாதார் இலர். தோத்திரம், சாத்திரம், புராணம், வடமொழி, இலக்கணம், இலக்கியம் ஆகியவற்றின் நிலைகண்டு உணர்ந்த தவசீலர். சைவசமய ஒழுக்கத்தில் நிலைநின்றவர். அவர் ஆதீன மகாவித்துவானாக திகழ்ந்த காலத்தில் அரிய நூல்கள் பலவற்றை ஆதீனம் மூலம் பதிப்பித்தவர்.

திருமந்திரம் என்ற ஒப்பற்ற ஞானநூலுக்கு "பஞ்சாட்சரதீபவுரை" என்ற பெயரில் உரைவிளக்கம் தந்தவர். திருமந்திரத்திற்கு சித்தாந்த பரமாக வெளிவந்தவுரை இது ஒன்றே.

"கணபதி", "ஆடல்வல்லான்" போன்ற ஆதீன வெளியீடுகள் மலரக் காரணமாக இருந்தவர். அண்ணாமலை, மதுரை பல்கலைகழகங்களும் இவர் நூல்கள் சிலவற்றை பதிப்பித்திருக்கின்றனர். இத்தகைய சான்றோர் ஒருவர் எழுதிய திருவாசக உரை இப்போது கிடைத்தற்கரிது.

திருவாசக முற்றோதுதல்கள் இப்போது ஆயிரக்கணக்கில் பல இயக்கங்களால் நடத்தப் பெற்று வருவது சைவ உலகத்திற்கு பெருமை சேர்த்து வருகிறது. சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து முற்றோதுதல் செய்தால், அதன் பயன் பன்மடங்கு பெருகும்.

1964-ல் வெளிவந்த இத்திருவாசக உரையின் சிறப்புக்களில் சில :

☞ சைவ மெய்ஞ்ஞானிகளின் மரபைப் பொன்னே போல் போற்றும் உரை மாட்சி

☞ முன் உரையாசிரியர்கள் சிறப்பாகப் பொருள் உரைத்த இடங்களைக் கோடிட்டு காட்டல்.

☞ வேதத் தலைதரு பொருளான உபநிடதக் கருத்துக்களுக்கு உண்மை உரை காட்டி, சித்தாந்தத்தோடு பொருத்திக்காட்டி, "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்" என நிலை நாட்டுவது.

☞ வேண்டும் இடங்களில் திருமுறை மேற்கோள்கள் ததும்பி நிறைவது.

☞ சிவஞான சுவாமிகள், சிவப்பிரகாசசுவாமிகள், வெள்ளியம் பலவாணமுனிவர் போன்ற அனுபூதிமான்கள் தங்கள் நூல்களில் திருவாசகத்தை மேற்கோள் காட்டி வலியுறுத்திய கருத்துக்களை நமக்கு ஆங்காங்கு எடுத்துக் காட்டும் சிறப்பு. (உதாரணம் திருச்சதகம் 96)

☞ அடிகளின் சொல்லாட்சி ஒவ்வொன்றுக்கும் சித்தாந்த நுட்பப்பொருளை விரித்துரைக்கும் மாண்பினை பல பாடல்களில் நாம் அனுபவிக்கிறோம். சென்னிப்பத்து 2-ம் திருப்பாடலில் வரும் அட்டமூர்த்தி, அழகன், ஆனந்த வெள்ளத்தன், சிட்டன், சிவலோக நாதன், தென்பெருந்துறைச்

சேவகன், மங்கையாளை ஓர் பாகம் வைத்த அழகன், என்ற ஒவ்வொரு சொல்லின் தனிப்பொருளையும் நுட்பமாக எடுத்து உரைக்கும் உரைநயம் இன்புறத் தக்கது.

☞ ஒவ்வொரு பதிகத் தலைப்புக்கும் கொளுவுக்கும் காரணங்களை விரித்துரைக்கும் அகத்தியச் சூத்திரம், பழைய திருப்பெருந்துறைப் புராணம், மகாவித்துவான் திருப்பெருந்துறைப்புராணம், வாதவூரடிகள் புராணம், ஆகியவற்றோடு பொருத்திக்காட்டி, பொருந் நிச்சயம் செய்யும் நுட்பம், முன் வந்த உரைகளில் பொருந்துவன, பொருந்தாதன நயமாக எடுத்துக்காட்டல் முதலிய திறம் இந்த உரை ஆசிரியருக்கே இயலும்.

☞ செத்திலாப்பத்து 5 வது திருப்பாடலில் வரும், ஆட்டுத்தேவர், நாட்டுத்தேவர், சேட்டைத்தேவர் முதலிய மூன்று சொற்றொடர்களுக்கும் திருவாசகத்துக்கு உரை செய்த ஆறு உரையாசிரியர்கள் வெவ்வேறு பொருள் கூறிச் சென்றனர். இவர் கூறும் பொருள் மிகவும் வித்தியாசமாக இருப்பதை நாம் பார்க்க முடிகிறது.

☞ சில சொற்றொடர்களுக்கு பல பொருள்களையும் கூறி, அவற்றுள் சிறப்பாக அந்தந்த இடங்கட்கும் பொருந்தும் பொருளை விளக்கிக் கூறும் பாங்கு. எடுத்துக்காட்டாக திருச்சதகம் 49ம் பாடலில் வரும், "பட்டி மண்டபம்", "எட்டினோடிரண்டு" என்ற சொற்றொடர்களையும் கூறலாம்.

☞ வைணவ இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள் காட்டுவது இவர் உரையின் மற்றுமோர் தனிச்சிறப்பு. திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சியில் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்யானத்தையும், திருக்கோத்தும்பி பதிகத்தில் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியையும், திருவுந்தியாரிப் பெரியாழ்வார் திருமொழியையும், குயில்பத்தில் நாச்சியார் திருமொழி முதலாயிரம், ஐந்தாம் திருமொழியையும் எடுத்துக்காட்டி ஒப்பு நோக்கி உரைவளம் செய்திருப்பது இவர்தம் பன்னூல் புலமையினை எடுத்துக்காட்டுகிறது.

☞ இவர் காட்டிச் சென்ற பல நூல்களை நாம் சென்று படிப்பது என்பது இயலாது. அவையனைத்தையும் இந்த ஒரே உரை நூலில் திரட்டிக் கொடுத்து நமக்கு உபகரித்து இருக்கும் இவர்தம் பெருங்கொடையை நன்றியுணர்வோடு பாராட்ட வேண்டுவது சைவமக்களாகிய நமக்கு கடப்பாடு ஆகும். போப் அவர்கள் செய்திருக்கும் ஆங்கில உரையிலிருந்தும் பல பகுதிகளை நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்.

திருவாசகத்திற்கு உரை என்று கூறிக்கொண்டு, மாணிக்கவாசகரை கண்டித்து, கண்டன உரை செய்த உரையாசிரியர்களும் உண்டு. திருவாசகத்தில் வரும் சில செய்திகளை, "தத்துவ ஆராய்ச்சியாளர் அதை ஏற்க மறுப்பர்", "இதை ஒதுக்குதல் அறிஞர் கடமை", "பிரமனையும் திருமாலையும் பழித்து பேசுவது தத்துவத்துக்கு ஒவ்வாத சமயப்பிணக்கை வளர்க்கும் .... சான்றோர்க்கு ஏற்புடையதாகாது" என்று பலவாறு மாணிக்கவாசகர் திருவார்த்தைகளை பழித்துப் பேசும் உரையும் நாட்டில் நடமாடுகின்றன. சைவசித்தாந்தத்தை முறையாகக் கற்காதவர்கள் திருவாசகத்திற்கு உரை எழுத முற்பட்டதன் விபரீத விளைவே இது.

மட்டுமன்றி, மரபுக்கு மாறான ஆன்மீகக் கோட்பாடுகளைக் கொண்ட பல ஆன்மீக இயக்கங்கள் இன்று தமிழ்நாட்டில் புற்றீசல்போல வளர்ந்து கொண்டு, சைவ ஞானிகள் கண்ணீர்விட்டு வளர்த்து வந்த சைவப்பயிரை அழித்து வருவது வேதனைக்குரிய செய்தி. ஆன்மீகம் என்ற பெயராலே நாத்திகப்பயிரும் வளர்ந்து கொண்டு வருகிறது.

எண்ணும் போது, சைவ உலகத்தில் இன்று புதிய நூல்கள் தேவையில்லை. ஏற்கனவே வெளிவந்த தரமான நூல்களை நாம் மறுபதிப்பு செய்தோ, மொழிபெயர்ப்பு செய்தோ வெளியிட்டாலே போதுமோ என்ற எண்ணமும் மேலீடுகிறது.

சைவ சமயத்தை சரியாக விளக்கும் தரமான நூல்களை மறுபதிப்புச் செய்து வெளியிடுவதை எங்கள் பேரவையின் நோக்கங்களில் ஒன்றாக கொண்டிருக்கிறோம். இந்த முயற்சியில் இது இரண்டாவது வெளியீடு. சிவஞான சித்தியாருக்கு "இருவர் உரை" வெளியிட்டது எங்கள் பேரவையின் முதல் முயற்சி.

தற்போது வெளியிடும் இந்த, "திருவாசகம் - குருவருள் விளக்கம்" என்னும் உரையின் முழு உரிமையும் திருவாவடுதுறை ஆதீனத்திற்கே உரியது. மாட்சிமிகு இவ்வுரையை மறுபதிப்புச் செய்ய எங்கள் பேரவைக்கு அனுமதி அளித்த திருவாவடுதுறை ஆதீன 23-வது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளின் பெருங்கருணைத் திறத்தை வியந்து, பொற்பாத கமலங்கட்கு வணக்கங்களை சமர்பிக்கிறோம்.

இந்நூலை வெளியிட வேண்டும் என ஆணையிட்டு அருளி, அதற்கு என பழைய பிரதி ஒன்றையும் சீர்மிகு இளைய சந்நிதானம் அவர்கள் கொடுத்து அருளினார்கள். மேலும் சிவஞானசுவாமிகளின் 216 ஆவது குருபூசை விழாவில், எங்கள்

பேரவையின் வெளியீடான சிவஞானசித்தியார் - இருவர் உரை என்ற நூலை வெளியிட்டு அருளிய சீர்மிகு இளைய சந்நிதானம் அவர்கள் இந்த ஆண்டு திருவாசகம் நூலையும் வெளியிட்டு ஆசி வழங்குகிறார்கள். பேரவை செய்யும் பணிகளுக்கு நல் ஆசியினை எப்போதும் வழங்கும் சீர்மிகு இளைய சந்நிதானம் அவர்களுக்கு எங்களது பணிவான நன்றியினையும், 26.1.2002 அன்று சோளிங்கரில் நடைபெற்ற திருவாசகமாநாட்டில், இந்நூலின் பெருமையினை விளக்கமாக எடுத்துப்பேசியும், எங்கள் பேரவையின் பணிகளுக்கு நல் ஊக்கமும் அளிக்கும் திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த நேர்முகப்பயிற்சிமைய இயக்குநர் திருமிகு.கு. வைத்தியநாத ஈசான தேசிகர் ஐயா அவர்களுக்கு எங்கள் பணிவான வணக்கத்தையும் தெரிவிக்கிறோம்.

இந்நூல் வெளிவருவதற்கு அனைத்து முயற்சிகளிலும் கூடவே இருந்து எங்களை வழிகாட்டிய பேராசிரியர் சு.சண்முகவேல் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரியது.

இத்தகு அரிய முயற்சிகளை செய்து வரும் பேரவையினை தலைமை ஏற்று நடத்தும் தலைவர் பேராசிரியர் மீ. முருகலிங்கம் அவர்களுக்கும், இந்நூல் வெளிவருவதற்கான அனைத்துப் பணிகளிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட அன்பர்கள் திரு. சொரிமுத்து அவர்களுக்கும், திரு. சிவசண்முகம் அவர்களுக்கும் நன்றி.

குறித்த காலத்தில் நல்லமுறையில் அச்சிட்டு உதவிய திருச்செந்தூர் சரவணா ஆப்செட் நிறுவனத்தினர்க்கும், அழகிய வேலைப்பாடுகளுடன் அட்டையினை செம்மையாக செய்து உதவிய நாகர்கோவில் வருண் பதிப்பகத்தார்க்கும் நன்றி. கிடைத்தற்கரிய இந்தவுரை, தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு இப்போது புதுப்பொலிவோடு வருகிறது. தமிழ் உலகம் இதன் பயனை நுகர்வதோடு பேரவையின் நன்முயற்சிகட்கு பேராதரவும் நல் ஆலோசனைகளும் நல்கி, இது போன்ற இன்னும் பல வெளியீடுகள் வெளிவர துணைசெய்யுமாறு பணிந்து வேண்டுகின்றோம்.

அன்பன்

*கு. முருகேசபிள்ளை*

செயலர்

சிவஞானசுவாமிகள் பேரவை

விக்கிரமசிங்கபுரம்

03.04.2002

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

## சிவபுராணம்

திருப்பெருந்துறையில் குருந்தமரத்தின் அடியில் குருவடிவாக எழுந்தருளி மணிவாசகப் பெருந்தகைக்கு அருளாரமுதத்தை வழங்கிய சிவபெருமான், அருட்கண் பாலித்து, 'சிதம்பரத்தில் ஆன்மாக்களுய்ய அனவரதமும் ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளுகின்ருேம்; அவ்விடம் வருக' என்று ஆணை தந்து மறைந்தருளினுர். கேட்ட வாதவூரடிகள் திடுக்கிட்டு, குருவின் திருமேனி காணும் இணையில்லா இன்பத்தையும் இழக்கின்ருேமே என்று இரங்கி, அன்பரொடு மருவுதலாகிய சிவநெறியில் தலைப் படுவாராக அடியார் கூட்டத்தை அடைந்தார். அங்கு அடியார்களும் தாமுமாகக் குருந்தமரத்தடியில் தெய்வப் பீடிகை ஒன்று செய்து, அதில் குருநாதனுடைய திரு வடித்தாமரைகளை அமைத்து வணங்கிவந்தார். ஒருநாள் இவர் உள்ளத்து, 'இறைவன் அடியடைந்தார் அன்பில ராயினும் பாடிப் பரவுவாராயின் இறைவன் அவர்க்கு இரங்கி அருள்செய்வன்' என்ற எண்ணம் திருவருள் விளக்கத்தால் தோன்றியது. உடனே மங்கலச் சொல் யாவற்றிற்கும் தலையாயதும், தான் மங்கலமாதலேயன்றித் தன்னைச் செபிப்பார்க்கும் தியானிப்பார்க்கும் பெருமங்கலம் தரவல்லதும், வேதவிருட்சத்து வித்தாயுள்ளதும், ஞான சம்பந்தப் பெருந்தகையாரால் 'வேத நான்கினும் மெய்ப் பொருள் ஆவது' என்றும் 'செந்தழல் ஓம்பிய செம்மை

வேதியர்க்கு அந்தியுண் மந்திரம்' ஆவது என்றும், திரு நாவுக்கரசு சுவாமிகளால் 'கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது' என்றும், 'நாவினுக் கருங் கலம்' 'நல்லக விளக்கு' என்றும் பாராட்டப்பெறுவதும், தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என்று மூன்று முறை களால் பரிபாகநிலைக்கு ஏற்ப ஓதப்பெறுவதும் ஆகிய திருவைந்தெழுத்தை முதலாக வைத்து 'நமச்சிவாய வாழ்க' என இக்கலிவெண்பாவை அருளிச்செய்தார்கள்.

சிவபுராணம் - சிவனது அநாதி முறைமையான பழமை. 'அநாதியுடனும் நின்மல சிவனுடைய அநாதி முறைமையான பழமை' என்பது அகத்தியமாமுனிவர் அருளிய திருவாசக அனுபவச் சூத்திரம்.

புராணம் - பழமை. சிவபுராணம் - சிவனது பழமை. பழமையில் காலத்தொடுபட்ட பழமையும், காலம் கடந்த பழமையும் என இருவகை உண்டு. அவற்றுள் சிவனது பழமை காலாதீதமானது; காலத்தொடு கற்பனை கடந்தது: ஆதலின் அநாதி நித்திய முறைமையான பழமை எனப் பட்டது. சிவனது பெருங்கருணையாகிய அநாதியான சச்சிதா நந்த முறைமை; இதனுள் வேதாகம புராண சாத்திர சுத்த சைவ அபேத அத்துவித சித்தாந்த சம்பிரதாயம் முழுதும் அடங்குந்தன்மைக்குச் சிவபுராணம் என்று பெயராயிற்று என்பது பழைய உரை. இதன் கருத்து இறைவனுடைய உண்மை அறிவானந்தப் பழமையே சிவபுராணம்; இதனுள் ஞானவாயில்களாகிய வேதாகமவிதிகளும் அவற்றின் விளைவும் அனைத்தும் அடங்கும் என்பதாம்.

இது சிவனது அருவநிலை கூறுவது என்பர் சிலர்.

> 'தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்தில்
> பேசுதிருச் சிவபுரா ணத்தகவற் பெருமைசொலில்
> ஈசர்தமக் கியல்பான திருநாம முதலெவையும்
> மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்'

என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம்.

இது கலிவெண்பாவாலானது. சிலர் இதனை அகவல் என வழங்குவதைக் காண்கிறோம். பழைய திருப்பெருந்துறைப் புராண ஆசிரியரும் சிவபுராணத்தகவல் என்கிறார். ஆகவே, கலிவெண்பாவை அவர்கள் தவறி அகவல் என்கின்றார்கள்

அல்லர். முதற்கண் உள்ள நான்கினில் இது நீங்க ஏனையவை அகவலாக இருத்தலின் பெரும்பான்மைபற்றிய வழக்காகக் கூறினார்கள் என்று கொள்க.

இது தொண்ணூற்றைந்து அடிகளான் அமைந்த ஒரு கலிவெண்பா. இதனுள் 'நமச்சிவாய வாஅழ்க' என்பது, திருவாசக முழுதும் மணிமாலையுள் நூலிழைபோல ஊடுருவி நின்று ஒளிதரும் பொருள் திருவைந்தெழுத்தாகலின் அது எம் மனத்துள் என்றும் நிலவுக என்னும் பொருளும், சிவ ஞானபோதப் பன்னிரண்டாம் சூத்திரத்து அணைந்தோர் தன்மையாக அமைந்ததன் கருத்தும் அடங்க உணர்த்துகிறது.

'நாதன் தாள் வாழ்க' என்பது முதல் 'இறைவனடி வாழ்க' என்பதுவரையுள்ள அடிவாழ்த்து ஐந்தும் சிவன் நாதாதி நின்று அருள்வழங்கும் முறைமையை அறிவிக்கிறது.

'வேகம் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க' என்பது முதல் உள்ள வெல்க எனத் திருவடிவெற்றி கூறும் பகுதி ஐந்தும் பஞ்சமல நிவிருத்தியை அறிவிப்பன.

'ஈசனடி போற்றி' என்பது முதல் திருவடிபோற்றிகள் எட்டும் இறைவனுடைய காருண்யமாகிய எண்குணங்களைத் துதிப்பன.

'சிந்தை மகிழ . . . . உரைப்பன் யான்' என்பது இச்சிவ புராணத்தை உயிர்கள் ஐம்மலக் கட்டினின்றும் அகன்று, பேரானந்தம் பெற்று, இன்பமெய்துக என்று இயற்றுதற்குக் காரணம் இயம்புகின்றது.

'கண்ணுதலான் தன்கருணை . . . . இறைஞ்சி' என்பது ஆசாரிய வணக்கம் அறிவிக்கின்றது.

'விண்ணிறைந்து . . . . . . எல்லையிலாதானே' என்பது இறைவனியல்பு உபதேசவாயிலான் உணரத்தக்கது என்பது உரைக்கின்றது.

'நின்பெருஞ்சீர் . . பணிந்து' என்பது துதியும், இதன் பெருமையும், இதன் பொருட்பயனை உணருவோர் உணர்த்து வோர் எய்தும் பயனும் உணர்த்துகிறது.

இவ்வண்ணம் இச்சிவபுராணம் பொருட்பெற்றியால் எட்டுப் பகுதியாக அமைந்துளது. இவற்றின் அமைப்பையும் அழகையும் உரைக்கிடையில் காண்க. இப்பகுதி முழுதும் பழையவுரை தந்த கருத்துக் கருவூலமாகும்.

## கலிவெண்பா

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க 5
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க 10
ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி 15
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான் 20
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன் 25
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள் 30
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே 35
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா

பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே 40
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே 45
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் றன்னை 50
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய 55
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் 60
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப் 65
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே 70
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின் 75

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய் 80
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று 85
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே 90
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து. 95

திருச்சிற்றம்பலம்.

இதன் பொருள்: (வரி. 1 — 5) நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து வாழ்க; நாதன் திருவடி வாழ்க; கண்ணிமைக்கும் ஒருமாத்திரைக் காலமுங்கூட எனது மனத்தைவிட்டு அகலாதவன் திருவடி வாழ்க; கோகழியென்னும் தலத்தில் எழுந்தருளி எம்மை ஆண்டுகொண்ட குருமணிதன் திருவடி வாழ்க; ஆகம நூல்களாக நின்று உயிர்களை அணுகி அருள் வழங்குபவன் திருவடி வாழ்க; ஒருவனேயாயும், பலராயும், எல்லாப் பொருள்களுக்கும் தலைவனுயும் இருப்பவன் திருவடி வாழ்க என்றவாறு.

'நமச்சிவாய வாழ்க' என்பது திருமந்திர வாழ்த்தாகும். 'நமசிவாய' என்பது திருவைந்தெழுத்து. இந்த ஐந்தெழுத்துக்களும் தனித்தனியாகப் பொருளுணர்த்தும் தன்மையன. 'ந' என்பது மும்மலங்களையும் தத்தம் தொழிலில் ஈடுபடுத்திப் பரிபாகம் வருவித்தற்பொருட்டு மலங்களுடனின்று உயிரை மறைத்தலால் திரோதானசத்தி என்றும் திரோதாயி என்றும் திரோதானமலம் என்றும் கூறப்படுவதாகிய சிவசத்தியையும், 'ம'

என்பது உயிரைப் பந்தித்து நிற்கும் ஆணவம் மாயை கன்மம் என்ற மும்மலங்களையும், 'சி' என்பது சிவத்தையும், 'வ' என்பது சிவத்தோடு உடனாய் நிற்கும் திருவருளையும், 'ய' என்பது உயிரையும் உணர்த்தும் எழுத்துக்களாம். இவ்வெழுத்துக்கள் இணைந்து இருசொல்லாய் 'வணக்கம் சிவனுக்கு' என்னும் பொருளையும் தருவதாம். இவ்விரண்டு பொருளும் தம்முள் இயைபில்லாதன என்று எண்ணற்க. எழுத்தறியாத இளம் பிள்ளைக்கு இரண்டொரு ஆண்டு பள்ளிக்குச்சென்று ஓரளவு எழுத்துணர்ந்த சிறுவன், இளம்பிள்ளைக்கு இளம்பிள்ளையாயும் ஆசிரியனுக்குச் சட்டாம்பிள்ளையாயும் இருந்து, இளம்பிள்ளையைத் தன்னினமென்று நம்பச்செய்து பள்ளிக்கு அழைத்துச்சென்று, சிறிது சிறிதாக எழுத்தறிவு உண்டாக்கி ஆசிரியருக்கு அடிப்படுத்துவதுபோலத் திரோதாயியாகிய அருட்சத்தி மலமாயைக்கு முன்னின்று அவற்றை இயக்கிப் பரிபாகப் படுத்தி அறியாமையால் (ஈற்றில் எங்கோ) ஒதுங்கிக்கிடக்கும் உயிரைச் சிவமும் திருவருளும்சார 'வணக்கம்' என்று சொல்லவும் தூண்டுதலின், தொடக்கநிலையில் பரிபாகமுற இருக்கும் உயிர்க்கு இத்தூலபஞ்சாக்கரமே எண்ணத்தக்கது என்னும் சோபானமுறை தோன்றநிற்றல் காண்க.

இவ்வண்ணம் ஓதப்பெறுகின்ற திருவைந்தெழுத்து, தூல பஞ்சாக்கரம் எனப்படும். மலமாயை கன்மங்களோடுபிணைந்து, பெத்தநிலையில் அறிவு மறைந்து, அறியாமைவயப்பட்டு, அகங்கரித்து நிற்கும் ஆன்மா, தன்மீது அருளொளி சிறிது வீசப் பெற்றதால் 'இறைவன் ஒருவன் உளன்' என்ற சிந்தையைப் பெற்று, அவன் பெரியவற்றுள் பெரியன் அளவிலாற்றலன் எல்லையில் கருணையன் என்ற உறைப்புண்டாக, அதனால் தன் சிறுமை மாட்டாமை மடமைகளை உணர்ந்து முனைப்படங்கி, 'வணக்கம்' என எண்ணுவதொரு செயலான் அன்றி, வேறு உபாயங்களால் சிவம் சென்று சேர்தற்கு உரியதன்றாகலின் முதன்முதலில் வணக்கம் என உயிர் அணுகுவதாயிற்று. இந்த நிலையை 'நம:' என்னும் முதற்சொல் தெரிவிக்கும்.

நாம் வணங்குபவன் என்பதையுணர்ந்த உயிர், வணங்கத் தக்கவன் சிவன் என்பதையும் தெளியும். ஆகையால் தலைவனைச்சாரும். அதாவது 'சிவா' என்பதனைப் பொருந்தி, அநுபவ முதிராமையால் தான்மட்டும் இறுதியில் நின்று நம சிவாய என விளங்கும். இவ்வண்ணம் எண்ணும் அநுபவமும் நிற்கும் அநுபவமுமே தொடக்கநிலையில் உண்டாவது. ஆதலால் இது தூலபஞ்சாக்கரம் எனப்படுவதாயிற்று.

ஞானசாரியப் பெருந்தகையாகிய மாணிக்கவாசக சுவாமிகள் உயிர்களின் தரமறிந்து உபதேசிக்க முற்படுகின்றவர்கள் 'நமசிவாய' 'வாழ்க' என்றருளினார்கள். இங்ஙனம் ஓதுதலும் நிற்றலும் சிம்முதலாய் எண்ணுதலாகிய சூக்கும நிலைக்கு உயர்த்தும். அப்போது 'வணக்கம்' என்று கூறிய உயிர் திருவருட் சார்பிலே நிற்க, அதன் பின்னர், மல மாயை திரோதாயிகள் ஈற்றில் ஒதுங்கி முனைப்படங்கி நிற்கும். இத்தகைய அநுபவ உண்மைகளையெல்லாம் அடக்கி, முதன்முதலாகத் தூலபஞ்சாக்கரத்தை உலகிற்கு உணர்த்தி வழிப்படுத்துகின்றார்கள்; அம் மந்திரம் வாழ்க என வாழ்த்துகிறார்கள். மந்திரம் வாழ, எண்ணுபவன் வாழ்கிறானதலால் மந்திரத்தை வாழ்த்துகிறார்கள்.

இதுவே மந்திரமும் மங்கலச்சொல்லும் ஆதலின் முதலில் எடுத்துக் கூறப்பட்டது. தீட்சைபெற்றுச் சைவநூல் கேட்டுச் சிவநெறி நில்லாதார் சிலர், 'நமச்சிவாய' என்பது வணக்கம் சிவனுக்கு என்னும் பொருள்தருமே அன்றி மந்திரத்திற்குரிய பொருள்கள் அனைத்தையுந்தராது என்பர்; தமக்கு முன்னுள்ள உரைகாரர்களையும் மறுப்பர். பால் மருந்துமாய் உணவும் ஆதல்போல, திருமந்திரமும் மெய்ப்பொருளை உணர்த்துதலும் வணக்கம் சொல்லுதலும் என்னும் இருபொருளையும் ஒருங்கு உணர்த்துதல் காண்க. உலகியலிற் பேசப்படும் பலபொருள் ஒருசொல்லாயின் ஒருபொருளைக் குறிக்கும்பொழுது மற்றொரு பொருளைத் தரும் ஆற்றல் இழக்கும். இது அங்ஙனமன்றிச் சொல்லும்போது சிவனுக்கு வணக்கம் ஆகியும், நிற்கும்போது ஐந்து பொருளதாகியும் நுகரப்பெறும் என்பதை நெறிநின்று தெளிக. இதனையே திருவாசக வியாக்யானம் என்னும் பழைய உரையும் 'வாழக்கடவது என்று பெரியோர்கள் ஆசீர்வாதம் பண்ணுதலைப்போல, பஞ்சாக்கரம் வாழ்க என்றருளியது. பிற ஆசீர்வாதம் அன்று; பரமசிவனை நோக்கி ஐவகைப் பொருளாகிய தேவரீர் அடியேனிடத்து அபேதமாகத் தானாய்நிற்கும் முறைமை பிரியாதிருக்க அருள்க என்பது கருத்து' என உரைக்கின்றது.

நாதன்தாள் வாழ்க என்பதுமுதல் அண்ணிப்பான் தாள் வாழ்க என்பதுவரை திருவடி வாழ்த்து ஐந்து. நாதன் - தலைவன்; நாத வடிவினன். எவன் எல்லாவற்றிற்கும் மூல காரணனாக வித்தாக விளங்குகிறானோ அவனே முதல்வனுந் தன்மை உடையனாதலின் இருபொருளுக்கும் இயைய நாதன் என்னும் தமிழொலி நின்றது. நாதவிந்து செகத்சொரூபமான பரம்பொருளாகிய பரசிவன் என்பது பழையவுரை. திருவடி,

அனைத்திற்கும் மூலகாரணமானது. ஆதலால் அத்திருவடியை வாழ்த்துகிருர்.

இங்கும் சிலர் நாத தத்துவ வடிவினன் என்று உரை கூறுதல் பொருந்தாது; தலைவன் என்பதே அமையும் என்பர். முன் அவன் எழுத்தை வாழ்த்தியவர் எழுத்துப் பிறப்பதற்கு மூலமான நாதத்தையும் வாழ்த்தவேண்டிய இன்றியமையாமை யிருத்தலின் எல்லா ஒலியுலகிற்கும் மூலமான நாதன்தாளை வாழ்த்துதலே மரபும் முறையும் ஆதல் காண்க. பழைய மரபின் வந்த உரைகளும் இக்கருத்தை வலியுறுப்பன.

ஒலியெழுத்துக்களின் புலப்படும் வடிவம் (ஸ்தூல வடிவம்) நாதம். அது அசுத்தமாயையை இயக்க, பருப்பூதங்கள்வரை தோன்றுதலின் இவற்றிற்கெல்லாம் மூலமான நாத தத்துவ வடிவினன் என்பதும் ஏற்புடைத்தாதலை, 'அரனுக்கென்றே வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைகள் எல்லாம்' என்ற சிவஞானசித்தியார் பாடல்கொண்டும் தெளிக.

இமைப்பொழுது - இமைகள் இரண்டும் இயல்பாகவே பொருந்தும் காலம். 'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' என்ற தொல்காப்பியச் சூத்திரங்கொண்டும் தெளிக. கண்ணிமைப்பொழுது ஒருமாத்திரை எனப்படும். அவ்வளவு சிறுபொழுதும் என் நெஞ்சில்நின்றும் அகலாதவன் திருவடி வாழ்க என அவனது பேரருட்டிறம் பேசப்படுகிறது.

இறைவன் இதயத்தாமரையில் எழுந்தருளியிருக்கின்றான் என்பதை 'மலர்மிசை ஏகினன்' எனத் தமிழ்மறையும், 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' எனத் தேவாரமும்,

> 𑌹𑍃𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌵𑌿𑌰𑌜𑌂 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂...𑌉𑌮𑌾𑌸𑌹𑌾𑌯𑌂
> 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 - 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌂 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂
> 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 |

எனக் கைவல்யோபநிடதமும் கூறுதல் காண்க. நான் அவனை மறக்கினும் அவன் என் நெஞ்சைவிட்டகலாத பெருங்கருணையாளன் என்பார். நீங்காதான் என நீங்காமையை இறைவன் தொழிலாக்கிக் கூறினர். என் நெஞ்சு என்றது, குருதரிசனமும் குருவுபதேசமும் கிடைக்கப்பெற்றும் இழந்த தீவினையேனாகிய எனது நெஞ்சம் என நெஞ்சின் இழிவுதோன்ற நின்றது.

கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க - திருவாவடு துறையை இராசதானியாகக்கொண்டு ஆண்ட குருமணியின் திருவடி வாழ்க. திருவடிவாழ்க என்றதற்குப் பழையவுரைகாரர் திருவடி என் மனத்தைவிட்டுப் பிரியாது வாழ்வதாகுக என உரைகாண்பர். திருவைந்தெழுத்தைத் தந்து அதன்வடிவாகத் தானிருத்தலையும் விளக்கியருளிய உபகாரி குருமணி என்பார் குருமணியின் தாளை வாழ்த்துகின்றார். குரு மணி - குருவில் மணி போன்றவர்; பரமாசாரியன் என்பதாம.

கோ - தலைமை, பெருமை. கழி - துறை. கோகழி - திருப் பெருந்துறை என்பாரும் உளர். வாதவூரடிகட்கு இறைவன் குருவாக எழுந்தருளித் திருவாவடுதுறையில் உபதேசித்ததாக வரலாறு ஒன்றும் இல்லாமையால் கோகழி திருவாவடுதுறை யெனல் பொருந்தாது எனவும் கூறுவர். மணிவாசகப் பெருந் தகை தில்லைக்கு எழுந்தருளும் வழியில் திருவாவடுதுறைக்கு வந்து மாசிலாமணியீசரைவழிபட்டுச் சிலநாள் தங்கியிருந்தார். ஒருநாள் மாசிலாமணியீசர் குருந்தடிக் குருமூர்த்தியாகக் காட்சி வழங்கினர். அடிகளார் கண்டு பேரானந்தமுற்றனர் என்பது தலபுராண வரலாறு ஆதலின் கோகழி என்பதைக் கண்ணழித் துக் காரணப்பெயராகக்கொண்டு திருப்பெருந்துறை எனல் வேண்டா என்க.

ஆகமம் : ஆரியச்சொல். கம் என்னும்பகுதி போ என்னும் பொருளது. ஆகவே கமம் - போதலையுடையது. ஆ உபசர்க்கம். உபசர்க்கம் பகுதிப்பொருளை மாற்றும், எல்லையைக் குறிக்கும். ஆகவே, ஆகமம் என்பது இறைவனிடமிருந்து வருதலையுடை யது என்னும் பொருளதாம். உயிர்களை உய்யக்கொள்ள அவ னருளால் உயிர்களிடம் வருதலை உடையது எனவும், இறைவ னுக்கு அணுக்கமாகப் போதலை உடையது எனவும் பொருள் படும். ஆகமம் என்பதன் சங்கேதப்பொருளாக, ஆகமங்களில் கூறப்பெறும் பொருளாவது :- ஆ - ஞானம், க - மோட்சம், ம - மலநாசம். ஆகவே ஆகமம் என்பது ஞானத்தை நல்கி, மல நாசம் செய்து, மோட்சத்தை வழங்குவது என்னும் காரணக் குறியாய் நூல்களை உணர்த்திற்று. ஆ - பாசம், க - பசு, ம-பதி எனப் பொருள் தந்து, பதி பசு பாசங்களாகிற முப்பொருளி யல்பை உணர்த்துவது எனலுமாம். இவை காமிகம் முதலாக இருபத்தெட்டாம். இவையன்றி வாமம் லாதுளம் முதலானவும் இப்பெயரால் அழைக்கப்பெறுவன. இவை சிவாகமங்கள் ஆகா மையால் பிரமாணங்களாக ஆளப்பெறுதல் இல்லை. ஆகவே சிவாகமங்கள் சதாசிவமூர்த்தியின் ஐந்து திருமுகங்களிலிருந்து

தோன்றினமையின் அவற்றிற்கு மாறுபடாமல் யூகிப்பதே தர்க்க மாம் என யஜுர்வேதத்தைச் சார்ந்த அமிர்தநாதோபநிடதம்,

ஆகமஸ்யாவிரோதேந ஊஹநம் தர்க்க உச்யதே।

என்கின்றது. ஆதலால் இத்தகைய சிவாகமங்களாகத் தான் ஆகி உயிர்களை அணுகி அருள்செய்பவன் இறைவன் என்று அருளினார்.

முழுமுதற்கடவுள் ஒன்றேயாதலால் ஏகன் என்றார். 'ஒன்றாகி - முடிந்த பொருளாயுள்ளவனை அகண்டாகார சச்சிதா நந்த நித்திய சுத்த பரிபூரண பராபர பரைவடிவாகிய நாதன்' என்று பழையவுரை அனுபூதியாக அறிவிக்கும். ஆகவே அறிவுடையனவும் அறிவற்றனவுமாகிய உலகங்கள் இரண்டிலும் ஆகாயம் போல நிறைந்து செறிந்திருக்கும் பதிப்பொருள் ஒருவனேயாதலின் ஏகன் என்றார் என்க.

இதனையே கடவல்லி,

ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா

என்றும், அதர்வசிரஸ்,

ஏகோ ருத்ரோ ந த்விதீய:

என்றும், சாந்தோக்யம்,

தேவாநாம் அதிரோக:

என்றும் அறிவிக்கின்றன.

அநேகன் - எண்ணிறந்த அருட்கோலங்கள் உடையவன். இக்கோலங்கள் மாயாகாரியம் அல்லாதன, அவன் சங்கற்ப மாத்திரையானே அவன் அறிவின்கண் தோன்றும் அறிவுருவாவன. இக்கருத்தை,

ஏகஸ்வ்ருக்ஷேந்த்ரரூபீ

என நாராயணோபநிடதமும்,

விஶ்வவ்ருக்ஷேந்த்ரரூபீ

எனக் கைவல்யோபநிடதமும் கூறுகின்றன. இதனால் சிவன் ஒருவனே ஐந்தொழிலாற்றிப் பாதுகாத்தற்பொருட்டும், அன்பர்கள் வணங்கி உய்யும்பொருட்டும், தனது ஆற்றலால் பல அருட்கோலம் கொள்கிறான் என்பது. இதன் நுட்பத்தையும், அதனால் இறைவன் விகாரியாகான் என்பதையும்,

'ஒருவனே இராவணுதி பாவகம் உற்றுற்போலத்
தருவனிவ் வுருவமெல்லாம் தன்மையும் திரியாளுகும்'

என்னும் சித்தித்திருவிருத்தம் விளக்கும்.

இறைவன் - எல்லாப் பொருள்களிலும் தங்குபவன். இறுத்தல் - தங்குதல். அரசன் தனது ஆணைவழி உலகை நடத்துதல் போல, சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என்ற மூவகை யாருயிர் வர்க்கங்களையும் பெத்த நிலையிலிருந்து தேற்றி முத்த ராக்கப் பலசத்திகளை அதிட்டித்து நின்று தம் ஆணைவாயிலாகத் திருவடியைச் சேரச்செய்தலின் இறைவன் என்றார் என்பது பழையவுரை. அடியென்றது ஏகனாக இருந்தநிலையில் அவன் அருளையும், அநேகனாகியும் இறைவனாகியும் இருந்த நிலையில் திருவருள் வடிவான சீபாதங்களையும் உணர்த்தும் என்க. இக்கருத்து முழுதும்,

'ஏகனு மாகி யநேகனு மானவன்
நாதனு மானுனென் றுந்தீபற
நம்மையே யாண்டானென் றுந்தீபற'

என்னும் திருவுந்தியாரினும் அறிவிக்கப்பெறுதல் காண்க.

திருவடி வாழ்த்தாக அமைந்த இந்த முதல் ஆறு அடிகளாலும் இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனாதலையும், உயிரையும் உடம்பையும் கலந்துநின்று இயக்குதலையும், அன்பரகத் தாமரையுளிருக்கும் அவன், புறத்தேயும் குருவாகவந்து காட்சி வழங்குதலையும், நேர்க்காட்சியில் கண்ட சிவனை நூற்காட்சியிலும் கண்டு தெளிதலையும், சிவபரம்பொருள் ஒன்றாயும் பலவாயும் பரிபாகநிலைக்கு ஏற்ப அருளுதலையும் அடிகள் விளக்கியருளுதல் காண்க.

இ - ள்: (6–10) மன ஓட்டத்தைத் தொலைத்து அடியேனை ஆட்கொண்ட இறைவன் அடிகள் வெல்வனவாகுக; பிறவியாகிய மரத்தை அறுக்கும் இறைவனது திருவடியில் செறிக்கப்பட்டுள்ள கழல்கள் வெல்வனவாகுக; திருவருள் நோக்கிற்குப் புறம்பானவர்களுக்குத் தூரத்திலுள்ளவனாகிய சிவபெருமானுடைய பொலிவான கழல்கள் வெல்வனவாகுக; கைகூப்பி வணங்குகின்ற அன்பர்கள் நினைந்து மகிழ்வதற்குக் காரணமான இறைவனுடைய திருவடிகள் வெல்வனவாகுக; தலையின்மேல் கைகூப்பி வணங்குகின்றவர்களை உயர்த்தும் சீர்த்தியை உடைய சிவன் கழல்கள் வெல்வனவாகுக என்றவாறு.

இவை வெல்க என்ற ஐந்து. வேகம் கெடுத்தலும், பிறவி அறுத்தலும், புறத்தோரால் அணுக இயலாமையும், வணங்கு பவர்களை வாழவைத்தலும் வென்றோனுடைய கொற்றமாதலின் வெல்க என வாழ்த்தியவாறு.

வேகம் - அறியாமையால் மாயையில் கட்டுண்டு ஒன்றினும் நிலைபெறாது ஓடிக்கொண்டே இருக்கிற மனவேகம். வேகம் என்பது வடசொல். 'ஓட்டற்றுநின்ற - உணர்வான - உண்மை யான பசுபோதத்தைத் திருநோக்கத்தால் தீட்சித்தலே வேகம் கெடுத்தல் என்பது' என்னும் பழையவுரை.

ஆண்ட வேந்தன் - சேற்றில் விழுந்த மணியை நீரால் கழுவி எடுப்பார்போல மலச்சேற்றுள் அழுந்திய என்னைத் திருநோக்கால் எடுத்து அருள்நீரால் கழுவிப் பசுஞானத்தைப் பதிஞானமாக்கி அடிமையாக ஏற்று ஆட்கொண்ட அரசன் என்பது. தேட்டற்று நின்ற இடம் சிவமென அடிமையாகச் செய்த மன்னவன் என்பது பழையவுரை. அடி வெல்க - வேந் தன் அடியானது எனது உள்ளத்திலுள்ள அகப்பகைகளாகிற காமமாதிகளை வென்று அகற்றிச் சிவபோகத்தை விளைவிக்க என்பது. இது, பொறிகளின் வாயிலாகப் புலன்களில் சென்று பற்றி, ஒன்றினும் நிலையாது ஆசைவயப்பட்டு, ஆகாமிய சஞ் சித வினைகளைத் தேடிக்கொள்கிற மனத்தின் விரைவைத் தடுத் துக் கட்டுப்பாட்டிலிருத்தி ஆட்கொண்ட மன்னவன் சிவன்; அவன் திருவடி என் தடையை நீக்கி இன்பம் விளைப்பதாகுக என்பதாம்.

பிறப்பு, ஆற்றின் நீரோட்டம்போல அநாதியாய், வினை வயத்தால் இடையீடின்றி விளைவதாய், கறங்கும் சகடமும் போலச் சுழற்சியும் மேலும் கீழுமாக மாறித் தோன்றுதலும் உடையது. அறுக்கும் என்ற வினையால் பிறப்பு மரமாகவும் கழல்கள் வாளாகவும் இங்கு உருவகிக்கப்பெற்றுள்ளமை ஓர்க. பிறப்பை அறுத்தலாவது இன்றுவரை அருளிய தேகப்பற்று நீங்கித் திருவடிஞானத்தையே தேகமாக அருளுகை. பிஞ்ஞ கன் - மயிற்பீலியை உடையவன். பிஞ்சகம் என்பதன் திரிபு. பிஞ்ஞகம் - தலைக்கோலம் என்கிறது திவாகரம். தலைக்கோலம் உடையான். தலைக்கோலமாவது சடைமுடியும் தவழ்பிறையும் கண்ணியும் கபாலமும் கங்கையும் முதலியவற்றால் அழகமைந் திருக்கை. பெய் கழல் - செறிக்கப்பட்ட வீரக்கழல். பிறப்பு அறுத்தலும் வீரக்கழல் சூடுதலும் வெற்றியும் வெற்றிச்சின்னமு மாதலால் எல்லா அடியாரிடத்தும் இவ்வெற்றி நின்று நிலவு வனவாக என விண்ணப்பித்தவாறு.

புறத்தார்க்குச் சேயோன் - அன்பில்லாதவர்கட்கு எட்டாத வன் எனலும் ஆம். சேயோனுதலாவது வெறுப்புணர்ச்சியால் விலகிப்போவதன்று; அன்புவடிவாய்த் திகழும் அடியார்பால் மணியின்கண் சோதிபோல வெளிப்பட்டுத் தோன்றுகையும், அன்பிலராய் அருளுக்குப் புறம்பானவரிடத்தில் விறகில் தீயும் பாலில்படு நெய்யும்போல மறைய நிற்றலுமாகிய அவ்வளவே. 'அணைந்தோர் தன்மையான அடிமைத்திற அநுபூதி இல்லாத அபரிபாக ஆன்மாக்களுக்கு அநுபூதிக்கு எட்டாத நாதன்' என்பது பழையவுரை.

பூங்கழல்கள் - பூப்போலும் மெல்லிய கழல்கள். பொலிவு பெற்ற கழல்கள் எனினும் ஆம். கழல் ஈண்டு ஆகுபெயராய்த் திருவடியை உணர்த்திற்று எனலுமாம். இப்பகுதி 'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன்' என்னும் ஞானசம்பந்தர் வாக்கையும், 'சார்ந்தவர்க்கு இன்னமுதம் ஆயினனை' என்னும் திருநாவுக்கரசர் வாக்கையும் நினைவுறுத்துவன.

கரம் குவிவார் - கைகூப்பி வணங்கும் அன்பர்கள். கரம் குவிதல் - தாமரைமொக்குப்போல இருகைகளையும் இணைத்துக் கும்பிடுதல். இது நாட்டிய சாத்திரத்தில் நமஸ்கார முத்திரை எனப்படும். இது சிவபெருமானையே குறிப்பதாகும் ஆதலால் நமஸ்கார முத்திரையால் மகிழ்ந்த சிவபெருமான் கரங்குவிப் பாரையும் மனம் மகிழவைக்கின்றார் என்பது ஈண்டு உணரத் தக்கது. கரங்குவிவார் உள்ளத்தை இருப்பிடமாகக்கொண்டு மகிழும் கோன் என இறைவற்கே அடையாக்கலும் ஆம்.

குருமணியாகிய ஆண்டவனைக் கண்டபொழுது உள்ளிடம் வெளியிடமென்று பாராது விழுந்து வணங்கி வீடும் வேண்டா விறலினராய்க் கூடும் அன்பினில் கும்பிடுவார் உள்ளத்தில், பூவினிற்கந்தம் பொருந்தியவாறுபோல் சிவானந்தம் தோன்று தலின் இங்ஙனம் கூறினார். கரங்குவிப்பார் என்னாது குவிவார் எனக் குவிதலைக் கையின் வினையாகக்கூறியது 'நான்மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' என்பதுபோலப் பயிற்சி மிகுதி யானும், சித்தம் சிவத்தோடு ஒன்றி நிற்றலானும் இறைவனை நினைத்த அக்கணமே கரங்கள் தாமாகக் குவிகின்றன என்பது.

சிரம் குவிவார் - சிரத்தின்மேல் கைகூப்புவார். குவிதல் என்பது சிதறிச்சென்று பற்றாது ஒன்றின்கண்ணே தாழ்தல். மனம் குவிந்தது என்புழி இப்பொருட்டாதல் காண்க. அது போலச் சிரத்தையும் சிவனடிக்கண் தாழ்த்துவார் எனினுமாம்.

அப்பர்சுவாமிகள் 'தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை' என்றதும் இக்கருத்திற்குத் துணை செய்யும். தாழ்ந்தோரை உயர்த்தி அறக்கருணை செய்தலும் உயர்ந்தோரைத் தாழ்த்தி மறக்கருணை காட்டலும் இறைவன் இயல்பாதலின் அவனைச் 'சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன்' என்றார். புகழ் தன்னையே தமர்க்கு நல்கும் சிறப்பிற் சிறந்ததொன்று இல்லையாகலின் அதுவே ஈண்டுச் சீர் எனப்பட்டது.

வெல்க என்ற இவ்வைந்து சொற்றொடர்களையும் குருத் துதி கூறியது என்பர் பழையவுரைகாரர்.

இ - ள் : (11–16) தலைவனது திருவடிகளுக்கு வணக்கம்; எம் தந்தையின் திருவடிகளுக்கு வணக்கம்; ஒளி வடிவினனாய இறைவன் திருவடிகளுக்கு வணக்கம்; சிவபரம்பொருளின் சிவந்த திருவடிகளுக்கு வணக்கம்; அன்பர்களின் அன்பில் நிலைபெற்று விளங்குகின்ற இயல்பாகவே மலங்களினின்றும் நீங்கிய தூயோன் திருவடிகளுக்கு வணக்கம்; இம்மனிதப் பிறவி கெட அடியோடு அறுத்து ஆட்கொள்ளும் அரசனது திருவடிகளுக்கு வணக்கம்; அழகு நிறைந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள நமது தேவன் திருவடிகளுக்கு வணக்கம்; நுகர்ந்து அமையாத பேரின் பத்தை அளிக்கும் மலையை ஒப்பவனுக்கு வணக்கம் என்றவாறு.

ஈசன் : ஈஸ்வரன் என்பதன் திரிபு. இது எப்பொருளையும் ஆள்வோன் எனப் பொருள்படும். எல்லாவற்றையும் தமது உடைமையாகக்கொண்டு ஆள்பவன் ஆதலால் அவனே முதல் வன், அவனே வணங்கத்தக்கவன் என்பதை நமக்குக் காட்டு வது 'ஈசனடி போற்றி' என்பது. போற்று என்னும் பகுதி இகர விகுதிபெற்று வந்த வினைப்பெயர் போற்றி என்பது; மறதி என்பதுபோல. போற்று-புகழ், வணங்கு. போற்றி-வணக்கம். 'இரட்சிப்பதற்காக வணங்கும் துதி' என்னும் பழையவுரைக் குறிப்பு மிக நுணுக்கமான கருத்துடையதாதலை அறிக. எந்தை: எம் தந்தை என்பதன் மரூஉமொழி. ஈசனாக இருந்து நலம் தீங்கு கண்டு ஒறுத்தலும் உதவுதலும் செய்ததுபோல, எம் தந்தையாகவும் இருந்து எம்மை உயர்த்துதலிலேயே கருத்தாக இருப்பவன் ஆதலால் யாம் செய்யும் துரிசுகளைப் பொறுத்து ஆளுபவன் என்னும் குறிப்பும் உணர்த்துவது. அன்றியும், ஈசன் என்றது ஆண்டான் அடிமைத்திறத்தையும், எந்தை என்றது மகன் தந்தைமுறைத்திறத்தையும் உணர்த்துகின்றன எனலாம்.

தேசன் - ஒளிமயமானவன். ஒளி என்றது ஈண்டு அருள் ஒளியை. பின்னவர்கள் 'அருட்பெருஞ்சோதி' என வழங்குவர். ஒளியானதிருமேனி எல்லாவற்றையும் தூய்மையுறுத்துவதாகத் தான் அநாதியே தூய்மையானது ஆதலின், பழையவுரைகாரர் தேசன் என்பதற்குத் தூய திருமேனியுடையன் எனப் பொருள் கண்டு 'அதாவது எல்லாத் திருவுருவங்கட்கும் முன் அநாதியே காரிய காரணம் கடந்த கருணையே அன்பே இன்பமேயான அருட்டிருமேனியுடையான்' என விளக்கமுந்தந்தார்.

சிவம் : சாந்தம், மங்கலம் இன்பம் எனப் பல பொருள் படுதலின் சிவன் என்பதும் அத்தனை குணங்களையும் ஒருசேர உடையவன் எனப் பொருள்படும். அவனைப் பற்றியபேருக்கும் அத்தனை நலங்களும் விளையும் என்க. சேவடி - செம்மை+ அடி. அத்தகைய அருளுருவுடைய சிவன் அடியே விகாரமற்ற செம்மைநிலையைப் பக்குவ ஆன்மாக்களுக்கு அளித்தருளும் ஆதலின் சேவடி என்றருளப்பெற்றது. சிவன் என்பதற்குப் பெரியபுராண சூசனத்தில் ஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் எல்லாருள்ளத்திலும் தங்குபவன் எனப் பொருள் கண்டமை யும் சிந்தித்தற்குரியது. நேயம் - நேசம். சகரத்திற்கு யகரம் போலியாக வந்தது. நேசம் - அன்பு. அன்பே இறைவனுக்கு இருப்பிடம் ஆதலின் நேசத்தே நின்ற நிமலன் என்றருளினர். நின்ற - நிலைபெற்ற. நிமலன் - இயல்பாகவே மலங்கள் பற்று தவன். இருள் ஒளியைச் சென்றடையாதவாறுபோல ஞான சொரூபியாகிய சிவபரம்பொருளை மலங்கள் பற்று ஆதலின் நிமலன் என்றார். மலங்களின் நீங்கியவன் எனப் பொருள் உரைத்தல் தகாது.

பிறப்பு மாய அறுக்கும் மன்னன் எனக் கூட்டி மீட்டும் பிறவி உண்டாகாது அழிய அறுக்கும் மன்னனெனப் பொருள் கொள்க. இங்ஙனமன்றி மாயப்பிறப்பு - வஞ்சனையும் பொய்யு மாகிய மாயங்களைப் புரியும் பிறப்பு. மனம் துணையாக வஞ்சனை யும் பொய்யும் புரிவன மக்கட்பிறவி முதலியனவே என்பாரும், பொய்யாகிய பிறவி என்பாரும் உளர். பிறவி கானல்நீரைப் போலப் பொய்த்தோற்றமாயின் அதன்கண் நுகரப்படுகின்ற புண்ணிய பாவங்களும், இறைவன் புரியும் அருளுங்கூடப் பொய்யாம் ஆதலால் மேலெழுந்த வண்ணமாக அங்ஙனம் பொருள்கோடல் சித்தாந்தமரபன்று என்று தெளிக.

பிறவி அடியோடு களைதற்கு அரிதென்பதை உணர்த்த அறுக்கும் என்றார். வெட்டிய சூரன்தலை முளைத்தது போல,

அறுத்த புல் முளைத்தது போல அறுத்ததொன்று மீளவும் முளைக்கவும் கூடுமாதலின் அங்ஙனம் முளையாமல் மாய்ந்து போக அறுக்கும் அருந்திறல் உடையான் என்பது தோன்ற மாயப் பிறப்பறுக்கும் மன்னன் என்றார்.

அவ்வண்ணம் ஈசனாய், தேசனாய், அன்பின் நின்ற அறிவுருவனாய், பிறப்பறுக்கும் மன்னனாய் நின்ற பரம்பொருள் அடியேற்காக எளிவந்து திருப்பெருந்துறை என்னும் தலத்திலே குருநாதனாக எழுந்தருளியது என்பார், சீரார் பெருந்துறை நம் தேவனடி போற்றி என்றார். அரியனாகிய அவன் எனக்கு எளிவந்து அருள் செய்தான் என்பார் நம் தேவன் என்றார். அகளமாய் யாரும் அறிவரிய அப்பொருள் சகளமாய் வந்த கருணை குறிப்பிடப்பெறுகின்றது.

ஆராத இன்பம் - வற்றாத இன்பம், உலவாப் பேரின்பம். இறைவனை இன்பம் அருளும் மலையாக உருவகித்தமையின் இன்பம் அருவியாகக் கொள்ளக்கிடந்தது. ஏகதேச உருவக அணி. மேலும் 'பேராத இன்பப் பெருக்காறே' என்றதும் இக்கருத்துடையதாதல் காண்க.

*இ - ள்: (17–18)* சிவபெருமானாகிய அவன் என் சிந்தையுள் நிலைபெற எழுந்தருளிய அத்தன்மையால் அவனது திருவருளாலே அவனுடைய திருவடிகளை வணங்கி என்றவாறு.

'சிவனெனுநாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்' எனவரும் திருமுறைப்பகுதி சிவன் என்னும் நாமம் இறைவனுக்குச் சிறப்புத் திருநாமம் என்பதை விளக்கும். சிவன் அவனென்றது சமய நிலையுணர்ந்து ஒழுகுகின்ற பக்குவிகட்குச் சிவனெனச் சிறப்பாயும், உணர முடியாத அபக்குவிகட்கு அவனெனச் சுட்டளவானன்றி உணர்த்தலும் ஆகாதவண்ணம் பொதுவாயும் இருக்கும் இயல்பினன் என்பதை விளக்குவதாம்.

சிவன் அவன் என்னும் இருசொல்லில் அவன் என்பது முழுமுதற்கடவுளைச் சுட்டும் பெயரளவாய் நின்றது. ஒன்றோடொன்றுவ்வாச் சமயத்தினர் எல்லாரும் இறைவனைக் குறிக்குமிடத்துப் பொதுப்பட அவன் என்று வழங்குதலின் அந்தப் பொதுப்பெயரைப் பின்னும், அம்முதல்வன் இயல்பைச் சிறந்தெடுத்து வழங்கும் சைவசமயத்திற்கேயுரிய சிவன் என்னும் பெயரை முன்னும் வைத்தார் என்பர் மறைமலையடிகளார். அதுவும் முன்கருத்தையே வலியுறுத்தல் காண்க.

எல்லாம் கடந்து மிகச் சேய்மைக்கண் உள்ளோன், ஆங்கு நின்றும் குருமணியாக வந்து அருள்செய்தான்; அங்ஙனம் செய்தவன் சிவன் என்று தெளிந்தவாறு கூறியதுமாம்.

சிவபெருமான் தம் உள்ளத்து என்றும் நீங்காது விளங்குதலை எப்போதும் இடையீடின்றிக் கண்டுகொண்டேயிருக்கும் அடியவர்கள், பேரின்பமயமான அக்காட்சியைவிட்டு வேறொன்றைக் காணுதலும், வேறொன்றின் வயப்பட்டுச் செய்தலும் மாட்டார்; இறைவன் அருள் உள்ளிருந்து உணர்த்த அதனையே செய்வர். சீவபோதம் கெட்டுச் சிவபோதம் மேலிட்ட நிலையில் அவர்கள் செய்வன யாவும் அவனருள் ஊக்கச் செய்வனவே ஆதலால் இறைவனடியை அடியார்கள் வணங்குவாராயின் அதுவும் அவன் அருள்தந்த கொடையேயாம். அதனாலேயே 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்றருளினர். அவன் தாள் வணங்குதற்கே அவனருள் காரணமாயின் பிற செயல்களைச் செய்யார்; செய்வாராயின் அதுவும் ஒரு பெரும் பயன் தருவதாகவே அமையும். ஆதலால் அதுவும் அவன் அருள்தர வந்ததாம் என்பது.

ஈண்டு அருள் என்றது மனோவிருத்திகள் அடங்கியபோது விளையும் தெய்வநோக்கு. மனம் ஒரு கண்ணாடி போன்றது. கண்ணாடியில் அழுக்குப் படிந்திருக்குமானால் அதனை விளக்க, அது இயற்கையான ஒளியை வெளிப்படுத்தி விளங்கும். அது போல அநாதியே ஆன்மாவைப் பற்றிநிற்கும் மலம் தேய்ந்து போக, சிவபாவனை கைவர சிவமாகிய ஒளி வெளிப்பட்டுத் தோன்றும். ஆன்மா, நிறைந்து செறிந்த ஒளியுடன் விளங்கும். அப்போது உயிர்அவன்தாளை வணங்குதலையன்றிப் பிறிதொன்றும் செய்யாது என்பதாம். அப்பர்சுவாமிகள் "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" என்றதும் காண்க. சிவஞான சித்தியாரில்,

> '...சித்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
> வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
> வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே'

என்று அருணந்திதேவ சிவாசாரிய சுவாமிகள் கூறுதலையும் நோக்குக. சூரியகிரணத்தின் ஒளியைக்கொண்டு சூரியனைப் பார்ப்பதுபோலச் சிவனருளை வாயிலாகக்கொண்டு சிவனை வணங்கவேண்டும் என்பது கருத்து.

*இ - ள்: (19 – 20)* மனம் மகிழச் சிவனது பழைய முறைமையினை, முன்முன் செய்த ஊழ்வினை அனைத்தும் தேய்ந்து மாய்ந்து போக அடியேன் சொல்வேன் என்றவாறு.

அவன்றனை வணங்குவார்க்குத் துன்பம் சிறிதும் தோன்றாமல் இன்பமே நிலவுமாதலின் 'சிந்தை மகிழ' என்றார். அவன் புகழாகிய சிவபுராணத்தை உரைத்தால் ஆகாமிய சஞ்சிதமாகப் பரிபாகப்பட்டிருக்கிற வினைகள் அனைத்தும் தம் வலிகுன்றித் தேய்ந்து மாய்ந்தே போகும் என்பார் 'முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்' என்றார். ஓய - நுணுக. "ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்" என்பது தொல்காப்பியம்.

> 'இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'

என்னும் தமிழ்மறைக்கருத்து இதில் மிளிர்தல் காண்க.

*இ - ள் : (21 – 22)* நெற்றியில் கண்ணையுடைய பெருமான், தன் அருட்கண்ணைக் காட்ட, அதனை ஆணையாகக்கொண்டு அவன் திருமுன் வந்தடைந்து, நினைத்தற்கும் எட்டாத எழுச்சிமிக்க திருவடியை வணங்கி என்றவாறு.

நெற்றிக்கண் எஞ்ஞான்றும் குணந்தீயாரை மறக்கருணை காட்டி ஆட்கொள்வதாயிருக்கவும், அடியேனுக்குக் காட்டாது சூரிய சந்திரர்களாகிய வளர்ச்சிக்கும், தட்பமான வாழ்வுக்கும் உரிய கண்ணின்வழியாகக் கருணையைக் காட்ட என்பதாம்.

அவன் ஆணையாவது குறிப்பாவது இன்றித் தலைவனிடம் சார்தலாகாது ஆதலின் அவன் காட்டிய கருணைக்கண்ணையே குறிப்பான ஆணையாகக்கொண்டு வந்தெய்தி என்றதாம்.

எண்ணுதல் - மனத்தால் நினைத்தல். மனம் பொறிவழியே சென்றுபற்றிய அளவாயும், அந்நிலையில் தன் கற்பனையால் பெருக்கியும், மறதியால் சுருக்கியும் அறியும் தன்மையதன்றி, அளவிறந்த பரம்பொருளை அறியாது. ஆதலால் எண்ணுதற்கு எட்டாக் கழல் என்றது. உபலக்கணமாகக் காணற்கு எட்டா, தீண்டற்கு எட்டாக் கழல் என்பனவும் கொள்க. எழில் - எழுச்சி. அழகுமாம்.

*இ - ள்: (23 – 24)* விண்ணில் நிறைந்தும், மண்ணில் நிறைந்தும், அவற்றின் மிக்கும் உள்ளவனே! புலப்பட்டுத் தோன்றும் ஒளியானவனே! எண்ணின் எல்லையையுங்கடந்து அளவற்று விளங்குபவனே என்றவாறு.

விண் எல்லாவற்றையும் தன்னகத்தடக்கி நிற்பதாயினும் அதனுள் இடமின்றிச் செறிந்த பொருளும், மண்ணில் எங்கும் நிறைந்த பொருளும், அவற்றின் மிக்கபொருளும், எண்ணின் அளவைக்கடந்து விரிந்து பரந்த பொருளும் சிவம் என்று குறித்தவாறு.

விண் நிறைந்து மண் நிறைந்து என்பவற்றிற்கு இறைவனாகிய தம்மிடம் விண்ணும் மண்ணும் அடங்கி நிறையப்பெற்று என்று உரை காணுவர் பழைய உரைகாரர். அஃதெங்ஙனம் எனின், மண்முதலாகக் குடிலையீறாக உள்ளனவும் பிறவுமாகிய ஆறு அத்துவாக்களும் தம்மிடம் நிறைய அதாவது ஒடுங்கப் பெற்றும். மண்ணாகிய சகல புவனங்களும் அடங்கும் வியாபகமாகிய பரம்பொருளாகியும் என விளக்கமும் காண்பர் அவர்.

மிக்காய் : இவ்வண்ணம் தத்துவத்தோற்றமும் ஒடுக்கமும் ஆனாலும் விகாரியாகாமல் நிர்விகாரியாய், ஒருவனே இராவணாதி பாவகமுற்றாற்போல இவ்வுருவமெல்லாம் தந்தும் தன் தன்மை திரியானாய், வியாபகமாய் இருப்பன் என்பதாம்.

விளங்கு ஒளியாய் : பெத்தான்மாவாக அறியாமையாகிய இருளிற் சிக்குண்டுகிடந்த என்னை, தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளி உபதேசித்து, அத்துவித சின்மய ஆன்மாவாக்கிய சிற்பர வியோம குஞ்சித பாதமாகிய சிவஞானப் பிரகாசமாய். பெத்தான்மாவாகிய என்னை முத்தான்மாவாக்கிய சிவஞானச் சோதியாய் என்பது கருத்து. இப்பொருளில் அடியேன் விளங்குதற்குக் காரணமாகிய ஒளியாய் எனப் பதப்பொருள் காண்க. இவை பழையவுரைக் கருத்துக்கள்.

எண் - எண்ணிக்கை. ஒன்று முதலான சிற்றெண்ணும், கோடி மகாகோடி கற்பமீறான பேரெண்களுமாம். ஒன்றெனின் சூநியமாயும், சூநியம் எனின் ஒன்றாயும், கோடியெனின் கற்பம் முதலியனவாயும் அவற்றின் அளவைக் கடந்திருப்பவன். எண் நிறைந்து எனப் பாடங்கொண்டு எண்ணிக்கைக்குள் அடங்கியும் அடங்காதும் அத்துவிதமாய் என்று உரைப்பர் பழைய உரைகாரர்.

எல்லை இலாதான் - இன்னபொருளாவான் இன்னபொருளாகான், இவ்விடத்தான் இவ்விடத்திலிரான் என்பன முதலிய வரைவு இல்லாதவன். அஃதாவது உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இருப்பவன் என்பதாம்.

இ - ள் : (24 – 25) நினது பெரிய புகழினைத் தீவினையை யுடையேனுகிய யான் புகழும் முறையும் உபாயமுமாகிய ஒன்றும் அறியாதவனுக இருக்கின்றேன் என்றவாறு.

பெருஞ்சீர் - மெய்ம்மையான புகழ். "பொருள்சேர் புகழ்" என்ற குறட்பகுதிக்குப் பரிமேலழகர் கூறிய நயம் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

பொல்லா வினையேன் : இவர் செய்த நல்வினை திருவடிக் கண் இடையருப் பேரன்பையும், சிவப்பணிசெய்யும் சிந்தை யையும் அளித்திருக்கவும், சிவனருளைப்பெற வாய்ப்பாக விளங் கவும் பொல்லா வினையேன் எனப் பொதுமையிற் கூறியது, கண்ட திருவடியையும் குருமேனியையும் எப்போதும் காணக் கொடுத்துவைக்காத தீவினை பெரிதாகத் தோன்ற அதனைக் குறித்துக் கூறியவாறும். புகழுமாறு ஒன்றறியேன் என்றது நீ 'விளம்புமா விளம்பே' என்ருற்போல, அடியேன் உம்மைப் புகழும் உபாயத்தையும் தேவரீரே அருளவேண்டும் என்பதாம்.

பொல்லாவினைக்கு, கேவலநிலையில் மலவசமாய்க்கிடந்தும் பின் மனிதராகப் பிறந்தும், புறச்சமயம்புக்கு உழன்றும், சிவ புண்ணிய முதிர்ச்சியால் அகச்சமயம்புக்கும், கேட்டல் தெளிதல் நிட்டைகூடல் செய்யாது பரமுத்தி வேறுளது எனப் பாவிக்கும் பாவியானநிலை என்று உரை காணலுமாம்.

இ - ள் : (26 – 31) எம்பெருமானே! புல்லாகியும், பலவகை யான பூண்டுகளாகியும், புழுவாகியும், மரமாகியும், பல விலங்குக ளாகியும், பறவைகள் ஆகியும், பாம்புகள் ஆகியும், கல்லாகியும், மனிதர்களாகியும், பேய்களாகியும், பூதங்களாகியும், வலிய அசுரர் கள் ஆகியும், முனிவர்கள் ஆகியும், தேவர்கள் ஆகியும் படைக்கப் பெற்று வருகின்ற அசையும் பொருளும் அசையாப்பொருளுமாகிய இவற்றுள் எல்லாப் பிறப்புக்களிலும் பிறந்து இளைப்படைந்தேன் என்றவாறு.

ஈண்டுக் கூறப்பெற்ற புல் முதலியன செய்யுள் நோக்கி முறைபிறழ வைக்கப்பெற்றன. ஆயினும் முறைப்படுத்தி உரை காண்க. இவற்றுள் புல் பூண்டு மரம் இவை மூன்றும் தாவரங் கள்; புழு பாம்பு முதலிய ஊர்வனவும், பறவைகளும், விலங்கு களும்; மக்கள் தேவர் பேய் முதலிய யாவும் சங்கமங்கள்.

கல் - மலை. உயிர்கள் உடம்பொடுகூடிப் புலப்படுதலாகிய பிறவிக்கு முன்பே மலைதான் இருந்தது. உயிர்கள் அம்மலை களைச் சார்ந்து அணுக்களிற் புலப்படாது கிடந்தன. பின்னர்,

பரிபாகம் வந்தகாலத்துப் புல் முதலியவாக வடிவுகொண்டன. அறிவு முதிரமுதிர அதற்குவந்த உடலமைப்பும் வளர்ச்சிபெற்றன. ஆதலின் கல்லை முதற்பிறவியாகக் கூறினர். கல் முதற்படைப்பு என்பதைக் "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே" என்னும் பழம்பாடற்பகுதியும் நிலைபெறுத்தும்.

பூடு - பூண்டு. விருகம்: மிருகம் என்ற வடமொழியின் ஆக்கம். இவற்றுள் புல் பூண்டு மரம் என்பன தாவரங்கள். புழுவும் பாம்பும் ஊர்வன. பறவை பறப்பன. விலங்கு நடப்பன. மனிதரும் முனிவரும் மக்கட் பிறப்பினர். தேவர் அசுரர் தெய்வப் பிறவினர். பேய் பூதங்கள் மனிதச்சார்பு விட்டுத் தெய்வச்சார்பு பெற்றவை. இவ்வண்ணம் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் என்றார். பேய் என்பது நுண்ணுடம்போடு இயங்கும் உயிர். இது கண்டார்க்கு அச்சம் விளைத்தலின் இப்பெயர்பெற்றது. கணம் - பூதகணம். நுண்ணுடம்பில் நிற்பனவும் பருவுடம்பு உடையனவுமாகிய தேவப்பிரிவைச் சார்ந்தவை. தாவரம் - ஸ்தாவரம் என்னும் வடசொல்லின் திரிபு; நிலையானபொருள். சங்கமம் - ஜங்கமம் என்பதன் திரிபு; அசையும் பொருள்.

இப்பகுதியில் உயிரின் தோற்றமுறை மாறாக இருப்பதற்கு உயிர்கள் புண்ணிய பாவ இயல்பிற்கு ஏற்றவாறு உயர்ந்தும் தாழ்ந்தும் மாறிமாறிப் பிறத்தலைக் காரணமாகக் கூறுவாரும் உளர்.

இ - ள்: (32–35) உண்மையாகவே உனது பொன்போன்ற திருவடிகளைக் கண்டு, இன்று மலமாயைகளினின்று விடுதிபெற்றேன்; யான் கடைத்தேறுவதற்காக என்மனத்தில் 'ஓம்' என்னும் பிரணவ வடிவாக நின்ற உண்மைப்பொருளானவனே! இயல்பாகவே பாசங்களில் நீங்கியவனே! இடபவாகனத்தை உடையவனே! வேதங்கள் 'ஐயா' என அழைக்க அவற்றிற்ககப்படாது மிக உயர்ந்தும் மிகத் தாழ்ந்தும் பரந்தும் விளங்குகின்ற நுண்மைப்பொருளாய் இருப்பவனே! என்றவாறு.

மெய்யே என்பதனை மெய்யே கண்டு எனவும், மெய்யே வீடுற்று எனவும் ஈரிடத்தும் இயைக்கலாம். இதுவரை தாம் கண்ட உலகக்காட்சியைப் பொய்யென்று அறிந்து திருவடிக் காட்சியை மெய்யாகக் காண்கின்றாராதலின் 'உன் பொன்னடிகள் மெய்யே கண்டு' என்றார். களாப்பழம் பெற்றானொருவன் பலாச்சுளைபெற்றபின் அப்பழத்தைக் கைவிடுதல்போல, பொன்போல் போற்றத் தகுவனவாகிய திருவடிகளைப் பெற்றபிறகு,

இந்த உலக இன்பங்கள் ஒரு பொருளாகத் தோன்ருமையின் உண்மையாகவே விட்டுவிட்டேன் என்று இயைத்துப் பொருள் கொள்ளலுமாம். மலங்கள் வாசனையாகவந்து முத்திக்காலத்திலும் தாக்குமாதலின், அதுவுமின்றி விட்டேன் என்பார் இங்ஙனம் கூறினர். களிம்பு இயற்கையின் நீங்கிய உலோகம் பொன். ஆணவமலத்தை இயல்பாகவே சாராதது இறைவனுடைய திருவடி ஆதலானும், பொதிந்து போற்றத்தகும் சிறப்பினுலும், நிறத்தினுலும் பொன் திருவடிக்கு ஒப்பாயிற்று.

காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே ஆதலானும் கழுக்குன்றிலே வந்து தாட்டாமரை காட்டினய் ஆதலானும் கண்டேன் என்பார் 'கண்டு' என்ருர்.

இன்று வீடுற்றேன் என்றது உணரத்தக்கதை உணர்ந்து வீடுற்றது இன்றுதான் எனப் பெற்றமகிழ்ச்சியின் பெருமையை வெளிப்படுத்தியது. இன்றுதான் பெற்றேன்; இன்றுதான் வாங்கினேன் என்புழிப்போல. அன்றி இப்பகுதிக்கு இத்தேகத்திலேதானே சீவன்முத்த தசையையே பரமுத்தியாக அடைந்தேன்; இவை மெய்யே (சத்தியமே) என்று உரை கூறுவாரும் உளர்.

உய்ய - அடியேன் மலச்சேற்றினின்று எழுந்து திருவடிக் கரையைச் சேர்ந்து உய்யும்படி. என் உள்ளத்துள் என்றது புதருள் கற்பகம் பூத்தது போல ஆசாபாசங்களாகிற காடு மண்டிக்கிடக்கிற என் உள்ளத்துள் ஓங்காரமான உண்மைப் பொருள் நிலைபெற்றது என்னும் தன்னிழிவும் கடவுளின் உயர்வும் தெரிவிக்கும் குறிப்பினது. இறைவன் ஓங்காரமாய் நிற்றல் " ஓம் எனும் ஓங்காரத்துள்ளே உரு வரும்" என்னும் திருமந்திரத்தானும் உணர்க.

விமலா - மலம் அற்றவனே. அறுதல் இருவகை, இருந்து அறுதலும் இயல்பாகவே அற்றிருத்தலும் என. இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் ஆகையால் இங்ஙனம் கூறினர்.

விடை : இறைவன் ஏறி நடத்தும் விடை அறமே வடிவாக உள்ளது. ஆகவே, அதன் பாகனுகிய இறைவன் அறப்பயனுய் அமைந்தவன் என்பது காண்க. விடை ஏறி என்பதற்குச் சிவபுண்ணிய முதிர்ச்சி முடிவிலே பரமசிவன் சிவானந்தத்தைப் பெருகப்பண்ணுதல் என்பர் காழித்தாண்டவராயர்.

வேதங்கள்: வடமொழி வேதங்களாகிய இருக்கு யசுர் சாம அதர்வணம் என்பன. அவை இறைவனை ஐயா! என அழைக்கவும் அவ்வேதங்கள் பாசஞானமாதலின் இறைவன் அவற்றிற்கு அகப்படாது உயர்ந்தும் பரந்தும் ஆழ்ந்தும் விளங்குகிறான் என்பது கருத்து.

இ - ள்: (36–40) வெப்பமானவனே! தட்பமானவனே! வேள்விக்கண் விளங்கும் தலைவனாகிய தூயோனே! பொய்யான சொல்லும் செயலும் எல்லாம் நீங்கக் குருவடிவாக எழுந்தருளி, உண்மை ஞானமே வடிவாக விளங்குகின்ற அழியாப்பேரொளியே! எவ்வகையான அறிவும் இல்லாத அடியேனுக்கு இன்பத்தை அருளிய தலைவா! மாயையையும் கன்மங்களையும் உதவி, அறியாமையை நீங்கச் செய்யும் நன்மை பயக்கும் அறிவானவனே! என்றவாறு.

வெய்யாய் தணியாய் என்றது உலகைக்காத்தருளும் சூரிய கிரணமாகவும் சந்திரகலையாகவும் விளங்குதலால் என்க. இங்ஙனமன்றி, விந்து தத்துவத்தின் வாயிலாகத் தீயின்கண் முளைத்துத் தோன்றும் இறைவனியல்பு வெப்பமுடையதாயிருத்தலின் இங்ஙனம் அருளினார் என்பர். வெய்யாய் தணியாய் இயமானனும் விமலா என அட்டமூர்த்திகளின் வடிவில் சிலவற்றைக் கூறுதலின் இவற்றிற்குத் தத்துவப்பொருள் கோடல் பொருந்தாமை அறிக.

தணியாய்: தண்ணியாய் என்பதன் தொகுத்தல். நாத தத்துவத்தின் வாயிலாய் நீரின்கண் முளைத்துத் தோன்றும் சிவசத்தியினியல்பு தட்பம் உடையதாயிருத்தலின் இங்ஙனம் அருளினார் என்பர் அவர். முன்னர்க்காட்டிய ஏதுக்கொண்டு ஏலாமையுணர்க.

இயமானன்: யஜமானன் என்ற வடசொல்திரிபு. வேள்வி வேட்போன் என்பது பொருள். வேட்போன் உயிரினிடமாகக் கலந்துநிற்பன் என்பது கருத்தாமேயன்றி இறைவனே யஜமானனாகி விட்டான் என்பது கருத்தன்மை தெளிக.

பொய்யாயின - நிலையற்றன. அவை உலகும், உடலும் அவை அவ்வப்போது மேற்கொள்ளும் நினைவும், செயலும், சொல்லும் ஆகிய அனைத்தும். போய்த்தொலைய என்பதுபோல போயகல என்பது ஒருவகைச் சொல்வழக்கு. வந்து - எளிவந்த கருணையால் தாமே வலியவந்து என அவன் கருணைத்திறம் காட்டியது.

அருளி - என்னுடைய பொல்லாக் குணங்களைப் போக்கிச் சிவஞானம் அருளி. பொய் இன்னனவென்பதை,

'எங்குஞ் சிவமொழிய இல்லையவன் தன்னுனை
அங்கந் திரள்கருவி யாணவமாம் - பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றுமெலாம்
பொய்பொய் எனவே புகல்'

எனவரும் சிவாநந்தமாலைகொண்டு அறிக.

மெய்ஞ்ஞானம் - உணர்வரிய மெய்ஞ்ஞானம். சூரியனொளி தன்னையும் விளக்குவதாய்ப் பொருளையும் புலப்படுத்தும். அது போலன்றி, மெய்ஞ்ஞானம் தன்பயனுகிய பேரின்பவிளைவைக் கொண்டு அறியப்படுவதன்றித் தான் நேரே அறியப்படா மையின் உணர்வரிய ஞானமாய் இறைவன் விளங்குகின்ருன் என்பது. மீட்டும் மெய்ச்சுடர் என்பதற்கும் இதுவே கருத்தா கக் கொள்க.

எஞ்ஞானம் இல்லாதேன் - திருவடியைச் சார்ந்து நிரந்தர இன்பம் துய்த்தற்குரிய உபாயஞானங்களில் எதுவும் இல்லாத யான்.

இன்பப் பெருமானே - அத்தகைய எனக்குக் கிடைத்த பேரின்பவடிவப் பெருமானே. குழந்தையின் கையிற்கிடைத்த பொற்கிண்ணம்போல, எஞ்ஞானமுமில்லாத எனக்கு இன்பப் பெருமாளுகிய நீ கிடைத்தமையால், உன்னைப்போற்றிப் பாது காவாது தவறவிட்டேனே என்ற தமது அனுபவம் மனத்துத் தோன்ற அதனைக் குறிப்பித்தவாறு.

அடியேனுக்கு எவ்வகைப்பட்ட ஞானமும் இல்லாமைக்கு ஏது, அநாதியேயுள்ள ஆணவமலத்தின் காரியமாகிய அறியா மையே என்பதைத் திருவுளத்துக்கொண்டு, நோய்முதல் நாடி நோய் தீர்க்கும் மருத்துவன்போலப் பிறவிநோய்க்குப் பெரு வைத்தியநாதனுகிய நீ, நன்ஞான வடிவாக எழுந்தருளி, அறி யாமையகற்றிளுய் என்று வியப்பார் அஞ்ஞானந்தன்னை அகல் விக்கும் நல்லறிவே என்ருர். தான்தேடாப்பொன்னின் அருமை அறியப்படாமைபோல அஞ்ஞானத்தைத் தானே தன் பெருங் கருணையால் அகற்றிவிட்டால் உள்ளபோது உள்ள அதன் கொடுமையும், நீங்கியபின் விளையும் இன்பத்தின் அருமையும் ஆன்மா அறியாது கெடுமாதலின் தனு கரண புவன போகங் களையுதவிப் பரிபாகமுறுத்தி அகல்விக்கிருர் என்பது தோன்ற அகற்றும் எனத் தன்வினையாகக் கூருது அகல்விக்கும் எனப் பிறவினையாகக் கூறிஞர்.

இ - ள் : (41 – 48) தனக்குத் தோற்றமும் நிலையும் முடிவும் இல்லாதவனே ! எல்லா உலகங்களையும் படைப்பவனே ! காப்ப வனே! அழிப்பவனே ! அவ்வுலகங்களிலுள்ள உயிர்களுக்கு அருள் வழங்குபவனே ! உயிர்கள் மாயையில் அழுந்தி வினைகளை நுகரும் வண்ணம் திரோதான சத்தியால் மயக்குபவனே ! அடியேனை அடிமையில் புகச்செய்பவனே ! அடியேனிடம் பூவின்கண் மணம் போல் பொருந்தியிருப்பவனே ! தூரத்தில் இருப்பவனே ! அண் மையில் விளங்குபவனே ! வாக்குக்கும் மனத்திற்கும் அப்பாற்பட்ட முறையவனே ! புதிதாகக் கறந்த பாலும் தேனும் கருப்பஞ்சாறும் தம்முட் கலந்தாற்போல இனிமையில் சிறந்து அடியார்கள் மனத் தில் தேனைப்போலக் கசிந்துநின்று எடுத்த இப்பிறவியிலேயே பிறவியாகிற மரத்தை வேரோடு அறுக்கும் எங்கள் தலைவனே ! என்றவாறு.

ஆக்கம் - படைப்பு; தொழிற்பெயர். அஃதாவது உயிர்கள் வினைகளை நுகர்ந்து ஆணவமலத்தின் வலிமை குன்றி முத்தி இன்பம் பெறுதற்குரிய பரிபாகம் எய்துதற்காக, தனு கரண புவன போகங்களோடு கூட்டுதல். காத்தலாவது, உயிர்களைத் தத்தம் காலவெல்லைவரை உடல் முதலியவற்றோடு இருத்தி வினைகளை நுகரச்செய்தல். அழித்தலாவது, நுகர்ச்சி முடிந்த பின்னர் தத்தம் காரணத்துள் ஒடுக்குதல். அருளலாவது, பரி பாகம்பெற்ற காலத்தில் திருவருளைக் கூட்டுவித்தல். போக்குத லாவது, வினைகளை நுகர மாயையின்கண் உயிர்களைப் போகச் செய்தல். இவைமுறையே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத் தல் அருளல் எனப்படும். இதுவே முறையாயினும் மறைத்த லாகிய திரோதானசத்தி மாயையோடுகூடியவழி மறைப்பாற்ற லாகவும் அருளோடுகூடியவழி அருளாற்றலாகவும் உபகாரப் படும் சிறப்புநோக்கி அதனை விதந்து கூறினர்.

ஆக்கம் : ஆக்கம் முதலியவற்றிற்குக் காரணமாயிருக்கிற முதல்வன் ; தனக்கு அவை இல்லாதவன் என்பதை விளக்க 'ஆக்கம் அளவு இறுதி இல்லாய்' என்றார்.

அளவு - காத்தல். ஆக்கப்பட்ட ஒன்று அழிவு எய்துகிற வரையில் நுகரும் இன்பத் துன்பங்களின் கால அளவு. அளவு என்னும் தொழிற்பெயர் ஆகுபெயராகக் காத்தலை உணர்த் திற்று. இங்ஙனமன்றி ஆக்கமும் கேடுமாகிய முதல் இறுதிகளைக் கொண்டு அளக்கப்படுதலின் அளவு என்றார் எனலும் ஆம். காக்கப்பட்ட கால அளவையின்தொடக்கமே ஆக்கமும், அதன் முடிவு எல்லையே ஒடுக்கமும் ஆதலால் காத்தலுக்கு அளவு எனப் பெயரிட்டனர் என்பாரும் உளர்.

போக்குவாய் - போகச்செய்வாய் ; என்றது அரசன் 'வீரனைப் போரிற் போக்கினன்' என்பதுபோலத் திரோதானசத்தியால் மறைத்து, பலவகைப் பிறவிகளில் செலுத்துதல் என்னும் பொருளில் வந்தது. இங்ஙனமன்றி நிலவுலகில் போக்குவாய் என்றும், அடியேனுடைய பசு பாச குணத்தைப் போக்குவாய் என்றும் உரை கூறுவார் உளர். இறைவன் ஐந்தொழில் இயற்றுதலே பசுக்களினது பொல்லாக் குணத்தைப் போக்க ஆதலின் போக்குவாய் என்பதற்குமட்டும் இந்நயம் கூறியது ஆராய்தற்குரியது.

நின் தொழும்பின் புகுவிப்பாய் : உயிர் என்றும் தலைமையற்றதென்பது இயல்பாக இருக்கவும் மலமறைப்பால் மயங்கித் தானே தலைவன் எனத் தருக்கித் திரியுங்கால் அடிமை என்பதை உணராது. ஆதலின், இறைவன் 'நீமட்டும் அன்று; அனைத்துயிர்களும் என் அடிமையே' என்று அறிவிப்பாராகத் தன்னை அடியார்கூட்டத்துள் வலிந்துபுகுத்தினர் என்பார் இங்ஙனம் கூறினர். நம்பியாரூரர் "ஆளாய் இனி அல்லேன் எனலாமே" என்றதும் இது. வாதவூரடிகள் 'நின் அடியரொடு கூட்டு கண்டாய்' என்பதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத இன்பம் ஆவண்ணம் சீவனுக்குள்ளே சிவமணம் பூப்பதால் நாற்றத்தின் நேரியாய் என்றார். நேரியாய் - நேர்ந்திருப்பவனே. இதற்கு நாற்றமாகிய அணுவிற்கு அணுவாக இருப்பவனே என்பாரும் உளர்.

சேயாய் - புறத்தார்க்குச் சேயோன் என்பதனைச் சுருங்கக் கூறியது. "புறச்சமயத்தவர்க்கு இருளாய்" என்ற சித்தித் திருவிருத்தப்பகுதியும் ஈண்டுச் சிந்தித்தற்குரியது.

நணியாய் - நணித்தாதலை உடையவனே. அகச்சமயத்தார்க்கும் அன்பர்க்கும் ஞானிகட்கும் முறையே அணியனும் மிக அணியனும் மிகமிக அணியனும் இருப்பன் என்பதைக் குறிப்பித்தது.

மாற்றம் - உயிரின் உணர்ச்சியாய் உள்ளத்துள் சுரந்த ஒன்று. வைகரிவாக்காக வெளிப்படுதலாய மாற்றத்தை அடைதலின் உரையை மாற்றம் என்றார்.

மனம், பொறி புலன்களுக்குத் துணையாகி விடயங்களை நுகர்ந்து உயிர்க்கு உணர்த்துகின்ற உட்கருவி. இது எண்ணுவதே மாற்றமாக வெளிப்படுதலின் இறைவன் அவற்றுள்

அகப்படான், கடந்து நிற்பன் என்பது தோன்ற 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே' என்றார். மனங்கழிய நின்ற என்ற பெயரெச்சத்திற்கு மறை கொண்டுமுடிக்கும் சொல் லன்று; மறையோன் கொண்டுமுடிக்கும்சொல் என உணர்க.

சுவை குன்றாமையின்மிகுதியை விளக்கக் கறந்த பால் என்றார். கன்னல்: பொருளாகுபெயராக அதனின்று எடுக்கப் பட்ட சாற்றிற்குப் பெயராயிற்று. நெய் - தேன். இம்மூன்றும் கலந்து நாவிற்கு இனிப்பதுபோல இறைவன் அடியார் மனத் திற்கு இனிப்பவராகிறார் என்பது. அடியார்சிந்தனையுள் சிறந்து தேனூறி நின்று என இயைத்துப் பொருள் காண்க. தேனூறி நிற்றலாவது கசிவு தருதல்.

எடுத்த இப்பிறவியிலேயே வினைகளைச் சேதித்து வீடு அளிப்பான் என்பார் பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான் என்றார். இக்கருத்து 'தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி அல்லல் அறுத்து ஆநந்தமாக்கியதே' என்ற வெண்பாவாலும் காண்க.

இ-ள்: *(49 – 61)* ஐந்து நிறங்களையுடையவனே! தேவர் கள் வணங்க, அவர்கட்கு மறைந்திருப்பவனே! எம் தலைவனே! வலிய வினைகளையுடையவனாகிய என்னை மறையும்வண்ணம் மூடி யுள்ள மாயம் பொருந்திய அறியாமையாகிய இருளை, புண்ணியம் பாவம் என்னும் அரிய கயிற்றால்கட்டி, வெளியே தோலைப் போர்வை யாக இட்டு, புழுவையும் அழுக்கையும் வெளித்தோன்றாதவண்ணம் மறைத்து, மலஞ்சொரியும் ஒன்பது வாசல்களையுடைய குடிசையை, கலங்கும்வண்ணம் புலன்களைந்தும் வஞ்சனையைச்செய்ய, அதனால் நெறிதவறிச் செல்லும் மனத்தால், மலமற்றவனே! உன்னிடம் கலந்த அன்பையுடையனாகி மனங்கசிந்துருகும் நன்மை சிறிதும் அமையப்பெறாத சிறுமையையுடைய அடியேனுக்கும் திருவருளை உதவ, இப்பூமியில் வந்து, புகழான் நெடிய திருவடிகளைக் காட்டி, நாயினுங்கடைப்பட்ட அடியேனுக்குத் தாயினும் சிறந்த கருணையே வடிவான மெய்ப்பொருளே! என்றவாறு.

இருளை (நீக்க) கட்டி, போர்த்து, மூடி, சோரும் குடிலைப் புலனைந்தும் மலங்கச்செய்ய (அதனால்) விலங்கு மனத்தால், 'அன்பாகியுருகும் நலம் இலாத சிறியேற்கும் நல்க' வந்தருளி, காட்டி, தயாவான தத்துவனே என முடிக்க.

மண் புனல் அனல் கால் வானம் ஆகியவற்றிற்கு முறையே பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூம வன்னம்

சாத்திரங்களில் கூறப்பெறுதலின் அட்டமூர்த்தி வடிவினனாகிய இறைவனுக்கு அந்நிறங்களும் உரியன. ஆதலின் 'நிறங்கள் ஓர் ஐந்துடையாய்' என்று அருளியது. ஓர்: அசை. உறையூர் இறைவன் பெயரும் பஞ்சவர்ணேசர் என்பதும் எண்ணுக. சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்யம், சத்தி, சிவம் என்னும் சுத்த தத்துவங்களில் இறைவன் விளங்குதலால் ஐவகை வடிவு கூறப் படுதல் நோக்கி நிறம் கூறப்பட்டது எனலுமாம்.

சதாசிவமூர்த்தியின் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாம தேவம், சத்தியோசாதம் என்ற ஐந்துதிருமுகங்களும் முறையே படிகம், பொன், கருமை, செம்மை, வெண்மை நிறமுடையன எனச் சிவாகமங்கள் சதாசிவமூர்த்தியானத்தில் கூறுகின்றன. ஆதலால் ஐந்து நிறமுடையாய் என்றருளியதுமாம்.

விண்ணோர்கள் பசுபுண்ணிய விசேடத்தால் சொர்க்காதி போகங்களைப் பெற்ற பெத்தான்மாக்களாகிய சகலர்களே. அவர்கள் பதவிகளில் மயங்கியவர்கள். அவர்கள் ஏத்துவதும் தாம் வாழ்வதற்காக அன்றிச் சிவஞானம்பெற்றுச் செம்பொரு ளைப் பெறுவதற்காக அன்று. அவர்கள் தமக்குள்ள வினைச் சேடத்தை உணராமல் பேராசைப்படுகின்றார்கள் ஆதலின் அவர்களுக்கு இறைவன் மறைந்திருக்கின்றான் என்பது.

எமக்குப் பெருமானாகிய நீ, வானவர்க்கு மறைந்திருக்கின் றாய் என்றது அவனது கருணைச்சிறப்பைக் காட்டுவதாம்.

மறைந்திருந்தான் எனின் இறைவன் பட்சபாதமுடையவ னாக ஆமே எனின், தேவர்கள் தாமே முதல்வர் என்று எண் ணும் அதிகாரமலமுடையவர்களாதலின் அவர்கட்குச் சிவமே பரம்பொருள் என்று விளங்காமற்போகும். ஆகவே ஆணவத் தால் விளக்கமுறாத தேவர்கள்குறையை அறிவாற்சிவனேயான மாணிக்கவாசக சுவாமிகள் தலைவனதாக மறைந்திருந்தாய் எனக் கூறினார். நுகர்ந்தாலன்றித் தொலையாமையின் வினையை வல்வினை என்றது. மறைந்திட மூடிய இருள் - ஆன்மாவின் ஞான வியாபகம் மறையப் போர்த்துள்ள ஆணவம். இருளை நீக்கியருள என ஒருசொல் வருவித்துப் பொருள் காண்க.

உலகவிருள் தன்னைக் காட்டிப் பொருள்களைக் காட்டாது. ஆணவத்தின் காரியமாகிய அறியாமையிருள் தன்னையும் காட் டாது, தலைவனையும் காட்டாது, பொருள்களையும் புலப்படுத் தாது. ஆதலின் உலகவிருளைவிட இது உயர்ந்தது வேறானது என்பார் 'மாய இருள்' என்றார்.

'அருங்கயிற்றால் கட்டி' என்பது முதல் 'நல்கி' என்பது வரையுள்ள ஏழு வரிகளால் ஆணவச்சேற்றிலிருந்து எடுக்க இறைவன் செய்த உபகாரங்களைத் தெரிவிக்கிறார்கள்.

இவ்வுடல், புழுவும் அழுக்கும் நிறைந்தது; ஒன்பது ஓட்டைகளின் வழியாகவும் மலமும், நீரும், பீளையும், குரும்பியும், சளியுமாக அருவருக்கத்தக்க பொருள்களைச் சொரிவது. அத்தகைய உடலைப் பிறர் அருவருக்காவண்ணமும் சிதையாவண்ணமும் தோலைப்போர்த்தி, வினைக்கயிற்றாற் கட்டிவைத்தான் இறைவன் என்று அருளுகின்றார்கள்.

புண்ணிய பாவங்கள் பிரவாகநாதியாகப் பிறவிதோறும் தொடர்ந்துவருதலின் அவற்றை அரிய கயிறாக உருவகித்தார். இக்கட்டை அவிழ்த்தாலன்றி உயிர்கள் வீடுபேறடையா. வினைக்கட்டை அவிழ்க்கும் ஆற்றல் பரமகருணாநிதியாகிய இறைவன் ஒருவற்கே உண்டு. கட்டியவன்றானே அவிழ்க்கவேண்டும். "இருவினைப்பாசக் கயிற்றின்வழி ஆட்டுவிப்பானும் ஒருவன் உண்டேதில்லையம்பலத்தே" (திருவெண்காட்டடிகள்) 'பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே' ஆதலின் அருங்கயிறு என்று அருளியது.

ஒன்பதுவாயில்: கண்ணிரண்டும், காதிரண்டும், மூக்கிரண்டும், வாயொன்றும், கருவிடுவாயும், எருவிடுவாயுமாகிய ஒன்பது வாசல்கள். இவை மலஞ்சோரும் முறை முன்னரே கூறப்பட்டது. குடிலை நல்கி எனமுடிக்க.

மலங்க - யான் கலங்க. பொறி வசப்படுகின்றவரையிலே யான் இவ்வுடலைப்பெற்றது இறைவனை வணங்கி ஈடேற என்ற எண்ணமே உடையனாயினேன். புலன்கள் ஐந்தும் என்னைக் கலங்க அடிப்பதற்காக வஞ்சனையைச் செய்தன. வஞ்சனையாவது ஒவ்வொரு புலனும் தம்மால்வரும் இன்பமே பெரிதென எண்ணச் செய்து மயக்குதல். யான் இவ்வண்ணம் புலன்களால் கலங்கித் தடுமாறும்வேளையில், பெருமான் குருமூர்த்தியாக நிலந்தன்மேல் வந்தார்; அருள்செய்தார் என்கின்றார். இது "ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத், தம்முதல் குருவுமாய்த் தவத்தினின் உணர்த்தவிட்டு, அந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே" என்ற சிவஞானபோதக் கருத்தை விளக்குதல் காண்க. 'விலங்கு மனத்தால்' என்பதற்கு எதிர் நின்று தடுக்கும் மனத்தால் என உரைப்பாரும் உளர். சிறந்தது தெளிக.

*நிலந்தன்மேல் வந்தருளி :* உலகம் மாயையின் காரியம். பெரியபெருமான் மலமாயைகளிற் றோயாதவர். ஆன்மாக்களை உய்யக்கொண்டருளும் திருவுளத்தினலே கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து, மானிடச்சட்டை சாத்திக் குருவடிவாக எழுந்தருளி. இது குருந்தடியிற் குருவாக இறைவன் எழுந்தருளக் கண்டதைக் காட்டியதாம்.

*நீள்கழல்கள்:* 'பாதாள மேழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்' ஆதலின் இங்ஙனம் கூறியது என்க. நாயிற்கடையாய்க் கிடந்த அடியேற்கு என்பது தன்னிழிவையும், தயாவான தத்துவனே என்பது இறைவன் பெருமையையும் உணர்த்தின.

தாய் சேயின்மீதுள்ள பாசத்தினல் மல மூத்திரங்களையும் பொருட்படுத்தாது ஊட்டி வளர்த்து வருவள்; அவளும், சேய் நெறியல்லா நெறிக்கட்செல்லின் சீயென வெறுப்பள். இறைவனே, விலங்குமனத்தால் நலந்தானிலேனக இருந்தும், அவற்றைப் பொருட்படுத்தாது ஆண்டான்; அருளினன் என்பார் 'தாயிற்சிறந்த தயாவான தத்துவனே' என்றார். தாய்க்கும் சேய்க்குமுள்ள தொடர்பு பிள்ளைப்பாசம்; எனக்கும் உனக்கும் உள்ள தொடர்போ உனது தயாவொன்றேயாம் என்ற நயம் உணரத்தக்கது.

*இ - ள் : (62 – 72)* குற்றமற்ற ஒளி ஒருகாலைக்கொருகால் மலர்ந்து தோன்றுகின்ற மலரின்கண் எழுந்த சுடரே! ஒளிமயமானவனே! இனிமைமிக்க அமுதம்போல்பவனே! சிவபுரத்தரசனே! பாசமாகிய பற்றுக்களை நீக்கி உயிர்களை வளர்க்கும் குருநாதனே! திருவடிக்கண் வைத்த நேசமாகிய அருளைச்செய்து வஞ்சனை நீங்க, என் மனத்தில் நிலைபெயராது நின்ற பெரிய கருணை பெருகிக் கொண்டேயிருக்கும் பேராறே! உண்டு தெவிட்டாத அமுதமே! எல்லையற்ற பெருமையையுடையவனே! ஒன்றியிருந்து தியானிக்கின்றவர்கள் மனத்தில் அவர்களுக்குப் புலனகாமல் மறைந்து நிற்கும் அறிவொளியே! என் பாசஞானத்தை நீர்போல உருகச் செய்து என் அரிய உயிருக்கு உயிராக நின்றவனே! இன்பத் துன்பங்கள் இல்லாதவனே! அவையனைத்தும் உயிர்கட்காக உள்ளன போல் நடிப்பவனே! அன்பர்கட்கு அன்பனே! எல்லாப் பொருள்களுமாகி, அவையல்லவுமாகி நிற்கும் பேரொளி வடிவானவனே என்றவாறு.

சோதி - ஒளிப்பிழம்பு. சுடர் - அதனைத் தாங்கி நிற்கும் விளக்குச்சுடர். சுடர் ஆதாரம், சோதி ஆதேயம். 'சோதியே

சுடரே சூழொளி விளக்கே' என்புழி இம்மூன்றின் வேறுபாடும் உய்த்து உணர்க. விளக்குச் சோதியுள் மை பொதி விளக்கே என்ன இடையில் நீலமும் மேல்புகையும் மாசுகளாக இருக்கும். அவையற்ற ஒளி என்பார் மாசற்ற சோதி என்றார். மாசற்ற என்பது இனம் விலக்கவந்த அடைமொழியாய்ப் பௌதிக ஒளியை ஒழித்து நின்றது. சோதி சுடரைப் பற்றி நின்று எரியும். இச்சோதி மணமும் அழகும் தட்பமும் தோன்ற மலர் போல இருந்தது என்பார் மலர்ந்த என்றார். பௌதிகச்சோதி விளக்கினிடம் எண்ணெயும் திரியுமாகிய ஆதாரத்தைப் பற்றி நின்று எரியும். இறைச்சோதி மனமாகிய தாமரைமலரில் அன்பு ஆர்வம் என்ற எண்ணெயும் திரியுமாகிய இவற்றைப்பற்றி ஒளி செய்யும் என்பார் மலர்ச்சுடரே என்றார்.

மாசற்றசோதி என்பதையும் விளியாக்கி உரைப்பாரும் உளர். இதனை இல்பொருள் உவமையாகக்கொண்டு மாசற்ற சோதி விரியும் மலர் ஒன்று உளதாயின் இறைவன் ஒளியோடு ஒப்பித்தல் அமையும் என்று உரைப்பாரும் உளர். நயமுடையன கொள்க.

தேசன் - தேசு - ஒளி; ஒளியையுடையவன். சோதி எனவே ஒளி அடங்குதலின் மீண்டும் தேசன் என்பது எவ்வாறு இயை புடைத்தாம் எனின், தேசு என்பது முற்கூறிய ஒளி அன்றி, 'நின்ற ஒளியோடு ஒழுகப்படும்' 'உண்ணுன் ஒளிநிருஅன் ஓங்குபுகழ் செய்யான்' என்பனவற்றைப்போல அனைவரையும் ஒருசேரக் கவர்ச்சி செய்யும் தெய்வீக ஆற்றலை உணர்த்தி நின்றது. இதனைத் தேசசு என வழங்கும் வடமொழி. இதற்கு உரு என்றும், நாட்டை உடையவன் என்றும், அரசன் என்றும் பொருள் கொள்ளுவாரும் உளர். தேன், பல பூக்களிலிருந்து வண்டால் திரட்டப்பட்ட இனிமையுடையது. அமுது விண்ண வர்களால் பாற்கடலைக்கடைந்து எடுக்கப்பட்டது. தேன் நாம் கண்டது. அமுது இலக்கியவுலகில் கேட்கப்படுவது. உயிரை வளர்த்து உடலை உறுதிப்படுத்தும்வகையில் இவ்விரண்டும் ஒத்தன. ஆதலால், தேனை ஒத்த அமுதனே என்றார். கண்ட தைக் கொண்டு காணுததை உணர்த்துவது உவமமரபாதலின், இனிமையெனப் பொருள்கொண்டு அமுதிற்கு அடையாக்கு வாரும் உளர். இவ்வண்ணம் அறிவுக்குப் புலனுகும் இறைவன் சீவன்முத்ததசையே பரமுத்தியாக அநுபூதிபெறுகிற அடியார்க ளுள்ளமே சிவபுரமாகக்கொண்டு வீற்றிருக்கின்றான் என்பார் சிவபுரனே என்றார்.

ஆரியன் - பூசிக்கத்தக்கவன்; என்றது குருநாதனை. குரு தன்னடியடைந்த பரிபாகமுற்ற மாணக்கனுக்குப் பாசநாசஞ் செய்து உயர்த்துவான். அதுபோல இறைவன் பற்றறுத்துப் பற்றற்ருன் பற்றினைப் பற்றச்செய்து உயர்த்தினமையின் 'பாச மாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே' என்ருர். பாரித்தல் - பெருமை உடையதாக்குதல். பாசம் - உயிர்களைக் கட்டுவது. விருப்பம்போலத் திரியும் ஆடுமாடுகளைக் கட்டும் கயிறுபோல உயிர்களைக் கட்டிநிற்கும் ஆணவமலம் மாயாமலம் இவ்வி ரண்டையும் உணர்த்தும். மும்மலங்களுக்கும் பாசம் என்னும் வழக்குண்மையை, "பசுக்களைக் கட்டிய பாசம் மூன்றுண்டு" என்னும் திருமந்திரப் பகுதியானும் உணர்க. "பகல் என்னும் பண்பின்மை பாரிக்கும் நோய்" என்புழிப்போலப் பாரித்தல் வளர்த்தல் பெரிதாக்கல் என்னும் பொருளில்வந்தமை காண்க.

நேசம் - அன்பு. இது நேயம் எனவும் வழங்கும். தொடர்பு உடையார்கண் தோன்றும் காதல் என்பர் பரிமேலழகர். அருள் எல்லார்மாட்டும் நிகழ்வதாகிய இரக்கம். இறைவன் உயிர்க ளிடத்துப் பொதுவாக அருளுடையவனுயினும் தம்மிடத்தே அன்பு செய்வாருக்கு அன்பையும் அருளையும் ஒருசேரச் செய் கிருன் என்பார் நேச அருள்புரிந்து என இணைத்துக்கூறினுர். இதனை நேயம் என்னும் சொல்லின் சிதைவாகக்கொண்டு அறியப்படுபொருளாக இருந்து அருள்புரிந்து என்பாருமுளர்.

வஞ்சம் கெட - நெஞ்சைக் குடியாகக்கொண்டிருக்கிற காமம் முதலிய வஞ்சனைகள் கெட. பிரபஞ்சம் என்னும் சொல்லின் சிதைவாகக்கொண்டு உலகவாசனை நீங்க என்பாரும் உளர். பிரபஞ்சம் பவஞ்சம் எனவும் வஞ்சம் எனவும் வருதல் சாத்தி ரங்களில் காண்க. வஞ்சங்கெட நெஞ்சில் நின்ற பேராறு. எனக் கூட்டிப் பொருள் காண்க. மனத்தில் குறுந்தூராகிய வஞ்சனைகள் கெடவேண்டுமானுல் இறைவன் நீங்காது உறைய வேண்டும். அங்ஙனமே எல்லையற்ற கருணையால் அவன் உறைகின்ருன் என்பார் 'பேராது நின்ற பெருங்கருணைப் பேராறு' என்ருர்.

ஆரா அமுது - உண்டு தெவிட்டாத இன்பம். அளவிலாப் பெம்மான் - ஆன்மபோதம் துணைக்கொண்டு அளவைகளால் அளக்க இயலாத பெருமான் என்பது கருத்து.

ஓர்தல் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து ஒன்றியிருந்து நினைத்தல். அங்ஙனம் செய்யாதார் ஓராதார். இறைவன் இயங்குவன நிற்பன எங்கும் ஒப்ப விளங்குகின்ருன் ஆதலின்

ஓராதார் உள்ளத்துள்ளும் ஒளியாய் உள்ளான். ஆயினும், அவர்கள் அறியாமையால் அவனை அறிகின்றிலர். ஆகவே, அவர்கள் மனத்திலே இருந்தும் அவர்களுக்குப் புலப்படாது ஒளிக்கின்றான். "ஓர்த்துள்ளம் உள்ளது உணரின்" என்ற திருக்குறட்பாவையும் சிந்திக்க. பாசஞானங்கள் செருக்கினை அடிப்படையாகக்கொண்டு பனிக்கட்டி போல உயிருக்கு இதம் போல அகிதம் செய்வது. இறைவன் அந்தப் பாசஞானத்தை நீராக உருக்கினான் ஆதலால் என் உயிர்க்குயிராக இறைவனே எழுந்தருளிநின்று இயக்குகின்றான் என்பதனை அறிகின்றேன் என்பார் இங்ஙனம் கூறினார்.

இன்பமும் துன்பமும் விருப்பு வெறுப்பினை அடிப்படையாகக்கொண்டு புண்ணிய பாவங்களின் காரியமாக விளைவன. இறைவன் வினையிலியாதலின் அவனுக்கு வேண்டுதலும் வேண்டாமையும் இன்றாம் ஆகவே அவனுக்கு இன்பமும் துன்பமும் இன்றாம்.

திருவடியைச்சேர்ந்த அடியார்கள் இன்பத் துன்பங்களைத் தானாக்கிக்கோடலின் உள்ளானே என்றார். ஆயினும் அவனை அவை பற்றா. இதற்கு மேற்கோள் :-

'சிவனுமிவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல உடனாகி ஏன்றுகொள்வான் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே'

இங்ஙனமன்றி எதிர்நிரனிறையாகக் கொண்டு இன்பம் உள்ளானே துன்பம் இல்லானே என்று கூட்டிப் பொருள் காண்கின்றது பழைய உரை.

யாவையுமாய் - எல்லாப்பொருளோடும் உடனாய். அல்லவுமாய் - அவற்றின் வேறாய். இப்படியிருக்கின்ற ஒளிவடிவன் என்று ஒன்றாயும் உடனாயும் வேறாயுமாய் இருக்கும் தன்மை உணர்த்தப்பெற்றன.

ஒளிக்கும் இருளுக்கும் இடம் ஒன்றாதலின் ஒளிவடிவாய் நின்ற இறைவனே, ஆணவ இருளுக்கு அகப்படாது, தான் அதனுள்ளும் மறைந்திருத்தலானும் இருளுக்குள் இருளாய்ச் செறிந்திருத்தலானும் 'துன்னிருளே' என்றார்.

இங்ஙனமன்றி, 'பொருளாய் எனைப் புகுந்து ஆண்டு, புரந்தரன் மால் அயன்பால், இருளாய் இருக்கும் ஒளி நின்ற

சிற்றம்பலம்' என்புழிப்போல ஞானிகட்கு ஒளியாகவும் புறத்தாருக்கு இருளாகவும் இருப்பவனே எனலும் ஆம். மற்றும் மகாகேவல இருள் சடமாதலால் இறைவன் அதனைப் பிரேரிக்குங்காலத்து அதனை இடமாகக் கொள்ளுதலின் இங்ஙனம் கூறினார் என்பர் பழைய உரைகாரர்.

தோன்றாப் பெருமையனே - இவ்வளவுதான் என்று தோன்றாத எல்லையற்ற பெருமையை உடையவனே!

இ - ள் : (73—83) எல்லாவற்றிற்கும் எவருக்கும் முதலாக இருப்பவனே! இறுதியும் நடுவுமாகி இம்மூன்றும் அல்லாதவனே! அடியேனை வலிய அழைத்து ஆட்கொண்ட என் தந்தையும் தலைவனுமாக இருப்பவனே! கூரிய உண்மை அறிவால் சிவனே பரம்பொருள் என மனத்து உறுதிகொண்டு இடைவிடாது தியானிப்பவர்களும் தம் கருத்தால் காணுதற்கரிய அறிவாக விளங்குபவனே! மிக நுட்பமானவற்றிற்கெல்லாம் நுட்பமான அறிவே! இறப்பும் பிறப்பும் இருப்புமாகிய புடைபெயர்ச்சி இல்லாமல் என்றும் நிலைத்த புண்ணியனே! அனைத்தையும் காக்கும் எமது காவலனே! கண்ணாலும் கரணங்களாலும் காணுதற்கு அரிய பேரொளியே! கருணைப் பேராற்றில் பெருகிவரும் இன்பவெள்ளமே! தந்தையே! எல்லாவற்றிலும் மிக்கவனே! நிலைபெற்ற தோற்றத்தினை உடைய கதிரினொளியாக விளங்குபவனே! வாயால் வரையறுத்துச் சொல்ல இயலாத நுண்ணிய அறிவு வடிவானவனே! பரிணமப்படுகின்ற இந்த உலகத்தில் உயிர்களின் பரிபாகநிலைக்கேற்ப வேறு வேறான வடிவங்களோடு எழுந்தருளிவந்து அவர்களுக்கு ஞானமேயாக விளங்கும் தெளிந்தபொருளாக உள்ளவனே! தெளிவில் தெளிவாக உள்ளவனே! என்சிந்தனையுள் ஊறுகின்ற உண்ணுதற்கமைந்த அமுதமே! என்றவாறு.

ஆதியன் - எல்லாப்பொருள்களும் தோன்றுதற்குக் காரணமாகி இருப்பவனாகிய பரமன். நடு ஈறு என்பன ஆகுபெயராக முத்தொழிலில் இடைக்கண்ணதாகிய காத்தலைச் செய்யும் திருமாலையும், இறுதிக்கண்ணதாகிய அழித்தலைச் செய்யும் உருத்திரனையும் உணர்த்தின. ஆகவே, படைத்தல் ஆதி முத்தொழிலைச் செய்ய இறைவன் மூவராகி விளங்குகின்றான் என்பதை விளக்க 'ஆதியனே அந்தம் நடுவாகி' என்றருளியது.

அங்ஙனமாயின் சகலான்மாக்களாகிய அவர்களும் சிவத்தோடொப்பாவரோ எனின், ஆகார். ஜனனி, ரோதயத்திரி ஹாரிணி ஆகிய சிவசத்திகள் ஒரோவொன்று அவர்மாட்டுப் பதிந்துநின்று இயக்குதலான் உபசாரமாக உரைக்கப்பட்டதாம்

என்ற உண்மையைப் புலப்படுத்தவே அடுத்து 'அல்லானே' என்றார்.

வயலில் மேயச்செல்லும் கன்றை வலிந்து இழுத்து அதற்கு இனிய உணவை உண்பிக்கின்ற இடையன்போல மலவாதனையால் தாக்குண்டு பொறிவழியே புலன்களின்மேல் செல்கின்ற என்னை அருள் என்னும் அருங்கயிற்றால் கட்டி இழுத்து ஆட்கொண்டமையால் எந்தந்தையும் தலைவனும் ஆனான் என்பார் 'ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே' என்றார். நம்பியாரூரரைத் தடுத்தாட்கொண்ட வரலாறு ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

மெய்ஞ்ஞானம் - சிவஞானம். கூர்த்த மெய்ஞ்ஞானம் - தீவிரதரப் பக்குவத்திலும் முறுகிய சிவஞானம். அதுவே இறைவனைத் தியானித்தற்கும் உணர்தற்கும் உரியதாகலின் அவற்றைத் துணைக்கொண்டு தம்கருத்தால் நோக்குவார்க்கு இறைவன் நுண்மையினும் நுண்மையாக விளங்குகின்றான் என்பார் இவ்வண்ணம் கூறினார்.

இதற்குச் சிவஞானிகள் இறைவனொடு ஒன்றாய் நிற்கப் பெறுதலானும், அவர்செயல் சிவச்செயலே ஆதலானும், அவர்கள் அவனாய்நின்று உணர்தலன்றி வேறாய்நின்று உணரமாட்டார்களாகையானும் இங்ஙனம் கூறினார் எனலுமாம். இதனையே திருக்கோவையாருள் 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்' என்றது. அதற்குப் பேராசிரியர் தந்த உரை இப்பகுதிக்குச் சிறந்ததாகும். இதனால், உண்மைஞானிகளுக்கு இறைவன் அறிவோடு ஒற்றித்து நின்று அறியும் இயல்பினன் என்பதை அறிவித்தவாறும்.

நுணுக்கு - நுணுக்குதல்; கூரியதாக்குதல். நுணுக்கரிய நுண்ணுணர்வே - இனி மேலும் கூரியதாக்க முடியாமல் மிகக் கூரியதாய் அமைந்த ஞானவடிவினனே என்பதாம்.

எங்கும் நீக்கமற நிறைந்திருத்தலின் போதலும் வருதலும் புணர்தலும் பிரிதலுமாகிய செயல்கள் அவனுக்கில்லை என்பார் 'போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே' என்றார். உயிருக்கு உட்பகையாக இருக்கும் காமம் முதலாகிய ஆறும் வந்து தாக்காதவாறு கருணையால் காப்பவன் என்பார் 'காக்கும் எம் காவலனே' என்றார்.

உலகில் கண்ணிலாதார், ஒளியைக் கண்ணின்மையினால் காணார். கண்ணுளார், ஒளியைத்தாங்கும் ஆற்றல் கண்கட்கு

இன்மையின் காணார். அதுபோலவே, பேரொளிப் பிழம்பாகிய இறைவனைத் திருவடிஞானமிலாதார் காணார். திருவடிஞானம் உடையவரும் அவ்வொளியில் ஒன்றி, ஒளி தம்மாலளக்கலா காமையின் காணார் என்பது 'காண்பரிய பேரொளி' என்பதால் குறிப்பிடப்படுகிறது. இறைவனைப் பெருங்கருணைப் பேராறாக அனுபவித்த அடிகள், இப்போது அவ்வாற்றின் இன்பவெள்ள மாக அனுபவிக்குமளவு சிவானுபவம்முதிர்ந்து நுணுகுகின்ற சிறப்பினை 'ஆற்றின்ப வெள்ளமே' என்றதால் நுகர்க.

அத்தா! மிக்காய்! என்பன இறைவன் தந்தையாயும், எல்லாரினும் எல்லாவற்றினும் சிறந்தவனாயும் இருந்து அள வற்ற கருணைசெய்வதை அடைமொழி இல்லாத சொற்களால் விளித்தவாறு. உணர்வில் எழுந்த சில உணர்ச்சிகளை உரை யால் சொல்லுதலும் ஆம்; கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதலாகிய உலக உணர்ச்சியையே இவ்வாறிருந்தது எனத் தம் மனவுணர்வால் அறிதலன்றி, உரையால் சொல்ல இயலாது போகவே, பேரின்ப உணர்வினனாய் எழுந்தருளி யிருக்கும் இறைவன் பெற்றியை எங்ஙனம் சொல்ல இயலும்? இதனையே 'சொல்லாத நுண்ணுணர்வாய்' என்பதால் குறிப் பித்தார்கள். திருமூலதேவரும்,

'முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனொ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லலும் ஆமே'

என்றருளியதும் காண்க.

மாற்றம் - வளர்ச்சியும் தேய்வுமாகிய பரிணமம். உலகம் இவற்றை உடையதாகலின் 'மாற்றமாம் வையகம்' என்றார். உலகத்தின் பரிணமத்திற்குத்தக, அவற்றை நுகரும் உயிர்களும் பரிபாகத்தால் வேறுபடுதலின், அவரவர்கட்குத்தக இறைவன் வேறு வேறு திருவுருவத்தில் எழுந்தருளிவந்து அருள்செய்ய வேண்டியிருத்தலின் 'வெவ்வேறே வந்து' என்றருளினார்.

அங்ஙனம் வெவ்வேறாய் வரினும், உருவைக் கருவியாகக் கொண்டு உணர்ந்த உயிர், ஞானமுதிர்ந்து இறுதியில் அறி வாய் உணர்தலின் 'அறிவாம் தேற்றனே' என்றார். அங்ஙனம் அறிவாகத் தேறியபின் அதனோடு தம்மறிவும் ஒன்றி, உயர்ந்த நிலையில் வினையும் தெளிவாக இறைவனைக் காண்கின்றவர் 'தேற்றத் தெளிவே' என்கின்றார்.

அனுபவம் முதிர்ந்தபொழுது அதனை உரைக்கநேரிடின் உலக இன்பத்தை உவமித்தே உரைத்தல் இயல்பு ஆதலின் உண்ணுதற்குக் கிடைத்த அமுதமாக இறைவனைக் காண்கிறார். அமுதம் பாற்கடலில் ஒருகால் தோன்றியது; எப்பொழுதும் கிடைப்பதில்லையே; இச்சிவமாகிய அமுதம் எப்போதும் நுகரக் கிடைக்கின்றதே என்ற கருத்துத்தோன்ற என் சிந்தையாகிய பாற்கடலுள் என்றும் வற்றாத ஊற்றாக ஊறிக்கொண்டிருக் கின்ற 'அமுதே' என்றார். "என்றும் மீளா ஆளாய்" என்றது போல உயிர்கள் அனைத்தும் அநாதியே சிவனுக்கு உடைமை ஆதலால் 'உடையானே' என்றார்.

இ-ள்: *(84-95)* வேறுபட்ட திரிபுகளையுடைய தசைத் திரளாய உடம்பினுள் அடைபட்டுக்கிடப்ப ஆற்றேனாயினேன்; எமது தலைவ! அரனே! என்று, பலகாலும் உன்னைப் போற்றிப் புகழ்ந்து தியானத்திருந்து, பொய்யான உலக இச்சைகள் நீங்கப் பெற்று, உண்மையே வடிவாய அடியார்கள், இக்கன்ம பூமியில் மீளவும் பிறந்து வருந்தாதபடி, கள்ளத்தனமான புலன்களுக்கு உறைவிடமாகிய இவ்வுடற்குடிசையின் கட்டை அழிக்கவல்லவனே! நடு இரவில் நடனத்தை விரும்பிச்செய்யும் தலைவனே! தில்லைப் பதியுள் எழுந்தருளியுள்ள கூத்தப்பெருமானே! தென்பாண்டி நாட்டானே! துன்பத்திற்கு உறைவிடமான பிறவியை அறுப்ப வனே! என்று உரை அளவையால் சொல்லுதற்கரிய பரமசிவனை ஏதோ ஒருவகையால் புகழ்ந்து சொல்லி, அவனுடைய திருவடிக் கீழிருந்து சொல்லிய பாடல்களின் பொருளை உணர்ந்து சொல்ப வர்களாகிய ஞானச்செல்வர்கள், சிவபெருமான் திருவடி நீழலி லேயே பலரும் தம்மை வணங்கத் தாம் அவனைப் பணிந்து சிவ புரத்தின் உள்ளாராவர் என்றவாறு.

இறைவன் 'இங்கிருக்க' எனப் பணித்தமையாலும், தம் முடைய பிராரத்த கன்மப்பொசிப்பின் கால அளவு அறியப் படாமையாலும் இவ்வுடம்பினுள் அடைபட்டுக்கிடப்ப ஆற்றே னென்று தலையில் தீப்பற்றியவனைப்போலப் பரபரக்கின்றவர், இந்த உடம்போ ஒரு தசையின் கூட்டம்; வேறுவேறான காலம் சூழல் இவற்றால் மாறுபடும் இயல்பினது; இதனுள் அடை பட்டுக்கிடப்பதனால் அடியேனும் அத்தனைத் துன்பங்களையும் அடையவேண்டியவனாகின்றேன் என்று இரங்குகின்றார். இரக் கத்தில் ஐயா! அரனேயோ! முதலான அரற்றொலிகள் முறையே பிறக்கின்றன.

வேற்று உடம்பு - எடுத்த பிறவிகளுக்கேற்ப வேறுபட்ட உடம்பு. விகார உடம்பு - பாலனாய்க் குழைந்தும், காளையாய்

இறுகியும், முதுமையாய் நரைத்தும், திரைத்தும், பரிணமிப்படு கின்ற உடம்பு. விடக்கு உடம்பு - பூசுவபூசாமலும், பூனைவ புனையாமலும், கழுவாமலும் உள்ளபோது புலால்நாறும் தசைத் திரள் முதலான தாதுக்களாலாகிய உடம்பு.

எம் ஐயா! அரனேயோ! எனப் போற்றிப் புகழ்ந்து பொய் கெட்டு மெய்யானார் பிறவி சாரசமே குரம்பைக் கட்டு அழிக்க வல்லானே! எனக் கூட்டுக.

பொய், ஆகுபெயராகிப் பொய்யானசொற்செயலை உணர்த் திற்று எனலுமாம். மெய் என்பதும், அவ்வண்ணமே நிலைத்த அழியாத பேரின்பநிலையை உணர்த்திற்று. இங்கு என்னும் சுட்டடியாகப் பிறந்த இடப்பெயர்ச்சொல் இன்பத் துன்பங்க ளாகிற வினைப்போகங்களுக்கு இடமாய்ப் புண்ணிய பாவங்க ளாகிற வினைகளுக்கு விளைபுலமாயிருக்கும் இப்பூமியை உணர்த் திற்று.

கள்ளப்புலம்: கல்வியானும் குலப்பிறப்பானும் பதவியா னும் சிறந்தான் ஒருவன் தம் புலம் தீநெறிக்கண் செல்லல் ஆகாது எனத் தடுத்து நிறுத்தியும் நில்லாது அறிவு சோர்ந்த காலத்து அவனை ஏமாற்றிப் புறஞ்சென்று விஷயசுகங்களைப் பற்றுதலாகிய கள்ளமுடைமையின் கள்ளப்புலம் என்றார். சிவ ஞான மேலீட்டால் ஐம்புல இன்பங்களை வெறுத்து ஒதுக்கினும் வாசனைமலத்தைத் துணைக்கொண்டு உயிர் சிவன் அடியையும் திருவைந்தெழுத்தையும் பிரிந்தகணத்து அற்றம் பார்த்துப் புறம் சேறலின் கள்ளப்புலம் என்றார் எனலும் ஆம்.

குரம்பை - உடல். கட்டு - உயிர் உடலின்கண் கட்டுண்டு இருத்தற்குக் காரணமாகிய மலமும் மாயையும் கன்மமும்.

அழிக்கவல்லான் - மலமாயைகள் நித்தியப்பொருளாதலின் அவை உயிரிற்சென்று பந்திக்காதவண்ணம் தடுக்கவல்லான்; கன்மங்களை நீக்கவல்லான் என்பதாம்.

சர்வசங்காரகாலத்து எல்லாம் ஒடுங்குதலின் எங்கும் ஒரே இருள்மயமாக இருக்கும்; அப்போது இறைவன் எல்லா உயிர் களுக்கும் ஓய்வை அளித்துவிட்டோமென்று மகிழ்ந்து ஊழிக் கூத்தை இயற்றுகின்றான் ஆதலின் 'நள் இருளில் நட்டம் பயின்றாடும் நாதனே' என்றார்.

இறைவன், அங்ஙனம் ஒடுங்கிய உயிர்களை மலம் பரிபாக முறுதற்பொருட்டு மீளவும் படைக்கத் திருவுளம்பற்றியபோது

தில்லையுள் கூத்தனாக இருந்து பஞ்ச கிருத்திய பரமானந்தத் தாண்டவத்தை இயற்றுகின்றானாதலின் 'தில்லையுள் கூத்தனே' என்றார். 'பாண்டி நாடே பழம்பதி' என்பராதலின் தென்பாண்டி நாட்டானே என்றருளினர்.

பிறவி - துன்பமாகிய புயல் வீசும் பெருங்கடல். அதிலகப் பட்டுத் தவிக்கின்ற ஒருவன் அரண் தேடி அரற்றுவதுபோல அறுப்பானேயோ என்றார். இது ஒருவகை அவல உரை.

சொல்: மாயையின் காரியம். சிற்றறிவு உடைய உயிரின் முயற்சியால், அவற்றின் அறிவின் அளவாக வெளிப்படுவது. இறைவன் மாயாதீதன்; உரை மனம் கடந்துநின்ற ஒருவன். அவனைச் சொல்லாற் சொல்லிக் காட்டலாகாமையின் 'சொல் லற்கு அரியானை' என்றார். அங்ஙனம் சொல்லற்கு அரியனா யினும் அவன் திருவருளுணர்த்திய அளவில் சொல்லுந்தரம் உண்டு என்பார் சொல்லி என்றார். திருவடிக்கீழ்ச் சொல்லிய பாட்டாவது அவன் திருவடிக்கீழ் இருந்து திருவருள் முற்படத் தாம் பிற்பட்டுச் சொல்லிய பாட்டு.

பொருள்: உணர்ச்சிவடிவாக உயிரிற்சென்று உரைப்பன. பொருள் உணராது பாடல்களைச் சொல்லின் அவை நாவின் முயற்சியாகிய ஒலியாய்க் கழியுமேயன்றிப் பெரும்பயன் விளை யாது ஆதலால் பொருள் சொல்லுவார் என்னாது பொருள் உணர்ந்து சொல்லுவார் என்றருளினர். 'செல்வன் கழலேத் தும் செல்வம் செல்வமே' என்றாற்போல உணர்ந்து சொல்லு வாரே செல்வர் என இயைக்க.

சிவபுரம்: மங்களமும் இன்பமும் நிறைவும் உடையதாகிய பரமுத்தி. அதனை யாம் உணர ஓர் ஊர்போலச் சொன்னதாம். ஆன்மா பரமுத்திநிலையாகிய திருவடிப்பேறு சித்தித்தவிடத்தும் அடிமைத்திறமே பேணி, ஆனந்தமே தாராய் அமர்ந்திருக்கும் ஆதலின் சிவனடிக்கீழ் உள்ளார் என்றார். உள்ளார் என்பது மூன்று காலத்திற்கும் பொதுவாகிய வினைமுற்று. சிவனடி யோடு ஒன்றியகாலத்து இவர்கள் காலதீதர்கள் ஆயினமையின் உள்ளார் எனப் பொதுவினை கொடுத்து முடித்தார். அங்ஙனம் சிவனடிக்கீழ் இருக்கும்பொழுது, ஏனைய அடியார்கள் தம்மை வணங்குவார்கள் ஆதலால் 'பல்லோரும் ஏத்த உள்ளார்' என்றும், ஒன்றிய நிலையிலும் சிவம் ஆனந்தப்பொருள் நாம் நுகர்பவன் என்ற பேதஞானமாகிய முனைப்பும் அற்றுத் தாடலை யாக அடங்கி நிற்றலின் 'பணிந்து உள்ளார்' என்றும் அருள் பாலித்தார்.

இங்ஙனமன்றிப் பொருளுணர்ந்து சொல்லுவார் சிவபுரத்தின் செல்வர்; பல்லோரும் ஏத்தப் பணிந்து சிவனடிக்கீழ் உள்ளார் எனக் கூட்டிப் பொருள் உரைப்பர் சிலர்.

இவ்வண்ணம் வாழ்த்தி, வெற்றியும் போற்றியும் கூறிச் சிவபுராணந்தன்னைப் பழவினை கெட உரைப்பன் என நுதலிப் புகுந்த வாதவூரண்ணல், திருவடிப் பெருமையை எண்ணிப் புகழுமாறு ஒன்றறியேன்; ஆனாலும், பல பிறவிகளிலும் பிறந்து இளைத்த துன்பத்தின் நீக்கமாக இன்று உன் பொன்னடிகளைக் கண்டு வீடுற்றேன்; இன்பப் பெருமானே! நல்லறிவே! எங்கள் பெருமானே! புலன்களின் மயக்கிற்பட்டுக் கலங்கும் எனக்கும் திருவடிகளைக் காட்டி உபதேசித்த குருமணியே! என் சிந்தனையுள் தேனாக ஊறி இனிமை பயப்பவனே! இவ்வுடம்பில் நெடுங்காலம் இருக்கப்பொறேன் என்று திருவடியின் கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் பல்லோரும் ஏத்தப் பணிந்து சிவனடிக் கீழ் உள்ளார் எனப் பொருளியைபு பொருந்தச் சிவபுராணக் கலிவெண்பா அமைந்திருத்தல் காண்க.

இது, வாழ்த்தும் வருபொருளுரைத்தலும் ஆசாரிய வணக்கமுமான முக்கூற்றினதாகத் திருவாசகம் என்னும் நூற்குத் தற்சிறப்புப் பாயிரமாக அமைந்துள்ளது என்பாரும், 'சிவ புராணம்' என்பதே இந்நூற்குப் பெயர் என்பாரும் ஆக உரையாசிரியர்கள் பல கருத்துரைப்பர்.

பழைய உரைகாரர், பசுகரணமே சிவகரணமான சிவபுராணம் முற்றிற்று என்பதால் இப்பகுதி பசுத்துவம் நீங்கச் சிவத்துவவிளக்கம் தரவல்லது என அறியக்கிடத்தல் காண்க.

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

# 2. கீர்த்தித்திருவகவல்

*[ சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை ]*

இறைவன் ஆணையின்வண்ணம் புலியூரை அடைந்த வாதவூரடிகள், கண்டபத்தைக் கருத்தார உரைத்தபின், ஆனந்தக்கூத்தரின் திருமேனி அநுபவத்தில் ஈடுபட்டு அநுபூதி விஞ்சத் தம்மையும் மறந்து கனகசபையிலேயே அசைவற்றுநின்றார்.

இந்நிலை அறியாத கோயில்காப்பார் 'கனக சபையை விட்டுக் கீழேயிறங்கும்' எனக் கடிந்து கூறினர். அவ்வுரை அடிகளாருடைய திருச்செவியில் புகுந்திலது. அடிகளார் சிதானந்தப் பெருவெளியில் ஓங்காது குறையாது விளங்குகின்ற சிவானந்தப் பிரகாசத்தில் திளைத்துத் தம்பம்போல் நின்றார். கண்ட காவலர்கள் 'என்ன; இவர் போம் என்றாலும் போகிலர்; உரையும் ஆடார்; பித்துக்கொண்டார் போலும்' என்று இரங்கிநின்றபோது, அடிகளார் வாய் 'சிவ சிவ' என்றசைந்தது; கைகள் சிரமேல் குவிந்தன; குஞ்சிதபாதத்தை மீட்டும் தலையால் வணங்கி, திருப்புலீச்சரம் சார்ந்தார்; அங்கிருந்து அனந்தேச்சரத்தையும் வணங்கிக்கொண்டு திருவீதியை வலம்வருகின்றபோது கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என்ற மூன்றையும் சொல்லிக்கொண்டே வந்தார். இதனாலேயே இன்றும் சைவத்தமிழுலகம் இந்த மூன்றையும் பாராயணம் செய்துகொண்டே திருவீதியையும் திருக்கோயிலையும் வலம்வருதலை மரபாகக்கொண்டுள்ளது.

*கீர்த்தி - சிவனது திருவருட்புகழ்ச்சி. அதனை முறைமையாக அறிவிக்கும் அகவல் கீர்த்தித்திருவகவல்.*

*உரை மனம் கடந்து நின்ற தன்னியல்பை இடைவிடாது நினைந்து நினைந்து உருகும் அடியார்கள் கண்ணாரக்கண்டு மனங்குளிரத் தியானித்து உய்யும் வண்ணம் பெருங்கருணைகொண்டு தலங்கடோறும் எழுந்தருளி, அருளுருவைக் காட்டி ஆண்டபுகழ்களைத் தொகுத்துக்கூறலின் இப்பெயர் பெற்றது.*

இவ்விளக்கங்கள் அனைத்தும் 'புகழ்பெருகும் செய்கையெலாம் புகல் அகவல் ஒன்ருகும்' என்ற பழைய திருப்பெருந்துறைப் புராணப்பகுதியின் விரிவாகும்.

இந்நூல் முழுதையும் அகப்பொருட்டுறை அமைதிபெற வகுத்தார் என்றுரைப்பர் சிலர். தலைமகனுடன் ஊடிய தலைமகளின் ஊடல் தணியும்வண்ணம் தலைவனியலைப் புகழ்ந்து கூறிய வாயில்களை மறுத்துத் தலைவி இயற்பழித்தது என்பது அவர்கருத்து.

பழைய வுரைகாரராகிய காழித்தாண்டவராயர், சிவபுராணத்தில் அநாதிமுறைமையான நிட்கள சொரூப வியாபகத்தின் பழைமையை அருளி, இதில் சகளமாய் இவ்வுலகில் எழுந்தருளி அருள் வழங்கும் தடத்த தரிசன முறைமையை அனுக்கிரகிக்கின்ருர் அடிகள் என்பர்.

அகளமாய் யாரும் அறிவரிதாய் நின்ற அப்பொருள் சகளமாய்த் தலங்கடோறும் எழுந்தருளினுலும், உருகியநெய் உறைந்தாலும் நெய்யாமே அன்றிப் பிறிதாகாத வண்ணம் அகளமாய் அறிவாய் நின்ற சிவம் சகளமாய் வடிவு கொள்ளினும் அவ்வடிவு மாயாகாரியம் அன்று அநாதியாகிய பரையே அருட்டிருமேனி கொண்டு ஆன்மாக்களது பரிபாக நிலைக்குத் தக, குருவடிவாக எழுந்தருளிச் சிவாநந்த அனுபவ உண்மை உணர்த்தியபொழுது, அச்சிவம் எவ்விடத்து எவ்வுருமேற்கொண்டு எம்முறையால் உணர்த்திற்று என்று தன்னனுபவம் சித்திக்கச் சொல்லுவதே இக்கீர்த்தித் திருவகவலின் கருத்தாகும் என்க.

'தில்லை மூதூர்' என்பது முதல் 'கொள்கையும் சிறப்பும்' என்பதுவரையுள்ள எட்டடிகளும் இறைவன் எங்கும், எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்து, அறிவுருவாகக் காட்சி வழங்கியதைத் தெரிவிப்பது.

ஒன்பதும் பத்துமாகிய அடிகள், அறிவுருவாய் விளங்கிய இறைவன் அடியார்கள் ஈடேறப் பிரமாண நூல்களை அருளிச் செய்த உருவாருவ இயல்பு உணர்த்தியன.

'கல்லாடத்து' என்பது முதல் 'மகேந்திரவெற்பன்' (100) என்பது வரையில், இறைவன் எழுந்தருளியுள்ள தலங்களும் அவற்றில் அவன் நிகழ்த்திய அற்புதத் திருவிளையாடல்களும் உணர்த்தப்பெறுகின்றன.

'அந்தமில் பெருமை' (101) என்பது முதல் 'ஆண்டு கொண்டருளி' (126) என்பது வரையில் அடிகளார் தம்மை ஆட்கொள்ள இறைவன் தசாங்கங்களுடன் போந்து ஆண்ட சிறப்பு உணர்த்தப்பெறுகின்றது.

'நாயினேனை' (127) என்பது முதல் 'ஏங்கவும்' (139) என்பதுவரை தன்னைக் 'கனகசபைக்கு வருக' என ஆணைதந்து இறைவன் மறைய, அடியார்கள் பலரும் எரியில் பாய்ந்தும், மயங்கியும், அலறியும், அரற்றியும், ஏங்கியும் பாதம் எய்த, கைலைக்கிழவோனாகிய தான் அடியாரோடு புலியூர்ப் புகுந்து இனிதாக வீற்றிருந்த சிறப்பைத் தெரிவிக்கின்றது.

தொகுத்து நோக்கினால், கைலைநாதனாகிய இறைவனே எம்மை ஆட்கொண்டு, இங்கு இருத்தி, பலதலங்களிலும் பல காலங்களில் பலருக்கு அருள்வழங்கி, அடியாரோடு புலியூர் புக்கு இனிது இருந்தான் என்பதை அறியலாம். இதனையே சிவனுடைய அருளின் முறைமை என அகத்தியச் சூத்திரம் அறிவிக்கின்றது.

## நிலைமண்டில ஆசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

2 தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும் 5
என்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும் 10
கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள் 15
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்

மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்(து)
உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும் 20
நந்தம் பாடியின் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நாறுநா றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக் 25
கூறுடை மங்கையும் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும் 30
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான் 35
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்(று)
ஈண்டு கனகம் இசையப் பெறாஅ(து)
ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத் 40
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும் 45
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித் 50
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும் 55
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்

தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனில் 60
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்(கு)
அட்டமா சித்தி யருளிய வதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும் 65
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும் 70
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து 75
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும் 80
சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும் 85
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனில் அறம்பல அருளியும் 90
குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்(டு)
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத் 95
தானே யாகிய தயாபரன் எம்மிறை

சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன் 100
அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குடன் அறுக்கும் 105
ஆனந் தம்மே யாறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும் 110
மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன் 115
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும் 120
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும் 125
அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர் 130
ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி 135

*நாத நாத என்றழு தரற்றிப்*
*பாதம் எய்தினர் பாதம் எய்தவும்*
*பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்(று)*
*இதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்*
*எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொன்* 140
*பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்*
*கனிதரு செவ்வா யுமையொடு காளிக்(கு)*
*அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை*
*இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்*
*பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்* 145
*ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.*

திருச்சிற்றம்பலம்.

*தில்லை மூதூர் ஆடிய திருவடி*
*பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி*
*எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி*
*மண்ணும் விண்ணும் வானோர் உலகும்*
*துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்* 5

இ - ள்: தில்லையாகிய பழமையான நகரின்கண் நடம் ஆடிய திருவடியால் பலவுயிர்களிடத்தும் இடைவிடாது நடிப்பவனாய், எண்ணிக்கையில் அடங்காத பலவேறியல்புகளாக அவைகளிடம் அழகுபெற விளங்கி, மண்ணுலகையும் விண்ணுலகையும் வானோ ருலகையும் செறிந்த கல்வியோடு படைத்தும் அழித்தும் என்ற வாறு.

தில்லை எல்லாப் பூதங்களும் விரிய இடங்கொடுத்து நிற்ப தாகிய ஆகாயத்தலமாதலின் மூதூராயிற்று. திருவடி என்றது முன்னர் 'நாதன் தாள்' என்றதை வழிமொழிந்தது. அன்றிக் கடவுளையும் குருவையும் திருவடி என்று கூறும் மரபுபற்றியும் ஆம். உயிர்களின் அகத்தே இயற்றுகின்ற திருக்கூத்தினும், புறத்தே தில்லையம்பலத்தில் இயற்றும் திருக்கூத்தே முந்தியது ஆதலானும், உயிர்கள் அனைத்தும் உடலை விட்டகாலத்தும் தில்லையில் இடையறாது நடிப்பன் ஆதலானும் 'தில்லை மூதூர் ஆடிய திருவடி பல்லுயிரெல்லாம் பயின்றனன் ஆகி' என்றார் என்ற நயமும் உணர்க.

பல் உயிர் - புல் முதல் தேவரீறாகிய பலவேறு வகையான யோனிபேதங்களையுடைய உயிர்கள். பயிலுதல் - அவ்வவற்றின்

இடமாக ஒன்றாயும் உடனாயும் வேறாயும் இருந்து இயக்குதல்; இடைவிடாது புகுதலுமாம். அவ்வவ்வுயிர்களின் இயல்புக்கு ஏற்பப் பலகுணங்களை அவைகளினிடமாக விளங்கச் செய்தல். அஃதாவது பூவின்கண் நிறமாக, மணமாக, சுவையாக விளங்குதல் போல்வன என்பாருமுளர்.

எண்ணில் பல்குணம்: உயிர்கள் பலவாகவே அவற்றிற்கு ஏற்ப ஆட்கொள்ளும் இறைவனும் பலகுணத்தினனாக விளங்குவன் என்பதாம். ஆயினும் அவையனைத்தும் எட்டுக் குணங்களிலே அடங்கும் ஆதலின் 'எண் குணத்தினனை' என்றும் 'எட்டுவான் குணத்தீசன்' என்றும் திருமுறைகள் தெரிவிப்பவாயின. குணம் எட்டாயினும் அவற்றின் பரப்பும் அளவும் உயிர்களான் எட்டுணையும் அறிதல் கூடாதன ஆதலின் இங்ஙனம் கூறினார் எனலுமாம்.

மண் - மண்ணுலகு. விண் - சுவர்க்கம். வானோர் உலகு - அயன் மால் முதலிய தேவருலகு. இவை ஆங்காங்கு உள்ளவர்களை ஆகுபெயரான் உணர்த்தின. அவ்வவ்வுலகங்களில் உயிர்களுக்கு உணர்வைப் படைத்தும், இம்மூவகை உலகத்து உயிர்களும் பரிபாக விசேடத்தால் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூன்று வகைப்படுவர். ஆதலின் இறைவனும் முறையே குருவாயும், நேர்நின்றும், மனத்தில் அறிவாயும் எழுந்தருளி ஞானத்தை அருளுவன். உயிர்கள் பரிபாகமுறுவாயின் மலத்தில் ஒடுக்குமிடத்தும், பற்றற்றுப் பரிபாகமுறுமாயின் திருவடிக்கண் சேர்க்குமிடத்தும் தோற்றிய கல்வியை அழித்தலின் 'அழித்தும்' என்றும் கூறினார்.

என்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும் 10

இ - ள்: அடியேனுடைய அறியாமையாகிய இருளை முழுவதூஉம் நீக்கியும், அடியார்கள் சிந்தையிலே அன்பு மிக அதனால் அதனையே இடமாகக்கொண்டு நீங்காது எழுந்தருளியிருக்கின்ற கொள்கையும், அதனால் விளைந்த சிறப்பும், நிலைபெற்ற பெரிய மகேந்திரமலையில், ஏற்கனவே திருவாய்மலர்ந்தருளிய ஆகமங்களைத் தோற்றுவித்தும் என்றவாறு.

இருள் - அறியாமை. அதற்குக் காரணமான ஆணவத்தை உணர்த்திற்று. ஏறத்துரந்தும் - முற்றத்துரந்தும். அங்ஙனம் கல்வி தோற்றியும் அழித்தும் எனக்குப் பரிபாகம் ஏற்படாமை யால் என் அறியாமையைத் தன் பெருங்கருணையால் முழுதும் நீக்கினன் என்பார் 'என்னுடை இருளை ஏறத்துரந்தும்' என்று அருளினர்.

அன்பு மீதுர அடியார் உள்ளத்துக் குடியாக்கொண்ட கொள்கையும் சிறப்பும் எனக் கூட்டுக. பத்திவலையிற் படுவோ னதலின் அன்பு சுரக்க அதில் அகப்பட்டு அடியார் உள்ளத் தையே குடியாகக்கொண்ட உறுதியும் அதனாலே விளைந்த தலைமையாகிய சிறப்பும் என்பதாம்.

பேருழிமுடிந்து புனருற்பவஞ் செய்கின்றகாலத்தில் வேதா கமங்களை இறைவன் விந்துவில் உண்டாக்கினலும், குருவடி வாகவந்து உணர்த்தினல் அன்றிச் சுத்தான்மாக்களும் தானக உணரமாட்டா ஆகையால் மகேந்திர பருவதத்தில் குருவாக எழுந்தருளி விளங்கச்செய்தார் என்பதாம்.

மகேந்திரம் - கன்னியாகுமரிக்கு அருகிலுள்ள சுசீந்தரம் என்பாரும், கஞ்சநாட்டிலே பிருகாம்பூருக்குத் தென்மேற்கில் முப்பத்திரண்டு கல் தொலைவில் உள்ளதென்பாரும் உளர்.

*கல்லா டத்துக் கலந்தினி தருளி*
*நல்லா ளோடு நயப்புற வெய்தியும்*

இ - ள் : கல்லாடம் என்னும் தலத்தில் கலந்து இனிதாக எழுந்தருளி, உமையம்மையாரோடு இன்பம் எய்தியும் என்றவாறு.

நல்லாள் - உமையம்மை. முன்பு சொன்ன ஆகமங்களை உமையம்மையோடு கல்லாடத்திலிருந்து அடியார்கட்கு உபதே சித்தும் என்று கூறுகிறது பழைய உரை.

*பஞ்சப் பள்ளியில் பான்மொழி தன்னொடும்*
*எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்*

இ - ள் : பஞ்சப்பள்ளி என்னும் தலத்தில் பால்போலும் மொழி யினையுடையாளாகிய உமாதேவியாரோடு என்றும் எழுந்தருளி யிருந்து, குறையாது செறிந்த திருவருளைச்செய்தும் என்றவாறு.

உயிர்களின் தராதரம் நோக்காது எங்கும் செறிந்திருப்பது திருவருளுக்கியல்பு என்பார் 'எஞ்சாது ஈண்டும் இன்னருள்'

என்றார். பஞ்சப்பள்ளி ஓரூர். இவ்வூர் எங்குள்ளது என்பது அறியக்கூடவில்லை. பஞ்சப்பள்ளி - ஐவகையமளி என்பாரும் உளர். உமாதேவியாரோடு போகியாயிருந்து உயிர்களுக்குப் போகத்தை உதவுதலைக் குறித்தது என்பர் அவர்.

பஞ்சப்பள்ளி - பஞ்சஹள்ளியென வழங்கும் கன்னடநாட்டில் விளங்கும் தலம். அங்கே இறைவன் உமாமகேஸ்வரர் என்ற திருநாமத்துடன் விளங்குகிறார். அதனைக் குறிப்பதும் ஆம்.

*கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்* 15
*விராவு கொங்கை நற்றடம் படிந்தும்*

இ - ள்: வேடவடிவம் தாங்கி முள்முருக்கமலர்போலச் சிவந்த திருவாயினையுடைய உமாதேவியாரின் ஒன்றோடு ஒன்று நெருங்கியுள்ள நல்ல முலைத்தடங்களில் தோய்ந்தும் என்றவாறு.

விராவுதல் - கலத்தல். தடம் - பரந்த இடம். கிஞ்சுகம் - செம்முருக்கம்பூ. இது, அருச்சுனன் பாசுபதாஸ்திரம் வாங்குவதற்காகத் தவஞ்செய்தபோது, அவனது தவச்சிறப்பையும் மன உறுதியையும் உலகினருக்கு உணர்த்தப் பரமசிவன் வேடவடிவம் கொண்டு, உமையவள் வேட்டுவப் பெண்ணாகிப் பின் தொடர, இமயமலைக் காட்டில் எழுந்தருளி, அருச்சுனன் தவத்தைக் கலைக்கவந்த பன்றியைத் துரத்தி வந்தார். இருவரும் அதனை எய்ய, அம்புபட்டிறந்த அப்பன்றி காரணமாக அருச்சுனனுக்கும் வேடனாய் வந்த பெருமானுக்கும் பெரும்போர் மூண்டது. இப்போரில் அருச்சுனனை ஓரம்பினால் வானத்துத் தூக்கிவீசி, அவனது உறுதி கண்டு அவனுக்குப் படைக்கலம் அருள்செய்தார் என்பது பாரத வரலாறு.

*கேவேட ராகிக் கெளிறது படுத்தும்*
*மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்*

இ - ள்: வலைஞனாகிக் கெளிறு என்னும் மீனைக்கொன்று, பெரிய ஏட்டில் எழுதப்பெற்றுள்ளதாகிய ஆகமங்களைப் பெற்றும் என்றவாறு.

உமையம்மையார் சிவபெருமானது சாபத்தால் பாண்டிய நாட்டில் ஒரு வலைஞனின் மகளாக அவதரித்தார். நந்திதேவர் சுறுமீனாகத் தோன்றினார். சிவபெருமான் வலைஞர் காளையாகத் தோன்றி, சுறுமீனைப் பிடித்துக் கொன்று, அவர் சுமந்துவந்த ஆகமங்களை மீட்டு, உமையம்மையாரையும் மணந்து அருள்

செய்தார். இது வலைவீசிய திருவிளையாடற்புராண வரலாறு. படுத்தும் - கொன்றும். மா ஏட்டு ஆகிய ஆகமம் - பெரிய ஏட்டின்கண் எழுதப்பெற்றதாகிய ஆகமம்.

*மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்(து)*
*உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்* 20

இ - ள்: மேலும், அவ்வாகமங்களை மகேந்திரமலைமீது தாம் எழுந்தருளியிருந்து, பொருந்திய ஐந்துமுகங்களாலும் மக்களுக்குக் கட்டளையிட்டருளியும் என்றவாறு.

மற்றும் என்பது ஆகமங்களை மீட்டுக் கொடுத்ததன்றியும் விரித்து உரைத்தும் எனக் கீழ்நிகழ்ச்சியைத் தழுவி நின்றது. ஐம்முகம் - ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்பன. இவை சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்கள். இவைகளில் எந்தெந்த முகத்திலிருந்து எவ்வெவ் வாகமங்கள் தோற்றினவோ அம்முறை பிழையாது அம்மையா ருக்கும் அடியார்களுக்கும் உபதேசித்தும் என்பதாம்.

*நந்தம் பாடியின் நான்மறை யோனாய்*
*அந்தமில் ஆரிய னாயமர்ந் தருளியும்*

இ - ள்: நந்தம்பாடி என்னும் தலத்தில் நான்கு வேதங் களையும் ஓதிய அத்தண வேடங்கொண்டு, எல்லையற்ற கருணையால் குருவாக எழுந்தருளியும் என்றவாறு.

நமது திருப்பெருந்துறையாகிய பாடிவீட்டிலே எனலும் ஆம். இது மலப்பகையைப் போக்க, குருநாதன் பாடி அமைத்த இடமாதல் தெளிக. ஆரியன் - மேலோன்; என்றது குரு மூர்த்தியை.

*வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்*
*நூறுநூ றாயிரம் இயல்பின தாகி*
*ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்* 25
*கூறுடை மங்கையும் தானும்வந் தருளி*

இ - ள்: பல வேறுவகையான உருவத்தையும் இயல்புகளை யுந்தாங்கி, பல நூறாயிரம் இயல்புகளையுடைய பொருள்களும் ஆகி, இடபவாகனத்தையுடைய இறைவன் இப்பூமியை உய்விக்கத் திரு வுள்ளங்கொண்டு, தனது மேனியில் ஒரு கூறாகிய உமாதேவியும் தானுமாக எழுந்தருளி என்றவாறு.

என்றது சிவபெருமான் இவ்வுலகம் உய்வதற்காக அம்மையப்பராக விடையின்மேல் எழுந்தருளின எளிமையைக் காட்டிற்று. ஏறு - அறமே வடிவான இடபம்.

*குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்*
*சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்*

இ - ள்: குதிரைகளை வாணிகத்திற்காகக்கொண்டு குடநாட்டில், சாமர்த்தியமாக வணிகக்கூட்டத்துள் ஒருவராய்த் தான் எழுந்தருளிவந்தும் என்றவாறு.

வாதவூரடிகட்காகக் குதிரைகளை ஓட்டிக்கொண்டு, குதிரை வாணிகராக இறைவன் எழுந்தருளிய வரலாற்றை நினைவூட்டுவது இப்பகுதி. குடநாடு - மேல்கடற்கரை நாடு. திருப்பெருந்துறைக்கு மதுரை மேற்கேயுள்ளதாதலின் அதனைக் குடநாடு என்றார் எனலுமாம். சதுர் - சாதுர்யம் அல்லது சாமர்த்தியம். சாத்து - வாணிகர் கூட்டம்.

*வேலம் புத்தூர் விட்டே றருளிக்*
*கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்* 30

இ - ள்: வேலம்புத்தூர் என்னும் தலத்தில் உக்கிரகுமார பாண்டியனுகவந்த முருகப்பெருமானுக்குவேலைக்கொடுத்து அழகிய வடிவைக்காட்டிய கொள்கையும் என்றவாறு.

இது உக்கிர்குமார பாண்டியனுக்கு வேல் வளை செண்டு உதவிய திருவிளையாடற்புராணவரலாற்றைக் குறிப்பது. வேல் அருளியதால் இந்தத் தலம் வேலம்புத்தூர் என வழங்கிற்றுப் போலும். விட்டேறு - வேல். திருவேலம்புத்தூர் என்னும் இத்தலத்திலே சிவனடியார் ஒருவருக்குப் பிரத்தியட்சமாக விடையின் அடிதோன்ற நடந்துகாட்டிய திருவருட்காட்சியைக் குறிப்பது என்பர் பழையவுரைகாரர்.

*தர்ப்பண மதனில் சாந்தம் புத்தூர்*
*விற்பொரு வேடற் கீந்த விளைவும்*

இ - ள்: சாந்தம்புத்தூர் என்னும் தலத்தில், வில்லால் சண்டையிடுந்தொழிலையுடைய வேடனுக்காகக் கண்ணுடியில் வாள் முதலிய படைக்கலங்களைப் படைத்துக்கொடுத்த பண்பும் எ-று.

சாந்தம்புத்தூர் என்னுந்தலத்தில் வேடன் ஒருவன் இறைவனை நோக்கித் தவஞ்செய்ய, இறைவன் வேடன் விரும்பிய வில், வாள், சூலம் முதலிய ஆயுதங்களைக் கண்ணுடியிலிருந்து

தோற்றுவித்து உதவினர் என்பது வரலாறு. தர்ப்பணம் - கண்ணடி.

சாந்தம்புத்தூரில் வேடர்களுக்குத் திலதர்ப்பண முதலான தீட்சா அந்தரட்சையான வேதாகமப்பொருளை அனுக்கிரகம் செய்தார் என்று வரலாறு கூறும் பழையவுரை. தர்ப்பணம் என்பதற்குத் திலதர்ப்பணம் எனப் பொருள்கொண்டது இவ் வுரை. திலதர்ப்பணமாவது எள்ளும் நீரும் இறைத்தல்.

மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்

இ - ள் : அருளிய முழுத்தழல் மேனியைக் கொள்ளுப்பையில் உண்மையாகக் காட்டிய பழமையும் என்றவாறு.

மொக்கணி என்பது குதிரைக்குக் கொள்ளுக்கட்டும் பை. கோட்டூரில் சிவபூசைசெய்த பின்னரே உணவுண்பது என்னும் விரதம் பூண்ட வணிகன் ஒருவனிருந்தான். ஒருநாள் அவன் நீராடிச் சிவபூசைக்குவர அவன் மைத்துனனொருவன் அவனைப் பரிகசிப்பதற்காகக் கொள்ளுப்பை நிறைய மணலைச்சொரிந்து ஓர் இருண்ட அறையில் நட்டுவைத்து மாலை முதலியன சாத்தி வைத்தான். வணிகன் சிவலிங்கம் என்றே வழிபட்டுப் பின்னர் உண்டனன். மைத்துனன் கொள்ளுப்பைக்குக் கும்பிடுபோட் டீரா? என்று பரிகசித்தான். அப்பையை எடுக்க முயன்றான். பை உண்மையாகவே சிவலிங்கமாக வேரூன்றிவிட்டது.

'ஏத்து சிவபத்தி யானொரு செட்டிமு னீசுரனைத்
தோய்த்து முழுகித் தொழவெழ வாங்கொரு சூழ்ச்சிகற்றோன்
பூத்த வணக்குடக் கோட்டூரில் மொக்கணி யைப்புதைக்க
வாய்த்த சிவலிங்க மானது வுங்கொங்கு மண்டலமே'

என்பது கொங்குமண்டல சதகச் செய்யுள்.

சொக்கது - உண்மையானது. சொக்கத் தங்கம் என்பது போல, சொக்கு உண்மை என்னும் பொருளில் வந்தது. அழகு எனினுமாம்.

மொக்கணி அருளிய - குதிரைக்குக் கொள்ளுப்பையை உதவிய முழுத்தழல் போலும் மேனியைச் சொக்கலிங்கமாகக் காட்டிய பழைமையும் என்பது பொருளாம்.

கழுவிய பயறும் கொள்ளும் கடலையும் துவரையோடு முழு வதும் சிறக்கவிட்டே மொக்கணி முட்டக்கட்டி, குதிரைவீரனுக

எழுந்தருளினன் என நம்பி திருவிளையாடல் கூறுவதால் சிவ பெருமான் தன் தழல்போலும் மேனியை அழகிய குதிரை வீர னுகக்காட்டிய வரலாற்றை விளக்குவது எனலுமாம்.

பாண்டிய மன்னனுக்குக் குதிரை மாறியகாலத்து, குதி ரைக்குக் கொள்ளுக்கட்ட இறைவன் தன் மேனியைச் சோதிப் பிழம்பாகக் காட்டினன் என்பர் ஒருரைகாரர். இவ்வரலாற்றிற்கு ஆதாரம் யாதோ அறிகின்றிலம்.

*அரியொடு பிரமற் களவறி யொண்ணுன்* 35
*நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்*

இ - ள்: திருமாலுக்கும், பிரமனுக்கும் அளவு அறியமுடியாத பெருமான், நரிகளைக் குதிரைகளாக்கிய நன்மையும் என்றவாறு.

அரி பிரமன் இவர்கள் பதவிகளிலிருக்கும் சகலான்மாக்கள் ஆதலின் இவர்களால் இறைவன் அளவு அறியப்படாதவன் ஆயினன். இப்பகுதி மாணிக்கவாசகருக்காக நரிகளைக் குதிரை களாக்கி ஆவணிமூலத் திருநாளில் அரிமர்த்தன பாண்டியன் அரண்மனைக்குக் கொண்டுவந்த வரலாற்றைக் குறிப்பது. இது நரி பரியாக்கிய திருவிளையாடல் வரலாறு.

அரிமர்த்தன பாண்டியனுக்கு வாதவூரர் சொன்ன நாள் தவருமல் நரிகளைக் குதிரைகள் ஆக்கி வாதவூரருக்கு நன்மை செய்ததால் 'நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்' என்ருர். "நரியைக் குதிரை செய்வானும் நரகரைத் தேவு செய்வானும்" என்னும் அப்பர்வாக்கும் எண்ணுக.

*ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி*
*பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்(று)*
*ஈண்டு கனகம் இசையப் பெருஅ(து)*
*ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்* 40
*தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்*

இ - ள்: அடியேனை ஆட்கொண்டருள்வதற்காகவே அழகிய திருவடிக்கண் சிவபெருமான், அரிமர்த்தனபாண்டியனுக்குக் குதிரை களை விற்று, அவன் கொடுத்த விலையின் மிக்க பொன்னை விரும்பி ஏற்காமல் ஆண்ட பரம்பொருளாகிய எமது தலைவன் காட்டிய அருள்வழியே அடியேன் இருப்ப, தூண்டிவிடப்பெற்ற சோதிவடி வாகிய இறைவன் காட்சியளித்த பழமையும் என்றவாறு.

இது. நரிகளைப் பரிகளாக்கிப் பாண்டியனிடம் விற்றபிறகு அவன் கொடுத்த அதிகப் பொன்களைப் பெற்றுக்கொள்ளாமல்

குதிரை வாணிகனாகவந்த இறைவனுடைய அருளின்வண்ணம் தான் ஓர் மருங்கு இருப்ப, அவ்விடத்துச் சோதிவடிவாய்த் தனக்குக் காட்சிகொடுத்த வரலாற்றைக் குறிப்பது. ஈண்டு - மிக்க. கனகம் - பொன். விலைக்கு மேலாக அரசன் அளித்த சன்மானமாகிய பொன் என்க.

*அந்தண னாகி யாண்டுகொண் டருளி*
*இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்*

இ - ள்: அந்தண வடிவுதாங்கி அடியேனை ஆட்கொண்டு இந்திரஜாலம் காட்டிய இயல்பும் என்றவாறு.

இந்திரஜாலம் - மாயவித்தைகள். விச்சதின்றியே விளைவு செய்தலும், வைச்சு வாங்கலும் போல்வன. இவற்றை, எல்லாம் வல்ல சித்தராகி இந்திரசாலம்காட்டிய வரலாற்றால் அறிக.

*மதுரைப் பெருநன் மாநக ரிருந்து*
*குதிரைச் சேவக னாகிய கொள்கையும்* 45

இ - ள்: மதுரையாகிய பெரிய நல்ல சிறந்த நகரிலிருந்து குதிரைவீரனாகிய கொள்கையும் என்றவாறு.

சேவகன் - வீரன். பாண்டியனின் கண்காணப் பரிமேலழக ராக வீற்றிருந்து குதிரை நடத்திக்காட்டி அரசனை மகிழ்வித்த கொள்கையும் என்க.

*ஆங்கது தன்னில் அடியவட் காகப்*
*பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்*

இ - ள்: அந்த மதுரைமா நகரிலேயே அதனைக்காட்டிலும், அடியவளாகிய வந்தியென்னும் பிட்டு வாணிச்சிக்காக அழகாக மண்சுமந்த தன்மையும் என்றவாறு.

பாங்கு - அழகு. பரிசு - தன்மை. பிட்டுக்கு மண்சுமந்த வரலாற்றைக் குறிப்பது.

ஆங்கு - குதிரையாள் ஆனது போலவே, அது தன்னில் - மதுரையில் என்றுரைப்பாரும் உளர். மந்திரியாகி மாணவ னாகிய ஆணைவழி ஆலயம் எடுத்த அடிகளார்க்குக் குதிரைச் சேவகனை அதுதன்னிலும் அங்கேயே ஒரு பொருளுமாகாத வந்திக்கு ஆளானது சிறப்புடைமையின் சிறந்தது கொள்க.

*உத்தர கோச மங்கையு ளிருந்து*
*வித்தக வேடம் காட்டிய இயல்பும்*

இ - ள் : உத்தரகோசமங்கை என்னும் தலத்துள் எழுந்தருளி யிருந்து ஞானத்திருவுருவாகிய குருவேடத்தைக் காட்டிய இயல்பும் என்றவாறு.

வித்தகம் - ஞானம். வித்தக வேடம் - புகழ்மிக்கவேடம் என லுமாம். உத்தரகோசமங்கையில் அம்மை இறைவனை நோக்கித் தவம்புரிந்து 'இறைவா! முன் கடலில் எறிந்து மீட்ட சிவாகம கோசங்களை அடியேற்கு உபதேசித்தருளவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார். அப்போது இறைவன் அம்மைக்கும், அங்கு அருந்தவம்புரிந்த அறுபத்துநான்கு முனிவர்களுக்கும் குருநாதனுகத் தோன்றி ஆகமங்களை உபதேசித்தார். இதனை,

'அருந்தவம் புரியா முன்ன ரறுபத்து நால்வ ரங்கட்
பொருந்தல்கண் டெமக்கும் ஞானம் புகன்றுருக் காட்டென்றேத்தத்
திருந்துப தேச நோக்காற் செய்துமா முனிவ ருய்யப்
பெரும்பொருள் உரைத்தான் மன்றற் பேதையோ டுருவங் காட்டி'

என்னும் நம்பி திருவிளையாடற்செய்யுள் விளக்கும். அன்றியும் வாதவூரண்ணலுக்கே இறைவன் குருவாக வெளிப்பட்டுத் தோன்றித் திருநீறு அளித்தார் என்பதும்,

' தன்னீறு எனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை '

என்ற திருவாசகத்தால் (329) அறியப்பெறும்.

*பூவண மதனில் பொலிந்திருந் தருளித்* 50
*தூவண மேனி காட்டிய தொன்மையும்*

இ - ள் : திருப்பூவணம் என்னுந்தலத்தில் விளங்கி எழுந் தருளியிருந்து பொன்னனையாளுக்கு இனிமையாக அருள்செய்து, தூய்மையான நிறம்பொருந்திய திருமேனியைக்காட்டிய பழமையும் என்றவாறு.

தூவண மேனி - களிம்பேறாத தூய்மையான நிறம்பொருந் திய பொன்மேனி. பூவணம் - திருப்பூவணம் என்னும் தலம். இது மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு நாழிகைத் தூரத்தில் உள்ளது.

பூவணத்தில் பொன்னனையாள் என்ற ஒருபெண்மணி சிவ பெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் அளவுகடந்த பற்று உடையவளாகச் சிவனடியார்க்குத் திருவமுதூட்டி மகிழ்ந்து வந்தாள். அவ்வம்மையாருக்குச் சிவபெருமானுடைய திருவுரு வையும் பொன்னால் செய்துவைத்து வழிபடவேண்டும் என்ற

விருப்புண்டாயிற்று. ஆனால், அதற்கேற்ற பொன் தன்னிடம் இல்லாமையால் பெரிதும் மனம் கவன்றாள். அவள் குறையைத் திருவுளங்கொண்ட கருணைக்கடலாகிய பெருமான் சித்தராக எழுந்தருளி, அவளைப் பார்த்து, 'உன் வீட்டிலுள்ள இரும்புத் தட்டுமுட்டுக்களை இங்கே கொண்டுவா' என்று ஆணைதந்தார். அவள் அங்ஙனமே கொண்டுவந்து குவித்தாள். சித்தநாதர் அவற்றை மருந்துக்கையால் தீண்டிப் பொன்னாக்கித் தந்து, 'உன் விருப்பப்படி திருவுருச்சமைத்து வழிபாடுசெய்க' என்று ஆணைதந்தார். அவளும் அவ்வாறே உருச்செய்து வைத்து வழிபட்டாள். இவ்வரலாறே இவ்வடிகளில் குறிக்கப்பெறுவன. இதனை இரசவாதம் செய்த திருவிளையாடலிற் காண்க.

*வாத வூரினில் வந்தினி தருளிப்*
*பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்*

இ - ள்: திருவாதவூர் என்னுந்தலத்தில் வந்து இனிதருளி, திருவடிக்கண் அணிந்திருக்கின்ற சிலம்பினது ஒலியைக் காட்டிய பண்பும் என்றவாறு.

சிலம்பு - வேதச்சிலம்பு. அதன் ஒலி - பரநாத ஒலி.

குறித்தநாளில் குதிரை வாராமைகண்டு பாண்டியன் அடிகளாரை வருத்த, அவர் குதிரைவரும் வழியை எதிர்கொண்டு செல்லத் திருவாதவூரில் இறைவன் அடிகளாருக்குத் திருவடிச் சிலம்பை ஒலித்து அவ்வொலியைக் கேட்பித்தார் என்னும் நரி பரியான திருவிளையாடல் வரலாற்றைக் குறிப்பன இவ்வடிகள்.

*திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்*
*கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்* 55

இ - ள்: திருப்பெருந்துறையில் எழுந்தருளிய செல்வன் ஆகி, எல்லாச்சோதிகளுக்கும் கருவாகிய சோதியுள் மறைந்த கள்ளத்தனமும் என்றவாறு.

கரு வார் சோதி - எல்லாச்சோதிகளும் எந்தச் சோதியைப் பிறப்பிடமாகக்கொண்டு பிறக்கின்றனவோ அதுவே கருவார் சோதி. அதாவது விந்துசத்தி கருவினுள் ஒளித்தசோதி என்பர் பழைய உரைகாரர். பரமாணு வடிவான சோதி எனலுமாம். கரு - பரமாணு என்னும் பொருள்தருதலைக் 'கருவளர் வானத் திசையிற்றோன்றி' என்னும் பரிபாடற்பகுதிக்குப் பரிமேலழகர் எழுதிய உரையானும் உணர்க. பிறவிக்கருவை ஆர்கின்ற அதாவது உண்கின்ற சோதி எனலுமாம்.

இவ்வடிகள், குருந்தடியில் சிவகுருநாதனாக எழுந்தருளி உபதேசித்து அடியார் கூட்டத்தோடு குளத்தில் தோன்றிப் பேரொளியில் மறைந்த வரலாற்றைக் குறிப்பன. கள்ளர் இருளில் மறைவர்; தேவரீர் ஒளியில் மறைந்தீர் ஆதலின் உமது கள்ளம் பெரிதென வியந்து கூறியதாம்.

*பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்*
*பாவ நாச மாக்கிய பரிசும்*

இ - ள் : பூவலம் என்னும் தலத்துள் விளங்கி எழுந்தருளி, பாவங்கள் அனைத்தையும் நாசஞ்செய்த தன்மையும் என்றவாறு.

பூவலம் என்பதனைப் பூவலயம் என்பதன் மரூஉவாகக் கொண்டு, பூமண்டலத்தில் பொலிந்து இனிதாக எழுந்தருளியிருந்து ஆங்காங்குள்ள மக்களின் பாவங்கள் அனைத்தையும் அழித்த தன்மையும் எனினுமாம். பூவலம் என ஒரு திருத்தலம் இன்மையும் இதனை வலியுறுத்தும்.

*தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து*
*நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்*

இ - ள் : தண்ணீர்ப்பந்தரை வெற்றியுண்டாக வைத்து, நல்ல நீர்மையுடைய வீரனான நன்மையும் என்றவாறு.

ஆன்மாக்களுக்குப் பிறவிக்கிலேசத்தாகம் தீரத் திருவடி நீழலாகிய பந்தரை அமைத்து, சிவஞான நீரைப் பருகத்தந்த நல்ல வீரனான நன்மையும் எனலுமாம்.

முன்னொருகாலத்து ஒருபாண்டியன் சிவபெருமானிடத்து நீங்காத பேரன்புபூண்டு, பாண்டியநாட்டை ஆண்டுவந்தான். அக்காலத்துச் சோழநாட்டையாண்ட ஒரு சோழன் அவனது சிவபத்தியையும் ஆட்சித்திறத்தையும் கேள்வியுற்று, தக்காரை அனுப்பித் தன் மகளை மணம்புரிந்துகொள்ள வேண்டினான். பாண்டியனும் ஒப்பினான். அந்நிலையில் அப்பாண்டியன் தம்பி, சோழநாட்டின்மீது படையெடுத்து, 'நின்மகளை எனக்குத் தா; தாராயேல் என்னுடன் சண்டைக்கு வா' என்று வெருட்டினான். சோழன் அவனுக்கே தன் மகளை மணம்புரிந்துகொடுத்தான்; அரசாண்டு வந்தான். அப்போது ஆரிய அரசன் ஒருவனை வெல்லும்பொருட்டுத் தன் மருமகனோடும் படையெடுத்துச் சென்று வென்று வந்தான். இந்த வெற்றியினால் செருக்கிய பாண்டியன் தம்பி, தமையனையும் வென்று பாண்டியநாட்டைக் கைப்பற்ற எண்ணி, தன்மாமனாகிய சோழனையும் துணையாகக்

கொண்டு பாண்டியநாட்டின்மீது படையெடுத்து வந்தான். இதனை உணர்ந்த பாண்டியன் சொக்கலிங்கப்பெருமானிடம் முறையிட்டு வருந்தினன். இறைவன் 'மன்னா! நீ வருந்தாதே போரிடு; ஆவன செய்வோம்' என்று அறிவித்தனர். அரசன் சண்டை செய்தான். அப்பொழுது கடுங்கோடை. வெப்பம் தாங்காது சோழன் படையும், அவனது மருகன் படையும் நா வறண்டு மடிந்தன. பாண்டியன்படைக்கு யாரோ ஒருவர் வைத்திருந்த தண்ணீர்ப்பந்தலில் நறுமணம் உள்ள நல்ல தண்ணீர் உண்ணக்கிடைத்தது. அதனால் எதிரியை வென்று அவ்விருவரையும் பாண்டியன்படை சிறைபிடித்துத் திரும்பும் போது பந்தரையுங்காணவில்லை. வைத்தவரும் இலர். இதனை உணர்ந்த பாண்டியன் இறைவன்திருவருளே என்று வியந்து மகிழ்ந்தான். இந்த வரலாற்றைத் தண்ணீர்ப்பந்தல் வைத்த திருவிளையாடலில் காண்க.

*விருந்தின னாகி வெண்கா டதனில் 60*
*குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்*

*இ - ள் :* திருவெண்காட்டில் ஒருவிருந்தினராக எழுந்தருளிக் குருந்தமரத்தடியில் வீற்றிருந்தருளிய கொள்கையும் என்றவாறு.

*பட்ட மங்கையில் பாங்கா யிருந்தங்(கு)*
*அட்டமா சித்தி அருளிய அதுவும்*

*இ - ள் :* பட்டமங்கை என்னும் தலத்தில் அழகுடன் எழுந் தருளி, அங்கு அட்டமாசித்திகளை இயக்கமாதர் அறுவர்க்கு அருளிய தன்மையும் என்றவாறு.

இறைவன் திருக்கயிலைமலையிலிருந்து இயக்கமாதர் அறு வர்க்கு அவர்கள் வேண்டுகோளின் வண்ணம் அட்டமாசித்தி களை உபதேசித்தார். அவர்கள் நடுவிலே சிறிது பராமுகமாக இருந்தனர். அதுகண்ட இறைவன் 'நீங்கள் பட்டமங்கையில் கல்லாகுக' எனச் சபித்தனர். அவர்கள் வருந்தி மன்னிப்பு வேண்ட, இறைவனே பின் பலநாள் கழித்து அங்கு எழுந்தருளி அவர்களை இயக்கமாதராக்கி, அட்டமாசித்திகளையும் ஆலடியில் குருவாக எழுந்தருளி உபதேசித்தனர் என்ற வரலாறு இவ்வடி களால் உணர்த்தப்பெறுகின்றது. இவ்வரலாற்றை அட்டமா சித்தி உபதேசித்த திருவிளையாடலில் காணலாம்.

பாங்காயிருந்து - இயக்கமாதர்க்குக் கருணைசெய்யும் திரு வுளத்தோடு இருந்து. அட்டமாசித்திகள் - அணிமா, மகிமா,

கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பன. இவற்றைத் திருமந்திரம் நாலாந்தந்திரத்தானும் உணரலாம்.

> வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
> காடது தன்னில் கரந்த கள்ளமும் 65

இ - ள்: வேடனாகத் தாம் விரும்பிய உருவம் கொண்டு, காட்டில் மறைந்த கள்ளமும் என்றவாறு.

இறைவன் நித்திய சுதந்திரன் ஆதலின் அவன்கொள்ளும் வடிவங்களெல்லாம் அவனாகவே விரும்பி மேற்கொண்டவையாகலின் 'வேண்டுருக்கொண்டு' என்றார்.

முன்னொருகாலத்தில் சோழமன்னன் ஒருவன் செருக்கித் திக்கு விசயம் செய்துவந்தான். பாண்டிய நாட்டின்மீதும் படையெடுத்தான். பாண்டியன் தனக்குப் படைபலம் இன்மையால் சொக்கலிங்கப்பெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டான். பெருமான் 'இருக்கின்ற படையோடு நீ சென்று இளைக்காமல் சண்டையிடு; உலகம் வியக்கத்தகும் வெற்றி உனக்கேயாம்' என்று வாய்ச்சொல் தோற்றுவித்தார். பாண்டியன் அதனையே நம்பிச்சென்று சண்டையிட, சோழன் பெரும்படை தோற்றது. பின்பு சோழனே பாண்டியனை எதிர்க்க, பாண்டியன் பயந்து சொக்கலிங்கப்பெருமானைத் தியானித்து எதிர்த்துப் போரிடும் வேளையில், ஒரு வேடன் குதிரைமீது வந்து பாண்டியனைப் பின்தள்ளி முன்னேறிச் சோழனோடு பொருதான். சோழன் 'நின்னைக் குதிரையோடும் பிடிப்பேன்' என்று வஞ்சினம் கூற, அதற்குப் பயந்து ஓடுவான்போல வேடன் மதுரை நோக்கி ஓடினான். சோழன் பின்தொடர்ந்து ஓட, வேடன் ஒரு மடுவில் விழுந்து மறைய, சோழனும் வந்தவேகத்தில் அதில் விழுந்து இறந்தான். பாண்டியன் நல்லவேளையில் வேடவுருவாகவந்து தன்னைக் காத்தவர் சொக்கலிங்கப்பெருமானே என்று அறிந்து விம்மிதமுற்றான். இவ்வரலாற்றைச் சோழனை மடுவில்வீழ்த்திய திருவிளையாடலில் காண்க.

> மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
> தக்கா னொருவ னாகிய தன்மையும்

இ - ள்: தாம் விரும்பிய வடிவத்தைக்கொண்டு மெய்க்காட்டிட்டுத் தக்க பெரியவன் ஒருவனாகிய தன்மையும் என்றவாறு.

மெய்க்காட்டு - ஆளாக எண்ணப்படுதல். தொழும்பு செய்வாரை எண்ணிக் கணக்கிடுதலுக்கு மெய்க்காட்டு என்று

பெயர். தக்கான் ஒருவன் உருக்கொண்டு மெய்க்காட்டிட்டு ஆகிய தன்மை எனக்கூட்டிப் பொருள்கொள்ளுதலுமாம்.

பண்டைய நாளில் பாண்டியமன்னற்குச் சுந்தரசாமந்தன் என்னும் படைத்தலைவன் ஒருவனிருந்தான். அவன் அடியார் பத்தியும் சிவபுத்தியும் மிக்கவன். அக்காலத்தில் சேதிபர்கோன் என்னும் வேட்டுவ அரசன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வந்தான். இதனை அறிந்த பாண்டியன் திடுக்கிட்டுப் படைத்தலைவனை அழைத்துப் 'பெரும்படை தொகுக்க' எனப் பெரும்பொருள் கொடுத்து அனுப்பினான். அப்படைத்தலைவன் அந்தப் பொருளைக்கொண்டு சிவனடியார்களுக்குத் திருவமுது ஊட்டிவந்தான். ஆறுமாதகாலம் சென்றும் படைவராமையால் அரசன் தலைவன்பால் வெகுண்டு 'எங்ஙனமாயினும் நாளையே நாம் படைகளைப் பார்க்கவேண்டும்; கொண்டுவந்து காட்டுக' என்று ஆணையிட்டான். படைத்தலைவன் சோமசுந்தரக்கடவுளிடம் விண்ணப்பித்துக்கொண்டான். அவன் விரும்பியவண்ணம் உயர்ந்தபடைத்தலைவன் நடத்தப் பெரும்படை மதுரைக்கு வெளியே வந்துசேர்ந்தது. கண்ட அரசன் அவற்றைஎண்ணிப் பார்த்து மகிழும்போது ஒரு ஒற்றன் ஓடிவந்து சேதிபர்கோன் ஒரு சிங்கத்தால் கொல்லப்பட்டான் என்றுகூற, அப்படைகளும் அதன் தலைவனும் கணப்பொழுதில் மறைந்தனர். பாண்டியன் சொக்கலிங்கப்பெருமான் திருவருளை வியந்து பாராட்டினான் என்பது இப்பகுதியில் அடங்கியுள்ளது. இது மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

> ஓரி யூரின் உகந்தினி தருளிப்
> பாரிரும் பாலக னாகிய பரிசும்

இ - ள்: ஓரியூர் என்னும் தலத்தில் உள்ளம் உவந்து எழுந்தருளியிருந்து பூமியில் பெரிய பாலனானதன்மையும் என்றவாறு.

ஓரியூரில் ஒரு சைவ அந்தணர் தன் பெண்ணை வைணவ இளைஞன் ஒருவனுக்கு மணம் செய்து கொடுத்தார். அவள் கணவனோடு புக்ககம் செல்லும்பொழுது, அவள் சைவப்பெண் என்பதை அறிந்து அவளுடைய புக்ககத்தார் கொடுமைப்படுத்தினர். கணவனும் அவளைக் கவனியாதிருந்தான். இந்நிலையில் பல வைணவ அடியார்கள் அவ்வில்லத்தில் விருந்துண்பதைக் கண்ட அப்பெண் 'இப்படிச் சிவனடியார் யாருக்கும் உணவு அளிக்க முடியவில்லையே' என்று வருத்தமுற்றாள். ஒருநாள் இவளைத் தனியாக விட்டுவிட்டு அனைவரும் அயலூருக்குச் சென்றனர். அப்பொழுது சைவ முதியோன் ஒருவன் அங்கு

வந்து 'அமுதுபடைக்க' எனக் கேட்டான். அப்பெண் பண்டங்கள் வைத்த அறை பூட்டியிருப்பதைக்கண்டு வருந்த, அதனை அறிந்த முதியோன் 'நீ கதவருகில் சென்றால் தானே திறக்கும்' என, அவ்வாறே அவளும் செல்லக் கதவு திறந்தது. பண்டங்களை எடுத்து அமுதாக்கிப்படைத்தாள். அமுதுண்ட முதியோன் இளங்காளையாய் எழிலுருக்கொண்டு விளங்கினான். அப்போது அவள் மாமியும் வந்துவிட்டாள். இவள் அச்சத்தைக் கண்ட இளங்காளை ஒரு குழவியாகிக் கத்திக்கொண்டிருந்தான். மாமி குழந்தை ஏதென்று சினக்க, அவள் 'இங்கு அந்தணப்பெண் வந்தாள்; இக்குழவியினைக் கொடுத்து வளர்த்துவா என்றுகூறி, தன் கணவனொடு சென்றாள்' என்றாள். அவள்மாமி வெகுண்டு அவளையும் அந்தக் குழந்தையையும் வீட்டைவிட்டு விரட்டினாள். குழந்தையாயிருந்த இறைவன் கண்ணுதலும் கண்டக்கறையும் கங்கையும் பிறையும் உடைய சிவபெருமானைக் காட்சிதந்தது. அப்பெண்ணுக்கு உமையம்மையாகிய பழைய வடிவத்தையும் தந்து இடபவாகனத்தின்மீது ஏற்றித் திருக்கயிலை சென்றார். இவ்வரலாறு விருத்த குமார பாலரான படலத்திலுள்ளது.

பழைய உரை, மண்டோதரிக்கு இறைவன் குருமூர்த்தியாக எழுந்தருளி ஓரியூரில் உபதேசஞ்செய்தபோது இராவணன்வர அவனுக்காகக் குருநாதன் பாலனான் என்ற வரலாற்றைத் தெரிவிக்கிறது.

*பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்* 70
*தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்*
*கோவார் கோலம் கொண்ட கொள்கையும்*

இ - ள்: பாண்டூரில் நீக்கமற நிறைந்திருந்தும், தேவூருக்குத் தெற்கே திகழும் தீவில் அரசனாகிய வடிவத்தைத்தாங்கிய தன்மையும் என்றவாறு.

தேவூர், கீழ்வேளூருக்குத் தெற்கே இரண்டு நாழிகைத் தொலைவில் உள்ளது. அதற்கும் தெற்கே தீவாம்பாள்புரம் என்னும் ஒரு ஊரும் உண்டு. அது அடிகளார்காலத்தில் தீவாக இருந்தது போலும். அங்கே ஆண்ட அரசன் செங்கோலனாக இருந்து மறைந்தமையின் மக்கள் பிரிவாற்றாமையால் வருந்த, இறைவன் அரசவுருத்தாங்கி அத்தீவை ஆண்டான் என்பது வரலாறு. கோ ஆர் கோலம் - அரசனைப் பொருந்திய வடிவம்.

*தேனமர் சோலைத் திருவா ரூரின்*
*ஞானந் தன்னை நல்கிய நன்மையும்*

இ - ள்: தேன் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவாரூரில் ஞானோபதேசஞ்செய்த நன்மையும் என்றவாறு.

சித்தீச்சரத்து உபதேசகுருமூர்த்தியாக எழுந்தருளியிருந்து ஞானோபதேசம் செய்தவரலாறு இதில் குறிக்கப்பெற்றுள்ளது.

*இடைமரு ததனில் ஈண்ட இருந்து* 75
*படிமப் பாதம் வைத்தவப் பரிசும்*

இ - ள்: திருவிடைமருதூரில் அடியார்களெல்லாரும் நெருங்க எழுந்தருளியிருந்து தெய்வத்தன்மை பொருந்திய திருவடிகளைச் சூட்டிய அத்தன்மையும் என்றவாறு.

திருவிடைமருதூரில் மாணிக்கவாசகர் வணங்கிக்கொண்டு உறையுநாளில் ஒருநாள் இவர் முடியில் மகாலிங்கப்பெருமான் திருவடி சூட்டினார் என்பது வரலாறு.

இதனைத் திருவேசறவில் (552) வரும்,

'மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா(று)
அருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட அம்மானே'

என்ற பாடல் வலியுறுத்தும். ஈண்ட இருந்து - அடியார் புடை சூழ நெருங்கி இருந்து. இதனை,

'தேசம் புகுந்து ஈண்டியோர் செம்மையுடைத்தாய்
பூசம் புகுந்தாடிப் பொலிந்தழ காய
ஈசன் உறைகின்ற இடைமருது ஈதோ'

என்னும் சம்பந்தசுவாமிகளின் திருவாக்கானும் உணர்க.

*ஏகம் பத்தின் இயல்பா யிருந்து*
*பாகம் பெண்ணோ டாயின பரிசும்*

இ - ள்: திருவேகம்பம் என்னும் காஞ்சிபுரத்தில் தான்மட்டும் தனித்து இயல்பாக வீற்றிருந்து ஒருபாகத்து உமாதேவியாகிய பெண்ணோடு கூடிய தன்மையும் என்றவாறு.

இயல்பாயிருத்தல் - சிவம்மட்டும் தனித்திருத்தல்.

உமையம்மை விளையாட்டாக இறைவன் இருகண்களையும் பொத்த உலகமெல்லாம் இருண்டதாக, இறைவன் அம்மையை நோக்கி 'இப்பாவந்தீரக் காஞ்சிபுரம் சென்று கடும்தவம் புரிக'

என ஆணையிட்டான். அம்மையும் அவ்வாறே சென்று கம்பை யாற்றங்கரையில் சிவலிங்கம் ஸ்தாபித்து வழிபட்டு வந்தாள். ஒருநாள் கம்பையாறு கரைகடந்து பெருக, அம்மை சிவலிங் கத்தைக் கட்டித் தழுவிக்கொண்டனள். அப்போது இறைவன் வெளிப்பட்டு அம்மையாரை மணந்தார் என்பது வரலாறு. இதனையே போற்றித் திருவகவலில் 'ஏகம்பத்துறை எந்தாய் போற்றி, பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி' என அடிகள் அறிவித்தமை காண்க.

*திருவாஞ் சியத்தில் சீர்பெற இருந்து*
*மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும் 80*

இ - ள்: திருவாஞ்சியம் என்னும் தலத்தில் சிறப்புற வீற் றிருந்து, மணம் பொருந்திய குழலையுடைய நாககன்னியோடு மகிழ்ந்த தன்மையும் என்றவாறு.

முன்னொருகாலத்தில் ஒரு நாககன்னிகை சிவலிங்கத்தைப் பூசித்துவருகையில், காதல்விஞ்ச அதனைத் தழுவி மகிழ்ந்தாள். அவளுடைய காதன்மையைக் கண்டதும் இறைவன் அவளை அம்மையின் கூற்றிலே அடக்கி ஆட்கொண்டார். ஆதலால் அந்த அம்மைக்கு 'வாழவந்த நாயகி' என்னும் பெயர் வழங்கி வருகிறது. நாககன்னிகையின் வாஞ்சை நிறைவேறியதால் அத்தலம் திருவாஞ்சியம் என்னும் பெயர்பெற்றது. வாஞ்சை - இச்சை. மருவார்குழலி - மணம் பொருந்திய கூந்தலுடையவள்.

*சேவக னாகித் திண்சிலை ஏந்திப்*
*பாவகம் பலபல காட்டிய பரிசும்*

இ - ள்: வீரனாகி வில்லேந்தி, பலப்பல தோற்றங்களைக் காட்டிய தன்மையும் என்றவாறு.

சேவகன் - வீரன். பாவகம் - தோற்றம்; உட்கிடையுமாம். பாண்டியனை வெல்லமாட்டாத சோழன் ஒருவன் அவனையும் அவன் நாட்டையும் ஒருங்கே அழிக்க அமணமுனிவர் ஒருவரை வேண்டி அவர்மூலம் மந்திரவலியால் யானையைப் படைத்துப் பாண்டிய நாட்டின்மீது ஏவினான். பாண்டியன் சோமசுந்தரக் கடவுளிடம் அடைக்கலம் புகுந்தான். இறைவன் ஆணையின்படி மதுரையின் கிழக்குவாயிலில் பகைவரைக்கொல்ல ஓர் அட்டாலை மண்டபம் கட்டிவைத்தான். இறைவனே போர் வீரனாக வில் ஏந்தி அம்பெய்து யானையைவீழ்த்தினார். அதனால் 'அட்டாலைச் சேவகன்' என அழைக்கப்பட்டார் என்பது வரலாறு.

கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனில் சைவ னாகியும் 85
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்

இ - ள்: கடம்பூரில் இடம் விளங்க இருந்தும், ஈங்கோய் மலையில் தனது அழகைக் காண்பித்தும், திருவையாற்றில் ஓர் ஆதி சைவனாகியும், திருத்துருத்தி என்னும் குற்றாலத்தில் அன்போடு இருந்தும், திருப்பனையூரில் விருப்பமுடையவனாகியும் என்றவாறு.

இடம் - கோயில்: 'நாயாடியார்க்கிடமாவது நாவலூரே' என்புழியும் இக்கருத்துடையதாதல் காண்க. எழில் - அழகு. அது அழகினையுடையதாகிய திருமேனி என்னும் பொருளில் வந்தது; பண்பாகுபெயர்.

ஐயாறதனில் சைவன் ஆகிய வரலாறு: திருவையாற்றில் ஐயாறப்பருக்கு வழிபாடு செய்கின்ற ஆதிசைவக் குடும்பம் இருபத்துநான்கு இருந்தது. அவருள் ஒருவர் மனைவியையும் மகனையும் தம் பொருளுக்கும் கோயில்முறைக்கும் உரியவர்களாக வைத்துவிட்டுக் காசியாத்திரை போனார். போனவர் சில ஆண்டுகள் ஆகியும் திரும்பி வராமையைக் கண்ட ஏனையோர் அவர் பொருளையும், உரிமையையும் பங்கிட்டுக்கொண்டனர். இதனைக்கண்டு வறுமையால் வாடிய அவர் மனைவியும் மகனும் ஐயாறப்பரிடம் விண்ணப்பித்து வருந்தினர். ஒருநாள் விடியற் காலை, சென்ற ஆதிசைவர் கங்கைக்குடத்துடன் திரும்பிவந்து சேர்ந்தார். இறைவற்குக் கங்கையாட்டி மகிழ்ந்து தம்முரிமை யையும் பெற்று வீட்டிற்குச் செல்லாது தனியே மடத்தில் தங்கி யிருந்தனர். சிலநாள் கழித்தபின் இவரைப்போன்ற ஒருவர் வந்து சேர்ந்தார். அவருக்கும் இவருக்கும் வாதம் நிகழ்ந்தது. வழக்கு நடந்தது. இருவரும் ஓலை முதலியவற்றைக் காட்டினர். எல்லாம் ஒத்திருந்தன. ஆனாலும், மெய்யான ஓலையைப் பொய் யென்று தள்ளி, பொய்யான ஓலையை மெய்யென்று மகாசபை யோர் உறுதிசெய்தனர். பின்வந்த அந்தணர் செய்வதறியாது ஐயாறப்பர் சந்நிதியில் அழுது நின்றனர். அப்போது முன் வந்தவர் மறைந்தார். எல்லாரும் இறைவன் அருளிச்செயல் என்றுணர்ந்து வியந்தனர். இன்றும் 'ஆத்ம பூசை' என்றும், 'தன்னைத்தான் அர்ச்சனை' என்றும் சித்திரைத்திருவிழா ஐந்தாம் திருநாளில் நடைபெறுவதுண்டு. அது, சைவனாகித் தன்னைத் தானே இறைவன் பூசித்துக்கொண்ட இந்த வரலாற்றை நினைவூட்டுவதாகும்.

துருத்தி - குற்ருலம் என வழங்கும் தலம். அருத்தி - காதல். இத்தலத்தில் இறைவன் சொன்னவாறறிவாராக முகிழாம்பிகை யுடன் எழுந்தருளி, ஆகமங்களை முனிவர்களுக்குக் குத்தால நீழலிலிருந்து அருள்செய்தும், வேள்விக்குடியில் மணவாள திருக்கோலங்கொண்டு காதன்மை விளங்க வீற்றிருந்தும் அருள்செய்கிருர். இந்நிகழ்ச்சியையே 'அருத்தியோடிருந்தும்' என்ற பகுதி அடக்கிநிற்கிறது.

*கழுமல மதனில் காட்சி கொடுத்தும்*
*கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்*
*புறம்பய மதனில் அறம்பல அருளியும்* *90*
*குற்ரு லத்துக் குறியா யிருந்தும்*

*இ - ள் :* திருக்கழுமலம் என்னும் சீகாழியில் அம்மையப்பராகக் காட்சிதந்தும், திருக்கழுக்குன்றத்தில் தவருது இருந்தும், திருப் புறம்பயத்தில் பல அறங்களை அருளிச்செய்தும், குற்ருலத்தில் சிவ லிங்கத் திருமேனியாக எழுந்தருளியிருந்தும் என்றவாறு.

கழுமலம் - சீகாழி. இத்தலத்தில் இறைவன் குரு இலிங்க சங்கமமாகிய மூன்று வடிவங்களிலும் காட்சி வழங்குகின்ருர் ஆதலின் 'காட்சிகொடுத்தும்' என்றது. குரு - தோணியப்பர். இலிங்கம் - பிரமபுரீசர். சங்கமம் - சட்டைநாதர்.

கழுக்குன்று - திருக்கழுக்குன்று. வழுக்காது - மறவாது. பெருந்துறையில் அடிகளார் தாம் பெற்ற குருதரிசனப் பயனை மறவாது, சிவம் 'கலங்காமலே வந்து' 'ஆட்சிகொள்வான் வந்து' திருக்கோலம் காட்டிஞர் எனக் கூறுதலால், இறைவன் அடிகளார் மறவாமைக்காகக் காட்சிவழங்கியமை அறியலாம்.

அறம் பல அருளுதல்: சாட்சிநாதராக, முறைமகளைப் பெற்ருேர் அனுமதியில்லாமலே மணந்துகொண்ட வணிகப் பெண்ணின் இல்லறக்கற்புமுறையைப் பலருமறிய வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்து அருளியதுபோன்ற நிகழ்ச்சி களால், தான், பல அறங்களுக்கும் சாட்சியாக இருந்தமையை அறிவுறுத்துவது.

குற்ருலம் - திருக்குற்ருலமாகிய பொதியச் சாரல். குறி - சிவலிங்கத் திருமேனி. அகத்தியமாமுனிவர் தென்திசையைச் சமன்செய்யக் கயிலையினின்று எழுந்தருளியகாலத்து இங்குத் திருமால்கோயில் இருந்ததாக, இவர் உட்சென்று 'குறுகுறு குற்ருலம்' எனக் கூறி, நெடியோனைச் சிவலிங்கமாகச் செய்து

வழிபட்டனர் என்ற வரலாறு காட்டப்பெறுகின்றது. அன்றி குறி என்பதற்குத் தியானப்பொருளாக இருந்தும் என்பாரும் உளர்.

அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்(டு)
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத் 95
தானே யாகிய தயாபரன் எம்இறை

இ - ள்: அளவற்ற பெருமையினையுடைய சோதி வடிவை மறைத்து, அழகிய வேடத்தையுடைய ஒப்பற்ற முதல்வன் உரு மேனிதாங்கி, இந்திரஜாலம்போல எழுந்தருளிவந்து, எத்தகையவர் தன்மைகளையும் தம்மிடம் அடக்கி, அவர்கள் யாரினும் தாமேயாக விளங்குங் கருணைக்கடல் எமது இறைவன் என்றவாறு.

தமது அனுபவநிலையில் எல்லையற்ற பெருஞ்சோதிப் பொருளாக விளங்கிய இறைவன், எம்மீது வைத்த எளிவந்த கருணையால், பேரொளி வடிவை மறைத்து, சொக்கப்பெருமா னாகிய வேடந்தாங்கி, கண்மூடிக் கண் திறப்பதற்குள் இந்திர ஜாலம்போல எழுந்தருளினார் என்பது. அந்தமில் பெருமை யழலுரு - முழுத்தழல் மேனி. ஒவ்வோரண்டத்தும் ஒவ்வோர் உலகிலும் விளங்கும் ஞாயிறு முதலிய ஒளிப்பொருள் யாவும் இறைவன் திருமேனியில் ஒரு கூறு ஆகலின், அவையெல்லாம் ஒருங்கு திரண்டால் ஒத்த பேரொளிப் பிழம்பான மேனி என் பார் 'அந்தமில் பெருமை அழல் உரு' என்றார். இக்கருத்தே முன்னர் 'முழுத்தழல் மேனிக்கும்' (33) கொள்க.

அத்தகைய திருமேனியின் ஒளியை எவ்வகையானும் அடி யேங்கள் தாங்கமாட்டோம் எனத் திருவுளத்து எண்ணி அவ் வொளியை மறைத்து, எம்போல வடிவம் தாங்கி என்பார் 'கரந்து உருவுகொண்டு' என்றார்.

சுந்தரவேடம் - குருமூர்த்திகள் அணியும் குண்டல விசேட மும் ஆம். ஆறுகட்டியும், சுந்தரவேடமும் ஆசாரியமூர்த்திகள் தம் காதிலணிவது மரபு. ஆகவே, சுந்தரவேடம் என்னும் காதணி அணிந்த குருவாகிய ஒப்பற்றவன் எனப் பொருள் கோடல் சாலும்.

அதனோடு அமையாது, மக்கள் தேவர் முதலிய எவர் எவர் தன்மைகளையும் தம் வியாபகத்துள்ளே அடக்கி, அவரவர்கள்

தன்மைகளைக் கெடுத்து, எல்லாரும் தாமேயாக விளங்கும் கருணையையே பரமாகக்கொண்ட ஈசன் என்றதாம்.

*சந்திர தீபத்துச் சாத்திர னாகி*
*அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்*
*சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்*

இ - ள் : சந்திரதீபம் என்னும் நகரில் சாத்திரங்களை அருளிச் செய்யும் ஆசாரியனாகி, ஆகாயத்தினின்று இறங்கிவந்து, அழகு மிக்க திருக்கழிப்பாலை என்னும் தலத்துள் அழகிய தன்மையோடு நெருங்கி எழுந்தருளியிருந்தும் என்றவாறு.

'சந்திரதீபம் - சந்திரமூலை என்னும் ஊர். பாலை - திருக் கழிப்பாலை. சந்திரமூலை கழிப்பாலையின் பக்கத்திலிருப்பதும் ஓர்க' என்பாரும் உளர்.

சந்திரதீபம் ஒன்பது வருஷங்களுள் ஒன்றாகிய குருவருஷத் திற்கு வடபாலுள்ளதொரு தீவு. அங்குச் சாத்திரம் வல்லோனா யிருந்த இறைவன் பாலையாக இருந்த திருப்பெருந்துறையில் வந்த வழியை யாரும் அறியார் ஆகலின் 'அந்தரத்து இழிந்து வந்து' என்றார். அழகமர் பாலை என்றது திருப்பெருந்துறை ஒருகாலத்துப் பாலையாயிருந்து, பின் இறைவனால் மருதமாக் கப்பெற்றது ஆதலின் என்க. இதனைத் 'தென்பாலைத் திருப் பெருந்துறை' என்னும் அடிகள் வாக்கும், நம்பி திருவிளையா டலும், திருப்பெருந்துறைப் புராணமும் தெரிவிக்கும்.

சுந்தரத்தன்மையொடு இருந்தது - குருமூர்த்தியாக இருந் தது. துதைந்து - நெருங்கி.

சந்திரதீப ஞானகமதீப சாத்திரனாக இருந்து திருக்கழிப் பாலை என்னும் தலத்திலே பராசத்திக்கு அனுக்கிரகம் செய்து என்பது பழையவுரை.

*மந்திர மாமலை மகேந்திர வெற்பன்* **100**
*அந்தமில் பெருமை அருளுடை யண்ணல்*
*எந்தமை ஆண்ட பரிசது பகரின்*

இ - ள் : ஆகிய இத்தகைய எல்லையற்ற பெருமைவாய்ந்த திருவருட் பொலிவுடைய பெருமான், மந்திரமாமலை, மகேந்திர மலைக்கு உரியவன் எங்களை ஆட்கொண்ட தன்மைகளையுற்றிப் பேசினால் என்றவாறு.

*ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு*
*நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்*

இ - ள்: பேராற்றல் வாய்ந்த அழகிய திருவுருவில் திருநீற்றினை அணிந்த கொம்பினையுடைய இடபத்தை உயர்ந்து விளங்கக்காட்டியும் என்றவாறு.

ஆற்றலதுவுடை அழகு அமர் திருவுரு நீற்றுக் கோடி — இடபம். 'ஆற்றலதுவுடை' என்ற கருத்து "ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற்கெல்லாம், ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப" என்னும் தொல்காப்பிய மரபியல் சூத்திரத்தும் காளைக்கும் உரியதாகக்கொள்ளக் கிடத்தல் காண்க. கோடு+இ=கோடி. கொம்பினையுடைய இடபம். நிமிர்ந்து காணச் செய்தும் கொடியை இறைவன் வலமாக உயர்த்திப் பிடித்த போது அதிலெழுதிய காளை நிமிர்ந்து நிற்கும் தோற்றத்தை அடியார்கள் காணச் செய்தருள்கின்றார் என்பதாம். இப்பகுதி முதல் தசாங்கம் கூறுவதால் இது கொடி கூறிய பகுதியேயாம். நீற்றுக் கோடி - திருநீற்றுக்கோடுகள் எனப் பொருள்கொள்ளின் தசாங்கத்துள் சிறந்ததொன்று குறைதல்கண்டு தெளிக.

இது இறைவனுடைய கொடி கூறியது. பின் தசாங்கத்துள்ளும் 'கோதிலா ஏறும் கொடி' (365) எனல் காண்க.

எல்லாத் தேவர்களுக்கும் மேம்பட்ட திருவருட்பலமான திருவுருவிலே தழற்பொடிபோலத் திருவருட்பரையே திருநீறாக விளங்கிய ஊர்த்துவதாண்டவ வெற்றிக்கொடியைக் காட்டியும் என்பது பழையவுரை. வலதுகாலைப் பதாகைபோல உயர்த்தி இடது கையினால் கால் பெருவிரலைத் தீண்டுதல் ஊர்த்துவ தாண்டவ இலக்கணமாதலின் அதனைக் கொடியாக உருவகித்தலும் பொருந்துவதொன்றாம். ஆகவே, கோடி - கொடியென்பதன் விகாரமாகவே அவ்வுரைகாரர் கருதுகிறார். திருநீற்று வரிகள் என்பர் மறைமலையடிகள்.

*ஊனந் தன்னை ஒருங்குடன் அறுக்கும்* 105
*ஆனந் தம்மே ஆறா அருளியும்*

இ - ள்: உயிர்களுக்கு உள்ள குறையாகிய ஆணவமலத்தை அடியோடு வலியொடுக்கி ஆட்கொள்ளும் ஆனந்தத்தையே ஆறாக அருளிச்செய்தும் என்றவாறு.

இது ஆணவமலத்தை அகற்றி அளிக்கும் ஆனந்தமே ஆறு என ஆறு கூறியது. மேலும் தசாங்கத்துள் 'ஆனந்தங் காண் உடையான் ஆறு' (359) என வருதல் காண்க.

*மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்*
*நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்*

இ - ள்: உமாதேவியை ஒருகூற்றில் உடையவனாகிய மிகப் பெரிய கருணையாளன் நாதமாகிய பெரிய பறையை விரும்பி ஒலிக்கவும் என்றவாறு.

நவின்று - சொல்லி. பறையொலியைச் சொற்கட்டு என்பது இசைநூல் மரபு. இறைவன் எழுப்பிய பறை 'அஇ உண்' 'ருலுங்' ஏஓங்' 'ஐஔச்' முதலிய பதினாலு சொற்கட்டுக்களாக ஒலித்தது. அதுவே இலக்கணச் சூத்திரங்களாயின ஆதலால் 'நவின்று கறங்கவும்' என்றார் எனினுமாம்.

பெரும்பறை படைத்தற்றொழிலைப் புரிவது ஆகலின் பெண்ணொருபாகனாக இருந்து ஒலிக்கின்றான்; அவன் பறை பரநாத வடிவானது என்பன உணர்த்தப்பெற்றன. மேல் 'நாதப் பறையினர் அன்னே என்னும்' (336) 'பருமிக்க நாதப்பறை' (363) எனவரும் பகுதிகள் இணைத்து எண்ணத்தக்கவை.

*அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்*
*கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்* 110

இ - ள்: ஆன்மாக்களுக்கு அழுக்காகிய ஆணவமலம் வந்து சாராதவண்ணம் ஆட்கொண்டு அருள் வழங்குபவனாகிய பெருமான் சூலத்தைத் திருக்கையில் தாங்கியும் என்றவாறு.

கழுக்கடை - சூலம். அழுக்கு - மலம். அடையாமல் - செறிவாகச் சேராமல்; பொருந்தாமல் எனச் சிலர் உரை காண்பர். மலம் உயிர்களுக்கு இயற்கையாதலானும், முத்திக்காலத்திலும் வன்மை வாடுமேயன்றி அடியோடு நீங்காதாகலானும் அவ்வுரை பொருத்தமிலதாம். மேல் 'அழுக்கடையா நெஞ்சு உருக மும்மலங்கள் பாயும், கழுக்கடைகாண் கைக்கொள் படை' (362) என்பதும் எண்ணுக.

*மூல மாகிய மும்மல மறுக்கும்*
*தூய மேனிச் சுடர்விடு சோதி*
*காதல னாகிக் கழுநீர் மாலை*
*ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்*

இ - ள்: தூயமேனியில் சுடர் பெருகுகின்ற சோதியாகிய பெருமான் விருப்பத்தையுடையவனாகி, செங்கழுநீர்ப் பூவாலாகிய மாலையைப் பொருந்த, அழகாக அணிந்தும் என்றவாறு.

இறைவன் அணியும் மாலை செங்கழுநீர்ப்பூமாலை என்று கூறுகிறது இப்பகுதி. மேல் தசாங்கத்துள் 'தாளி அறுகாம் உவந்த தார்' (364) என மாற்றியுரைப்பர். ஏல்வு - பொருத்தம்.

*அரியொடு பிரமற் களவறி யாதவன் 115*
*பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்*

இ - ள்: பிரம விஷ்ணுக்களால் அளவிட்டு அறியப்படாத பரசிவம் விரைந்து செல்லும் குதிரையின்மீது ஏறி எழுந்தருளிய அழகும் என்றவாறு.

இது ஊர்தி குதிரை என்றது. 'வான்புரவி ஊரும் மகிழ்ந்து' (361) என மேல்வருவதும் காண்க.

*மீண்டு வாரா வழியருள் புரிபவன்*
*பாண்டி நாடே பழம்பதி யாகவும்*

இ - ள்: தன்னடி அடைந்த பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்குப் பிறவா வரத்தை அருளுபவனாகிய சிவனுக்குப் பாண்டியநாடே பழம்பதியாகவும் என்றவாறு.

திருவருளோடுகூடி ஒன்றுமினார் கன்மபூமியில் மீண்டும் பிறந்து வருந்தாராதலின் வீட்டுநெறி மீண்டுவாராவழி எனப் பட்டது. 'மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே' (சிவபுரா ணம் 87) என்றதும் காண்க. வள்ளுவரும் 'கற்றீண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி' என்றது காண்க.

இது நாடு பாண்டியநாடு எனக் கூறியது. மேல் 'தென் பாண்டி நாடே தெளி' (357) எனல் காண்க.

*பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்*
*உத்தர கோச மங்கையூ ராகவும் 120*

இ - ள்: அன்பு செய்யும் அடியவர்களை மேலானவற்றிற் கெல்லாம் மேலான இடத்துச் செலுத்திப் பாதுகாப்பவனாகிய இறைவனுக்கு உத்தரகோசமங்கையே ஊராகவும் என்றவாறு.

இது ஊர் கூறியது. 'பார்மேல் சிவபுரம்போல் கொண் டாடும், உத்தர கோசமங்கை ஊர்' (358) என்றதும் காண்க.

*ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய*
*தேவ தேவன் திருப்பெய ராகவும்*

இ - ள்: முதலான மூர்த்திகட்கும் அருளைவிரும்பி வழங்குவதற்காகத் தேவதேவன் என்றதே தமது பெயராகக் கொண்டருளியும் என்றவாறு.

ஆதி மூர்த்திகள் எனப்படுபவர்கள் சதாசிவர், அநந்தர், சீகண்டர், குணிருத்திரர், விஷ்ணு, பிரமா முதலானோர். இவர்கள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயைகளில் தொன்று தொட்டே கடவுட்டன்மை பெற்றவர்களாய், அந்தந்த தத்துவ புவனங்களில் இறைவனருளால் அதிகாரம் செலுத்துபவர்கள். இவர்களனைவருக்கும் தெய்வமாக விளங்குதலின் சிவன் தேவ தேவன், மகாதேவன் என வழங்கப்பெறுவர். அதனை அறிவிப்பது இப்பகுதி.

> 𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂
> 𑌤𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌚 𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 ।
> 𑌪𑌤𑌿𑌂 𑌪𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍
> 𑌵𑌿𑌦𑌾𑌮 𑌦𑍇𑌵𑌂 𑌭𑍁𑌵𑌨𑍇𑌶 𑌈𑌡𑍍𑌯𑌮𑍍 ॥

என்னும் சுவேதாசுவதர உபநிடதத்தும் 'ஈச்வரர்களுக்கெல்லாம் தேவதேவனுகவும், தலைவர்களுக்கெல்லாம் தலைவனுகவும், மேலானவற்றிற்கெல்லாம் மேலானவனுகவும் சிவபெருமானை அறிகிறேம்' எனக் கூறப்பட்டிருத்தல் காண்க.

தனக்கென்று தனியே நாம ரூபம் இல்லாதவன் என்பதை வற்புறுத்தியவாறு. 'எம்பெருமான் தேவர் பிரான் என்று' (356) என்பதும் காண்க.

> இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி
> அருளிய பெருமை அருள்மலை யாகவும்

இ - ள்: அறியாமையைப் போக்கி ஆட்கொண்ட பேரின்பத்தையே ஊர்தியாக அருளிய பெருமையினையுடைய திருவருளே தமக்குரிய மலையாகவும் என்றவாறு.

திருவருளே மலை. அது உயிர்களுக்கு இன்ப ஊர்தியை அருளிய பெருமையையுடையது என்பதாம். ஊர்தி - வாகனம். 'இன்பமரு முத்தி, அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து' (360) என்பதாலும் தெளிக.

இதுவரை தேவதேவனுகிய இறைவற்குரிய பத்து அங்கங்களைக் கூறியிருத்தல் காண்க.

*எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்* 125
*அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி*
*நாயி னேனை நலமலி தில்லையுள்*
*கோல மார்தரு பொதுவினில் வருகென*
*ஏல என்னை ஈங்கொழித் தருளி*
*அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்* 130
*ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்*

இ - ள் : எவ்வகைப்பட்ட பெருந்தன்மைகளையும், எவரெவர் தகுதிகளையும் அவரவர்களுக்கு உரிய தன்மைகளால் ஆட்கொண்டு, நாயையொத்த அடியேனைமட்டும் தன்மைகள் பலவும் செறிந்த தில்லையுள் அழகிய ஞானமன்றுள் வருக எனப் பொருத்தமாகக் கட்டளையிட்டு இங்கேயே விட்டு மறைந்த அன்று, கூடவே சென்ற திருவருள்பெற்ற அடியவர்கள் இரண்டறக்கலக்க அவர்களோடு கலந்தருளியும் என்றவாறு.

இது அருளுற்றார் அடைந்தநிலை கூறுவது.

மருத்துவர் அவரவர் உடல்நிலை, நோயின்நிலை அறிந்து மருந்தும் அனுமானமும் குறைத்தும் கூட்டியும்கொடுத்து நோய் நீக்குவதுபோல, இறைவனும் ஒருமலமுடையார் இருமலமுடையார் மும்மலமுடையார் ஆகியோர்களின் தரம் தெரிந்து எழுந்தருளி, அவரவர்களுக்கேற்ற நிலையில் ஆட்கொள்ளுகின்றான் ஆதலின் 'அப்பரிசதனால் ஆண்டுகொண்டருளி' என்றது.

இங்ஙனம் ஆட்கொள்ளும் முறையை,

'மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்'

என்னும் சிவஞானபோத வெண்பா உணர்த்தும். இவருள் விஞ்ஞானகலர் சிறத்தலின் அவர்களின் நிலையை 'எப்பெருந் தன்மையும்' என்றருளினார்கள். சகலரை 'எவ்வெவர் திறமும்' என்பதனால் குறித்தார்கள் என்க.

*எய்தவந் திலாதார் எரியில் பாயவும்*
*மாலது வாகி மயக்க மெய்தியும்*
*பூதல மதனில் புரண்டுவீழ்ந் தலறியும்*
*கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி* 135
*நாத நாத என்றழு தரற்றிப்*
*பாதம் எய்தினர் பாதம் எய்தவும்*

இ - ள் : அவ்வண்ணம் இறைவன் திருவருளால் இரண்டறக் கலக்கும் பேறு அடையாதார், குருநாதன் மறையும்போது எழுந்த சோதியுள் பாயவும் சிலர் மதி மயங்கி மயக்கமுறவும், பூமியில் வீழ்ந்து புரண்டு அலறியும், காலால் வேகமாகக் கடற்கரைவரை ஓடிச்சென்று 'நாத நாத' என்று அழுது புலம்பியும் திருவடியைப் பெற்றவர்கள் பெறவும் என்றவாறு.

இது அருள் பெறுதார் அருளுக்கு இலக்கான உபாயம் உரைத்தது.

*பதஞ்சலிக் கருளிய பரமநா டகஎன்(று)*
*இதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்*

இ - ள் : பதஞ்சலி முனிவர்க்கு அருளிய மேலான ஆனந்தத் தாண்டவத்தை உடையவனே! என்று மனஞ்சலிக்க நின்று ஏங்கினவர் ஏங்கவும் என்றவாறு.

*எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொன்* **140**
*பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்*
*கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்(கு)*
*அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை*
*இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்*
*பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்* **145**
*ஒலிதரு கைலை உயர்கிழ வோனே.*

இ - ள் : பரநாத ஒலியைத் தருகின்ற திருக்கைலைமலைக்கு இறைவனாகிய சிவபெருமான், அழகுமிக்க இமயத்தின் இயல்புகள் அனைத்தும் வாய்க்கப்பெற்ற அழகிய பொன்மன்றுள் திருநடனம் செய்கின்றவரும், கொவ்வைக்கனிபோலும் சிவந்த வாயினையுடைய உமாதேவியாரோடு காளிக்கும் அருளிய திருமுகத்திலே அழகிய புன்னகையுடையவரும் ஆகிய இறைவன் நெருங்கிய அடியார்களோடும் எல்லாவகையிலும் மிக்கு விளங்குகிற புலியூரிலே புகுந்து எமக்கெல்லாம் இனிதாக அருளினன் என்றவாறு.

மத்தியந்தன முனிவரின் மகனை புலிக்கால் முனிவர் வழிபட்டு, ஆனந்தத்தாண்டவ தரிசனத்தை முதன் முதலாகப் பெற்ற தலமாதலால் புலியூர் எனப் பெயர் பெற்றது.

தாருகாசுரனைக் கொன்ற காளி, அவன் குருதி சிந்திய விடமெல்லாம் அரக்கர்கள் மீளவுந்தோன்ற அவர்களை அழித்துக் குருதி சிறிதும் சிந்தாமல் குடித்தாள். அதனால் வெறி கொண்ட அவள் உலகமுழுமையும் அழிக்கத்தொடங்கியபோது

இறைவன் அவள்முன்பு தோன்றிக் கொடுங்கூத்தாட, அவள் வெறி அடங்கி இறைவனை வழிபட்டு உய்ந்தாள். அதுவே இன்று தில்லைக்காளியாக எல்லைக் காவல் தெய்வமாக விளங்குவது.

> 'வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
> கன்றிவரு கோபமிகு காளிகதம் ஓவ
> நின்றுநடம் ஆடியிட நீடுமலர் மேலால்
> மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திருவை யாறே'

எனத் திருவையாற்றுத் தேவாரத்திலும் இந்நிகழ்ச்சி குறிப்பிடப்பெறுகின்றது.

ஒலிதரு கைலை - வாழ்த்தொலிவழங்கும் கயிலை; விளங்கும் கைலை எனலுமாம். அருள்வடிவான செவ்வாய் உமைக்கும், மாயாவடிவான பத்திரகாளிக்கும் ஒப்ப அருளிய சிறுநகையாயினும், சிவகாமி 'பாலுண்குழவி பசுங்குடர் பொறுதென நோயுண்மருந்து தாயுண்டாங்கு' குமிண்சிரிப்பின் பயனைத் தாம் ஏற்று, நமக்கெல்லாம் தர நோக்கி உதவிப் பிறவிப்பிணி போக்கிப் பேரின்பம் அருளும் பெற்றியதானமையும், காளி தன்னாற்றல் மடங்கி அவளுக்குச் சாந்தம் கைவர வாய்ப்பானமையும் காண்க.

இவ்வகவலைத் 'தில்லை மூதூர் ஆடிய திருவடி' எனத் தொடங்கி, 'கைலை உயர் கிழவோன் புலியூர் புக்கு இனிது அருளினன்' என முடித்தல் காண்க.

# 3. திருவண்டப்பகுதி

[சிவனது தூல சூக்குமத்தை வியந்தது]

இது, 'அண்டப்பகுதியின்' எனத்தொடங்கும் இவ்வகவ லின் முதற்குறிப்பால் பெயர்பெற்றது. 'ஆத்திசூடி' 'கொன் றைவேந்தன்' என்பன முதற்குறிப்பால் அந்தந்த நூலுக்கே பெயரானாற்போல, 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' அப்பாடலை முதலாகக்கொண்ட பத்துக்கும் பெயரானாற்போல இது அதனை முதலாகக்கொண்ட அகவலுக்குப் பெயராயிற்று. இது இணைக்குறள் ஆசிரியப்பாவான் அமைந்தது. சிவபுராணம், கீர்த்தித்திருவகவல் என்பனபோலப் பாடற்பெயரும் பாடற் கருத்தும் ஒருநோக்குடையனவாக அமையவில்லை. பாடற் பெயர் முதலான் அமைந்தது. பாடற்கருத்து அது நுதலிய பொருளான் அமைந்தது.

இவ்வகவலின்கண், இறைவன் சிறியவாகப் பெரியோனாகி யும், கருதாக் கருத்துடைக் கடவுளாகியும், உலகமே தானாய் எங்கும் பரந்தும், அவற்றைக் கடந்தும், அணுத்தரு தன்மை யின் அமைந்தும், பிரமன் மாலறியாப் பெற்றியனாக - தமக்கு எளிவந்த தலைவனாக விளங்கும் இயல்பும் விரித்துரைக்கப் பெறுகின்றன. பழையபுராணம்,

> 'திகழ்திருவண் டப்பகுதி திருவகவல் செப்பியது
> தகுசிருட்டி திதியொடுக்கம் சாற்றுதிரோ தம்பொதுவாய்
> அகலமுறத் தெரிந்திடவே யருளியநற் பொருளாகும்'

எனச் சிவபெருமானுடைய ஐந்தொழிலில் அநுக்கிரகம் நீங்க லான நான்கன் இயல்புகளை விளக்குவதாம் என்கின்றது.

இவ்வகவல் முதற்கண் பல அண்டங்களையும் அவற்றின் பிரிவுகளையும் உணர்த்துகின்றது ஆதலின் 'அண்டப்பகுதி' என ஆயிற்று எனலுமாம். அது அடைமொழி ஏற்றுத் திரு அண்டப்பகுதியாயிற்று.

இது, 'அந்தச் சொரூப தடத்தத்தின் பெருமையும், நுட்பமும், பெருங்கருணையும், பெறுதற்கருமையும் தூலசூக் குமங்களில் வைத்துச் சொல்கிறது' என்ற விளக்கம் பழைய உரையினது.

பகுதி - மூலப்பகுதி; அண்டப்பகுதி - அண்டங்கள் அனைத்திற்கும் மூலப்பகுதியாகிய சிவபுரம். அதுவே திருவாகிய வீடுடையது. ஆதலால் அது 'திருவண்டப்பகுதி' என வழங்கப்படுவதாயிற்று என்பது பழையவுரை.

இவ்வண்ணம் எல்லார்கருத்துக்களையும் தொகுத்து எண்ணும்போது, முதற்குறிப்பால் பெயர்பெற்றது உண்மையாயினும் அம்முதற்குறிப்பு இறைவன் பெருமையை உணர்த்த உதவலானும், அவன் விசுவரூபியாயும், விசுவாதிகனாகவும், விசுவாந்தர்யாமியாகவும் விளக்குகிறான் என்று உபநிடதம் உரைப்பதுபோல இப்பகுதியும் இறைவன் அண்டங்களாயும் அவற்றின் பெரியனாயும் விளங்குகின்றான் என்று அண்டத்தின் இயல்பு உணர்த்துதலின் அண்டப்பகுதியாயிற்று எனல் பொருந்தும். அண்டத்தின் பொதுவியல்பு மாயையின் காரியமாய்ச் சடமாய் இருப்பதாம். சிறப்பியல்பு இறைவன் அந்தர்யாமியாக இருக்கப்பெறுகையும், அவனது விராட்சொரூபத்தில் தாம் பரமாணுக்களின் கூட்டமாக விளங்குகையும் ஆம். இவற்றை இப்பகுதி விளக்குதலால் இப்பெயர்பெற்றது எனல் தெளிவு.

முதல் 28 அடிகள், இயங்குவ நிற்பவான - சித்தும் சடமுமான எல்லாவற்றையும் அவற்றின் இயல்பின்படி இறைவன் நடத்திக் கடந்திருத்தலை உணர்த்துவன.

'முன்னோன்காண்க' (29) என்பதுமுதல் 'அவனுந்தானும் உடனே காண்க' (65) என்பதுவரை இறைவனுடைய அருட்செயல் இயல்பு ஆகியவற்றை எடுத்துக்கூறி, உலகவர்களை விளித்து, காணுமாறு பணிக்கின்ற காண்க நாற்பது.

'பரமானந்தப் பழங்கடல்' (66) என்பது முதல் 'மேகன் வாழ்க' (95) என்பதுவரை இறைவனை மேகத்திற்கு முற்றுருவகமாக்கிச் சுவைத்தது.

'மேகன் வாழ்க' (95) என்பதுமுதல் 'எய்ப்பினில் வைப்பு வாழ்க' (105) என்பதுவரை இறைவனை வாழ்த்திய வாழ்க பதினொன்று.

'நச்சரவாட்டிய' (106) என்பது முதல் 'களிப்போன் போற்றி' (121) என்பதுவரை இறைவனைப் போற்றிக் கூறிய ஆறு போற்றி.

'ஆற்றா இன்பம் அலர்ந்து அலைசெய்யப் போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்' (122 - 3) என்ற பகுதி தனது ஆற்றாமைகூறல்.

'மரகதக்குவால்'(124) என்பதுமுதல் 'பற்றுமுற்றொளித் தும்'(145) என்பதுவரை, பசுபோதமுனைப்பால் தேடமுயன்ற தேவர்களுக்கு ஒளித்தமை கூறிய ஒளித்தும் ஒன்பது.

'தன்னேரில்லோன்' (146) என்பதுமுதல் இறுதிவரையி பிரமன் மாலறியாப் பெற்றியோன் அறைகூவி ஆட்கொண்ட தும், அதனால்விளைந்த அநுபவங்களும், ஆனந்தமும், ஆனந்தா தீதமும், பரவசமும் முதலியன.

இவ்வண்ணம் இவ்வகவல் எட்டுப் பகுதிகளாக நூற்று எண்பத்திரண்டடிகளான் அமைந்தது.

## இணைக்குறள் ஆசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச் 5
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமுஞ் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்(து) 10
எறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக் 15
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்
அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு 20
மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்

நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட 25
மண்ணிற் றிண்மை வைத்தோன் என்றென்(று)
எனைப்பல கோடி யெனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் தானே காண்க 30
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க 35
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க 40
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மை யிலையோன் காண்க 45
இணைப்பரும் பெருமையின் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க 50
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க 55
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ணாண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானும் கண்டேன் காண்க
அருணனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க 60
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க

குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க 65
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய 70
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட 75
எஞ்சா இன்னருள் நுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம் 80
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழு நின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்(து) 85
ஊழூ ழோங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்(து)
உருவ அருணீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில் 90
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவர் ஆரத் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க 95
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க 100
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க

பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க 105
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றோடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச் 110
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும் 115
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த, ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி 120
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத் 125
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்(து)
உற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்தும் 130
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்(கு)
அத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கெளவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின் 135
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிலொறும் இன்றே பயிலொறும் 140
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்

ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும் 145
தன்னே ரில்லோன் றானே யானதன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா அன்பென் புருக வோலமிட்(டு) 150
அலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின் 155
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழினகை யெரியின்
வீழ்வித் தாங்கன்(று)
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில் 160
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்(கு) 165
அருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்(து)
உவாக்கட லள்ளுநீர் உள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும் 170
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்றழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ(து) 175
உள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்(கு)
அள்ளூ றாக்கை யமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்றேன் கலக்க 180

*அருளொடு பராவமு தாக்கினன்*
*பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.*

திருச்சிற்றம்பலம்.

*அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்*
*அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி*
*ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்*
*நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன*
*இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்* 5
*சிறிய வாகப் பெரியோன்*

இ - ள் : ஒன்றனுக்கொன்று மேலாக நின்ற எழுச்சியைச் சொல்லுமிடத்து, நூற்றொரு கோடியினும் மிகுதிப்பட விரிந்தன வாகிய அண்டப்பிரிவுகளின் திரண்ட உருவின் பெருக்கமும், அளத் தற்கரிய அவற்றின் தன்மையும், வளமிக்க பெரிய தோற்றமும், வீட்டில் நுழைகின்ற சூரிய ஒளியின்கண் செறிந்துள்ள அணுக்களை யொப்ப, சிறியனவாகப் பெரிதாகத் தோன்றும் சிவபெருமான் என்றவாறு.

உண்டைப் பிறக்கம் - ஓர் அண்டத்தின் தொகுதி. பிறக்கம் - குவியல் அல்லது தொகுதி எனலுமாம்.

கந்தபுராணத்து, சூரபன்மனுக்குமுன்பு முருகப்பெருமான் விசுவரூபம் கொண்டபோது சூரன் தான் ஆளுகிற ஆயிரத் தெட்டு அண்டங்களும் அம்முருகப்பெருமானுடைய திருவடிக் கமலத்தில் ஒரு மயிர்க்காலில் விளங்குவதையும், பல கோடிக் கணக்கான அண்டங்கள் அவர் திருமேனி முழுதிலும் விளங்கு வதையும் கண்டு வியந்தான் என்னும்.

அண்டங்கள் ஒன்றைவிட ஒன்று அளப்பருந்தன்மையும் வளத்தாற்பெரிய காட்சியும் உடையனவாக விளங்கின. இப் படிப் பலகோடி அண்டங்கள். இறைவன் திருமேனிப் பெருமை யோடு ஒத்து நோக்கும்போது அவை வீட்டிலே ஓட்டுத் தொளைவழியாக வீட்டினுள்விழும் சூரிய ஒளியில் காணப்படும் பரமாணுக்கள் போல்வனவாம் என்றார்.

அண்டங்கள் யாவும் உண்டைவடிவின என்பது உணர்த் தப்பெற்றது. பிறக்கம் - பெருக்கம். நின்ற+எழில் என்பது நின்றெழில் என விகாரப்பட்டது. நூற்றொரு கோடியின் என்பது எண்ணற்றன என்னும் குறிப்பே. அண்டங்கள்

பரமாணுவைப்போலச் சிறியனவாக, தாம் அவற்றினும் பெரிய தாகிய மேலோன் என்க. உண்டை உருண்டை என்பதன் மரூஉ. இடைக்குறை என்பாரும் உளர்.

தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்(து) 10
எறியது வளியின்
கொட்கப் பெயர்க்குங் குழகன்

இ - ள்: ஆராயின், பிரமக் கூட்டத்தோடு திருமாலின் கூட்டமும், தோற்றமும், நிலையும், இறப்பொடு பொருந்திய மகாப் பிரளயமும், அதன் நீக்கமும், அதனால் உண்டான நிலைபேறும், சூக்குமமாயும் தூலமாயும் புயற்காற்றில் அகப்பட்ட சிறுகாற்றுப் போலச் சுழலத் திரிக்கும் இளையோன் என்றவாறு.

இது இறைவன் ஒருவனே சங்காரகாரணன் என்பது உணர்த்திற்று. மாலவன் மிகுதி - திருமாலின் செருக்கும் என்பாரும் உளர். வேதியன் தொகை என்றதற்குப் பொருந்த மாலவன் மிகுதி என்றார்களாதலின், மிகுதி - செருக்கு என்னும் பண்புணர்த்தாது, எண்ணிக்கையையே உணர்த்தும் என்க. அன்றியும் இதற்கு "நூறுகோடி பிரமர்கள் நுங்கினர், ஆறு கோடி நாராயணர் அங்ஙனே" என்னும் திருக்குறுந்தொகையும் துணைசெய்யும். பிரமர்களும், திருமால்களும் பிறப்பு இருப்போடு இறப்பை அடையும் ஊழிவகை என்பதாம்.

நீக்கம் - பிரளய ஒழிவு. அதாவது படைப்பாகிய புனருற்பவம். நிலை - காத்தல். இவை அனைத்தும் புயலில் சிக்கிய சிறுகாற்றுப்போலச் சுழல அழிக்கும் குழகன் என்பதாம். குழ - இளமை. குழகன் - என்றும் மாறாத இளமையுடையவன்.

சிறப்பு - காத்தல். சிறப்பினைத்தரும் காத்தல் தொழிலைச் சிறப்பு என்றது காரிய ஆகுபெயர். பிரமனாதியரையும், அவர் செய்யும் தொழில்களையும் தன் சங்காரத்தொழிற்கண் அகப்படுத்திச் சுழலச் செய்கின்றான் என்று சிவனது சூக்குமநிலையினை இப்பகுதியால் தெரிவிக்கின்றார்.

முழுவதும்
படைப்போன் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போன் காக்கும் கடவுள் காப்பவை

*கரப்போன் கரப்பவை கருதாக்* 15
*கருத்துடைக் கடவுள்*

இ - ள் : எல்லாவற்றையும் படைப்பவனாகிய பிரமனையும் படைக்கும் பழமையானவன்; காப்பவனாகிய திருமாலையும் காக்குங் கடவுள்; காக்கப்படுவனவற்றை அவற்றின் இறுதியில் ஒடுக்கி மறைப்பவன்; அவ்வண்ணம் ஒடுக்கப்பட்டவற்றைச் சிலகாலம் திருவுள்ளத்து எண்ணாமலே இருந்து, பின்னர் கருதும் கடவுள் என்றவாறு.

பரமன் 'படைப்பது நினைவொடு பதும நன்மலர்' மேவ வில்லையாயின் பிரமன் படைக்கும் ஆற்றலிலன். காப்பது நினை வொடு அறிதுயில் அமரவில்லையாயின் திருமால் காத்தலும் இலன். அன்றியும் அவர்களைப் படைப்பவனும், காப்பவனும் ஆகிய முதல்வன் ஒருவனை அவர்கள் வேண்டிநிற்கின்றனர் ஆதலின் இங்ஙனம் கூறியது.

கரத்தல் - உயிர் முதலானவற்றைத் தத்தம் வினைப்போக முடிவின்கண் தத்தம் முதற்பொருளில் ஒடுக்கி, அவையனைத்தும் மாயையில் ஒடுங்க, மாயை தனது எல்லையற்ற வியாபகத்துள் ஏகதேசமாய் ஒடுங்க, எல்லாப் பொருள்களுக்கும் ஓய்வளித்தல். இதனை விளக்குவது 'காப்பவை கரப்போன் கரப்பவை கருதாக் கருத்துடைக் கடவுள்' என்ற பகுதி.

திருத்தகும்

*அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்*
*வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி*
*கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்*
*அருக்கனில் சோதி அமைத்தோன் திருத்தகு* 20
*மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்*
*தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்*
*வானில் கலப்பு வைத்தோன் மேதகு*
*காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்*
*நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட* 25
*மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்(று)*
*எனைப்பல கோடி யெனைப்பல பிறவும்*
*அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று*

இ - ள் : அழகிய ஆறு வகையான சமயக்கோட்பாட்டினை யுடைய அறுவகைச் சமயத்தோர்க்கும் வீடுபேறாக நின்ற கடவுளர் வகையெல்லாம் தன்னைநோக்கப் புழுவாக, தான் வீடுபேற்றிற்கு

உரிமையாக நின்றவன்; சூரியனிடம் ஒளி அமைத்தவன்; அழகிய திங்களினிடம் குளிர்மை வைத்தவன்; மிக்க வலிமை படைத்த தீயினிடமாக வெப்பத்தை வைத்தவன்; பொய்யற்ற ஆகாயத்தினிடமாக எல்லாப் பூதங்களும் கலந்திருக்கும் ஆற்றலை அமைத்தவன்; மேன்மையான காற்றினிடத்துக் கிளர்ந்தெழும் ஆற்றலை அமைத்தோன்; ஒளியோடு விளங்குகின்ற தண்ணீரில் இனிய சுவையை வைத்தவன்; வெளிப்படையாக மண்ணினிடத்துத் திட்பத்தை வைத்தவன்; என்றென்றும், எத்தனை எத்தனை கோடிக்கணக்கான உயிர்களையும் அவ்வளவு அவ்வளவாக அவ்வவ்விடங்களில் அமைத்தவன்; அல்லாமலும் என்றவாறு.

திருத்தகும் அறுவகைச் சமயம் - திருந்திய ஆறு சமயம். இது அகச்சமயம் ஆறு: அவை உலோகாயதம், பௌத்தம் சாங்கியம், நையாயிகம், வைசேடிகம், மீமாம்சம் என்பன.

அடுத்து, சூரியன் சந்திரன் அக்கினி பஞ்சபூதங்கள் ஆகிய எட்டு உருவங்களிலும் அவ்வவற்றிற்குரிய சிறப்பான ஆற்றலையும், சுவை முதலான தன்மைகளையுங்கூட்டி அவற்றை இயக்கும் பரமகாரணன் இறைவனே என்பது உணர்த்தப்பெறுகின்றது.

> முன்னோன் காண்க முழுதோன் காண்க
> தன்னே ரில்லோன் தானே காண்க 30
> ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
> கானப் புலியுரி அரையோன் காண்க
> நீற்றோன் காண்க

இ - ள்: எல்லாப் பொருள்களுக்கும் முன்பு உள்ளவனும் அனைத்தையும் உடைமையாகக் கொண்டவனும், தனக்கு ஒப்பு யாரும் இல்லாதவனும், ஆதி வராகத்தின் கொம்பை அணிந்தவனும், காட்டுப்புலியின் தோலை அணிந்த அரையை உடையவனும், திருநீறு அணிந்தவனும் ஆக இறைவன் இருக்கின்றான்; அவனைக் காண்க என்றவாறு.

முன்னோன் என்றது அநாதிநித்தியத் தன்மையையும், முழுதோன் என்றது வியாபகத்தையும், நேரில்லோன் என்றது முழு முதற்றன்மையையும், ஏன எயிறு அணிந்தோன் புலியுரியரையன் என்பன அளவிலாற்றலையும், நீற்றோன் என்பது தூய்மையையும் உணர்த்தின.

> நினைதொறும் நினைதொறும்
> ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்

இ - ள் : அவன் திருவுருவை நினைக்குந்தோறும் நினைக்குந் தோறும் அவனைவிட்டுப் பிரிந்திருத்தலைப் பொறுக்கமாட்டேன் காண்க; அந்தோ அழிவேன் என்றவாறு.

என்றது திருமேனி அழகிலும் அவன் செய்த உபதேச மாகிய உபகாரத்திலும் ஈடுபட்டகாலத்து உண்டான செயலற்ற தன்மையைத் தெரிவிப்பது.

*இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க* 35
*அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க*
*பரமன் காண்க பழையோன் காண்க*
*பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க*
*அற்புதன் காண்க அநேகன் காண்க*

இ - ள் : வீணையில் இனிய நாதமாக உயிர்களினிடம் ஞான மாக இசைந்தவன்; அவ்வீணையின் இசையுள் ஒன்றான சாதாரிப் பண்ணை அவ்விடத்து அறிந்தவன்; எல்லாருக்கும் மேலானவன்; அனைத்திற்கும் பழமையானவன்; பதவிகளில் இருப்பாராகிய பிரம னும் திருமாலும் காணாத பெரியோன்; வியக்கத்தக்க குணங்களுடை யவன்; பொருள்களனைத்திலும் வியாபித்திருப்பதால் பலவானவன் என்றவாறு.

வீணைக்கு நாதத்தைப்போல உயிருக்கு ஞானம் ஆதலின் அங்ஙனம் இசைந்திருப்பவன். பிரிக்க முடியாத தன்மையால் ஒன்றியிருப்பவன் என்றதாம்.

அன்னது ஒன்று - நாதத்துள் ஒன்றான சாதாரியை. அவ் வயின் - மதுரையில், பாணபத்திரனுக்காக இசைவாதுவெல்ல விறகு வெட்டியாக எழுந்தருளியவிடத்து. எல்லா இசைகளுக் கும் இறைவனே பிறப்பிடமாயினும் ஒரு பண்ணைமட்டும் அங்கு உணர்த்தினன் என வரலாறு கூறியது.

*சொற்பதம் கடந்த தொல்லோன் காண்க* 40
*சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க*
*பத்தி வலையிற் படுவோன் காண்க*
*ஒருவன் என்னும் ஒருவன் காண்க*
*விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க*
*அணுத்தருந் தன்மை யில்லையோன் காண்க* 45

இ - ள் : சொல்லின் தரத்தையுங்கடந்த தொன்மையானவன்; சித்தமும் சென்று பற்ற இயலாத தூரத்தில் இருப்பவன்; ஆனால்

அன்பு என்னும் வலையுள் அகப்படுபவன்; இவன் ஒருவனே இறைவன் என்னும் ஒன்றானவன்; விரிந்து நிற்கின்ற உலகம் ஏழுமாய் விரிந்திருப்பவன்; அணுவின்கண் காணப்படும் தன்மை போல் வியக்கத்தக்க நுட்பமானவன்; இத்தகைய சிவனை நீங்கள் காண்க என்றவாறு.

சொற்பதம் கடந்த தொன்மையாவது, பிரபஞ்ச சிருட்டிக்குப் பழைய நிலை சொற்பிரபஞ்சம்; அதற்கும் இவரது உடுக்கை காரணம்; ஆகவே இவர் சொல்லின் தரத்தையும் கடந்தவர் எனப்பெற்றது.

சித்தம் - மனம். சேட்சி : தூரம். சர்வசங்காரகாலத்துச் சிவன் ஒருவனே இருத்தலின் 'ஒருவன் என்னும் ஒருவன்' என்றது. சுவேதாசுவதர உபநிடதமும் 'சிவ ஏவ கேவல:' என்கின்றது. இதன் பொருள் சிவனே தனியானவன் என்பது.

பொழில் - உலகம். ஐயோன் - நுண்மையானவன்.

இணைப்பரும் பெருமையின் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவிஎப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க 50
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க

இ - ள்: ஒப்பு சொல்லுதற்கரிய பெருமையுடைய தலைவன்; அரியவற்றுள் அரிய அருமையையுடையவன்; எல்லாப் பொருள்களிலும் கலந்து நின்று அப்பொருள்களை வளர்ப்பவன்; வேத சிவாகமமுதலான நூலறிவால் உணரப்படாத நுண்பொருளாயுள்ளோன்; மேலுலகங்களும் கீழுலகங்களுமாக விரிந்தவன்; தனக்கு ஒரு தோற்றமும் ஈறும் கடந்தவன்; கட்டும் வீடுமாகிய இவற்றை உயிர்களுக்காகப் படைப்பவன் என்றவாறு.

எல்லாப் பொருள்களினிடத்தும் இறைவன் கலப்பில்லையானால் அப்பொருள்களுக்கு வளர்ச்சியே இல்லை ஆதலின் 'மருவி எப்பொருளும் வளர்ப்போன்' என்றது.

வேத சிவாகமங்களைப் படித்த அளவானே இறைவனது இயல்பை அறிய முடியாமையின் 'நாலுணர்வுணரா நுண்ணியோன்' என்றது. நூல்கள் பாசஞானங்கள். 'பாசமா ஞானத தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனை' காண்க.

பூமி முதல் குடிலை ஈருன தத்துவங்களிலும், சுத்தமாயை யும் அசுத்தமாயையும் ஆகிய இவற்றின் காரியமான அண்டங் களிலும் பரந்து நிற்பவன் என்பது 'மேலொடு கீழாய் விரிந் தோன்' என்பதனுல் விளக்கப்பெற்றது. மேல் கீழ் என்பன ஆகுபெயர்கள்.

கட்டும், வீடும் எவனுல் படைக்கப்பட்டனவோ, அவை அவனைத் தொடரா ஆதலின் இயல்பாகவே அவன் அவற்றி னின்றும் நீங்கினவன் என்பது பெற்றும்.

*நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க*
*கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க*
*யாவரும் பெறவுறும் ஈசன் காண்க* 55
*தேவரும் அறியாச் சிவனே காண்க*
*பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க*

இ - ள்: இயங்குவனவும் நிற்பனவுமாகிய யாவும் ஆனவன்; கற்பங்களையும், பேரூழியையும் கண்டவன்; எல்லாரும் அடைய விரும்பும் ஈசன்; தேவர்கள் யாருமே அறியவொண்ணுத சிவன்; பெண், ஆண், அலியெனும் மூன்று தன்மைகளையும் ஒருசேர உடையவன்; அத்தகைய இறைவனைக் காணுங்கள் என்றவாறு.

நிற்பது - அசரம்; நிலையியற்பொருள்கள். அவை மலை மரம் முதலியன. செல்வது - சரம்; புழு முதல் தேவர் ஈருன இயங்கியற்பொருள்கள்.

கற்பம் - காலம். அவை சுவேதவராக கற்பம் போல்வன. காரியத்தில் காணப்படுவன யாவும் காரணத்திலும் அமைந்து இருப்பது மரபு ஆதலின் காரியமாகிய பிரபஞ்சத்தில் பெண் ஆண் அலி என்கிற இப்பாகுபாடு விளங்குதலைக்கொண்டு, இவற்றை ஆக்கிய இறைவனிடத்திலும் இம்மூன்று தன்மை களும் அமைந்திருத்தல் இயல்பு என்பார் 'பெண் ஆண் அலி எனும் பெற்றியன்' என்றுர்.

*கண்ணுல் யானும் கண்டேன் காண்க*
*அருள்நனி சுரக்கும் அமுதே காண்க*
*கருணையின் பெருமை கண்டேன் காண்க* 60
*புவனியில் சேவடி தீண்டினன் காண்க*
*சிவனென யானும் தேறினன் காண்க*

இ - ள்: ஒன்றற்கும் பற்ருத யானும் என் கண்களால் கண் டேன் காண்க; அருளை மிகச்சுரக்கும் அமுது காண்க; கருணையின்

அளவற்ற பெருமையைக் கண்டேன் காண்க; இந்நிலவுலகின்மீது தமது திருவடிபடச் செய்தனன் காண்க; சிவன் என்று அவனை அடியேனும் தெளிந்தேன் காண்க என்றவாறு.

அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க 65

இ - ள் : அவன் என்னை ஆளாக ஆண்டுகொண்டனன் காண்க; நீலப்பூப்போலும் கண்களையுடைய உமாதேவியைத் தமது இடப்பாதியில் உடையவன் காண்க; ஆதலால் அம்மையாகிய அவளும் அப்பனாகிய தானும் ஒன்றாக விளங்குபவன் காண்க என்றவாறு.

அவள் என்றது உமாதேவியை.

பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலின் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளரா விரிய 70
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட 75
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட

இ - ள் : மேலான இன்பக்கடலாகிய அதுவே, கரிய பெரிய மேகம்போலத் தோன்றி, திருப்பெருந்துறையாகிய மலையின்மேல் ஏறி, அழகிய மின்னொளி திசைகள்தோறும் விரிய, அம்மின்னொளியைக்கண்டு ஐம்புலங்களின் ஆசையாகிய பாம்புகள் அழிய, வெப்பமாகிய துன்பத்தைச் செய்யும் வேனிற்காலம் தன் பெரிய தலையை மறைத்துக்கொள்ள, மிகுந்த அழகினையுடைய செங்காந்தட்பூக்கள் ஒளிமிக்கு விளங்க, எம்முடைய அளவற்ற பிறவிகளைப்போல இந்திரகோபப் பூச்சிகளைத் தோற்றுவித்து, முரசு முழங்கினாற் போலப் பேரருளால் முழங்கி, தாமரைமலரை ஒத்த கூட்டிய கைகள் காந்தள் மலரைப்போலத் தோன்ற, குறையாத இனிய அருளாகிய மழைத்துளிகள் விழ, சிவந்த ஒளியினையுடைய வெள்ளமானது திசைகள்தோறும் புரண்டோட என்றவாறு.

இதுமுதல் பரமானந்தப் பெருங்கடல் மேகமாக வந்து மழை பொழிந்து வளமுறுத்தியவண்ணம் உருவக அணி தோன்ற உரைக்கப்பெறுகின்றது.

பரமானந்தப் பழங்கடல் - இறைவனது ஆனந்தமாகிய அளவற்ற கருணை. கடல் மக்களுக்கு நேரே பயன்படாது. ஆதலால் கடலே முகிலாகத் தோன்றி என்றருளப்பெற்றது.

திருவார் பெருந்துறை: திரு - ஞானம். 'போகமும் திருவும் புணர்ப்பானை' 'திருவே என் செல்வமே' என்ற இடங்களிலும் இப்பொருட்டாதலை எண்ணுக. இது சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி.

திருத்தகு மின்னொளி - சிவஞானமாகிற தக்க மின்னொளி. மின்னொளி வீசியவுடன், ஐம்புலக்கட்டாகிய பிரபஞ்சப் பேராசைப் பாம்புகள் வெயிலின்முன் புழுப்போலத் தானே அழிகின்றன என்பதாம்.

எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து: இடையறாது வரும் எம் பிறவியில் சினம் மிக்கு என்றும் வேறு பொருள் தோன்ற நிற்றல் காண்க.

பூப்புரையஞ்சலி-புஷ்பாஞ்சலி. மலர்ந்த கையை இணைத்து வைத்துள்ள இரட்டைக்கை வர்த்தனைகளுள் ஒன்று. இறைவனுக்குப் பூக்களை இடுகிறபோது வைத்துக்கொள்ளப்படுவது. புஷ்பாஞ்சலிக்கை மலர்ந்தநிலையில் மலர்ந்த செங்காந்தளைப் போல இருக்கும் என்பதறிக. தாமரைமலரை ஒத்த குவிந்த கை காந்தள்மலரைக் காட்ட என்று உரைகூறின் உவமைக்கு உவமையும், குவிந்த கையை விரிந்த காந்தளுக்கு ஒப்பிடுகின்ற ஒவ்வாமையும் தோன்றுதல் காண்க.

வரையுறக்
கேதக் குட்டம் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம் 80
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன
ஆயிடை

இ - ள் : மலையை ஒத்த அந்தத் துன்பமாகிய குளம் பக்கங்கள் உடையும்வண்ணம் உயர்ந்து, தண்ணீர்த் தாகத்தினால் ஓடிவருகின்ற நீளமான கண்களையுடைய மான் கூட்டம், அறுவகைச்

சமயங்களாகிய கானல்நீரை மிகப் பெரிய வாயினிடத்தே குடித்தும், வீணான பெரிய தாகம் தணியாது தளர்ச்சியோடும் வருந்தினவாகிய அவ்விடத்தே என்றவாறு.

வரையுறு அக்கேதக் குட்டம் கையற ஓங்கி - மலையை ஒத்த அந்தத் துன்பமாகிற குளம் பக்கங்கள் உடைய (வெள்ளம்) உயர்ந்து என்க. இதற்கு வேறு உரைப்பாரும் உளர்.

*வானப் பேரியாற் றகவயின்*
*பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்*
*சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்(து) 85*
*ஊழூ ழோங்கிய நங்கள்*
*இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்(து)*
*உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்*
*சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்*
*வெறிமலர்க் குளவாய் கோலி*

இ - ள்: தேவகங்கை உள்ளே பாய்ந்து நிரம்பி மேலெழுந்து, இன்பமாகிய பெரிய சுழி தெள்ளிச் சுழித்துக்கொண்டு சென்று, எமது பாசக்கட்டாகிய பெரிய கரையினை மோதி அலைத்து இடித்து, முறைமுறையாக வளர்த்துள்ள நம்முடைய இருவினைகளாகிற மாமரத்தை வேரொடு பறித்து எழுந்து, அழகிய திருவருளாகிய தண்ணீரை ஓடச் செய்து, உயர்ந்த மலைகளில் முளைத்த சந்தன மரங்களால் பெரிய அணையைக் கட்டி, தேன் விரியப்பெற்ற மணம் பொருந்திய மலர்களோடுகூடிய குளங்களின் இடங்களை வளைத்து என்றவாறு.

மா மரம் - பெரிய மரம் எனலுமாம். ஓட்டா - ஓடச்செய்து.

*நிறைஅகில் 90*
*மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்*
*மீக்கொள மேன்மேன் மகிழ்தலின் நோக்கி*
*அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்*
*தொண்ட உழவர் ஆரத் தந்த*
*அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க 95*

இ - ள்: நிறைந்த அகிலின் பெரிய புகையினையுடைய கரைக்கண் சேர்ந்துள்ள வண்டுகள் மொய்க்கின்ற குளத்தின் மேற் பரப்பில் வர, மேலும் மேலும் மகிழ்தலால் அதனைக் கண்டு, அருச்சனை என்னும் வயலிலே அன்பு என்னும் விதையை விதைத்து விளையச்செய்து, தொண்டர்களாகிய உழவர்கள் உண்ணத் தந்த அருள்வெளியில் பெறுதற்கு அரிய மேகம்போல விளங்குபவனாகிய சிவன் வாழ்க என்றவாறு.

வித்திட்டு - விதைத்து விளையச்செய்து. ஆர - நுகர. மேகன் - வரையாத வள்ளன்மையால் மேகத்தைப் போல்பவன் என்பதாம்.

*கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க*
*அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க*
*அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க*
*நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க*
*சூழிரும் துன்பம் துடைப்போன் வாழ்க* 100

*இ-ள்:* கரிய படத்தையுடைய பாம்பை அரைக்குக் கச்சையாக அணிந்த கடவுள் வாழ்க; செய்தற்கரிய தவத்தோர்க்கு அருள் வழங்கும் முதல்வன் வாழ்க; அச்சத்தை அகற்றிய வீரன் வாழ்க; நித்தலும் வலிய அழைத்து ஆட்கொள்ளுவோன் வாழ்க; உயிர்களைச் சூழ்ந்துள்ள பெரிய துன்பத்தைத் துடைப்போன் வாழ்க என்றவாறு.

கரும்பாம்பைக் கச்சையாக அணிந்துள்ளமையின் கரும்பணக்கச்சைக் கடவுள் என்றது. ஈர்த்து - புறநெறிக்கண் புலன் வயப்பட்டுச் செல்லும் அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு. நஞ்சு சிறிது எஞ்சியிருப்பினும், புண் ஆறுது சிறிது எஞ்சியிருப்பினும் பெருந்தீங்கு செய்தல்போலத் துன்பம் சிறிது ஒட்டியிருப்பினும் பல்கிப் பயனளிக்க முந்துமாதலின் இருந்த சுவடும் இல்லாமல் துடைப்போன் என்றது.

*எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க*
*கூரிருள் கூத்தொடு குனிப்போன் வாழ்க*
*பேரமைத் தோளி காதலன் வாழ்க*
*ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க*
*காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க* 105

*இ-ள்:* தன்னை வந்தடைந்தவர்களுக்கு அரிய அமுதத்தை அளிப்பவன் வாழ்க; மிக்க இருளில் கூத்தோடு வளைந்தாடுபவன் வாழ்க; பெரிய மூங்கில்போலும் தோள்களையுடைய உமாதேவியார்க்குக் காதலன் வாழ்க; அயலாக ஒழுகுபவர்க்கு அயலாகிய எம் இறைவன் வாழ்க; அன்பர்களுக்கு இளைத்தகாலத்து உதவ வைத்த மாநிதி போல்பவன் வாழ்க என்றவாறு.

கூத்தொடு குனிப்போன் - குனித்துக் கூத்தாடுபவன் என்க. நடனவகை யாவும் குனித்தாடும் கூத்துக்களேயாதல் தெளிக. எய்ப்பு - இளைப்பு. எய்ப்பினில் வைப்பு - இளைத்த காலத்திற்கு

உதவும் என்று சேமித்து வைக்கப்பெற்ற நிதியம். அதுதான் வைத்தமாநிதி என்பது.

*நச்சர வாட்டிய நம்பன் போற்றி*
*பிச்செமை ஏற்றிய பெரியோன் போற்றி*
*நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை*
*நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்*
*நிற்பன நிறீஇச்* **110**
*சொற்பதம் கடந்த தொல்லோன்*
*உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்*
*கண்முதல் புலனால் காட்சியும் இல்லோன்*
*விண்முதல் பூதம் வெளிப்பட வகுத்தோன்*
*பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்* **115**
*ஒழிவற நிறைந்து மேவிய பெருமை*
*இன்றெனக் கெளிவந் தருளி*
*அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த, ஒண்பொருள்*
*இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி*

இ - ள்: நஞ்சினையுடைய பாம்பை ஆட்டிய இறைவனுக்கு வணக்கம்; எம்மைத் தம் திருவடிக்கண் பித்தனாக்கிய பெரியோனுக்கு வணக்கம்; திருநீற்றுடன் காட்சிதரவல்ல கடவுளுக்கு வணக்கம்; நான்கு திசைகளிலும் நடப்பவற்றை நடக்கச்செய்தும், கிடப்பவற்றைக் கிடக்கச்செய்தும், நிற்பவற்றை நிற்கச்செய்தும் தான் சொல்லின்தரத்திற்கு அப்பாற்பட்டு விளங்கும் பழமையானவன்; மன உணர்வால் சென்று பற்றப்படாதவன்; கண் முதலிய இந்திரியங்களால் காணப்படுதலும் இல்லாதவன்; விண் முதலான ஐம்பெரும் பூதங்களும் தோன்றப்படைத்தவன்; பூவின் மணம்போல உயர்ந்து எங்கும் நீக்கமற நிறைந்து பரவிய பெருமையை, இன்று அடியேனுக்காக இரங்கி வந்து அருளி, அழிந்துபடும் இவ்வுடலை ஒழியச்செய்த ஒள்ளிய பொருளானவன்; அத்தகைய இறைவன் இன்று அடியேனுக்கு எளிவந்து இருந்தான்; அவனுக்கு வணக்கம் என்றவாறு.

நம்பன் - நம்பப்படத்தக்கவன் என்று வைணவ விரிவுரை நூல்கள் கூறும். பிச்சு - பித்து. இறைவன் திருவடியையன்றி வேறு எதிலும் செல்லாது நிலைத்த பித்தும் ஏறச் செய்தான் என்பதாம். பின்னரும் 'பிச்சேற்றி வாராவழி யருளி' (176) 'பெரும் பிச்சுத்தரும் பெருமான்' (408) என்றல் காண்க.

நீற்றொடு தோற்றவல்லோன் என்றது இறைதிருவுருவின் தனித்ததோர் சிறப்படையாளம் திருநீறு எனத் தெரிவித்தது.

திருநீற்றினல் ஆன்மாக்கள் தம் மலவலிமைகெடப் பதிக்காட்சி யெய்திக் களிப்பர் என்பதாம். உலகில் பொருள்கள் நிற்பன வும், நடப்பனவும், கிடப்பனவும் என மூவகைப்படும். நிற்பன-அசரங்களாகிய மரம் மலை முதலியன. நடப்பன-சரம்; அவை மனிதன் முதல் எறும்பு ஈருனவை. கிடப்பன-கிருமி, கீடம், பாம்பு முதலியன. அவை அவ்வவ்வினைகட்கு ஏற்ற உடம்பைப் பொருந்தியிருத்தலின் அவ்வவற்றை அவ்வவ்வாறு இயக்கு கின்ருன்; ஆனுலும் அவனை உரையின்தரத்தால் அளவிட்டுச் சொல்லமுடியாது என்பதாம்.

சொற்பதங்கடந்த தொல்லோன் என்பது வாக்கிற்கு அப் பாற்பட்ட தன்மையையும், உள்ளத்துணர்ச்சியிற்கொள்ளவும் படான் என்பது மனத்திற்கு எட்டாத் தன்மையையும், கண் முதற்புலனுல் காட்சியும் இல்லோன் என்றது மெய்க்கு எட்டாத் தன்மையையும் உணர்த்தின. ஒன்றற்கும் எட்டாத கடவுளை நாம் அறிவது எப்படி? என்று மந்தமதியினர் அயராதவாறும் ஆசை மீதூரும்வண்ணமும், அவனுல் படைக்கப்பட்டனவே விண்முதல் மண்ணீருன பூதங்களும் பௌதிகங்களும்; அவற் றைக்கொண்டு கருத்தாவுண்மை அறிக எனப் பக்குவாபக்குவ ஞானிகட்கும், பூவின் நாற்றம்போல எங்கும் பரவிச் செறிந்து இன்பம் தருவோன் எனப் பக்குவஞானிகளுக்கும் முறையே உண்மை உணர்த்தியவாறும்.

*அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி* 120
*ஊற்றிருந் துள்ளம் களிப்போன் போற்றி*
*ஆற்று இன்பம் அலர்ந்தலை செய்யப்*
*போற்று ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்*

இ-ள்: என்னுடைய உடலைக் கனியும் உடலாகச் செய்தான் அவனுக்கு வணக்கம்; ஊற்றுப்போல உள்ளத்திலிருந்து களிக்கச் செய்பவனுக்கு வணக்கம்; பொறுக்கலாற்றுத பேரின்பவெள்ளம் பொங்கி அலைசெய்ய, அதனைத் தாங்க இயலாத இவ்வுடலை யான் விரும்பேன் என்றவாறு.

அளிதரும்-மிகக் கனிந்து அளிகின்ற. அழிதரும் யாக் கையை ஒழித்து, அளிதரும் யாக்கையைச் செய்தோன் என மாற்றி இயைத்தலும் ஆம். களிப்போன்-களிப்பிப்போன். அலர்ந்து-விரிந்து. புகலேன்-விரும்பேன். 'போரெனில் புகலும் புனைகழல் மறவர்' என்புழிப்போல வந்தது.

*மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்*
*மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்* 125

*திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்*
*முறையுளி ஒற்றி முயன்றவர்க் கொளித்தும்*
*ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்(து)*
*உற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்*
*மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்* 130

இ — ள்: பச்சைமணியின் குவியலும், சிறந்த மணியாகிய மாணிக்கத்தின் திரட்சியும் ஒன்றுசேர்ந்து மின்னுகின்ற ஒளியினை ஒருசேரக்கொண்ட பொன்னொளி விளங்க, அதனைத் திசைமுகனாகிய பிரமன் முதலானோர் சென்று தேட அவர்களுக்கு ஒளித்தும், விதிப்படி மனம் ஒன்றி யோகநெறியான் காண முயன்றவர்க்கு ஒளித்தும், உற்றார் உறவினர்கள் அனைவரும் வருந்த, மனம் ஒன்றுபட்டு இறைவனைக் காணும் முயற்சியில் உறைத்து நிற்கும் தவத்தினர்க்கு ஒளித்தும், வேதங்களின் பாகுபாட்டையும் அவற்றின் தன்மையையும் நன்கு ஆராய்ந்து வருந்தியவர்க்கு ஒளித்தும் என்றவாறு.

மரகதமாணிக்கத்தின் குன்றும், செம்மாணிக்கத்தின் விளக்கமும் கலந்த ஒரு மின்னொளியோடு பொன்னொளி விளங்கப் பிரமன் எட்டுக் கண்களை உடைய நான்கு முகனாக இருந்தும், அவன் முதலியோர் தேடிக் கண்டிலர் என நயம் தோன்றக் கூறியது.

முறையுளி ஒற்றி முயன்றவர் யோகநூல் விதியின்படி மனத்தை மூலாதாரமுதல் ஆஞ்ஞைவரையுள்ள ஆறுதாரங்களிலும் நிலைபெறுத்தி முயன்றவர்களாகிய சிவயோகியர். அவர்களுக்குச் சிவஞானத்தான் அன்றிச் சிவம் அடையப் பெறுதாக ஒளித்தும் என்றது. இங்ஙனமே ஏனையவற்றிற்கும் காரணம் கூறிக்கொள்க.

உற்றவர் - சுற்றத்தார். வருந்த - ஊண் இன்றி உறக்கம் இன்றி உடற்சுகம் இன்றித் துன்புறுகின்றாரே என்று கவலை. உறைப்பவர் - தவத்தில் உறுதியாக இருப்பவர்கள்.

*இத்தந் திரத்தில் காண்டுமென் றிருந்தோர்க்(கு)*
*அத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்*
*முனிவற நோக்கி நனிவரக் கெளவி*
*ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து*
*வாள்நுதற் பெண்ணென ஒளித்தும்*

இ — ள்: இந்நூலிற்கூறிய நெறியிற்காண்போம் என்றிருப்பார்க்கு அந்த நூலினாலேயே, அந்த நூலுக்குள்ளேயே ஒளித்தும்;

வெறுப்பறத் தியானித்து, அருள் மிகுதிப்படப்பற்றி, ஆண் என்று கண்டோர் சொல்லத் தோற்றியும், அலியெனப் பெயர்ந்தும், ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பெண் என ஒளித்தும் என்றவாறு.

நனி வர - மிகுதியாக அருள் கிடைக்கப்பெற. கௌவி என்றது நழுவாமல் இறுகப்பற்றியதைக் குறிப்பது.

*சேண்வயின் 135*
*ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்*
*துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை*
*அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்*
*ஒன் றுண் டில்லை என்றறி வொளித்தும்*

இ—ள்: நெடுந்தூரத்தே ஐம்புல ஆசைகளையும் அகற்றி, பிறர் அணுகுதற்கரிய மலைகள்தோறும் சென்று, தான் முன் நுகர்ந்தவைகளை எல்லாம் அறவேவிட்டு, உயிர்மட்டும் இயங்கிக்கொண்டிருக்கும் தசைப் பற்றற்ற உடலையுடைய செய்தற்கரிய தவத்தினைச் செய்வார் காட்சிக்கு முழுதும் ஒளித்தும், இறைப்பொருள் ஒன்று உண்டென்றும் இல்லையென்றும் ஐயுற்றுத் துணிவுபெறாத உள்ளம் உடையவர் அறிவில் ஒளித்தும் என்றவாறு.

துற்றவை - நுகர்ந்தவை. இங்ஙனம் தவம் முயலும் அருந்தவர் தவமாகிய கன்மமே இறைவனை அடையும் பரமசாதனம் என்றிருப்பவர்கள். தவம் ஞானவாயிலாகும் என்பதனையறியாதவர்கள். ஆதலால் அவர்களுக்கு முற்ற ஒளிப்பாராயினார் இறைவன் என்பது.

*பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும் 140*
*ஒளிக்கும் சோரனைக் கண்டனம்*
*ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்*
*தாள்தளை யிடுமின்*
*சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்*
*பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும் 145*

இ-ள்: அன்றைக்குப் பழகுந்தோறும், இன்றைக்குப் பழகுந்தோறும் ஒளிக்கும் கள்வனைக் கண்டுபிடித்துவிட்டோம் ஆதலான் அவனை வந்து வளைத்துக்கொள்ளுங்கள் வளைத்துக்கொள்ளுங்கள்; அன்றலர்ந்த மலர்களான் இயன்ற மாலைகளைக்கொண்டு தாளில் விலங்கிடுங்கள்; சுற்றுங்கள்; பின்றொடருங்கள்; விடாதேயுங்கள்; பிடியுங்கள் என்று கூறியவர்களின் பற்றுதலுக்கு முழுதும் ஒளித்தும் என்றவாறு.

*தன்னே ரில்லோன் தானே யானதன்மை*
*என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி*
*அறைகூவி ஆட்கொண் டருளி*
*மறையோர் கோலங் காட்டி யருளலும்*

இ - ள் : தனக்கு யாரும் எவ்வகையானும் ஒப்பில்லாத இறைவன் தானேயான தன்மையை, என்னோடொத்த இயல்பினையுடையார் கேட்கும்வண்ணம் குருவாக வந்து உபதேசித்து, அறைகூவி அழைத்து, ஆளாக ஏற்றருளி, அந்தணவடிவத்தைக் காட்டி அருளிய அளவிலே என்வாறு.

'தன்நேரில்லோன்' 'என்நேர் அனையோர்' என்பவற்றுள் முன்னது பெயர்ச்சொல்; பின்னது வினைச்சொல். நேர் - ஒப்பு. நேர் - ஒத்த. அறைகூவல் - எமக்கு ஆளாகிப் பயனுறுவார் அனைவரும் வரலாம் எனக் கூவிக்கூறல். கூவியறைதல் என்பது அறைகூவல் ஆயிற்று.

*உளையா அன்பென் புருக ஓலமிட்(டு)* 150
*அலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கித்*
*தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்*
*பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து*
*நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்*
*கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்* 155
*ஆற்றே னாக அவயவம் சுவைதரு*
*கோற்றேன் கொண்டு செய்தனன்*

இ - ள் : வருத்தாத அன்பு என்பும் உருக, இரைந்து, அலைகடலின் அலையைப்போல ஆரவாரித்துச் சிறந்து, தலை மயங்கிக் கீழ்விழுந்து புரண்டு கதறி, பித்தரைப்போல மயங்கி, வெறியரைப் போலக் களித்து, நாட்டிலுள்ள மக்கள் மயங்கவும், கேட்டவர்கள் வியப்படையவும், மதயானை தன்மேல் பாகனை ஏறவிடாமைக்குக் காரணமாய மிகப் பெரிய செருக்கினைப்போல அன்பினைத் தாங்க இயலாது யான் சுழல, என் உறுப்புக்களைக் கொம்புத்தேனைக் கொண்டு ஆக்கினான் என்றவாறு.

உளையா அன்பு - வருத்தாத அன்பு. உலகப்பொருளில் செலுத்தப்படும் அன்பு இன்பம் பயப்பதுபோலத் தோன்றிப் பின் துன்பம் விளைப்பதாகலானும், இறையன்பு முழுவின்பமயமே ஆகலானும் இங்ஙனம் கூறியது. உளையா அன்பு - வெறுப்பில்லாத அன்பு என்பாரும் உளர். பித்தர் - சித்தங் கலங்கியவர். மத்தர் - உடற்கொழுப்பால் வெறிபிடித்தலைபவர். கோற்றேன் - கொம்புத்தேன்.

*ஏற்ருர் மூதூர் எழில்நகை யெரியின்*
*வீழ்வித் தாங்கன்(று)*
*அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்* 160
*ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்*
*தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்*

இ - ள் : பகைவர்களின் ஊர்களாகிய முப்புரங்களையும் அழகிய சிரிப்பிலுண்டான நெருப்பில் விழச்செய்தாற்போல, அவ்விடத்து அன்று திருவருட் பெருஞ்சோதியில் அடியோமும், எமது அடிக் குடிலுள் ஒருவரும் தவருமல் ஒடுக்கிக்கொண்டனன்; எனக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல நன்ருக விளங்கித் தோன்றுவா ஞயினுன் என்றவாறு.

ஏற்ருர் - எதிர்த்தவர்; பகைவர். அடியோம் அடிக்குடில் ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன் - அடியேங்களையும், எம் சிறு குடிலாகிய உடலையும் அதனுள் வாழும் பொறி புலன்களையும் தவருதவண்ணம் ஒடுக்கினன் எனலுமாம்.

*சொல்லுவ தறியேன் வாழி முறையோ*
*தரியேன் நாயேன் தானெனைச் செய்தது*
*தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்(கு)* 165
*அருளிய தறியேன் பருகியும் ஆரேன்*
*விழுங்கியும் ஒல்ல கில்லேன்*

இ - ள் : தேவரீரிடத்துச் சொல்லிக்கொள்வது ஒன்றையும் யான் அறிந்திலேன்; வாழ்வாயாக; நாயை ஒத்த அடியேன் தாங்கமாட்டேன் : இது முறையோ ! அடியேனைத் தேவரீர், ஆக்கிய விதத்தை ஒருசிறிதும் அறியேன், ஆ ! ஆ !! நான் இறந்தேன்; தேவரீர் அருளிய அருளமுதத்தைக் குடித்தும் நிறைவெய்திலேன்; கனிபோல விழுங்கியும் பொறுக்கமாட்டேன் என்றவாறு.

துன்ப நுகர்வுக்காகக் கன்மபூமியாகிய இதில் உதவிய உடம்பையே இன்பமயம் ஆக்கினன் ; அதன்திறம் நம்மால் அறியக்கூடவில்லை என்பார் 'தானெனைச் செய்தது தெரியேன்' என்ருர். இன்பத்துள்படிந்து இன்பமேயாஞர் தம்மை முனைத் துக் காணமாட்டாமையின் 'செத்தேன்' என்றருளினுர்.

*செழுந்தண் பாற்கடல் திரைபுரைவித்(து)*
*உவாக்கட லள்ளுநீர் உள்ளகந் ததும்ப*
*வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறுந்* 170
*தேக்கிடச் செய்தனன்*

இ - ள் : வளமான குளிர்ந்த பாற்கடலின் அலைகளை ஒப்பச் செய்து, நிறைமதிநாளில் கடல் நடுவிலுள்ள நீரைப்போல மனத்தின் உள் இடம் ததும்ப, உரை கடந்த, அமுதமானது மயிர்க்கால் தோறும் வந்து நிறையச்செய்தனன் என்றவாறு.

கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ(து) 175
உள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்(கு)
அள்ளூ றாக்கை அமைத்தனன்

இ - ள் : நாயின் உடலினுள்ளே குடியாக இருந்து இனிய தேனைப் பாய்ச்சி நிரப்பிய அற்புதத்தை ஒப்பக் கொடியவனாகிய எனது ஊன் நிறைந்த உடம்புதோறும் அமுதமழையை என்புத் துளைகள்தோறும் ஏற்றினன்; உருகுவதாகிய மனத்தைக்கொண்டு கண்ணுக்குப் புலனாம்வண்ணம் ஒருருவம் செய்தாற்போலக் கசிவதாகிய உடலைப் படைத்துக் கொடுத்தான் என்றவாறு.

ஒள்ளிய
கன்னல் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்தேன் கலக்க 180
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.

இ - ள் : ஒளி பொருந்திய கரும்பையும் விளவின் கனியையும் உண்ணும் ஆண் யானையைப்போல, கடைமுறையாக அடியேனையும் பேரின்பத்து நிலைபெற ஆக்கிவைத்தான்; என்னுள்ளே திருவருளாகிய தூய தேன் கலக்க, பிரமனும் திருமாலும் அறியாத தன்மையனாகிய பெருமான் அருளொடு கலந்த உயர்ந்த அமுதத்தைச் செய்துவைத்தான் என்றவாறு.

இவ்வரிகள் இருபதும் திருவருளை நுகரும்போது உளதாம் மனம் வாக்குக்கு எட்டாத அனுபவநிலையைச் சொல்லமாட்டாமை சொல்லிக்காட்டியது. வான் தேன் - தூய தேன். வான்றுகள் என்புழிப்போல வான்றேன் திரிந்தது.

# 4. போற்றித்திருவகவல்

[ சகத்தின் உற்பத்தி ]

இவ்வகவலில் போற்றி என்னும் வணக்கத்தை அறிவிக்கும் சொல் மிகுதியாக வருதலின் போற்றித்திருவகவல் எனப் பெயர் பெற்றது. இதில் முதற்கண் உலகத்தில் உயிர்கள் உடம்புகளோடு கூடித் தோன்றுமுறை கூறப்படுதலின் இது 'சகத்தின் உற்பத்தி' என்னும் கருத்துத் தொல்லாசிரியரால் குறிக்கப்பெற்றது. இதுவும் தில்லையில் அருளிச்செய்யப்பட்டவற்றுள் ஒன்று.

திருச்சிற்றம்பலம்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ<br>
ஈரடி யாலே மூவுல களந்து<br>
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்<br>
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்(று)<br>
அடிமுடி யறியும் ஆதர வதனிற் 5<br>
கடுமுரண் ஏனம் ஆகி முன்கலந்(து)<br>
ஏழ்தலம் உருவ இடந்து பின்னெய்த்(து)<br>
ஊழி முதல்வ சயசய என்று<br>
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்<br>
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில் 10<br>
யானை முதலா எறும்பீ றாய<br>
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்<br>
மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்(து)<br>
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்<br>
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும் 15<br>
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்<br>
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்<br>
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்<br>
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்<br>
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும் 20<br>
ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்<br>
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்<br>
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்<br>
தக்க தசமதி தாயொடு தான்படுந்<br>
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும் 25<br>
ஆண்டுக டோறும் அடைந்தவக் காலை

ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில் 30
ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்(து)
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்(து)
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும் 35
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும் 40
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின 45
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும் 50
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்(து) 55
உலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத் 60
தொழுதுளம் உருகி யழுதுடல் கம்பித்(து)
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக் 56

கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச் 70
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா(து)
அருபரத் தொருவன் அவனியில் வந்து 75
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி 80
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச் 85
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி 90
கூட லிலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி 95
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி 100
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி

விரைசேர் சரண விகிர்தா போற்றி 105
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி 110
கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி 115
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி 120
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த வொருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி 125
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருண் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி 130
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா வானந்த வாரி போற்றி
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி 135
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி 140
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி

நனவிலு நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையும் எந்தாய் போற்றி 145
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறு போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி 150
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி 155
குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி 160
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்(கு)
அத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி 165
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி 170
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி 175
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி 180
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி

மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி 185
இலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி 190
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி 195
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா வமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி 200
தாளி யறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி 205
எந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி 210
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருவ போற்றி 215
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி 220
புரம்பல எரித்த புராண போற்றி

பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி. 225

திருச்சிற்றம்பலம்.

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்(று)
அடிமுடி அறியும் ஆதர வதனில் 5
கடுமுரண் ஏனம் ஆகி முன்கலந்(து)
ஏழ்தலம் உருவ இடந்து பின்எய்த்(து)
ஊழி முதல்வ சயசய என்று
வழுத்தியும் காணா மலரடி இணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில் 10

இ - ள்: பிரமன் முதலான தேவர்கள் வணங்கி எழும்ப, இரண்டு அடிகளாலே மூன்றுலகத்தையும் அளந்து, நான்கு திசைகளிலும் உள்ள முனிவர்களும் ஐம்புலன்களும் களிப்பான் மலர வணங்கும் ஒளிவிடுகின்ற மணிமுடியினையுடைய திருமால், அன்று, திருவடியின் முடிவை அறியும் ஆசையால், மிக்க வலிமையையுடைய பன்றியுரு ஆகி, முற்பட்டுக் கீழ் ஏழுலகங்களையும் ஊடுருவத்தோண்டி, பிறகு இளைப்புற்று, 'பேரூழிக்காலத்தும் விளங்கும் முதல்வரே! உமக்கு வெற்றி வெற்றி' என்று சொல்லித் தோத்திரித்தும் காணமுடியாத தாமரைமலர் போன்ற திருவடிகள் இரண்டும், நெடிய கடல் சூழ்ந்த நிலவுலகின்கண் யாங்கள் வணங்குதற்கு எளிதாகி வந்து என்றவாறு.

மூவுலகு - பூவுலகு, வளியுலகு, வானுலகு என்ற மூன்று. இதனை வடமொழி இலிங்கபுராணம் பதினேழாம் அத்தியாயங் கொண்டு தெளிக.

அடி முடி - அடியின்முடிவு. முடி: முதனிலைத்தொழிற்பெயர். ஏழ்தலம்: அதல, விதல, சுதல, நிதல, தராதல, ரசாதல, மகா தலம் என்பன. இடந்து - பிளந்து.

யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்

*மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்(து)*
*ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்*
*ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்* 15

இ-ள்: யானைமுதல் எறும்பு ஈறுன கேடில்லாத யோனி களிற்பிறத்தலினின்றும் தப்பியும், மனிதப்பிறவியில் தாயின் வயிற்றில் குன்றுதல் இல்லாத புழுக்கள் இடும் சண்டையின் தப்பியும், முதல்மாதத்தில் தான்றிக்காயின் வடிவையுடைய தாகி, இருவகைப்பட்ட தன்மையில் தப்பியும் என்றவாறு.

இதுமுதல் முப்பதுவரிகள் கருப்போபநிடதக்கருத்துக்களை அறிவிப்பன. ஊனமில் யோனி - வெள்ளம்போல இடையறாது வரும் பிறப்பு.

*இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்*
*மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்*
*ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்*
*அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்*
*ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்* 20
*ஏழு திங்களின் தாழ்புவி பிழைத்தும்*
*எட்டுத் திங்களின் கட்டமும் பிழைத்தும்*
*ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்*
*தக்க தசமதி தாயொடு தான்படும்*
*துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்* 25

இ-ள்: இரண்டாம் மாதத்தில் கருத்தோற்றமாகிய ஒருதன்மையில் பிழைத்தும், மூன்றும் மாதத்தில் தோன்றும் மதநீருக்குத் தப்பியும், நான்காம் மாதத்தில் பேரிருளுக்குத் தப்பியும், ஐந்தாம் மாதத்தில் சாதற்குத் தப்பியும், ஆறும் மாதத்தில் கொலைக்குக் காரணமாகிய பழிச்சொல்லுக்குத் தப்பியும், ஏழாம்மாதத்தில் கீழ்நிலத்தில் சரிதலுக்குத் தப்பி யும், எட்டாம்மாதத்தில்உளதாம் துன்பத்திற்குத் தப்பியும், ஒன்பதாம் மாதத்தில்வரும் துன்பத்திற்குத் தப்பியும், கருப் பையை விட்டு வெளியேறுதற்குத்தக்க பத்தாம் மாதத்தில் தாயும் தானுமாகப் படும் துன்பக்கடலில் விளையும் துன்பத் திற்குத் தப்பியும் என்றவாறு.

தாயின் வயிற்றில் புகுந்த கரு, முதல்மாதத்தில் தான்றிக் காய்போல இருக்கும். அப்போது கருவினுள் பகைப்புழுக்கள் புகாதவாறு மஞ்சட்கருவால் தோற்றும் மெல்லிய தோலால்

கருவாயை மூடும். அவ்வண்ணம் மூடாதாயின் தாய்க்கு உண்டாகும் மயக்கம் நோய் ஆகியவற்றால் கருச்சிதையும். ஆகவே அந்த மயக்கம் நோய் என்ற இரண்டற்கும் தப்பி என்றார்.

இரண்டாம் மாதத்தில் கருத்தோற்றங்கண்டு, ஆண்கருவும் பெண்கருவும் ஒன்றுபட்டதன்மை எய்தும். அப்போதும் இவை ஒன்றுபடாமல் புழுக்கள் புகுந்து அழித்தலும் உண்டு. அங்ஙனம் அழிதலினின்றும் தப்பியும் என்பது.

மூன்றும்மாதத்தில் மாதந்தோறும் கழியவேண்டிய தாயின் மதநீர் கருப்பையுள் சென்று நிறையும், அதனால் கருப்பை மெலிந்த மாதர்க்குக் கருச்சிதைதலும் உண்டு; அதலிருந்து தப்பியும்.

நான்காம் மாதத்தில் தாயின் மதநீர் நிரம்பிய கருப்பை இருண்டு கிடக்கும் என்பது உணர்த்தியவாறு,

ஐந்தாம் மாதத்தில் மதநீர்ப் பெருக்காலும், இருள்சூழ்ந்துள்ளமையாலும் கரு அழிதற்கு இடமுண்டு ஆதலின் அதிலிருந்து தப்பியும் என்றார்.

ஆறும் மாதம் வரையில் கருவாய்த்த தன்மை ஒருவர்க்கும் புலனாகாமலிருக்கும். ஆறுமாத அளவில்தான் தெரியும். அப்போது அயலார் பழித்துரை வழங்குவார்கள். அவர்கள் பழித்துரையைத் தாங்கமாட்டாத பெருநாணமுடைய தாயார் சிலர் ஊறுவிளைவித்துக் கொள்ளவும் கூடும். அதிலிருந்து தப்பியும் என்க. இங்ஙனமன்றிக் கணவனில்லாக் காலத்தும் விதவையான காலத்தும் உண்டான கருவைக்கண்டு உண்டான பழி என்பாரும் உளர். அது ஏலாமையும், சுவாமிகள் வாயாற் சொல்லலாகாமையும் தெளிந்து தேர்க. நேர்மையால் வாய்த்த கருவைக்கண்டும் ஊரவர்கள் நகையாடுதலும் முதற்கருவாயின் தான் தாங்கமாட்டாது மகளிர் வருந்துதலும் இயல்பாதலைக் காண்க.

ஏழாம் மாதத்தில் நன்கு முற்றிய கரு உருவமெல்லாந் தோன்றிக் காணப்படுதலின் அடிவயிற்றில் சரியத்தொடங்கும். அப்பொழுது கருப்பை மெலிந்தவர்களுக்குக் கருச்சிதைதலும் கூடும்; அதிலிருந்து தப்பியும் என்றது.

எட்டாம் மாதத்தில் கரு நன்குவளர்ந்து, மலக்குடலையும், கழிவாயிலையும் நெருக்கிக்கொள்ளுதலின் தாய்க்கு மலங்கட்டிக் கொள்ளும்; அதனால் கருவுக்கும் தீங்கு உண்டாம். ஆதலால்

'கட்டமும் பிழைத்தும்' என்றூர். கட்டம் - மலம்; துன்பம் எனலுமாம்.

ஒன்பதாம் மாதத்தில் கரு வெளிப்படுதற்குமுன் எச்சரிக்கையாகப் புரண்டுகொண்டிருக்கும். அதனை 'ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்' என்றருளினூர்.

பத்தாம் மாதம் வெளிவருதற்குரிய மாதம் ஆதலால் 'தக்க தசமதி' என்றூர். அக்காலத்துத் தாயும் சேயும் படுந்துன்பம் அளவிலடங்காதன ஆதலின் 'துக்க சாகரம்' என்றூர்.

*ஆண்டுகள் தோறும் அடைந்தவக் காலை*
*ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்*
*காலை மலமொடு கடும்பகல் பசிநிசி*
*வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்*

இ - ள்: ஆண்டுகள் தோறும் பருவவளர்ச்சி அடைந்த போது வினைகளைத் தொகுத்தும் இருத்தியும் வைப்பதால் உளதாகிய துன்பங்களுக்குப் பிழைத்தும்; காலையில் மலத்தாலும், உச்சியில் பசியாலும், இரவில் தூக்கத்தாலும், இவையொழிந்த காலங்களில் பயணங்கள் போவதாலும் நேருகிற துன்பங்களுக்குத் தப்பியும் என்றவாறு.

ஆண்டு - வயது. பருவம் முற்றி வயது வருந்தோறும் என்பதாம்.

*கருங்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்* 30
*ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்*
*கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்(து)*
*எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்(து)*
*ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்*
*கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்* 35

இ - ள்: கரிய கூந்தலினையும், சிவந்த வாயினையும், வெண்மையான பற்களையும், கார்காலத்து ஆண் மயிலைப் போன்ற ஒருங்கிய சாயலையும், ஒன்றோடொன்று நெருங்கி, உள்ளே களிப்புக்கொண்டு, கச்சு என்னும் மார்ப்பட்டிகை அறும்படி இறுமாந்து நிமிர்ந்து, ஒளி வீசி, எதிரே பருத்து, இடுப்பு இளைத்து வருந்த எழுந்து, பக்கங்களில் அடிபருத்து, ஈர்க்குங்கூட இடையில் நுழையமுடியாதவண்ணம் நெருங்கியிருக்கின்ற இளமைமிக்க முலையினையும் உடைய பெண்களின் கூரிய கண்களின் சூறைக்காற்றுக்குத் தப்பியும் என்றவாறு.

ஒருங்கிய - ஒன்றுசேர்ந்து திரண்ட. "உடங்கு ஒருங்காகும்" என்பது தொல்காப்பியம். சாயல் - மென்மை; இது ஐம்பொறிகளானும் நுகரப்படும் மென்மையை உணர்த்தும்.

கூர்த்தகொள்ளை எனக்கூட்டி மிக்கசூறை என்பாருமுளர். பசி தூக்கம் முதலிய துன்பங்களைக் காட்டிலும் காளையராய் கன்னியரால் எய்தும் துன்பம் பெரிதாகலின் அதனியல்பையும், அதனைச்செய்யும் மாதர் தகுதியையும் மிகுதியாகக் கூறினர்.

*பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்*
*மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்*
*கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்*

இ - ள்: பித்துக்கொண்ட உலகத்தவர்களாகிய பெரிய நீர்த்துறையில் கிடந்து கலக்கும் மதச்செருக்குடைய யானை போலும் அவாவினின்று தப்பியும், கல்வியென்று உரைக்கப்படும் பலவாகிய கடல்களினின்று தப்பியும் என்றவாறு.

*செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்*
*நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும் 40*
*புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்*

இ - ள்: செல்வம் என்னும் துன்பத்தினின்று தப்பியும், வறுமை என்னும் பழைய நஞ்சுக்குத் தப்பியும், புல்லிதான பல பிறவிவேறுபாடுகளுக்குத் தப்பியும் என்றவாறு.

*தெய்வம் என்பதோர் சித்தமுண் டாகி*
*முனிவி லாததோர் பொருளது கருதலும்*
*ஆறு கோடி மாயா சத்திகள்*
*வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின 45*

இ - ள்: கடவுளென்பதொரு கருத்துவிளைந்து, வெறுப்பில்லாததாகிய ஒப்பற்ற பொருளையே எண்ணத்தொடங்கிய அளவில், ஆறுகோடி மாயையின் சத்திகள் வேறுவேறாகத் தத்தம் வஞ்சனைகளைச் செய்யத் தொடங்கிவிட்டன என்றவாறு.

புறவாழ்வாகிய உலகியல் போகங்களில் சிக்கியவனுக்குக் கடவுட்சிந்தனையுண்டாதல் மிகமிக அருமையாதலின் 'தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி' என்றருளினர். ஆறு கோடி என்பது மிகப்பல என்னும் பொருளில் வந்தது. மாயாசத்திகளாவன மாயையின் காரியமான உடல், உலகு, கரணங்கள்,

ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும் 50
சரத மாகவே சாத்திரம் காட்டினர்

இ - ள்: நம்பத்தக்கவர்களான அயலார்கள் பலர்கூடி கடவுள் இல்லை என்னும் நாத்திகவாதம்பேசி நாத்தழும்பேறினர்; சுற்றத்தார் என்னும் தொன்றுதொட்ட பசுக்கூட்டங்கள் எம்மைப்பற்றி அண்ணா என்றும், தம்பி என்றும், அப்பா என்றும் அழைத்துப் பதறினார்கள்; மிகுதியாக விரதங்களே வீடுபேற்றினைத்தரும் பரம்பொருளென்று சொல்லி, அதனை உண்மையென்று சாதிக்க நூல்களை ஆதாரமாகக்காட்டினர் என்றவாறு.

விரதங்களே பரமென்பார் மீமாஞ்சகருள் ஒருசாராரான வேள்வியும் சடங்குகளுமே வீடுபேறு தரும் என்னும் கன்மப் பிரமவாதிகள். சரதம் - மெய்ம்மை.

சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்

இ - ள்: பலவேறு சமயவாதிகள் அனைவரும் தங்கள் தங்கள் மதங்களில் வந்து அமைதியுறுக என்று அரற்றிச் சண்டையிட்டனர் என்றவாறு.

மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த்(து) 55
உலோகா யதனெனும் ஒண்திறல் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்

இ - ள்: செறிந்த மாயாவாதமென்னும் சூறைக்காற்று என்றும் அடித்து ஒலிக்க, உலோகாயதன் என்னும் ஒளி பொருந்திய வலிய பாம்பினது கலை வேறுபாடுகளையுடைய கொடிய நஞ்சு வந்து பொருந்த, அதனால் எவ்வளவு பெரிய வஞ்சனைகள் பலவும் தம்மை வந்து சூழவும் என்றவாறு.

மிண்டிய - திட்பமான; செறிந்த. 'மிண்டர்க்கு மிண்டலால் பேசேன்' என்னும் சுந்தரர் வாக்கையும் காண்க.

உலகாயதம் - உலகத்தால் இழுக்கப்பட்டு அறிவு திரிந்து கண்டதேகாட்சி, கொண்டதே கொள்கை என்னும் மதம். அது உயிர்நூல், வேதிநூல், விலங்குநூல் முதலிய பல கலைகளாக வேறுபட்டுத் தீண்டியவுடன் கொல்லும் நஞ்சுபோலக் கேட்ட வுடன் அறிவு திரித்தலின் 'கலாபேதத்த கடுவிடம்' எனப் பட்டது.

*தப்பா மேதாம் பிடித்தது சலியாத்*
*தழலது கண்ட மெழுகது போலத்* 60
*தொழுதுளம் உருகி அழுதுடல் கம்பித்(து)*

இ - ள்: தப்பாமல், தாம் பிடித்த பிடியை விடாது, தீயைக்கண்ட மெழுகைப்போல மனமுருகி, வணங்கி அழுது உடல் நடுங்கி என்றவாறு.

உலகாயதம் மாயாவாதம் முதலிய மதங்கள் தாக்க, அவற் றால் தவறிப்போகாமலும் வீடுபேறாகிய தமது லட்சியத்தினின் றும் தவறாமலும் என்பதைத் 'தப்பாமே' என்பதால் கொள்ள வைத்தவாறும்.

சலியா - சலியாது; விடாது. இது ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். 'காக்கை கரவா கரைந்துண்ணும்' என்புழிப் போல. கண்ட என்பது அணுகிய என்னும் பொருளில் அணிச் சுவைபட நின்றது. தொழுதல் மெய்யின்செயல், உருகல் மனத் தின் செயல், ஆதலால் உருகித்தொழுது என மாறுக. அழுத லாவது உவகையால் கலுழ்தல். கம்பித்தல் - நடுங்குதல்; பெறு தற்கரிய இன்ப உணர்ச்சியை எய்தியஞான்று உண்டாகும் மெய்நடுக்கம்.

*ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்*
*கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்*
*படியே யாகிநல் லிடையறா அன்பின்*
*பசுமரத் தாணி அறைந்தாற் போலக்* 65
*கசிவது பெருகிக் கடலென மறுகி*
*அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்*
*சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப*

இ - ள்: ஆடியும், பாடியும், அலறியும், வணங்கியும், 'குறடும், அறிவிலியும் தாம் பிடித்ததை விடாது' என்னும் பழமொழிப்படியேயாகி, நல்ல எண்ணெயொழுக்குப்போன்ற இடையறா அன்பால் பச்சைமரத்தில் ஆணி அடித்தாற்போல,

மனநெகிழ்ச்சி பெருகி, கடலைப் போன்று சுழன்று, மனங் குழைந்து, அதற்குப் பொருத்தமாக உடம்பு நடுங்கி, உலகத்தவர் தம்மைப் பேயென்று சொல்லி நகைக்க என்றவாறு.

ஆடுதலுடன் நிகழ்வது பாடுதலாதலின் ஆடியும் பாடியும் என்றும், பாடுகிறநிலையில் ஆனந்தபரவசம் விளைய அலறுதல் விளைதலின் அதனை அடுத்து அலறியும் என்றும், சிந்தையும் வாயும் தம் செயலற்றுப் போனநிலையில் விழுந்து வணங்குதலாகிய பரவுதல் விளையுமாதலின் பரவியும் என்றும் கூட்டிப் பொருள்கொள்க.

'கொடிறும் பேதையும் கொண்டது விடாது' என்பது 'மூர்க்கனும் முதலையும் பிடித்ததை விடா' என்பதுபோன்றதோர் பழமொழி. இறுகப்பற்றுதல் அறிவுடைமையானும் நிகழும்; அறியாமையானும் நிகழும். பேதை அறியாமை மிகுதியால் கொளுத்தக்கொண்டும் கொண்டது விடாமலிருப்பன். கொடிறு ஓர் கருவியாதலால், ஒருவன் தனக்கோ பிறருக்கோ ஒரு நன்மை கருதிப் பொருளைப் பற்றச்செய்ய அது விடாது பற்றிநிற்கும். ஆகவே ஒருவன் தூண்ட நன்மைக்கே பற்றிநிற்கும் கொடிறு, அவனருள் தூண்ட அவனை இறுகப்பற்றி விடாதிருக்கும் மெய்யன்பர்க்கு உவமமாயிற்று என்க.

நல்லன்பு, இடையறு அன்பு எனத் தனித்தனியே கூட்டுக. அன்பு சென்றுபற்றிய இடம் நோக்கியே நன்மையும் தீமையும் பெறும் ஆதலின், ஈண்டுத் திருவடியைப் பற்றிநிற்கும் அன்பு நல்லன்பாயிற்று. எண்ணெய் ஒழுக்குப் போலவும், ஆற்று நீரோட்டம் போலவும் என்றும் ஒருபடித்தாயது இடையறுத அன்பு என்க.

பசுமரத்து ஆணி - பச்சைமரத்தில் ஆணி அறைந்தால் அது மரவளர்ச்சியால் இறுகிப் பின் பிடுங்க முடியாமற்போம். அதுபோல இறைவனடியிற் செறிந்து எனவும், ஆணியடித்த பகுதியிலிருந்து நீர்சொரியும் அதுபோலக் கசிவது பெருகியும் எனவும் இயைக்க. அனுகூலம் என்ற வடசொல் அனுகுலம் என்றானது செய்யுள்விகாரம்.

'சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப' என்றதன் கருத்து, பின்னரும் 'நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப, நாமும் அவர் தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப' என நினைவுகூரப்படுதல் காண்க.

*நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை*
*பூணது வாகக் கோணுத லின்றிச்* 70

*சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்*
*கதியது பரமா அதிசய மாக*

இ-ள்: வெட்கத்தை விட்டு, நாட்டிலுள்ளார் பழிப்பதை மனங்கோளுமல், அணிபோல ஏற்று, யாம் எல்லாவற்றிலும் வல்லேம் என்னும் திறமையை இழந்து, அறியும் மயக்கம் மீதூரப்பெற்று, தாம் அடைதற்குரிய பேரின்பமே பெரிய வியப்பாகத் தோன்ற என்றவாறு.

சதுர் - வன்மை. அறிமால் - ஞானப்பித்து. பரம+அதிசயம் = பரமாதிசயம் எனத் தீர்க்கசந்தி பெறவேண்டியது பரமாவதிசயம் என விகாரப்பட்டது செய்யுள்நோக்கி.

*கற்ரு மனமெனக் கதறியும் பதறியும்*
*மற்ருேர் தெய்வம் கனவிலும் நினையா(து)*
*அருபரத் தொருவன் அவனியில் வந்து* 75
*குருபர ளுகி அருளிய பெருமையை*

இ-ள்: கன்றையுடைய பசுவின் மனம்போலக் கதறியும், பதறியும், வேறு தெய்வத்தைக் கனவிலும் நினையாமல், அறிதற்கு அரிய பரம்பொருளான ஒப்பற்ற தலைவன் இப் பூமியிலே வந்து, எனக்குக் குருநாதனுகி, அருள் வழங்கிய பெருமையும் என்றவாறு.

கற்ரு - ஈன்ற அணிமையான பசு.

*சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்*
*பிறிவினை அறியா நிழலது போல*
*முன்பின் ளுகி முனியா தத்திசை*
*என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி* 80
*அன்பெனும் ஆறு கரையது புரள*
*நன்புல ளென்றி நாதவென் றரற்றி*
*உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்*
*கரமலர் மொட்டித் திருதய மலரக்*
*கண்களி கூர நுண்துளி அரும்ப* 85

இ-ள்: எளிதிலே கிடைத்தமையால் அதனை எளிமையாக எண்ணி இகழ்ந்துவிடாமல் திருவடிகள் இரண்டையும் விட்டுப் பிரியாத நிழலைப்போல முன்னும் பின்னும் ஆகி, வெறுக்காமல், குருநாதன் எழுந்தருளிய அத்திசையையே நோக்கி, எலும்பும் தன் வன்மைகெட்டு உருக, மிகக் கனிந்து இரங்கி, அன்பு என்னும் ஆறு கரைபுரண்டு செல்ல, நல்ல

பொறியுணர்ச்சிகள் ஐந்தும் ஒன்றுபட்டு, தலைவா! தலைவா! என்று புலம்பி, சொல் குழறி, மயிர் சிலிர்க்க, மலர்போன்ற கைகளைக் குவித்து, மனம் மலர்ச்சியடைய, கண் களிப்பு மிகுதலால் நுண்ணிய நீர்த்திவலைகளைத் தோன்றச் செய்ய என்றவாறு.

திருவடியிணையைச் சாரவேண்டிய விதிவகைகளை 'பிறிவினை அறியா நிழலதுபோல முன் பின்ஆகி' என்ற பகுதியாற் குறிக்கின்றார்கள். காலையில் மேற்கிலும், மாலையில் கிழக்கிலுமாக ஓடுதலும், எப்போதும் பிரியாதிருத்தலுமாகிய இரண்டு இயல்புகளை உடையது நிழல். வள்ளுவர் பெருந்தகை 'நிழல் தன்னை வீயாது அடியுறைந்தற்று' என்றதும் காண்க. நிழல் பிரியாதவாறு போல நாம் இறைவனைப் பிரியாமல் என்பதாம். அல்லதும், ஆசாரியன் செல்லும் பகலாயின் பின்னும், இரவாயின் முன்னுமாக நிழல்போலத் தொடர்ந்து செல்லுதல் மரபு ஆதலின் இங்ஙனம் கூறினர் எனலுமாம்.

நன்புலன் ஒன்றி: ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள நின்றதுபோல, ஒவ்வொரு புலனும் ஒவ்வொருவழிச்செல்லாது எல்லாம் ஒன்றி இறைவனடியிலேயே இயைந்து.

மொட்டித்து - கூம்பி. மொட்டு என்னும் பெயரிலிருந்து வந்த வினையெச்சம். இதயம் பதினறு இதழ்த் தாமரைபோன்றது. அது மகிழத்தக்கநிலை ஏற்பட்டால் அலர்ந்த செந்தாமரை போல் மலரும். ஆதலின் இதயம் மலர என்றார். தழைப்பவர் - அன்பினை வளர்ப்பவர். தழைப்பவர்களைத் தாயாகி வளர்த்தவன் என்பது.

சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி

இ - ள்: அழியா அன்பினல் நாள்தோறும் செழித்து ஓங்கும் மெய்யன்பரைத் தாய்போல நின்று வளர்த்தவனே! உனக்குப் போற்றி; உண்மையை உணர்த்தும் அந்தணனாகி வந்து, ஆகாமியவினையும் சஞ்சிதவினையும் அழியும்வண்ணம் கைதந்து உதவவல்ல கடவுளே! போற்றி என்றவாறு.

ஆடக மதுரை அரசே போற்றி 90
கூடல் இலங்கு குருமணி போற்றி

*தென் தில்லை மன்றினு ளாடி போற்றி*
*இன்றெனக் காரமு தானாய் போற்றி*

இ - ள் : பொன்னிறமாக விளங்கும் மதுரைமாநகர்க்கு அரசனே! வணக்கம்; நான்மாடக்கூடலான நகரில் விளங்கும் குருநாதனே! வணக்கம்; அழகிய தில்லையம்பலத்துள் ஐந்தொழிலானந்த நடம் ஆடுபவனே! வணக்கம்; இன்றைக்கு அடியேனுக்குக் கிடைத்த அரிய அமுதமானவனே! வணக்கம் என்றவாறு.

ஆடகம் : இது ஹாடகம் என்பதன் திரிபு; ஆடகம், சாம்பூநதம், கிளிச்சிறை என்றவற்றுள் ஒருவகைப் பொன். ஆடக மதுரை - பொன்மயமாக விளங்கும் மாடகூட கோபுரங்களை உடைய மதுரை. 'அரசே' என்றது கண்ணுதலும், சடைமுடியும் கண்டக்கறையும் மறைத்து, மணிமுடிதாங்கிச் சௌந்தரபாண்டியனாக இருந்து அரசாண்டமை குறிப்பது. இதன் விரிவைத் தடாதகைப் பிராட்டியார் திருமணப்படலத்துள் காண்க.

கூடல் - மதுரைக்குள்ள மற்றொரு பெயர். முன்னொரு காலத்து வருணன் ஆலவாய்ச்சொக்கன் ஆற்றலை அறியானாகி, மதுரைமாநகரை அழிப்பதற்காகக் கடலை ஏவினனாக, கடல் நாற்புறமும் கரைபுரண்டு அலை மலைபோலெழும்ப மதுரையை விழுங்க வந்தது. அதுகண்டு மன்னனும் மக்களும் சொக்கலிங்கப் பெருமானிடம் முறையிட்டனர். இறைவன் பொன்னும் மணியும் சொரியும் நான்கு மேகங்களை ஏவி, கடல்நீரை வற்றச் செய்தனர். அவமானம் பொறுக்காத வருணன் செருக்கி, மழையனைத்தையும் ஒருங்கழைத்து 'மதுரைமேல் பெய்து அழிக்க' என ஏவினன். மீட்டும் இறைவன் புயல்கள் நான்கினையும் அழைத்து, 'நீங்கள் மாடங்களாகி மதுரையைக் காப்பாற்றுமின்' என்று ஆணை வழங்கினர். புயல்கள் மாடங்களாகி மதுரையையே மூடிக் கவிந்து நின்று, ஒரு துளி நீரும் உள் விழாதவண்ணம் காத்தன. வருணன் தோற்று, வெட்கி இறைவனை வழிபட்டுய்ந்தான். இவ்வண்ணம் நான்கு மேகங்களும் கூடிக் காத்தமையினால் இத்தலம் நான்மாடக் கூடல், கூடல் எனவழங்கப்பெறுவதாயிற்று. இவ்வரலாறு நான்மாடக் கூடலான திருவிளையாடலில் விரிக்கப்பெற்றுள்ளது.

குரு மணி - குருவில் மணிபோல்வான், நிறம் பொருந்திய மணிபோன்றவன் என்றெல்லாம் பொருள்கண்டு இடர்ப்படுவாரும் உளர். திருப்பெருந்துறையில் ஆட்கொண்ட பிறகு

எத்தலத்தில் இறைவனைக் காணினும் அங்கெல்லாம் குருநாதனாகவே காண்டலின் 'குருமணி' என்றார். தலைவியைப் பிரிந்த தலைவன் எதைக் கண்டாலும் நோக்குவ எல்லாம் அவளது அவயவங்களேயாகக் காண்டல்போலவும், பரமஞானி எதனையும் சிவமாகப் பரிபூரணானந்தபோதமாகக் காண்டல்போலவும் குருவைப் பிரிந்த ஞானச்செல்வர் குருமணி எனப் பல்லாயிர முறைகூறினும் வருவதோரிழுக்கின்மை உணர்க.

இலங்குதல் - விளங்குதல். கூடல் இலங்கும் குருமணி என்பதற்கு மதுரையில் விளங்குகின்ற குருநாதன் என்பதைக் காட்டிலும், மதுரை விளங்குதற்குக் காரணமாகிய குருமணி எனப் பொருள்கோடலுமாம்.

தென் - அழகு; திசை குறித்த பெயரன்று. வடக்கின்கண் மேருமலைபோல, தெற்கில் மன்று பொன்னாக விளங்குவதால் எனலுமாம்.

ஆரமுது - கிடைத்தற்கரிய அமுது. தேவாமுதம் போல நாவிற்குமட்டும் சுவை தருவதாகாமல், ஐந்து புலன்களுக்கும் சுவை தந்து உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை இனிப்பூட்டுவதாகலின் அரிய அமுதம் என்றார்.

*மூவா நான்மறை முதல்வா போற்றி*
*சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி* 95
*மின்னார் உருவ விகிர்தா போற்றி*
*கல்நார் உரித்த கனியே போற்றி*
*காவாய் கனகக் குன்றே போற்றி*
*ஆஆ என்றனக் கருளாய் போற்றி*

இ - ள் : மூப்படையாத நான்கு வேதங்கட்கு முதல்வனே! வணக்கம்; இடபம் எழுதப்பெற்ற வெல்லும் கொடியினை யுடைய சிவனே! வணக்கம்; மின்னல்போல ஒளிசெய்கின்ற திருமேனியின் வேறுபாடுகளை உடையவனே! வணக்கம்; கல்லின்கண் நார் உரித்த கனியை ஒப்பவனே! வணக்கம்; காத்தல்தொழில் வாய்க்கப்பெற்ற மேருமலையை ஒப்பவனே! வணக்கம்; ஆ! ஆ!! எனக்கு அருள்புரிவாயாக; வணக்கம் என்றவாறு.

வேதம், ஞானவடிவு. அது, என்றும் தேய்வும் அழிவுமில்லாதது; நிறைந்தது. ஆதலால் 'மூவா நான்மறை' என்றார். மூப்பு - அழிவுக்கு வாயில். அஃதில்லாதது எனவே அழிவும்

இல்லாதது, நித்தியமானது என்பது போதரும். இத்தகைய ஞானத்தைத் தெரிவிக்கும் கருவியாய் நிற்கும் சொற்கூட்டமே வேதவொலியும், அதனையுணர்த்தும் எழுத்துக்களும். அவை மாயையின் காரியங்கள்; தோன்றி அழியுந்தன்மையன. குடம் உடையினும் குடத்தன்மை அழியாதவாறுபோல ஒளியும் உருவும் அழியினும் ஞானவடிவாயவேதம் நித்தியமானது என்பதை மூவா நான்மறை என்ற சொற்றொடர் விளக்கிநிற்கின்றது.

மூவா முதல்வன், நான்மறை முதல்வன் எனக் கூட்டிப் பொருள் காண்பாரும் உளர். நான்கு வேதங்களும் ஞானவடிவாக விளங்கி எவனை உணர்த்துகின்றனவோ அவனே வேத முதல்வன்; வேத புருஷன் என்று உபநிடதங்கள் உணர்த்துகின்றன. இவ்வடி, காணப்படுகிற இந்தப் பொருட் பிரபஞ்சங்களுக்குமட்டும் அன்று, அவற்றை உணர்த்துகிற மூலமான ஒலி உலகினுக்கும், ஒலிகள் உணர்வாக எவனை உணர்த்துகின்றனவோ அவ்வுணர்விற்கும் முதல்வன் என்பதை உணர்த்துதல் காண்க.

சே - இடபம். சேவார் சிவன், வெல்கொடிச் சிவன், சேவார் வெல்கொடிச் சிவன் என்றெல்லாம் யோகவிபாகம் செய்து (பிரித்துக்கூட்டி) இடப வாகனத்தையும் வெல்கொடியையும் உடைய சிவன் எனவும், இடபம் எழுதிய கொடியையுடைய சிவன் எனவும் கொள்க. 'ஊர்தி வால் வெள்ளேறே சிறந்த, சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப' என்ற புறப்பகுதியும் இக்கருத்தை உணர்த்துவதாம்.

மின் - கண் பொறுக்காத அளவு ஒளியுடையது; பலவடிவுள்ள கொடிகளாகத் தோன்றி மறைவது; பொன்னிறம் உடையது; ஆதலால் மக்கள் கண்ணொளி பொறுக்கலாற்றாததும், இருபத்தைந்தும் அறுபத்துநான்கும் ஏனைய பலவுமாய உருவ வேறுபாட்டை உடையதும், பொன்னிறமானதுமாகிய திருமேனிக்கு உவமிக்கப்பெற்றது.

விகிருதன் - வேறுபாடு உடையவன். அடியார்கள் நினைந்த நினைந்த வடிவத்தோடு சென்று கருணை புரிதலின் பலவுருவம் உடையராயினர். 'ஒருவனே இராவணாதி பாவகம் உற்றாற்போலத் தருவன் இவ்வுருவம் எல்லாம்' என்னும் சிவஞான சித்தியாரும் இதனை நன்குவிளக்கும். 'விஹ்ருதம்' என்ற சொல்லின் திரிபாகக்கொள்ளின் விளையாட்டு உடையவன் என்பது பொருளாம். பலவுருவம் தாங்குதலை, ஐங்கலப்பாரம் சுமத்தல் சாத்தற்கு விளையாட்டு என்றதுபோல விளையாட்டாக உடையவன் என்பது கருத்து.

'கருங்கல்லில் நாருரித்தாற்போல்' என்பது ஒரு வழக்கு. செயற்கரியசெயல் என்னும் குறிப்பினது. மனம் கல்போன்றது. ஆனால் நெடுநாள் நீருட்கிடப்பினும் மெல்லென்றல் கல்லுக்கு அரிதாவது போல மனம் என்றும் இளகாததொன்று அன்று; தோலுரித்தால் சுவைதரும் வாழைப்பழம்போல நாருரித்தால் இளகி இறைவன் அருள் நீரால் குழையுந்தன்மையது; கல்லில் நாருரித்தலோ என்றும் யாரானும் இயலாதசெயல். இறைவனே அதனைச் செய்து என்மனத்தை அன்பு கனியச்செய்தான். பின் நாருரித்த நெஞ்சிற்கு இறைவன் கனிபோல இனியன் என்பார் 'கல் நாருரித்த கனியே' என அழைத்தார். 'கல்லைப் பிசைந்து மென்கனியாக்கி' எனப் பின்வருமதனை உட்கொண்டு 'கல்லைக் கனிபோல நெக்கவைத்து' என்பர் சிலர். அடிகளருளிய சொற் கிடக்கை இதற்கு ஏலுமேற்கொள்க. 'ஆ ஆ' வியப்பிடைச் சொற்கள். அருளாய் - அருள்பவனே!

*படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி* **100**
*இடரைக் களையும் எந்தாய் போற்றி*
*ஈச போற்றி இறைவ போற்றி*
*தேசப் பளிங்கின் திரளே போற்றி*
*அரைசே போற்றி அமுதே போற்றி*
*விரைசேர் சரண விகிர்தா போற்றி* **105**

*இ - ள்: எல்லாவற்றையும் படைப்பவனே! காப்பவனே! அழிப்பவனே! உனக்கு வணக்கம்; துன்பங்கள் அனைத்தையும் நீக்கும் எம்தந்தையே! வணக்கம்; எல்லாவற்றையும் உடைய ஈசனே! இறைவா! ஒளியுள்ள பளிங்கின் திரட்சியாக உள்ள வனே! அரசனே! அமுதமே! மணம் பொருந்திய திருவடிகளை யுடைய விகிர்தனே! வணக்கம் என்றவாறு.*

பிரமனை அதிட்டித்துநின்று படைத்தலையும், திருமாலை அதிட்டித்துநின்று காத்தலையும், உருத்திரனை அதிட்டித்து நின்று அழித்தலையும் செய்பவன்.சிவனாதலின் இங்ஙனம் கூறிய தாம். 'தோற்றுவித்தளித்தும் பின்னும் துடைத்தருள் தொழில் கள் மூன்றும் போற்றவே உடைய ஈசன்' என்ற சித்தியார் திருவிருத்தமும் எண்ணுதற்குரியது.

இடர் - துன்பங்கள். அவை ஆதியான்மிகமும், ஆதி பௌதிகமும், ஆதிதெய்விகமுமாகிய மூவகைத் துன்பங்கள். இவை வினையின் விளைவுகள். எரிவதையிழுத்தால் கொதிப்பது நிற்பதுபோல வினைகளைக்கெடுத்தால் இவ்விடர்கள் தாமாகவே

அகலும் ஆதலின் இடரைக் களையும் என்றார். களைதல் - களை களைதல் போல வேரொடு கல்லி நீக்குதல்.

எந்தாய் : எந்தையென்னும் முறைப்பெயர் விளியேற்று வந்தது. தன்சேய்க்கு வருந்துன்பத்தை அது வருதற்குமுன்பே நீக்கும் தந்தைபோல இடர் புகுவதற்கு முன்பே களையும் கருணைத்திறம் தோன்ற எந்தாய் என்றார்.

ஈசன் - தலைவன் என்னும் பொருளில் இடுகுறியாகநின்றது; பின்னர் 'உடையாய்' என வருதலான். தேசப்பளிங்கு - ஒளியுள்ள பளிங்கு. "தேச விளக்கெலாம் ஆனாய் நீயே" என்புழியும் தேசம் ஒளிப்பொருளதாதல் காண்க. பளிங்கின் திரள் - பளிங்கின் திரட்சியாகிய மலை. திரள், முதனிலைத் தொழிலாகு பெயராகத் திரண்ட மலையை உணர்த்திற்று. ஒரு நிறமும் இல்லாதது பளிங்கு. அது இறைவற்கு ஒப்பாதலைச் 'சுத்த ஸ்படிக சங்காசம்' என்னும் சிவாகம வசனத்தானும் தெளிக.

அரைசே - அரசே; எதுகை நோக்கிப் போலியாயிற்று. விரைசேர் சரணம் என்பதில் விரை பொருந்திய என்ற அடைமொழியால் சரணம் தாமரைமலராகக் கருத இடம் தருதல் காண்க.

*வேதி போற்றி விமலா போற்றி*
*ஆதி போற்றி அறிவே போற்றி*
*கதியே போற்றி கனியே போற்றி*
*நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி*
*உடையாய் போற்றி உணர்வே போற்றி* 110
*கடையேன் அடிமை கண்டாய் போற்றி*

இ - ள் : வேதங்களையுடையவனே! வணக்கம்; விமலா! வணக்கம்; முதன்மையானவனே! அறிவுருவானவனே! வணக்கம்; அடையத்தகுமிடமாக இருப்பவனே! வணக்கம்; கனியே! கங்கையாறு பொருந்திய சிவந்த சடையையுடைய நம்பனே! வணக்கம்; எப்பொருளையும் உடையவனே! வணக்கம்; மெய்யுணர்வுருவானவனே! வணக்கம்; கீழ்ப்பட்டவனாகிய என்னையும் ஓரடிமையாக ஏற்கக் கடைக்கணித்த பெருமானே! வணக்கம் என்றவாறு.

வேதி - வேதங்களை உடையவன். அறிவானவனே எனக் கொள்ளின் மீட்டும் அறிவே போற்றி என வருதல் காண்க. 'தரிசன வேதி' 'ஸ்பரிச வேதி' என்பன போல வேதிப்பவனே

எனப் பொருள்கொண்டு, செம்பில் களிம்பை வேதித்துப் பொன்னுக்கும் ரசகுளிகையாகிற வேதிபோல, சீவகுணங்களைப் போக்கிச் சிவகுணமாக வேதிப்பவனே என்க. புலவன் எனினுமாம். விமலன் - இயல்பாகவே மலமற்றவன்.

கதி - அடையத்தக்கது. அது வீடுபேறு. அந்த வீடுபேறு இறைவனையன்றி வேறன்றாதலின் அவனையே கதி என்றது.

நதி - கங்கையாறு. சேர்தல் - தங்குதல். நம்பன் - குணங்களால் நிறைந்தவன்; எவ்வுயிரும் விரும்பத்தக்கவன். அறிவு, மணியின் ஒளிபோல உயிருக்கு உள்ள இயற்கையான ஒளி. உணர்வு, பட்டை தீர்க்கப்பெற்று பொன்னிடை மணியழுத்தி அதன்மேலும் வைக்கப்பெற்ற மணிபோல அனுபவத்தினால் விளக்கம்பெற்றது.

கடையேன் - கடைப்பட்ட அடியேன். 'நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு' என வருதல் காண்க. கண்டாய் - இவன் எமக்கு அடிமையாகுக எனத் திருவருள்நோக்கம் செய்தாய் என்பது.

*ஐயா போற்றி அணுவே போற்றி*
*சைவா போற்றி தலைவா போற்றி*
*குறியே போற்றி குணமே போற்றி*
*நெறியே போற்றி நினைவே போற்றி* **115**
*வானோர்க் கரிய மருந்தே போற்றி*
*ஏனோர்க் கெளிய இறைவா போற்றி*

இ - ள் : ஐயனே! அணுவாக உள்ளவனே! சைவனே! தலைவா! வணக்கங்கள்; உயிர்கள் அன்புசெலுத்துதற்கு இலக்கானவனே! வணக்கம்; எண்குணமாயிருப்பவனே! வணக்கம்; எனது நினைவாக விளங்குபவனே! வணக்கம்; தேவர்கட்குக் கிடைத்தற்கரிய அமுதமே! வணக்கம்; தேவரல்லாத மற்றவர்க்கட்கு எளிய தலைவனே! வணக்கம் என்றவாறு.

ஐயா : ஐயன் என்னும் சொல் விளியுருபு ஏற்றது. 'ஐ வியப்பாகும்' என்பது தொல்காப்பியம் ஆதலால் ஐயன் வியக்கத்தக்கவன் என்னும் பொருளது. அரியன் என்னும் ஆரியச் சொல்லின் திரிபு என்பாரும் உளர். ஏற்பன கொள்க.

அணு - நுண்ணியவற்றுள் நுண்ணிது. முன்னர் 'இல் நுழை கதிரின் துன் அணு' என்றதையும் நினைக. சைவன் - 'ஐயாறதனில் சைவனாகியும்' என்பதனைக் குறிப்பித்தவண்ணம்

ஆதிசைவன் என்பாரும் உளர். சிவாகமங்கள் இறைவனை அநாதி சைவர் என்று வழங்குமாதலின் அப்பொருளே சிறப்புடைத்து. தலைவராவார் தலைமையாகக்கொண்ட மக்களின் துன்பத்தினை நீக்கி இன்பம் செய்பவர்கள் ஆதலின் இறைவனையே தலைவா என்றார்.

குறி - இறைவனை வழிபடுதற்கு அமைத்த அடையாளம் என்பர் சிலர். குறி - அம்பு எய்வானுக்கு அமைந்த இலக்குப் போல அன்பருக்குப் பொருந்திய இலக்கு. முன்னர் 'உருவ விகிர்தா' என்பவற்றுள் சிவலிங்கத் திருமேனி அடங்குமாதலின் உருவை ஈண்டுக் கருதல்வேண்டா. குறி - இலக்கு. "குறிகளும் அடையாளமும் கோயிலும்" என்னும் அப்பர் சுவாமிகளின் வாக்கிலும் அடையாளத்தின் வேருக இருத்தல்காண்க. குணம் - பொருளின்தன்மை; ஆதலால் எண் குணங்களையுடைய ஈசனைக் குணமாக உபசரித்தார். எண்குணங்களாவன - தன்வயத்தனுதல், தூய உடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பம் உடைமை என்பன. நெறி - வழி. தில்லை செல்லும் வழியை இது தில்லையென்பது போல நெறிகளாலே சென்றுபற்றும் இறைவனை 'நெறியே' என்றதும் உபசாரவழக்கு. எல்லா நெறிகளும் இறைவனுகிய கடலிற்சென்றடையும் ஆறுபோல்வன ஆதலின் ஒற்றுமைநயம்பற்றி நெறியே என்றது.

உணரும் உணர்ச்சியும் தின்னும் சோறும் இடும் வெள்ளிலையும் பாக்கும் எல்லாம் அவனுனற்போல அன்பர் நினைவு அனைத்தும் அவனே என்பார் 'நினைவே' என்றார்.

வானோர்கள், பதவிகளிலிருக்கும் சகலான்மாக்களாதலின், அவர்கள் அமுதத்தை உணவாகக் கருதி உண்டு வாழ்நாளை நீட்டிக்கொண்டார்களே அன்றிப் பிறவிப்பிணிக்கு மருந்தாக இறைவனை நுகர்ந்திலர் என்பார் 'வானோர்க்கு அரிய மருந்தே' என்றார்.

*மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை*
*ஆழா மேயருள் அரசே போற்றி*
*தோழா போற்றி துணைவா போற்றி* 120
*வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி*
*முத்தா போற்றி முதல்வா போற்றி*
*அத்தா போற்றி அரனே போற்றி*

இ - ள்: இருபத்தொரு தலைமுறையாக வரும் அடியார் களாகிய சுற்றத்தார்கள் ஒன்றோடொன்று மாறுபட்ட நரகில் வீழ்ந்து அழுந்தாமல் கருணைபுரியும் மன்னா! வணக்கம்; தோழனே! வணக்கம்; துணைவா! வணக்கம்; என் இன்ப வாழ்வே! வணக்கம்; எனக்கு வாய்த்த சேமநிதியே! வணக் கம்; முத்தனே! முதல்வனே! வணக்கம்; எல்லா உயிர்க்கும் தந்தையே! வணக்கம்; அரனே! வணக்கம் என்றவாறு.

முரணுறு நரகு - ஒன்றோடொன்று மாறுபட்ட நரகங்கள். மூவேழ் சுற்றம் - இருபத்தொரு தலைமுறையாக பரிபாகப்பட்ட மெய்யடியார்களின் சுற்றம். இதனால் பல பிறவிகளில் பரமனைப் பற்றி உன்னும் மெய்யடியார்களுக்கே நரகத்தில் ஆழாமையும் அருள்சேர்தலும் விளையும் என்பதாம்.

தோழன் - "ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி" என்றாற் போல ஒருவன் செய்யும் நன்மை தீமைகளுக்கு உடனாயிருந்து மிகுதிக்கண் மேற்சென்று இடித்துத் திருத்தியும் களிக்குங் காலத்துக் களித்தும் தீமையை அகற்றியும் இன்பத்தை மிகு வித்தும் பங்குபற்றுகின்ற தோழனைச் சொன்ன நயத்தைக் காண்க. துணைவன் - நண்பினன், உடன்பிறந்தான் இருவ ருக்கும் பொதுவான பெயர். தோழனை முன் கூறினமையால் இங்கு உடன்பிறந்தானையே உணர்த்திநின்றது.

எய்ப்பினில் வைப்பே என்புழிப்போல, செல்வமானவனே என்பார் 'வைப்பே' என்றார். வைப்பு - புதைபொருளும் ஆம்.

உரையுணர் விறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி 125
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி 130

இ - ள்: உரையையும் உணர்வையும் கடந்துநிற்கும் ஒருவனே! வணக்கம்; விரிந்த கடல் சூழ்ந்த உலகத்தின் பயனே! வணக்கம்; அருமையில் தோன்றிய எளிய அழகே! வணக்கம்; கரிய மேகம்போல அருளைப்பொழியும் கண்ணே! வணக்கம்; நிலைபெற்ற திருவருளின் திரட்சியாகிய மலையே! வணக்கம்; ஒன்றற்கும் பற்றாத என்னையும் அடியார்களுள்

ஒருவனுக்கிப் பெருமையோடு கூடிய திருவடிகளை என்தலையிற் சூட்டிய வீரனே! வணக்கம் என்றவாறு.

உயிர்களின் நுகர்ச்சிக்காகவே இறைவனால் உதவப்பட்ட உலகங்களின் அமைப்பை நுகருந்தோறும் இறைவனுடைய அருளும் ஆற்றலும் விளங்குதலானும், உலகில் ஒட்டி வாழ் கின்ற காலத்து விளையும் பயனாகவும் அவன் விளங்குதலானும் 'விரிகடல் உலகின் விளைவே' என்றார்.

அழகு - நோக்கினரது கருத்தைக் கவர்வதாய், எல்லாப் பொறிகளாலும் துய்க்கப் பெறுவதாய், இன்னது என்று வரை யறுத்துச் சொல்ல ஒண்ணாததாய் இருக்கும் பொருட்பெற்றி. அது அருமையாகக் கிடைப்பது; பல்லாயிரம் பரற்கற்களின் நடுவிலே இடைக்கும் ஒரு வயிரம்போல்வது. அது முயற்சியே இன்றி எளிமையில் கிடைக்குமானால் எத்துணை இன்பம்! அத் தகைய இன்ப அனுபவம் இறைவனைப்பெற்றதால் எண்ணத் தில் உதிக்க, இறைவனை 'அருமையில் எளிய அழகே' என்று அனுபவிக்கின்றார். அருமையில் கிடைத்த என ஒருசொல் வருவிக்க. அருமை இல்லாத எளிய அழகே என்பாரும் உளர். அருமையின்மையே எளிமையாதலின் எதிர்மறைமுகத்தானும் உடன்பாட்டுமுகத்தானும் ஒருசேர உரைத்தமைக்கு ஒரு நயம் இருப்பின் ஆம்.

கருமுகில், பொழிகின்ற தன்மையால் கண்களுக்கு ஒப்பு. முகில் பொழிவது நீரே. கண் பொழிவது கருணையே. ஆகவே நீருண்டு கறுத்து நீரைப்பொழிகின்ற மேகமாகிய கண்ணே என்றார். கண்ணே என்பதற்குக் கண்போன்றவனே என் பாரும் உளர். ஈண்டுச் சினைப்பெயரே முதற்பெயராக உருவ கிக்கப்பட்டமையின் அங்ஙனம் உரைத்தல் ஆராயத்தக்கது.

என்னையும் உம்மை இழிவுசிறப்பு. இருங்கழல் சென்னியில் வைத்தல் திருவடித்தீக்கை என்னும் ஞான தீக்கை. 'நனைந் தனைய திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூர் எம் பெரு மானார் நல்லவாறே' எனவும் 'முடிமேல் அடி வைத்திடும் என்னும் ஆசையால் வாழும் நாயேன்' எனவும் வரும் திரு முறைப் பகுதிகள் இதன் உயர்வை நன்கு விளக்குவன. அங் ஙனம் திருவடித்தீக்கை செய்தலை ஒரு வீரச்செயலாகக்கொண்டு 'சேவக' என்கின்றார். ஆசாரியன் திருவடித்தீக்கை செய்யும் பொழுது மாணுக்கனுடைய ஆணவமலம் அகங்கரித்துத் தடுக்கு மாதலின் அதனை வெல்லுகின்ற வீரத்தினை உடையான் என் பார் இறைவனைச் சேவகன் என்றார்.

*தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி*
*அழிவிலா ஆனந்த வாரி போற்றி*
*அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி*
*முழுவதும் இறந்த முதல்வா போற்றி*
*மானேர் நோக்கி மணாளா போற்றி* 135
*வானகத் தமரர் தாயே போற்றி*

இ - ள்: நின்னைத் தொழுத கையினை உடையவர்களுக்கு வருகின்ற துன்பங்களைத் துடைப்பவனே! வணக்கம்; கேடற்ற இன்பக்கடலே! வணக்கம்; கேடும் ஆக்கமும் கடந்தவனே! எல்லாவற்றையும் கடந்தவனே! மானை ஒத்த கண்களையுடைய உமாதேவியின் கணவனே! வணக்கம்; சுவர்க்கத்திலுள்ளவர்களுக்குத் தாயானவனே! வணக்கம் என்றவாறு.

நம் துன்பத்தைத் துடைப்பவன் இறைவனே என்று உறுதி கொண்டு தொழுத கைகள். உறுதிகொள்ளுதலும் தொழுதலுமாகிய முதலின்வினைகளைக் கையாகிய சினைக்கு உரியனவாக்கியது முதலுக்கும் சினைக்கும் உள்ள ஒற்றுமைநயம்பற்றி என்க. இறைவன் துன்பத்தைத் துடைப்பதற்குத் தொழுத கைகளே காரணம் என்பார் 'தொழுத கை' எனக் கையை விதந்து கூறினார் என்றலுமாம்.

வாரி - கடல். ஆனந்த வாரி - ஆனந்தக்கடல். இக்கடலுக்கு அழிவும் ஆக்கமும் பெருக்கமும் சுருக்கமும் இல்லையாதலின் 'அழிவிலா ஆனந்தவாரி' என்றார். அழிவதும் ஆவதும் கடந்தாய் என்பதால் இடையுள்ள இருப்பதும் அடங்கும். மாயாகோளத்தில் எண்ணில்லாத புவனங்கள் இருப்பினும் அவற்றுள் சிறந்தன இருநூற்றிருபத்துநான்கு எனச் சிவாகமம் கூறும். அவைகளையும், அவற்றிலுள்ள உயிர்களையும் கடந்து விளங்குகின்றான் இறைவன் ஆதலின் 'முழுவதும் இறந்த முதல்வா' என்றது. அஃதாவது பெத்தான்மாக்கட்கு அப்பாற்பட்டு விளங்குதல் போலவே சுத்தமாயா புவனவாசிகட்கும் அப்பாற்பட்டவன் என்பதாம்.

ஆயினும் போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தை நல்கவும், பரிபாகமுற்ற உயிர்களுக்கு வீடுபேறு உதவவும் கல்யாண சுந்தரமூர்த்தியாக விளங்குவார் என்பார் 'மானேர் நோக்கி மணாளா போற்றி' என்றார்.

தாய் தன்பிள்ளைகள் என்ன தவறு செய்யினும் அவற்றை மறந்து தனயர்களுக்கு இதமே செய்வள். அதுபோலவே

தேவர்கள் தானே முதல்வன் எனத் தருக்கித் திரியினும், சிவ நிந்தை குருநிந்தை மாபாதகங்கள் முதலியன செய்யினும் சிவபெருமான் அவற்றை மறந்து, இரட்சிப்பவர் ஆதலால் 'வானகத்து அமரர் தாயே' என்றருளியவாறு.

*பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி*
*தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி* 140
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி*

இ-ள்: பூமியினிடத்து ஐந்து தன்மைகளாய் விரிந்தவனே! வணக்கம்; நீரினிடத்து நான்கு தன்மைகளாக விளங்கியவனே! வணக்கம்; நெருப்பினிடத்து மூன்று தன்மைகளாக விளங்கியவனே! வணக்கம்; காற்றினிடத்து இரண்டு தன்மைகளாக மகிழ்ந்திருந்தவனே! வணக்கம்; ஆகாயத்தினிடத்து ஒரு தன்மையாக விளங்கியவனே! வணக்கம் என்றவாறு.

பார் - பிருதிவி. ஐந்து - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து. மண்ணிற்குள்ள இயற்கைத்தன்மை நாற்றம் ஒன்றுமே. ஏனைய நான்கும் ஏனைய பூதங்களின் கலப்பால் விளைந்தவை. இவ்வண்ணமே பின்வரும் நீரிடை நான்கு, தீயிடை மூன்று, வளியிடை இரண்டு, வெளியிடை ஒன்று என்பவற்றிற்கும் கொள்க. இறைவன் மாயையிலிருந்து எல்லாவற்றையும் தோற்றுவித்த பின்னரே அவ்வக் குணங்கள் அவையவைகளிடம் விளங்கக் காண்கிறோமாதலாலும், இறைவன் அப்பூதங்களினிடமும், அவற்றின் இயல்புகளினிடமும் முன்னரே கலந்து நிற்கும் கருணையை உணர்த்த, பாரிடை ஐந்தாய் என்பது முதல் வெளியிடை ஒன்றாய் இருத்தல்வரை கூறியருளினர்.

நீரிடை நான்கு: நீரின் இயற்கைக்குணம் சுவை; சார்பால் வந்தவை ஒளியும், ஊறும், ஓசையும், தீயிடைமூன்று: இயல்பு; ஒளி; சார்பு ஊறும் ஓசையும், வளியிடை இரண்டு: இயல்பு ஊறு; சார்பு ஓசை; வெளி - ஆகாயம்; வெளியிடை ஒன்று: இயல்பு ஓசைமட்டும்.

*அளிபவ ருள்ளத் தமுதே போற்றி*
*கனவிலும் தேவர்க் கரியாய் போற்றி*
*நனவிலும் நாயேற் கருளினை போற்றி*

இ-ள்: அன்பால் உருகுவாரது உள்ளத்தின்கண் ஊறுகின்ற அமுதமே! வணக்கம்; தேவர்களுக்குக் கனவிலும் அரியவனே! வணக்கம்; நாயை ஒத்த அடியவனுக்கு விழிப்பு நிலையிலும் அருள்விளக்கம் செய்தவனே! வணக்கம் என்றவாறு.

அளிதல் - பழம் அளிந்தது, சோறு அளிந்தது என்பன போல அன்பால் முதிர்தல். அளிந்த பழத்தில் சுவை ஊறுமாறு போல, கனிந்த உள்ளத்துத் தேனூறிநிற்பன் சிவன் என்க.

கனவு, பழவினைகளில் மெல்வினையாயிருப்பன பரிபாக முற்றுப் பயன்தருவனவும், இப்பிறவியின் உறைப்பான எண்ணங்களால் விளைவனவும் என இருவகையான் எய்தும். சிவனடிமறவாச் செல்வர்க்குச் சிவனே கனவில் வெளிப்படுவர், காமிக்குக் காமினி வெளிப்படுவதுபோல. தேவர்கள் அதிகார மலத்தில் சிக்கிச் சிவனைச் சிந்தியாதவர்கள். அவர்களுக்குப் பெருமான் எங்ஙனம் கனவில் காட்சிவழங்குவர்? வழங்கார் ஆதலின் 'கனவினும் தேவர்க்கு அரியாய்' என்றது. நனவு - விழிப்புநிலை. இதில் தமக்குத் திருமேனிதாங்கி நேரேவந்து அருள் வழங்கியதை அறிவித்தவாறு.

இடைமரு துறையும் எந்தாய் போற்றி 145
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறு போற்றி

இ-ள்: திருவிடைமருதூரில் எழுந்தருளிய எந்தையே! போற்றி; சடையில் கங்கையைத் தரித்தவனே! போற்றி; திருவாரூரில் எழுந்தருளியுள்ள கொடையரசே! போற்றி; சிறப்பு அமைந்த திருவையாற்றை ஊராக உடையவனே! போற்றி என்றவாறு.

திருவிடைமருதூர் (145), திருவேகம்பம் (151), திருவீங்கோய்மலை (158) என்னும் தலங்களில் உறைகின்ற இறைவனை 'எந்தாய்' என விளித்ததன் சிறப்பை உன்னுக.

எந்தை என்பதை எம் தந்தை என்பதன் மரூஉவாகவும், எம் தலைவன் எனப்பொருள்படும் ஒருசொல்லாகவும் கொள்ளலாம். திருவாவடுதுறையில் செம்பொற்றியாகராசனாகவும், திருவாரூரில் தியாகராசனாகவும் இருத்தலின் 'ஆருரமர்ந்த அரசு' 'கோகழி மேவிய கோ' என விளித்தருளியது.

தரித்தல் - ஆபரணம் தரித்தலைப்போல வருத்தமின்றித் தாங்குதல். மிடுக்குடன் வந்த கங்கையை வேகம் கெடுத்துச் சடையில் தாங்கிய எளிமை உணர நின்றது. அமர்தல், மேவுதல் என்பன விரும்பியிருத்தல் என்னும் பொருள் தருவன

*அண்ணா மலையெம் அண்ணா போற்றி*
*கண்ணார் அமுதக் கடலே போற்றி* 150
*ஏகம் பத்துறை எந்தாய் போற்றி*
*பாகம் பெண்ணுரு வானாய் போற்றி*

இ - ள்: திருவண்ணாமலைக்கண் உள்ள எம் அண்ணலே! போற்றி; கண்ணிறைந்த அமுதப் பெருங்கடலே! போற்றி; திருவேகம்பத்துள் உறைகின்ற எந்தாய்! போற்றி; இடப் பாகம் உமாதேவியாகிற பெண்ணுருவானவனே! போற்றி என்றவாறு.

அண்ணல் என்பது கடைக்குறைந்து 'அண்ணா' என நின்றது.

இறைவன் அமுதக்கடலாக என் நாவாகிய புலனுக்கு மட்டுமன்றிக் கட்புலனும் கண்டு ஆனந்திக்க நிற்கின்றான் என்பார் 'கண் ஆர் அமுதக்கடல்' என்றார். இறைவன் அமுதக்கடலாகப் பரந்து எல்லையின்றி இருப்பினும் என் கண் ணிறைந்த பொருளாயினான் எனப் பெருமையும் எளிவந்த கருணையும் தோன்றக் கூறினார்.

*பராய்த்துறை மேவிய பரனே போற்றி*
*சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி*
*மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி* 155
*குற்றா லத்தெங் கூத்தா போற்றி*

இ - ள்: திருப்பராய்த்துறையில் விரும்பி எழுந்தருளி யுள்ள பரம்பொருளே! போற்றி; திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! போற்றி; வேறொரு பற்றுக்கோட்டையும் அடியேம் இங்கு அறியேன் போற்றி; திருக்குற்றாலத்துள்ள எமது அழகிய கூத்தனே! போற்றி என்றவாறு.

*கோகழி மேவிய கோவே போற்றி*
*ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி*
*பாங்கார் பழனத் தழகா போற்றி*
*கடம்பூர் மேவிய விடங்கா போற்றி* 160

இ - ள்: திருவாவடுதுறையில் விரும்பி அமர்ந்த அரசே! போற்றி; திருவீங்கோய் மலையின்கண் உள்ள தலைவா! போற்றி; அழகுமிக்க திருப்பழனத்துள் அழகா! போற்றி; திருக்கடம்பூரில் எழுந்தருளியுள்ள சுயம்புவே! போற்றி என்றவாறு.

டங்கம் - உளி. விடங்கம் - உளிபடாதது. விடங்கர் - சுயம்பு மூர்த்தி.

*அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி*
*இத்தி தன்னின் கீழிரு மூவர்க்(கு)*
*அத்திக் கருளிய அரசே போற்றி*
*தென்னா டுடைய சிவனே போற்றி*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி* 165

இ - ள்: நீயே அடைக்கலம் என்று அடைந்தவர்களுக்கு அருள்செய்யும் அப்பனே! போற்றி; இத்திமரத்தின் நீழற் கீழிருந்து இயக்கிமார் அறுவர்க்கும் யானைக்கும் அருள்வழங்கிய அரசே! போற்றி; தென்தமிழ் நாட்டை உரிமையாக உடைய பெருமானே! போற்றி; எல்லா நாட்டவர்க்கும் தலைவனே! போற்றி என்றவாறு.

அடைந்தவர் - தனக்குத் துணையாவார் ஒருவரும் இலர், சிவனே துணை எனத் திருவடியை வந்து சார்ந்தவர்.

இத்தி - ஆல்போல இலையும், விழுதும், தோற்றமுமுடைய ஓர் மரம். இச்சி என இஞ்ஞான்று வழங்கப்பெறுவது. இதன் விழுது ஆலம் விழுதுபோல நீண்டு தொங்காமல், கிளையை ஒட்டியே இருமுழம் மும்முழம் தொங்கும். ஆலின் இனத்தைச் சார்ந்தது ஆதலின் ஆலின்கீழிருந்து அறுவர்க்கு அறமுரைத் தான் என நம்பி திருவிளையாடல் கூறும். அடிகள் இத்தி என்றார்கள். இயக்கிமார் அறுவர்க்கு உபதேசித்தவரலாறு முன்பு 'பட்டமங்கையில் பாங்காயிருந்து அட்டமாசித்தியருளிய அதுவும்' என்புழி எடுத்துக்காட்டப்பெற்றது. அத்தி - யானை. அத்தம் - கை; அதனையுடைய விலங்கு யானை.

முன்னொருகாலத்துத் தேவேந்திரன் ஐராவதத்தின்மீது ஊர்ந்துவந்தான். அப்போது அவனைக் காணவந்த துருவாச முனிவர் ஒரு வெண்தாமரைப் பூவையும் துளவந்தாரையும் ஆசிகூறிக் கையுறையாக அளித்தார். இந்திரன் செல்வக் களிப்பால் மதிமயங்கி அவற்றை வாங்கி வெள்ளானையின் தலை மீது வைத்துவிட்டான். அது அவற்றை எடுத்துக் காலின்

கீழிட்டு மிதித்தது. இதனைக்கண்ட துருவாசர் சினந்து வெள் ளானையை நோக்கி 'நீகாட்டானையாகுக' எனவும், இந்திரனை நோக்கி 'உன்தலை பாண்டியனொருவனால் பிளக்கப்படுவதாகுக' எனவும் சபித்தார். இந்திரனும், வெள்ளானையும் தம் தவறு உணர்ந்து முனிவரிடம் இரந்து மன்றாடினர். முனிவர் சினம் தணிந்து 'இந்திரனே! உன் தலை பிளவுபடினும் மீட்டும் நீ இந்திர பதவியிலிருந்து அரசாளுவாய் எனவும், 'வேழமே! நீ கடம்பவனமாகிய மதுரையில் பிறந்து சொக்கலிங்கமூர்த் தியை வழிபட்டு இன்றுபோல் வெள்ளானையாகுக' எனவும் சாபவிடை தந்தனர். அவ்வாறே யானை கடம்பாடவியில் காட் டானையாகப் பிறந்து, சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்து அருள்பெற்றது. இது வெள்ளானை சாபந்தீர்த்த திருவிளை யாடல் வரலாறு.

உடைமையாவது உரிமையாக உடைமை. தென்னாட்டில் தொன்றுதொட்டுச் சிவவழிபாடு நிகழ்ந்து வருதலின் இவ் வண்ணம் கூறியதாம். அன்றிச் சௌந்தரபாண்டிய மன்னனாக மதுரையை ஆண்டமைபற்றிக் கூறியது என்றுமாம்.

*ஏனக் குருளைக் கருளினை போற்றி*
*மானக் கயிலை மலையாய் போற்றி*
*அருளிட வேண்டும் அம்மான் போற்றி*
*இருள்கெட அருளும் இறைவா போற்றி*
*தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி* 170

இ-ள்: பன்றிக்குட்டிகளுக்குப் பால் ஊட்டினவனே! போற்றி; பெருமையையுடைய கயிலைமலையை உடையவனே! போற்றி; அம்மானே! போற்றி; அருள் செய்யவேண்டும்; ஆணவமல காரியமாகிய அறியாமையிருள் கெடும்படி அருள் புரியும் தலைவனே! போற்றி; துணையிலியாகிய அடியேன் தளர்ந்தேன் போற்றி என்றவாறு.

ஏனம் - பன்றி. பன்றிக்குட்டிக்கு முலையூட்டிய வரலாறு :- ஒருகாட்டில் முனிவர் ஒருவர் தவஞ்செய்துகொண்டிருந்தார். பன்னிரண்டு பேர் இளங்காளைகள் அவர்பெருமை அறியாது அவருக்குச் சினம் மூட்டினர். அவர் அச்சிறுவர்களைப் பார்த்து 'நீங்கள் பன்றிவயிற்றில் பிறந்து வருந்துக' எனச் சபித்தார். சிறுவர்கள் பயந்து தம் பிழை உணர்ந்து மன்னித்தருளுமாறு வேண்டினர். முனிவர், இறைவனருளால் சாபந்தீரும் என மொழிந்தனர். சிறுவர்களும் அவ்வண்ணமே காட்டுப்பன்றி யொன்றின் வயிற்றில் பிறந்தனர். பிறந்த அண்மையிலே

வேட்டைக்கு வந்த பாண்டியன் காட்டுப்பன்றியைக் கொன்று விட்டான். பன்றிக்குட்டிகள் தாய் வாராமையினால் பசியால் தவித்தன. இறைவன் தாய்ப்பன்றிவடிவில் சென்று பாலூட்டி அருள்புரிந்தான். இது பன்றிக்குட்டிக்கு முலையூட்டிய திருவிளையாடல்.

அம்மான் - தாயுடன் பிறந்தோனாகிய மாமன். தமியேன் - தனித்தவனாகிய யான்.

*களங்கொளக் கருத அருளாய் போற்றி*
*அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி*
*நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி*
*அத்தா போற்றி ஐயா போற்றி*
*நித்தா போற்றி நிமலா போற்றி* 175
*பத்தா போற்றி பவனே போற்றி*

இ - ள்: ஒருநிலையான இடத்தைப் பெறவும், இடைவிடாது சிந்திக்கவும் அருள்செய்பவனே! போற்றி; அஞ்சாதே என்று இம்மையிலேயே அருள் செய்கின்றவனே! போற்றி; நஞ்சை அமுதாக விரும்பியவனே! போற்றி; அப்பனே! போற்றி; ஐயா! போற்றி; நித்தியனே! போற்றி; நிமலா! போற்றி; அன்பனே! போற்றி; அனைத்திற்கும் பிறப்பிடமானவனே! போற்றி என்றவாறு.

களம் - இடம்; ஈண்டு அடியார்கள் குழுமியுள்ள அவையை உணர்த்திற்று. ஆகவே அடியார் கூடியுள்ள ஞானப்பேரவையில் அடியேனும் இடங்கொள்ளும்வண்ணம் எண்ணும்படித் திருவருளைச் செய் என்பதாம். பிறவிப் பிணிக்கு அஞ்சி அலைகின்ற என்னை அஞ்சேல் என்று, அபயம் அளித்துக் காப்பாற்று என்றார் என்க. நஞ்சு தன் குணம் கெடாதிருக்கவும் அதனை உணவாக விரும்பினாய் என்றது சாவா மருந்துண்டும் தேவர் சாவ, நீ கொடிய நஞ்சுண்டும் பிறரைக்காத்தாய் என்பதாம்.

அத்தன் - தலைவன், தந்தை, உயர்ந்தோன் எனப் பொருள் தரும். இறைவனை அத்தன் என்றது தந்தையும் தலைவனுமாக இருந்து அறிவுறுத்தலின் என்க. ஐயா என்றது வியத்தகு பொருளாயிருந்து கிளர்ச்சியூட்டுதலின் என்க. நித்தா என்றது தனக்கோர் அழிவின்றிப் பிறவற்றிற்கெல்லாம் தான் அழிவு செய்தலின். நிமலா, அமலா என்பன அநாதியே மலங்கள் இல்லாமையை உணர்த்தின. இங்ஙனமே ஏனைய விளிகளும் சிறந்த நயந்தோன்ற நிற்றல் காண்க.

*பெரியாய் போற்றி பிரானே போற்றி*
*அரியாய் போற்றி அமலா போற்றி*
*மறையோர் கோல நெறியே போற்றி*
*முறையோ தரியேன் முதல்வா போற்றி* 180
*உறவே போற்றி உயிரே போற்றி*

இ - ள் : பெரியோனே! போற்றி; வள்ளன்மையுடையவனே! போற்றி; எல்லாருக்கும் அரியவனே! போற்றி; மலம் அகன்றவனே! போற்றி; அந்தணவேடத்திற்கு ஓர் எடுத்துக் காட்டே! போற்றி; அடியேனை இங்ஙனம் விட்டது முறையாகுமோ? யான் இனி ஒருபோதும் இருக்கமாட்டேன்! முதல்வா! போற்றி; எனக்கு எல்லா உறவும் ஆனவனே! போற்றி; என் உயிரே! போற்றி என்றவாறு.

பிரான் - தலைவன். வள்ளன்மையுடையவன் என வேறு சமயவிரிவுரை கூறும்.

மறையோர் கோலத்திற்கு (ஒரு) நெறியே என நான்காவது விரிக்க. அந்தண வேடத்திற்கு ஒரு வழிகாட்டியாயிருப்பவன் என்பது பொருள். அடிகளாரை ஆசாரியமூர்த்தியாக வந்து ஏற்றுக்கொண்ட அந்தணவடிவம் எப்போதும் இவர் மனத்தினும் இவர் கண்முன்னும் காணப்படுதலின் அதுவே அந்தணவேடங்கள் அனைத்திற்கும் ஒரு நெறியாய் இருந்தது என்பார் இங்ஙனம் கூறினர். இதற்கு அறிஞர் மேற்கொண்ட அழகிய இன்ப ஒழுக்கமே எனவும், அந்தணர் வேடத்தை மேற்கொண்டு வந்த நீதியே என்வும் பலவாறு உரைப்பாருமுளர். தேர்ந்து உணருதல் தெள்ளியோர் கடன்.

தாய் குறும்புசெய்யும் குழந்தையை நோக்கி 'தரித்திருக்க மாட்டான்' எனக் கூறுவதை உலகியலில் காணுகின்றோம். தரித்திருத்தலாவது ஓரிடத்திலிருத்தல். அதுபோல ஈண்டும் முதல்வா! இங்கு நான் இரேன் இது முறையோ என்றார் எனலுமாம். உறவு எனப் பொதுப்படக் கூறினும் முன்னர்க் கூறிய அத்தன் ஒழிய, அம்மை அன்புடைய மாமன் மாமி ஏனைய சுற்றம் எல்லாங்கொள்க. பின்னர் 'உறவெனக்கார் அமரர்கள் ஏறே!' என இறைவனை வினவுதலும் காண்க.

*சிறவே போற்றி சிவமே போற்றி*
*மஞ்சா போற்றி மணாளா போற்றி*
*பஞ்சே ரடியாள் பங்கா போற்றி*

*அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி* 185
*இலங்கு சுடரெம் ஈசா போற்றி*

இ - ள்: சிறப்பே! போற்றி; சிவமே! போற்றி; கருணை மழையே! போற்றி; மணவாளனே! போற்றி; செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய திருவடியிணையையுடைய உமாதேவியாரை ஒருபாகம்கொண்டவனே! போற்றி; அடியேனாகிய நாயேன் வருந்தினேன் போற்றி; விளங்குகின்ற ஒளிவடிவான எம் ஈசனே! போற்றி என்றவாறு.

சிறவு - சிறப்பு. வு பண்புப்பெயர் விகுதி. "இறவிளை யார்க்கும் அறிவரியோன்" என்ற திருக்கோவையார் பாடலி னும் இறப்பு - இறவு, பிறப்பு - பிறவு என வருதல் காண்க.

மஞ்சா - மேகம்போல்பவனே. மைந்தா என்பதன் போலியு மாம். மேகம் கைம்மாறு கருதாது வழங்குதலின் இறைவனை மேகம் என்றார். வலிமையுடையோனாதலின் மைந்தா என்றார் எனலுமாம்.

*கவைத்தலை மேவிய கண்ணே போற்றி*
*குவைப்பதி மலிந்த கோவே போற்றி*
*மலைநா டுடைய மன்னே போற்றி*
*கலையா ரரிகே சரியாய் போற்றி* 190
*திருக்கழுக் குன்றின் செல்வா போற்றி*

இ - ள்: கவைத்தலையை விரும்பிய கண்போல்பவனே! போற்றி; கூட்டமாகிய தலங்களில் நிறைந்து விளங்கும் தலைவனே! போற்றி; மலைநாட்டையுடைய அரசே! போற்றி; ஆடையாகப்பொருந்திய திருமாலாகிய சிங்கத்தோலையுடைய வனே! போற்றி; திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள செல்வா! போற்றி என்றவாறு.

கவைத்தலை - சூலம். சூலத்தை விரும்பிய கண் போல்ப வனே. ஓரூர் என்பாரும், வேதமுடிவாகிய உபநிடதங்களிற் பொருந்திய கண்போல்பவனே என்பாரும் உளர். கவை - அறிவு. உலகியலில் கவைக்குதவாத காரியம் எனக் கூறக்காண் கின்றோம். அதில் கவை என்பது பயன் அல்லது அறிவு என்னும் பொருள்படுதலைக் காண்க.

குவைப்பதி: ஓரூர் என்பாரும் உளர். பதிக்குவை மலித்த கோவே என இயைத்து, தலங்களின் கூட்டங்கள் அனைத்திலும் நிறைந்துள்ள தலைவனே என்க.

கலை ஆர் அரிகேசரியாய் என்பதற்குக் கலைஞானங்கள் நிறைந்த அரிகேசரி என்னும் தலம் என்பாரும், அரிகேசரி ஆர் கலையாய் எனக்கூட்டிக் கொல்லுந்தன்மைவாய்ந்த சிங்கத்தினது அரிய தோலை உடுத்தியவனே என்பாரும் உளர்.

அறியப்படாதனவாகிய அரிகேசரி முதலியவற்றை அவர்கள் தலங்களாகக் கொள்ளுதற்குக் காரணம் 'மேவிய' 'மலிந்த' எனவரும் சொற்கள் எழுந்தருளிய எனப் பொருள்படுதலும், 'உய்யக்கொள்வாய்' என்பதற்கு ஓர் இயைபு இன்மையும் ஆம் என்பர். மேவிய - விரும்பிய, மலிந்த - நிறைந்த என்ற பொருள்களைத் தருதலானும், கையில் மூவிலைவேலுடைமையும், வெற்றிச் சின்னமாக நரசிங்கத்தின் தோலை உடுத்தமையுமே உய்யக் கோடற்கு ஏற்புடையவாகலானும் ஆய்வும் உரையும் ஊற்றமில்லாதன என உணர்க. பழைய உரையாசிரியரும் நரசிங்கத் தோலுடையவன் எனல் காண்க. கீர்த்தித் திருவகவலிலும் தலங்களைக்கூறும்போது இடையிடையே வேறுபல கீர்த்திகளும் விரவிவருதல் காண்க.

பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி 195
தெரிவரி தாகிய தெளிவே போற்றி

இ - ள்: மலைகள் பொருந்திய திருப்பூவணம என்னும் தலத்தில் விரும்பியுறைகின்ற அரனே! போற்றி; அருவமும் உருவமும் ஆனவனே! போற்றி; உயிர்களை மருவிய கருணை மலையே! போற்றி; துரியநிலைகடந்த ஒளிப்பிழம்பே! போற்றி; ஆராய்ந்து அறிதற்கு அரிய தெளிந்த பொருளே! போற்றி என்றவாறு.

அருவம் - ஞானமேயான கடந்தநிலை. உருவமாவது நாம் உய்வதற்காக இறைவன் கை கால் முதலிய உறுப்புக்களோடு வெளிப்பட்ட நிலை. இரண்டும் கூறவே இடைப்பட்ட உருவாருபமும் கொள்ளப்படும். அவை சிவலிங்கத் திருமேனி.

'அருவமும் உருவாரூப மானதும் அன்றிநின்ற
உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக் குள்ளவாமே'

என்னும் சிவஞானசித்தியாரினும் காண்க.

சர்க்கரை திதிக்கும் என்றல் சுவைப்பான் நாவைச்சார்ந்து அறியப்படுதல்போல, இறைவன் கருணைமலையாவன் என்பது அவன் ஆன்மாக்களை மருவிநிற்பதால் அறியப்பெறுமென்பார் 'மருவிய கருணைமலையே' என்றார். இங்குச் செயப்படுபொருள் வருவித்துரைக்க.

துரியம் - நான்காவது நிலை. நனவு, கனவு, உறக்கம் இவற்றைக் கடந்த நிலை. நனவுக்குரிய இடம் புருவமத்தி. கனவுக்குரிய இடம் கண்டம். உறக்கத்துக்குரிய இடம் இதயம். துரியத்திற்குரிய இடம் நாபி. அதனைக் கடந்த துரியாதீதம் மூலாதாரம். அங்கு விளங்கும் ஒளிப்பிழம்பு, துரியாதீதத்தில் உள்ள ஒளியோடு உயிர் ஒன்றியபொழுது நுகரப்படுகின்ற தெளிந்த ஞானத்திருவுருவாகிய சிவம். எங்ஙனம் இருந்தது? எப்படி விளைந்தது? என்றறியப்படாததாய் அனுபவத்திற்கு மட்டும் வருவதொன்றாதலின் 'தெரிவு அரிதாகிய தெளிவே' என்றார். பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் தெரிவரிதாய், பதிஞானத்தினாலே தெளியப்படுகின்ற தெளிவாக இருத்தலின் இங்ஙனம் கூறினர் எனலும் ஆம்.

*தோளா முத்தச் சுடரே போற்றி*
*ஆளா னவர்கட் கன்பா போற்றி*
*ஆரா அமுதே அருளே போற்றி*
*பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி* **200**
*தாளி அறுகின் தாராய் போற்றி*

இ - ள்: துளையிடப்படாத முத்தின் ஒளியே! போற்றி; ஆளாக அடிமை பூண்டார்க்கு அன்பனே! போற்றி; உண்டு தெவிட்டாத அமுதமே! அருளே! போற்றி; பலதிருநாமங்களை யுடைய பெருமானே! போற்றி; தாளியறுகாலாகிய மாலை அணிந்தவனே! போற்றி என்றவாறு.

தோளா முத்து - தொளையிடப்படாத முத்து. அதன்கண் விளங்கும் வெள்ளொளியாக இறைவனைக் காணுகின்றவர் 'தோளா முத்தச் சுடரே' என்கின்றார்.

பேராயிரம் உடைய பெம்மான் - பல திருநாமங்களையுடைய பெருமான். அவனுக்கு இத்தனை நாமங்களில் விருப்பில்லையா யினும் வானோர்கள் அவனது பலபெயர்களைச் சொல்லி ஏத்துகின்றார்கள் என்பதனைப் 'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானை' என்னும் புள்ளிருக்குவேளூர்த் திருத்தாண்டகமும் உணர்த்துகிறது. ஆயிரம் என்பது இங்கு மிகுதிப்பொருட்டு.

தாளியறுகு : உம்மைத்தொகை. தாளி - கூதாளி "வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்" என்பது காண்க. தாளியறுகு - ஒருவகை அறுகுமாம்.

*நீளொளி யாகிய நிருத்தா போற்றி*
*சந்தனச் சாந்தின் சுந்தா போற்றி*
*சிந்தனைக் கரிய சிவமே போற்றி*
*மந்திர மாமலை மேயாய் போற்றி* 205
*எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி*

இ - ள் : நீண்ட ஒளிப்பிழம்பாகிய நிருத்தனே! போற்றி; சந்தனக்கலவை பூசிய அழகனே! போற்றி; சித்தித்தற்கரிய சிவமே! போற்றி! மகேந்திரமாகிய பெரிய மலைக்கண் எழுந்தருளியிருப்பவனே! போற்றி; உய்வதற்காக எம்மை அடிமை கொள்வானே! போற்றி என்றவாறு.

நீளொளி - பேரொளி. "அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்" எனச் சேக்கிழார்பெருமான் சொல்லியிருப்பதைக் கொண்டு, பேரொளிப் பிழம்பாக இருக்கும் நிருத்தனே எனக் கொள்க. கற்கண்டு துகள் துகளாகச் சுவைத்தாலும் ஒருசேரச் சுவைத்தாலும் இனிப்பே தருவதுபோல, தனித்தனி அவயவங்களைக் கண்டாலும் திருமேனியை ஒருசேரநோக்கினாலும் ஒளியே புலப்படுதலின் இங்ஙனங்கூறினார். இதற்கு இன்றையவிஞ்ஞான அறிவுகொண்டு வேறு உரைத்து இடர்ப்படுவாரும் உளர். நான்முகன் திருமால் ஆகிய இருவருக்கும் இடையே எழுந்த பேரொளியாதலின் இங்ஙனம் கூறினார் எனலும் ஆம். கூத்தப் பெருமான் திருமேனி ஞானமே வடிவாதலின் பெரிய ஞானமே வடிவான நிருத்தனே எனலும் ஆம்.

'சுண்ணவெண் சந்தனச்சாந்தும்' என்புழிப்போல,சந்தனமாகிய கலவை எனப் பொருள்காண்க. சந்தனமும் சாந்தும் என உம்மைத்தொகையாகக் கொண்டு சந்தனமும் திருநீறும் என்று உரைப்பாருமுளர்.

*புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி*
*அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி*
*கருங்குரு விக்கன் றருளினை போற்றி*
*இரும்புலன் புலர இசைந்தனை போற்றி* 210
*படியுறப் பயின்ற பாவக போற்றி*

இ - ள் : புலி தன்முலையை மான்கன்றுக்கு ஊட்டுமாறு அருள்செய்தவனே! அலைகளையுடைய கடல்மீது நடந்தவனே!

போற்றி; கரிக்குருவிக்கு அன்று முத்தியை அளித்தவனே! போற்றி; பெரிய ஐம்புலன்களும் புலரும்வண்ணம் பொருந்தியவனே! போற்றி; இப்பூமியில் பொருந்தப் பலகாலும் காட்டிய திருமேனித் தோற்றங்களை உடையவனே! போற்றி என்றவாறு.

முன்னொருகாலத்தில் மதுரையைச் சூழ்ந்து கடம்பங்காடு அடர்ந்திருந்தது. புலிகள் அங்கு மிகுதியாக வாழ்ந்திருந்தன. அதனால் மான்கூட்டம் சிறுகியது. அந்த நிலையில் மானொன்று கன்றை ஈன்று, அதனைத் தூறில் மறைத்து வைத்துவிட்டுக் குளக்கரைக்குச் சென்றபோது, வேடனொருவன் அந்தத் தாய் மானைக் கொன்றுவிட்டான். அதனால் அந்த மான் மிக நொந்தது. இதனைத் திருவுளம்பற்றிய இறைவன் அக்காட்டில் வேறு பெண்மான் ஒன்றும் இல்லாமையால் அருகில் உலாவிய ஒரு பெண்புலியைப் பார்த்து, அதற்குப் பாலூட்டுக என ஆணை பிறப்பித்தார். புலிப்பாலைக்குடித்துப் புல்வாயும் வளர்ந்தது. இதுவே புலிமுலை புல்வாய்க்கு அருளிய வரலாறு.

இறைவன் கேவேடராகிக் கெளிறது படுக்கக் கடல்மீது உலாவிய வரலாற்றைக் குறிப்பது அலைகடல் மீமிசை நடந்தது என்பது. மீமிசை: ஒருபொருட்கிளவி.

கருங்குருவிக்கு அருளிய வரலாறு: காக்கைகளால் துன்புறுத்தப்பட்ட கரிக்குருவிகளுள் ஒன்று பண்டைநற்றவத்தால் தோன்றிப் பரமனைப்பத்திபண்ண வந்தது. இறைவன் இரங்கி, பகைவரை வெல்லும் மூன்றெழுத்து மந்திரமாகிய நசிய என்பதனை அதற்கு உபதேசித்தார். அதனை ஓதி, அப்பறவை பகை வெல்லும் ஆற்றல் பெற்று, தன்னினத்தையே வாழவைத்தது. அதனால் அது வலியான் எனவும் வழங்கப்படுவதாயிற்று.

நமது பொறிகள் தத்தமக்குரிய புலன்களை இடைவிடாது நுகர்ந்துகொண்டே இருக்குமாயின் உலக இன்பங்களில் பற்றுக்கொண்டு உயிர்களின் மனம் இறைவனைப் பொருந்தா. ஆகவே புலன்கள் புலர்ந்தால் மடைமாறிவிட்டதுபோல மனம் கடவுளைச்சென்று பற்றும். அம்மனத்தில் பரமன் அன்போடு பொருந்துவராதலின் 'இரும்புலன்புலர இசைந்தனை' என்றார். புலர என்பது காரணப்பொருளில்வந்த செயவென்னெச்சம்.

பாவகம் - உரு. அடியார்களுக்காக இறைவன் இப்பூமியில் பல உருவங்களைக்கொண்டமையை உணர்த்துவது 'படியுறப் பயின்ற பாவக' என்ற பகுதி. இவ்வரலாற்றின் உட்கோளை

வந்திக்குக் கூலியாளாய் வந்ததும், பன்றிக்குட்டிக்குப் பால் அருத்தியதும், அடிகளார்க்குச் சேவகனாகித் திண்சிலை ஏந்திப் பாவகம் பலபல காட்டியதும் ஆகிய நிகழ்ச்சிகளில் காண்க. படி - பூமி.

*அடியொடு நடுவீ றானாய் போற்றி*
*நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்*
*பரகதி பாண்டியற் கருளினை போற்றி*
*ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி* 215
*செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி*

இ - ள்: முதலும் நடுவும் ஈறும் ஆனவனே! போற்றி; நரகம் சுவர்க்கம் நால்வகையான இந்நிலவுலகம் இவற்றில் மீளவும் புகுதாதவண்ணம் பாண்டியனுக்கு அருள்செய்த பெருமானே! போற்றி; எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிற ஒப்பற்றவனே! போற்றி; செழுமையான பூக்கள் நிறைந்த சிவபுரத்திற்கு அரசே! போற்றி என்றவாறு.

பாண்டியனுக்குப் பரகதி அருளிய வரலாறு: இறைவன் தடாதகைப்பிராட்டியை மணஞ்செய்து, அவள் தந்தையாகிய மலயத்துவச பாண்டியனுக்காக ஏழு கடலையும் வருவித்து அதில் மூழ்கச்செய்து வீடளித்தமையைக் குறிப்பது.

செழுமலர்ச் சிவபுரம் என்பது 'திருப்பெருந்துறையில் செழுமலர்க் குருந்தமேவிய சீர் அருத்தனே' எனப் பின்வரும் பகுதிகளால் திருப்பெருந்துறையையே குறித்தல் காண்க.

*கழுநீர் மாலைக் கடவுள் போற்றி*
*தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி*
*பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்*
*குழைத்தசொல் மாலை கொண்டருள் போற்றி* 220

இ - ள்: செங்கழுநீர் மலர் மாலையை அணிந்த கடவுளே! போற்றி; வணங்குவாருடைய மயக்கத்தை அறுப்பவனே! போற்றி! பிழை, பிழைபடாமை இவை ஒன்றையும் அறியாத நாயினேன் குழைத்து ஆக்கிய சொல்மாலையை ஏற்று அருள் செய்பவனே! போற்றி என்றவாறு.

மையல் - மயக்கம்; அறியாமை. பிழைப்பு - தவறு. வாய்ப்பு - தவறற்ற வாய்ப்பு. இது தவறு, இது தவறற்றது என்று அறியும் ஆற்றலில்லாத நாயேன் என்றவாறு. இது தவறு உடையது, இது இறைவற்கு வாய்ப்பானது என்று அறிந்து சொன்மாலை பயிலத் தெரியாத நாயேன் எனக் கூட்டினுமாம்.

குழைத்த சொல் மாலை - மனத்தைக் குழைத்த சொற்களாலாகிய மாலை. கொண்டருள்: ஒருசொல்; ஏற்றருள் என்பதாம்.

*புரம்பல எரித்த புராண போற்றி*
*பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி*
*போற்றி போற்றி புயங்கப் பெருமான்*
*போற்றி போற்றி புராண காரண*
*போற்றி போற்றி சயசய போற்றி.* 225

இ - ள் : முப்புரங்களையும் எரித்த பழமையானவனே! போற்றி; மேலானவற்றிற்கெல்லாம் மேலான ஒளிப்பிழம்பாகிய பரனே! போற்றி; பாம்பை ஆபரணமாகவுடைய பெருமானே! போற்றி; போற்றி; பழமையான காரணப்பொருளே! போற்றி, போற்றி, வென்றி, வென்றி என்றவாறு.

ஒன்றுக்கு மேற்பட்டன யாவும் பல என்றல் தமிழ் மரபாதலின் முப்புரங்களை எரித்தமையைப் புரம் பல எரித்த என்றார்.

பரம்பரம் - மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன். புயங்கம் - பாம்பு. தோளால் நகர்ந்து செல்லுதலால் வந்த காரணப் பெயர். பாம்புகளை அணிந்தமையால் இறைவன் புயங்கப் பெருமான் எனப்பட்டார். புஜங்க நடனம் ஆடுவதால் வந்த பெயருமாம். புராண காரணன்-பழமைக்குப் பழமையானவன். பின்னர், 'முன்னைப் பழம்பொருளே' (163) என்றதும் காண்க. சய சய - வெற்றி வெற்றி.

இவ்வண்ணம், இவ்வகவல், பிரமன் மால் முதலிய தேவர்களுக்கரிய பெருமான் அடியார்களுக்கு எளியராய், நிலந்தன் மேல் வந்தருளிய நிகழ்ச்சியையும், அங்ஙனம் அடியார்களை மலபரிபாகத்தின்பொருட்டுக் கருவாய்ப் புகுத்திய காலமுதல் பிறக்கும்வரை பாதுகாத்தருளும் பண்பும், பருவ வேறுபாடுகளில் நேரும் துன்பங்களினின்று அவர்களைத் தப்புவிக்கும் தயையும், நல்ல முதுமைப் பருவத்தில் கடவுள் நினைவு தோன்றிய பொழுது பலகோணங்களிலிருந்து பலசமயங்கள் தத்தம் கொள்கைகளே சிறந்தன எனச் சொல்ல அதில் மனம் மாறுபடாமல் தப்பி, தம்மடிசாரத் தாமே ஆசாரியனாக எழுந்தருளி, வந்து தாயைப்போலப் பாதுகாத்த முறைமையைப் பாராட்டி, அவருடைய பல்வேறு புகழ்களைப் பகர்ந்தும் போற்றுவதாக இனிது முடிகிறது.

# 5. திருச்சதகம்

*[பத்தி வைராக்கிய விசித்திரம்]*

சதம் - நூறு. சதகம் - நூறு பாட்டுக்களை அந்தாதித்தொடையான் தன்னகத்துக்கொண்ட நூல். இது தெய்வத்தன்மை வாய்ந்த நூறு திருப்பாடல்கள்கொண்ட பகுதியாதலின் திருச்சதகம் எனப் படுவதாயிற்று. சதகம், அணைந்தோர் தன்மையின் பெருமையினை அறிவிப்பது. அத்தன்மை கனிந்தமனத்து அடியார்களுக்கு மூன்று கரணங்களும் அடிமைத்திறமே வெளிப்பட விளங்குவதால் ஒன்றும் பெருதன போலவும் பெற்றவற்றை நுகர்ச்சியாகவும், பெறுதற்கு அரியபேருகவும் காணப்பெறும். அதனால் இச்சதகத்திற் கூறப்படும் அணைந்தோர்தன்மை பத்துவகையாம். எங்ஙனம் எனின்? இந்தச் சதகம் பதிற்றுப்பத்தந்தாதியாம். பத்துக் கொத்துக்களுடையதாம்.

முதற்பத்து தேகத்தில் காணப்பெறும் பரிபாக சின்னங்களை அதாவது அன்பின் விளைவாகிய மெய்ப்பாடுகளை இயக்கும் சிவ சத்தி. இரண்டாம்பத்து மனத்தினைப் பரிபாகப்படுத்தும் சிவசத்தி. மூன்றும்பத்து அன்பைப் புலப்படுத்தும் சிவசத்தி. நான்காம்பத்து மறைக்கும் திரோதானசத்தியைக்காட்டும் சிவசத்தி. ஐந்தாம்பத்து யாக்கையைப் பரிபாகப்படுத்தும் சிவசத்தி. ஆறும்பத்து துதித்தலே அநுபவமென்பதைப் புலப்படுத்தும் சிவசத்தி. ஏழாம்பத்து கரணங்கள் பலவழிச் செல்லினும் தடுத்து அருள்வழி நிறுத்தும் சிவசத்தி. எட்டாம்பத்து பெற்றோர் எய்திய பயன்போல யாராலும் அடைய முடியாதது என்று பேரின்பத்தில் அவாக்கொடுக்கும் சிவசத்தி. ஒன்பதாம்பத்து கொடுத்த வாழ்வு அனைத்தும் பேரின்பமே என உணர்த்தும் சிவசத்தி. பத்தாம்பத்து துதிசெய்தல், மனமுருகல், பேரின்பம்பெறுதல், தேகபாசம்நீங்குதல், யானென்னும் அகந்தை அகறல், இன்பப்பேறு இவற்றை நல்கவேண்டும் என்பதே வரம் என்று உணர்த்தும் சிவசத்தி. இவ்வண்ணம் இப்பத்துப்பத்தின் பொருளனுபவம் உணரத்தக்கது.

இவற்றுள் முதற்பத்தின் பயனுவது மெய்ப்பாடுகள் விளைதல். அது மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீரரும்புதல், பிறதெய்வம் உள்ளாமை, திருவடிக்கண் பித்துறுதல், புறந்தொழாமை, திருவடிக்காம் பிறவிவேண்டல், அன்பு நிரந்தரமாய்வேண்டல், அன்பினுலடைந்தமை வியத்தல், வினைநீக்கம் வேண்டல், சிறுமை கண்டும் ஏற்ற பெருமையைப் பாராட்டுதல், தன்னை ஏற்றமை குறித்து நகுதல் எனப் பத்தாகப் பாடல்தோறும் முறையே மிளிர்தல் காண்க.

இப்பகுதி, பத்தியையும் வைராக்கியத்தையும் வியக்கத்தக்க தன்மையில் வைத்து விளக்கிச் செல்வதால், இதன் கருத்து பத்தி வைராக்கிய விசித்திரம் எனப்பட்டது. பத்தி - இறைவன்மாட்டு எழுவதாகிய கனிந்தமனத்தின் நெகிழ்ச்சி. வைராக்கியம் - உலகப் பொருளினிடத்திருந்த பற்று அறுதல். சூரியன் எழ உள்ளக்களிப்பு மிகுதல்போல, பத்தி தோன்ற வைராக்கியம் விளையும். அதனால் எத்தனையோ வியக்கத்தக்க அநுபவங்கள்விளையும். அதனைக் காட்டு தலின் இப்பகுதி இக்கருத்துரைக்கு முழுதும் பொருந்துவதாகின் றது. மகாவித்துவான் பிள்ளையவர்கள், தமது ஞானசாரியனிடம் விளைந்த வரம்பிகந்த அன்பின் முதிர்வே பத்தி வைராக்கிய விசித் திரம் என்றுகாட்ட 'சத்திய ஞானக்குருதேசிகர் மோகம் சதகமாம்' என்பார்கள். பத்தியும் வைராக்கியமும் தோன்ற, பலதரப்பட்ட அறிவு விளக்கங்கள் வாயில்களாக அமைகின்றன. ஆதலால் முதற் கண் மெய்யுணர்தல் என்னும் வாயில் உணர்த்தப்பெறுகிறது.

## க. மெய்யுணர்தல்

மெய்யுணர்தலாவது நாம் நுகரும் பொருள்களின் நிலையாமை யைத் தன் அனுபவத்தானும் நூலறிவானும் உபதேச மொழிக ளானும் கண்டு, நிலையான இன்பத்தையும் இன்பப்பொருளாகிய இறைவனையும் அனுபவத்தானுணர்தல். மெய் - அநாதிநித்தியப் பொருளாகிய இறை. உணர்தலாவது தேகாதி பிரபஞ்சங்களைக் கண்டு நீங்கி, இறைவனை உணர்தல். இது மெய்யுணர்வு எனவும் சில ஏடுகளில் காணப்படுகின்றன.

### கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

5 மெய்தா னரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றியென்னுங்
கைதான் நெகிழ விடேனுடை
யாயென்னைக் கண்டுகொள்ளே. 1

இ - ள்: என்னுடல் புளகங்கொண்டு, மிகவும் நடுங்கி, உனது தெய்வமணங்கமழும் திருவடிகளை எண்ணிக் கைகளைச் சிரமேல் குவித்து, கண்களில் ஆனந்தநீர் ததும்பி, உள்ளம்

வெதும்பி, பொய்ம்மைகள்யாவும் நீங்கப்பெற்று, 'போற்றி, சயசய போற்றி' என்று உன்னைக்கூறும் ஒழுக்கத்தைத் தளர விடேன்; என்னை உடைமையாக உடையவனே! என்னைப் பார்த்துக்கொள் என்றவாறு.

இத்திருப்பாடல் மேற்குறித்தவாறு மெய்ம்மயிர் சிலிர்த்து நடுங்கி, ஆனந்தக்கண்ணீர் சொரிய, போற்றி போற்றி என்று சிரமேல் கைகுவித்து வணங்குவேன்; என்னைப் பார்த்தருள்; கடைக்கணித்தருள் என்று வேண்டிக்கொள்கிறது.

உடல் சிலிர்த்து நடுங்கி, கைகளைத் தலைமேல் குவித்து, ஆனந்தக்கண்ணீர் பொழிந்து, மனம் வெதும்பி, பொய்ப் பற்று அற்று, போற்றி! சய! சய!! போற்றி!!! என்பேன்; இவ்வொழுக்கத்தை ஒருபோதும் தளரவிடேன்; உடையாய் என்னைப் பார்த்துக்கொள் என்பது கருத்து.

உடையாய் என்பதற்கு எல்லாம் உடையவனே என்றும், கண்டுகொள் என்பதற்கு அடிமையாக ஏற்றுக்கொள் என்றும் உரை கூறுவாரும் உளர். ஆன்மாக்கள் இறைவற்கு உடைமை யாதலும் அடிமையாதலும் ஆகிய இருநிலைகளை உடையன. அடிமையாகும் நிலை திருவருளுக்கு முழுதும் இடமாகித் தன் முனைப்படங்கிய மெய்யுணர்வு நிலை. உடைமையாகும் நிலை அவ் வறிவும் மடங்கிக் குடமும், பொற்பணியும், மாடும் கன்றும், மனையும் மலையும் போல உடைமையாய்ச் சுதந்திரமற்ற நிலை. அந்தப் பெருநிலையையே அடிகள் உடையாயென்று குறிப்பித் தமை காண்க. உடையாய் என்பது ஸ்வாமி என்பதற்கு ஒத்த தமிழ்ச்சொல். உடையவனுக்கு உடைமையைப் பிறர் கவராத படி காத்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு இன்றியமையாத தாகலின் 'கண்டுகொள்' என்றது.

அன்பிற்குரிய பொருளை நினைந்தால் மெய் பொடித்தலும், நடுங்குதலும், ஆனந்தக்கண்ணீர் சொரிதலும் இயல்பாகும். ஈண்டு அன்பு செய்யப்படும் பொருளாகிய இறைவனை எண் ணிய உடனேயே, இன்ப உணர்ச்சி விளைய, அதனால் முற்கூறிய மெய்ப்பாடுகள் விளைவன என்பார் 'மெய்தான் அரும்பி விதிர் விதிர்த்து' என்றார். ஈண்டு விளைந்த நடுக்கம் அன்பு காரண மாக எழுந்ததென்க. இம்மெய்ப்பாடுகள் காமம்பற்றி விளைவன வாகப் பொருள் நூலில் காண்கின்றோமாதலின் அதனை விலக்க 'உன் விரையார் கழற்கு' என்றார். விரை ஆர் கழல் - மணம் பொருந்திய மலர்போலும் திருவடி. அன்பர்கள் இட்ட மலரால்

மணம் நாறும் அடி எனலுமாம். கைதான் தலை வைத்து - இரு கைகளையும் அஞ்சலியாகப் பிடித்துத் தலையின்மீதுவைத்து.

ததும்பி - எல்லை கடந்து ஒழுகாது இமைகளில் துளும்பி. வெதும்பி - வெப்பமுற்று; உடல் இளைத்து என்பாரும் உளர். உள்ளம் பொய்தான் தவிர்ந்து - என்னுள்ளம் யான் என்ற அகப்பற்றாகிய பொய் நீங்கி, எனது என்னும் புறப்பற்றும் நீங்கப்பெற்று, அதனால் ஆராமை வெப்பங்கொண்டு எனலுமாம். பொய் - மாயா காரியமான பொய்ப்பொருளை மெய் என்று உணரும் மயக்கவறிவுமாம். அது தவிர்தலாவது அம்மயக்கம் நீங்கப்பெறுதல். பொய் தவிர்ந்தவுடன் தோன்றுவது மெய்ப் பொருளாகிய சிவக்காட்சியே. ஆகவே, 'உன்னைப் போற்றி சய சய போற்றி' என்றார். பொய்யை வென்று, மெய்கண்டது ஒன்றே வெற்றியாதலின் 'சய சய போற்றி' என்றார்.

கை - ஒழுக்கம். தன்முனைப்பாலும் மறதியாலும் பொறியுணர்வின் மயக்காலும் ஒழுக்கம் தளருமாதலின் அங்ஙனம் தளராதென்பார் 'கைதான் நெகிழவிடேன்' என்றார். இறைவனை உடையாய் என விளித்தமையின் தன்னை உடைமையாகக் கருதவைத்தாராயிற்று. ஆகவே, உடைமையை விழிப்பாகப் பாதுகாத்தல் உடையான் கடமையாம் என்பதுதோன்ற 'கண்டு கொள்' என்றார்.

இப்பாட்டில் மெய்ப்பாடுகளால் பத்தியும், பொய்தவிர்ந்து என்பதால் வைராக்கியமும், கண்டுகொள் என்பதால் விசித்திரமும் பெறப்படுதல் காண்க. இவை அனைத்தும் மெய்யுணர்ந்தார் தன்மையாதலின் மெய்யுணர்வும் ஆயிற்றென்க.

6

கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே
யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல்
லாதெங்கள் உத்தமனே. 2

இ - ள் : எங்கள் சிறந்த தலைவனே! இறைவனே! இந்திரன், திருமால், பிரமன் இவர்கள்வாழ்க்கையைக் கொடுத்தாலும் கொள்ளேன்; என் குடிப்பெருமையே அழிவதாயினும் உன் அடியார்களுடன் அன்றிப் பிறரொடு நட்புக் கொள்ளேன்;

அதனால் நரகமே புகநேர்ந்தாலும் அதனை இகழாமல் விருப்போடு ஏற்பேன்; உன்னுடைய திருவருளாலே இருக்கநேரின் உன்னையல்லாது பிறதெய்வங்களை மனத்தாலும் எண்ணேன் என்றவாறு.

இந்திரபதம் முதலிய பதவிகளையும் விரும்பேன்; அடியார் கூட்டமும் திருவருளுமே வேண்டப்படுவன; இவற்றால் என்ன கேடு வந்தாலும் ஏற்பேன்; மறந்தும் புறந்தொழேன் என்பது கருத்து. இது வைராக்கியத்தை வற்புறுத்தியது.

நரகம் புகினும் குடிகெடினும் என்ற உம்மைகள், அவை நிகழா என்பதை உணர்த்திநின்றன. 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்புழிப்போல.

உத்தமன் - தலைவன். உயர்ந்தவன் என்பது இறைவனது பரத்துவத்தையும், இறைவா என்பது எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தன்மையையும் விளக்குவன. இந்திரன் முதலியவர்கள் ஒருபொருளாகவைத்து எண்ணத்தகாதவர்கள் என்பார் பெயர் குறியாது 'பிற தெய்வம் உள்ளேன்' என்றார்.

'நினதடியாரொடு அல்லால் நள்ளேன்' என்பதால் பத்தியும், 'உன்னையல்லாது பிறதெய்வம் உள்ளேன்' என்பதால் வைராக்கியமும் உரைக்கப்பெறுதலின் இத்திருப்பாடல் பத்தி வைராக்கிய விசித்திரமாதல் காண்க.

7

உத்தம னத்த னுடையா
னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ
னென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட
வூரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசவெஞ்
ஞான்றுகொல் சாவதுவே. 3

இ - ள்: உத்தமனும், தந்தையும், சுவாமியும் ஆகிய இறைவன் திருவடிகளையே எண்ணி, மனம் உருகி, களித்த சிந்தையோடு, இவன் ஒரு பித்தன் என்று பிறர் சொல்ல, எனது எண்ணம்போலப் பலவற்றை யான் சொல்லி ஊர்கள் தோறும் திரிந்து, எவரும் தத்தம் மனம்போன போக்கிற் பேச நான் அழிவது எப்பொழுதோ? என்றவாறு.

இறைவா! உன்னடிகளையே எண்ணி, ஊரார்கள் வாயில் வந்தபடியெல்லாம் பேசினும் நினைத்தபடியெல்லாம் பேசினும் அவற்றைப் பொருட்படுத்தாது 'நான்' என்னும் தற்போதம் அழிவது என்றைக்கோ? என்பது கருத்து.

உத்தமன் - உயர்ந்தவன். பொருள்களின் தகுதி நோக்கி உத்தமம் மத்திமம் அதமம் எனப் பிரிப்பர். அவற்றுள் பரமன் உயர்ந்தனவற்றுள் மிக உயர்ந்தவனாக இருத்தலின் உத்தமன் என்றார். ஆண்டான் எனப் பொருள்கொண்டு அறிவுடைப் பொருளாகிய என்னை ஆண்டான் என்பாரும் உளர்.

அத்தன் - தந்தை. இறைவன் தந்தையாயிருந்து செய்யும் உபகாரத்தை முன்னரே உரைத்தாம்.

மெய்யன்பரால் பற்றலாவதொரு பொருள் வேறொன்றின் மையானும், திருவடியே பரிபாகமுற்ற ஆன்மா எதிர்நோக்கும் பேரின்பம் தரவல்லதாதலானும் 'அடியே நினைந்து உருகி' என்றது. நினைதல் அன்பாலும், உருகுதல் அதன் முதிர்ச்சி யாலும் விளைவன என்க.

திருவடியே நினைந்துருகுவதால் களித்தமனத்தோடு ஊர் ஊராகத் திரியும் தம் நிலையைக் கண்டவர்கள் 'இவன் ஒரு பித்தன்' என்று சொல்ல என்பார் 'மத்த மனத்தொடு மால் இவன் என்ன' என்றார்.

மேலும், மனநினைவில் வந்தன எல்லாவற்றையும் சொல்லி அவர்கள் இகழ்ந்துரைத்தல் தன் மதிப்பைக் கெடுத்து, தான் என்னும் முனைப்பை அடக்குதலின் 'மனநினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட' என்றார். ஊரவர் இவன்மால் என்ன, என் மனநினைவில் ஒத்தன ஒத்தன யான் சொல்லிடத் திரிந்து எனச் சில சொற்கள் வருவித்துப் பொருள் காண்க.

தத்தம் மனத்தன பேசுதலாவது இவருடைய சிவானந்த அனுபவம் தெரியும் ஆற்றலில்லாமையால், பித்தன் என்பாரும் பேயன் என்பாரும் கள்ளன் என்பாரும் நல்லன் என்பாரும் அருளன் என்பாருமாக நினைத்தபடியெல்லாம் பேசுதல்.

உலகவர் இகழ்ச்சியும் புகழ்ச்சியும் ஒரு தன்மையாக எண் ணும் தன்முனைப்பு என்று நீங்குமோ அன்றுதான் பேரின்ப வாயில் திறக்கின்றது ஆதலின் 'எஞ்ஞான்றுகொல் சாவது' என்றார். சாவது - தன்முனைப்பு அழிவது.

நான் என்ற முனைப்புச் சிறிது உண்மையால் அவர்கள் பேசுவதும், நினைப்பதும் எனக்குத் துன்பம் விளைவிக்கின்றன; அதுவும் அழியுமானால் வெறுப்புணர்ச்சி நீங்குமே; அத்தகைய நல்லநாள் என்றோ என்று வினவுகின்றார்கள். இதனால் அகப் பற்றறுதியாகிய வைராக்கியம் விரும்பப்படுகிறது.

8 சாவமுன் னாட்டக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவெந் தாயென் றவிதா
விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடு
மெண்ணிவிண் ணாண்டுமண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன
பாவந் திரிதவரே. 4

இ - ள்: முன்னொருகாலத்துத் தக்கன்செய்த யாகத்தில் ஆட்டைத் தின்றும், பாற்கடலில் நஞ்சு உண்டானபோது இறத்தற்கு அஞ்சியும், ஐயயோ! எந்தையே! அவிதா என்று கூச்சலிடும் நம்மவர்களாகிய தேவர்களே, எம் தலைவனாகிய சிவபரம்பொருளோடு ஒருங்குவைத்து மூவர் என்று எண்ணி விண்ணுலகாண்டு, இப்பூமியில் தேவரென்று இறுமாந்துத் திரிவார்கள் என்னபாவம் என்றவாறு.

பிரமன், திருமால், உருத்திரன் என மூவரில் ஒருவனாக வைத்துச் சிவபெருமானை உருத்திரருள் ஒருவனாக எண்ணித் தம்மையும் அவரோடு ஒத்தநிலையில் கருதிச் செருக்கித் திரியும் தேவர்கள் நிலைக்கு இரங்கிக் கூறியவாறு.

தேவர்கள் தக்கயாகத்தில் அவியாகிய ஆட்டைத் தின்று, வீரபத்திரரால் கொல்லப்பட்டார்களென்ற வரலாற்றை அடக்கி வேள்வித்தகர் சாவத்தின்று என்று கூட்டுகிறது பழையவுரை.

எரியோம்பிப் பசுவேட்டல் - சிவாக்கினியாகிய திருவருளில் ஆன்மபோதமாகிய பசுத்துவத்தை அழித்துச் சிவபோதமாகிய அமுதாக்கி இறைவற்கே அளித்தல். இதுவே வேள்வி எனப் படுவது. இஃதறியாது தக்கனும் ஆட்டைக் கொன்று யாகம் செய்தான்; தேவர்களும் இஃதறியாது ஆட்டின் ஊனை உண் டார்கள்; தின்றார்கள் என்பார் 'தக்கன்வேள்வித் தகர் தின்று' என்றார். உண்டல் தின்றல் என்ற வினைவேறுபாட்டு நயத் தினை ஓர்க.

இங்ஙனம், உணவென்றவுடனே விரைந்தோடிச் சென்று, சிவநிந்தகனுகிய தக்கன்வீட்டில் நாம் உண்கின்றேமே என்ற உணர்ச்சி சிறிதுமின்றி உண்ட தேவர்கள், உண்கின்றபோது இறைவனைச் சிறிதும் சிந்தியாத தேவர்கள், அமுதம் கடைந்த போது நஞ்சு உண்டாக அதனைக்கண்டு, நடுங்கி இறைவனைக் காத்தருள அழைத்த அறியாமையைக் குறிப்பிட அடிகள் 'தகர் தின்று நஞ்சம் அஞ்சி ஆஆ எந்தாய் என்று அவிதா இடும் நம்மவர்' என இகழ்ச்சி தோன்றக்கூறினர்கள். இன்பக்காலத்து மறத்தலும், துன்பக்காலத்துத் துதித்தலும் உடைய அவர்கள் தேவர்கள் எனப் பெயர் வைத்திருப்பினும் தன் துன்பத்தைத் தானே நீக்கிக்கொள்ளும் ஆற்றலற்ற அவர்கள் தேவர்கள் அல்லர்; நம்மைப் போன்ற பெத்தான்மாக்களே என்பது தோன்ற 'நம்மவர் அவரே' என்ருர்.

ஆஆ என்பது ஆவ என நின்றது. அச்சப்பொருளைத் தரும் குறிப்புமொழி. அவிதா என்பது துன்பம் நேர்ந்துழி முறையிடும் இரக்கக்குறிப்பிடைச்சொல்.

பிரமன் முதலாயினுரோடு உடன்வைத்து எண்ணப்படும் உருத்திரன், குணதத்துவத்தில் தங்கி, பிரகிருதி மாயாபுவனுந் தம் சங்கரிக்கும் குணிருத்திரனுவான். பரசிவனே சுத்தமாயா புவனுத்தம் சங்கரிக்கும் சங்கார காரணனுய், புனருற்பவத்து குடிலை முதல் பிருதிவிசிருஷ்டிக்கும் பரம கருணையாளனுவான். இவரே மகாருத்திரன் எனப்படுவார். இவரைக் குணிருத்திரனேடு ஒருங்கெண்ணித் தருக்குவோரை மனத்துக்கொண்டு, 'நம்மவரவரே மூவரென்றே எம்பிரானெடும் எண்ணி, விண் ஆண்டு மண்மேல், தேவரென்றே இறுமாந்து என்னபாவம் திரிதவரே' என வாதவூரடிகள் கூறிய திருவாக்கும் அறிக என்னும் சிவஞான மாபாடியமும் இதனை நன்கு விளக்கும். மற்றும் 'தேவரில் ஒருவன் என்பார் திருவுருச் சிவனைத் தேவர் மூவராய்நின்ற தோரார்' எனச் சிவஞானசித்தியாரும், 'மூவர் கோனுய் நின்ற முதல்வன்' என இவர்களும் கூறுதல் காண்க.

9 தவமே புரிந்திலன் தண்மல
ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை
யேனுனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி
லேனின் திருவடிக்காம்
பவமே யருளுகண் டாயடி
யேற்கெம் பரம்பரனே. 5

இ-ள்: எமது பரம்பொருளே! எடுத்த இப்பிறவியில் தவம் செய்திலேன்; குளிர்ந்த மலர்களைத் திருவடியிலிட்டு இடையீடின்றி வணங்கிலேன்; வினைகப் பிறந்த நீங்குதற்கரிய வினைகளை உடையேன்; தேவரீரது மெய்யடியார்களினத்துள் ஆகும் இன்பத்தைப்பெறும் செல்வம் எய்திலேன்; ஆதலால் இப்பிறவி வேண்டாம்; உன் திருவடிக்கு அன்பனும்பிறவியை அடியேனுக்கு அருளுவாயாக என்றவாறு.

தவம், சிவபூசை முதலிய பதிபுண்ணியங்களைச் செய்யேன்; வினைக்கூட்டத்தில் அழுந்துவேன்; அடியார்கள் கூட்டத்தில் இருக்கும் செல்வமாவது எனக்கு உண்டோ எனின், அதுவும் இல்லை; ஆகையால் திருவடிக்கு அன்பனும் மாற்றுப்பிறவியை உதவுவாயாக என்பது கருத்து.

திரு - சிவஞானம். இதுவே சிவத்தைச்சார்தற்கு வாயிலா யிருத்தலின் சிவமேபெறுந்திரு எய்திற்றிலேன் என்றார். தவம் - சிவபூசை முதலிய கிரியைகளும், சிவயோகமுமாம். சிவபூசை அகத்தும் புறத்தும் செய்யப்பெறுவன. யோகம் அகப்பூசை. இவற்றுள் தவமேபுரிந்திலன் எனச் சிவயோகத்தை முன்னர்க் கூறி, பின்னர் மலரிட்டு வணங்குதலான கிரியையை அதாவது பூசையைக் கூறினர். நேரே ஞானவாயிலாகிய சிவயோகத்தை இயற்றமுடியவில்லை ஆயினும், கிரியையென மருவும் யாவும் ஞானவாயிலாதலின், செயலும் சிந்தையும் ஒத்து இயற்றப்படு வதாம் சிவபூசையையும் செய்யேன் என்றார். இது கைவரப் பெற்றவர் சரியையில் நின்ற சாதகர்களே ஆதலின் விசேட தீக்கை பெற்றுப் பயிலப்பெறுவதாகிய கிரியை யோகங்களையே ஈண்டு எண்ணவைத்தார் என்க. சிலர் வேறு வகையாகக் கூறுவர். அது ஈண்டு ஏலாமை ஓர்க.

பிறவியெடுத்ததன்பயன் நால்வகை நெறியினின்று நாதனை அடைந்து இன்பம் துய்த்தலாயிருக்க, அவற்றுள்ளே ஒன்றும் எய்தாமையின் இப்பிறவியே பயனற்றதாக ஆயிற்று என்பார் 'அவமே பிறந்த அருவினையேன்' என்றார்.

உன் கருணை இரும்பைப் பொன்னாக்குவதுபோல என்னை ஞானியாக்கக்கூடுமாயினும், முன்பு கூறியவண்ணம் தவத்தில் தலைப்படாமைக்குக் காரணம் அரிய வினைகளாதலின் அவை தொலைய வேறும் ஒருபிறவியை உதவு; ஆனால் அந்தப் பிறவி திருவடிக்காம் பவமாக இருத்தல்வேண்டும் என்பார் 'நின் திருவடிக்காம் பவமே அருளு' என வேண்டிக்கொள்கிறார்.

சிவமே பெறுந்திரு எய்திற்றிலேன் என இரங்கி, திருவடிக் காம்பவம் வேண்டுதலின் மெய்யுணர்தலாயிற்று.

10

*பரந்துபல் லாய்மல ரிட்டுமுட்*
*டாதடி யேயிறைஞ்சி*
*இரந்தவெல் லாமெமக் கேபெற*
*லாமென்னு மன்பருள்ளங்*
*கரந்துநில் லாக்கள்வ னேநின்றன்*
*வார்கழற் கன்பெனக்கும்*
*நிரந்தர மாயரு ளாய்நின்னை*
*யேத்த முழுவதுமே.* 6

இ - ள்: எல்லாத் தலங்களுக்கும் சென்று, ஆராய்ந்து எடுக்கப்பெற்ற பல மலர்களைக்கொண்டு அர்ச்சித்து, இடைவிடாமல் திருவடியை வணங்கி, இரந்து விண்ணப்பித்துக் கொண்ட விருப்பங்கள் அனைத்தையும் எங்களாலேயே பெற முடியும் என்னும் மெய்யன்பர்கள் உள்ளத்தில் மறைந்து நிற்காத கள்வனே! உன்னை வாழ்நாள் முழுவதும் துதிக்கத் திருவடிக்கண் என்றும் நீங்காத அன்பை எனக்கு எப்போதும் அருளுவாயாக என்றவாறு.

மூர்த்தி தலம் தீர்த்தங்களை முறையாய்த் தொழும் அன்பர்களின் உள்ளத்து வெளிப்பட்டு நின்றருளும் பெருமானே! எனக்கு வேறு பிறவி முற்கூறியவண்ணம் அளிப்பதானால், திருவடிக்கண் இடையறாப் பேரன்பு செய்யும் பிறவியை அளிப்பாயாக என்பது கருத்து.

மலரை ஆராய்ந்து எடுத்தலாவது எச்சில், புழுக்கடி. மலமூத்திரம் பட்டன நீக்கி எடுத்தல். அந்தரம் - இடையீடு. நிரந்தரம் - இடையீடின்மை.

அன்பர்கள் வேண்ட முழுதும் தருவோனாதலின் அவர்கள் கூற்றாகவைத்து 'இரந்த எல்லாம் எமக்கே பெறலாம் என்னும்' என்றார். எல்லாம் என்றது இறைவனை அறிதற்குரிய பரிபாக முற்ற ஞானமும், அதற்கு வாயிலான சாதனங்களுமாம். அன்பருள்ளத்து இறைவன் மாமணியுள் சோதிபோல வெளிப்பட்டு எங்குமாய் நிற்பனாதலின் 'கரந்து நில்லா' என்றும், அன்பு நிலையிற்குறைபட்ட எம்போன்றார்க்கு எம்முயிர் உடனாக ஒன்றியிருந்தும் அறியப்படாமையின் 'கள்வனே' என்றும் கூறினமை காண்க.

அன்பு, உபகாரம் பெற்றபோதுமட்டும் உண்டாவதாய்ப் பின்பு இல்லாமலே ஒழியும் கடையன்பும், தீயைச் சார்ந்தபோதெல்லாம் உருகி விலகியபோது இறுகும் மெழுகுபோல இறைவனையும் அவனைச்சார்ந்த பொருள்களையும் கண்டபோதெல்லாம் கசிகின்ற அன்பாகிய இடையன்பும், எப்போதும் கசிந்து கொண்டு தைலதாரை போன்று ஒழுகும் தலையன்பும் என மூவகைப்படும். இங்குத் தலையன்பே வேண்டப்படுவதென்பார் 'கழற்கு அன்பு எனக்கும் நிரந்தரமாய் அருளாய்' என்றார்.

இவ்வண்ணம் வரங்கேட்பதன் நோக்கம் என்னையோ என இறைவன் வினவுவாராக உட்கொண்டு, 'நின்னை முழுவதும் ஏத்த' என்றார். யான் அத்தகைய பேரன்பை விரும்புவதன் பயன் எப்போதும் உன்னை வணங்கிக்கொண்டேயிருத்தலாகிய அவ்வளவே; இதைக்காட்டிலும் இன்பவிளைவு வேறு எதிலும் இல்லை என்பது கருத்து.

இப்பாடலில் சாதனம் சிவபத்தியே என்பதை உணர்ந்து சொல்லுதலால் இது மெய்யுணர்தலாயிற்று.

*11* முழுவதுங் கண்ட வனைப்படைத்
 தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டெங்குந் தேடவப்
 பாலனிப் பாலெம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடக
 மாடிக் கதியிலியாய்
உழுவையின் றோலுடுத் துன்மத்த
 மேல்கொண் டுழிதருமே. 7

இ - ள் : முன்னாள், இவ்வுலகமனைத்தையும் படைத்த பிரமனைப் படைத்த திருமால், தலைவணங்கி, செழுமையான திருவடிமலரைக் காணவேண்டும் எனக் கருத்துட்கொண்டு எவ்விடத்தும் தேடி அலைய, அவனுக்கு அப்பாற்பட்டவனும் இப்பால் எமக்குப் பிரானுமாகிய சிவபெருமான் இடுகாட்டில் பேயோடு கூத்தாடி, கதியற்றவனாகப் புலித்தோலை உடுத்திக் கொண்டு, ஊமத்தமலரைச் சிரத்தில் அணிந்து அலைவன் என்றவாறு.

உலகத்து இயங்குவன நிற்பன யாவையும் படைத்தவன் பிரமன் ஆதலால் அவனை 'முழுவதும் கண்டவன்' என்றார். காணல் என்பது இலக்கணையாய்ப் படைத்தல் என்னும் பொருளில் வந்தது.

செழுமலர் கொண்டு - செழுமையான தாமரைமலர்போலும் திருவடிகளை மனத்தில் எண்ணி. செழுமலர்: உவமையாகு பெயர். திருமால் பன்றியாய் மண்ணுலகைத் தோண்டி, பாதாளத்தின் கீழும் தேடினார் ஆதலின் 'எங்கும் தேட' என்றார். திருமால் ஒரு பன்றியாகித் தலையைக் கீழ்நோக்கிச் சாய்த்துத் தோண்டினார் ஆதலின் 'முடி சாய்த்து' என்றார். அப்பாலன் என்பது 'பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்' என்பதனால் விளக்கப்பெறும். திருமால் வரலாறு குறிக்கப்பெறவே முழுவதுங்கண்டவனாகிய பிரமனும் தேடி ஓய்ந்தமை குறிப்பால் உணர்த்தப்பெற்றது.

தேவர்களுக்கு அரியனாகிய இறைவன் மண்ணுலகில் வாழும் மெய்யன்பர்களுக்கு எளியன் என்பது 'இப்பால் எம்பிரான்' என்பதால் விளக்கப்பெற்றது. இப்பால் - இவ்வுலகத்து.

அங்ஙனம் உயர்ந்த நிலையில் உள்ள பெருமான் பேயோடு ஆடி, கதியின்றி, பித்தேறி, இவ்வுலகில் சுற்றுகின்றான் என்பது பழிப்பதுபோலப் புகழ்தலாம். இதன் பயன் நகைச்சுவையாம். மாலூழி முதலிய காலத்து இறைவன் எல்லாவற்றையும் தான் அழித்துப் பேயோடு ஆனந்தநடனம் புரிகின்றான் என்ற வரலாறுகொண்டு புகழ்ச்சிப்பொருள் கொள்க.

காடு - மகாசங்காரகாலத்து உலகமெலாம் ஒடுங்கிய இடம் என்பர் சிலர். அக்காலத்துப் பேயும் அழிதலானும் இறைவன் தனியாயிருந்து நல்வீணை வாசிப்பன் ஆதலானும் அவ்வுரை பொருந்தாமை அறிக.

நாடகம் - பொருள் தழுவிய கூத்து. இறைவன் விளைத்த கூத்து, பஞ்சகிருத்தியபொருள்களைத் தழுவியிருத்தலின் அதனை நாடகம் என்றார். இம்மரபு அறியாதார் வேறு கூறுவர். இதனை ஞானசாத்திரங்கள் ஞான நடனம், திருவருள் நடனம், பரமானந்த நடனம் என்றெல்லாம் பேசும்.

கதி - ஆதாரமாக அடையப்படுவது. கதி இலி - அஃது இல்லாதவன். தான் அனைத்திற்கும் ஆதாரமாய் அடையப்படும் இடமாக இருத்தலின், இறைவனைக் கதியிலி என்றார். இறைவனுக்கு அடையத்தகுமிடம் வேறின்மை அறிக. கதியிலி என்பதற்குப் பிறப்பில்லாதவன் என உரைப்பாரும் உளர்.

பொன்னுடையையும், பட்டாடையையும் உடுத்தவேண்டிய இவர் தோலுடுத்தினர் என்ற இகழ்ச்சி ஒருபுறம் தோன்றுமாயினும், வேள்வித்தீயினின்று வெளிவந்த புலியைக் கொன்று

அதன் தோலை வெற்றிக்குறியாக உடுத்தினர் என, வீரத்தால் விளைந்த புகழும் தோன்றுதல் காண்க.

உன்மத்தம் - பயித்தியம். வாழ்வில் மக்களால் துறக்கப் பட்டுத் தனித்தவருக்கு, உரையாடிக் களிக்க ஒருவருமின்மை யால் பயித்தியம்பிடித்தல் இயல்பு. இறைவனும் எல்லாவற்றை யும் அழித்து, தனித்துப் பித்தேறியுள்ளார் என்ற பழிப்பும், அன்பர்கள் சூட்டிய ஊமத்தமலரைத் தன் சிரத்தில் அணிந்து விளங்குகின்றார் என்ற புகழும் தோன்ற 'உன்மத்தம் மேல் கொண்டு உழிதருமே' என்றார். உழிதரல் - திரிதல்.

இறைவன், பிரமன் திருமால் முதலிய அன்பில்லாதார்க்கு அரியனாய் எமக்கு எளியனாதலை, வனப்பேயோடு ஆடிக் கதி யற்றுத் திரிகின்றான் என இறைவனியல்பை அறிந்து கூறு தலின் இது மெய்யுணர்வு ஆயிற்று.

12 உழிதரு காலும் கனலும்
புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலமெக் காலம்
வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்த வுன்னடி
யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாயவை
காத்தெம்மைக் காப்பவனே. 8

இ - ள்: இயங்குகின்ற காற்றும் தீயும் நீரும் பூமியும் ஆகாயமும் தத்தம் காரணத்துள் ஒடுக்குகின்ற பேரூழிக் காலம் எக்காலம் வருவது? அக்காலம் வந்த பிறகும் அருட் கூத்தாடுகின்ற திருவடியையுடைய அத்தனே! உன்னடியே னாகிய யான் செய்த வலிய வினைகளை நீக்குங்காலமும் அதுவே யாக, அவ்வினைகள் மீளவும் என்னைப் பற்றாதவண்ணம் காத்து எம்மைக் காப்பவனே என்றவாறு.

பேரூழி வருவது எக்காலமோ? அக்காலத்தும் அழியாப் பெரும்பொருளாக இருந்து அருட்கூத்தாடுபவனே! என் வினை கள் யாவும் அழிதருங்காலமும் அதுவேயாய் அவை புனருற் பவத்து மீளவும் சூக்கும கன்மமாக வந்து என்னைப் பற்றாத வண்ணம் எம்மைக் காப்பவனே என்றது. அங்ஙனம் காக்க வேண்டும் என வேண்டிக்கொண்டவாறும்.

மெய்யுணர்ந்து இறையன்பில் ஊன்றி நிற்பார்களுக்கு ஆகாமியவினை ஏருது ஆகலான் சஞ்சிதவினை ஒரு பிறவியில் தொலேயாததாக இருப்பினும் சர்வசங்கார காலத்திலாவது நீ அவற்றையொழித்துக் காப்பாயாக என்பதாம்.

பாடல் கிடக்குமுறையில் இங்ஙனம் கொள்ளாது வேறு கூறுவாரும் உளர். அவ்வுரை சாத்திர மரபிற்கும் ஒத்ததன்று என்பதை விரிவஞ்சி எழுதுகின்றிலம்.

உழிதரு கால் - எங்கும் இயங்கிக்கொண்டே இருக்கின்ற காற்று. காற்றுக்கு இயக்கம் கூறினமையால் கனலுக்கு வெப்பமும், புனலுக்குத் தட்பமும், மண்ணுக்குத் தாங்குந்தன்மையும், விண்ணுக்கு விரிந்து இடம் கொடுக்குந்தன்மையும் கொள்க. தோற்றமுறைபற்றி விண், கால், கனல், புனல், மண் என்ருவது ஒடுக்கமுறைபற்றி மண், புனல், கனல், கால், விண் என்ருவது கூருமல் 'காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும்' எனக் கூறியது புயலானும், நெருப்பானும், நீரானும் ஊழி விளேதலே நோக்கி என்க. இக்கருத்துப்பற்றியே காலும் கனலும் புனலொடு என ஒடுக்கொடுத்துப் பிரித்தமை உணர்க. சர்வசங்காரகாலத்து, பல பிறவியில் ஈட்டிய வினைகள் யாவும் காரணமாயையில் சூக்குமமாய் ஒடுங்கிநிற்றலின் சர்வசங்கார காலம் வருவது எப்போது என்கின்ருர்.

வல்வினை - உண்டன்றி ஒழிக்கப்படாத வன்மையையுடைய வினை. அவை சர்வசங்காரகாலத்து என்னைச் சாராது கழிக்கும் காலதத்துவமாக உதவவேண்டும் என்பார் 'வல்வினையைக் கழிதரு காலமுமாய்' என்ருர்.

அவை காத்து - அவ்வினைகள் என்னை அணுகாதவாறு பாதுகாத்து. இறைவன் வல்வினையைச் சுட்டு எரிப்பதற்குக் கருத்தாவுமாய் காலதத்துவமாகிய துணையாகவும் ஆகின்ருன் என்பார் இங்ஙனம் கூறினர்.

இதன்கண் இறைவனே அநாதி நித்தியன் என்பதும், ஆன்மாக்கள் அவனைச்சார்ந்தே வினைகளைப் போக்கிக்கொள்ளத்தக்கன என்பதும் உணர்த்தப்படுதலின் இது மெய்யுணர்வு ஆயிற்று.

13 பவனெம் பிரான்பனி மாமதிக்
கண்ணிவிண் ணேர்பெருமான்
சிவனெம் பிரானென்னை யாண்டுகொண்
டானென் சிறுமைகண்டும்

அவனெம் பிரானென்ன நானடி
யேனென்ன விப்பரிசே
புவனெம் பிரான்றெரி யும்பரி
சாவ தியம்புகவே. 9

இ - ள் : உலக காரணனுகிய எம் தலைவன், குளிர்ந்த பெருமையோடுகூடிய மதியை அணிந்த விண்ணவர் தலைவன், சிவன், எம்பிரான், எனது சிறுமையைக்கண்டும் என்னை ஆளாகக்கொண்டான்; ஆதலால் அவன் எம் தலைவனுகவும், நான் அடியேனுகவும் இருக்கும் இத்தன்மையே எம்பிரானை உலகம் அறியும் தன்மையாவது; ஆதலால் உலகம் இதனையே பாராட்டிப் புகழ்க என்றவாறு.

பவன், சிவன், எம்பிரான் என் சிறுமை கண்டும் என்னை ஆண்டுகொண்டான்; ஆதலால் உலகம் அவன் ஆண்டான் யான் அடியேன் என்ற இத்தன்மையிலேயேயறிந்து புகழுமாக என்பது கருத்து.

பவன், சிவன் என்பன இறைவன் பெயர்கள். இறைவற்கு ஆகமங்கள் கூறும் சிறப்பு மந்திரங்களுள் பவாய தேவாய, சிவாய தேவாய, உக்கிராய தேவாய என்பனவும் உண்மை அறிக.

பவன் - உலகத் தோற்றத்திற்கு நிலைக்களமாயுள்ளவன். உலகிற்கு நிமித்தகாரணமாதல் பரசிவத்திற்குரிய சிறப்பிலக்கணங்களுள் ஒன்றுகும். அத்தகைய பெரியோன் எங்களுக்குத் தலைவனும் ஆயினுன் என்பார் 'பவன் எம்பிரான்' என்றுர்.

தேவர்கள் அமுதம் உண்ட களிப்பானும், தாம் தலைவன் எனத் தருக்கித்திரிதலானும் பிழைபடுவாராக; அப்பிழையைப் பொறுத்தும், பிழையெலாம் தவிரப் பணித்தும் பிறைமதியின் குற்றம் போக்கித் திருமுடிக்கு அணியாக்கியதுபோல ஆட்கொள்வான் என்பார் 'பனிமா மதிக்கண்ணி விண்ணோர் பெருமான்' என்றுர்.

கண்ணி - தலைக்கணியும் மாலை. பனிமாமதிக் கண்ணியை நினைப்பூட்டியது என் சிறுமை கண்டும் ஆண்டுகொண்டான் என்னும் கருணையை விளக்க.

இறைவனுக்குள்ள நாமங்களுள் மந்திரமாயும், சிறப்புப் பெயராயுமுள்ளது சிவன் என்பது. பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்கு இன்பவடிவினனுய் விளங்கும் தலைவன் என்பார் 'சிவன்

எம்பிரான்' என்றார். எம்பிரான் என்று பலமுறையும் கூறுவது தன்னை ஆட்கொண்டருளிய சிறப்பைத் தெரிவித்தற்கு என்க.

எனது சிறுமை கண்டும் விலக்காமல் ஆண்டுகொண்ட அளவிலாக் கருணையைக் குறிக்கின்றவர் என் சிறுமை கண்டும் ஆண்டு கொண்டான் என்றார். கண்டும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. அவன் என்பது நெஞ்சறிசுட்டாகச் சிறுமை கண்டும் ஆண்டுகொண்ட பெருமையைக் குறித்துநின்றது.

புவனம் என்பது புவனெம் என விகாரப்பட்டது. புவன் எம்பிரான் எனப்பிரித்து அம் விகுதி கெட்ட புவனம் எனக் கொண்டு உலகம் என்னும் பொருள்படும் என்பாரும் உளர். இங்ஙனம் அம் ஈறு கெடுதலைப் 'பெற்றானன்று உயர்த்த பெருமான்' என்னும் சம்பந்தசுவாமிகள் வாக்கிலும் காண்க.

இவ்வண்ணம் தம்சிறுமைகண்டும்பெருமான் ஆட்கொண்டதே தம்மை உலகம் அறிந்துகொள்ளும் வகையாம் என்பது கருத்து. இச்செயலை அறிவதுமட்டும் போதாமல் மனமார வாயாரப் பாராட்டிக் கூறவும்படும் தன்மையது என்பதை 'இயம்புக' என்றதால் உணர்க. உலகம் என்னும் எழுவாய் வருவித்து முடிக்க.

'அவன் எம்பிரான் என்ன, நான் அடியேன் என்ன' என்றதால் இறைவன் உயிர்களை ஆட்கொள்ளும் முறையும் ஆண்டான் அடிமைதிறத்திற்குள்ள சிறப்பும் உணர்த்துவதால் மெய்யுணர்தலாயிற்று.

**14** *புகவே தகேனுனக் கன்பருள்*
*யானென்பொல் லாமணியே*
*தகவே யெனையுனக் காட்கொண்ட*
*தன்மையெப் புன்மையரை*
*மிகவே யுயர்த்திவிண் ணோரைப்*
*பணித்தியண் ணாவமுதே*
*நகவே தகுமெம் பிரானென்னை*
*நீசெய்த நாடகமே.* **10**

திருச்சிற்றம்பலம்.

*இ-ள்:* என் முழுமாணிக்கமே! யான் உன் அடியார் கூட்டத்தில் புகவே தகுதி இல்லாதவன்; அங்ஙனமிருந்தும் என்னை ஆட்கொண்ட தன்மை நின்பெருமைக்குத் தக்கதா? எத்தகைய இழிந்தோரையும் மிக உயரச்செய்கிறாய்; உயர்ந்த

தேவர்களைத் தாழ்த்துகின்றாய்; தந்தையே! அமுதமே! எம்பிரானே! நீ செய்த நாடகம் என்னை? மிகச் சிரிக்கத் தக்கது என்றவாறு.

எனக்குத் தெரியும்; யான் நின் அடியார்கூட்டத்தில் புகவும் தகுதியில்லாதவன் என்று. அங்ஙனமிருந்தும் நீ என்னை ஆட்கொண்டாய்; உயர்ந்தவரைத் தாழ்த்துகிறாய்; தாழ்ந்தோரை உயர்த்துகிறாய்; உனது நாடகந்தான் என்னை ? நகைப்பிற்கு இடமானது என்பது கருத்து.

பொள்ளல் - துளையிடல். பொள்ளா மணி - துளையிடப் படாத மணி. பொள்ளாமணி என்பது பொல்லாமணி என மரீஇற்று. முத்து பவழம் பச்சை முதலிய நவரத்தினங்களை மாலையாகக் கோப்பவர்கள் அதனை நடுவில் தொளையிட்டுக் கோப்பர் ; வயிரத்தைமட்டும் தொளைக்க முடியாமையினால் தங்கத்தில் செறித்து அதனுடன் சேர்ப்பர். ஆகவே, தொளை யிடுவதால் மணியின் பெருமை சிறிது குறையும். அங்ஙனம் செய்யப்படாமல், ஒரு மணியே ஒரு அணியாக விளங்கும் சிறப்பினது என்பார் 'பொல்லா மணியே' என்றார். அதிலும் தனக்கு மிக அரிதாகக் கிடைத்தற்குரியதொன்று எளிதாகக் கிடைத்த மகிழ்ச்சியால் ' என் பொல்லாமணியே ' என்றார்.

சிவனடியார் பெருமையையும் தன் சிறுமையையும் எண்ணிக் கண்டு, கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலினராகிய உன் அடியார் பெருமை எவ்வளவு உயர்ந்தது; அவர்கள் கூட்டத்தில் புகும் தகுதிகூட அடியேனுக்கு இல்லை என்பது விளங்க ' உனக்கு அன்பருள் யான் புகவே தகேன் ' என்றார். உனக்கு அன்பர் என்பது உன்மேல் அன்புகொண்ட வர்கள் என நான்கனுருபு ஏழாம் வேற்றுமைப்பொருட்கண் வந்தது.

தகுதியுடையாரைத் தக்ககாலத்துத் தக்கநிலையில் இருத்து வதே தலைமைக்குச் சிறப்பாகும். அடியார் கூட்டத்துள் புகவும் தகுதியற்ற என்னைத் தம் அடியானாக ஏற்றுக்கொண்டருளியது நினது பெருமைக்குத் தகுமா என்பதனை 'எனை உனக்கு ஆட்கொண்ட தன்மை தகவே' எனக் குறிப்பித்தார். தகவே என்பதில் ஏகாரம் வினா.

அங்ஙனம் ஆட்கொண்டதற்குக் காரணம் இறைவனுக்கு உள்ள தாழ்ந்தாரை உயர்த்துதலும், உயர்ந்தாரைத் தாழ்த்து தலுமாகிய பரமகருணையே என்பார் 'எப்புன்மையரை மிகவே உயர்த்தி, விண்ணோரைப் பணித்தி' என்றார்.

பழிக்கஞ்சியதும், மாபாதகம் தீர்த்ததும் முதலான இறை வன் திருவிளையாடல்களால், எத்தகைய இழிந்தாரையும் மிக உயர்த்தியமை புலனாகும். இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகு தேவரெல்லாம் வந்து எதிர் வணங்கவும் அவர்களுக்கு அறிதற் கரியனாகவும் இருத்தலின் இறைவன் மிக உயர்ந்தோரையும் தாழ்த்துதல் புலனாகும். ஆகவே இது தலைமைக்குத் தகாது என்பார் 'நகவே தகும்' என்றார்.

இவ்வண்ணம் நீசெய்தது ஒருநாடகம்போல்வது. நாடகம் உண்மையைப் பொய்ம்மையின் வாயிலாக வெளிப்படுத்துவது. ஒருவனே இராவணாதி பாவகம் உற்றுடுதல் நாடகம். எம்மை உயர்த்துதலும், இந்திரன் முதலியோரைத் தாழ்த்துதலும் நீ செய்யும் நாடகம் ஆம் என்றார்.

விண்ணோரை எண்ணியவுடன் 'அமுதே' எனத் தொடர் பான எண்ணம் விளைவதாயிற்று. ஆனால் இறைவன் நெருங்கு தற்கும் முடியாதவராக இருப்பது தோன்றவே தேவர்களுக்கு விரும்பினாலும் அணுகவும் முடியாத அமுதமாகவும், எம்போல் வார்க்குச் சென்று அணுகுந்தகுதி இன்மையால் தாமே வலிய வந்து அண்ணிக்கும் அமுதமாகவும் இருக்கின்ற நிலையும் தோன்ற 'அண்ணா அமுதே' என்றார்.

தன்முனைப்புச் சிறிதுமின்றி எல்லாவற்றையும் இறைவன் செயலாகக்கண்டு உவப்பு உவர்ப்பு நீங்கிய மெய்யன்பர்களைத் திருவடி நீழலில் இருத்துதலாகிய பேரருளைச் செய்வதையே ஈண்டு 'எப்புன்மையரை மிகவேயுயர்த்தி' என்றார். இறைவ னுடைய அளவிலாற்றலைநோக்க நாம் எட்டுணையும் ஒவ்வோம் என்று எண்ணித் தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயஞ்சாரும் மெய்யன்பர்களே புன்மையராவர்.

விண்ணோர் அதிகாரமலம் மிக்கு, பதவிகளைப் பெரிதாக எண்ணி, அதிலுள்ள மோகத்தால் தாமேமுதல் எனத் திரிபவர் கள். அவர்களை ஆட்கொள்ளத் தாழ்த்துதலாகிய மறக்கருணை காட்டவேண்டியிருத்தலால் 'விண்ணோரைப்பணித்தி' என்றார். பணித்தி என்பது முன்னிலை ஒருமை நிகழ்கால வினைமுற்று. இப்பொருளில் நகவே தகும் என்பதற்கு மகிழத்தகும் எனப் பொருள்கொள்க.

உயிர்கள் எய்தும் உயர்வுக்கும் தாழ்வுக்கும் இறையருளே காரணம் என்னும் மெய் உணரப்படுதலின் இது மெய்யுணர் வாயிற்று.

## உ. அறிவுறுத்தல்

மெய்யுணர்ந்த அடிகள், தமது மனத்தை முன்னிலைப்படுத்தி, மனமே! திருவருளைப் பெறவேண்டிய நீ அதற்குரிய சாதனங்களை விட்டு, உலகியலின்பத்தை விரும்பி அதற்குரிய சாதனங்களில் சார்ந்து ஒழுகுகின்றாயே; இது தகாது என்று நயத்தானும் பயத்தானும் அறிவுறுத்துதலின் இப்பெயர் பெற்றது. முதல் எட்டுத் திருப்பாடல்களால் இறைவன் திருமுன் விண்ணப்பிப்பார்போல நெஞ்சிற்கு அறிவுறுத்தினும் கடைசி இருபாடல்களால் நேரே நெஞ்சை விளித்து இடித்துரைத்து அறிவித்தல் காண்க. சுருங்கக் கூறின் இப்பகுதி மனத்தைப் பரிபாகம்செய்யும் சிவசத்தியனுபவமாதல் காண்க.

### தரவுகொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

15

நாடகத்தா லுன்னடியார்
போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே
யிடையறா அன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத்
தந்தருளெம் முடையானே. 11

இ-ள்: பொன்னிலத்து எழுந்த சிறப்பினை உடைய மாணிக்க மலையே! எம்மை உடைமையாக உடையவனே! உன் மெய்யன்பர்களைப்போலவே நடித்து, அவர்களிடையில் முத்தியுலகில் புகுவதற்கு, மிகப் பெரிதும் விரைகின்றேன்; யான் உன் உடைமை; ஆதலால், என்றும் நீங்காத அன்பு என்னுள்ளிருந்து உள்ளம் உருகும்வண்ணம், அவ்வன்பை அடியேற்கு அருள்வாயாக என்றவாறு.

பொய்யன்பனாகிய யான் மெய்யன்பர்களைப்போல நடித்து அவர்கள் அடையும் பயனாகிய வீட்டின்பத்தைப்பெற மிக விரைகின்றேன்; யான் உன் உடைமையாதலால் உண்மை அன்பை உதவுக என்பது கருத்து.

தலைவன் தலைவிபாற்கொண்டுள்ள அளவற்ற காதன்மை தோன்றக் கற்பகத்தின் பூங்கொம்போ என்பன முதலியனவாக, இருப்பதை உவமித்து மகிழ்தலும் இல்லாதனவற்றை

ஒப்புக்கூறி உயர்த்தி மகிழ்தலும் செய்வன்; அதுபோல அடிக ளார் இறைவனை, ஒரு பொற்பூமியில் முளைத்திருக்கின்ற ஒரு மாணிக்க மலையாகக்கண்டு மகிழ்கின்றார் 'ஆடகச்சீர் மணிக் குன்றே' என்று. பொன்னும் ஒளியுள்ளது. மணியும் ஒளி யுள்ளது. இரண்டும் ஒன்றோடொன்று இணையின் பேரழகு பயப்பதாம். ஆகவே இங்ஙனம் கூறி மகிழ்கின்றார். இறைவன் அணுவிற்கு அணுவாக இருப்பின் உலகவர்கள் உணர்ந்துய்ய மாட்டார்களாதலின் மலையாயிருக்கின்றான் என்றார். வேறொரு வரும் 'அண்ணாமலையானைக் காணாத கண்ணனைச் சொல்லுவர் செத்தாமரைக்கண்ணன் என்றே' என்றமை காண்க. அதிலும் தன்னொளி மிக்குத்தோன்ற, மஞ்சள் நிறமானதொரு பூமியிலே செவ்வொளிப்பிழம்பான மலையாகக் காட்சியளித்தும், உலகவர் இம்மை வாழ்வுக்கு இன்றியமையாத பொன்னும் மணியுமாகக் காட்சி வழங்கியும் அறியமாட்டாமையை விளக்க இங்ஙனம் கூறினார்கள்.

இதயம், சிதாகாசமாகிய பொற்சபை; அதில் நடிக்கும் நடராசர், பொற்பூமியில் விளங்கும் மாணிக்கமலை என்று உய நிடதம் உரைக்கும் சாதனையும் ஈண்டு எண்ணுக.

உயிர்கள், என்றும் சுதந்தரம் அற்றவை; மாடும், வீடும், குடமும் போன்றவை. இறைவனே நித்ய சுதந்தரன்; உயிர்களை உடைமையாக உடையவன். ஆயினும் சிறப்பான உடைமை அடியேன் என்பார் 'எம் உடையானே' என்றார். இதனால் தன்முனைப்பின்மையும், இறைவனது தலைமையை உணர்ந்தே ஒழுகுவதாய அடிமைத்திறமும் அறிவிக்கப்பெறுகின்றன.

உண்மையிலன்றி நாடகத்தில் சிவனடியார் வேடந்தாங்கி நடிப்பவன் நாடகம் முடிந்ததும் தன் பண்டைய நிலையை எய்துவது போல, அடியேனும் உண்மையான அன்பின்மை யால் வேடமாத்திரத்தால் நடிக்கின்றேன்; ஆனால் மெய்யடியார் களின் நடுவே அவர்களோடு பேரின்பம்பெற விரைகின்றேன் என்பதனை 'நாடகத்தால் உன்னடியார்...விரைகின்றேன்' என் கின்றார். என்செயல் நல்லாவின் நடுவே குருட்டாவும் ஊர் புகுதல்போல்வது என்பதாம்.

இறையருள் தானே வந்து தலைப்படுவதாக இருக்கவும் அஃதறியாது அதனை அடைய மிகப்பெரிதும் விரைகின்றேன் என்றது, பாவனை முற்றிப் பாவகமாகிப் பரிபாகம் எய்தக் காலந்தாழ்ப்பின் தன் பொய்வேடம் வெளியாய்விடுமோ என்ற

அச்சத்தால் என்பாரும் உளர். வேலை செய்வதற்கு முன்னே கூலி எங்கே எனக்கேட்கும் அடிமைபோலாது, 'ஆண்டானுக் குத்தெரியும் அடிமையின் வேலை அருமை' என்று முனைப்பற்று அடங்கியிருக்கவேண்டிய நான் விரைதலும் பெரும்பிழையாம் என உணர்ந்து உரைத்தவாறு தெளிக

16

*யானேதும் பிறப்பஞ்சேன்*
*இறப்பதனுக் கென்கடவேன்*
*வானேயும் பெறில்வேண்டேன்*
*மண்ணாள்வான் மதித்துமிரேன்*
*தேனேயு மலர்க்கொன்றைச்*
*சிவனேயெம் பெருமானெம்*
*மானேயுன் னருள்பெறுநாள்*
*என்றென்றே வருந்துவனே.* 12

இ - ள்: யான் பிறவிக்கு ஒருசிறிதும் அஞ்சேன்; இறத் தற்கு யான் என்ன செய்ய வல்லேன்; வானுலகப் பேற்றை எளிதில் பெறினும் விரும்பேன்; நிலவுலகை ஆள்வதை ஒரு பொருளாக நினைத்தும் இரேன்; தேன்பொருந்தியகொன்றை மலர் மாலையை அணிந்த சிவபெருமானே! எம்மானே! எம் பெருமானே! உன்னுடைய திருவருளைப்பெறுதற்கு உரிய நாள் எப்போது வாய்க்குமோ என்று வருந்துவேன் என்றவாறு.

பிறவிக்கு அஞ்சேன்; இறப்பு தானே வரக்கடவதொன்று; அதனினின்று தப்ப யான் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை; இந்திரபதவி வலியக் கிடைத்தாலும் விரும்பேன்; அங்ஙனமாக மண்ணுலகையாள எண்ணியாவது இருப்பேனா? இல்லை. உன் அருளைப் பெறுநாள் என்றைக்கோ என்றுமட்டும் வருந்துகின் றேன் என்பது கருத்து.

பிறத்தல், வினைச்சேடம் இருந்தவழி அவற்றை நுகர்ந்து கழிப்பதற்காக இறைவனால் உதவப்பெறுவது. இறந்தோர் வினைச்சேடம் இல்லாதவராக, திருவருட்பதிவும் மலபரிபாகமும் உடையவராக இருப்பின் பிறவாமையாகிய பேரின்பநிலையை எய்திப் பிரவாகம்போல் தொடர்ந்துவரும் பிறப்பைத் தடுத்தும் விடலாம். அங்ஙனம் பிறவியறுது தொடர்ந்துவருமாயின் மிச்ச மிருக்கும் வினை எத்தகையது? வரும்பிறவி எது? என்பது சிற் றுணர்வுடைய உயிர்களால் அறியப்படாததொன்று. ஆகலின் ஒவ்வொருயிரும் பிறவிக்கு அஞ்சத்தான்வேண்டும். அன்றியும் பிறவிக்காகக் கருவுற்றநாள் முதல் மாதாவின் உதரத்தினின்று

வெளிப்படுகின்ற வரையிலும், அதற்குப் பின்னும் வரும் துன்ப வரிசைகளை அடிகளே சொல்லிக் காட்டியிருத்தலின் அத்தகைய பிறவிக்கு அஞ்சவேண்டுவது இன்றியமையாததுதான். ஆயினும் திருடியவனுக்குச் சிறைவாசமும் கொலைஞனுக்குத் தண்டனையும் கிடைப்பது தானேயமைந்து கிடந்ததுபோல, வினைச் சேடமுடைய உயிர்க்குப் பிறவி தானே அமைந்து கிடக்கின்றமையின் 'யானேதும் பிறப்பஞ்சேன்' என்றருளினார்கள். பிறப்பேதும் என்பது புல்முதல் தேவரீறான பிறவிகள் எதுவாயினும் எனக்கொள்க.

பழக்கவசத்தால் நாய்ப்பிறவி எடுத்த உயிர் மூலைக்குமூலை அடிபடினும் அப்பிறவியை வெறுப்பதில்லை. அத்துணை அறியாமை உயிர்களுக்கு இயற்கையாக அமைந்துள்ளது. ஆதலால் எந்தப் பிறவியை எடுத்தாலும் அதனோடு ஒட்டிவாழும் இயல்பு உடைய நான் அஞ்சேன் என்றமை காண்க. இப்பொருள் உலகியல் நிலையில் நம்போன்றாரைத் திருவுளத்தடைத்து அடிகள் பேசினார்கள் என்றபோது பொருந்தும்; அடிகளாரது ஞான நிலையில் நோய் நீக்கத்திற்குக் கசப்புமருந்துண்ணுதல் போல என் வினைக்கழிவிற்காக அளிக்கப்பெறுவது பிறவியாகலின் அதனை விரும்பி ஏற்பேனே அன்றி அஞ்சேன் என்றார் என்பதே மிகப் பொருந்துவதாம்.

பிறந்தவர் இறப்பது இயற்கையாதலின் இறப்பு வாராமல் தடுக்க யான் செய்யலாவதொன்றில்லை. ஆதலால் 'இறப்பதனுக்கு என்கடவேன்' என்றார். அன்றியும் இறப்பு என்பது வினையின் கழிவுக்கு ஓர் எல்லையாதலின் அச்சமில்லை என்பதை உட்கொண்டு கூறியதுமாம். இதற்கு 'இறப்பதற்கே அஞ்சுகின்றேன்' எனக் கருத்து உரைப்பாரும் உளர். அது 'பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன்' (518) என்ற அடிகள் கருத்துக்கு முரணுதல் அறிக.

சிறந்த பசு புண்ணியங்கள் பலவற்றைச்செய்து எய்தப் பெறுவது வான். அது எளிமையிற் பெறக்கூடியதாக, தானே கிடைப்பதாயினும் விரும்பேன் என்றது அதனது நிலையாமையையும், துன்பத்திற்கு உறையுள் என்ற இழிவையும் கருதிக் கூறியதாம். வானேயுமென்பது வானுமினுமெனப் பொருள் தருதலின் ஏயும் என்பது ஆயினும் என்னும் பொருளில் வந்தது. "கணமேயும் காத்த லரிது" என்புழிப்போல. இனி வானே பெறினும் வேண்டேன் என உம்மை பிரித்துக் கூட்டலுமாம்.

அரசாட்சி என்பது தனது கையில் குடையைத் தாங்கிக் கொண்டு, தான் அதன் நிழலில் போவதுபோலத் துன்பமும் இன்பமுங்கலந்த ஒருபதவி, மழைவளம் தப்பின்வான்பேரச்சம், குடிபுரந்தருதலில் உண்டாகும்குறைகள் இவற்றால் எக்காலமும் அச்சம் தருவது என்பதனை அமைச்சன் நிலையிலிருந்து அறிந்துளேனாதலின் 'மண் ஆள்வான் மதித்தும் இரேன்' என்றார். இரேன், வேண்டேன் எனும் எதிர்மறைகள் பிறந்து மண் ஆள்வதற்கும், இறந்து விண் ஆள்வதற்கும் வேட்கை இருந்தமையைக் குறிப்பால் புலப்படுத்தலின் அதனை விளக்குதற்கு இங்ஙனம் கூறினார் என்பாரும் உளர். அடிகளார் மண் ஆள மதித்திரார் என்பதை அவருடைய மந்திரி அனுபவமே காட்டும். விண் ஆள மதித்திரார் என்பதை அவருடைய ஞானநுபவமே காட்டும்.

கொன்றை இறைவனுக்கு அடையாளப்பூ. இதன் கேசரங்கள் பிரணவ வடிவாக இருத்தலானும், பூ பொன்னிறமாய் இறைவன் மேனியை ஒத்திருத்தலானும் இறைவனுக்கு அது உகந்ததாயிற்று. சிவன் எல்லா உயிர்களிடத்தும் தங்கியிருக்கும் இன்பவடிவினன், எமது தலைவன், எமது தந்தை எனப் பொதுவாயும், குற்றம் களைந்து வளர்க்கும் அரசனாயும், தந்தையாயும் இருத்தலை 'சிவனே! எம்பெருமான்! எம்மானே! எனச் சிறப்பாயும் விளிக்கின்றார்.

உலகப்பற்றற்ற சிவஞானியர் பற்றுவது திருவருளொன்றையேயாதலின் அது கிடைக்கும் நாள் விரைவில் வேண்டும் என்பார் 'உன் அருள்பெறும்நாள் என்று என்று வருந்துவனே' என்றார். என்று என்று என்ற அடுக்கு விருப்ப மிகுதியையும் விரைவையும் உணர்த்துவது. குருந்தடியில் கண்டு பிரிந்த நாள்முதல் அருள்பெறும் விழைவு மிக, பரிபாகமின்மையால் காலம் தாழ்ப்பதை நினைத்துக் கவல்கின்றேன் என்பார் 'வருந்துவனே' என்றார்.

தனது வேண்டாமையையும் வேண்டுதலையும் இறைவனுக்கு விண்ணப்பித்தல்வாயிலாக, தன் நெஞ்சிற்கு அறிவுறுத்தலின் இது அறிவுறுத்தலுக்கு இயைபுடையதாயிற்று.

17 வருந்துவனின் மலர்ப்பாதம்
அவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன்
ஏத்தேன்நாத் தழும்பேறப்

*பொருந்தியபொற் சிலைகுனித்தாய்*
*அருளமுதம் புரியாயேல்*
*வருந்துவனத் தமியேன்மற்*
*றென்னேநான் ஆமாறே.* 13

இ - ள்: பொருத்தமான மேருமலையை வில்லாக வளைத்தவனே! நாயையொத்த இழிதகைமையுடைய அடியேன் நினது தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தரிசிப்பதற்கு வருந்தி முயற்சிக்கின்றேன்; ஆனால் அதற்குரிய உபாயமாக, ஓரிடத்து மனம் ஒன்றியிருந்து நல்ல மலர்களைத் திருவடியிற் புனையேன்; நாவில் தழும்புறத் தோத்தரிக்கமாட்டேன்; ஆயினும் நீ அருளாகிய அமுதத்தை விரும்பிச்செய்யாவிடின் தனித்த யான் வருந்துவேன்; நான் உய்யும் உபாயந்தான் வேறு என்னே? என்றவாறு.

திருவடிகளைத் தரிசிக்க முயற்சிக்கின்றேன்; ஆனால் மலர் கொண்டு பூசை செய்யேன்; நாத்தழும்பேறத் தோத்தரியேன்; ஆனாலும் நீ திருவருள் செய்யத்தான்வேண்டும்; அங்ஙனம் செய்யாவிடின் ஒன்றியாகிய யான் வருந்துவேன்; நான் உய்யும் நெறிதான் வேறு என்ன? சொல் என்பது கருத்து.

பின்னர், உடல்தொண்டில் ஈடுபடாத தன்னைச் சிவஞானி யாக்குதற்கு இருக்கின்றவர் இறைவனைப் 'பொருந்திய பொற் சிலை குனித்தாய்' என்று விளிக்கின்றார். மேருவை வில்லாக வளைத்த உனக்கு, எனக்கு அருளமுதம் வழங்குதல் முடியாத காரியம் அன்று என்பது குறிப்பு. பொற்சிலை பூமியின் மைய ஆணியாக விளங்கினும் விசுவரூபனாகிய உன் திருமேனிக்குப் பொருத்தமான வில்லாக அமைந்திருக்கிறது என்பார் 'பொருந் திய பொற்சிலை' என்றார். சிலை - கல், வில் என இருபொருளும் ஒருசேர உணர்த்தல் காண்க.

நாய்போல வினைவயத்தான் இழிந்த பிறப்பினன் ஆயினும் நீ செய்த உபகாரத்தை மறவேன், அதனாலேயே உன் திருவடியைத் தரிசிக்க விரும்புகின்றேன் என்பார் 'நாயடியேன் நின் பாதம் காண்பான் வருந்துவன்' என்றார். இறைவன் திருவடி அறிவுமயமான அறிவு உருவமாதலின், அதனை இடைவிடாது தரிசித்தற்குத் திருவருளே துணையாவது அல்லது, கருவி கரணங்களும் பாசஞானங்களாகிய நூலறிவும் பயன்படாமை கண்டு, தன்முயற்சி வீண் என்பதை உணர்ந்து வருந்துதலை

வருந்துவன் என்ற சொல்லால் குறிப்பித்தார். அதனோடு அருள் துணையும் வேண்டும் என்பார் மீண்டும் 'அருளமுதம் புரியாயேல் வருந்துவன்' என்று விண்ணப்பிக்கின்றார்.

தேவரீர் திருவருள் அமுதத்தை உதவுவதற்குப் பூமாலை புனைந்தேத்துதலும் நாவார வாழ்த்துதலும் இன்றியமையாதன என்பதை உணர்ந்திருந்தும் அவற்றைச் செய்திலேன் என வருந்துவார் 'இருந்து நலமலர் புனையேன் நாத்தழும்பு ஏற ஏத்தேன்' என்று கூறுகின்றார். நலமலர் - நல்ல பூக்கள்; மணம் தருவனவும், அழகியனவும், பூச்சிக்கடி வண்டெச்சில் முதலியன இல்லாதனவும், ஞாயிறு எழுவதற்கு முன்பே பறிக்கப்பட்டனவும் ஆகிய நல்ல பூக்கள்.

நாத்தழும்பு ஏற ஏத்துதலாவது இறைவனுடைய துதிப் பாடல்களைச் சொல்லிச்சொல்லி நாவில் வடு உண்டாதல்.

அத்தமியேன் - அங்ஙனம் மலர் புனையாமையும், ஏத்தாமையும் உடைய தகுதியற்ற தனியனுகியவன். இடமும் பொருளும் ஏவலும் ஆகிய எத்துணைகள் இருப்பினும் இறைவன் அருளமுதம் புரியாவிட்டால் வினையும் பயன் ஒன்றுமில்லை என்பதை விளக்குவார் 'நான் ஆமாறு என்னே' என்று கவல்கின்றார்.

இதுவும் தம் குறையைக்கூறி இறைவனிடம் அருளமுதம் வேண்டுதலின் நெஞ்சிற்கு அறிவுறுத்தலாய் அமைந்தது.

18

ஆமாறுன் றிருவடிக்கே
　　அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
　　புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோயில்
　　தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
　　சதுராலே சார்வானே. 14

இ - ள் : தேவதேவனே! நின் திருவடிக்கு ஆளாம்வண்ணம் மனம் கனிந்திலேன்; அன்பினால் உருகிலேன்; பூமாலைகளைச் சூட்டித் துதித்திலேன்; உன்னைப் புகழ்ந்துரையேன்; உன் திருக்கோயில்களை அலகிடேன்; மெழுகேன்; ஆனந்த மிகுதியால் கூத்தாடேன்; சீவபோத ஆற்றலால் உன்னை அடைவதற்கு விரைகின்றேன். அது சாகும் நெறியேயாம் என்றவாறு.

விண்ணவர் தலைவா யான் திருவடிக்கண் அன்புகொண்டு மனம் கரையேன்; உருகேன்; பூசியேன்; புகழேன்; கோயில் அலகிடேன்; மெழுகேன்; கூத்தாடேன்; அழியுமாறு இதுவாம் என்பது கருத்து.

குழையேன் உருகேன் கூத்தாடேன் சாமாறே விரைகின்றேன் எனக்கூட்டிப் பொருள் கோடலுமாம். இத்திருப்பாடல் 'நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்கு' என்னும் திருத்தாண்டகக் கருத்தை நினைவூட்டுதல் காண்க. கடமையைச் செய்யாது உரிமையை வேண்டுதல் ஆக்கத்திற்குரிய வழியன்று, சாதலுக்கு உரியநெறி என்பார் 'சாமாறு' என்றார்.

சதுராலே சார்வானே என்பதனை விளியாகக்கொண்டு உயிர்களின் பரிபாகநிலைக்கேற்ப உள்நின்றும் முன்நின்றும் உருவாக எழுந்தருளியும் ஆட்கொள்பவனே எனலும் ஆம். இவ்வுரையில் சாமாறு விரைகின்றேன் என ஒருதொடராக்குக.

சதுராலே சார்வான் விரைகின்றேன் என்றும் சாமாறு விரைகின்றேன் என்றும் தனித்தனியே கூட்டிச் சாமர்த்தியமாக உன்னை அடைய விரைகின்றேன்; அது அழிவுக்குரிய வழிதான் என்று உரைப்பாருமுளர். இதனை இறைவற்குரியதாக்கி, ஆன்மாக்களின் பரிபாக நிலைக்குத்தகச் சாமர்த்தியத்தால் அவரவர்களை அடைந்து ஆட்கொள்பவனே என்பது நேரியபொருளாதல் காண்க.

இது கடமையைச் செய்யாது சாம்நெறி கடைப்பிடித்தேன் என்று இறைவனுக்கு விண்ணப்பித்ததாகத் தமது நெஞ்சிற்கு அறிவுறுத்தியதாம்.

19. வானாகி மண்ணாகி
வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி
உண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே.

இ - ள்: விண்ணும், மண்ணும், காற்றும், தீயும், உடலும், உயிரும், உள்பொருளும், இல்பொருளும் ஆகி,

இவையனைத்திற்கும் தலைவனும் ஆகி, யான் எனது என்னும் இருவகைப் பற்றும் உடையவர்களைக் கூத்தாட்டுபவனும் ஆகி நின்ற உன்னைக்குறித்து என்னசொல்லி வாழ்த்துவேன் என்றவாறு.

எண்வகை மூர்த்திகளும், உடல், உயிர், உண்மை, இன்மை முதலியனவும் ஆகி உள்ள உன்னைத் துதிக்குமுறை எதுவென் றறிகிலேன் என்பது கருத்து.

வான், ஏனைய பூதங்கள் தோன்றுவதற்கு இடம் தந்து விரிந்துநிற்பது; அருவானது. இறைவன் அதுபோல எல்லாம் தோன்றுதற்கு நிமித்தகாரணனாய், அருவாய், சர்வவியாபியாய் இருத்தலின் 'வானாகி' என்றார்.

மண் எல்லாப் பொருளையும் தாங்கி உருவாய் நிற்பது. இறைவனும் அதுபோல எல்லாம் நிலைபெறுதற்கு இடனாயும் உருவாயும் விளங்குதலின் 'மண்ணாகி' என்றார்.

வளி, உடலோடுகூடிய உயிரின் இயக்கத்திற்கு இன்றியமை யாததாய் எல்லாவற்றையும் இயங்கச்செய்வதாய் ஊறுணர்ச் சிக்கு வெளிப்படுவதாய் அருவுருவாய் இருப்பது. இறைவனும் உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு எல்லா ஆன்மாக்களையும் இயக்குபவராய், அருவுருவாய் விளங்குகின்றமையான் 'வளி யாகி' என்றார்.

ஒளி, உயிர்களின் வளர்ச்சிக்கு இன்றியமையாததாக, பொருள் விளக்கம் செய்வதாக, சுட்டு ஒன்றுவிப்பதாக இருப் பது. இறைவனும் உயிர்களின் ஞான வளர்ச்சிக்கு இன்றியமை யாதவராக, சித்து அசித்து சத்து அசத்து எனப் பொருள் களை உயிர்களுக்கு விளக்கம் செய்பவராக உள்ளொளியாய் இருத்தலின் 'ஒளியாகி' என்றார்.

இவற்றால் இறைவனுடைய அருவநிலையும், உருவநிலையும், உருவாருவநிலையும், ஞானநிலையும் அறிவிக்கப்பட்டன. இவற் றிற்கு இங்ஙனம் பொருள்கொள்ளாது வானாகி என்பது வானம் அதனுள் வழங்கும் மேகம் எனவே நீரும், மண்ணும், வளியும், ஒளிப்பொருள்களாகிய சூரியன் சந்திரன் அக்கினி என்பனவும் ஊனாகி உயிராகி எனவே ஊனும் உடலும் ஒன்றுகூடியகாலத்து இயமானனாகவும் விளங்கும் அட்டமூர்த்தியின் சொரூபத்தைத் தெரிவித்தது என்பர்.

ஊன் ஆகுபெயராக உடலை உணர்த்தும். உயிராகி - உயிர் களே தாமாகி, அவ்வுயிர்க்கு உயிராக விளங்கும் பொருளுமாகி விளங்கும்.

இறைவன் அநுபூதிமான்களுக்கு உண்மையாயும் அல்லா தார்க்கு இன்மையாயும் விளங்குகின்றார் என்பார் 'உண்மையு மாய் இன்மையுமாய்' என்றார். இதற்கு உள்பொருளுமாய் இல் பொருளுமாய் என உரைகூறின் அடிகள் ஞானசொரூபமாய் விளங்குவதை உள்பொருள் என்று பொருளாக விவகரித்தல் மரபன்மையானும், அங்ஙனமே இல்லாதன பொருளாகாமை யானும், அவை அவற்றின் தன்மையினாலேயே உணரப்படுத லானும் உண்மையுமாய் இன்மையுமாய் எனத் தன்மைமேல் வைத்துக் கூறினார்.

இவ்வண்ணம் ஐம்பெரும் பூதங்களாயும் இயமானனாயும் இருக்கும் இறைவன் உயிர்களுக்குத் தலைவனாகவும் விளங்கு கின்றான் என்பதனைக் 'கோனாகி' என்று கூறுகின்றார்.

எல்லாம் சிவன்செயல், எல்லாம் சிவனுடையது என்று எண்ணாமல் செருக்கியும் தருக்கியும் திரிகின்றவர்களை யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக் காரணமாக உலகில் உலையவைத்தலின் 'யான் எனது என்றவரவரைக் கூத்தாட்டுவா னாகி' என்றார்; தோற்பாவை கூத்தாடுதலில், ஆட்டிவைக்கின்ற ஆசிரியன் விருப்பமேயன்றி, பாவைக்கு ஒருசெயலும் இன்மை போல அகங்காரம் மமகாரம் உடைய உயிர்களின் ஆட்டமும் பாட்டமும் ஆட்டுவிக்கின்ற இறைவனுடையன என்பார் 'கூத் தாட்டுவானாகி' என்றார். கூத்தாட்டுவான் மேடையில் எப்போ தும் நின்று ஆட்டான்; இறைவன் உயிரினுடைய கனவு நனவு உறக்கம் பேருறக்கம் துரியாதீதம் என்ற எல்லா நிலைகளிலும் நின்று பெயரானாய் ஆட்டுதலின் 'நின்றாயை' என்றார்.

இங்ஙனம் எல்லாமாய் நிற்கும் இறைவனை ஒருசார் ஞான முடைய அடியேன் வாழ்த்துவது எப்படி என வியப்பார் 'என் சொல்லி வாழ்த்துவனே' என்றார்.

அவரவர் என உயர்திணைப் பலர்பால்மேல்வைத்துக் கூறியது சிறப்புப்பற்றி. வானாகி...உயிராகி என்றதால் ஒன்றா தலும், உண்மையுமாய் இன்மையுமாய் என்றதால் உடனாய் நிற்றலும், கோனாகி ... கூத்தாட்டுவானாகி என்றதால் வேறாய் நிற்றலும் ஆகிய இறைநிலை மூன்றும் உணர்த்தப்பட்டன.

என்சொல்லி வாழ்த்துவனே என்றபொழுது ஒவ்வொன்றும் எல்லையின்றி விரிந்துநிற்றலின் அவற்றுள் ஒன்றைப்பற்றி எவ்வளவு கூறினும் அது குன்றக்கூறல் ஆமேயன்றி முற்றவும் கூறியது ஆகாது; அவ்விதம் முற்றக்கூறும் ஆற்றலும் அடியேற்கு இல்லை என்பதை விண்ணப்பித்தவாறு.

நீ எல்லாமாயிருத்தலின் யான் வாழ்த்த முடியாமைக்கு என் அறிவின்மை காரணமன்று; நினது வரம்பிகந்த ஆற்றலே காரணம் என உணர்ந்து இறைவன்முன் விண்ணப்பிப்பார் போல நெஞ்சிற்கு அறிவித்தலின் அறிவுறுத்தலாயிற்று.

20 வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதுந் தாமுயர்ந்து
தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்தமது கரமுரலுந்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானுமுன்னைப் பரவுவனே. 16

இ - ள் : வண்டுகள் சூழ்ந்துகொண்டு ஒலிக்கும் மாலையை அணிந்த உன்னைத் தேவர்கள் வாழ்த்துவதும் தாம் தந்நிலை குன்றுது வாழ்தல்வேண்டியே; மனத்தை நின்னிடத்துப் பணியச்செய்வதும் தாம் எல்லாரினும் உயர்த்துத் தம்மை அனைவரும் தொழுதலை விரும்பியே; நாய்போன்ற அடியேனும் பாழான பிறவியை நீக்கும்பொருட்டு உன்னைத் தோத்தரிக்கின்றேன் என்றவாறு.

தேவர்கள் வண்டுமொய்த்து ஒலிக்கும் மாலையை அணிந்த உன்னை வாழ்த்துவது தம் பதவிக்குக் கேடுவராமல் வாழ்தற்பொருட்டே; பணிவது அனைவரும் தம்மைப்பணிவதற்காகவே; நாயேனும் பிறவியை அறுக்க உன்னை வாழ்த்துகின்றேன் என்பது கருத்து.

சூழ்ந்த என்பது எதுகைநோக்கிச் சூழ்த்த என ஆயிற்று. மதுகரம் - வண்டு. பாழ்த்த பிறப்பு - பயனற்றுப் பாழான பிறவி.

வண்டுகள் மாலையைச் சுற்றிச்சுற்றிவந்து ஒலிப்பது மாலையில் உள்ள தேனைத் திருடுவதற்காகவே; அதுபோலத் தேவர்கள் வாழ்த்துவதும் தாழ்த்துவதும் தங்கள் நிலையை உயர்த்திக்

கொள்ளவே என்ற இயைபுக்கு ஏற்ப 'மதுகரம் சூழ்த்துமுரலும் தாரோயை' என்றார். தேவர்கள் வாழ்த்துவதும் தாழ்த்துவதும் காமியப்பயனைக் கருதியதாக இருக்கவும் அடியேன் பரவுவது பேரின்பப் பேருகிய நிஷ்காமியமாக இருத்தலைத் திருவுளத்து எண்ணுக என்று விண்ணப்பித்தவாறும். சுருங்கக்கூறின், தேவர்கள் எடுத்த பிறவி நிலைக்கவும் உயரவும் வழிபடுகிறார்கள்; அடியேன் இப்பிறவியை அறுக்க வேண்டுகின்றேன்; இதுவே எம்முள் வேற்றுமை என்றதாம்.

வினையின் வந்ததாய் வினைகளையே விளைவிக்கும் பிறவியைப் பாழ்த்த பிறப்பு என்றது காண்க. இறைவனுக்கு விண்ணப்பித்ததன் வாயிலாகத் தேவர்கள் நிலை வேண்டாம்; பிறவியறவும் பேரின்பம்பெறவும் இறைவனைப் பரவு என்று தன் நெஞ்சுக்கு அறிவுறுத்தலின் இது அறிவுறுத்தலாயிற்று.

*21*

*பரவுவா ரிமையோர்கள்*
*பாடுவன நால்வேதம்*
*குரவுவார் குழன்மடவாள்*
*கூறுடையா ளொருபாகம்*
*விரவுவார் மெய்யன்பின்*
*அடியார்கள் மேன்மேலுன்*
*அரவுவார் கழலிணைகள்*
*காண்பரோ அரியானே.* *17*

இ - ள்: காண்டற்கு அரியவனே! தேவர்கள் உன் முன்னின்று வாழ்த்துவார்கள்; நான்கு வேதங்களும் பாராட்டிப் பாடுகின்றன. குராமலரை அணிந்த கூந்தலையுடைய உமாதேவியார் உனது இடப்பாகமாகிய ஒரு பாகத்தைத் தன் கூறாகப்பெற்றவள்; உண்மை அன்பினையுடைய மெய்யடியார்கள் எப்போதும் உன்னோடு கலந்தேயிருக்கின்றார்கள். இவர்கள் அனைவரும் உனது ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடிகளிரண்டையும் காண்பார்களோ என்றவாறு.

இறைவனைத் தரிசித்தல் ஞானிகளுக்கும் ஒரொருசமயம் விளையும் அநுபவம். அவர்களும் எப்போதும் கண்டு வழிபட அரியனாயிருத்தலின் 'அரியானே' என்று விளித்தார். யார்க்கும் எப்போதும் அறியமுடியாமல் இருத்தலாற் பயனில்லை ஆதலின் "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்றது போல, சுத்த தத்துவத்தில் பதிஞானம் மிகுந்திருக்கின்றவர்கட்கு அறியப்படுபவனாயும், ராசத தாமசங்களில் யார்க்கும் அறியப்படாதவனாயும் இருத்தலை உணர்த்தியவாறு.

தேவர்கள் இறைவனை முன்னிலைப்படுத்தி வாழ்த்துவார் ஆதலின் இது வாழ்த்தும். வேதங்கள் படர்க்கைப் பரவலாகப் புகழ்தலின் நால்வேதம் பாடுவன எனப் பரவலாக வைத்தும் கூறினர்.

"பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்" என்ற சூத்திர வுரையில் புகழ்தல் படர்க்கையினும் பரவல் முன்னிலையினும் வரும் என்பர் இளம்பூரணர். ஆதலால் தேவர்கள் அனைவரும் இறைவனை முன்னிலைப்படுத்திப் பரவுவர். வேதங்கள் கீதமாகப் படர்க்கையில் வைத்துப் பாராட்டுவன. ஆதலால் 'பரவுவார் இமையோர்கள்' என்றும், 'பாடுவன நால்வேதம்' என்றும் கூறினர். இமையவர் பரவுதல், உரையாகவும், வேதம், கீதமாக இருத்தலும் இதனால் உணரக்கிடப்பன.

இறைவன் வழிபாட்டிற்கு உரிய பூக்களுள் குரா, மரா, கொன்றை, பாதிரி, சண்பகம் முதலிய எல்லாமுரியனவாதலின் உமையம்மையும் 'குரவுவார் குழல் மடவாள்' எனக் குறிக்கப் பெற்றார். அன்றியும் புல்லிலை எருக்கமாயினும் கடவுளர் சூடேம் என்றார் ஆதலின் பக்தி மணம் வீச எந்த மலரை இட்டாலும் இறைவனும் இறைவியும் ஏற்பர். குரவு பாலைக்குரியதென்றும் பாலைத்தெய்வம் கொற்றவை என்றும் சிவசக்தியாம் என்றும் அதனால் உமையம்மையாருக்குக் குராமலர் கூறப்பட்டுள்ளது என்றும் பாலைக்கு உரிப்பொருள் பிரிதலாதலின் அது மக்கள் நிலைக்கே உரியதாய் இறைவனுக்கும் இறைவிக்கும் ஏற்றிக் கூறலாகாது என்பதை அறிவிக்க, 'கூறுடையாள் ஒருபாகம்' என்றார் என்றும் நயம்காண வேண்டுவதும், அதனால் பயன் உண்டா? என்பதும் ஆராய்தற்கு உரியன.

வாழ்விலும் தாழ்விலும் பிரியாமையும் மறவாமையுமே மெய்க் காதலாதல்போல, துன்பக்காலத்தும் இன்பக்காலத்தும் சிவன் சேவடி மறவாமையே மெய்யன்பு. அம்மெய்யன்பால் அடியேன் சிவத்தொண்டன், ஆற்றுவழி மிதவைபோல அவன்அருள்வழி இயங்குபவன் என்ற உறுதி உள்ளத்து நிலைபெறும். அங்ஙனம் நிலைபெற்றவரே மெய்யன்பின் அடியார் ஆவர். கசிந்த தொண்டினோடும் உள்ளத்து அவன்தான் நின்ற கலப்பாலே சோகமெனப் பாவிக்க வேறு இன்றித் தோன்றுதலே உண்மை யடியார் இலக்கணம் என்பதைச் சிவஞான சித்தியார் தெரி விக்கும். இதனால் அத்தகைய மெய்யடியார்கள் உள்ளம்கலந்து எப்பொழுதும் சோகம்பாவனையிலேயே இருப்பர் எனத்தெளிக. அடியார்கள் மெய்யன்பின் விரவுவார் எனக்கூட்டி அடியார்கள் கலத்தற்குக் காரணம் மெய்யன்பு எனக் கோடலுமாம்.

முன்னின்று பரவிய தேவர்களும், சொல்லுருவாய் இறைவனுடைய எல்லையற்ற குணங்களில் ஒருசிலவற்றைப் பொருள் வடிவில் கேட்போர் உணரக்காட்டும் பாட்டுவடிவான வேதங்களும், ஒரு கூறுபெற்று இடப்பாகம் பெற்ற உமாதேவியும், கலந்தளவில் மகிழ்கின்ற அடியார்களும், இடைவிடாது மேலும் மேலும் பரநாத ஒலியைச் செய்கின்ற திருவடியைக் காணமாட்டார்கள் என்பது தோன்ற கழலிணைகள் காண்பாரோ என்றார். பரவிய தேவர்கள் தம் பதவிகள் நிலைபெறுதலாகிய காமியப் பயனையும், பாடும் வேதங்கள் • எல்லோராலும் போற்றப்படும் காமியப்பயனையும், இடப்பாகம்கொண்ட அம்மை எப்போதும் கலந்திருத்தலாகிய இன்பப்பயனையும், அடியார்கள் இரண்டறக் கலத்தலாகிய பேரின்பப் பயனையும் பெற்றாலும் இரண்டறக் கலவாத என்போல் காண்பானும் காணப்படும் பொருளுமாக இருந்து காட்சியின்பம் எய்தமாட்டார் என்று குறிப்பித்தவாறு.

இறைவன் திருமேனியில் கூறுகொண்ட பெருமை அம்மைக்கும் அரிக்குமே உண்டு என்பதை அர்த்தநாரீஸ்வரர், அரி அர்த்தர் முதலான மூர்த்தி பேதங்கள் காட்டும். மக்களுடலில் மானின் வயிற்றில் முனிவர் கண்ணோக்கால் தோன்றிய வள்ளியம்மையாரை முருகப்பெருமான் மனிதவுடல் மாற்றித் தெய்வவுடல் கொடுத்து மணந்ததைப்போல யாரையும் உயர்த்திக் கலக்கும் தன்மையன் ஆயினும் அவரவர் விரும்பியாங்கு வரம் கொடுத்து அமைந்தான் என்பது உணர்த்தப்படுதல் காண்க.

அரவு வார்கழல் என்பதற்குப் பாம்பையும் நீண்ட வீரக் கழலையும் அணிந்த திருவடிகள் என உரைகொள்ளுதலும் ஆம். மொழியால் பரவும் தேவர்கள்முதல் இரண்டறக் கலக்கும் மெய்யடியார்வரை எடுத்துக்காட்டி, அவர்கள் கழலிணைகளைக் கண்டு களியார் அப்பேறு எமக்கே கிடைத்தது என விண்ணப்பிப்பதுபோல நெஞ்சிற்குக் காட்சிச்சிறப்பை அறிவுறுத்தியவாறு காண்க.

22

அரியானே யாவர்க்கு
மம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை
யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன்
வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேனு னுமாறென்
சாவேனுன் சாவேனே. 18

இ - ள் : முனிவர் தேவர் முதலியோர்க்குக் காண்டற்கு அரியவனே! ஞானகாயத்தில் விளங்குபவனே! சிற்றம்பலத்து எழுந்தருளியுள்ள எமது பெரிய பெருமானே! சிறியேனை ஆளாக ஏற்றுக்கொண்ட வீரக்கழலை அணிந்த திருவடியில் மணம் நிறைந்த மலர்களைத் தூவேன்; வியப்புற்று அலறுகின்றிலேன்; விரும்பி மனம் உருகேன்; ஆதலால் அடியேன் உய்யும்நெறி யாது? பொறுத்திருக்கமாட்டேன்; இறப்பேன்; இறப்பேன் என்றவாறு.

என்னை அடிமை கொண்டும், அடிமையின் கடமைகளான அருச்சனை, அரற்றுதல், மனமுருகுதல் இவற்றைச் செய்யேன்; ஆகவே, நான் கடைத்தேறும் உபாயம் யாது? பொறேன் பொறேன் : சாவேன் சாவேன் என்பது கருத்து.

இறைவன் மெய்ஞ்ஞானத்தால் அறியத்தக்கவன்; அவனைத் தேவர்கள் பொருட்காட்சியாலும் முனிவர்கள் யோகக் காட்சியாலும் காணமுயன்றனர்; அவர்களுக்கு இறைவன் அரியனாயினன் என்பார் 'யாவர்க்கும் அரியானே' என்றார்.

இறைவனுக்கு அரியதும் எளியதுமாகிய இருநிலைகளும் உண்டு. ஞானிகளின் நெஞ்சத்தாமரையாகிய தகராகாசத்தில் ஞானயோகத்தில் முதிர்ந்தாரன்றிப் பிறர்க்குக் காணமுடியாத வகை இருக்கும் அரிய நிலையை 'அம்பரவா' என்ற சொல்லால் குறிப்பித்தார். அங்ஙனம் அரியனாக இருந்தும் எல்லாரும் புறத்தே கண்டு தகராகாச ஞானயோகப் பயிற்சிக்கு வழி தேடிக்கொள்ளும்வண்ணம் சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் இயற்றுகிறான் என்பதனை 'அம்பலத்து எம் பெரியானே' என்றும் கூறி எளிமையைப் புலப்படுத்துகிறார்.

ஒன்றற்கும் பற்றாத மலமாயை கன்மங்களோடுகூடிய என்னையும் ஆட்கொண்டான் என்பார் சிறியேனை என்று தம்மைத் தெரிவித்தார். சிறியேனை ஆட்கொண்டதே திருவடிக்கு ஒரு பெரிய வெற்றி என்பதைக் குறிப்பிக்கத் திருவடியைப் பெய்கழல் என ஆகுபெயராகக் கூறினர்.

திருவடிக்கண் முன்னும் பின்னும் காணாத இன்பநலம் கண்டபோது அதனால் வியத்தலும் வியப்பு மிகுந்தபோது வாய்விட்டு அலறுதலும் முறையே விளையவேண்டியிருக்க யான் அவ்வநுபவம் பெற்றிலேன் என்பார் 'வியந்து அலறேன்' என்றார்.

நல்லனவெல்லாம் தமது போகத்திற்கு ஆக்கிப் பூசைக் கென்று விதித்தவற்றுள் மணம் இல்லாதனவற்றைத்தூவி வழி படுதல் பொக்கம் மிக்கவர் பூசை என எண்ணி மணம்மிக்க மலர் களைக் கொண்டு மெய்ப்பூசை செய்திலேன் என்பார் 'விரை ஆர்ந்த மலர் தூவேன்' என்றார். தூவுதல் - திருமேனிக்கு நோவு உண்டாகாதவாறு மெல்ல இடுதல். "பக்தி மலர்தூவ முக்தி ஆகுமே" என்ற இடத்தும் இந்நயம் ஓர்க.

வியப்பு புதுமையாலும் பெருமையாலும் சிறுமையாலும் ஆக்கத்தாலும் தோன்றுமென்பது மெய்ப்பாட்டியல் கருத்து. ஈண்டு, சிதாகாசப் பெருவெளியில் நடிக்கும் சித்பரநாதன் தன்னை ஆட்கொண்டது புதுமையும் பெருமையும் ஆக்கமும் தருவதாகவும் அதேகாலத்தில் தம் சிறுமையை வெளிப்படுத்து வதாகவும் இருத்தலின் 'வியந்து அலறேன்' என்றார்.

மனம் ஒன்றில் பற்றுக்கொண்டு உறைத்துநிற்குமானல், அதனையே எண்ணி உருகும். இறைவனை அங்ஙனம் நயந்து உருகேன் என்கின்றார். இவ்வண்ணம் கடமையில் தவறிய நான் உயிர் தரித்திருக்கமாட்டேன்; எனக்கு ஆக்கத்திற்கு உரிய வழி எது எனச் சாவேன் சாவேன் என அரற்றுகின்றார். இதற்குக் கடமை தவறிய நான் உயிர் வாழ்வதினும் சாதலே நன்றுஎன்று சாவேன் என்றமைக்கு வரும்பிறவியாவது கடவுள் மாட்டு அன்பு நீங்காததாக அமையும் என்ற எதிர்நோக்கு. அதுவும் இப்படியே அமையுமாயின் அடிமறவா பிறப்புக் கிடைக்கும்வரையில் பிறப்பேன் இறப்பேன் என்பார் 'சாவேன் நான் சாவேனே' என்று இருமுறை கூறினர்.

திருவடிக்கு அன்பும் தொண்டும் செய்யாத பிறவியைக் காட்டிலும் இறத்தலே நல்லது என்று விண்ணப்பிப்பதுபோல நெஞ்சிற்கு அறிவுறுத்தியவாறு அறிக.

**23**

*வேனில்வேள் மலர்க்கணைக்கும்*
*வெண்ணகைச்செவ் வாய்க்கரிய*
*பானலார் கண்ணியர்க்கும்*
*பதைத்துருகும் பாழ்நெஞ்சே*
*ஊனெலா நின்றுருகப்*
*புகுந்தாண்டான் இன்றுபோய்*
*வானுளான் காணாய்நீ*
*மாளாவாழ் கின்றாயே.* 19

இ - ள்: மன்மதனுடைய பூவம்புகளுக்கும், வெண்மை யான பற்களையும் சிவந்த வாயையும் கரிய குவளைமலரை யொத்த கண்களையுமுடைய பெண்களுக்கும் பதைபதைத்து உருகுகின்ற பாழ்பட்ட மனமே! உடலுறுப்புக்களனைத்தும் நின்று உருகும்வண்ணம் என் மனத்துட்புகுந்து நிலைபெற்று நின்று ஆட்கொண்ட இறைவன், இப்போது பரந்தவெளியிற் போய் உள்ளான்; நீ மாண்டுபோகாமல் வாழ்கின்றாயே; அங்ஙனம் அவன் விளங்குதலைக் கண்டறிவாயாக என்றவாறு.

நான் கெட்ட பின்னன்றி, இறைவன் பரவெளியில் எழுந் தருளியிருத்தலையும், மனத்துட்புகுந்து ஆண்டதையும் உயிர் அறியாது; ஆதலின், 'மனமாகிய நீ மாளாமல் வாழ்கின்றாயே! அவன் உள்ளும், புறம்பும், கடந்த வெளியிலும் இருப்பதைக் காண்பாயாக' என்றார் என்பது கருத்து.

வேள் - மதனன். வேனில்வேள் - வேனிற்காலத்திற்குரிய வனான மன்மதன். ஊன் - உடல்: ஆகுபெயர்.

வேள் விரும்பப்படுபவன் என்னும் காரணக்குறியாய் முருக னையும், விருப்பத்தை விளைவிப்பவன் என்னும் காரணக்குறி யாய் மன்மதனையும் குறிக்கும் பொதுச்சொல். வேனில் வேள் என்பது முருகனை விலக்கி மன்மதனை உணர்த்தியது. மன்மத னுடைய வீரமும் அம்பும் தென்றலாகிய தேரும் குயிலாகிய எக் காளமும் கிளியாகிய தேரும் வெளிப்படும் காலம் வேனில் ஆதலின் அந்தப் பருவத்திற்கு அவன் உரியவன் ஆயினன்.

மன்மதன் மக்கள்மேல் கரும்பு வில்லையும் மலர் அம்பையும் கொண்டு எய்கின்றான் என்று கந்தபுராணம் கூறுதலின் மக்க ளில் ஒருவராகிய தமக்கு மலர்க்கணையே பயன்படுத்தினன் என்பார் 'வேனில்வேள் மலர்க்கணைக்கும்' என்றார்.

மனமானது மாதரிடம் ஈடுபட்டு ஒழுகுதல் மன்மதபாணம் தைத்தபிறகே ஆதலின் மலர்க்கணையை முன்னரும் கண்ணி யரைப் பின்னரும் காரண காரிய முறைப்படி அமைத்தார்.

மாதரின்றி மலர்க்கணையும் மலர்க்கணையின்றி மாதரும் காமம் விளைவியார்கள். இந்நிலையை உணர்த்தவே மன்மதன் மகளிராகிய காலாட்படை சூழப் படையெடுக்கின்றான் என்று இலக்கியங்கள் கூறும். ஆதலால் கல்வி கேள்விகளில் நிறைந்து தளர்ச்சியின்றி இருந்த மனம் மலர்க்கணையும்பட்டு, மாதரைக் கண்டவுடன் அவர்களது வெண்நகையும் செவ்வாயும் கரிய

கண்ணும் காதற்குறிப்பும் கருத்தொருமையை உணர்த்த பதைத்தலும், பின்னர் காலம் நீட்டிக்க உருகுதலும் தொடர்பாக நிகழ்ந்தன என்பார் 'கணைக்கும் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே' என்று ஒருசேர உணரவைத்தார். கணைக்குப் பதைத்து, கண்ணியர்க்கு உருகும் என நிரல்நிரையாக்கிப் பொருள்கோடல் ஏலாது என்பதனை இறைவன் யோகியாயிருந்த காலத்து மன்மதன் பாணம் எய்யாமையால் மாதரும் ஆடவரும் மணச்சடங்கு இயற்றியும் இணைவிழைச்சியற்கை கூடாது இருந்தனர் என்று கந்தபுராணம் கூறுவதால் அறிக.

ஊன் எலாம் என்றது ஊனாகிய தசையும் என்பும் நரம்பும் முதலான எழுவகைத் தாதுக்களும். ஊன் உயிர் இருத்தற்கு இடனாய்ச் சடமாதலின் அதனுள் புகுந்து உயிராகிய என்னை ஆண்டான் என்பார் 'ஊன் எலாம நின்றுருகப் புகுந்து ஆண்டான்' என்றார். ஊன் உடல் புகுந்தான் உயிர் கலந்தான் என்புழியும் உடல் சடமாயிருத்தலின் புகுந்தான் என்றும் உணர்த்த உணரும் சித்தாகிய உயிரோடு உணர்த்தும் சித்து கலத்தலே முறைமையாதலின் உயிர் கலந்தான் என்றும் கூறியது ஆண்டுக் காண்க.

அங்ஙனம் குருவாக வந்து ஆண்ட இறைவன் இன்று பிரிந்து சென்று சிதாகாசத்தில் ஞானஒளியாய் விளங்குகின்றானென்பார் 'இன்று போய் வானுளான்' என்றும் அதுகண்டும் நீ மாளாது வாழ்கின்றாயே என்று நெஞ்சை இடித்துரைப்பார் 'நீ மாளா வாழ்கின்றாய்' என்றும் கூறினர்.

இதுவரை இறைவனிடம் விண்ணப்பிப்பதுபோல நெஞ்சிற்கு அறிவுறுத்திய அடிகளார் இதன்கண்ணும் அடுத்து வரும் பாடற்கண்ணும் நேரே நெஞ்சை விளித்து, குறிப்பால் உணர்த்தியும் உணர்ந்து திருந்தாத உன்னோடு வாழேன் சாவேன் என்று இடித்துரைத்தலின் அறிவுறுத்தலாயிற்று.

**24** வாழ்கின்றாய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றாய் ஆழாமற்
காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச்
சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக்
கடலாய வெள்ளத்தே. **20**

திருச்சிற்றம்பலம்

இ - ள்: வாழத்தெரியாத மனமே! நீ வாழ்ந்துகொண்டிருக்கின்றாய்; வலிய வினைச்சுழலில் அகப்பட்டு அதனுள் அழுந்துகிறாய்; அழுந்தாமல் பாதுகாக்கும் இறைவனை நீ ஏத்தாமல் உனக்கே கேடு சூழ்கின்றாய்; உனக்குப் பல்காலும் சொல்கிறேன்; நீ துன்பக்கடலாகிய வெள்ளத்திலே வீழ்கின்றாய் என்றவாறு.

நெஞ்சே! நான் சொல்லுவதைக் கேளாமல், இறைவனை ஏத்தாது துன்பக்கடலில் வீழ்கின்றாய் என்பது கருத்து.

பேரின்பத்துள் அழுந்தி வாழவேண்டிய நீ சிற்றின்பத்தில் வினைக்கீடான பிறவிச்சுழலில் அகப்பட்டு வாழ்கின்றாயாதலின் 'வாழாத நெஞ்சமே வாழ்கின்றாய்' என்றது.

நெஞ்சம், ஐந்து வாயில்களின்வழியாக ஐம்புலன்களிலும் சென்று மேய்ந்து, தன்னைக் கருவியாகக்கொண்ட உயிருக்குப் பழியைத் தேடித்தருவது ஆதலின், நெஞ்சத்தை விளித்து 'வாழ்கின்றாய்' என்றார். இது குறிப்புமொழி. கற்கறிக்கச் சமைத்தானை நன்கு சமைத்தான் என்பதுபோல வாழத்தெரியாத மனமே மாளாமல் வாழ்கின்றாயே என்று கடிந்துரைத்ததாகும். அதன் அறியாமைக்கு இரங்கிக் கூறியதும் ஆம்.

அழியவேண்டிய நீ அழியாது முனைத்திருத்தலால் மேலும் மேலும் வலிய வினைகளைத் தேடித் துன்பக்கடலுள் ஆழ்கின்றாய் என்றார். துன்பக்கடலிலிருந்து கரையேறவேண்டின் நீ அக் கடலுள் ஆழ்ந்து காப்பாற்றும் ஆற்றலுடைய கருணையாளனை இடைவிடாது துதித்தல்வேண்டும். அது செய்திலையாதலின் யானை தன்தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்வதுபோல விட்டில் விளக்கில் விழுந்து தானே மடிவதுபோல உனக்குக் கேட்டை நீயே தேடிக்கொள்கின்றாய் என்பதனை 'ஆழாமல் காப்பானை ஏத்தாதே சூழ்கின்றாய் கேடு உனக்கு' என்ற பகுதியால் அறிவிக்கின்றார்.

நல்ல மாட்டுக்கு ஒரு சூடு நற்பெண்டிர்க்கு ஒரு சொல் என்பதுபோல, ஒருமுறை இருமுறை சொல்லியும் உனக்குத் தெரியாமையால் பலகாலம் சொல்கிறேன்; நீ துன்பக்கடலாகிய வெள்ளத்தில் வீழ்கின்றாய் என்று.

இதுவும் நெஞ்சை நேரே விளித்துக் கூறினமையால் அறிவுறுத்தலாயிற்று. இப்பத்துப் பாடல்களும் மனத்தைப் பரிபாகம் செய்யும் சிவசக்தி அநுபவமாதல் காண்க.

## ௩. சுட்டறுத்தல்

திருச்சதகமாகிய பதிற்றுப்பத்து அந்தாதியில் முதற்பத்தில் தேகத்தில் காணப்படும் பரிபாகச் சின்னங்களைச் செலுத்தும் சிவ சக்தியின் பெருமையாக மெய்யுணர்ந்து இரண்டாம்பத்தில் அதற்கு ஒத்துவராத மனத்தை இடித்துரைத்த அடிகள், இப்பத்தில் மனம் கருதியும் கருவிகரணங்களால் சுட்டியும் அறியமுயற்சிக்க, அதற்குச் சுட்டறிவு பயன்படாது என்று உணர்த்துதலின் இது சுட்டறுத்தல் என்னும் பெயர்த்தாயிற்று. சுட்டறுத்தலாவது இது குடம், இது படம் என்பனபோலக் கருவிகரணங்களைத் துணைக்கொண்டு அறிவினால் அறிதல். அவையனைத்தும் மாயையின் காரியமாகிய அழியும் பொருளைப்பற்றிய அறிவாதலின் அவ்வறிவால் இறைவன் அறிய முடியாதவன் என்பதை மனத்திற்கு உணர்த்துதலின் இப்பத்தும் சுட்டறுத்தலாயிற்று. இதனை அன்பைப் புலப்படுத்தும் சிவசக்தி வினியோகம் என்ற பழையவுரை விளக்கும்.

### எண்சீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

25 வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே. 21

இ - ள்: கங்கை வெள்ளம் பணிகின்ற விரிந்த சடையை உடையவனே! இடபத்தை வாகனமாகக் கொண்டவனே! தேவ தேவனே! என்று பிறர் சொல்லக் கேட்ட அவ்வளவே ஆசை மிக்க நெஞ்சம் உடையவராய்ப் பள்ளம் நோக்கி ஓடும் நீரைப்போலக் கீழ்மேலாகும்படிப் பதைபதைத்து உருகுகின்ற மெய்யன்பர்கள் ஒருபுறம் இருக்க; ஒன்றற்கும் பற்றாத அடியேனை ஆளாக ஏற்றுக்கொண்ட உனக்காக உள்ளங்கால் தொடங்கி உச்சந்தலை வரையும் நெஞ்சமாகி உருகுதலைச் செய்திலது; உடம்பு முழுவதும் கண்ணாகி ஆனந்தவெள்ளம் பாய்ந்திலது; என் தந்தையே! கொடிய வினையையுடைய எனக்கு நெஞ்சம் கல்லாகும் என் கண்கள் இரண்டும் மரமாம் என் செய்வேன்! என்றவாறு.

இறைவன்பெயர் கேட்டளவில் உருகிக் கனியும் உண்மை அடியார்கள் ஒருபுறம் நிற்க, ஒன்றற்கும் பற்றாத அடியேனை ஆட்கொண்டாய்; அத்தகைய கருணை புரிந்த உனக்காக உடல் முழுதும் நெஞ்சாகி உருகவேண்டும்; உடல் முழுதும் கண்ணாகி ஆனந்தவெள்ளம் சொரியவேண்டும்; அங்ஙனம் செய்யாமையால் என் நெஞ்சம் கல்லாயிருக்கிறது, கண்கள் மரமாயின என்செய்வேன் என்பது கருத்து.

வெள்ளந்தாழ் விரிசடையாய் - கங்கைவெள்ளம் பணிந்த விரிந்த சடையை உடையவனே; என்றது நிலவுலகம் தாங்காதவாறு பெருக்கோடுவந்த கங்கையின் செருக்கை விரிந்த சடையிலுள்ள ஒரு மயிர்க்காலுக்கும் பற்றாதவாறு அடக்கிய வரலாற்றைக் குறிப்பது. தாழ்தல் - பணிதல். இதற்குக் கங்கை வெள்ளம் தங்கிய சடையினை உடையவனே என்று உரைப்பாரும் உளர்.

சிதம்பரமாகிய கோயிலைத் திருக்கோயில் என்னுதததுபோல, சிவனாரைத் திருச்சிவனார் என்னுதததுபோல இறைவன் ஏறியிருக்கும் விடையினையும் ஈண்டு அடைமொழி கொடாது கூறினார்; அதன் ஒப்பு உயர்வற்ற தன்மையை உணர்த்துதற்கு. விடை அறவடிவமானது. அதனை இறைவன் ஊர்கின்றான் என்றது அறம்என்பன யாவும் இவன்வழிபட்டனவே என்பதை உணர்த்தியவாறு.

தேவர்கள் குறையுள்ளவர்களாக, தமது குறையைநீக்கத் தம் தலைவர்களிடம் சென்றும் அவர்களாலும் நீக்கமுடியாமையால் திருக்கயிலைக்கு வந்து இறைவனிடம் விண்ணப்பித்துக் குறை நீங்கி உயர்ந்தனர் என்பது வரலாறு. அது விண்ணோர் பெருமானே என்றதன் விளக்கமாகும்.

ஒருவருக்கு ஒருவர்மேல் விருப்பம் உண்டாதற்கு ஆற்றலும், நேர்மையும், தலைமையுமே காரணம். ஆதலால் இறைவனிடம் செருக்கடக்கும் ஆற்றலும் அறத்தை நடத்தும் நீதியும் தேவதேவனாகிய தலைமையும் உடைமையால் அதைக்கேட்டு அடியார்மனம் விரும்பியது என்பார் 'விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்' என்றார். வேட்ட - விரும்பிய.

அவரடியவர்களுக்கு முறுகி வளர்ந்த அந்த விருப்பத்தின் விரைவையும் விளைவையும் 'பள்ளந்தாழ் உறுபுனலில் கீழ்மேலாகப் பதைத்துருகும் அவர்' எனக்குறிப்பித்தார்.

மலையுச்சியிலிருந்து நீர் விழும்போது விரைவாக விழுதலை யும் கீழ்நீர் மேல்நீராதலையும் காண்கிறோம். அதுபோல ஆசை வெள்ளம் இறைவன்மாட்டுப் பாய்கின்றபோது கீழான பொரு ளும் மேலானதாக அதனால் அவர்கள் பதைபதைத்து உருகி நின்றார்கள் என்பதும் உணர்த்தப்பெற்றன. கனிந்த மனத்து அடியவரை விரைவில் ஆட்கொள்ளவேண்டியிருக்க அவர்களை ஒருபுறம் ஒதுக்கிவிட்டு என்னை ஆட்கொண்ட உன் பெரு மையை நினைந்து எனக்கு விளையவேண்டிய அனுபவங்கள் விளைந்தில என்பார், 'உள்ளந்தாள்நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளந் தான் பாயாதால்' என்றார்.

இதற்குக் காரணம் அடியேன் செய்த தீவினையே என்றார். உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும் மனமாகாவிட்டாலும் உடம்பெல்லாம் கண்ணாகாவிட்டாலும் இருக்கிற ஒருநெஞ்சமும் இரு கண்களுமாவது கசியவேண்டுமே அதுவுமில்லை என்பார் 'நெஞ்சம் கல்லாம் கண் இணையும் மரமாம்' என்றார்.

உருகிய மனமும் பெருகிய கண்ணீரும் உண்டான காலத் திற்றான் கடவுட்காட்சி கருத்துக்குப் புலனாமென்பதுணர்த்தி னமையால் இது சுட்டறுத்தலாயிற்று.

26 வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேட னென்பாய் போல
இனையனா னென்றுன்னை யறிவித் தென்னை
ஆட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
அனையநான் பாடேனின் றாடே னந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயி னானே. 22

இ-ள்: கடவுளே! தோற்றம் இறுதி இவற்றிற்குக் காரணமானவனே! இருவினைக் குவியலில் கிடந்து வருந்து கின்ற அடியேன்பால் வலியவந்து புகுந்து நிலைபெற்றுநின்று, 'வா; நான் உன் வினைகளை எல்லாம் ஒழிப்பவன்' என்று கூறு பவன் போல, 'இத்தன்மையுடையவன் யான்' என்று உன்னை அறிவித்து என்னை அடிமையாக ஏற்று எனக்குத் தலைவனான உனக்கு இரும்பாற் செய்யப்பட்ட பாவையை ஒத்த நான் பாடுதலைச்செய்யேன்; நின்று ஆடுதலைச்செய்யேன்; அந்தோ, அலறேன்; வாய் உலறேன்; உயிர் மயங்கேன்; நான் இங்ஙனம்

இருப்பது முறையோ; இதன் முடிவை அடியேன் அறிகின் றிலேன் என்றவாறு.

வினையிலகப்பட்டு வருந்துகின்ற அடியேனை வலியவந்து ஆட்கொண்டு தன்னை அறிவித்த தலைவனாகிய உன்னிடம் பரவசமாகிப் பாடேன், ஆடேன், அலறேன், உலறேன்; நான் இப்படியிருப்பது முறையாகுமா? இதன் முடிவு என்ன என்பது கருத்து.

முனைவன், முதலந்தம் ஆயினன் என்பன இறைவனுடைய அநாதி நித்தியத் தன்மையை அறிவிப்பன. முதல் அந்தம் ஆயினன் - முதன்மைக்கும் இறுதிக்கும் காரணனாக விளங்கு பவன். அந்தம் முதல் ஆயினனே என மாற்றி மகாசங்கார காரணனாயிருந்து அனைத்தும் மீள உண்டாவதற்குக் காரண மானவனை எனினுமாம். 'ஒடுங்கி மலத்துளதாம் அந்தமாதி' என்பது சிவஞானபோத முதலுபதேசம். வினை பிராரத்தமும், ஆகாமியமும் சஞ்சிதமுமாக இடையறாது வந்துகொண்டே இருத்தலின் 'வினையிலே கிடந்தேனை' என்றார்.

சாணியிலே புழுத்தபுழு அதனையே பேரின்ப நிலைக்களனாக எண்ணி அதிலே மூழ்கிக்கிடக்குமாறுபோல, வினையிற்றோன்றி வினையில் அழுந்தி, இறையுணர்ச்சி சிறிதுமின்றிக் கிடக்கின்ற என்னை ஆட்கொள்ளவேண்டுமென எண்ணித் தானே கருணை யினால் வலியவந்து, புகமுடியாதபடி அறியாமை முட்புதர் மண்டிக்கிடந்த என்மனத்தில் இடம்கண்டு புகுந்து, காமக் குரோதாதிகளான புலியும் பாம்பும் வெருட்ட வெளியிற்சென்று விடாதபடி அங்கேயே குடியாக நிலைபெற்று நின்று, காடு திருத்தி நாடாக்கிய மன்னன்போல அறியாமைக்காட்டையகற்றி ஆணவ இருளை வெருட்டி, அன்பும் பணிவுமாகிய நந்தன வனத்தையுண்டாக்கி, என்னிடம் இறையுணர்ச்சியாகிய ஞானம் சிறிது வெளிப்பட்டவுடன், வா அப்பா! நான் ஒரு வினைக் கேடன்! என்று அருள்பவரைப்போல் தன் பொதுவியல்பும் சிறப்பியல்புமாகிய தன்மைகளை உணர்த்தி, என்னை ஆட் கொண்டு எனக்குத் தலைவனான அருமை மிகமிக வியக்கத்தக்க தும் மறக்கமுடியாததுமான செயலாகும் என்பார் 'புகுந்து நின்று, போது; நான் வினைக்கேடன் என்பாய்போல, நான் இனையன் என்று உன்னை அறிவித்து, என்னை ஆட்கொண்டு, எம்பிரான் ஆனாய்க்கு' என்றார்.

போது: முன்னிலை ஏவல் வினைமுற்று. 'நான் வேலையற்ற வன்; இப்படிக் காடுவெட்டி நாடாக்குதலே என்வேலை' என

நகைச்சுவையும் தோன்ற நிற்றல் காண்க. வினைக்கேடன் - வினைகளை அழிப்பவன். அழிக்கத்தக்க வினைகள் ஆகாமியமும் சஞ்சிதமுமாம். பிராரத்தம் அனுபவித்தாலன்றிக் கழிக்க ஒண்ணாதது.

இனையன் - இத்தன்மையன். நோயுள் அழுந்தி வருந்துகின்ற ஒருவன்முன், ஒருவன்வந்து 'நானொரு மருத்துவன்; என் ஆற்றல் இப்படிப்பட்டது' என உணர்த்துவது போல, இறைவன் என்னுள் புகுந்து நின்று, நான் வினைகளைக் கெடுப்பவன் இத்தன்மையன் என்றறிவித்தார் என்பதாம்.

ஆன்மாக்கள் இறைவனுக்கு என்றும் மீளா ஆளாயிருப்பினும் 'ஆட்கொண்டு எம்பிரான் ஆனுய்க்கு' என ஆட்கொள்ளுதல் முன்னும் தலைவனுதல் பின்னுமாக நிகழ்ந்தது போலக் கூறுதல் யான் இதுவரை அறியாமையான் நீ ஆண்டான் நான் அடிமை என்பதை அறியாதிருந்தேன் இப்போதுணர்ந்தேன் என்பதே பொருளாகக் கொள்க. காணுதார்க்குக் காட்டுதல் தற்பெருமை ஆகாது ஆதலானும், தலைவன் எப்போதும் உணர்த்தக் கடமைப்பட்டவன் ஆதலானும், இறைவா நீ 'இனையன்' என்று உன்னை அறிவித்த அளவானே என் வினைகளும் கழிந்தன ஆதலால் வினைக்கேடன் என்பாய்போல அறிவித்தாய் என்றார்.

அவ்வண்ணம் ஆட்கொண்ட உன் பேரருளுபகாரத்தை எண்ணி, பாடுதலும் ஆடுதலும் அலறுதலும் உலறுதலும் செய்யவேண்டிய நான் அங்ஙனம் செய்யேன் அதனால் இரும்பின் பாவை அனையேன் என்றார்.

கற்பாவை, மரப்பாவைகளைக் கூருது இரும்பின் பாவையெனக் கூறியது காந்தம் கண்டவிடத்து இரும்பின் பாவை இயங்குவதுபோல, திருவருட்காந்தம் என்மீது செலுத்தப் பெறுமாயின் அதன்வழியே இயங்குவேன் இப்போது அஃது இல்லை ஆதலால், ஆடாமலும் பாடாமலும் இருக்கின்றேன் ஆகையால், பாடுவிக்கவும் ஆடுவிக்கவும் அலறுவிக்கவும் திருவருள்பண்ணவேண்டும் என்பது குறிப்பு.

நான் அருட்காந்தம் பரவாத வெற்றிரும்பின் பாவையாக ஆனது முறையோ என்று இரங்குவார் 'நான் ஆனவாறு முறையோ' என்றார். எப்போது நீ அருள் வழங்குவாய் ஆடுவிப்பாய் பாடுவிப்பாய் என்ற முடிவை அறியேன் என்பார் 'முடிவறியேன்' என்றார்.

அலறுதல் - அச்சத்தாற் பற்றப்பட்டானொருவன் செய்வது அறியாது கத்துவதுபோலக் கத்துதல். "ஆரூரா என்றென்றே அலறா நில்லே" என்றதும் காண்க.

உலறுதல் - வற்றுதல். அலறியும் பாதுகாப்பில்லையானால் நாவும் கண்ணும் காதும் உலர்ந்து தம் தன்மை கெடும். பின்னர்க் கவலையால் உடலும் வற்றும். இந்நிலையே உலறிடேன் என்றதால் குறிக்கப்பெற்றது. ஆவிசோர்தல் - மூர்ச்சித்தல்.

மல மாயைகளில் கட்டுண்டுகிடந்த நிலையில் இறைவன் வந்து ஆளாகக்கொண்டு தன்னை இனையன் என உணர்த்திய போது 'முனைவன்' 'முதல் அந்தம் ஆயினான்' 'வினைக்கேடன்' என இறைவனுடைய சிறப்பியல்புகளை அறிந்துகொண்டமையின் இது சுட்டறுத்தலாயினமை காண்க.

27 ஆயனான் மறையவனும் நீயே யாதல்
அறிந்தியா னியாவரினுங் கடைய னாய
நாயினே னாதலையு நோக்கிக் கண்டும்
நாதனே நானுனக்கோர் அன்ப னென்பேன்
ஆயினே னாதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தா மில்லையே யன்றி மற்றோர்
பேயனே னிதுதானின் பெருமை யன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே. 23

இ - ள்: தலைவனே! நீயே யாவர்க்கும் தலைவனாகிய அந்தணனாதலை அறிந்தும், யான் எல்லாரினும் கடைப்பட்ட நாயை ஒத்தவன் ஆதலை ஆராய்ந்து அறிந்தும் நான் உனக்கு ஓர் அன்பன் என்று சொல்லிக்கொள்வேனாயினேன்; அது காரணமாக அடியேனை ஆட்கொண்டாய்; உனக்குப் பேயனாகிய என்னையன்றி வேறு அடியார்கள் இல்லையா? என்னை ஆட்கொண்ட இது உன் பெருந்தன்மையைக் குறிப்பதன்றோ? எம்பெருமான்! உன்னை என்சொல்லிப் புகழ்வேன் என்றவாறு.

நீ யாவரினும் உயர்ந்தவன்; யான் யாவரினும் கீழ்ப்பட்டவன் என்பதை அடியேன் ஆராய்ந்து அறிந்திருந்தும் நான் உனக்கு அன்பன் என்று சொல்லிக்கொள்வேன் ஆயினேன்; அதற்காக நீ என்னை ஆட்கொண்டாய்; பேயனாகிய என்னையன்றி வேறு அடியார்கள் இல்லையா? இதுதான் உன் பெருந்தன்மை; எம்பெருமான்! உன்னை என்னசொல்லிப் புகழ்வேன் என்பது கருத்து.

நாதன் என்பதற்கு ஐஸ்வரியமுடையவன் எனப் பகுதிப் பொருள்கொண்டு கடவுள் என்பாரும் உளர். நான்கு வேதங்களுக்கும் தலைவனாகவும், வேதமுடிவிற்கூறப்படும் பொருளாகவும், வேதமே தானாகவுமிருத்தலின் 'நான்மறையவன்' என்றார். பின்னர் 'நாயினேன் ஆதலையும்' என்பதற்கேற்ப முன்னரும் 'ஆய நான்மறையவன் நீயே ஆதலையும் அறிந்து' என உருபும் உம்மையும் கூட்டுக.

என் இழிதகைமையும், உன் உயர்வற உயர்ந்த பெருமையுங் கண்டு 'நான் உனக்கோர் அன்பன் என்பேன்' என்றார். தம்மிற்பெரியார்க்குத் தமராய் ஒழுகுதலிலேயே உலகவர்க்கு உவப்பாம் ஆதலால் வேதமுதல்வனாகவும், வேதப்பொருளாயும், வேதசிரத்தில் விளங்குபவனாயும் உள்ள உனக்கு அன்பன் என்று சொல்லிக்கொள்வேன் ஆயினேன்.

கொல்ல வழிதேடிக்கொண்டிருந்த சிங்கம் தனக்கு முன்பு தண்ணீர் குடித்த ஒன்றே தாரகமாக, அதனை வாயிலாகக் கொண்டு ஆட்டைக் கவ்வியதுபோல, உன் அன்பன் என்று உரையளவில் சொல்லிக்கொண்டிருந்த ஒன்றையே வாயிலாகக் கொண்டு என்னை அடியானாக ஏற்றுக்கொண்டாய் என்பார் 'நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன் ஆயினேன்; ஆதலால் ஆண்டுகொண்டாய்' என்றார்.

பற்றியதை விடாது நிற்கும் தன்மையும், கணந்தோறும் மாறுபடும் தீயகுணமுமுடைய பேயை ஒத்தவன் நான்; அத்தகைய என்னையன்றி வேறொரு அடியார் உமக்கு இல்லையே; ஆளில்லாக் குறையால் ஆண்டீரோ என்பார் 'பேயனேன் அன்றி மற்றோர் அடியார்தாம் இல்லையே' என்றார்.

பரிபாகமுற்ற மெய்யடியார் எத்துணையோ பேர் காலங் கருதித்தவங்கிடப்ப அவர்களைவிட்டு ஒருசிறிதும் தகுதியில்லாத அடியேனை 'அன்பன் ஆயினேன்' என்ற ஒன்றற்காக ஆட்கொண்டது நின் பெருமையைப் புலப்படுத்திநின்றதேயன்றி என் தரம் உயர்ந்திலது என்பார் 'இதுதான் நின் பெருமையன்றே' என்றார்.

அன்பின் ஆராமையால் மீண்டும் 'எம்பெருமான்' என விளித்து 'என்சொல்லிப் பேசுகேன்' என்பது புகழ்தற்குரிய சித்தவிருத்தியும் ஆனந்தமீதூர்ச்சியால் ஒடுங்கிப்போனதால் புகழுமாறு ஒன்றறியேன் என்றவாறு.

புகழ முடியாமை, நான்மறையவன் ஆதல், நாதனுதல் முதலியவற்றைக் கூறுவதால் சுட்டறுத்த அனுபவம் தொனித்தல் காண்க.

28 பேசிற்ரு மீசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்ருன் திருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்ரு
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே அவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தா யந்தோ
என்னைநீ யாட்கொண்ட வண்ணந் தானே. 24

இ-ள்: குற்றமில்லாத மாணிக்கமலையே! என் தந்தையே! தாம் பேசப்புகின் ஈசனே! என் தாயே! என் தந்தைக்குத் தந்தையே! என்று பலகாலும் பேசியும், பூசப்புகுந்தால், 'எம்பெருமானே! போற்றி' என்று திருநீற்றை நிறையப் பூசியும் இம்மியும் குறையாத அன்பினுலே, பிறப்பையும் இறப்பையும் கடந்த அடியார்களை ஆண்டவனே! ஆசை வெள்ளத்தில் அகப்பட்டுத்தவிக்கின்ற கள்வனுகிய என்னையும் ஒரு பொருளாக ஏற்று ஆட்கொண்டவிதம் என்னையோ? என்றவாறு.

உன்னைப் பலகாலும் தோத்தரித்தும் திருநீற்றைப் பூசியும் இடையருத அன்போடு முத்தியை அடைந்த அன்பர்களை ஆண்டவனே! ஆசைக்கடலில் அகப்பட்ட என்னையும் ஒரு பொருளாக ஏற்று ஆட்கொண்டவிதம் என்னையோ என்பது கருத்து.

மணிக்குள்ள மாசாவன, மேல் அழுக்குப் படிந்திருத்தலும், கீறல், சப்பட்டை, காகபாதம், ஒளியொதுக்கம், ஒளியின்மை முதலியனவுமாம். இவைகள் இயற்கையாக இல்லாத மாணிக்க மலையே இறைவனுக்கு ஒப்பாவது ஆதலால் 'மாசற்ற மணிக் குன்றே' என்ருர். மாசு நீங்கப்பெற்ற மணிகளும் பாடவேளை யில் சூரிய ஒளியின் உதவியினுலன்றி ஒளி மிகா. இறைவனுகிய மணி இயல்பாகவே ஒளிப்பிழம்பானது, மற்றை ஒளிகளுக்கும் ஒளிதருவது ஆதலால் கூறினுர் எனலுமாம்.

பொதுமையில் எல்லாருக்கும் தலைவனுயினும், எனக்குத் தந்தைபோலச் சிறப்பருள்புரிபவன் என்பார் 'எந்தாய்' என்ருர்.

மெய்யடியார்கள் பேசினல் இறைவனைப்பற்றியே பேசுவர்; பூசில் திருநீறே பூசுவர்; எப்போதும் எம்பெருமானே எனப் போற்றிப் பிறப்பிறப்பைக் கடந்தார் ஆவர். அவர்களை ஆண்டானே என்றார். இதனல் மெய்யடியாரியல்பு விளக்கப்பெற்றது. உலகியல் போகங்களை மிகுவிப்பதான களப கத்தூரிகளைப் பூசார்; காம கோபங்களை விளைக்கும் இழிசொற்களைப் பேசார் என்பது உணர்த்தப்பெற்றமை காண்க.

எண்ணெய் ஒழுக்குப்போல இடையீடுபடாத அன்பினல் பிறப்பிறப்பைக் கடந்த அடியார்கள் என்பார் பின்றுநேசத்தால் கடந்தார் என்றார். பின்றுதல் - பிற்படுதல்; பிறழுதல். உறைத்த மனத்தடியவர் எனப்படுவதும் காண்க.

மனம் மொழி மெய்களான் இறைவனைப் பேசியும், பூசியும், நேசித்தும் வீட்டுலகை அவர்கள் பெற்றனர் என்பார்' பிறப்பு இறப்பைக் கடந்தார்தம்மை ஆண்டானே' என்றார்.

இறைவன் ஆட்கொண்டபிறகே பிறப்பிறப்பைக் கடத்தலாகிய வீட்டின்பம் எய்தக்கடவதாக, கடந்தாரை ஆண்டானே எனல் பொருந்துமோ எனின், நேசங்கொண்டு பிறப்பிறப்பைக் கடக்கக்கூடியவர்களையே ஆண்டானெனக்கொள்க. இறைவன் முத்திப்பேற்றை விரும்பும் முமுட்சுக்களையே ஆட்கொள்வன் என்பது நோக்குக. அல்லது பிறப்பிறப்பைக் கடப்பார்தம்மை ஆண்டானே என்று எதிர்காலத்தால் கூறவேண்டியதை இறைவனல் ஆட்கொள்ளப்படின் அவர்கள் பிறப்பிறப்பைக்கடத்தல் உறுதியாதல்பற்றித் துணிவால் எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டது என்னுமாம்.

கள்வனின் கள்ளத்தன்மையின் உயர்வு அவனுக்குள்ள அவாவின் எல்லையினதாகும். ஆகவே, தன்னை அவாவெள்ளக் கள்வனேன் என்றது, எனக்கு உள்ள அவாவும் வெள்ளம் போன்றது; அதனல் இயற்றப்படும் கள்ளத்தனமும் எல்லை இல்லாதது என்று உணர்த்தியவாறும்.

அந்தோ : இரக்கக் குறிப்பிடைச்சொல். கள்வனேனை நீ ஆட்கொண்டவண்ணந்தான் என்னை எனக்கூட்டுக. என்னை : வினவடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று. இவ்வண்ணம் வினவியது, சிற்றறிவினேமாகிய எம்மால் அறியப்படாதது ஆம் என்பது கருதி என்க.

கள்வனேனை ஆட்கொண்ட வண்ணந்தான் என்னை என ஆன்ம அறிவிற்கு அப்பாற்பட்டமையை உணர்த்துதலின் இது சுட்டறுத்தலாயிற்று.

29 *வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்ற*
*நேகனேகன் அணுவணுவில் இறந்தா யென்றங்*
*கெண்ணந்தான் தடுமாறி யிமையோர் கூட்டம்*
*எய்துமா றறியாத எந்தா யுன்றன்*
*வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி*
*மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்*
*திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்*
*எம்பெருமா னென்சொல்லிச் சிந்திக் கேனே.* 25

இ - ள் : எம்பெருமானே! தேவர் கூட்டமானது உன் நிறம் செம்மையானது என்றும், அன்று வெண்மையானது என்றும், இவையிரண்டும் அன்றென்றும், பலர் என்றும், ஒருவன் என்றும், அணுவாயும், அதைக்கடந்த நுண்ணிய பொருளாயும் இருக்கிறுயென்றும் பலவாறுகூறி, நினைவு மயங்கி, அடையும் உபாயத்தை அறியமுடியாது தவிக்கச்செய்யும் என்னுடைய தந்தையே! உன் நிறத்தையும் வடிவத்தையும் திருவருளே வடிவான திருவடிகளையும் அடியேன் உணருவண்ணம் உள்ள வாறுகாட்டி, நெறியறியாது மயங்கும் என்னை உறுதியாக இனிமேல் பிறவாமல் காத்து ஆட்கொண்டாய்; அத்தகைய பேருபகாரியாகிய உன்னை என்ன சொல்லிச் சிந்திப்பேன் என்றவாறு.

வண்ணமும் வடிவும் விண்ணவர்களாலும் அறியமுடியாத கடவுளே! அடியேனுக்கு அவையிரண்டையும் காட்டியதோடு அமையாமல் அருள்வடிவான அடிகளையும் காட்டி ஆட்கொண்டாய்; உன்னை என்ன சொல்லிச் சிந்திப்பேன் என்பதாம்.

இறைவன் திருமேனி பேரொளிப்பிழம்பானது; நூறுயிரம் கோடி சூரியர்களைப்போன்ற ஒளியையுடையது என்று சிவாகமங்கள் கூறும். அதனை ஞானக்கண்ணினுல் காண முடியுமேயன்றி ஊனக்கண்ணுல் காணமுடியாது. தமது ஊனக்கண்ணுல் காணமுற்பட்ட இமையோர்கள் தமக்குத் தோன்றியவாறெல்லாம் பலபடியாக உரைத்தனர். சில தேவர்கள் முதல்வன் வண்ணம் செம்மையானது என்று தாம் தாம் கண்ட நூலறிவாலும் திருக்கயிலையிற் கண்ட காட்சியாலும் உரைத்தனர். வேறுசிலர் வெண்ணீறு சண்ணித்த மேனியைக்கண்டு, அன்று அன்று வெளிதே என்றனர். வேறுசிலர் அது வெண்ணீற்றின் ஒளி; நிறம் செம்மையே என்றனர். வேறுசிலர் இறைவனுடைய உண்மையியல்பை ஆராயத்தொடங்கி, சீவன் சிவலிங்கமாக இருத்தலை அறிந்து, உயிர்கள் பலவாதலின் இறைவனும்

பலராதல்வேண்டும் என்று எண்ணி அநேகன் என்றனர். மற்றும் சிலர் உயிர்கள் பலவே ஆனாலும் அவற்றினிடமாக விளங்கும் பரம்பொருள் ஒன்றே, பல கண்ணாடியுள் ஒரே சூரியன் விளங்குதல்போல என்றனர். வேறு சிலர் இறைவன் அணுவாக விளங்குபவன் என்றனர். சிலர் அணுவைக்கடந்து விளங்குபவன் என்றனர். இவ்வாறு அவரவர்களும் பொறியுணர்ச்சியாலும் நூலுணர்வாலும் கூறப்புகுந்து இறைவன் அனைத்துமாயிருப்பதை அறியாராய், மனம் தடுமாறி அவனை அடையும் உபாயம் அறியாமல் தவித்தனர் என்பார் 'இமையோர்கூட்டம் எண்ணந்தான் தடுமாறி எய்துமாறு அறியாத எந்தாய்' என்றார்.

தேவர்களுக்கு அறியப்படாத நீ அடியேனுக்கு எந்தையாய் எளிவந்து, நிறமும் மேனியும் திருவடியும் காட்டி உறுதியாக வீடுபேறு அளித்துக் காத்தாய் என்பார் 'உன்றன் வண்ணந் தான் அது காட்டி வடிவுகாட்டி மலர்க் கழல்கள் அவைகாட்டி, பிறவாமல் காத்து, திண்ணம் ஆட்கொண்டாய்' என்றார்.

ஐந்து தந்தையில், பிறவாமே ஞானோபதேசஞ்செய்தவனும் ஒருதந்தையாதலின் எந்தையே என்றார். வண்ணத்தான் அது காட்டி என்பதில் முன்னர் நூலறிவாக இருந்த வண்ணம் வடிவு கழல்களை, குருநாதனாக இருந்து காட்டியபோது நிறங்கள் ஓர் ஐந்துடைமையும் செம்பவளமேனியன் ஆதலும் ஆகிய இரண்டும் தன்னியல்பே என்பதை அறிவித்து, திருவடிகளை என் தலையில் சூட்டியகாலத்து அவற்றின் மென்மை அழகு முதலானவற்றைக்காட்டி ஆட்கொண்டதை அறிவித்தவாறு.

வழியற்றேனை - துணையாவார் பிறரின்றி நீயே ஆன என்னை. இதற்கு நெறியறியாது மயங்கிய அடியேனை என்று உரைப்பாரும் உளர். இறைவன் வண்ணமும் வடிவமும் காட்டியபிறகு நெறியறியாது மயங்குகின்றதன்மை அடியார்களுக்கு உண்டாகாது ஆதலான் துணையாவார் அற்றேனை என்றலே பொருந்துவதாம். இன்றும் உலகியலில் உறுதுணையற்றவரை வழியற்றவர் என்னும் மரபு உண்மை அறிக.

பிறவாமல் காத்து ஆட்கொள்கின்ற தன்மையால் திண்ணமும் திண்ணமின்மையும் இன்றாயினும் திண்ணந்தான் எனக் கூறியது தம் மனவுறுதியை வெளிப்படுத்திய அவ்வளவே.

இவ்வண்ணம் அனைத்தையும் காட்டி ஆட்கொண்ட திருவருளை என்ன சொல்லுவேன்; எப்படிச் சிந்திப்பேன் என்று

தம் மனமும் மொழியும் செயலற்ற தன்மையைத் தெரிவித்துக் கொள்கிறார்.

தேவர்கள் வண்ணமும், வடிவும், ஒருமையும், பன்மையும், நுண்மையும், அதனைக் கடந்த நிலையும் அறியாது மயங்க, தம் உணர்வினுக்கு அவை புலனாயின என்று கூறுவதால், சுட்டிறந்த தன்மையையும் மெய்ஞ்ஞானத்திற்கு வெளிப்பட்ட தன்மையையும் விளக்கலின் இது சுட்டறுத்தல் ஆயிற்று.

*30 சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்*
*கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி*
*வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்*
*மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார*
*வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை*
*மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்*
*தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்*
*தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. 26*

இ - ள்: கைம்மாறு வேண்டாத கருணையால், வலியவந்து அடியேனை ஆளாகக்கொண்டு என் மனத்துள் புகுந்த வித்தை யினையுடைய விரும்பத்தக்க அமுதப்பெருங்கடலே! மலையே! செந்தாமரைக்காட்டை ஒத்த திருமேனியையுடைய ஒப்பற்ற சுடரே! நாயை ஒத்த அடியேனது நினைவு எல்லாவற்றையும் உனக்கே ஆக்கி, என் இரண்டு கண்களையும் திருவடித்தாமரை களுக்கே உரிமையாக்கி, வணக்கத்தையும் அத்திருவடி மலர் களுக்கே செய்து, வாயை உன்னைப்பற்றிய மணிமொழி களுக்கே ஆக்கி, தன்னறிவும் நூலறிவுமாகிய இரண்டு மில்லாத அடியேனுக்கு ஐம்புலன்களும் நுகர உன்னைத் தந்தருளினாய்; நின்கருணையை என்னவென்று சொல்லுவேன் என்றவாறு.

என்னுடைய மனம் முதலிய அகக்கரணங்களையும், கண் முதலிய புறக்கரணங்களையும், வாய் கை முதலிய தொழிற்கர ணங்களையும் நினக்கே ஆக்கிக்கொண்டு ஐந்து புலன்களும் ஆனந்தப்பட அருள் வழங்கிய உனக்கு யான் செய்வது என்னே என்பதாம்.

வந்தனை: இது வந்தனையாய் என்று பொருள்படும் முற்றுத் திரிசொல்; முற்றெச்சம் எனலுமாம். இறைவனை வருவித்து ஆட்கொள்ளச் செய்தற்குரிய சுதந்திரம் உயிர்கட்கு என்றும்

இன்மையானும், ஆன்ம பரிபாகம்நோக்கி இறைவன் தானே வந்து அருள்செய்யும் கருணையாளனுதலானும் 'வந்தனை ஆட் கொண்டு' என்ருர்.

மால் - விருப்பம். கடல் பரந்தது, எல்லையற்றது. பாற் கடல் உவர்நீர்க்கடல் முதலியனபோல இறைவன் அமுதமே நிறைந்த கடலாகவுள்ளான் ஆதலின் அனைவரும் அதனை விரும்புதலின் 'மால் அமுதப் பெருங்கடலே' என்ருர். கடலிட முள்ள அலையுந்தன்மை இறைவனிடம் இல்லையே என்று எண் ணிய அடிகள் அடுத்து அசையாத 'மலையே' என்ருர். கடலும் மலையுமாகிய பருப்பொருள்கள் அணுவினும் சிறிய என் மனத் துட்புகுந்தது பெரிய விந்தையே என்பார் 'உள்ளே புகுந்த விச்சை மால் அமுதப் பெருங்கடலே' என்றனர். விச்சை - வித்தை என்பதன் திரிபு. வியத்தகுசெயல்களை வித்தையெனல் மரபு ஆகவே சிறிய மனத்துள் பெரிய கடலும் மலையுமாக உள்ள நீ புகுந்தாய் எனல் விச்சை என்றவாரும். மெய்ஞ் ஞானியர்க்கு அநுபவநிலையில் தேனுமின்னமுதமாய்த் தித்திக் கும் பெருமானுக இருத்தலின், சுட்டுணர்வாலேயும் பௌதிகக் கடலை நினைவுகூரச்செய்யாது மால் அமுதப் பெருங்கடலே என அநுபவத்தாலறியப்பெறும் கடலைக் கூறின சிறப்பு அறிக.

முகம், கண்கள், கைகள், திருவடிகள், திருவுந்தி எல்லாம் தாமரைமலர் போன்றன ஆதலானும், மேனிமுழுதும் பொது நோக்கில் நிறத்தால் செந்தாமரைக்காடு போலத் தோன்றுத லானும் 'செந்தாமரைக் காடனைய மேனி' என்ருர்.

பரத்தைப் பார்த்தவர்கள் பார்க்குமிடம் எங்கும் பரத்தையே பார்த்தலன்றிப் பதபதார்த்தங்கள் பாராராதலின், இறைவனைக் கடலே! மலையே! செந்தாமரைக்காடனைய மேனியாய்! என்று விளித்துக் காண்கின்றபோது முறையே நெய்தலும், குறிஞ்சி யும், மருதமும் அவற்றுள் நினைவுக்குவர அங்கெல்லாம் அன்பர் காட்சி சிவக்காட்சியேயாதலைத் தெளிவித்தவாரும். செந்தா மரைக்காடனைய என்பதில் செந்தாமரையைச் சிலர் வேருகவும் காட்டை வேருகவும் பிரித்து நானில நயங்காண்பர். செந்தா மரைக்காடு ஒரேதொடராக ஒருபொருளையே உணர்த்தினமை யின் அங்ஙனம் கொள்ளுதல் அமையாதென்க.

சிந்தையொடுபடாத காட்சியும், செயலும், பேச்சும் பயன் படாது என்பர். ஆதலின், முதற்கண் அதனை இறைவன் தன்வயப்படுத்திஞர் என்பார் 'நாயினேன்தன் சிந்தனை நின் றனக்கு ஆக்கி' என்ருர்.

கண், சென்றுபற்றும் கருவியாக அழகுள்ளவிடமெல்லாம் தூதாகச் சென்று, புலன்களைக் கொணர்ந்து, சிந்தைக்குக் கொடுத்து, அதனையும் தன்வயப்படுத்தும் கருவி ஆதலின் அதனை வயப்படுத்தும் வேலை அடுத்தது என்றுன்னிக் கண்ணிணையைக் கண்கவரும் வனப்பினதாகிய செம்மையும் மென்மையும் மணமும் என்றும்மாறாத திருவடித்தாமரைகளுக்கே உரியதாகச் செய்து என்பார் 'கண்ணிணை நின் திருப்பாதப்போதுக்கு ஆக்கி' என்றார். இவ்விரண்டும் வயமானபிறகு சொல்லும் செயலும் புறம்போக இடம் ஏது? அவை சிந்தை சென்ற வழியே செல்லும் ஆதலின் 'வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி, வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி' என்றார்.

வந்தனை - வழிபாடு. இது செயல். முன்னர் இறைவன் திருமேனி முழுதையும் தியானப் பொருளாகக்கொண்டு அமைந்த சிந்தை, தன் முதல்சார்தலாகிய வீடுபேற்றிற்குரிய மெய்ஞ் ஞானம் அருளும் திருவருள் வடிவானது திருவடியே என்று அறிந்தவுடன், அழகுநோக்கிச் சென்று தைத்துள்ள கண் சென்ற இடத்திற்கே தானும் சென்று அமையச்செய்யும் தொழிலாகிய வழிபாடு அனைத்தையும் அம்மலர்க்கே உரியதாக்கின. வாயாற்சொல்லும் புகழனைத்தும் இறைவனைப் பற்றியனவாக வந்தன என்பதாம்.

ஐம்புலன்களில் கண்ணும், கண்வழிச்சென்று பற்றிய தன் வடிவாகிய சிந்தையும், சிந்தைவழி இயங்கும் உரையும், மெய்யின் தொழிலாகிய செயலும் சிவனுடையனவாக; ஏனைய காது, மூக்கு, நாக்கு என்ற மூன்றும் கண்வழிச்சென்று மலரின் மணத்தையும், அதில் எழும் நாதச்சிலம்பின் ஓசையையும், ஆனந்தத் தேனையும் நுகர்ந்து அமைவனவாயின என்பார் 'ஐம்புலன்கள் ஆரத்தந்தனை' என்றார். வாக்கினால் குறிக்கப் பெற்றது நாவெனக்கோடலுமாம். மணிவார்த்தை இன்புறுத்தும் தேனாதலின் ஐம்புலன்களாரத்தந்தமைக்கு இயைபுடைத்தே என்க.

சுடர் ஒன்றனைப்பற்றியன்றி நில்லாது. விளக்குச் சுடர் திரியைப்பற்றி நிற்றலும், கதிர்ச்சுடர் சூரியன் சந்திரன் முதலிய கோள்களைப்பற்றி நிற்றலும் கண்கூடு. இறைவனாகிய சுடர் ஒன்றனையும் சாராது தனித்துநிற்றலின் 'தனிச்சுடரே' என்றார். இத்தகையதொரு சுடர், ஒன்றனையும்சாராத சுடர் 'உலகத்தில் யாண்டுமில்லாமை தெளிவு. உலகச்சுடர்கள் சுடுவன, இது தண்ணென இருக்கும் என்பார் 'தாமரைக்காடனைய மேனித் தனிச்சுடரே' என்றார்.

உயிர்களுக்கு இறைவன் தன்னைத் தந்தாலன்றி உயிர்கள் இறைவனை அனுபவிக்கும் சுதந்திரமும் ஞானமும் இல்லாதன ஆகலின் 'உன்னைத் தந்தனை' என்றார். போர்க்களத்தில் விசுவரூபங்காட்டிய முருகப்பெருமான், சூரபன்மன் அறிந்து உய்யத் தன்னொளியையும் உருவையும் அடக்கி அவன் கண்ணும் கருத்தும்கொள்ளக் காட்டித்தந்த உடனே அவன் அறிந்தான் என்ற கந்தபுராணவரலாறும் ஈண்டு எண்ணற்குரியது. அங்ஙனம் என்னறிவினளவாக உன்னைத் தந்தனை என்பார் 'தனிச்சுடரே உன்னைத் தந்தனை' என்றார்.

'இரண்டுமிலித் தனியனேற்கு' என்பது பலபொருள் காணப்பெற்ற ஒரு சொற்றொடர். அடிகளார் உலகியலை ஒட்டியே பெரிய ஞான அநுபவத்தை விளக்குபவர் ஆதலால் உலகியலில் ஆளப்படும் சொல்வழக்குகள் பலவற்றை ஆங்காங்கு எடுத்தாளுதலைக் காணலாம். அங்ஙனமே இங்கும் 'இரண்டுங்கெட்டான்' என்ற வழக்கை இரண்டுமிலி என்று ஆளுகிறார்கள். குழந்தை ஏதாவது குற்றஞ்செய்துவிடுமானால் கடிந்து தண்டிக்கவரும் தந்தையைநோக்கித் தாய்கூறுவாள். 'இரண்டுங்கெட்டான்; ஏதாவது நல்லது கெட்டது அதற்குத் தெரியுமா? கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள்' என்பாள். அதுபோல ஈண்டும் தனக்கு நன்மை பயப்பது இதுவென்பதும் தீமை பயப்பது இதுவென்பதும் அறியாத தனியனாகிய எனக்கு என்பதே அடிகள் கருத்தாதல் வேண்டும். இதற்கு, நல்வினை தீவினை இல்லாதவன் என்றும், இம்மை மறுமையில்லாதவன் என்றும், இன்பத்துன்பமில்லாதவன் என்றும், கல்வியறிவும் அநுபவ அறிவும் இல்லாதவன் என்றும் உரைப்பாரும் உளர். இவையனைத்தும், தமக்குறுதிபயப்பதாகிய நல்லதும், அது பயவாததாகிய கெட்டதும் ஆகிய இரண்டனுள் அடங்குதலான் உலகியலை ஒட்டிப் பெரும்பொருளின் அநுபவத்தை அறிவித்தார் என்று கொண்டு ஒழிக.

உயிர், தன்னைத் தனியனைச் சார்பற்றவனை உணர்ந்த அக்கணமே தனித்துணையாக வந்து இறைவன் ஆட்கொள்ளுதலின், பற்றற்ற என்னை என்பார் 'தனியன்' என்றார். தன்னைத் தனியனை உணர்தலும், இறைவனுடைய திருமேனிப்பொலிவு ஆட்கொண்ட பெருங்கருணை முதலியவற்றை உணர்தலும் உரைத்தலுமே திருவருட்பேற்றிற்கு உரிய சாதனங்களாதலின் சாதனமற்றவன் என்னும் உரை ஆராயத்தக்கது.

இங்ஙனம் உன்னை நீ தந்தமையால், ஐம்புலன்களாலும் ஆரநேர்ந்ததேயன்றி நீ மெய்யுணர்வானன்றிச் சுட்டுணர்வால்

அறியமுடியாதவன் என்பதனையே 'ஐம்புலன்களாரத் தந்தனை' என்பது வற்புறுத்துதலின் இது சுட்டறுத்தலாயிற்று.

31 தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே. 27

இ - ள்: கடவுளே! தனித்த யான் பிறவிப்பெருங்கடலில் விழுந்து, துன்பங்களாகிய அலைகளால் மொத்துண்டு, பற்றுக் கோடு ஒன்றுமில்லாமல் கொவ்வைக்கனியை ஒத்த சிவந்த வாயையுடைய பெண்கள் என்னும் புயல்காற்றால் கலங்கி, காமமாகிய பெரிய சுறுமீனின் வாயில் அகப்பட்டு, இனிமேல் பிழைக்கும்வழி என்னே என்று பலகால் நினைந்து, திருவைந் தெழுத்தாகிய தெப்பத்தைப் பற்றிக்கொண்டு கிடக்கின்ற என்னை முதலும் முடிவுமில்லாத வளப்பமான முத்திக்கரை யைக்காட்டி ஆட்கொண்டருளினை என்றவாறு.

பிறவிக்கடலில்பட்டு, துன்பத்திரை மோத மாதர் என்னும் புயற்காற்று வீசக் காமச் சுறுமீனின் வாயிலகப்பட்டு, பிழைக்கும் வழி அறியாது, திருவைந்தெழுத்தாகிய தெப்பத்தைப்பற்றிக் கிடக்கின்ற மூடனாகிய எனக்கு முத்திக்கரையைக் காட்டி ஆட் கொண்டாய் என்பது கருத்து.

தனியனேன் என்பது முதற்பாட்டினிறுதியில் கூறியதை அனுவதித்து நிற்றலின் துணையாவார் பிறரின்றி இரண்டுங் கெட்டானைத் தனித்த அடியேன் எனப் பொருள் கொள்க.

பிறவிப்பெரும்பௌவம் எனக் கூறவேண்டியதைப் பெரும் பிறவிப் பௌவம் என்றது கடலினும் பெரிது பிறவி என்பதை நினைவூட்டுதற்கு என்க. கடல் தன்னகப்பட்டார் ஒருவாறு தப்ப இடையிடையே தீவுகளையும் மலைகளையும் சூழக் கரைகளை யும் உடையது. பிறவிக்கு அவைதாமும் இல்லையாய் இடை யறாது தொடர்ந்து எல்லையும் நிலையும் காணமுடியாதிருத்த லின் இங்ஙனம் கூறினார். 'பிறவிப் பெருங்கடல்' என்பதற்குக் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருவது என்ற பரிமேலழகர் உரையும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

தடம் திரை - பெரிய அலை. கடலில் அலை ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்துகொண்டே இருப்பதுபோலத் துன்பமும் தொடர்ந்து வருதலின் துன்பத்தினைத் திரையாக உருவகித்தார். அலையெழுச்சி கரையிலிருந்து பார்ப்பவனுக்கு அழகாகத்தான் இருக்கும். அகப்பட்டுக்கொண்டவனுக்கோ மூச்சுத் திணறும். உடல் நோவும். அதுபோல் துன்பச்சூழலில் அகப்பட்டுக்கொண்ட எனக்கு உளமும் உடலும் நோமென்பார் 'திரையால் எற்றுண்டு' என்றார். அலை மோதுகிறபோது ஏதாவது ஒன்று பற்றிக் கரையேறுவதற்குக் கிடைக்காதா என்று சுற்றுமுற்றும் தேடுகின்றபோது ஒன்றும் கிடைக்காது போனது மட்டுமன்று; பெண்கள் என்கின்ற புயற்காற்று வேறு அடிக்கத் தொடங்கிவிட்டது. இதனை விளக்கும் பகுதி 'கனியை நேர் துவர்வாயார் என்னும் காலால் கலக்குண்டு' என்பது. காற்று எழும்புகிறபோது நமக்கு இனிமை பயப்ப தாக எழுந்து, விசைகொண்டு தாக்குகிறபோது புயலாக வருத்தும். அதுபோலப் பெண்கள் கொவ்வைப்பழம்போன்ற சிவந்த வாயோடு இனிமை பயப்பவர்கள்போற்றோன்றிப் பின் புயலாக மாறி, பேரின்ப வாழ்வையே சீர்குலைக்கின்றார்கள் ஆதலின் இவ்வண்ணம் உருவகிக்கப்பெற்றது.

புயலடிக்கின்றபோது கலங்கிப் பிழைக்கும்வழி தேடுகின்ற காலத்துச் சுறாமீனின் வாயில் சிக்கிக்கொண்டதுபோல, காமத்தில் சிக்கித் தப்பும்வழி இனி என்னே என்று ஆராய்ந்தபோது ஐந்து எழுத்தாகிய புணை கிடைத்தது என்பார், 'காம வான் சுறவின் வாய்ப்பட்டு இனி என்னே உய்யுமாறு என்று எண்ணி ஐந்து எழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை' என்றார். இவற்றுள் காமத்தை வான்சுறாவாக உருவகித்தமை காண்க. சுறாமீன் உயிரைப்போக்கி உடலைமட்டும் உண்ணும். காமம் உடலோடு உயிரையும் உண்ணும்; வருகின்ற பிறவிகளிலும் உயிரைத் துன்புறுத்தும் ஆதலால் காமத்தை வான்சுறவு என்றார். அலையால் மோதப்பட்டுக் காற்றுவீச, சுறாமீன்வாயில் அகப்பட்டதும் தவிக்கின்றபோது பாம்பின் வாய்த் தேரை பலப்பல எண்ணுவதைப்போல எண்ணினேன் என்பார் 'இனி உய்யுமாறு என்' என்றார்.

என்று என்று எண்ணி என்பது அச்சத்தால் பலகாலும் எண்ணி என்பதாம். சுறவின்வாய்ப்பட்டு என்பதால் முழுதும் விழுங்காமையும் ஒருவகையில் தப்பலாம் உபாயமின்மையும் பெற்றாம். அதனால் துணைதேடுகின்றபோது திருவைந்தெழுத் தாகிய புணை கிடைத்தது. அப்புணையைப் பிடித்ததும் திருவடி

நெடுங்கரைகாட்டி ஆட்கொள்ளவேண்டும் என்று வேண்டிக் கொள்கின்றார்.

முனைவன் - இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன். பேரின்பமாகிய முத்திக்குத் தோற்றமும் இறுதியும் இல்லை. வளமான இடம் என்பார் அதனை 'முதல் அந்தமில்லா மல்லல் கரை' என்றார். மூர்க்கன் - அறிவிக்கவும் தான் பிடித்ததை விடாத மூடன். மூர்க்கனுக்குக் கரைகாட்டிக் கிடக்கின்றேனை ஆட்கொண்டாய் என முடிக்க.

கிடக்கின்றேனை மூர்க்கனேற்கு - இன்று ஏற்றுக் கிடக்கின்றவனாகிய மூர்க்கனேற்கு என்று உரை கூறுவாரும் உளர். இப்பொருளில் கிடக்கின்றேனை என்பதில் ஐ சாரியை.

திருவடிப்பேறாகிய முத்தியின்பம் தோற்றக்கேடுகளில்லாத வளமான பேரின்பநிலை என்றதால் அதனை அவனருளே கண்ணாகக்காணின் காணலாம் அன்றிச் சுட்டறிவான் அறிய முடியாது என்பது உணர்த்தப்பெறுதலின் இது சுட்டறுத்தலாயிற்று.

32 கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
 கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
 நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
 கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
 எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. 28

இ-ள்: எவரானும் கேள்வி அளவையால் கேட்டு அறியப் படாதவனும், தனக்குக் கேடொன்றும் இல்லாதவனும், சுற்றமற்றவனும், செவி வாயாகக் கேளாமல் எல்லாவற்றையும் ஒருசேர ஒரேகாலத்தில் கேட்டவனும் ஆகிய சிவபெருமான் நாட்டிலுள்ள மக்களனைவரும் விழித்திருக்க இந்த உலகத்து நாய்க்குச் சிம்மாசனம் இட்டதுபோல நாயை ஒத்த அடியேனுக்கு இதுவரை காட்டாதன எல்லாவற்றையும் காட்டி, கேளாதன எல்லாவற்றையும் கேட்பித்து, தகுதியற்றவனாகிய என்னை மீண்டும் பிறவிக்கடலில் புகாமல் காத்து ஆட்கொண்டருளினான்; இதுவே எம்பெருமான் செய்த மாயா வித்தைகளாம் என்றவாறு.

இறைவன், உலக மக்கள் அனைவரும் விழிப்புடனிருக்க அடியேனுக்கு நாய்க்குச் சிம்மாசனம் இட்டதுபோல இதுவரை காட்டாதனவாகிய என்னையும் தன்னையும் இடையூறுகளையும் காட்டி, இதுவரை கேட்கப்படாதனவாகிய திருவைந்தெழுத்தையும் அதன் அருள்நிலைகளையும் உபதேசித்து, பிறவாப் பெருவாழ்வை அளித்தான்; இதுவே அவன் செய்த வித்தை என்பதாம்.

கேட்டல் - நூலளவைகளான் அறிதல். நூற்பிரமாணங்கள் கேள்வி என வழங்குதல் காண்க. ஏட்டுப் படிப்புக்களால் மட்டும் அறியப்படாதவன் இறைவன் என்பது. எத்துணைப் படிப்புடையவர்களாயினும் மெய்யுணர்வாகிய அனுபவஞானம் இல்வழி இறைவனை அறிய இயலாது ஆகலின் 'கேட்டாரும் அறியாதான்' என்றார். கேள்வி ஞானம் அனைத்தும் பாச ஞானமாதலையும் அது இறைவனைக்காண உதவாமையையும் "பாசமா ஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம் பரனை" எனச் சிவஞானசித்தி கூறுவதாலறிக.

கேள்விஞானத்தால் முற்றும் உணரப்படுபவை மாயையின் காரியமாய்ச் சுட்டியறியப்படும் அழியுந்தன்மையவான சடப் பொருள்களே ஆதலால், அங்ஙனம் அறியப்பெறாத சிவன் நித்தியன் என்பார் 'கேடொன்று இல்லான்' என்றார். ஒன்றும் என்ற உம்மை விகாரத்தாற்றொக்கது. ஒன்றும் சிறிதும் என்னும் பொருளது. கேடில்லான் என்னாது கேடொன்றும் இல்லான் என்றதனாற்போந்தது யாதெனின், இறை உயிர் கட்டு மூன்றும் கேடில்லாத அநாதி நித்தியப்பொருள்கள்; ஆகவே இறைவனை மட்டும் குறிப்பது என்னையோ என்ற ஐயம் உண்டாம். உயிர்கட்கும் கேடில்லையாயினும், எடுத்த உடம்போடு இயைந்து வாழ்ந்து உடல் அழிந்தவழி 'உயிர் போயிற்று' எனக் கேடு கேட்கப்படுதலானும், ஆணவமலச்சேர்க்கையால் உயிர்க்குணமாகிய அறிவு மறைதலாகிய கேடு உறுதலானும் உயிருக்குக் கேடுண்மை பெறுதும். கட்டோ ஆணவம் கன்மம் மாயை என முத்திறப்படுவதாய், ஆற்றலழிதலும், வினைவு கெடுதலும், காரியங்கெடுதலும் கேட்கப்படுதலின் அவையும் கெடுவனவாக வழங்கப்பெறும். அவ்வண்ணங்கூடக் கேடு ஒருவகையானும் இன்று என்பார் 'ஒன்றும் இல்லான்' என்றார் என்க.

கிளை - சுற்றம். இது உயிர்கட்கு வினைவயத்தவாய உடம்போடு கூடியவழி விளைவது. இறைவன் எடுக்கின்ற திருமேனிகள் அங்ஙனமன்றித் தானே கொள்ளப்படுவன ஆதலின், உடம்பைப்பற்றி வருவனவாய சுற்றங்களும் இல்லையாயினன்;

அனைவருக்கும் தாயாய் முலையைத் தருவானும், எந்தையாய் இன்பம் விளைவிப்பான்; அன்புடைய மாமனும் மாமியுமாவான்; 'எந்தையாய் எம்பிரான் மற்றி யாவர்க்கும் தந்தை தாய் தம்பிரான் தனக்கஃதில்லான்' என அடிகள் பின் கூறுதலும் காண்க.

கேளாதே எல்லாங்கேட்டான் - கேட்டல் முதலிய செயல்களை அவ்வப்பொறிகளால் செய்தே உயிர்கள் உணர்வை எய்துகின்றன. பொறிகள்வாயிலாக மனம்சென்று பற்றிலதாயின் உயிர்களுக்கு அறிவுவளர்ச்சி இல்லை. அங்ஙனமன்றி இறைவன் கேளாதே கேட்பான், காணாதே காண்பான், முகராதே முகர்வான் என்பார் கேளாதே கேட்டான் என்றார். அஃதெப்படி இயலும் எனின், இறையறிவு எல்லாவற்றையும் ஒருசேர இருந்தபடி இருந்தே அறிவுக்காட்சியால் அறியும் ஆற்றலுடையது. அதனால் எங்கும் வியாபியாய் இருக்கின்ற இறைவன் தமது தடையிலா ஞானத்தால் நேரே அறிகின்றான் என்பார் இங்ஙனம் கூறினார்.

நாட்டார்கள் விழித்திருப்ப - உலகத்தவர்கள் எமக்கு இப் பேறு கிடைத்திலதே? என்று கிடைக்குமோ என்று பெறாத முறையில் கண்ணை அகல விழித்துப் பார்த்துக்கொண்டே இருக்க. நாடு - ஞாலத்தின் சினையாதலின் அதன் பெயர் முதலாகிய உலகை உணர்த்திற்றாகக் கொள்க. பின்னர், 'ஞாலத்துள்ளே' என வருதலின் இங்ஙனம் உரைத்தாம். நாட்டார்கள் பரிபாகம்பெற்ற ஞானிகளாக இருந்தும் தமக்கு இவ்வளவு விரைவில் அடிகளார் எய்தியபேறு கிடைக்கவில்லையே எனச் சோர்வின்றி விழித்துக்கொண்டிருக்கின்றனர் என்பதாம்.

பிறப்பில் இழிந்தது நாய். உலகத்தில் அனைவரும் அறிய நாய்க்குத் தவிசிட்டு உயர்த்தியதுபோல எனத் தன்னையாட் கொண்டமைக்கு உவமித்தார். நாய்க்குத் தவிசு இடலாவது, நாய் இருக்க அரியணைபோன்ற உயர்ந்த இருக்கையிடுதல்; அன்றி யானைமேல் வைக்கும் அம்பாரி என்னும் தவிசினை நாய் மேல் வைத்தலுமாம். இவ்விரண்டுரையுள் 'நாய்க்குச் சிங்காசனம் கொடுத்தது போல' 'நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டில் வைத்தாற்போல' என வழங்கும் உலகியற்பழமொழிகளைக் கொண்டு நோக்கும்போது முன்னதே பொருந்துதல் காண்க.

தன்னியல்பும், தலைவனியல்பும், தடையியல்பும், தடையினீங்கித் தலைவனை அடைந்தின்பந்துய்க்கும் உபாயமும் ஆகிய இவைகள், பெத்தநிலையில் குருநாதன் உபதேசித்து இருந்து

காட்டுதற்கு முன்பு காணுதனவும் கேளாதனவும். அவற்றைக் காட்டிக் கேட்பித்து என்பார் 'காட்டாதனவெல்லாம் காட்டிப் பின்னும் கேளாதன எல்லாம் கேட்பித்து' என்ருர். இறைவன் காணுமாறு காட்டினலல்லது காண்டலும், கேட்பித்தாலல்லது கேட்டலும் உயிர்கள் செய்யா ஆதலின் காட்டி, கேட்பித்து எனப் பிறவினைவாய்பாட்டால் இறைவன் செயலாகக் கூறிக் கண்டு கேட்டு உயிர்கள் உய்ய உயர்த்திய பெருங்கருணையை விளக்கியவாறு.

இறைவன் திருக்கயிலையில் உமையம்மையாருக்குச் சிவாகமங்களை உபதேசிக்க, அவர்கள் அவற்றைக் கூர்ந்து கேளாது இருந்தாராக, இறைவன் வலைமகளாகப்பிறக்க எனச் சபித்தார் எனத் திருவிளையாடலில் கேட்கப்படுவதால், கேட்டல் உயிரே செய்யவேண்டிய கருமம் என்பார் 'கேளாதன' எனத் தன்வினையாகக் கூறி, கேட்டதால் விளைந்த பரிபாகத்தால் ஆசாரியன் காட்டுகின்றவற்றை உயிர்கள் அயராது காணும் என்ற துணிபால் 'காட்டாதன' என இறைவன் செயலாகக் கூறினர் என்ற நயமும் தெரிக. இதனுல் கேட்டற்குரிய தகுதியினும் காண்டற்குரிய தகுதி சிறந்ததாதல் காண்க. இது வாதவூரடிகளுக்கு இறைவன் குருநாதனுக எழுந்தருளிச் சிவஞானபோதப்பொருளைக் கேட்பித்து, திருவைந்தெழுத்தில் நிற்கும் முறையைக் காட்டி, சிவம் வெளிப்படுதலையும் காட்டி, அதில் திருவருள் மயமாக உயிர் ஒன்றி விளங்குதலையும் உணர்த்தினுரென்பதைப் பின்னரும் 'காட்டாதனவெல்லாம் காட்டிச் சிவம் காட்டித் தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி' என்று சிவானுபவம்வரை கூறுதல் காண்க. கேட்பித்தல் - உபதேசம். காட்டுதல் - அனுபவத்தில் நிற்கப்பண்ணுதல். கேட்ட பின்னரே தெளிதலும் நிட்டைகூடுதலாகிய அனுபவமும் விளைதலின் காரண காரிய முறைப்படி கேட்பித்தலை முன்னும் காட்டுதலைப் பின்னுமாகக் கூறினர் என்க.

கேட்பித்ததும், காட்டியதுமாகிய இந்த அருட்செயலாற் போந்த பயன் யான் மீண்டும் பிறவாமல் பேரின்பம் பெறுதற் பொருட்டேயாம் என்பார் 'மீட்டேயும் பிறவாமற் காத்து ஆட்கொண்டான்' என்ருர். இறைவன் நேரேசெய்யும் காத்தற்ருெழிலும் பதவிகளிலிருந்து தொழிலியற்றுவாரைக்கொண்டு இயற்றும் காத்தற்ருெழிலும் என இருவகைப்படும். பதவிகளிலிருப்பாராகிய திருமால் செய்யும் காத்தற்ருெழில் வினைப்போகங்களுக்குத்தக இறைவன் ஆணையின்வண்ணம் போகங்களை எஞ்சாது நுகரச்செய்தல். இறைவன் செய்யும் காத்தல்தொழில்

மலபரிபாகத்தின்பொருட்டு உயிர்கட்கு உடல் உலகு முதலியன உதவிக்காத்தலும், பரிபாகம் பெற்ற நிலையில் மீட்டிங்குவந்து வினைப்பிறவி சாராமே காத்தலுமென இருவகைப்படும். அவற்றுள் தம்மைக்காத்தது வினைப்பிறவி சாராமே காத்தது என்பார் 'பிறவாமற்காத்து ஆட்கொண்டான்' என்றார்.

இங்ஙனம் தம்மை ஆட்கொண்டது வியப்பிற்கு உரியது என்பார் 'எம்பெருமான் செய்திட்ட விச்சைதானே' என்றார். இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரத்திற்சாராது சார்வதுபோல் இறைவனும் காட்டாதனகாட்டி, கேளாதன கேட்பித்துத் தோன்றாமற் செய்தான் என்றார். விச்சை - வித்தை; ஞானமுமாம்.

இதனுள் இறையியல்பும், தடைநீக்கமும் நூலறிவாகிய சுட்டறிவுக்கப்பாற்பட்டதாய் மெய்யுணர்வாகிய அநுபவத்தால் அறியப்பெறும்நிலை அறிவித்தமையின் சுட்டறுத்தலாயிற்று.

33 *விச்சைதா னிதுவொப்ப துண்டோ கேட்கின்*
*மிகுகாத லடியார்தம் அடிய னாக்கி*
*அச்சந்தீர்த் தாட்கொண்டா னமுத மூறி*
*அகநெகவே புகுந்தாண்டான் அன்பு கூர*
*அச்சனாண் பெண்ணலியா காச மாகி*
*ஆரழலா யந்தமா யப்பா னின்ற*
*செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்*
*சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே.* 29

இ - ள்: தந்தையும் ஆணும் பெண்ணும் அலியும் ஆகாசமுமாகி நின்றும் நெருங்குதற்கு அரிய அழலாயும் முடிவிடமாயும் அதற்கு அப்பால் நிலைபெற்ற வெட்சிப்பூவை ஒத்த திருமேனியையுடைய எங்கள் சிவபெருமான் எம்பெருமான் தேவதேவன், மிக்க மெய்யன்பினையுடைய தன்னடியார்களுக்கு அடியவனாக என்னை ஆக்கி, வாசனாமலம் தாக்குமோ என்ற அச்சத்தையும் போக்கி, என்னை அடிமைகொண்டான்; என் நெஞ்சுள் அமுதம் ஊறி நெகிழும்படித் தானே வலிய வந்து ஆட்கொண்டான்; இவ்வண்ணம் அவன் அடியில் அன்புகூருவதற்காக அவன் செய்த மாயம் இதனை ஒப்பது வேறொன்று உண்டோ? இல்லை என்றவாறு.

உலக காரணன் ஆகியும், அவன் அவள் அது என்னும் மூவினைமையுடைய உலகத்துள் கலந்து நின்றும், கடந்து நின்றும் உருமேனி காட்டி அருள்புரிகின்ற சிவபெருமான்,

அடியேனை அடியார்க்கடியனுக்கியும் தனக்கு அடியனுக்கியும், என்னுள்ளத்து அமுதம் ஊற அகம் குழைய அச்சம் தீர்த்து ஆட்கொண்டான்; அவன்செய்த இவ்வித்தையைப் போன்றது ஒன்று உண்டோ என்பது கருத்து.

அச்சன் - தந்தை. குடநாட்டுவழக்கு, திசைச்சொல். தந்தையாகி என்றது இறைவனே உலகிற்கு நிமித்தகாரணனுகிய யுண்மை உணர்த்தியதாம். உலகம், அவன் அவள் அது என்னும் மூவினைமையின் 'ஆண் பெண் அலியாகி' என்றார். உலகம் இம்மூன்று பகுப்பையுடையது. அலி எந்தப்பாலுள்ளும் அடங்காதது ஆதலின் அதனைச் சிவஞானபோதம் அது என்று குறிப்பித்தது.

இவ்வண்ணம் உலகாயும் அதன் அவயவமாயும் இருக்கும் இறைவனது உண்மையுரு உரைப்பார் ஆகாசமாகி என்றார். ஆகாசம் என்றது அண்டத்துள் எல்லா அண்டங்களையும் தம்முள் அடக்கிநிற்கும் சிதாகாசமாகிய பராகாசத்தையும், பிண்டத்துள் இதயத்தாமரையுள் விளங்கும் சிதாகாசமாகிய தகராகாசத்தையும் குறிக்கும். பராகாசம் அவன் வியாபகத்தையும், தகராகாசம் அவன் ஆன்மாக்களின் அநுபவத்திற்கு உபகாரப்படும் நிலையையும் அறிவிப்பன. இவ்விரண்டுமாய் விளங்குபவன் இறைவன் என்பார் 'ஆகாசம் ஆகி' என்றார்.

அழல் - ஒளிப்பிழம்பு. பூதகாரியமான தீயன்று. இதுவும் அண்டத்துப் பேரொளியாயும் பிண்டத்துத் தகராகாசத்துள் விளங்கும் கட்டைவிரற்பருமனுள்ள அறிவொளியாயும் விளங்குகிறான் என்பது சிவாகமத்துணிவு. ஆதலின் சிவயோகியரும் சிவஞானியரும் அல்லாதாரால் அறிதற்கரிய ஒளியாகி என்பார் 'ஆரழலாய்' என்றார். புராண வரலாற்றைக்கொண்டு நெருங்குதற்கரிய அழலாய் எனினுமாம்.

பேரூழிக்காலத்து எல்லாம் தன்னிடம் முடிவடைய இறைவனொருவனே அவைகளின் முடிவிடமாய் விளங்குதலின் 'அந்தமாய்' என்றார். இடைப்பட்ட ஊழிகளை விளைவிக்கும் குணி உருத்திரர்களின் சிவம் வேறு என்பார் 'அப்பால் நின்ற' என்றார்.

அங்ஙனம், அரிய பெரிய பொருளாகவுள்ள பரசிவம் எமது கருமேனி கழிக்கக் குருவாகத் திருமேனி தாங்கி வந்து காட்சி வழங்கியதைத் திருவுளத்தெண்ணி, 'செச்சைமாமலர் புரையும் மேனி எங்கள் சிவபெருமான்' என்றருளிச்செய்தார்.

செச்சை - வெட்சி. வெட்சிப்பூ மிகச் செம்மையானது. அது போலச் சிவந்த திருமேனியை உடையவர் எனக்குறித்தவாறு. எங்கள் எனப் பலர்பால் வாய்பாட்டால் கூறியது குருவின் திருமேனிகண்ட மெய்யடியார்கள் பலரையும் தம்மகப்படுத்திக் கூறியதாம். அவனே எமக்குத் தலைவனாகவும், தேவர்கோ வாகவும், சிறப்பாகவும், பொதுவாகவும் நின்று அருள்செய் கின்றான் என்றவாறு.

அடியார்கள் இறைவனிடம் அன்பு பூண்டவர்கள். அவர் கள் அன்பு காதல் என்ற சொல்லால் அறிவிக்கப்பெறுகின்றது. 'மிகு காதல்' என வினைத்தொகையால் கூறியது. அக்காதல் ஒருகாலைக்கொருகால் எல்லையில்லாமல் மிகுந்துகொண்டே போதல்கருதி என்க. இறைவற்கு அடியானுதலைக் காட்டிலும் பேரின்பம் பயப்பது இறைவன் அடியார்க்கு அடியானுதல். மலவாசனை தாக்காதவாறும், வினைகள் மிகாதவாறும் எப் போதும் உடனிருந்து காப்பவர்கள் அடியார்கள் ஆதலால் அவர்கட்கு அடியானுதலால் உள்ளவினை கழியுமேயன்றி வினை ஏருது; வினை ஏருதொழியவே வரும் பிறவிக்கு அஞ்சவேண் டியதில்லையாம்; அதனுல் 'அச்சம் தீர்த்து ஆட்கொண்டான்' என்ருர்.

மனத்தைத் தாமரைமலராகக் கூறுவதும், தியானகாலத்தில் இதயத்தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் ஒளிப்பிழம்பாகச் சிவனைத் தியானிக்க என்னும் ஆகம வாக்கியமும் எண்ணத் தக்கன. தாமரைமலரில் தேனூறுவதுபோல இதயத்தாமரை கவிழ்ந்து நெகிழ்ந்தபோது அமுதம் ஊறும்வண்ணம் உள்ளத் தில் புகுந்து ஆட்கொண்டான் என்பதாம். கதிரவன் எழ, அவன் கதிர்கள் தாக்கத் தாமரை மலர்தலும், தேனூறுதலும் ஒருங்கு நிகழ்வதுபோல, இறைவன் உள்ளத்தில் புகுதலும், மனமலர் மலர்தலும், அமுதூறலும் ஒருங்கு நிகழ்ந்தமையை 'அமுதமூறி அகநெகவே அன்புகூரப் புகுந்தாண்டான்' என்ற தால் உணர்த்தியவாறு காண்க. சிவபத்தியில் ஈடுபடாமை யால் மனத்தைச் சில இடங்களில் கல்லாக இரும்பாக உருவகித் தமை எண்ணி, இரும்பும் கல்லும் உருகினல் இரும்பும் கல்லும் ஆமேயன்றி அமுதூற உருகாது எனத் தர்க்கித்து, இறைவன் புகுந்தமையால் தன் தன்மை மாறி, அமுதமயமாக ஊறிற்று என்பாரும் உளர். அதற்கு 'ஊறி' 'நெக' என்னும் சொற்கள் இடந்தராமையும் காண்க. ஏனைய முன்னர் விளக்கப்பெற்றன.

சிவபெருமான் குருநாதனுக எழுந்தருளிவந்தாலும், என் அகத்தே புகுந்து ஆண்ட விச்சைமுதலியன யாவும் அவனது

சிறப்பியல்பாகிய ஞானமேயான நிலையை உணர்த்துதலின் இது சுட்டறுத்தலாயிற்று.

34 தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. 30

திருச்சிற்றம்பலம்

இ-ள்: தேவர்களாலும், இந்திரனாலும் அறியப்படாத தேவதேவனும், செழுமையான உலகங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து அழிக்கும் பிரமன் திருமால் உருத்திரன் என்ற மூவர்க்கும் தலைவனாய் நிலைபெற்ற முதற்பொருளும், அம்மூவர் வடிவும் தன் மேனியில் கொண்டவனும், அவர் கட்கு மூதாதையும், உமாதேவியாரை வைத்து ஆளும் இடப் பாகத்தினையுடைய தந்தையும், யாவர்க்கும் தலைவனும் ஆக உள்ள சிவபெருமான் அடியேனையும் வலியவந்து ஆண்டு கொண்டான்; அதனால் நாம் பிறர் எவர்க்கும் அடிமையல் லோம்; எவர்க்கும் அஞ்சோம்; அவனுடைய அடியார்களுக்கு அடியாரோடு பொருந்தினோம்; ஆதலால் மேலும் மேலும் ஆனந்த வெள்ளத்துள் குடைந்து மூழ்கிக் கூத்தாடுவோம் என்றவாறு.

இந்திரனால் அறியப்படாதவனும் உலகங்களைப் படைத்தும் காத்தும் அழித்தும் தொழில்புரிகின்ற பிரமன், திருமால், உருத் திரன் என்கின்ற மூவர்களையும் தொழிற்படுத்துகின்றவனும் அவர்கள் அனைவரையும் தன் வடிவில் கொண்டவனுமாகிய உமையொரு பாகத்து எந்தை அடியேனை வலியவந்து ஆட் கொண்டான்; அதனால் நாம் யாருக்கும் அடிமையல்லோம்; எதற்கும் அஞ்சோம்; அடியார்க்கு அடியார்களோடு கூடினோம்; சிவானந்த வெள்ளத்துத் திளைத்து மேலும் மேலும் ஆடுவோம் என்பது கருத்து.

பசுபுண்ணியச் சிறப்பால் பதவிபெற்று அப்புண்ணியப் பயன் உலர்கிறவரையில் பொன்னுலக வாழ்வைப் பொருந்தும் தேவர்களும், நூறு அசுவமேதமாகிய வேள்வியைச் செய்து

பதவி பெற்ற இந்திரனும் தம் புண்ணியப் பயனாலேயே இறைவனை அறியலாம் என்று இறுமாந்திருந்தனராக, அவர்களின் பசுபோத முனைப்பிற்கு அப்பாற்பட்டு இறைவன் எழுந்தருளியிருக்கின்ற சீர்மையைத் 'தேவர்கோ அறியாத தேவதேவன்' என்ற பகுதியால் விளக்குகிறார்கள்.

படைத்தலாதி முத்தொழில்களையும் செய்யும் மூவர், பிரமா விஷ்ணு ருத்திரன் என்பர். அவர்கள் அத்தொழிலைத் திறம்பட நடத்தவும், அவர்களுக்கும் அவர்கள் நடத்தும் தொழில்களுக்கும் இடையீடு வந்துழிக் காக்கவும், தொழிலாற்றும் திறத்தால் அவர்கள் செருக்கிக் குற்றம் புரிந்தவழி ஒறுத்துத் திருத்தவும் தலைவனாக விளங்குகிறான் என்பர் 'மூவர்கோனாய் நின்ற மூர்த்தி' என்றார்.

மூதாதை - தாதைக்கு மூத்த தாதை: பேரூழிக்காலத்து உரிய இடத்து ஒடுங்கிய பிரமன் முதலிய அதிகாரங்களிலிருப்பார்கள் அனைவரையும் புனருற்பவகாலத்துப் படைத்தலின் 'மூதாதை' என்றும், புனருற்பவத்தைப் பெருமான் திருவுள்ளம் பற்றியகாலத்து, சத்தியைத் தன்னின்வேறாகப் பிரியச்செய்து சத்தியும் சிவமுமாக நின்று ஐந்தொழிலாற்றுதலின் 'மாதாளும் பாகத்து எந்தை' என்றும் அருளினார்.

அனைவர்க்கும் தலைவனாகிய சிவன் என்றது இறைவனது அளவிலாற்றலை வியந்து கூறியது. அங்ஙனம் யாவர்க்கும் தலைவனாகிய சிவன், ஆயிரங்கோடியருள் ஒருவனாகிய என்னையும் ஒருபொருளாக எண்ணி வந்து ஆளாகக்கொண்டான்; இத்தகைய பேறுபெற்றமையால் யாம் ஆர்க்கும் குடியல்லோம்; யாதும் அஞ்சோம்; அவன் அடியாரடியாரோடும் மேவினோம் என்று ஆனந்தானுபவத்தின் சிறப்பையும் களிப்பையும் எடுத்துக்காட்டுகிறார். இது அணைந்தோர்தன்மை.

" நாமார்க்கும் குடியல்லோம் " என்ற அப்பர் திருத்தாண்டகத்தையும்,

" எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே "

என்னும் சித்தியார் திருவிருத்தத்தையும் இப்பகுதியோடு ஒப்பு நோக்குதல் தகும்.

இவ்வண்ணம், அனைந்தோர் தன்மையாக இத்திருப்பாடலில் காணப்பெறும் முதல்வனியல்புகள் சுட்டறிவிற்கு எட்டாதனவாக விளங்குதலும், அம்முதல்வனையடைந்த அடியவர் தம் நிலையாக யாமார்க்கும் குடியல்லோம்; யாதும் அஞ்சோம்; அடியாரடியாரோடு மேவினோம்; ஆடுவோம் என்றுகூறும் அநுபவங்களும் சுட்டிறந்தனவாக இருத்தலின் இது சுட்டறுத்தலாயிற்று.

## ச. ஆத்துமசுத்தி

ஆத்துமசுத்தி - உயிரின் தூய்மை. உயிரின்தூய்மை எனவே உயிர் தூய்மையற்றிருந்த நிலையும் ஒன்றிருந்தது என்பதறியப் படும். அந்நிலை, உயிர் யான் எனது என்னும் அகப்பற்று புறப் பற்றுக்களுக்கு ஏதுவாகிய அவிச்சையால் தொடக்குண்டிருக்கும் போது தூய்மையற்றிருக்கும். அந்நிலையினை ஆசாரியன்துணைக் கொண்டு இடைவிடாத இறைபணி, அடியார் நேசம், மெய்யுணர்வு இவற்ருல் போக்கிக்கொண்டபோது மாசகழுவிய மணிபோல உயிர் தூய்மையுறும். இதுவே ஆத்துமசுத்தியெனப்படுவது.

அடிகள், முதல் ஐந்து பாடல்களால் மனத்தை முன்னிலைப் படுத்தி, ஏனைய கரணங்கள் தவறிழைத்தற்கும் இதனையே காரண மாகக் கொண்டு கடிந்துரையாகத் தூய்மைக்குரிய பணிகளையும், பின்னுள்ள ஐந்து பாடல்களால் பாசச்சேர்க்கையால் இறைத் தொடர்பிற்கு நெகிழ்ச்சியுண்டாக அதனுல் விளைந்த ஆற்ருமை யினையும் அறிவிக்கின்ருர்கள்.

திருவடியைப் பழவினைத்தொடர்பால் மறந்தலைத்து, இரங்கி, மறவாவண்ணம் நெஞ்சுக்கு அறிவிப்பதாகிய, மறக்கும் மறதியைத் தரிசிப்பிக்கும் சிவசத்தியின் அநுபூதி என்று பழையவுரை கூறும்.

### அறுசீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

35 ஆடு கின் றிலை கூத்துடை யான்கழற்
கன்பிலை வென்புருகிப்
பாடு கின் றிலை பதைப்பதுஞ் செய்கிலை
பணிகிலை பாதமலர்
சூடு கின் றிலை சூட்டுகின் றதுமிலை
துணையிலி பிணநெஞ்சே
தேடு கின் றிலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே. 31

இ - ள் : பிணத்தைப்போல அறிவற்றுக்கிடக்கும் நெஞ்சமே! ஆனந்தக்கூத்தன் திருவடிகளுக்கு அன்புசெய்கின்றிலை; ஆடுகின்றிலை; மனமுருகிப் பாடுகின்றிலை; துடிக்கின்றிலை; வணங்குகின்றாயில்லை; இறைவன் திருவடிமலரைத் தலையில் சூடுகின்றாயில்லை; அவன் பாதத்தின்கண் அன்றலர்ந்த மலர்களைச் சூட்டுகின்றாயுமில்லை; அவனை யாண்டுள்ளான் யாண்டுள்ளான் என்று தேடுகின்றாயுமில்லை; தெருக்கள்தோறும் திரிந்து அலறுகின்றாயுமில்லை; அதனால் நீ உற்றதுணை யற்றவனாயினாய்; இந்நிலையில் யான் செய்வதொன்றுமறியேன் ஆயினேன் என்றவாறு.

கடமையிலிருந்து தவறியதால் நெஞ்சமே நீ துணையற்றவனாயினை; இந்நிலையில் உன்னையுடைய யான் செய்வதறிகின்றிலேன் என்பது கருத்து.

நெஞ்சு இடைவிடாது இயங்கிக்கொண்டே இருப்பது. அதன் இயக்கமே உடல் அசைவுக்குக் காரணமாகிறது. அத்தகைய நெஞ்சு இறைபணிக்குத் துணையாக இயங்காமல் அசைவற்றுப் பிணம்போல் கிடத்தலின் 'பிண நெஞ்சே' என்றார்.

இறைவனுடைய திருக்கூத்து ஐந்தொழிலையும் ஒருசேர இயற்றுவதாகலின் இறைவன் கூத்துடையானென்று போற்றப்படுகின்றார். அக்கூத்தின் சிறப்பைத் "தோற்றம் துடியதனில்" என்னும் உண்மைவிளக்கச்செய்யுள் உணர்த்தும். அத்தகைய கூத்தப்பெருமானது தூக்கிய திருவடியிலேயே உயிர்கள் பேரின்பத்தைப் பெறுவன ஆதலால் அவ்வடிக்கண் அன்பு கொள்ளும் கடப்பாடுடையன; அங்ஙனம் ஆகவும் நீ அன்பு கொண்டிலை என்று நெஞ்சினைக் கடிந்து உரைப்பார் 'கூத்துடையான் கழற்கு அன்பிலை' என்றார்.

அன்பு மிகுந்தபோது திருமேனிதன்னில் அசைவுண்டாம். தன்னை மறந்து ஆனந்த எக்களிப்பால் ஆடவும் தோன்றும். அந்த இருவகை ஆட்டத்திற்கும் துணையாக இருந்திலை என நெஞ்சிற்கு அறிவுறுப்பார் 'ஆடுகின்றிலை பாடுகின்றிலை' என்றார்.

கவிதைப் பொருளுணர்ச்சி உள்ளத்தை உருக்கி, உடலையும் உருக்கி, உயிரையும் உருக்குவது. கவிதை தன்னால் மிக அன்பு செய்யப்பட்ட பொருளைக் குறிக்குமாயின் அதன் விளைவைப்பற்றிச் சொல்லவேவேண்டாம். அங்ஙனமாகவும் நீ இறைவனைப்பற்றிய பாடல்களை என்புருகிப் பாடுகின்றிலையே என்றார்.

இறைவனை, இறைவன் அடியார்களை, இறைவன் திருமேனியை, அவன் இருக்குமிடங்களைக் கண்டபோதும் அவன் திருவடிப்பேற்றை எப்போது பெறுவோம் என்று விரைவு உண்டானபோதும் உள்ளப் பதைப்பு உண்டாம்; அதுவும் செய்கிலை என்பார் 'பதைப்பதும் செய்கிலை' என்றார்.

இறைவன் உயர்வும் தன்தாழ்வும் அவனது இன்றியமையாமையும் அறிந்தபொழுது தானாகவே முனைப்பு அடங்கிப் பணிவு தோன்றும்; அதுவும் செய்திலை என்பார் 'பணிகிலை' என்றார்.

இறைவனே வந்து உன் அகத்தில் திருவடிமலரைச் சூட்டவும் அதன் அருமை அறிந்து சூடிக்கொள்ளாது அயர்ந்தனை என்பார் 'பாதமலர் சூடுகின்றிலை' என்றார்.

நீ சூடாவிட்டாலும் கைகளை இயக்கிப் பூமாலை புனைந்து ஏத்தச் செய்யலாமே; அதுவும் செய்கிலை என்பார் 'சூட்டுகின்றதும் இலை' என்றார்.

காதன்மை மிக்க பொருள் கைநழுவுமானால் தேடுவதும் தெருவுதோறும் அலறுவதும் உலகவர் செயலாயிருக்க உன் காதன்மைக்கு உரியதாயும் உபகரிப்பதாயும் இருக்கின்ற சிவபரம்பொருளைத் தேடி, தெருக்கள்தோறும் அலறிக்கொண்டு சென்றாய் இல்லை என்பதைத் 'தேடுகின்றிலை தெருவுதோறு அலறிலை' என்பதால் தெரிவிக்கின்றார்.

இங்ஙனம் கடமை தவறியதால் நீ துணையிலி ஆயினை; ஆதலால் உன்னைத் துணையாகப்பெற்ற நான் செய்வது இன்னது என்று அறியாமல் தவிக்கிறேன் என்பார் 'செய்வது ஒன்று அறியேன்' என்றார்.

இவ்வண்ணம் செய்யத்தவறிய காரியங்களுள் ஏதாவது ஒன்றைச் செய்தாலும் இறைவனைக்கண்டு பேரின்பம் பெற்றிருக்கலாமே என்று இரங்கிக் கூறியவாறு.

ஆடுதல் முதலிய தொழில்களை நெஞ்சு செய்யாதாயினும் நெஞ்சே ஆடுகின்றிலை அலறிலை என்று இடித்துரைத்தது, உயிரோடு கூடிய உடல் அத்தொழில்களைச் செய்ய அடிப்படையான எழுச்சியைத் தந்ததின்று என்ற அளவே கொள்க.

இறைவனிடம் அன்புபூண்டு ஆடுதல் பாடுதல் முதலாயின, உயிர் உலக இன்பத்தில் சென்று பற்றாது தடுக்கும் தூய்மை உறுத்துதல் ஆதலின் இப்பாடல் ஆத்துமசுத்தியாயிற்று.

36 *அறிவி லாத எனைப்புகுந் தாண்டுகொண்*
*டறிவதை யருளிமேல்*
*நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப்*
*பந்தனை யறுப்பானைப்*
*பிறிவி லாதவின் னருள்கள்பெற் றிருந்துமா*
*றாடுதி பிணநெஞ்சே*
*கிறியெ லாமிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத்*
*தாயென்னைக் கெடுமாறே.* 32

இ - ள்: பிணநெஞ்சே! அறிவற்ற அடியேனை வலியவந்து ஆட்கொண்டு உண்மைஞானத்தை உதவி மேலாகிய வீட்டிற்குரிய வழிகள் எல்லாவற்றையும் ஞானமயமாகச் செய்த எம் தந்தையும் பாசங்களை அறுப்பவனும் ஆகிய சிவபெருமானை என்றும் பிரியாத இனிய அருளைப் பெற்றிருந்தும், நீ மாறுபடுகின்றாய்; பொய்மை ஓங்க என்னைக் கீழ்ப்படுத்தினாய்; கெட்டொழியுமாறு கெடுத்துவிட்டாய் என்றவாறு.

பெறுதற்கரிய திருவருளைப் பெற்றிருந்தும் நீ மாறுபடுகிறாய்; அதனால் என்னை அடியோடு கெடுத்துவிட்டாய் என்பது கருத்து. கிறி - பொய்.

முன்னைய திருப்பாட்டில் பிணநெஞ்சே என்றது போல இப்பாட்டிலும் நெஞ்சை விளிக்கிறார். அங்கு, செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாது செயலற்று இருந்தமையால் பிணநெஞ்சே என்றவர், இங்கு ஏறுமாறாக நடத்தலால் பிணநெஞ்சே என்கின்றார். அதனை இரங்கிக் கூறியதாகவும் இதனை வசைமொழியாகவும் கொள்க. அன்றி, பிணநெஞ்சே பிணநெஞ்சே என இருமுறை ஓதியதாகக்கொண்டு, பிணநெஞ்சே! இப்படி மாறாடுதலால் நீ ஒரு பிண நெஞ்சா என வியந்து இரங்கிக் கூறியதாக உரைப்பாரும் உளர். தொல்காப்பியத்துச் சொல்லதிகாரத்து ஐந்தாம் வேற்றுமைச் சூத்திரத்தில் சேனாவரையர் இதனின் இற்று இது என்பதனை இருமுறை கூறி இருபொருள் கொள்ளவைத்தாற்போல.

முதல்வன் அடிமையைத் தேடுங்கால் அறிவும் அடக்கமும் உடையவனாகவே தேடுதல் அறிவியல். என்னை ஆட்கொள்ளுபவன் இறைவன். அவன் விரும்புவது அனுபவமாகிய மெய்ஞ்ஞானம். அது என்னிடம் இல்லை என்பதை நான் அவனைப் பாடியும் பரவியும் ஆடியும் அணுகாத ஒன்றினாலே இவன் அறிவிலி என்று உணர்ந்துகொண்டான். என்மீது கருணைகொண்டு என்னுயிர்க்குயிராகப் புகுந்தான்; ஆட்கொண்டான்

என்பதை 'அறிவிலாத எனைப்புகுந்து ஆண்டுகொண்டு' என்ற பகுதியால் உணர்த்துகிறார்.

அவ்வண்ணம் ஆண்டுகொண்ட இறைவன் அறிவில்லாத இவனை எப்படி ஆண்டான் என்று பேசிக்கொள்கின்ற உலகவர் உரைக்கும் என் அறியாமையாகிய இழிவுக்கும் இரங்கி எனக்கு ஞானத்தை நல்கினான் என்பார் 'அறிவதை அருளி' என்றார். அதனோடமையாது அறிவாகிய கருவியைக்கொண்டு வீட்டின்பத்தை அடைதற்கு உரிய நெறிகளையும் விளங்கச் செய்தான் என்பார் 'மேல் நெறியெலாம் புலம் ஆக்கிய' என்றார். அறிவற்ற மகனை அறிவு கொளுத்திப் பிழைக்கும் வழியையும் காட்டித் தந்த தந்தையைப்போல இறைவனும் உபகரித்தான் ஆதலின் 'எந்தை' என்றார்.

முற்கூறியவாறு இறைவன் உபகாரத்தை நன்கு அறிந்திருந்தும் அவரை நணுகிப் பயனடையாதவாறு என்னுடைய மல மாயை கன்மங்களாகிய கட்டுக்கள் தடையாயிருத்தலை அறிந்து இறைவன் அவற்றை நீக்கினான் என்பார் 'பந்தனை அறுப்பானை' என்றார்.

அவனை என்றும் பிரியாத இனிய அருளைப்பெற்றிருந்தும் நீ ஒத்துப்போகவில்லை என்பார் 'பிறிவிலாத இன்னருள்கள் பெற்றிருந்தும் மாறுடுதி' என்றார்.

இப்படி நீ ஏறுமாறாக நடத்தலால், இறைவன் அருளைச் சார்ந்தமையால் அடங்கியிருக்க வேண்டிய வஞ்சகம், பொய், காமம் முதலிய தீயகுணங்கள் தலைதூக்கி ஆடுகின்றன; திருவருளில் தோய்ந்து உயரவேண்டிய என்னைக் கெடுகின்ற வழிகள் எல்லாவற்றையும் உண்டாக்கிக் கெடுத்துவிட்டாய்; இதுவே பயன் என்று இரங்குவார் 'கிறியெலாம் மிக என்னைக் கெடுமாறு கெடுத்தாய் கீழ்ப்படுத்தாய்' என்றார்.

இறையருளுக்குத் துணைபுரியாத நெஞ்சத்தை வெறுத்து இறையருளைச் சார்ந்த தன் உயிரின் தூய்மையை வெளிப்படுத்துதலின் இச்செய்யுள் ஆத்துமசுத்தியாயிற்று.

37 மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம்
மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றில மினியுனைச் சிக்கெனச்
சிவனவன் திரடோண்மேல்

நீறு நின்றது கண்டனை யாயினும்
நெக்கிலை யிக்காயம்
கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது
கேட்கவுங் கில்லேனே. 33

இ - ள்: அறிவிலியாகிய எமது நெஞ்சமே! என்னோடு மாறுபட்டுநின்று யான் கெடுமாறு என்பால் நீ கிடக்கின்றாய்; அத்தகைய உன்னை இனி யாம் உறுதியாகத் தெளியமாட்டோம்; சிவபெருமானுடைய திரண்ட தோள்களின்மேல் திருநீறு நிலைபெற்று விளங்குதலைக்கண்டாய்; ஆயினும் நெக்கு உருகுகின்றாய் இல்லை; இவ்வுடலைப் பிளவுபடச் செய்கின்றாயுமில்லை; உன் தன்மை எனக்குக் கேடு விளைவிப்பதே ஆகும்; இதனைக் கேட்கவும் ஆற்றேன் என்றவாறு.

மடநெஞ்சே! உன்னை நம்பமாட்டேன்; கெடுவதுன்தன்மை; நீ சொல்வதொன்றையும் நான் கேட்கவும் மாட்டேன் என்பது கருத்து.

மனம் தமக்குரிய ஏவலால் தமக்குறுதிதரும் செயல்களில் துணைநின்று முடிக்கவேண்டியிருக்க அங்ஙனமில்லாமையால் சினம்தோன்றி 'எம்மதியிலி மடநெஞ்சே' எனத் தமது சிறப்பும் தம் தலைமையும் நெஞ்சின் அறியாமையும் தோன்ற விளித்தார். உலகியலில் ஒருவன் வைவதைக்கேட்ட ஒருவர் நம்மையா இப்படிச் சொன்னான் என்பதுபோலப் பன்மையால் கூறியது. எம் என்பதனை அடியாரையும் தம்வயப்படுத்திக் கூறியதாக உரைப்பாரும் உளர்.

மதி - இயற்கை அறிவு. மடம் - கொளுத்தக்கொண்டும் கொண்டது விடாத பேதைமை. மதியில்லாமையும் மடமையும் ஒன்று அன்று. தான் தேருமை மதியின்மை. ஏவவும் செய்யாமை மடமை. எம்மதியிலி மடநெஞ்சே என்றது தனக்கும் தெரியாமல் சொல்லியும் கேட்காத நெஞ்சமே என்பது கருத்து.

எனக்குத் துணையாகக் கிடைத்த நெஞ்சே! நீ துணைசெய்யாமையேயன்றி உட்பகையாக இருந்து மாறும் செய்கின்றாய் என இரங்குவார் 'எனை மாறி நின்று' என்றார். அங்ஙனம் நீ மாறுபடுவது உன்னை உடையானாகிய யான் கெடுவதற்குக் காரணமாயிற்றென்பார் 'கெடக்கிடந்தனையை' என்றார். கிடந்தனையை என்பது கிடந்த அனையை என்பதன் விகாரம்; இது முன்னிலையொருமை வினைமுற்று; இதனை வினையாலணையும் பெயராக்கிக் கிடந்தவனாகிய உன்னைத் தேறுகின்றிலம் என்பதனோடு முடிப்பாரும் உளர்.

இங்ஙனம் உடன்பிறந்தே கொல்லும் வியாதிபோல என்னுடன் தோன்றி வளர்ந்து எனக்கே ஊறுசெய்யும் உன்னை உறுதியாக நம்பமாட்டேன் என்பார் 'உனை இனிச் சிக்கெனத் தேறுகின்றிலம்' என்றார். இறைவன் ஆட்கொள்ள உருவாக எழுந்தருளியபோது அவன் தோள்மேல் ஏந்திய திருநீற்றின் ஒளியைக் கண்டாவது நெகிழ்ந்தாய் இல்லையே; நீறு பந்தம் அறுப்பது ஆதலின் அதனைக்கண்டு உன்னுடைய அறியாமையைப்போக்கிக்கொண்டிலையே என அதன் நிலைக்கு இரங்குவார் 'சிவனவன் திரள்தோள்மேல் நீறு நின்றது கண்டனை ஆயினும் நெக்கிலை' என்றார்.

அம்மட்டோ! நீ இருப்பதற்கு இடமாகிய இக்காயத்தை யாவது கீறி அழித்திருக்கவேண்டுமே; அதுவும் செய்கிலை என்பார் 'இக்காயம் கீறுகின்றிலை' என்றார்.

நீ செய்யும் இத்தனை கேடுகளை எண்ணிப்பார்க்கும்போது கெட்டு அழிவதுதான் உன் தன்மை என்பதனைக் 'கெடுவது உன் பரிசு' என்பதால் விளக்குகிறார்.

நான் உன் தலைவனாயிருந்தும் நீ என் உடைமையாயிருந்தும் இவ்வண்ணம் கெடுவதால் கேட்கவும்மாட்டேன் என்பார் 'இது கேட்கவும் கில்லேனே' என்றார். இதற்கு உன் செயலைக் காணவே சகியாது என்றுகுறிப்பிப்பார் 'கேட்கவும்கில்லேன்' என்றார் எனலும் ஆம்.

தீநெறியில் செல்லும் மனத்தை ஒறுத்துத் திருத்துதலின் இது ஆத்துமசுத்தியாயிற்று.

38 கிற்ற வாமன மேகெடு வாயுடை
யானடி நாயேனை
விற்றெ லாமிக வாள்வதற் குரியவன்
விரைமலர்த் திருப்பாதம்
முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ
யுண்டன வெல்லாமுன்
அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையும்
அளவறுக் கில்லேனே. 34

இ-ள்: மனமே இயங்கும் பொருள், நிலையான பொருள் எல்லாவற்றையும் தனக்கு உடைமையாகவும் அடிமையாகவும் கொண்டவனும், அடிமையாகிய நாய்போன்ற என்னை விற்று எனக்கு எல்லா நன்மைகளும் மிகுமாறு ஆள்வதற்கு

உரியவனுமாகிய பெருமானது மணம்பொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிகளாகிய முற்றுத இளந்தளிர்களைப் பிரிந்திருந்து முன் நீ நுகர்ந்தன யாவும் இழந்தபடியையும் அதற்குக் காரணமாகிய நின் அறிவையும் பெருமையையும் அளவிட்டுரைக்கும் ஆற்றலுடையேன் அல்லேன்; நீ செய்தது என்னை? கெடுவாயாக என்றவாறு.

மனமே! இறைவன் திருவடித்தாமரையைப் பிரிந்த பின்பு உன்னால் அநுபவிக்கப்பட்டன யாவும் அழிந்துபோனதையும் அதனை அறியும் உன் அறிவையும் பெருமையையும் அளவிட்டு உரைக்க என்னால் முடியாது; நீ எக்கேடாவது கெட்டுப்போ என்பது கருத்து.

குற்றம் காரணமாக வசை மொழிவார், முதலில் சாபம் கொடுப்பதுபோல நாசமாய்ப்போக என வைது, பின் அவன் தீமைகளைச் சொல்லித் திருத்தமுயலுதல் வழக்கு. அதுபோல 'மனமே கெடுவாய்' என்று முதலில் வசைமொழியால் இடித்துரைக்கின்றார்.

அறிவற்ற பொருள்கள் ஒருவற்கு உடைமையாகத்தக்கன. அடிமை ஆளத்தக்கது. உடைமையை விற்கலாம்; ஒற்றிவைக்கலாம். அடிமையை ஆளாகக்கொள்ளலாம்; அன்றி விற்றல் கூடாது. இது தொன்றுதொட்டு வந்த செந்தமிழ் மரபாகும். அங்ஙனமிருக்க விற்றல் முதலிய எல்லாம் செய்து மிகுதியாக அநுபவித்தற்கு உரியவன் என்பது தோன்ற 'அடிநாயேனை விற்றெலாம் மிக ஆளலாம்' என்றார். நீத்தல் விண்ணப்பத்தில் 'இருந்து என்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை என்னின் அல்லால்' (122) என்று அடிகளே கூறுதல் காண்க. சுந்தரர்பெருமானும் "விற்றுக் கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி ஆட்பட்டேன்" என்று கூறுவதும் இக்கருத்தை விளக்கும் நற்சான்றாகும்.

இங்ஙனம் அன்றி, என்னை வினைக்கு ஈடாகப் பிறப்பித்தலாகிய விற்றலைச்செய்து தன் திருவடிநிழல் அடையவேண்டும் என்ற நோக்கால் விற்று ஆள்வதற்குரியவன் என்றும், அங்ஙனம் விற்றலாகிய பிறப்புட்படுத்தியகாலத்தும் அன்பு தவம் முதலிய உயரிய நலங்களெல்லாம் தன்னிடத்து மிக ஆள்வதற்கு உரியவன் என்றும் நயம் தோன்ற உரைப்பர். இங்ஙனம் ஆட்கொள்ளுதலால் ஆன்மா அடையும் பயன் அந்தமொன்றில்லா ஆனந்தம். விற்று ஆட்படுத்திய காலத்து ஆன்மா

அடையும் பயன் தவம் அன்பு எல்லாம் மிகுதல் என்பர். சிறந்தது தெரிக.

திருவடிக்கண் உள்ள இடையீடில்லாத அன்பால் விரை மலர்ப் பாதம் என்றும் திருப்பாத இளந்தளிர் என்றும் உவமையாகவும் உருவகமாகவும் அணிசெய்து பாராட்டுகிறார். விரை மலர்த் திருப்பாதம் என்றபோது மலரின்கணுள்ள எல்லா மாட்சிகளையும் கண்டு தம்முடைய அறிவுக்கு அநுபவமாதலைச் சொல்கிறார். அங்ஙனமே திருப்பாதம் முற்றிலாத இளந்தளிர் என்றபோதும் திருப்பாதத்தின் மென்மையும் வண்ணமும் கண்டு இங்ஙனம் உருவகிக்கிறார். இளந்தளிர் என்றது இரண்டொருநாளில் முற்றி, பசுமைகொண்டு, பழுத்துக் கீழுதிருவது. இறைவன் திருப்பாதமாகிய இளந்தளிர் என்றும் ஒருபடித்தாக மாற்றமில்லாதது என்பதை உணர்த்த 'முற்றிலா இளந்தளிர்' என்றார்.

இங்ஙனம் திருவடியில் ஈடுபட்டு அதனையே சார்ந்திருந்த மனம் வாசனைமலம் தாக்க அதனை விட்டு உலகியல் பற்றில் தோய்ந்து போகங்களை நுகர்ந்தது. அந்நுகர்ச்சி யாவும் ஒரு கணமும் நில்லாது நீர்மேல் எழுத்துப்போலவும் விண்ணில் எழுதிய எழுத்துப் போலவும் சுவடும் இன்றி அற்றன என்பார் 'பிரிந்திருந்து நீ உண்டன எல்லாம் முன் அற்றவாறு' என்றார்.

நிலைத்த பேரின்பம் இருக்க அதனைத் தரும் திருவடியைச் சார்ந்திருந்த நீ பலாப்பழத்தை விட்டுக் களாப்பழத்தை நாடுவார் போலவும் அமுதத்தை ஊற்றிவிட்டு நஞ்சுண்பார்போலவும் சிற்றின்பம் வெஃகி உலகைச்சார்ந்த உன்னுடைய அறிவும் உனது பெருமையும் என்னால் அளவிட்டுச் சொல்லமுடியாதன என்று அசதியாடுகிறார். இதனை விளக்கும் பகுதி 'நின்னறிவும் நின்பெருமையும் அளவறுக்கில்லேனே' என்பது. அறுக்ககில்லேன் என்பது அறுக்கில்லேன் என்பதாயிற்று. கிற்றவாறு செய்தபடி. அது கிற்றவா என ஈற்றுகரம் தொக்கது.

உலக இன்பத்தில் ஈடுபட்ட மனத்தை இடித்துரைத்து, திருவடியைச் சார்ந்திருக்க வற்புறுத்தலின் இது ஆத்துமசுத்தி ஆனமை அறிக.

39 அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க்
கடியவர்க் கெளியானங்
களவ றுத்துநின் றுண்டமை கருத்தினுட்
கசிந்துணர்ந் திருந்தேயும்

உளக றுத்துனை நினைந்துளம் பெருங்களன்
செய்தது மிலைநெஞ்சே
புளக றுத்துடை யான்கழல் பணிந்திலை
பரகதி புகுவானே. 35

இ - ள்: நெஞ்சே! தன்னியல்பைத் தேவர்கள் அளவிட்டறிதற்கு அரியவனும் உண்மை அடியார்க்கு எளியவனும் ஆகிய சிவபெருமான் நம் களவுகளைப்போக்கி ஆட்கொண்ட தன்மையை உளங்கொண்டு உணர்ந்து கனிந்திருந்தும் வீட்டுலகை அடைதற்கு உள்ளத்துள்ளனவாகிய காமமாதி ஆறுபகைகளையும் கோபித்துத்தள்ளி உன் தகுதியை எண்ணி உள்ளத்தைச் சிவபெருமான் தங்குதற்குரிய பெரிய இடமாகச் செய்தாயில்லை; குற்றங்களை நீக்கி இறைவன் திருவடியை வணங்கினையுமில்லை; என்னே உன் இயல்பு என்றவாறு.

நெஞ்சே! தேவர்களால் அளவிட்டு அறியமுடியாதவனும் அடியவர்க்கு எளியவனுமான இறைவன் நம்முடைய கள்ளங்களைப் போக்கி ஆட்கொண்டதை மனத்தில் கசிவோடுணர்ந்திருந்தும் பரகதியடைவதற்காக மனத்தில் உள்ள காமக்குரோதாதிகளைக் களைந்து மனத்தை இறைவன் உறையும் மாளிகையாக ஆக்கினாய் இல்லை; திருவடியை வணங்கினையும் இல்லை என்பது கருத்து.

இமையவர்கள் அதிகாரமலத்தால் மூடப்பட்டவர்கள் ஆதலின் இறைவன் அவர்களுக்கு இப்படியன் இந்நிறத்தன் என்று அளவிட்டு அறிதற்கும் அரியன் ஆயினன். அடியவர்கட்கோ கற்புடை நங்கைக்கு அவள் கணவன்போல நுகர்தற்கு எளியனாயினன் என்பார் 'இமையவர்க்கு அளவறுப்பதற்கு அரியவன்' என்றும், 'அடியவர்க்கு எளியான்' என்றும் கூறினார். இனி, அளவு அறுப்பதற்கு அரியவன் என்பதற்கு அளவைகளால் வரையறுத்து உணர்தற்கு அரியவன் என்று உரைப்பாரும் உளர். அளவைகள் நூலறிவால் வீட்டு இயலை உணரவேண்டுமென்னும் பாசஞானிகளுக்கன்றிப் போகத்தில் அழுந்திப் புத்தியிழந்து இருக்கும் புத்தேளிர்க்குப் பொருந்தா ஆகையால் அவ்வுரை அத்துணைச் சிறந்ததன்மை தெளிக. இமையவர்கள் இன்னல்களைப் போக்கிக்கொள்ளவும் இன்பத்தைப் பெருக்கிக்கொள்ளவும் ஆக இறைவனைப் புகழ்பவர்கள்; போற்றுபவர்கள்; ஆகையால், அவர்களால் வரையறுத்து உணர முடியாதவன் என்பதாம்.

நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து, மனத்தில் புற ஒழுக்கம் கொண்டிருக்கின்ற நமது வஞ்சக ஒழுக்கங்களையெல் லாம் நீக்கி, மனமே கோயிலாகக்கொண்டு வீற்றிருந்து நாம் தீமையில் புகாமலும், தீமை நம்மிடம் சாராமலும் ஆட்கொண்ட பெருங்கருணைத் திறத்தைக் கனிவோடு நீ அறிந்திருந்தும் என்பார் 'நம் களவறுத்து நின்று ஆண்டமை கருத்தினுள் கசிந்து உணர்ந்திருந்தேயும்' என்றார்.

மனம், காமம் கோபம் மோகம் மதம் மாற்சரியம் முதலான காடுகள் நிறைந்தது. அதனைச் சதாசிவமூர்த்தி எழுந்தருளி இருக்கக்கூடிய பெரிய இடமாகச் செய்வதானால் அங்குள்ள காமக்குரோதாதிகளாகிய தூறுகளைக் களைந்து தீக்கொளுவிச் சுட்டெரித்துத் திருத்தவேண்டும் என்பார் 'உளை நினைந்து, உள கறுத்து, உளம் பெருங்களன் செய்ததுமிலை' என்றார்.

இறைவன் திருவடி மிகமிகத் தூய்மையானது. தூய்மை யான இடத்திற்குச் செல்கின்றவர்கள் தாமும் உடல்தூய்மை யும் உடைத் தூய்மையும் பெற்றாலன்றி அங்கு அணுகுதற்கும் ஆகார். ஆதலால் இறைவன் திருவடி அநாதியே தூய்மை யானது. நெஞ்சு எல்லாக்குற்றங்களும் நிரம்பி வழிவது. அத் தகைய மனம் எப்படி இறைவன்கழலைப் பணிய இயலும்? ஆதலால் நீ உனக்கு உள்ள குற்றங்களை நீக்கிக்கொண்டு இறைவன்கழலை ஏத்தவேண்டுமென வற்புறுத்துவார் 'பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை' என்றார்.

எம்மை இங்ஙனம் கடிந்துரைத்தலால் உமக்கு ஆம் பயன் என் என்ற மனத்தை நோக்கி, பரகதி புகுவதற்காக உள்ளம் பெருங்கோயில் ஆக்கிலை; குற்றம் களைந்திலை; திருவடி பணிந் திலை என்றார். பளகு - குற்றம்.

இப்பாட்டு மனத்தூய்மைக்காகக் காமக் குரோதாதிகளை அகற்றுதலும், மனம் கசிதலும், வணங்குதல் முதலிய செயல் களும் இன்றியமையாதன என்பதை உணர்த்துதலின் ஆத்தும சுத்தியாயிற்று.

40 புகுவ தாவதும் போதர வில்லதும்
பொன்னகர் புகப்போதற்
குகுவ தாவதும் எந்தையெம் பிரானென்னை
யாண்டவன் கழற்கன்பு

நெகுவ தாவதும் நித்தனு மமுதொடு
தேனொடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற்
கென்செய்கேன் வினையேனே. 36

இ - ள்: புகுதற்கு உரியதும், புகுந்தால் மீண்டுவருதற்கு உரிய வழியில்லாததும் ஆகிய சிவநகரில் புகுதற்பொருட்டு, நான் எனது என்னும் அகப்பற்றுப் புறப்பற்றுக்கள் நீங்கப் பெறுவதும், எம் தந்தையும் எம் தலைவனும் என்னை ஆண்டு கொண்ட முதல்வனுமாகிய இறைவன் திருவடிக்கண் அன்பு கொண்டு நெகுவதும், நாடோறும் அமுதம் தேன் பால் வெல்லக்கட்டி இவை எல்லாங்கலந்த சுவையைக்காட்டிலும் மிக்க சுவை விளைவதும் இல்லையானால் இந்த நிலைக்குத் தீவினையையுடையேனாகிய அடியேன் என்ன செய்யவல்லேன் என்றவாறு.

வீடடையப் பற்றறுதலும், திருவடிக்கண் அன்புவைத்தலும், அதனால் அமுதம் பெருகுதலும் அடியேற்கு உண்டாகவில்லை யானால், அடியேன் செய்யக்கூடியது என்ன இருக்கிறது என்பது கருத்து.

சுவை மிகுதலாவது இறைவனிடம் ஆன்மா ஒன்றியிருக்கும்போது உண்டாகும் களிப்புநிலை.

அரசனுடைய ஆணையும் கருணையும், புகுதற்குரிய அகச்சூழலும், அடையாளம் ஆடையணிமுதலிய புறச்சூழலும் இருந்தால் தலைநகரத்தில் அரசமாளிகையில் புகுதல் எளிது. புகுந்து விட்டால், அங்கிருந்து நாமாகத்திரும்ப இயலாது. அதுபோல மலபரிபாகமும் இருவினையொப்புமாகிய தகுதிகளும், திருவருளும் துணையுமிருந்தால் சிவபுரமாகிய வீட்டுலகில் புகுதற்கு எளியது என்பார் 'புகுவதாவதும்' என்றும், அங்ஙனம் புகுந்தார் சீவபோத மற்றுச் சிவபோதமாய், தாம் செய்வன யாவும் சிவச் செயலாய், நுகர்ச்சியனைத்தும் சிவபோகமாய் ஆனந்தத்தழுந்தி யிருத்தலின் மீளார் என்பதனை உலகின்மேல் ஏற்றி 'போதரவு இல்லதும்' என்றார். போதரவு - திரும்பிவருதல். அது தொழிலாகுபெயராய், திரும்பி வருதற்குரிய வழியை உணர்த்திற்று. வள்ளுவரும் "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப் படுவர், மற்றீண்டு வாரா நெறி" என்றதும் காண்க.

பொன்னகர் - அழகிய நகர்: பொன்போலும் சிறந்த நகர் எனலுமாம். உலகப்பொருள் எல்லாவற்றின் மதிப்பையும்

பொன்னைக்கொண்டே கணிக்கும் உலகவர் உணர்ந்து உய்யப் 'பொன்னகர்' என்றது. சிவபுரத்தை நோக்கப் பொன் பதினுயிரம் கோடி மடங்கு தாழ்ந்தது என்பதை அனைவரும் அறிவர் என்க. முத்திநிலையைப் பொன்னகர் என்றது உபசாரம்; பற்றற்றுப் பற்றற்றான் பற்றினை அவனெடு ஒன்று நிலையை ஓரின்ப நகராகக் கண்டதால். இதனை அடிகள் சிவநகர், வாரா உலகு என்றெல்லாம் சொல்லிக் காட்டுவர்.

சித்தாமிர்த தீர்த்தத்தில் முழுகினுருடைய நோய்கள் உதிர்வதுபோல, தில்லைச் சிவகங்கையில் நீராடினுருடைய படர் நோய்கள் உதிர்வதுபோல, மனத்தைப்பற்றிய காமாதி பிணிகளும், உயிரைப்பற்றிய அறியாமை முதலியனவும் இதுபற்றி விளையும் அகப்பற்றுப் புறப்பற்றுக்களும் உதிரவேண்டும் என்பார் 'உகுவதாவதும்' என்றார்.

இறைவன் மூன்றியைபுபற்றி எம்மால் அன்பு செய்யத் தக்கான் என்பார் 'எந்தை' 'எம்பிரான்' 'என்னையாண்டவன்' என்றார். உயிர்களில் பரிபாகமுடையன இறைவனைச் சற்புத்திர மார்க்கத்தினின்று வீடடையும் ஆதலின் அந்நிலையை உட்கொண்டு எனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு மகன் தந்தைமுறைமையாதலின் 'எந்தை' எனவும், அதிலும் முறுகிய அன்பு தன்முனைப்படக்கிப் பெண்மையிற் றலைக்கட்டச்செய்யுமாதலின் தன்னைக் காதலியாகவும், இறைவனைத் தலைவனுகவும் கொண்டு அநுபவிக்கச்செய்தலின் 'எம்பிரான்' எனவும், அந்நிலையிலும் ஒத்த தன்மையிருத்தலின் ஆண்டான் அடிமைத் திறத்தின் சிறப்பை எண்ணி 'என்னை ஆண்டவன்' எனவும் கூறினார்.

அடிமை என்றென்றும் காலாலிட்ட வேலையைத் தலையாற் செய்துகொண்டு, திருவடியே சார்ந்திருக்குமாதலின், அதுவே அழியாத மாருத அன்புசெய்து நெகிழத்தக்க இடம் என்பார் 'கழற்கு அன்பு நெகுவதாவதும்' என்றார்.

சிவனேடொன்றிய அநுபவ நிலையின் இனிமையைச் சாத்திரங்கள் "கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே" என்றறிவிப்பது போலத் தமக்கும் சித்திக்கவேண்டும் என்பார், இனிமையான பொருள்கள் அனைத்தையும் கூட்டி ஒன்றாக்கிக் கூட்டினிமையைக் காட்டி அத்தனைக்காட்டிலும் ஒருநாள்போல அன்றி நாளுக்கு நாள் இனிமை மிகுவதாவது முத்தியின்பம் என்கின்றவர் 'அமுதொடு தேனெடு பாலொடு கட்டியொடு (இனிமை) மிகுவதாவதும்'

என்றார். அப்பர்சுவாமிகள் "கனியினும் கட்டி பட்ட கரும்பினும்.. இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே" என்றல் காண்க.

புகுவதாவதும் ... ... மிகுவதாவதும் ஆகிய நுகர்ச்சிகள் இன்றெனில் நான் என்செய்வேன் என்றது இத்தகைய இறையனுபவங்கள் இறைவனருளும் நல்வினையாலுண்டான பரிபாகமும் ஒன்றுகூடியவழிச் சோபானமாக விளையவேண்டியன, பொன்னும் பொருளும் மாடும் வீடும்போலத் தன்முயற்சியால் வேண்டியடையத்தகுவன அல்ல என்பார் 'இதற்கு என்செய்கேன்' என்றார். அதற்கும் என் வினைகளே காரணம் என்பார் 'வினையேனே' என்றும் கூறினார்.

இத்திருப்பாட்டில், வீட்டுலகு சார்தற்கு, உயிர்த்தடைகள் உகுதலும், அன்பு மிகுதலும், அனுபவம் சிறத்தலும் மிகமிக இன்றியமையாதன என்று உணர்த்துமுறையான் ஆன்மாவின் தூய்மை உணர்த்தியதால் ஆத்துமசுத்தியாயிற்று.

41 வினையென் போலுடை யார்பிற ராருடை-
யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்
பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்துநான்
முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை யிரும்புகன் மனஞ்செவி
யின்னதென் றறியேனே. 37

இ - ள்: என்னைப்போன்ற தீவினையாளர் பிறர் யார்? அடிமையாகிய நாயேனைத் தினையளவுகாலமும் பிரிந்திருப்பது இறைவன் திருவுள்ளக் குறிப்பன்று; அதனால் இறைவனுடைய திருவடித்தாமரைகளை நான் பிரிந்திருந்தும் முட்டிக்கொள்ளேன்; தலையை உடைத்துக்கொள்ளேன்; இத்தகைய எனது நினைவு இரும்பாகும்; மனம் கல்லாகும்; காதை இன்னது என்று சொல்ல அறிந்திலேன் என்றவாறு.

அடியேனைவிட்டுப் பிரிதல் இறைவன் திருவுள்ளக்குறிப்பு அன்று. நான் பிரிந்தேன்; பிரிந்தும் ஆற்றாமையால் முட்டியும் மோதியும் மண்டையை உடைத்துக்கொண்டேன் இல்லை; ஆகவே, என் எண்ணம் இரும்பு; என் மனம் கல்; செவியைப் பற்றிச் சொல்லத் தெரியவில்லையே; என்னைப்போலத் தீவினை உடையார் வேறு யார்? என்பது கருத்து.

உடைமைகளைத் தேடிய அருமையை உடையான் அறி வான். சில காலமேனும் ஒரு பொருளோடு பழகிவிட்டால், அப்பொருள் சிறந்ததாயினும் சிறவாதாயினும் அதனைவிட்டுப் பிரியமுடிவதில்லை. அங்ஙனந்தானே இறைவனும். "பேயோ டாயினும் பிறிவதரிது" என்பது தமிழ்மறை. ஆகையால், இறைவன் திருவுள்ளக் குறிப்பு ஒரு தினையளவு காலங்கூட என்னைவிட்டுப் பிரிவதன்று; இது எனக்கும் தெரியும் என் பார் 'உடையான் அடி நாயேனைத் தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப்பு அன்று' என்றார்.

ஆண்டவன் மனக்கருத்து அதுவாகவே, அடிமை என்ன செய்ய வேண்டும்? பிரியாதிருக்க வேண்டும்; அங்ஙனமன்றி அறியாமையால் பிரிந்தேன், அது செய்யக்கூடாத செயல்; சார்ந்த இடமோ மணமும் நிறமும் மென்மையும் தண்மையும் நிறைந்த நுகரத்தக்கதான (போக்கியமான) மலர் போன்றது. அதனையும் பிரிந்தேனே; அது எவ்வளவு தீயசெயல் என்பார் 'முனைவன் பாதநன்மலர் பிரிந்திருந்தும்' என்றார்.

தலையன்புடையார்க்குத் தலைவனைப் பிரிந்தபோதே நீரைப் பிரிந்த மீன்போல, நெடுஞ்செழியனைப் பிரிந்த கோப்பெருந் தேவிபோல உயிர் பிரிந்திருக்கவேண்டும். அங்ஙனம் பிரியாமை யால் பிரிவால் பேதுறுகின்ற நானாவது பிரிக்கவேண்டும். எப் படிப் பிரிப்பது? என்தலையைக் கல்லில் முட்டிக்கொண்டாவது, கத்தி முதலிய கூரிய படைகளைக்கொண்டு கீறிக்கொண்டாவது பிரித்திருக்கவேண்டும். அங்ஙனம் செய்திலேன் என்பார் 'நான் முட்டிலேன் தலைகீறேன்' என்றார். தலையிலேயே அறிதற்கருவி கள் ஐந்தும், அவற்றை இயக்கும் மூளைப்பகுதிகளும் இருத்த லின் அதற்கே தண்டனையுரியது என்றவாறு.

பாவனை - தியானம்: குருமூர்த்தியைக் கண்டு அவர் திரு வடியைச் சார்ந்திருந்தபோது தன்மயமாகவே இருந்த என் பாவனை அவரைப் பிரிந்தகாலத்துத் தன் பழைய நிலையை விட்டிலது; இறுகியது; கருகியது; இரும்பு தீப்பிழம்பைச்சார்ந்த விடத்துத் தீயின் நிறமும் குணமும் இளக்கமும் உடையதாக விளங்கிப் பிரிந்தவிடத்து இறுக்கமும் கருமையும் உடையதா னாற்போல என்பார் 'இனையன் பாவனை இரும்பு' என்றார். சிவர்கமங்கள், இறைவனைச் சார்ந்தபோது இறைகுணம் பொருந்தியும், உலகினைச்சார்ந்தபோது பாசமாகியும் விளங் கும் உயிர்களுக்கு இரும்பினை உவமித்தல் காண்க.

திருவடிச்சார்பு பெற்றுங்கூட பெற்ற சிலநாளனுபவத்தி லாவது இளகிக் கசிந்திருக்கலாமே அதுவும் செய்திலது என் மனம் என்பார் பலநாள் நீருட்கிடப்பினும் மெல்லென்றல் சால வரிதான கல்லை உவமித்த அழகு உணர்தற்குரியது. இதனையே விளக்குவது 'மனம் கல்லாம்' என்பது.

உணரவேண்டிய மனம் ஒத்துழையாதபோது, சென்று பற்றிப் புலன்களையுணரும் கண் துணைசெய்யாதபோது இறை வன் புகழ் மெய்யடியார் பாடக் காற்றில் மிதந்து வந்து வீழ் கின்றனவற்றை ஏற்றுவது காது திருந்தலாமே எனின் அதுவும் உதவிலது என்பார் 'செவி இன்னதென்றறியேனே' என்றார்.

என்னைப் பிரிவது இறைவன் திருவுள்ளக் குறிப்பன்று என்பதை உணர்ந்தும் பிரிந்த யான் முட்டிக்கொள்ளவேண்டும் கீறிக்கொள்ளவேண்டும், அதுவும் செய்திலேன்; என் பாவனை இரும்பு, என் மனம் கல் என்று தூய்மையுருமைக்காக வருந்தித் தூய்மையூட்ட விரும்புதலின் இது ஆத்துமசுத்தியாயிற்று.

42 ஏனை யாவரு மெய்திட லுற்றுமற்
றின்னதென் றறியாத
தேனை ஆனெயைக் கரும்பினின் தேறலைச்
சிவனையென் சிவலோகக்
கோனை மானன நோக்கிதன் கூறனைக்
குறுகிலே னெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு
வேனுயி ரோயாதே. 38

இ-ள்: மெய்யடியார் அல்லாத மற்றைய தேவர் முதலிய யாவரும் அடைந்தும் இத்தன்மைத்து என்று அறியப்படாத தேனையும் பசுவின் நெய்யையும் கரும்பினது தெளிந்த சாற் றையும் போன்ற சிவபெருமானை, எனது சிவலோகநாதனை, மான் போன்ற கண்களையுடைய உமாதேவியை ஒருபாகத்தில் உடைய பெருமானை, நெடுங்காலமாக அணுகப்பெற்றிலேன்; கெட்டுப்போகின்றவனாகிய யான் இவ்வுலகிலிருந்து உடலை நெடுங்காலமாகப் பாதுகாக்கின்றேன்; என்னுயிரும் ஒழிந்து போகிலது; கெடுவேன் என்றவாறு.

தேவர் முதலானோர் இறைவனை அடையப்பெற்றும் இத் தன்மையன் என்றறியப்படாத சிவபெருமானை அணுகப்பெற்றி லேன்; உடம்பைப் பேணுகின்றேன்; உயிர் போகாமலிருக் கிறது; ஏன் செய்வேன் என்று இரங்குகின்றார்.

ஏனை யாவரும் என்றது தம்மை ஒழிந்த மெய்யடியார் களும் தேவர்களும், ஆகிய இவர்களில் பரிபாகம் அடையாத பலரும், அவரவரர் அதிகாரமலத்துள் அழுந்தியவர்களும், மும்மலத்தில் திளைப்பவர்களும் ஆகியவர்கள்.

எய்திடலுற்றும் - புண்ணிய விசேடத்தால் கயிலை முதலிய இடங்களில் சென்று தரிசிக்கப்பெற்றும், சாமீபம் பெற்றும், குருவாகவும், சங்கமமாகவும் அடையப்பெற்றும் என்க.

தேன், நெய், கருப்பஞ்சாறு மூன்றும் இனிப்பால் வேறு வேறனவை. தேன் ஈக்களின் எச்சிலாகத் தேனடையில் சேமிக்கப்பெற்று, உண்பார்க்கு நெஞ்சு உரத்தைத் தரவல்லது. நெய் ஆனினிடமிருந்து அடையக்கூடியதாக அறிவாற்றலை விளைவிப்பது. கருப்பஞ்சாறு கசக்கிப் பிழிந்து தெளிந்த சாறுக அளவோடுண்ணின் தட்பத்தையும், கிளர்ச்சியையும் ஊட்ட வல்லது. இவை தனித்தனியே உண்ணப்படும்போது ஒரு வகை இனிமையும், கூட்டி உண்ணப்படும்போது ஒருவகை இனிமையும் தருவன. இவ்விருவகையான நிலையினும் இவை போல உயிர்களுக்கு ஞான வளம் அளித்தலின் இறைவனைத் 'தேனை,ஆனெயை, கரும்பினின் தேறலை' என்று உருவகித்தார். இதில் அமுதம் ஈண்டுச் சொல்லப்பெறுமை அறிக. கிணற்றுத் தவளைகள் போலத் தேவர்கள் தாம் கண்ட பாற்கடலமுதமே சுவையென வியந்து ஏனைய சுவைகளை அறியார்கள். அது போன்றே இறையனுபவத்தையும் அறியார்கள். இறையனு பவம் அவர்களுக்கு அறியப்படாமைக்கு ஏது முன்குறித்தாம்.

எய்திடலுற்றும் என்றதனால் புறச்சமயிகளாகிய வேற்று நெறிச் செல்வார் ஈண்டுக் குறிக்கப்பெற்றிலர் என்றுணர்க. திருவேறு தெள்ளியராதலும் வேறுதல்போலவும், பொருளாள் ஞதலும் போகியாதலும் வேறுதல்போலவும், தேவர் முதலிய ஏனையோர் இறையருள் கூட்டுவியாமையால் தேன் முதலிய இனியபொருள் போன்ற இறைவனைப் பெற்றும், அனுபவிக்கக் கூடாமையால் எத்தகையன் என்று உணர்ந்திலர் என்பதாம். இதனுற்கூறியது இறைவனைப் பொதுவகையான் உணர்ந்தும் சிறப்புவகையான் அறிந்திலர் என்பதாம்.

தேன் முதலியவாக இறையனுபவம் இருந்த தன்மையை அறிந்து உருவகித்து, இறைவற்குரிய சிறப்புத்திருநாமத்தால் என் சிவனை என்றும், என் சிவலோகக்கோனை என்றும், மானன நோக்கிதன் கூறனை என்றும் இறைவனைக் குறிக்கின்றார்.

இவற்றுள் சிவன் என்றது ஞானத்தால் நோக்கும் ஞானியர்க்கு இன்பமாயிருத்தலின் என்க. பிரமா, விட்டுணு முதல் அணுசதாசிவர்கள்வரை உள்ளவர்கட்குத் தலைவனாக இருத்தலின் 'சிவலோகக் கோனை' என்றார். உயிர்களுக்குக் கருணை வழங்கத் தானும் தையலுமாகக் கலந்திருத்தலையும், தாயுடனிருக்கும் தந்தையை அணுகத் தனயன் அஞ்சவேண்டியது இல்லையே என்பதையும் விளக்க 'மானன நோக்கி ஒருகூறனை' என்றார். இவ்வண்ணம் சர்வ வியாபகத்தன்மை, முழுமுதற்றன்மை, அருட்டிருமேனி கொள்ளுந்தன்மை இவை மூன்றும் முறையே குறிக்கப்பெற்றன.

அன்பு மீதூர்ந்தார்க்குப் பிரிவு கணமாயினும் யுகமாகத் தோன்றுதல் உலகியற்கை ஆதலின் அடிகள் குருமூர்த்தியைப் பிரிந்த காலம் சிலவாயினும் 'நெடுங்காலம் குறுகிலேன்' என்றார். இதனால் ஆராமை அறிவிக்கப்பெற்றது.

அமுதுண்பார் நஞ்சுண்டதுபோல இறைபணி பல செய்து இறையின்பத்தை நுகரவேண்டிய யான் அது செய்யாது உடலோம்புகின்றேன் என்பார் 'யானிருந்து ஊனை ஓம்புகின்றேன்' என்றார். ஊன் என்றது ஆகுபெயராக உடலையுணர்த்துமேனும் இச்சொல்லால் கூறியது அதன் இழிவு உணர்த்த என்க.

உயிர் உணர்வுடையது என்கிறார்களே! அதாவது ஊன் ஓம்பும் வாழ்க்கை எதற்கென்று ஒழிந்துபோயிருக்கக்கூடாதோ, அதுவும் போயிற்றில்லை என்பார் 'உயிர் ஓயாது' என்றார்.

உயிர் ஓயாது உடலோடு கூடி இறைபணியைப் புரியாது இருப்பின் சும்மாவா இருக்கும்? பிராரத்தவினையை நுகர்ந்து ஒழிப்பதாகப் பேர்வைத்துக்கொண்டு வினைமூட்டையைக் கட்டிக்கொண்டுதானே இருக்கும்; அதனால் 'கெடுவேன்' என்று இரங்கியுரைத்தார் என்பதாம்.

'இறைவனை நெடுங்காலம் குறுகிலேன்' என்று தூய்மையில்லாமையை உணர்த்தி இரங்கிக் கூறுதலால் தூய்மையை அவாவுதலின் இது ஆத்துமசுத்தியாயிற்று. தன்குறையறிதலே குறை நீக்கத்திற்கு முதற்படியாதல் காண்க.

43 *ஒய்வி லாதன வுவமனி லிறந்தன*
*வொண்மலர்த் தாடந்து*
*நாயி லாகிய குலத்தி னுங் கடைப்படும்*
*என்னைநன் னெறிகாட்டித்*

*தாயிலாகிய இன்னருள் புரிந்தவென்*
*தலைவனை நனிகாணேன்*
*தீயில் வீழ்கிலேன் திண்வரை யுருள்கிலேன்*
*செழுங்கடல் புகுவேனே.* **39**

இ - ள்: என்றும் அழியாதனவும் ஒப்பற்றனவும் ஆகிய ஒளிபொருந்திய திருவடித்தாமரைகளை எனக்குக் கொடுத்து நாய்ப்பிறப்பினும் கீழ்ப்பட்ட எனக்கு நன்னெறியாகிய அன்புநெறியைக்காட்டித் தாயினிடத்துண்டாகும் அன்பைக் காட்டிலும் இனிய அருளை என்மாட்டுச்செய்த என்னுடைய தலைவனை மிகவும் கண்டிலேன்; நெருப்பில் வீழ்ந்து இறந்திலேன்; பெரியமலைமேல் இருந்து உருண்டிலேன்; நீர்ப்பெருக்கோடு கூடிய கடலிற்சென்று வீழ்வேனோ அதுவும் செய்யேன் என்றவாறு.

நாயிற்கடைப்பட்ட அடியேனுக்குத் திருவடியைத் தந்து, தாயினுமினிய தண்ணருள் புரிந்த தலைவனை எஞ்ஞான்றும் கண்டுகொண்டேயிருந்திலேன்; ஆதலால் தீ, மலை இவற்றில் வீழ்ந்தாவது என் பயனற்ற பிறவியைப் போக்கிக்கொண்டிருக்கவேண்டும்; அதுவும் செய்திலேன்; கடலில் வீழ்வேன் என்பது கருத்து.

இறைவனுடைய பேரருளையும் அவன் உதவும் ஞானத்தையும் அவன் திருவடியாகக் கூறுதல் சமயமரபு. அவனுதவும் ஞானம் என்றும் அழியாத்தன்மையுடையதாய், ஒப்பற்றதாய் இருத்தலின் அடிகள் 'ஒய்விலாதன; உவமனில் இறந்தன; ஒண்மலர்த்தாள் தந்து' என்றருளினர். ஒய்வு - அழிவு. இறைவனுதவுகின்ற மெய்ஞ்ஞானம் என்றும் அழிவில்லாதது ஆதலின் 'ஒய்விலாதன' என்றார்.

உவமம் வினை பயன் மெய் உரு என்ற நான்கையும் இடமாகக்கொண்டு ஒன்றோடொன்று ஒப்புக் கூறப்படுவது. திருவடிக்கு ஒப்பாக உலகத்தில் உள்ள பொருள்கள் ஒவ்வொன்றையும் கூறும்போது திருவடி அவற்றைக் கடந்திருத்தலின் 'உவமனில் இறந்தன' என்றார்.

ஆயினும் அடியேன் நுகர்ச்சிக்கான அக்காலத்து அதாவது குருவடிவாக வந்து திருவடிமலர்சூட்டியகாலத்து ஒளிபொருந்திய மலர்போல இருந்தது என்று தம் அநுபவம் கூறுவார் 'ஒண்மலர்த்தாள் தந்து' என்றுரைத்தார். இஃதுவமம்கூறியது அன்மை உணர்க.

நாய்ப்பிறப்பு மிக மிக இழிந்தது. அதனினும் இழிந்தவன் என்பார் 'நாயிலாகிய குலத்தினும் கடைப்படும் என்னை' என்றார். நாய் தன் தலைவன் காட்டியநெறியில் ஒழுகி அவன்முகத்தையே நோக்கி அவனையே சுற்றிவரும்; அத்தகைய குண நலங்களும் இல்லாமையால் 'நாயிலாகிய குலத்தினும் கடைப்படும்' என்றது.

தாள்தருதலாகிய திருவடிதீக்கைசெய்தவுடன் யான் எனது என்னும் பற்றுக்கள் தொலைதலின் யான் இறைவனுக்கு அடிமையும் உடைமையும் ஆவேன் என்ற உண்மைஞானம் தோன்ற, அவனையடையும் உபாயங்கள் யாவை என்ற அவர்த்தோன்றுமாதலின், அஃதுளங்கொண்டு, சரியை கிரியை யோகம் ஞானமாகிய சாதனங்களை அருளினன் என்பார் 'நன்னெறி காட்டி' என்றார். இதற்குப் பத்திநெறியென உரைகூறுவாரும் உளர். பக்தியில் விளையும்நெறி இந்நான்குமேயாதல் காண்க. இவற்றையே குருமூர்த்தியாக எழுந்தருளி இவருக்குத் திருக்கோயில் கட்டச்செய்தும், சிவனடியாரை வழிபடச்செய்தும், ஆனந்தக் கண்ணீர்விடச்செய்தும், ஆனந்தமே தானாக இருக்கச்செய்தும் அருளினன் என்ற உண்மைகளையும் காண்க.

தாய் தன்குழந்தையிடம் செலுத்தும் அன்பைவிடச் சிறந்த தான அருளை இறைவன் தன்மாட்டுச் செய்தான்; அவன்செய்த அருள் மிக இனிமையாக இருந்தது என்பார் 'தாயில் ஆகிய இன்னருள் புரிந்த என் தலைவனை' என்றார். புரிதல் - விரும்பிச் செய்தல். "புகழ்புரிந்த" என்புழிப்போலக் கொள்க.

44 வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு
மதுதனை நினையாதே
மானி லாவிய நோக்கியர் படிறிடை
மத்திடு தயிராகித்
தேனி லாவிய திருவருள் புரிந்தவென்
சிவனகர் புகப்போகேன்
ஊனி லாவியை யோம்புதற் பொருட்டினும்
உண்டுடுத் திருந்தேனே. 40

திருச்சிற்றம்பலம்

இ-ள்: தேன்போலும் இனிய சுவையினையுடைய திருவருளைச் செய்த என் சிவபெருமானது பொன்னகருள் புகுதற்குப் போகேனாய், காமனுடைய மலரம்பு என் நெஞ்சைக் கிழிக்க நிலவும் சுடுகின்ற துன்பநிலையை நினையாமல் மான் விழிபோலும் விழிகளையுடைய பெண்களின் வஞ்சனையிலே

மத்திட்டு கடையப்பட்ட தயிர்போலக் கலங்கி உடம்பி னிடத்தே உயிரை இன்னமும் பாதுகாப்பதற்காக உண்டும் உடுத்தும் இதுவரை வாழ்ந்திருந்தேன் என்றவாறு.

சிவனகர் புகாமல், காமம் முதலிய உட்பகையால் வருந்தி ஊனுடம்பை வளர்த்து இருந்தேனே! என்று இரங்கிக் கூறு கின்றார்.

திருவருள் தேன்போல இனிமையும் எளிமையும் உடைய தாக இருந்ததைக் கண்ட அனுபவத்தால் 'தேனிலாவிய திரு வருள்' என்று உணர்த்துகின்றார். புகப்போதலாவது புகுதற் குரிய பரிபாகத்தை வருவித்துக்கொள்ளுதல்.

இவ்வுடலிலே வைத்து உயிரைப் பாதுகாத்தற்கு உண்டு உடுத்து இருந்தேன் என்றாரேனும், உயிர் நித்தியமாதலின் உடம்பைப் பாதுகாப்பதற்காக உண்டு உடுத்து இருந்தேன் என்றதாகக் கொள்க.

உயிர் உடலோடு கூடியிருந்தாலல்லது உண்ணுதலாலும் உடுத்தலாலும் உடல் வளர்ச்சியடையாது; உண்டலும் உடுத்த லும் உடலுக்கன்றி உயிர்க்கின்று ஆதலால் 'ஊனில் ஆவியை ஓம்புதற்கு' என்பதற்கு ஆவியையுடைய உடம்பைப் பாதுகாத் தற்கு எனப் பொருள் கொள்க.

இன்னும் என்றது சிவனருள் புரிந்தபின்னும் என்னும் பொருள் தந்தது.

உண்டு உடுத்து இருந்தேன் என்றது உண்ணவும் உடுக்கவுமான இவ்வாழ்க்கை பயனற்றதாயினமை உணர்த்திய வாறு.

வேள் என்பது விருப்பத்தை விளைவிப்பவன்; விரும்பப் படுபவன் என்னும் காரணத்தால் முருகனையும் மன்மதனையும் குறிக்கும் பொதுச்சொல். ஈண்டு மன்மதனை மட்டும் குறிக்க 'வேனில்வேள்' என அடை கொடுத்துக் கூறினார். வேனில் மன்மதனுக்குரிய காலமாதலை "பாசறைப் பரிவுதீர்க்கும் பங் குனிப் பருவம்செய்தான்" என்னும் சிந்தாமணியாலும் தெளிக. அவனுக்குரிய கணைகள் தாமரை, அசோகு, மாம்பூ, மல்லிகை, நீலோற்பலம் என்பன. அவை மலர்களாயினும் எய்யப்படும் இடம் நெஞ்சக் கனகல்லாயினும் அதனை அவை கிழித்துவிடு மென்பார் 'வேனில் வேள்கணை கிழித்திட' என்றார். கிழித்தல் கணைக்கு ஏற்ற தொழிலாதல் காண்க.

அங்ஙனம் மலரம்பு கிழித்ததனால் தண்ணென்று அமுதம் சொரியும் மதியுங்கூட மிகமிகச் சுடுவதாயிற்று. அதனால் அதனை ஒருபொருட்படுத்தாது இருந்தேன் என்பார் 'மதிசுடும் அது தனை நினையாதே' என்றார்.

மானினது மருண்ட பார்வை பெண்களின் நோக்குக்கு உவமை. அதனால் மான் பெண்களுக்கு உவமை. இதனை உணர்த்துவது 'மானிலாவிய நோக்கியர்' என்னும் பகுதி. நோக்கியர் எனப் பொதுப்படக்கூறினும் பின்வரும் நிகழ்ச்சியால் ஈண்டு இருமனப் பெண்டிரையே கொள்க. அவர்களே பொய்க்கும் வஞ்சகத்திற்கும் இருப்பிடமானவர்கள் ஆதலின், அவர்களுடைய கண்களே இணக்கத்தைக் காட்டி இறுகப்பிடித்தன; அதனால் அவர்கள்வஞ்சகத்திடையே அகப்பட்டேன். மத்தால்மோதுண்ட தயிரைப்போல ஒருபக்கமும் போகமுடியாமல் சுழலுகின்றேன் என்பார் 'மானிலாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகி' என்றார். படிறு - வஞ்சகம்; பொய்யுமாம். தயிராகிப் புகப்போகேன் என்றேனும், உண்டு உடுத்து இருந்தேன் என்றேனும் பொருள்கொள்க.

தேன்போலும் இனிய திருவருளை உதவிய சிவபெருமானுடைய நகருக்குப் போகேனாய், இந்த உடம்பில் உயிரை வைத்துப் பாதுகாப்பதற்காக மான் போலும் பெண்களின் வஞ்சனைச்சுழலில் சிக்கி மத்தில் அகப்பட்ட தயிரைப்போல இன்னும் உண்டுடுத்து இருக்கின்றேன் என்று தன் குறையை உணர்ந்து கூறலின் இது ஆத்துமசுத்தியாயிற்று.

## ரு. கைம்மாறு கொடுத்தல்

அஃதாவது ஒருவர் யாதேனும் ஒருதவியை முன்னர்ச் செய்ததற்கு மாற்றாக ஏதேனும் உதவி செய்தலாம். இதனை வள்ளுவர் செய்ந்நன்றி அறிதல் என்பர். ஒருவனுக்கு இறுதிவந்த எல்லைக்கண் செய்யும் உபகாரமும், முன்னர் ஒருதவி செய்திருக்க அதற்கீடாகத் தாம்செய்யும் உபகாரமும், யாதொரு பயனும் கருதாதுசெய்த உபகாரமும் என உதவி மூவகைப்படும். ஆகவே அதற்குரிய கைம்மாறும் மூன்று வகைப்படும். அவற்றுள் ஈண்டுள்ள கைம்மாறு ஒத்தநிலையில் இல்லாமையும் கைம்மாறு வேண்டாத கருணைப் பெருமானாகிய இறைவன் உயிர்களுக்குச்செய்த உபகாரத்திற்காக உயிர்கள் அவனுக்குச் செய்யும் மாற்று உதவியே ஈண்டுக் குறிக்கப் பெறுவது. இக்கைம்மாறு சித்தையளவில் வெளிப்படும்போது

செய்ந்நன்றியறிதல் என்று பெயர்பெறும். செயலளவில் வெளிப் படும்போதுதான் கைம்மாறு கொடுத்தலாம். மீளக்கொடுக்கும் தகுதியுடையோர் தமக்குள் கொடுத்து வாங்கும் நிலையில் விளங் குவது கைம்மாறு. இறைவன் மிகப் பெரியவன்; அவன் செய்த உபகாரம் வேறு யாரும் செய்ய இயலாதது. அதற்கு மாருக இவர் செய்யும் உபகாரம் ஒன்று இருக்கமுடியுமா? என்ற ஐயம் விளைதல் இயல்பே. ஆதலால் இறைவனுக்கு உவப்பான அன்பைக் கொடுத்து அவன்செய்த மிக மேலான நன்றியை இடைவிடாது நினைக்கின்ற அளவிலே அமைவது இச்சொற்றொடர்.

## கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

45 இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெய்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே. 41

இ - ள்: தேவர்களுக்கு ஒப்பற்ற தலைவனே! யான் இரு கைகளையுடைய யானையையொத்து உயிர் வாழ்ந்திருந்து, என் உள்ளத்தினுள்ளே விளங்கும் கருப்பொருளாகிய நின்னை யான் கண்டிலேன்; நான் கண்டதெல்லாம் துன்பங்களே; அங்ஙனமாகவும் அடியேனை அருள்வோம் வருக என நீ கட்டளையிட்டனை; அங்ஙனம் பணித்தும் வர ஆற்றலில்லேன் ஆயினேன்; பொறிகளைத் துணைக்கொண்டு புலன்களை நுகரவே வல்லேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடியேனை ஆட்கொண்டருளிய தேவரீர் அளித்த பேரின்பத்தை நுகரமாட்டேன்; ஊன் பருக்க உண் பேன் என்று உவர்த்து உரைக்கின்றார்.

இறைவன், ஆன்மாக்களின் பரிபாக நிலைக்கேற்ப, மனத் துள் அறிவுருவாக எழுந்தருளியும், அவருள் ஒருவனாகி முன் னின்றும் அருள்செய்வன். தேவர்கள் பசுபுண்ணிய விசேடத் தால் சுவர்க்கத்தைப்பெற்ற போகான்மாக்கள். அவர்களுக்கு ஞானத்தை நல்குவதற்காக அவருள் ஒருவனாகவும் தலைவனாக வும் விளங்குவன். தேவர்களில் மந்த மதியுடையார் தம்முள் ஒரு வனாக எண்ணி வணங்காது ஒழியப் பரிபாகமுடைய சிலர் தலை வனாக எண்ணி வழிபடாநிற்பர். ஏதாயினும் இடர் வந்துற்ற காலத்து ஆற்றாமையால் இறைவனே என்று போற்றுவர். இவ்

வுண்மையை 'வானுளோர்க்கு ஒருவனே' என்பதால்உணர்த்து கின்றார்கள். வானுளோர்க்கு ஒருவனே என்பதில் நான்காம் வேற்றுமை உருபு முறைப்பொருளை உணர்த்திற்று என்றலே சிறப்புடைத்தாகலின் தேவர்களுக்குத் தலைவன் என்று பொருள் கோடலே சிறப்புடைத்து.

இரு கை யானை - இரண்டு கைகளையுடைய யானை. ஒரு கையால் உண்டு போதாமையால் இரண்டு கைகளை உடைய யானையை ஒத்திருந்தேன் என்கின்றார். இல்பொருளுவமை. யானை நன்றியைமறந்து அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் இயல்பினது; மதம்பட்டுழிப் பொறியுணர்ச்சியின் வயப்பட்டுப் பொல்லாங்கு பல செய்வது. அதுபோல் தகுதியற்ற தன்னையும் 'வா' என்றழைத்து வான் கருணை காட்டிய நன்றியை மறந்து பொறி உணர்ச்சியிலேயே ஈடுபட்டு நல்லனவற்றை மறந்த தனக்கு யானையை ஒப்பித்த நயம் ஓர்க.

இருகை யானை - பெரிய கையையுடைய யானை என்பாரும் உளர். பழைய உரையாசிரியர் யானை உருவத்தில் பெரியதாய், வாயும் கையும் ஒன்றாகப் பெற்றதாய், தேகரட்சை ஒன்றையே குறிக்கொண்டு அறிந்தறிந்தும் பாகனையே கொல்வது. அது போல அநாதியே எனது உயிருக்குள் மூல முதலாயிருந்து வெளிக்கொணர்ந்து பரமுத்திவரையில் உயர்த்திய இறைவன் உதவியை மறந்தமையால் 'இருகை யானையை ஒத்திருந்து' என்றார் என்பர். வேறுசிலர் கையும் மூக்குமாகிய ஞானேந்திரி யங்களில் ஒன்றாயும் கன்மேந்திரியங்களில் ஒன்றாயுமிருக்கிற இரண்டு தன்மையையுடைய ஒருகையோடுகூடிய யானையைப் போல எல்லாவிதமான இந்திரியங்களையும் கரணங்களையும் பெற்றிருந்தேன் என்பர். வேறுசிலர் யானை ஊறும் நாற்றமு மாகிய உணர்ச்சிகளையுடைய துதிக்கையைப் பெற்றும் அதனால் பயன் கொள்ளாதவாறுபோல அறிவுபெற்றும் உள்ளக்கருவை அறிதலாகிய பயனைப் பெற்றிலேனாதலால் இங்ஙனம் கூறினார் என்பர். மற்றும் சிலர் கையால் ஒருதரமும் வாயால் ஒருதரமும் நீரைப்பருகும் யானையைப்போல, பலகால் முயன்று உடல் பருக்க வைத்தேன் என்று வருந்துவார் இங்ஙனம் கூறினர் என்பர்.

பின் உரையாசிரியர் ஒருவர் இரண்டு கையினையுடைய ஆசானை ஒத்துச் சோகம்பாவனையிலிருந்து உள்ளக்கருவைக் கண்டிலேனென்று உரைகூறி இருகை யானைஎன்பது ஆசானைக் குறிக்கும் என்பர். இவற்றுள் சிறந்தது துணிதல் தெள்ளி யோர் கடன்.

யானை, தன்னுடலைத் தானறியாததுபோல, என்னுள்ளக் கருவை யான் கண்டிலேன் என்பதற்கு உவமித்ததாக உரைப் பாருமுளர்.

யோகநூலார் மிகப் பெரிய துதிக்கையையுடைய யானையை ஒத்து, அதாவது துதிக்கை தலையிலிருந்து அதன் தொப்புள் வரையில் விளங்குவதுபோலக் குண்டலினியோடு கூடிய நாதத்தைப் (பிரணவத்தைப்) பிரமரந்திரம் வரை எழுப்பி இணைத்து ஒன்றுதலாகிய யோகத்திலிருந்து என்றுரைப்பர்.

இராமாயணத்தில் 'இருகையின் கரி நிகர் எண்ணிறந்தவர்' என்றும், 'இருகை வேழத்திராகவன்' என்றும் இராமனையும் மந்திரிமார்களையும் குறிப்பிடுகின்றார். ஒளித்த துப்பும் நிறமும் அவர்களை யானைக்கு ஒப்பிடத் தூண்டின. ஆனால் யானைக்கு உள்ளது ஒரு கை. இவர்களுக்கு உள்ளன இரண்டு கைகள். இந்த இடையூற்றைப்போக்க 'இரு கை வேழம்' 'இருகையிற் கரி' என்று இல்பொருளுவமை கொடுத்தார்.

உடல் பெற்றதன் பயனை அடையாது வறிதே வாழ்கின்றேன் என்பதைக் குறிப்பிப்பார் 'இருந்து' என்கின்றார்.

உள்ளக்கரு - உயிர்க்கு உயிராக இருக்கும் இறைவன். கரு என்றது வித்தினுள் இருக்கும் முளைபோல அனைத்திற்கும் காரணமாயிருப்பது. உள்ளக்கரு என்றது அறியாமையில் அழுந்தியிருக்கின்ற உள்ளம் ஒளியைப்பெற்று உய்வதற்குக் காரணமாய் மனத்துள் இருக்கின்ற சிவச்சோதி.

கரு - ஒன்றனை உருவாக்கப் பயன்படுத்தும் ஆசு (Mold). உள்ளம் தனக்கு ஓருருவம் இல்லாதது; பற்றிய பொருளின் வடிவமாக ஆவது. உள்ளத்தை உருவாக்கும் கருவாக அமைந்திருக்கின்றார் பெருமான் எனலுமாம். அதனைக் காணுதலாவது கருவாயிருந்து உயிருக்கு உணர்வுதந்து பாசங்களினீங்கி, அது உய்ய உதவியவன் இறைவனே என்றும் அவனை மன மொழி மெய்களால் வழிபடுதலே கடமை என்றும் அறிந்து நடத்தல். அங்ஙனம் செய்திலேன் என்பார் 'யான் கண்டிலேன்' என்றார்.

உள்ளக் கருவைக் கண்டு பேரின்பம் எய்தாதபொழுது அதன் மறுதலையாய துன்பமே தோன்றுமாதலின் 'கண்டது எவ்வமே' என்றார். உலகத்து இன்பங்கள் இன்பம்போலத் தோன்றும் துன்ப வடிவின. ஆதலால் 'எவ்வமே' எனத் தேற்றேகாரம் கொடுத்து ஓதினமை காண்க.

தன் கடமையில் தவறி, தவறுமிழைத்த அடிமை, தலைவனைக் காண நேர்ந்தவிடத்து ஒதுங்கிப்போதல் உலக இயல்பு. தலைவன் பிழையெலாம் தவிரப் பணிகொள்ளுகின்ற நிலையில் அவனைப் புறம்போக விடாது 'வருக' என்றழைப்பதுபோல உள்ளக்கருவைக் காணாது ஒதுங்கிப்போகின்ற என்னை 'வருக' என்று வலிய அழைத்துப் பணித்தான் என்பார் 'வருக என்று பணித்தனை' என்றார். 'வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணை' எனப் பின்னர்க் கூறுதலும் காண்க.

கிற்றிலேன் - இதில் கில் என்பது 'ஆற்றல்' பொருளைத் தருவதோர் இடைச்சொல். கிற்றிலேன் என்பதற்கு ஆணையின்படி அணுகுவதற்கும் இட்ட பணியை இயற்றுவதற்கும் ஆற்றலற்ற யான் என்க.

உண்ணகிற்பன் என்பது உண்ணும் ஆற்றலுடையேன் என்னும் பொருள்தருவது. யானை என்றதற்கேற்ப உண்ணும் ஆற்றலுடையேன் எனப் பொருள்படுமாயினும் ஈண்டுப் புல நுகர்ச்சிகள் அனைத்தையும் குறிக்கும். மிக உண்டு நன்றியறிதலின்றி வருந்துகின்ற என்னையும் வலிய ஆட்கொண்ட தன் கருணையைப் பாராட்டுமுகத்தான் அது ஈடுசெய்ய முடியாமைக்கு இரங்கிக் கூறுதலின் இது கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகக் கருத்தோடு ஒத்ததாதல் உணர்க.

பழைய உரை இப்பாடற்குச் சம்பிரதாய சிருட்டி என்று பயன்கூறும். சம்பிரதாயமாவது மரபுவழக்கு. சிருட்டியாவது அம்மரபினைப் படைத்துக்கோடல். இத்திருப்பாட்டு, காண வேண்டியதைக் கண்டிலேன்; வேண்டாததைக் கண்டேன்; உண்ண வேண்டியதை உண்டிலேன்; வேண்டாதவற்றை உண்டேன் என ஆன்மா ஆண்டவன்முன் சூரியன்முன் விளக்குப்போல அடங்கியிருத்தலாகிய சம்பிரதாயத்தை அறிவித்தலின் சம்பிரதாய சிருட்டியாயிற்று.

46 உண்டொர் ஒண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டி ராணலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே. 42

இ - ள்: ஒப்பற்ற ஒளிவடிவான முதற்பொருள் ஒன்று உண்டு என்று பொதுவகையான் உணர்பவர்கட்கு எல்லாம் பெண் என்றோ, ஆண் என்றோ, அலி என்றோ துணிந்து அறிய முடியாத நிலையில் உள்ளாய்; அடியேனுக்கு உள்ளபடி வந்து

காட்சியளித்தாய்; அடியேன் என் அறியாமையால் உன்னை கண்டும் கண்டிலேன் ஆயினேன்; இது என்ன கண்மயக்கமோ என்றவாறு.

பரம்பொருள் ஒன்று உண்டு என்று அறிகின்றவர்களுக்கு இத்தன்மையது என்று சிறப்புவகையால் அறியப்படாதிருக்கும் நீ, எனக்கு உள்ளபடி காட்சி தந்தாய்; அதனை யான் கண்டும் கண்டிலேன் என அறிவிக்கின்றார்.

பெண்டிர், ஆண், அலி என்ற பாகுபாடுகள் மாயேயமாய்ச் சுட்டி அறியப்படும் தன்மையவாகலின், ஒப்பற்ற ஒளிபொருந்திய பொருள் ஒன்று உண்டு என்று சிறப்புவகையால் அறிகின்ற உண்மை ஞானிகளுக்கெல்லாம் பெண் ஆண் அலி என்று அறியமுடியாதவன் என்பார் 'ஓர் ஒண்பொருள் உண்டென்று உணர்வார்க்கெலாம் பெண்டிர் ஆண் அலி என்று அறியொண்கிலை' என்றார். ஓர் பொருள் என்று அறிகின்ற அறிவு இறைவன் எங்குமாய் உலகெலாமுணர்ந்து ஓதுதற்கரிய சோதியாயிருக்கும் நிட்களவுருவை அறியும் நிர்விகற்பக் காட்சி. பெண்டிர் ஆண் அலி என்றறிதல் சவிகற்பக்காட்சி. நிர்விகற்பக் காட்சியாய் அறிகின்ற விஞ்ஞானிகளுக்குச் சவிகற்பக்காட்சி அறியப்படாததாதலின் 'அறியொண்கிலை' என்றார். இதற்கு இவ்வாறன்றிப் பொதுவகையில் உணரும் அன்பர்களுக்கெல்லாம் ஆண் பெண் அலி எனத் துணிந்து அறிந்துகொள்ளமுடியாத நிலையிலுள்ளான் என்று உரைப்பர்.

சிவஞானியர்க்குக் கலந்த நிலையில் பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆநந்த போதமாய் அறியப்படுகிற இறைவன் ஆண் பெண் முதலான பாகுபாட்டால் அறியமுடியாமையை, "பரமே பார்த்திருப்பர் பதபதார்த் தங்கள் பாரார்" என்பதனுற்றெளிக.

பழைய உரை இச்சகத்தை நடத்த ஒரு வஸ்துளது என்று அறிபவர்களுக்கு அவன் அவள் அதுவாக இருப்பதை அனுபூதியால் பெறுகின்றிலை என்றுகூறும். அவன் அவள் அதுவாக ஒன்றியும் வேருயும் கலந்தும் இருப்பதை அனுபூதியால் பெற்ருயில்லை என்று தன் நெஞ்சிற்குக் கூறியதாக உரைப்பர்.

அங்ஙனம் மெய்ஞானியர்க்கும் வியாபகப்பொருளாயன்றி அறியப்படாத இறைவன் அடியேனுக்கு ஆசாரிய மூர்த்தியாக உள்ளபடிவந்து தோன்றினன்; அதற்குக்காரணம் யான்செய்த தொண்டே என்பார் 'தொண்டனேற்கு' என்ருர். உள்ளவா

வந்து தோன்றுதல் - தன்னுடைய தகுதிக்கேற்பத் திருமேனி தாங்கிவந்து காட்சி அளித்தல்.

இறைவி, ஒருவன் படும் ஏழைமைத் துன்பத்திற்கு இரங்கி இவனுக்குப் பெருஞ்செல்வம் உண்டாகத் திருவருள் பாலித்தாலென்ன என்று இறைவனை வேண்டிக்கொண்டார். இறைவன் அவனுக்குச் செல்வனுதற்கு உரிய நல்லூழ் இல்லாமையை அம்மைக்குணர்த்தத் திருவுளங்கொண்டு அவனெதிரில் பொற்கிழி ஒன்றைப் போட்டுவைத்தார். ஏதோ கற்பனைசெய்து கொண்டே செல்கின்ற அவன், குருடன் எவ்வாறு வழிநடப்பான் எனக் கற்பித்துக்கொண்டு தன் கண்களை இறுக மூடிக் கொண்டே பொற்கிழியைக் கடந்து நெடுந்தூரம் சென்று விட்டான். இறைவன் அம்மையைப்பார்த்து அவன் ஊழ்வினை இருந்தபடியைப் பார்; நம் அருளிருந்தும் அதனைப் பெற்று உய்யாமல் கண்மூடிக் குருடனுகச் செல்கின்றுன் என்றுராம். அதுபோல இறைவன் குருநாதனுகவந்து தோன்றியும் தான் அவரைத் தரிசித்தும் இப்போது கண்ட சுவடும் கருத்தின்றி மறைந்தமையால் 'கண்டும் கண்டிலேன்' என்றுர். கண்ணிலான் பெற்றிழந்தான் எனக் கருணைக்கடலாகிய இறைவனைக் கண்டும் அவன் கரத்தலால் வந்த துன்பம் மேலிட 'எனது தலைவனை நனிகாணேன் தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே' என்று வருந்துகின்றவர் ஈண்டும் அந்நிலை அனைத்தையும் கண்டும் கண்டிலேன் என்பதால் குறிப்பித்தார்.

பழைய உரையாசிரியர் அத்துவிதமாய் அனுபூதி அருளியதே ஒழிய வேறு காணுதமாயம் என்னமாயமென உரைப்பார். இதன் கருத்து உருவைக்கண்டதும் கருவி கரணங்கள் ஆநந்த அதிசயத்தால் செயற்படாது சிவானுபூதியிலேயே திளைத்திருத்தலின் வேறு எதனையும் காணுததாயிற்று என்பதாம். இப் பகுதிக்குப் பின் உரையாசிரியர் வேறு உரை கூறுவர்.

கண்மாயம் - கண்கட்டு வித்தைபோலக் கண்ணுக்கு விளையும் ஒருவகை மயக்கம். அனைவரும் அறிந்த ஒன்றைத் திடீரென மறைப்பதும் அறியாத ஒன்றைக் காட்டுவதும் மாற்றுவதும் கண்கட்டுவித்தையின் செயல்கள். அதுபோல, கண்ட இறைவன் மறைந்தமையால் 'கண்மாயம் என்ன' என்றுரைத்தார். ஒளிப்பொருள் இருளாய்த் தோன்றுதல் கண்குற்றமே ஆதல்போல நீக்கமற நிறைந்த பொருள் கரந்ததாகக் கருதல் என் கண்ணின் மயக்கமே எனினும் ஆம்.

இவ்வண்ணம் 'உள்ளவா வந்து தோன்றினாய்' என்று இறைவன் செய்த உபகாரத்தையும் 'கண்டும் கண்டிலேன்' என்று தான் கைம்மாறு செய்ய முடியாமையையும் விண்ணப்பித்தலின் இது கைம்மாறு கொடுத்தலாயிற்று.

47 *மேலை வானவ ரும்மறி யாததோர்*
*கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே*
*ஞால மேவிசும் பேயிவை வந்துபோங்*
*கால மேயுனை யென்றுகொல் காண்பதே.* 43

இ - ள்: மேலான பதவிகளில் உள்ள தேவர்களும் அறிய முடியாத ஒப்பற்றதிருவுருவே! அடியேனையும் ஒருபொருளாக ஆட்கொண்ட கூத்தப்பெருமானே! மண்ணும் விண்ணும் தோன்றி அழிதற்குக் காரணமான காலவடிவானவனே! உன்னை அடியேன் காண்பது என்றைக்கோ என்றவாறு.

காலதத்துவத்துள் கட்டுண்டுகிடக்கிற நான், காலாதீதப் பரம்பொருளான உன்னைக் காண்பது எப்பொழுது என்று விண்ணப்பிக்கின்றார்.

வானவர் - தேவர்கள். மேலை வானவர் - அவர்களுக்கு மேலான நிலையிலுள்ள திருமால் பிரமன் முதலானவர்கள். இவர்கள் இறைவனுடைய ஆணையின் வண்ணம் படைத்தல் முதலான தொழில்களைச் செய்துகொண்டு அதிகார மலத்துள் அழுந்தியிருக்கும் பெத்தான்மாக்கள் ஆதலின் அவர்களால் அறியப்படாத ஞானவுருவினன் என்பார் 'மேலை வானவரும் அறியாததோர் கோலமே' என்றார். அவர்களால் அங்ஙனம் அறியப்படாத அறிவு உருவம் இத்தகைத்து என அறியமாட்டாமையான் 'ஓர் கோலமே' என்று பொதுவகையால் குறிப்பிட்டார். கோலம் என்பது அழகு என்னும் பொருளைத்தரும் பண்பாதலானும் பண்பு எல்லாவிடங்களிலும் அமைந்து பரவி நிற்பதொன்று ஆதலானும் இங்ஙனம் கூறிய நயமறிந்து இன்புறுக.

இந்திரன் முதலிய தேவர்கள் அசுரரை வென்றகாலத்து, வெற்றிமதத்தால் செருக்கி இவ்வெற்றி தம்மால் ஆயதென்று இறுமாந்தனர். பெருமான் ஒரு யக்ஷனாகத்தோன்றி, இந்திரன் பேரவையில் சிம்மாசனத்தைவிட உயர்ந்த ஆசனமொன்றில் வீற்றிருந்தார். இந்திரன் அவர் உருவை அறிந்துகொள்ள இயலாமையால் அக்கினியை அழைத்து அறிந்துசொல் என்று ஆணை தந்தான். அக்கினியும் யட்சனை அணுக, யட்சன் நீ யார் என்று வினவினன். அக்கினி தன்னுடைய பெருமைகளைச்

சொன்னான். யட்சன் ஒரு துரும்பைக் கிள்ளி அவன் எதிரில் இட்டு உனது ஆற்றலால் இதனைச் சாம்பராக்குக என்றனன். அக்கினி எவ்வளவு முயன்றும் முடியாதுபோகவே வெட்கி, இந்திரன்முன்சென்று தேவர்களே! இந்திரனே! அந்த யட்சன் பெருமையை என்ன என்று சொல்வேன் என்று வியந்தான். தேவேந்திரன் நாமே சென்று அறிந்து வருவோம் என்று அணுகினான். யட்சன் அவனாலும் அறியப்படாதவனாக மறைந்தான். இந்திரன் திகைத்து நிற்க, உமாதேவி அவன்மீது இரங்கி, விண்ணில்தோன்றிக் காட்சி வழங்கினாள். இந்திரன் அம்மையைப் பார்த்து இந்த யட்சன் யார் என்று வினவினான். அம்மை, இவரே என்பதி; உங்களுடைய வாழ்வு அனைத்திற்கும் பரமகாரணர் என்று உபதேசித்தாள். அவள் காட்டிய உபதேசமுறையில் நின்று இந்திரன் யட்சமூர்த்தியான பேரொளிப் பிழம்பை அறிந்து வழிபட்டுய்ந்தான் என்ற சாமவேதத்தைச் சார்ந்ததான கேனோபநிடதத்தில் ஒரு வரலாறு உண்மையும் இதனை வலியுறுக்கும்.

மாணக்கன் நிலையறிந்து தன்னிலையில் இரங்கிவந்து உபகரிக்கும் ஆசாரியன்போல அடியேனை ஆட்கொள்ள உருவத் திருமேனி தாங்கிவந்தான் என்பார் 'என்னை ஆட்கொண்ட கூத்தனே' என்றார். கூத்தன் படைத்தல் முதலான ஐந்து தொழில்களையும் ஒருசேர இயற்றுதல்போல அடியேனுடைய அறிவைத் தோற்றுவித்து வல்வினையைச் கட்டழித்து என்னையும் ஆளாக ஏற்றுக் காத்தான் என்பதைக் குறிப்பித்தவாறு.

காலம் அருவமானது. மண்ணும் விண்ணும் மற்ற பூதங்களும் சூரியனும் சந்திரனும் தோன்றி அழிகின்ற சார்பினைக் கொண்டு அறியப்படுவது ஆதலால் மண்ணும் விண்ணுமாகிய இவைகள் தோன்றி அழியும் காலமாகக் கடவுளை விளித்தார். ஞாலமே விசும்பே என்பதிலுள்ள ஏகாரங்கள் எண்ணோகாரங்கள்.

நீ கால தத்துவத்தை வென்றவன்; நான் காலபாசத்துள் அகப்பட்டவன். ஆகவே, தேவரீர் காலம் தாழ்த்துதல் கூடாது என்பார் 'என்றுகொல் காண்பதே' என்றார். வந்துபோதல் - தோன்றி ஒடுங்குதல்.

இதில் ஆட்கொண்ட கூத்தனாகிய தேவரீரைக் காண்பது என்றுகொல் என்று கவல்வதால் கைம்மாறுகொடுக்க இயலாமையை அறிவித்தல் வாயிலாகக் கைம்மாறுகொடுத்தலைப் புலப்படுத்தினார்.

48 *காண லாம்பர மேகட் கிறந்ததோர்*
*வாணி லாப்பொரு ளேயிங்கோர் பார்ப்பெனப்*
*பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்*
*பூணு மாறறி யேன்புலன் போற்றியே.* 44

இ-ள்: சிவஞானியர்க்குச் சிவஞானத்தால் காணத்தரும் பரம்பொருளே! கண்ணாகிய கருவியைக் கடந்து நிற்கின்ற ஒப்பற்ற ஒளிப்பிழம்பாகிய பொருளே! இந்த உலகத்துப் பாழ்பட்டவனாகிய யான், பறவைக்குஞ்சைப்போல் புலன்களை நீக்கி இவ்வஞ்சக உடலையும் விட்டு, வெளிப்பட்டு உன்னைப் பொருந்தும் முறையை அறியேன் என்றவாறு.

உடலைவிட்டு, இறைவனை அடையுமாறு அறியேன் என்று விண்ணப்பிக்கின்றார்.

தேவர்கள் இறைவனைக் காணமாட்டாமையால் இறைவன் யாராலும் காணப்படாதவன் ஆவனோ; காணப்படானாயின் அவனால் உயிர்களுக்குளதாம் பயன்தான் என்னே! என்று உயிர்கள் ஒழியுமாதலின், அந்த ஐயம் நீக்குதற்பொருட்டுக் 'காணலாம் பரமே' என்றார். இறைவன் பரம்பொருளாக எல்லா உயிர்களோடும் ஒன்றாக இருக்கின்றநிலையில் காணத் தக்கவர் என்பது கருத்தாம்.

அடுத்து, அவன் ஒளியாய் உருக்கொள்ளுகின்றகாலத்து ஒளியை உணருவன கண்கள்தாமே! அவற்றால் உணருவோம் என முற்படுவார்க்கு, கண்ணினாற்றலைக் கடந்து விளங்கும் பேரொளிப் பிழம்பாவான் என்பதனை உணர்த்த 'கட்கு இறந்ததோர் வான் நிலாப் பொருளே' என்றார். பரமானநிலையில் காணலாவதும், ஒளியானநிலையில் காண முடியாத தன்மையும் எங்ஙனம் பொருந்தும் எனின், கூறுதும்:

இறைவனை அறிவதற்கு நூலறிவாகிய பாச ஞானமும், நானே இறைவன் என்று எண்ணுகின்ற பசுஞானமும் பயனற்றன; அவனருளே கண்ணாகக் காணுகின்ற பதிஞானமே அறிதற்குரியதாம் என்பதனை "ஊனக்கண் பாசம் உணராப் பதியை, ஞானக்கண்ணினில் சிந்தை நாடி" எனச் சிவஞான போதமும், "பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடும் உளத்தே நாடி" எனச் சிவஞானசித்தியாரும் தெரிவித்தல் காண்க. இவற்றால் இறைவன், பரமானநிலையில் அவனருளே கண்ணாகக் காணும் உணர்வரிய மெய்ஞ்ஞானத்தால் அறியத்தக்கவன் என்பது பெறப்படுதல் காண்க.

இறைவன் பேரொளிப் பிழம்பினன் என்பதை வேதசிவாக மங்களான் உணர்ந்தும் கருவி கரணங்களால் அறிய முற்படுவார்க்குக் கருவியாகிய கண்ணின் ஆற்றலைக் கடந்த பேரொளியாய்ச் சிவன் விளங்குதலின் 'கட்கு இறந்ததோர் வான் நிலாப் பொருள்' என்றார். கருவி கரணங்கள் மாயையின் காரியங்கள்; அறிவற்றவைகள்; அவைகளால் அறிவுருவினனாகிய இறைவன் அறியப்படுவது எங்ஙனம்? என்றவாறு.

ஒளி வெப்பமுடையதாதல் கண்கூடு. இறைவனாகிய பேரொளி நிலாப்போலத் தட்பவொளி என்பார் 'வான் நிலாப் பொருளே' என்றார்.

'பார்ப்பென ஆக்கையை விட்டு' எனக் கூட்டுக. ஆக்கை : யாக்கை என்பதன் மரூஉ. யாக்கை எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டது என்னும் பொருளது. நாரும் நரம்பும் குச்சியும் கோலுமாகிய இவற்றால் கட்டப்பட்ட கூடுபோன்றது. அதனுள் வாழும் உயிர் கூட்டுள் வாழும் குஞ்சு போன்றது. குஞ்சு இறகு முளைத்துத் தானே பிழைக்கும் ஆற்றல் வரும்வரை கூட்டில் வாழ்ந்து, பின்பு பூதாகாயத்தைத் தனக்கு வாழுமிடமாகக் கொள்வதுபோல உயிரும் உடலை இடமாகக்கொண்டு, உண்மையையுணர்ந்து, வினைப்போகக் கழிவின்கண் பராகாசவடிவினனாகிய இறைவனைச் சார்ந்து தாடலைபோல ஒன்றிவாழும் ஆதலால் 'பார்ப்பென ஆக்கையை விட்டு' என்றார். இப்பகுதி 'குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே' என்ற திருக்குறளை நினைவூட்டுதல் காண்க.

பாணன் - பாழ்நன் என்பதன் மரூஉ. பயன்படாது பாழாய்ப்போனவன் என்பதாம். இறைவன் உடல் உலகு இவற்றை நமக்குதவியது, உணர்ந்து முத்தியின்பம் பெறுதற் பொருட்டேயாகலான் அதனை அடையாத தன்னைப் 'பாணனேன்' என்று இழித்துரைத்துக்கொண்டார்.

"நீரில் எழுத்தாகும் யாக்கை" என்பவாகலின், தோன்றி நின்று அழியும் உடலைப் 'படிற்றாக்கை' என்றார். படிறு - பொய், வஞ்சனை எனக்கொள்ளின் வஞ்சனை நிறைந்துள்ள யாக்கை என்க.

உயிர்கள் என்றும் தலைவன் அருள்வழி நடப்பனவேயன்றி தமக்கென்று தனித்த சுதந்தரமில்லன ஆதலின், ஆக்கையைத் தாமே விடவும், தலைவனைப் போய்ச்சாரவும் தகுதியில்லாதன. ஆகவே இந்த யாக்கை தொடராதவாறு திருவருள்பாலித்து

நீ விடச்செய்தாலன்றி விடுதலும், 'என்னடியின்கீழிருக்க' என நீ பணித்தாலன்றி இருத்தலும் என்றால் இயலாது என்பார் 'விட்டு உனைப் பூணுமாறு அறியேன்' என்றார். பூணுதல் - அணி, முடிபோலப் பொருந்தச் செய்தல்.

காணலாமே பரம் - பரமான உன் நிலை காணக்கூடியதா? எனவும், பார்ப்பு - பன்றிக்குட்டி எனவுங்கொண்டு, யாக்கையை விட்டு அடைவதான விதேகமுத்தியைப் பெறுமாறு அறியேன் ஆதலால் அடியேன் தேகத்தோடு வாழும் இப்பிறவியிலேயே இப்போதே திருவடிமலரைச் சூட்டி, மல மாயை கன்மங்களைப் போக்கிச் சீவன்முத்தனாக்கி ஆட்கொள்ளவேண்டும் என்று வேண்டியவாறு என்னும் பழையவுரை.

தாய்ப்பறவை காட்டியவழி நடவாமல், சோம்பிக் கூட்டிலேயே கிடக்கும் பறவைபோல, ஆசாரியனாகி நீ உபதேசித்த நெறி நடவாது இவ்வுடலையே பற்றிப் புலன்களையே போற்றி வாழ்கின்றேன் என்பாரும் உளர்.

இங்ஙனம் தன் ஆற்றாமையை விண்ணப்பிக்கு முகத்தான், இறைவன் ஆட்கொண்ட உதவிக்குக் கைம்மாறு கொடுக்க இயலாமையை உணர்த்துதலின் இத்திருப்பாடல் கைம்மாறு கொடுத்தலாயிற்று.

49 *போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்துநின்*
*றாற்றன் மிக்கவன் பாலழைக் கின்றிலேன்*
*ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்*
*கூற்ற மன்னதோர் கொள்கையென் கொள்கையே.* 45

இ - ள்: போற்றி என்றும், புரண்டு வலம் வந்தும் புகழ்ந்து அன்பில் நிலைபெற்று, உறுதியான உள்ளன்பால் உன்னை அழைக்கின்றிலேன்; என் கொள்கையானது உன்னை எதிர்த்து வந்து திருவடித் தாமரையை அடைந்த எமனை ஒத்ததோர் கொள்கையாகும் என்றவாறு.

மெய்யன்பர்களைப் போலவே அன்பு செய்து அடியடைய வேண்டிய யான், எமனைப்போல எதிர்த்துப் போராடி அடியடைய எண்ணுகிறேன் என் கொள்கை இருந்தபடி என்னே! என்றருளுகின்றார்.

மன மொழி மெய்கள் இறைபணி செய்து தூய்மையானால் அன்றி இறையன்பு மனத்தில் நிலைபெறாது. பணி செய்ய இறைவன்பால் அன்புவேண்டும். அது உயிர்க்குணமாயினும்

தானாக வெளிப்படாது. இறைவன் எமக்கு முதல்வன் என்ற உண்மை ஞானம் தோன்ற இறைவன்பால் அன்பு விளைய லாம். இறைவன் நம்மிடர் களைந்து ஆட்கொண்டு இன்பமே அளிப்பான் என்ற எதிர்நோக்காலும் அன்பு விளையலாம். அவற்றுள் ஆன்மலாபம் கருதிய அன்பு தோன்ற 'போற்றி' என்று அழைக்கின்றிலேன் என்றார். போற்றி: 'என்னைப் பாதுகாக்க' என்று வேண்டிக்கொள்ளும் வியங்கோள் வினை முற்று.

அன்பு தோன்றும்போதே இறங்குதுறையில் நீத்தாறு போல எல்லைகடந்து தோன்றவேண்டும். அதனால் அடியற்ற மரம்போலக் கீழேவிழவேண்டும். விழுந்து திருக்கோயில் திரு வீதி முதலியவற்றில் அங்கப்பிரதட்சிணம் வருதல்வேண்டும். உலகவர் பழிப்பையும் ஏச்சையும் பேச்சையும் பொருட்படுத்தாத நிலை வரவேண்டும். அங்ஙனமும் செய்திலேன் என்பார் 'புரண்டும் அழைக்கின்றிலேன்' என்றார். இதற்கு, தலையும் கையும் போல எல்லா அவயவங்களும் வணங்கப் புரண்டிலேன் எனக் கருத்துரைப்பாரும் உளர். இது மெய்த்தொண்டு கூறியது.

அன்பு மிகுந்த இடத்து அன்புடையாரைப் புகழ்ந்து கொண்டேயிருக்குநிலை எய்துமாதலின் அங்ஙனமும் 'புகழ்ந்து அழைக்கின்றிலேன்' என்றார். இது மொழித்தொண்டு கூறியது.

இவ்வண்ணம் முக்கரணங்களாலும் இறைவனை வழிபட்ட காலத்து உள்ளத்தூறிய அன்பு முறுகி உறைத்த அன்பாம். அதனால் யாரும் அறியவொண்ணாத இறைவனையும் அகப் படுத்தி 'எங்கெழுந்தருளுவதினி' என்று வினவலாம் என்பார் 'ஆற்றல் மிக்க அன்பு' என்றார்.

மேல், அன்பால் அடையமுயலாத யான், வன்பாலடைய எண்ணுகிறேன் என அறிவிக்கின்றார். கூற்றுவன், மார்க்கண் டேயருயிரைப் பிரிப்பது வியாசமாகக்கொண்டு இறைவனையும் பாசத்தால் பிணித்திழுத்து அவர் திருவடி தீண்டப்பெற்று உய்ந்தமைபோல, அடியேனும் முயல்வேன் என்பார் 'கூற்றம் அன்னதோர் கொள்கை என் கொள்கையே' என்றார். 'கூற்றம் அன்னதோர் கொள்கை என்றாரேனும், ஓர் கூற்றத்தின் கொள்கையன்னது என் கொள்கை எனப் பிரித்துக்கூட்டிப் பொருள்கொள்க.

எதிரேற்று வந்து தாமரைத்தாள் உறும் கூற்றம் என்க. கூற்றம் அறியாமையால் செருக்கி, இறைவனுக்கு யாம் எவ்வாற் றானும் எதிராகோம் என்பதை உணராது எதிர்த்து. விட்டில்

வலியவந்து விளக்கில் விழுந்து மடிவதுபோல, வெற்றி விருப்பால் தாமே வலியவந்தான் என்பார் இங்ஙனம் கூறினார்.

மருந்தை அறியாது உண்டாலும் அதன் பயன் நலமாதல்போல, கூற்றுவன் அறியாது வரினும் அவனுக்கு அறிந்து உண்டார் எய்தும் பயனைவிட மிகவிரைவில் இன்பம் கிடைத்தது என்பார் 'தாமரைத் தாள் உறு கூற்றம்' என்றார். மென்மையும், தண்மையும், மணமும், நிறமும் உடையதாய் எல்லாக் கருவி கரணங்களுக்கும் இன்பந்தந்தது என்பார் 'தாமரைத் தாள்' என்றும், தாள் திருவருட்சத்தி வடிவாதலின் தாமே வந்து கூற்றத்தின் மீதுற்றது என்பார் 'தாள் உறும் கூற்றம்' என்றும் கூறினார்.

பரிசவேதி பட்டவுடனே இரும்பு பொன்னானாற்போலத் திருவடி தீண்டிய மாத்திரத்தில் அவனுடைய ஆணவம் வலி குன்றியதால் அவன், இடைவிடாத காட்சியும் அருளும் பயனும் பெற்று உய்ந்ததுபோல அடியேனும் உய்வேன் என்பது உணர்த்தியவாறு.

அறியாமையால் வந்த கூற்றுவற்கு அடியார்க்கருளும் திருவடி தீட்சையைச் செய்த அருளுபகாரத்தைக் கண்டுகொண்டு (குற்றமே செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டு) வந்தேன் என்றார் என்று பழைய உரை கூறும்.

'அன்பால் அழைக்கின்றிலேன்' எனத் தன் குறையை உணர்ந்து, தாமரைத்தாளுறும் விருப்பை விண்ணப்பித்தலால் இச்செய்யுள் கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகப் பொருளுக்கு இயைபுடைத்தாதல் காண்க.

50 *கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி*
*கள்ளும் வண்டு மறுமலர்க் கொன்றையான்*
*நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்*
*எள்ளும் எண்ணெயும் போனின்ற எந்தையே.* 46

இ-ள் : தேனும் அதனை உண்ண வருகின்ற வண்டுகளும் நீங்காத கொன்றைமலர் மாலையை உடையவனும் மேலும் கீழும் நடுவுமாக எல்லாவற்றுள்ளும் எள்ளும் எண்ணெயும் போல் நிறைந்து பரந்து நிற்பவனுமாகிய என் தந்தையாகிய சிவபெருமான் அடியேனை வலியக் கூவி அழைத்து அடிமை கொள்ளுவானோ என்றவாறு.

எல்லாப் பொருள்களினிடத்தும் அத்துவிதமாய் நிற்கும் இறைவன் அடியேனையும், பிற அன்பர்களைப் பணிகொள்வது போலக் கொள்வாரோ என ஐயுற்று வினவுகின்றார்.

தன் முதல்வனைச் சிறப்பான அடையாளம் காட்டி அறிவிக்கும் அடிமைபோல, அடிகள் அடையாள மாலையைக் காட்டி அறிவிக்கின்றார் கொன்றையான் என்று. கள்ளும் வண்டும் ஒன்றையொன்று பற்றிநிற்பன. கள்ளற்றால் வண்டும் அற்றுப் போம். கொன்றைமலர் கள்ளறுமலராகவே வண்டும் அதனை அகன்றிலதென்பதாம். தேனோடுகூடிய கொன்றையை வண்டு நீங்காததுபோல அருளோடுகூடிய இறைவனை அன்பர்கள் நீங்கார் என்பது குறித்தவாறு. தேவர்கள் சூடிய மலரிலும் வண்டு மொய்க்காதெனவே, தேவதேவனாகிய இறைவன் சூடிய மலரில் மொய்க்கலாமோ எனின், இறைவன் எல்லா உயிர்களுக்கும் அவரவர் பரிபாகநிலைக்கு ஏற்ப அவ்வந்நிலையில் அருள் சுரப்பவன் ஆதலின் வண்டுகளுக்கும் தேனளித்துக் காக்கும் முழுமுதற்றன்மையால் ஆம் என்க.

இறைவன் சூடிய கொன்றைப்பூ என்றும் வாடாமையின் புதிய தேன் சுரந்து புதுமை குன்றாதிருத்தலின் 'கள்ளறு மலர்க்கொன்றை' என்றார் எனலுமாம்.

நள் - நடு. இதயத்தாமரையின் பொகுட்டின் நடுவில் உயிர்க்கு உயிராக ஒரு கட்டைவிரல் அளவினதாகிய ஒளியாக விளங்குதல். கீழுளும் என்றது எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் நிற்றல். மந்தரமலை ஆழாதவாறு ஆதி கமடத்தைக்கொண்டு தாங்கப் பணித்ததுபோல விளங்குதல்.

மேலுளும் - எல்லாவற்றின் மேலும் பாதுகாப்பாய் விளங்குதல்.

யாவுளும் நள்ளும் கீழுளும் மேலுளும் எள்ளும் எண்ணெயும்போல நின்ற என இயைக்க. இயங்குவ நிற்பவான அனைத்தையும் அடக்கி யாவுளும் என்றது. எள்ளில் நெய் எங்குமாய்ப் பரந்துநிற்றல்போல இறைவனும் எங்கும் பரந்து ஒருதன்மையாய் விளங்குதலை உணர்த்தியவாறு. அங்ஙனம் எல்லாப் பொருளினும் கலந்துநின்றாலும், என்க்குத் தந்தையாவான் என்பார் 'எந்தையே' என்றார்.

தலைவராவார் தம் அடிமையை அடிக்கடி அழைத்துப் பணிகொள்ளுதலே அடிமைக்குச் சிறந்த பாராட்டு ஆதலின் என்னை அழைத்துப் 'பணிகொள்ளுங்கில்' என்றார்.

அடியேனுக்குத் தனியே ஆதரம் காட்ட வேண்டா; மற்ற அன்பர்களை அழைத்துப் பணிகொள்வது போல எனக்கும் பணி கொடுத்தாற்போதும் என்பார் 'அன்பரின் என்னைக் கூய்ப் பணி கொள்ளுங்கில்' என்றார்.

கொள்ளுங்கில் என்பதில் 'கில்' என்பது ஈண்டு வினைப் பொருளில் வந்தது. ஆற்றற்பொருளில் வந்தது என்பாரும் உளர். இறைவன் எல்லாவன்மையும் ஒருசேரப் படைத்தவன் ஆதலின் அவ்வுரை பொருந்தாது என்க.

பணி கொண்டால் கைம்மாறு செய்துவிடலாமே என்ற எதிர்நோக்கால் விண்ணப்பித்தலின் இது கைம்மாறு கொடுத்த லாயிற்று.

*51* எந்தை யாயெம் பிரான்மற் றுமியாவர்க்கும்
தந்தை தாய்தம் பிரான்றனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே. *47*

இ-ள்: அடியேனுக்குத் தந்தையாயும் தாயாயும் தலைவனு மாய் உள்ளான்; மற்றவர் அனைவர்களுக்கும் அவ்வண்ணமே தந்தையும் தாயும் தம்பிரானுமாகி விளங்குகிறவன்; தனக்கு மட்டும் தாய் தந்தை இல்லாதவன்; ஒருவரும் மனத்தால் அறியமுடியாத பெருமான்; அனைவர்க்கும் முந்தி, என் மனத்தினுள் புகுந்தான்; அவனே தேவர்கள் முதலிய யாவர் களாலும் மனத்தாலும் அறிதற்கு அரிய செல்வன் ஆவான் என்றவாறு.

யாராலும் சிந்தையாலும் அறியவொண்ணாத செல்வன், முந்தி என் மனத்தினுள் தானே வந்து புகுந்தனன் என்று இறைவன் செய்த உபகாரத்தை உணர்த்துகின்றார்கள்.

'எந்தையாய் எம்பிரான்' என்பது தன்க்கும் இறைவற்கும் உள்ள அநாதி நித்திய சம்பந்தத்தைத் தெரிவிப்பது. எந்தை யாய் என ஒரு தொடராகக்கொண்டு எம் தந்தையாக உள்ள எனப் பொருள் உரைப்பாரும் உளர். பிரான் - வள்ளன்மை உடையவன்.

மற்று யாவர்க்கும் - அட்டவித்தியேசுரர் முதல் எறும்பீறாக உள்ள எல்லார்க்கும். எந்தை என்பது சிறப்புரிமையையும் தந்தை என்பது பொது முறைமையினையும் உணர்த்துதல் காண்க.

இங்ஙனம் எல்லாருக்கும் தந்தை தாயான தயாபரனுக்குத் தாயும் தந்தையும் தலைவனும் இல்லை, அவன் அநாதி நித்தியன் என்பார் 'தனக்கு அஃது இலான்' என்றார்.

நான் கேவலத்துக்கிடக்கிற அப்போதே என் மனத்துள் புகுந்தான்; ஆனால், அன்று அதனை அடியேன் உணர்ந்திலேன். நல்லறிவு சற்றே நக இன்று உணர்ந்து உரைப்பதானேன் என்ற குறிப்புத்தோன்ற 'என்னுள் முந்தி புகுந்தனன்' என்றார்.

ஆன்மாக்களின் சிந்தை மலமறைப்பால் ஒருவன் உணர்த்தியதைப்பற்றி அவ்வளவில் நின்றறியுமேயன்றி இயல்பாகவே உள்ளவாறறியும் தன்மையில்லாதது. வரம்பிகந்த பேராற்றலை அறிய இயலாதது. இந்நிலை ஒருமலமுடைய விஞ்ஞானகலரிலிருந்து நம்மவரை அனைவர்க்கும் பொது என்பார் 'யாவரும் அறிவரும் செல்வனே' என்றார்.

'உள் புகுந்தனன்' எனச் சிவன் செய்த உபகாரத்தை உணர்த்தி, 'யாரும் சிந்தையாலும் அறிவரும் செல்வன்' எனத் தாம் கைம்மாறுசெய்ய இயலாமையைத் தெரிவித்துக் கூறுதலின் இது கைம்மாறு கொடுத்தற்கு இயைபுடைத்தாதல் காண்க.

52 *செல்வ நல்குர வின்றிவிண் ணோர்புழுப்*
*புல்வ ரம்பின்றி யார்க்கு மரும்பொருள்*
*எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்*
*கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே.* 48

இ - ள்: செல்வர் வறியர் என்ற வேறுபாடின்றி, தேவர் புழு புல் என்ற வரம்பின்றி, யாவர்க்கும் அறிதற்கரிய பொருளாகிய சிவனுடைய திருவடியைத் தரிசிக்கப்பெற்றும் ஒருவகைக் கல்லாலாகிய மனத்தேனாதலால் பிரிந்தேன்; அதனால் யான் பட்ட கட்டங்கள் எல்லையில்லாதன என்றவாறு.

அடிகள் யாவரும் காண இயலாத திருவடியைக் கண்டும், அதனைப் பிரிந்த தன்னிலையை விண்ணப்பிக்கின்றார்.

இறைவன் செல்வர், வறியர், தேவர், புழு என்ற வேறுபாடின்றி அனைவர்க்கும் கிடைத்தற்கரிய பொருளாகக் கிடைத்துள்ளான்; அவன் கழலை அவர்கள் அறியாமையாலும், சுகபோகத்தில் அழுந்திய மயக்கத்தானும் அறியாதிருந்தனர்; யான் கண்டேன்; ஆனால் பிரிந்தேன்; நான்பட்ட கட்டம் எல்லையில்லை என்பது கருத்து.

செல்வம் நல்குரவு என்ற சொற்கள் அவற்றையுடைய மக்களை உணார்த்திநின்றன. இறைவன் எங்கும் சமநோக்கோடு கலந்திருப்பவன் என்பதைச் 'செல்வம் நல்குரவின்றி (கலந்துள்ள) அரும்பொருள்' என்றுணர்த்தியவாறும். அங்ஙனமே விண்ணோர், புழு, புல் என்பனவும் பெருமைக்கும் சிறுமைக்கும் எல்லையாக நின்றன. புழு புல் உளதாகவும் யார்க்கும் என்று உயர்திணையால் கூறியது உயர்வுபற்றி உரைத்ததாம்.

அவ்வண்ணம் யாருக்கும் கிடைக்காத அரும்பேறு அடியேற்குக் கிடைத்தது. அதனைப் பேணும் ஆற்றல் என் மனத்திற்கு இல்லை. மனம் நெகிழ்ந்து மலர்போல் இருப்பின் இறைவன் கழல் மனத்தை விட்டு அகன்றிராது. என் மனம் ஒருவகைக் கல்லாலாயது அதனால் இழந்தேன் என்பார் 'கல் மனத்தேன் கண்டும் பிரிந்தனன்' என்றார்.

குருடன் ஒருவன் இறையருளால் கண்ணைப் பெற்றும் அறியாமையால் இழந்ததுபோல, பெற்றிழத்தல் பெருந்துன்பம்; இல்லாமலேயிருப்பின் அடியேற்கு அத்துன்பம் பெரிதாகத் தோன்றியிராது எனக் கவல்வார் 'பட்ட கட்டம் எல்லையில்' என்றார்.

'எல்லையில் கழல்' வரம்பிகந்து யாவராலும் அளந்தறியவொண்ணாத திருவடியெனக் கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறுங்கால் பட்ட கட்டம் எல்லையற்றது என இசையெச்சமாகச் சில சொற்கள் வருவித்து முடிப்பர்.

'யார்க்கும் அரும்பொருள்' என்பதற்கு யார்க்கும் அரிய பொருளாயுள்ளான் என்று மட்டும் பொருள் கூறுவர் சிலர். இறைவன் யார்க்கும் கிடைத்தற்கரிய பொருளாயின் 'செல்வம் நல்குரவின்றி ... புழுப் புல் வரம்பின்றி' என்ற தொடருக்குப் பொருள் சிறவாமையான், இறைவன் விருப்பு வெறுப்பற்ற உயர்வு தாழ்வற்ற பொதுநோக்குடைமை உணர்த்தவந்த இத்தொடர்க்கு யாவரிடத்தும் கலந்துள்ள அரிய பொருளாயுள்ளான் எனக்கோடல் பொருந்துவதாம். யாவர்க்கும் விறகில் தீயும் பாலிற்படு நெய்யும் போலக் கலந்து அரிதற்கு அரிய பொருளாயுள்ளான்; அடியேனுக்கு மாமணிச் சோதிபோலக் காட்சிக்கு உரியனாயினன்; அதனைக்கண்டும் பிரிந்தேன் எனல் காண்க.

இதுவும் 'கல்வகை மனத்தேன் கழல் கண்டும் பிரிந்தனன்' என்றதனால் கைம்மாறு செய்யக்கருதியும் தன் மாட்டாமையை

விண்ணப்பித்தலின் கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாயினமை காண்க.

53 கட்ட றுத்தெனை யாண்டுகண் ணார நீ
றிட்ட அன்பரொ டியாவருங் காணவே
பட்டி மண்டப மேற்றினை யேற்றினை
எட்டி னோடிரண் டும்மறி யேனையே. 49

இ-ள்: இடபவாகனத்தையுடையாய்! எட்டும் இரண்டும் தெரியாத என்னை, பாசப்பிணிப்பை அகற்றி ஆட்கொண்டு, நெற்றியில் திருநீற்றைப் பூசிய உண்மை அடியார்களோடு எல்லாரும் கண்ணாரக்காணும்படி சமயவாதம்புரியும் பட்டி மண்டபத்தில் ஏற்றிவைத்தாய்; அடியேன் இதற்குச்செய்யும் கைம்மாறு யாதோ என்றவாறு.

ஆணவமலக் கட்டறுத்து ஆட்கொண்டு அடியார் கூட்டத்தில் சேர்த்த அருமையினையும், அதற்கு உரிய தகுதி தனக்கு இன்மையையும் விண்ணப்பிக்கின்றார்.

கட்டு - அநாதியே ஆன்மாவைப் பந்தித்துள்ள மலம், மாயை கன்மங்கள் இவற்றால் விளையும் தடை. அதனை அறுத்தலாவது வினைப்போகங்களை அனுபவிக்கச்செய்தும், அதற்கு உபகாரமாக மாயையைப் புணர்த்தியும், அறியாமையைத்தந்து ஆன்ம ஒளியைத் தடுத்துநிற்கும் ஆணவமலத்து வன்மையை வாட்டுதல். இறைவன் உயிர்கள்மீதுவைத்த கருணையான் குருமேனி தாங்கி வந்து கூட்டியும், காட்டியும் வீட்டுகின்றான் என்பதாம். என்னை என்பதன் தொகுத்தல் எனை என்பது. ஒன்றற்கும் பற்றாத என்னை என்னும் இழிவுதோன்ற நின்றது.

ஆண்டு - ஐம்புலவேடரின் அயர்ந்து கிடக்கின்ற என்னை இப்பவத்தில் சேராவகை எடுத்து, சரியையாதி ஒழுக்கங்களில் நிலைபெறுத்தி, திருவருளாலே சிவஞானம் மேவரச்செய்து ஆளாக ஏற்று என்பதாம்.

நீறு - திருநீறு. நீறிட்ட அன்பர் - மலநீக்கம் பெற்ற அன்பர். திருநீறு ஆன்மாக்களுக்கு மலவாதனையை அகற்றி ஞான ஒளி விளங்கச்செய்வது, ஆதலின் அது சைவசாதனங்களில் சிறந்ததாயிற்று. அதனை அணிந்த மெய்யடியார் கூட்டத்தோடு வீற்றிருக்க அடியேனையும் பட்டிமண்டபம் ஏற்றினை என்றவாறும்.

நீ அடியேனை இரகசியமாக ஆட்கொண்டாயல்லை. அனைவரும் காண ஆட்கொண்டாய். ஆதலால் நீ ஆண்டான் நான் அடிமை என்பதை இவ்வுலகம் அறிந்துவிட்டது. ஆதலால் எனக்குத் தகுதியின்மை காணப்படுமாயின் அது ஆண்டான் குறையாமே அன்றி என்குறை ஆகாது என்பார் 'யாவரும் கண்ணுரக் காணவே பட்டிமண்டபம் ஏற்றினை' என்றார்.

பட்டிமண்டபம் - சமய உண்மைகளை ஆராய்தற்குரிய வாத சபை. இதனியல்பைச் சிலப்பதிகாரம் மணிமேகலைகளில் (சிலப். இந்திர - 102; மணி - விழா - 60) பரக்கக் காணலாம். பட்டி மண்டபத்து ஏறுவார் பரந்த கல்வியும் நிரம்பிய அறிவும் நுண்ணுணர்வும் உடையராதல்வேண்டும். அங்ஙனம் தகுதியற்ற என்னையும் ஏற்றினாய் என இறைவன் உபகாரத்தை வியந்தவாறு. பட்டி - நாய்; அதனை மண்டபத்தில் ஏற்றினாய் என உரை கூறுவாரும் உளர். அது தமிழ் மரபு அறியார் கூற்றென மறுக்க.

மந்திரோபதேசம் செய்வதற்குரிய மண்டபம் என உரைப்பாரும் உளர். இப்பொருளில் பழைய இலக்கியங்களில் ஆட்சி இல்லாமை அறிக.

ஏற்றினை - ஏறச்செய்தாய். ஏற்றினை ஏற்றினை என்பதை ஒரு தொடராகக்கொண்டு, மண்டபத்தில் ஏறச்செய்தனை உயர்த்தினை என்று உரைப்பாருமுளர். இங்ஙனம் சிதைத்து முன்னோர் கூறிய பொருளின் வேறாக இருக்கவேண்டுமென்ற குறிக்கோளுடன் உரைகாணும் இன்றியமையாமை நன்றன்மை தெளிக. அன்புநெறியில் கனிந்து உள்ளத்தெழும் பாடல்கள் செம்பாகமாக அமைதலே இயல்பாதலும் காண்க. வியப்பினால் இருமுறை கூறியதாகக் கோடலும் ஒன்று.

'எட்டினோடு இரண்டும் அறியேனையே' என்று பட்டி மண்டபம் ஏறுதற்குரிய தகுதி தனக்கு இல்லாமையை அறிவிக்கின்றார். இது 'எட்டும் இரண்டும் அறியாதவன்' என்ற ஒரு பழமொழியை அடியொற்றி எழுந்ததே. மாணிக்கவாசகசுவாமிகள் 'அறிவாற் சிவனே'யான சிவஞானச்செல்வர் என்பதை எண்ணி, பின்வருமாறு உரை கூறுதலும் உண்டு. எட்டு - எட்டின் தமிழ்வடிவு அ. இரண்டின் தமிழ் வடிவு 'உ'. அகரம் சிவம். உகரம் சக்தி. "யாரும் அறிவர் அகரம் அவன் என்று" எனஞானசாத்திரங்களும் நவிலும். ஆகையால் சிவசத்திகளின் பொதுவும் சிறப்புமாகிய இயல்புகள் அறியாத என்னைச் சமய வாத சபையில் ஏற்றினாய் என்பதாம்.

சிவஞானச்செல்வர் வாக்காயினும் இலக்கணமரபும் வரம்பும் கடவாதனவாய் இருத்தல் இயல்பு. அதனால் 'அ' 'உ' என்னும் இரண்டெழுத்துக்களைக்கூட அறியாத என்னை எனலும் ஆம். இக்கருத்தை "அ உ அறியா அறிவில் இடைமகனே நொஅலையல் நின் ஆட்டை நீ" (யாப்பருங்கலம் - சூ. 7. உரை) என்றபாடல் வலியுறுத்தும், அன்றியும் எட்டு அ; இரண்டு உ; சிவம் சத்திகள். எட்டினோடு இரண்டு - பத்து. பத்தின் தமிழ் வடிவம் ய. யகரம் உயிரை உணர்த்தும் எழுத்து. ஆகவே அகர உகரங்களாகிய தாய் தந்தையையும் உயிராகிய தன்னையும் அறியாத என்னை என்றார் எனலும் ஆம். திருமூலரும் "எட்டுமிரண்டும் இனிதறிகின்றிலர்" என்று கூறியுள்ளதையும் ஒப்பு நோக்கித் தெளிக.

எட்டினோடு இரண்டு - பத்து எனக்கொண்டு தசகாரிய அனுபவமில்லாத என்னை என்று உரைப்பாருமுளர். இவ்வண்ணம் பல கருத்துக்கள் இயைவதேனும் அடிகள் தன்னிழிவு தோன்றக் கூறுகின்றமையால் உலகியல் பழமொழியை ஒட்டிக் கூறினர் என்பதே அமைவுடைத்தாதல் அறிக.

வாதசபையில் ஏற்றுதலும் இருத்தலும் வாதம் செய்து வெல்வதற்காகவே. இறைவன் அடிகளாரை ஏற்றியது அன்பருடன் மரீஇ அருளமுதம் துய்க்க ஆதலின் இறைவன் செய்த உதவிக்கு யாது கைம்மாறு செய்வேன் என இரங்கிக்கூறலின் இப்பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாதல் அறிக.

54 அறிவ னேயமு தேயடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோவெனை யாண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
அறிவ னோவல்ல னோவரு ளீசனே. 50

திருச்சிற்றம்பலம்

இ - ள்: ஞானவடிவனே! அமுதே! நாயை ஒத்த அடியேனை ஞானியாகக் கருதியோ ஆட்கொண்டது; அடியேனை ஆட்கொண்ட காலத்தில் கண்டது அறியாமை அல்லவா; ஈசனே! அடியேன் ஞானியோ அஞ்ஞானியோ; அருள்செய்ய வேண்டும் என்றவாறு.

இத்திருப்பாட்டில் ஆட்கொண்ட காலத்து யான் கண்டது அறியாமையையே. அங்ஙனமாகவும் நீர் என்னை அறிவனாக

எண்ணி ஆட்கொண்டீர்; ஆதலால், நான் அறிவனோ அல்லனோ என்பதைத் தேவரீரே அருளிச்செய்யவேண்டும் என வேண்டுகின்றார்.

எல்லாவற்றையும் ஒருசேர ஒருகாலத்து உணர்தலும் இயல்பாகவே உணர்தலும் இறைவனுக்குரிய சிறப்பியல்புகள் ஆதலின் 'அறிவனே' என்றார். இறைவன் ஞானமே வடிவானவன் என்பதை உணர்த்தியவாறு. இதனால் இறைவனது வரம்பிகந்த பெருமையும் ஞானத்தாலன்றி அவனை அடைய முடியாத அருமையும் முறையே உணர்த்தப்பெற்றன.

அமுதே - அமுதமயமானவனே! அமுதம் இன்பமயமானது. இறைவனை அமுதே என்றழைத்தது வரம்பிலின்ப வடிவினனாய் மெய்யடியார்களுக்கு இன்பமும் ஆனந்தமும் விளைவிக்கும் எளியனாயிருக்கும் இயல்புபற்றி என்க.

யாண்டும் அடிகள் தம்மை இழித்துரைத்துக்கொள்ளுதல் இயல்பேயாயினும் ஈண்டு 'அடி நாயினேன்' என்று கூறிக்கொண்டதில் தனித்ததோர் நயமிருத்தல் காண்க. நாய் - ஒரு நாள் ஒரு கைப்பிடிச்சோறு இட்டார் நைய ஒறுப்பாராயினும் அவரடியைச் சுற்றிவந்து பிரியாததுபோல, ஆட்கொண்ட நீ என்னை வெறுத்து ஒதுக்கினும் விலகேன் என்பதாம்.

இறைவனால் ஆட்கொள்ளத்தக்க தகுதியுடையவர்கள் சிவ ஞானிகளே என்பது சிவாகம நூற்றுணிபு. அங்ஙனமாகவும் தேவரீர் ஆட்கொண்டது என்னை ஒரு ஞானியாகத் திருவுளத்தில் எண்ணியோ என்பார் 'என்னை ஆண்டது அறிவனாகக் கொண்டோ' என்றார். இறைவன் கருணை இருக்குமாயின் 'கொதுகும் கருடனும்' ஆதலின் மல மாயா கன்மங்களோடு கூடி அறிவு திரிந்த என்னை அவற்றின் சார்பு ஒழித்து 'இவன் ஒரு சிவஞானியாகுக' என்று எண்ணியோ ஆட்கொண்டது என்றவாறு.

இதனால் திருவருட்பதிவும் மலநீக்கமும் ஆண்டுகொண்டதும் உடனிகழ்ந்தவாறு காண்க. சிலர் உலகியலோடு ஒட்டியுணர்ந்து, இறைவனை அடிகள் குறைகூறியதாக உரைப்பாருமுளர். அதனை யாம் ஈண்டு எண்ணிற்றிலம். 'ஆண்டநாள் கண்டது அறிவிலாமையன்றே' அடியேனை அறிவுடையனாக்கி ஆட்கொண்டகாலத்து யான் கண்டது அறிவிலாமையே; அறிதோறும் அறியாமை காணலே மரபாதல் தெளிக. அன்றியும்

சுடர் இருளை அறியத் துணை செய்ததைப்போல, சிவஞானம் பாசத்தை அறியத் துணை செய்ததாம். மலைமீது ஏறியவன் பள்ளத்தைப் பள்ளமெனக் காண்டல்போல ஞானி பண்டைய நிலையை அறிதல் இயல்பாம். சிவஞானம் கைவரப்பெற்றார்க்குத் தத்துவரூபம் முதல் ஆன்மசுத்தி வரையில் அறியப்படுதலும் அதன் மேலனவாகிய சிவரூபம் முதலியன அனுபவிக்கப்படுதலும் இயல்பு. ஆதலால், 'ஆண்ட நாள் கண்டது அறிவிலாமை அன்றே' என்றார்.

அங்ஙனம் அறிவிலொன்றி அறியாமை அறிந்து அருளில் திளைத்து இருந்த நான் மீட்டும் திருவடியைப் பிரிந்தமையால் 'யான் அறிவுடையனோ அல்லனோ' என்ற ஐயம் எனக்கே எழுகிறது. அதனைப் போக்கி அருளல்வேண்டும் என்பார் 'ஈசனே அறிவனோ அல்லனோ அருள்' என்றார்.

ஈசன் - எல்லாவற்றையும் உடையவன். உடைமையாகிய எனது அறிவு அறியாமைகளை அறிந்து சொல்லவல்லவன் உடையவனே ஆதலின் இங்ஙனம் கூறினார்.

அறிவற்ற என்னையும் அறிவனாகக்கொண்டு ஆட்கொண்ட திருவருட்சிறப்பை வியந்தமையானும் பிரிந்தநிலையில் யான் செய்யலாவது ஒன்றில்லை என இரங்குவதாலும் இது பதிகக் கருத்தோடு இயைவதாயிற்று.

## சு. அநுபோகசுத்தி

அநுபவம் அநுபோகம் என்பன இருவகையான சொல்லாட்சிகள். அநுபவம் – நுகர்ச்சி. அநுபோகம் - நுகர்ச்சியால் விளைந்த இன்பம். அநு என்பது ஒத்த, பின் என்னும் பொருளைத் தரக்கூடிய துணைச்சொல். இதனை உபசர்க்கம் என்பர் வடநூலார். அநுபவத்தால் விளைந்த இன்பம் அநுபோகம். தன்னோடு ஒத்தார் பெற்ற இன்பப்பேற்றினைக்கண்டு அப்பேற்றிற்குத் தான் தகுதியின்மை உணர்ந்து இரங்குதல்வாயிலாக அநுபோகத்திற்குரிய சுத்தியை உண்டாக்கிக்கோடலின் இது அநுபோகசுத்தியாயிற்று.

திருவாசக உள்ளக்கிடை 'சுகமேலீடு' என்றும் சொல்லும். அநுபோகம்-சுகம். அதனை மேலிட்டுக்கொள்ளுதற்கான சுத்தியே மேலீடு. ஆதலால் அநுபோகசுத்திக்குச் சுகமேலீட்டுக்காகத் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளுதலே பொருளாதல் காண்க.

## அறுசீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

55 ஈச னேயென் னெம்மானே
யெந்தை பெருமா னென்பிறவி
நாச னேநான் யாதுமொன்
றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு
நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேயம் பலவனே
செய்வ தொன்றும் அறியேனே. 51

இ-ள்: ஈசனே! எனக்குச் சிறந்த தலைவனே! என் தந்தையாகிய பெரியோனே! என் பிறவியை வேரற அழிப்பவனே! நான் உலகப்பொருள்களில் ஒன்றிலும் அகப்படாத மிகவும் இழிந்த நாயான புலையன்; என்னையும் ஆட்கொண்டருளிய உன்னை நினையேன்! ஒளியுள்ள பொருளே! தில்லையம்பலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனே! இனிச் செய்யவேண்டியது ஒன்றையும் அறியேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் மிக இழிந்த என்னையும் ஆட்கொண்ட தேவரீரை நினைக்கமாட்டேனாய்ச் செய்வதொன்றும் அறிந்திலேன் எனத் தன்னையே நொந்து கூறுகின்றார்.

இயங்குவ நிற்பவான யாவற்றையும் உடைமையாகக் கொண்டவன் ஈசன்: அகண்டமான ஐஸ்வரியம் உடையான் என்பது பொருள். ஆகவே, அவற்றுள் தாமும் ஒரு பொருள் என்பதை உணர்ந்து 'ஈசனே' என்றார்.

உடைமைகள் யாவும் சடமும் சடம்போல்வதும் ஆதலின் கேவலநிலையில் சடம்போலக் கிடந்த தான் இறைவனால் தனுகரணங்களோடு கூட்டப்பெற்றுக் கலாதத்துவம் காரியப்படச் சிறிது அறிவு விளக்கம்பெற்ற நிலையில் தம்மை, உணர்த்த உணரும் சித்தாக அறிந்து, உணர்த்தியவன் தலைவன் என்பதையும் உணர்ந்தநிலையில் தன்னை அடிமையாகவும் இறைவனைத் தலைவனாகவும் அனுபவிக்கின்ற அடிகள் 'என் எம்மானே' என்று அருளிச்செய்தார்கள்.

ஆண்டான் முன்னிலையில் ஓர் அடிமை நடந்துகொள்ள வேண்டிய அடக்கமும் ஒடுக்கமும் நினைவிற்குவர, அக்குணங்கள் தம்பாட்டு இல்லாமையைத் தெரிந்து வருந்தி, பெருமான்

பெருமானுகமட்டுமல்லாமல் என் தந்தையாயும் இருக்கின்றுன் அதனுல் யான் செய்யும் பிழைகளைப் பொறுப்பான் என எண்ணி 'எந்தை பெருமான்' என்றுர். இதற்குத் தம்மை ஆட் கொண்டு பேரின்பப் பெருஞ்செல்வம் அளிக்கும் தலைவனுகவும் தந்தையாகவும் உள்ளவன் சிவபெருமானே என்று நயம் உரைத்தலும் உண்டு.

பிறவி - இடையருது வெள்ளம்போலத் தொடர்ந்து வருவது; சக்கரம்போல மேலும் கீழுமாக மாறி வருவது. இப் பிறவி அழியவேண்டுமாயின் மல மாயா கன்மங்கள் உயிரைச் சாராதவாறும் வலி குன்றுமாறும் அருள்பாலித்தல் வேண்டும். அங்ஙனம் செய்து ஆட்கொண்டான் என்பார் 'என் பிறவி நாசனே' என்றுர்.

உலகம் சித்தும் சடமுமாகிய உயர்திணையும் அஃறிணையு மாக உள்ளது. இவற்றுள் சித்தாகிய உயிரும், அசத்தாகிய சடமும் அஃறிணை. சித்தாகிய உயிருள் மக்களும் தேவரும் உயர்திணை. யான் இப்பாகுபாட்டுள் மக்களுடலோடு ஒன்றிய தன்மையால் உயர்திணையேயாயினும் குணத்தால் நாயாவேன்; அஃறிணையுள் ஒன்று அன்மையை என்னுடலே உணர்த்தும். ஆதலால் அஃறிணையுள் யாதொன்றுமல்லேன். குணத்தால் பொல்லா நாயானேன். பொல்லா நாயாயினும் அதனிடம் நன்றி மறவாமையுண்டு. அதுவும் என்னிடம் இல்லையாதலின் நீசனு னேன். அத்தகைய என்னையும் ஆண்டுகொண்ட நின்பெருமை யும், உதவியும் எத்துணைப்பெரியன என்று வியப்பார் 'யாதும் ஒன்றல்லாப் பொல்லா நாயான நீசனேனை ஆண்டாய்க்கு' என்றுர். நாய் வெறிபிடித்ததாயின் தம்மவர் பிறர் என்று பாரா மல் கடித்துத் துன்புறுத்தும். அது பொல்லா நாய். இத்துணைப் பெரிய உபகாரம் புரிந்திருந்தும் அதனை நினைக்கவும் செய்யாத நிலையை உடைமையால் பொல்லா நாயான நீசனேன் என்றுர். நீசன் - ஒழுக்கந்தவறிய கீழ்மகன். சைவனுகப் பிறந்திருந்தும் புலச்சார்புபெற்று உடலோம்புதலே தொழிலாகப் பெற்றமை யால் 'நீசனேன்' என்றுர்.

ஆண்டாய்க்கு என்பதில் நான்கனுருபை இரண்டன் உருபாக்கி ஆண்டாயை எனப் பொருள்கொள்க. திருவருள் பெற்று, சிவனடிப்பேருகிய பேரின்பமெய்த உதவிய உடலாகிய கருவியைக் கருவியென நினையாது அதனை ஓம்புதலையே குறிக் கோளாகக்கொண்டு உன்னை நினையாதவனுனேன் என்பார் 'நான் நினைக்கமாட்டேன்' என்றுர். நினைத்தல் - 'நாயகன்

சேவடி தைவரு சிந்தையும்' என்று சேக்கிழார் குறித்ததுபோல இடைவிடாது எண்ணுதல்.

இறைவன் என்போன்ற ஞானவொளி அற்றவர்களை ஆட்கொள்வதற்கென்றே பேரொளிப் பிழம்பாகச் சிற்றம்பலத்தில் விளங்குகின்றான். அங்ஙனம் இருந்தும் பயன் பெற்றிலேன் என்று இரங்குவார் 'தேசனே அம்பலவனே' என்றார்.

நினைப்பின் வழியது செயல் முதலியன. ஆகவே நினைக்கவும் செய்யாத நான் வேறென்ன செய்வேன் என்பார் 'செய்வதொன்றும் அறியேன்' என்றார்.

ஆட்கொண்ட பெருமையை எண்ணி நினைக்கவும் செய்யேன் எனக் கூறுவதால் முதலில் தனக்குத் தியானமாகிய சுத்தியை வேண்டுகின்றாராதலின் அநுபோகசுத்தியாயிற்று.

56 செய்வ தறியாச் சிறுநாயேன்
செம்பொற் பாத மலர்காணாப்
பொய்யர் பெறும்பே றத்தனையும்
பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்ய னேனுன் உண்டுடுத்திங்
கிருப்ப தானேன் போரேறே. 52

இ - ள்: போர்புரியும் சிங்க ஏறுபோன்றவனே! செய்யத்தக்கது ஒன்றும் அறியாத சிறுமைத்தன்மையுடைய நாய் போல்பவனாகிய யான் திருவடித்தாமரையைக் காணப்பெறாத பொய்மையாளர்கள் பெறுகின்ற அப்பேறுகள் அத்தனையும் பெறுதற்குரியவன்; பொய்மை கலவாத மெய்யடியார்கள் உன்னுடைய மணம் பொருந்திய திருவடித் தாமரைகளை அடைய நான் நேரில் கண்டிருந்தும் பிறர் சொல்லக் கேட்டிருந்தும் பொய்யேனாகிய யான் உண்டும் உடுத்தும் இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கலானேன்; என் அறியாமை என்னே! என்றவாறு.

இந்தத் திருப்பாடலால், அடிகள் நான் நினையாமை மாத்திரமேயன்றி, உடலோம்புதற்காக உண்டு உடுத்து இருப்பதானேன் என இரங்குதலை உணர்த்துகின்றார்கள்.

ஏறு - ஆண்சிங்கம். ஆண்சிங்கம் அமைதியும், ஆற்றலும் ஒருசேர உடையது. தன்னை யாதாயினும் எதிர்க்குமாயின்

பொருது வெல்லும் ஆற்றலது. போரேறு - போர் செய்யும் காலத்து மிக்க சினமும், வெல்லும் வலிமையும் தோன்றநிற்பது. இறைவனை அடிகள் 'போரேறு' என்று விளிப்பதன் உள்ளக் கிடை அடியேனை ஐம்புலக் களிறுகள் ஒருசேர வந்து அடர்க் கின்றன; அவற்றினின்று தப்பியுய்ய அடியேற்கு வகையில்லை; தேவரீரே காத்தருளல்வேண்டும் என விண்ணப்பிப்பார் 'போரேறே' என்றார். காமம் முதலிய ஆறு பகைகளை ஆறு யானையாகக்கொண்டு கூறினார் எனலுமாம். இறைவன் விருப் பும் வெறுப்பும், பகையும் நட்பும் இல்லாதவனாயினும், அடி யார்களைப் பாதுகாத்தற்காகச் சலந்தரன் முதலியவர்களைத் தடிந்தது கண்டோமாதலின் எமக்காக ஆறு பகைகளை வெல்ல வேண்டும் என்று குறிப்பித்தவாறு. பாச விமோசனம் செய்வ தால் சிங்கம் என்றார் என்பது பழையவுரை. அறப்போர்க் காவலனைக்கொண்டார் எனலுமாம்.

உலகில் செய்வது புண்ணியமும் தவிர்வது பாவமுமாக அறிவுநூல்கள் விளக்கியிருக்கவும் அதனை அறியாது செய்யத் தகாத பாவத்தையே செய்தமையை உணர்த்துவார் 'செய்வ தறியாச் சிறு நாயேன்' என்றார். நாய் 'இவன் தன் தலைவன்; இவன் தன் தலைவனல்லன்' என்பதைப் பாகுபடுத்தி அறிந்து தலைவன் தானையே சாரும் அக்குணமும் தனக்கு இன்மையால் 'சிறு நாயேன்' என்றார். செய்வது அறியாமையே சிறுமைக்கு ஏதுவாயிற்று.

பொய்யர் - பொய்மையான ஒழுக்கமும் உரையும் உடையார். இந்தமெய்யை எமக்களித்த இறைவன் திருவடியை உணர்ந்து பற்றுதலே குறிக்கோளாக இருக்கவும் அதனைக் காணவும் பேறு பெருதாரைச் 'செம்பொற் பாதமலர் காணுப் பொய்யர்' என்றார். திருமால் பன்றியாய்ச் செம்பொற்பாதமலர் கண்டே னெனப் பொய்யே கூறினுயினும் செம்பொற் பாதமலரைக் காணும் சீரிய முயற்சியில் உழல்கின்றுதலின் கிருஷ்ணவதார காலத்துத் திருவடிகாட்டி ஆட்கொண்டார்; அதுவும் செய் யாமையால் 'செம்பொற் பாதமலர் காணுப் பொய்யர்' என்றார் எனலுமாம். உயிர்கள் இறைவன் காட்டினுலன்றித் தாமாகக் காணும் தன்மையன அல்லவாதலின் மனங்கவரத்தக்க செம் பொன் நிறமும் மணமும் மென்மையுமுடைய திருவடிமலரைக் காட்டியும் காணுமையான் பொய்யர் என்றது மிகப் பொருத்த மானது.

பொய்யர் பெறுவன துன்பமாகிய ஊறே அன்றி இன்ப மாகிய பேறு ஆகா எனினும் அதனைப் பேறு என்றது நகைச்

சுவை தோன்றக் கூறிய குறிப்புமொழி. அத்தனையும் பெறுதற் குரியேன் என்றது துன்பங்களின் எல்லையின்மையைக் குறிப் பித்தது. தன் தவற்றினைத் தானுணர்ந்தமையால் பேறு அத் தனையும் பெறுதற்கு உரியேன் எனத் தன் தகுதியின்மையைக் குறிப்பித்தவாறும்.

அடியார்களுள் கள்ளவேடத்தாரும் உள்ளவேடத்தாரும் என இருதிறத்தர். கள்ளவேடத்தார் புறத்தே அடியார்போல் நடித்து அகத்தே களவொழுக்கமுடையார். உள்ளவேடத்தார் புறத்தே திருநீறும் கண்டிகையும் தாழ்சடையும் அகத்தே தூய ஒழுக்கமும் சிவனடி மறவாச் சிந்தையுமுடையவர். இவ் விருவரில் உண்மையன்பரைப் பொய்யிலா மெய்யர் எனக் கூறினர். 'பொய்மையும் வாய்மையிடத்த' என்றாற் போன்றது அல்லாத மெய்மையுடையார் என்பது தோன்றப் 'பொய்யிலா மெய்யர்' என்றார். இது தாம் குருந்தமரத்தடியில் குருதரிசனம் செய்தகாலத்தில் உடனிருந்த உண்மை அடியார்களை உளத் துக்கொண்டு உரைத்ததாம். அவ்வடியார்கள் மணம் பொருந் திய திருவடிமலரை மேவிப் பேரின்பம் பெற்று விளங்கியிருத் தலைக் கண்டமையின் 'வெறியார் மலர்ப்பாதம் மேவக்கண்டும்' என்றார்.

பழமையான புராண வரலாறுகள், மெய்யன்பர்கள் திரு வடியை மேவினர் என்பதைக்கூற அதனைக்கேட்டதை உணர்த் துவார் 'கேட்டிருந்தும்' என்றார். இருந்தும் என்பதனை இரண் டிடத்தும் கூட்டி, கண்டிருந்தும் கேட்டிருந்தும் எனப்பொருள் கொள்க. இங்ஙனமன்றி இறைவன் உள்நின்று உரைக்க அதனைக் கேட்டிருந்தும் என்பாரும் உளர்.

அங்ஙனம் காண்டலானும் கருதலானும் மெய்யடியார்கள் பேரின்பம் மேவுதலை அறிந்திருந்தும் அந்நிலையை அடைய முயலாது ஊனுடல் பருக்க உண்டும் உருவிளங்க உடுத்தும் வாளா வறிதே காலம் கழிக்கின்றேன் என்பார் 'பொய்யனேன் நான் உண்டு உடுத்து இங்கிருப்பதானேன்' என்றார். அறி யாமை நீங்கித் தன் திருவடியைச்சாரத் துணையாக இறைவன் தந்த உடலை வேற்றுவழியில் பயன்படுத்துதலின் தன்னைப் 'பொய்யனேன்' எனக் கூறிக்கொள்கின்றார்.

இறைவன் உடல் உலகு இவற்றோடு கூட்டி வாழ்வு அளித்தது உண்டு உடுத்து இருப்பதற்காக அன்று; திருவடி மலரைச் சேர்ந்து பேரின்பம் பெறுவதற்காகவே. அதற்கான அனுபோகம் தனக்கில்லை என வருந்துதலின் இது அநுபோக சுத்தியாயிற்று.

57 போரே றேநின் பொன்னகர்வாய்
நீபோந் தருளி யிருணீக்கி
வாரே றிளமென் முலையாளோ
டுடன்வந் தருள அருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ்
சேரக் கண்டுங் கண்கெட்ட
ஊரே றாயிங் குழல்வேனோ
கொடியே னுயிர்தா னுலவாதே. 53

இ - ள் : போர் ஏறே! நீ உனது சிவபுரக்கோயிலிலிருந்து கச்சணிந்த இளைய மெல்லிய முலைகளையுடைய உமாதேவியாரோடுகூட எழுந்தருளிவந்து ஆணவமலத்தை நீக்கியருள நினது அருளை முழுதும்பெற்ற சிறப்புற்ற அடியார்கள் உன் திருவடித்தாமரையைச் சேரப்பார்த்திருந்தும் கண்ணவிந்த ஊர்சுற்றும் காளையாய் இங்கு நான் வருந்துவேனோ; கொடியேனது உயிர் இன்னும் கெட்டு உலவாது இருக்கின்றது என் செய்வேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகள் தன்னுடனுறைந்த அடியார்கள் அம்மையப்பரைக்கண்டு பேரானந்தம் பெற்றிருக்கவும், தான் மட்டும் கண்கெட்ட காளையாய் உழல்கிறேன் என்று விண்ணப்பிக்கின்றார்கள்.

'போரேறே' என்று அனுவாதமுகத்தான் அறிவித்தது முன்னைத் திருப்பாட்டில் கூறிய ஐம்புலக்களிறும் அறுவகைக் களிறும் ஆணவமலத்தின் காரியமாய் ஆன்மாவைப் பற்றியுள்ள அறியாமையைத் துணைக்கொண்டே ஆதலின் அறியாமையோடு பொருகின்ற சிங்கமே என்பார் 'போர் ஏறே' என ஈண்டுக்கூறினார்.

உயிர்கள் இறைவனைத் தாமாகச்சென்றடையும் பரிபாகம் அற்றன என்பதைத் திருவுளம்கொண்டு அப்பிராகிருதகைலாசமாகிய பரஞான வெளியிலிருந்து சிவபுரமாகிய பொன்னகரில் எளிவந்த கருணையால் எழுந்தருளினார் என்பதை 'நீ நின் பொன்னகர்வாய் போந்து' என்பதால் குறிப்பிக்கின்றார்.

அங்ஙனம் சிவபுரத்தில் எழுந்தருளியிருந்த காட்சி அம்மையப்பரோடு கூடிய அருட்டிருமேனிக் காட்சியாதலின் அதனைத் தரிசித்த தம் அனுபவத்தை 'வாரேறு மென்முலையாளோடு உடன்வந்து' என்பதால் குறிப்பிக்கின்றார். அம்மை திருவருள்

ஆதலின் சிவம் திருவருளை முன்னிட்டு எழுந்தருளியமை தெரிவித்தவாறு.

இருள் ஆணவமலத்தின் காரியமாகிய அறியாமை. ஒளியும் வெப்பமும் உண்மையால் தீ உண்மை அறியப்படுதல்போல அறியாமையாகிய காரியத்தைக் கொண்டே ஆணவமலம் அறியப்படும் என்பார் காரண காரிய ஒற்றுமை நயம்பற்றி ஆணவத்தை இருள் என்றார். கண்ணில் படலத்தை நீக்கக் கண் ஒளிபெறுதல் போல இறைவன் ஆணவமாகிய படலத்தை நீக்க அடியார்கள் தாடலைபோல இறைவன் திருவடியைச்சேர்ந்தார்கள் என்ற உண்மையை 'இருள் நீக்கி அருள் அடியார் நின் பாதஞ்சேர' என்று உணர்த்தினார். ஆக, 'நீ நின் பொன்னகர் வாய் போந்தருளி, முலையாளோடு உடன்வந்து, இருள்நீக்கியருள, அருள்பெற்ற அடியார் பாதம் சேர' என இயைத்துப் பொருள் காண்க.

ஆணவமலம் நீங்கி அருள்பெற்றமையால் அடியார்கள் சீரேறு அடியார்கள் ஆயினர் என்க. ஏறு - மிக்க.

அடியார்கள் திருவடி சேர்வதைக் கண்டும், கண் கெட்ட காளை ஆயினேன் என்பது, அடியேன் உணர்த்த உணரும் தன்மையினையுடைய மக்களாயிருப்பின் கண்ணிருந்தபோது கண்டகாட்சியைக் கண்கெட்டபிறகு மீளவும் காணமுடியாமையால் அவ்வின்பத்தைக் கருத்தில் இருத்தியேனும் களித்திருப்பேன்; அந்நிலையுமிழந்தேன் என்பதனை அறிவிக்கத் தன்னைக் கண்கெட்ட விலங்காகிய ஏற்றிற்கு உவமை கூறினார்.

காளை ஒருவனுக்கு உடைமையாயிருப்பின் உள்ள நாளெல்லாம் நமக்கு உழைத்த காளை ஆயிற்றே என்ற கருணையாலாவது உணவும் நீரும் தந்து உடையவன் காப்பன்; அதுவும் இழந்தேனென்பார் 'ஊர் ஏறாய் இங்கு உழல்வேனோ' என்றார். இந்த நிலையில் சாக்காடே தமக்குச் சரண் என்ற எண்ணம் தோன்ற அதுவும் பிராரத்த வினைச்சேடத்தால் வந்திலது என்பார் 'கொடியேன் உயிர்தான் உலவாதே' என்றார். உயிர்க்கு உலர்தலும் பெருக்கமும் இல்லையாயினும் உயிரோடு ஒன்றிய உடலுக்கு வினைக்கழிவாகிய உலர்தல் உண்மையின் உடலுயிர் ஒற்றுமைநயம்பற்றி 'உயிர் உலவாதே' என்றார்.

பொன்னகர் - பொன்னம்பலம். உயிர்தான் உலவாதே என்பதற்கு உயிர் நித்தியமாதலால் உயிர் கெடக் காணேன்; அதனை இரட்சித்து அருளல்வேண்டும் எனப் பழைய உரை கூறும்.

இப்பாடலில் உலர்ந்திலதே என்று இரங்கிக் கூறியதனால் வினையின் கொள்கலமாகிய இவ்வுடலைவிட்டு உயிர்பிரிதலையே உயிருக்குத் தூய்மையாகக் கருதுகின்றார் ஆதலின் இது அநுபோகசுத்தியாயிற்று.

58 *உலவாக் காலந் தவமெய்தி*
*யுறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்*
*பலமா முனிவர் நனிவாடப்*
*பாவி யேனைப் பணிகொண்டாய்*
*மலமாக் குரம்பை யிதுமாய்க்க*
*மாட்டேன் மணியே யுனைக்காண்பான்*
*அலவா நிற்கு மன்பிலேன்*
*என்கொண் டெழுகேன் எம்மானே.* 54

இ - ள்: மாணிக்கமணி போல்பவனே! என் தலைவனே! உலகத்தில் பெரிய பல முனிவர் எல்லாரும் உன்னைக் காண்பதற்காக எல்லையற்றகாலம் தவமிருந்து உடலையும் வெறுத்து மிகவும் வாடியிருக்க, பாவியாகிய என்னைத் தொண்டனாக ஏற்றுத் தொண்டுகொண்டாய்; ஆணவ மாயா மலவடிவான இவ்வுடலை ஒழிக்கும் ஆற்றல் இல்லேன்; உன்னைத் தரிசிப்பதற்கு வருந்திநிற்கும் உண்மைஅன்பும் இல்லேன்; இந்நிலையில் எதனை ஆதரவாகக்கொண்டு உய்வேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் முனிவர்கள் பலர் உன்னைக் காண்பதற்காகப் படாதபாடுபட அடியேனைப் பணிகொண்டாய்; அங்ஙனமிருந்தும் உன்னைக் காணும் அன்பற்றவனாக இந்த மல உடலைப் பேணி இருக்கின்றேன்; நான் எங்ஙனம் உய்வேன் என்று இரங்குகின்றார்.

மணி செந்நிறமுடையதாய், சாணைமுதலியன வேண்டாதே சிறந்த ஒளியுடையதாய், விலை மதிப்பற்றதாய் விளங்குவது. இறைவனும் அங்ஙனம் செம்மேனியராய், தூண்டாச் சுடராய், ஞான ஒளி பயப்பவராய் இருத்தலின் இறைவனை 'மணியே' என்று உருவகித்தார்.

எம்மான் - எம் தலைவன். தன்னைப் பணிகொண்ட உரிமை தோன்ற 'எம்மானே' என்றார்.

ததீசி, பகீரதன், விசுவாமித்திரர், பிருங்கி முதலிய முனிவர்கள் பல ஆண்டு உணவை நீக்கி, உடலை வெறுத்து, என்பு எழுந்து இயங்கும் யாக்கையராய், தவம் செய்து வாடினார்கள். அவர்களுக்குப் புலப்படாத தேவரீர் எளிவந்த கருணையால்

எழுந்தருளிவந்து ஆட்கொண்டாய் என்பார் 'முனிவர் நனி வாடப் பாவியேனைப் பணிகொண்டாய்' என்றார்.

இத்தகைய முனிவர்பெருமக்களைத் தான் கண்ணாரக் கண்ட வராதலின் 'மாமுனிவர் பலர் தவமெய்தி இங்கு நனிவாட' என்றார்.

'தான் தேடாப் பொன்னுக்கு உரையுமில்லை மாற்றுமில்லை' என்பதுபோலவும் உழாதுவந்த நெல்லுக்கு மத்தளம் மரக்கால் போலவும் உயிர்கள்மீதுவைத்த கருணையால் என்னையும் ஆட்கொண்ட உன் அருண்மையை உணராது உன்னைக் காணும் அன்பு இல்லாதவனுயினேன் என்பார் 'உனைக் காண்பான் அலவா நிற்கும் அன்பிலேன்' என்றார்.

உறுப்பும் வெறுத்து என்பதற்கு, சூரபன்மன் யாகத்தீயின் நடுவில் நோற்றபோது, யாகத்தீயில் உடற்றசை கை கால் கண் முதலியவற்றை வெறுத்து அறுத்து அவி ஊட்டியமையானும் கண்ணப்பர் போன்றார் கண் இழந்தமையானும் ஏனைய முனிவர்கள் வெயிலை விடாதே நோக்கியும் தீயிடை இருந்தும் உடலுறுப்புக்களைக் குறைத்துக்கொண்டும் நோற்றமை அறிக. உறுப்பை ஆகுபெயராகக் கொண்டு உடல் என உரைத்தலும் ஆம். இப்பகுதி 'புற்றுமாய் மரமாய் புனல் காலே உண்டியாய்' என்ற செத்திலாப்பத்தை நினைவூட்டுவது. முனிவர்கள் உன்னைக் காண உடலை வெறுத்துப் பல ஆண்டு தவம்செய்ய நான் மலபாண்டமாகிய உடலை ஒழித்திலேன் என்றார் எனலும் ஆம்.

அங்ஙனம் அன்புகொள்ளப்பெருமைக்குத் தடைசெய்வது இவ்வுடலே என வெறுத்து உரைப்பார் 'மலமாக் குரம்பை இது மாய்க்கமாட்டேன்' என்கின்றார். மாய்க்கமாட்டாமைக்கு ஏது முன்னைத் திருப்பாட்டுரையில் மொழியப்பட்டது. இவ்வண்ணம் உடலை வெறுத்துச் சிவபோகத்திற்குரிய சுத்தியை உயிருக்கு வேண்டுதலின் இது அனுபோகசுத்தியாயிற்று.

59 மானேர் நோக்கி யுமையாள்
பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே யமுதே கரும்பின்
தெளிவே சிவனே தென்றில்லைக்
கோனே யுன்றன் திருக்குறிப்புக்
கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தானேன் உடையானே. 55

இ - ள்: மான்விழி போன்ற விழியினையுடைய உமாதேவியை ஒருபாகத்து உடையவனே! எளிவந்த கருணையால் இந்நில உலகத்து எனக்காக வந்து என்னை அடிமைகொண்ட தேனே! அமுதமே! கரும்பின்சாறே! சிவனே! அழகிய தில்லை நகரத்திற்குத் தலைவனே! எல்லாம் உடையவனே! உனது திருவுள்ளக் குறிப்பின்படி வந்த மெய்யன்பர்கள் உன் திருவடி சார, யான்மட்டும் ஊன் நிறைந்த புழுக்கூடாகிய இந்த உடலைக்காத்து இவ்வுலகத்தில் இருப்பதானேன்; என் அறியாமை என்னே; எங்ஙனம் உய்வேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் எல்லாவகையினும் இனியனாகிய சிவனே! உனது திருக்குறிப்பின்படி ஒழுகமாட்டாத யான் இப்புழு உடலைக் காத்து வீணே இருக்கின்றேன் என்று இரங்கிக் கூறுகின்றார்.

அடிகளார்க்குக் குருந்தடியில் குருநாதனாகக் காட்சியளித்த போது முதலில் குருவாகக்கண்ட இவர், குருவே சிவமெனக் கூறினன் நந்தி என்பதை உட்கொண்டு, குரு உருவிலேயே உமையொரு பாதியராகிய சிவமாகக்கண்டு அதனை வியந்து பாராட்டுமுகத்தான் 'உமையாள் பங்கா' என்று ஓதினார்.

ஓருருவில் இரு பகுதியில் இடப்பாகத்து அருள்வழியும் விழியே இவ்வநுபவத்தைத் தமக்குத்தந்தது என்பதை விளக்குவார், மானேர் நோக்கி உமையாள்பங்கான நோக்கைக் குறிப்பித்தார். இதற்கு அருள்வடிவினளாகிய அம்மை, அடிகளைப் போன்ற உள்ளன்புமிக்க தம்மக்கள் இறைவனால் புறக்கணிக்கப்படாமலிருக்கவேண்டுமே என்னும் எண்ணம் காரணமாக மருண்ட கண்ணையுடைமையின் 'மானேர் நோக்கி' எனப்பட்டாள் என்பாரும் உளர். அங்கியிற் சூடுபோலச் சிவத்தின் குணமாகிய சத்தி குணியாகிய சிவத்தை வேறாக எண்ணாள் என்பதை உட்கொண்டு பெண்கள்கண்ணுக்கு உவமைகூறும் பொதுமை நோக்கி, மானேர் நோக்கி என்றார் என்பாருமுளர். நல்லன கொள்க.

இங்கு வந்து ஆட்கொண்ட என்றது ஐம்புலவேடரின் அயர்ந்து வளரும் அரசகுமாரனை அடவிக்கண்வந்து உண்மையுணர்த்தி ஆட்கொண்டு அரசனாக்கிய குருநாதனைப்போல ஆணவமலத்தில் மறைப்புண்டு ஐம்புல வாதனையால் அலைப்புண்டு வருந்துகின்ற தான் தலைவனை அடையமாட்டாமையின், அவனே வலியவந்து தன்னை ஆட்கொண்டமையை உணர்த்தியவாறு.

உலகியலில் ஆட்கொண்ட தலைவன் அடிமையைத் தன்னலம் காரணமாக அடிப்பதும் அணைப்பதும் வழக்கமாக இருக்கவும் இறைவனாகிய தலைவன் எந்நலம் கருதியோ என்னை ஆட்கொண்டு எஞ்ஞான்றும் இனிப்புடன் மங்கலப் பொருளாக எனக்கு அணுக்கமான இடத்தில் விளங்குகின்றான் என்பார் 'இங்கு வந்து ஆட்கொண்ட தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே தென்தில்லைக் கோனே' என்றார். தேன் முதலியனவாக இறைவனை உருவகித்த கருத்து முன்னர்ப் பலவிடத்தும் விளக்கப்பட்டது. சிவனே என்பது சிவன் எங்குமாயிருக்கும் வியாபகத் தன்மையையும், தென்தில்லைக் கோனே என்பது ஆவின் மடியுள் பால்போல ஓரிடத்து வெளிப்பட்டருளும் எளிமையினையும் உணர்த்தின.

உண்மை அடியார்கள் தன் தலைவன் குறிப்பை அறிந்து ஒழுகுபவர்கள். "யான் கண்டனையர் இனையரும்" என்ற புறப் பகுதியையும் நோக்குக. அதுபோல மெய்யன்பர்கள் உனது திருவுள்ளக் குறிப்பை அறிந்து புறச்சார்பு விட்டு உன்னையே உணர்ந்திருந்து ஓர்ந்து உயர்பவர்களாக உன் திருவடியைச் சார்ந்தனர் என்பதை 'உன்றன் திருக்குறிப்புக் கூடுவார் நின் கழல் கூட' என்ற பகுதியால் விளக்கினார்.

பவளத்திரள்போல இவ்வுடல் ஊன் நிறைந்த பல புழுக்களின் கூடு என அதன் இழிவு தோன்ற 'ஊனார் புழுக்கூடு' என உரைத்தார்.

புழுத்த இக்கூட்டினை எப்போது கழிப்பேம் என்று இருக்க வேண்டிய யான் இதற்கு உணவும் உடையும் அணியும் கொடுத்து, அதனைக் காப்பதே தொழிலாக இருப்பதானேன் என்று உடற்குறை நீக்கி உயிர் அனுபவசுத்தியை வேண்டுதலின் இது அனுபோகசுத்தியாயிற்று.

60 உடையானே நின் றனையுள்கி
யுள்ள முருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயின்
கடையா னேனெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தாக முடித்தாயே. 56

இ - ள்: எல்லாம் உடைய இறைவனே! உன்னை இடைவிடாது தியானித்து மனமுருகுகின்ற பேரன்பர்களான அடியார்கள் உன் திருவடியைச் சேரப் பார்த்திருந்தும் நான் ஊர்சுற்றும் நாயினும் கடைப்பட்டேன்; மனம் கனியேன்; அன்பால் கசிவில்லேன்; முடைநாற்றம் வீசும் புழுக்கூடாகிய உடலைக் காத்துக்கொண்டு இந்நிலவுலக வாழ்க்கையிலேயே இருக்கும்படி முடிவுசெய்துவிட்டாயே என்றவாறு.

இத்திருப்பாட்டில் அங்ஙனம் அடியேனைமட்டும் இந்தப் புழுக்கூடு காக்கவைத்தது ஏனென்று வினவுவதின்வாயிலாக வேண்டிக்கொள்கின்றார்.

உடையானே! உடையாய்! என இறைவனை அடைமொழியின்றி அழைப்பதால் உலகில் இயங்குவ நிற்பவான எல்லாவற்றையும் அநாதி உடைமையாகப்பெற்ற ஆண்டவனே என்பதனை அறிவித்தவாறு.

ஒருபொருளில் உள்ளன்புகொண்டார் அதனையே இடைவிடாது எண்ணுதலும், அதனையே நினைத்து நினைத்து உருகுதலும் செய்து தமது பெருங்காதலை வெளிப்படுத்துவர். அதுபோல மெய்யடியார்களும் நின்னையே எண்ணிக் கசிந்து பெருங்காதலுடையராயினர் என்பார் 'நின்றனை உள்கி உள்ளமுருகும் பெருங்காதலுடையார்' என்றார்.

நின்பாதம் சேரக்கண்டும் என்பது முன் 'சீரேறு அடியார் நின்பாதம்சேரக்கண்டும்' என்புழிப்போலநயங்காண நின்றது. கண்டும் என்பதிலுள்ள உம்மை விகாரத்தால் தொக்கது. ஊர் நாய் என்பதற்கு 'ஊர் ஏறு' என்பதற்கு உரைத்தாங்குரைக்க. நாயிற்கடைப்பட்ட பிறவி இல்லாமையை அறிந்துவைத்தும் தன்னை அடிகள் 'ஊர்நாயின் கடையானேன்' என்று கூறிக்கொள்வது நாய்க்குள்ள நற்குணங்களும் தனக்கில்லாமை கருதி.

இறைவன் தன்னை ஆட்கொண்ட பேருதவியை எண்ணியும் பரிபாகமுற்ற அடியார்கள் நிலையைக் கண்டும் திருவருள் மயமான திருவடியைத் தரிசித்தும் தற்போதமழிந்து உருக வேண்டிய யான் நெஞ்சுருகாமலிருந்தேன் என்பார் 'நெஞ்சு உருகாதேன்' என்றார்.

இங்ஙனம் இயற்கையே உம்மிடம் அன்பு வெளிப்படாதாயினும் அன்பை அளிக்கும் நூல்களைக் கற்றுவது அன்பை அடைந்திருக்கலாம்; அதுவும் செய்திலேன் என்பார் 'கல்லா

மனத்தேன்' என்றார். நெஞ்சு உருகாமையால் அந்நெஞ்சு நெடுநாள் நீருட்கிடப்பினும் நீர் ஊறாத கல்போல வலியது என்பார் இங்ஙனம் கூறினார் எனலும் ஆம். இப்பொருளில் 'கல் ஆம் மனத்தேன்' எனப் பிரிக்க.

காதல் மிகுந்தவிடத்து விளைவது கசிவு. மணற்கேணி போல அசும்புப்பாறையுள் நீர்போலச் சிற்றூறலாக மனம்கசிய வேண்டிய யான், ஆனந்தக்கண்ணீர் விடவேண்டிய யான், அங்ஙனம் செய்திலேன் என்பதனைக் 'கசியாதேன்' என்பதால் உணர்த்துகிறார். முன்னைத் திருப்பாட்டில் 'ஊனார் புழுக்கூடு' என்ற அடிகள் இத்திருப்பாட்டில் அதன் தீநாற்றத்தையும் விளக்குவாராக 'முடையார் புழுக்கூடு' என்றார்.

முன்னைத் திருப்பாட்டில் 'புழுக்கூடு காத்து இருப்பதானேன்' என்று தன் செயலாகச் சொல்லிக்கொண்ட அடிகளார் இத்திருப்பாட்டில் இருக்கவும் போகவும் யாம் யார்? நமக்கேது சுதந்திரம்? என்பதை எண்ணித் தானிருப்பதற்கு இறைவன் ஆணையே காரணம் என்பார் 'இங்கு இருப்பதாக முடித்தாயே' என்று இரக்கந்தோன்ற வினவுகிறார்.

இதில் நெஞ்சுருகுதலும் மனம் கசிதலும் ஆன்மானுபோகத்திற்கு வாயிலாவதை அறிவித்தலின் இப்பதிகக் கருத்தினோடு இயைபுடையதாயிற்று.

61 முடித்த வாறும் என்றனக்கே
  தக்க தேமுன் னடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற்
  சோர னேனிங் கொருத்திவாய்
துடித்த வாறுந் துகிலிறையே
  சோர்ந்த வாறும் முகங்குறுவேர்
பொடித்த வாறும் இவையுணர்ந்து
  கேடென் றனக்கே சூழ்ந்தேனே. 57

இ-ள்: கள்வனாகிய யான் இவ்வுலகத்து ஒரு பெண்ணின் வாய் துடித்த விதமும் ஆடை சிறிது நழுவிய விதமும் முகத்தில் வியர்வை அரும்பிய விதமும் ஆகிய இவற்றை உணர்ந்து உணர்ந்து எனக்கே கேட்டினைத்தேடிக்கொண்டேன் ஆதலால் எனக்கு இவ்வுடலைத்தாங்கிக் காத்திருக்கும் வண்ணம் முடிவு செய்ததும் பொருத்தமே; மெய்யடியார்களைத் தளரவிடாமல் ஆட்கொண்டதும் பொருத்தமே என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகள் அங்ஙனம் அகற்றியதும் எனக்குத் தக்க தண்டனைதான்; அடியேன் தாழ்ந்த காமத்து ஆழ்ந்து அவதிப்படுவேனுக எனக்குக் கேடு நானே தேடிக்கொண்டேன் என்று வருந்துகின்றார்.

அடியேனுக்கு வினைப்போகம் எஞ்சியிருத்தலான் இந்த உடலைக் காத்துக்கிடக்கச்செய்ததும், அடியார்களுக்கு அஃதில்லாமையால் அவர்களைத் திருவடியிற்சேர்த்துக் கொண்டதும் மிகப்பொருத்தமே என்கின்றார்.

முன் என்றது ஞானுசாரியனுக எழுந்தருளித் தமக்கு ஞானேபதேசம் செய்தகாலத்தைக் குறித்து நின்றது. அப்போது உடனிருந்த மெய்யடியார்கள் அனைவரும் வருந்தாமல், இறைவன் அவர்களைத் திருவடியிற் சேர்த்துக்கொண்டமையை அடிகள் கண்ணாரக் கண்டமையால் 'அடியார்கள் சோராமல் பிடித்தவாறும்' என்றார். சோர்தல் - பிரிவால் வருந்துதல்.

மகளிர் காமத்தில் மறைவாக ஈடுபட்டமையின் தன்னைச் சோரனேன் என்று குறித்தனர். அன்றியும் ஆத்த மனையாளை விட்டுப் புறத்தாரிடம் செல்பவனைச் சோரபுருஷன் என்றல் காமநூல் வழக்கு. வினைக்கழிவிற்காக இவ்வுடலைக் காத்துச் சிலநாள் இருக்க என நீ பணித்தனை; யானே இவ்வுடலில் பற்றுமிக்கு மேலும் வினைகளை விளைத்துக்கொள்ளுகிறேன். எங்ஙனம் எனின், மாயாசத்தியின் வடிவான ஒருத்தி என்முன் நின்று சிறிது வாயை அசைத்தாள் என்பார் 'ஒருத்தி வாய் துடித்தவாறும்' என்றார்.

இங்ஙனம் இசைவைப் புலப்படுத்தியவள் துகில் சோர்தலாகிய மெய்ப்பாட்டால் தன் காதன்மையின் மிகுதியைப் புலப்படுத்தினுள். அதுவும் உண்மையன்ருகவும் நான் அதில் மயங்கிக்கிடந்தேன் என்பார் 'துகில் இறையே சோர்ந்தவாறும்' என்றார். இறை - சிறிது.

இத்தகைய பல மெய்ப்பாடுகள் நிகழ்ந்தும் தனது மனம் நெகிழாமைகண்டு அவள் உள்ளம் வெதும்ப, அதனுல் அவளுக்குக் குறுவியர்வை தோன்றலாகிய வியர்த்தல் என்னும் மெய்ப்பாடு விளங்கிற்று என்பார் 'முகம் குறுவேர் பொடித்தவாறும்' என்றார்.

இதழ்துடித்தல், துகில்சோர்தல், குறுவியர் தோன்றலாகிய இம்மூன்று அவத்தைகளையும் உண்மையென எண்ணி, எனக்குக் கேடு நானே தேடிக்கொண்டேன் எனக் குறிப்பாகக் காம

வயப்பட்டமையை உணர்த்துவார் 'இவை உணர்ந்து கேடு என்றனக்கே சூழ்ந்தேனே' என்றார்.

இவ்வண்ணம் அடிகளார் தம் செயலாகக் கூறினும் உலகர் நிலையைத் தம்மேலிட்டுக்கூறி உலகை உய்விக்கச் சொன்னதே யன்றித் தம் அநுபவம் கூறியதாகக் கோடல் பொருந்தாது. இங்ஙனமே ஏனைய அடியார்களும் மக்கள் நிலையைத் தம்மேல் ஏறிட்டுக்கூறி உலகைத் திருத்துதல் காண்க.

தன்குறையுணர்ந்து இரங்குதலால், காமவயப்படுதலாகிய தீமையே சிவபோகத்திற்குத் தடையாக இருக்கின்றது என்று உணர்த்தி, அதனின் நீங்குதலாகிய தூய்மையைவிரும்புதலால் இப்பாடல் அநுபோகசுத்தியாயிற்று.

62 தேனைப் பாலைக் கன்னலின்
தெளியை யொளியைத் தெளிந்தார்தம்
ஊனை யுருக்கு முடையானை
உம்ப ரானை வம்பனேன்
நானின் னடியேன் நீயென்னை
யாண்டா யென்றால் அடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந்
தன்மை யாமென் றன்மையே. 58

இ - ள்: தன்னை அடைந்த உண்மை அடியார்களுக்குத் தேனும் பாலும் கருப்பஞ்சாற்றின் தெளிவுமாக விளங்குப வனும், பேரொளிப் பிழம்பானவனும், தன்னைப் பரம்பொரு ளாக உணர்ந்த அடியார்களின் உடலை உருக்கும் உடைய வனும், மேலான சிவபுரத்துத் தலைவனும் ஆகிய இறைவனை நோக்கி, வீணனாகிய யான் உன் அடியவன்; நீ என்னை ஆட் கொண்டாய் என்றால், எனது தன்மையானது எனக்குத் தானும் சிரித்தே அருளலாம் தன்மையாம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், தம் தன்மை தனக்கே நகை விளைப்பதாக இருக்கிறது என விண்ணப்பித்துத் தூய்மையை விரும்புகின்றார்.

அடியார்களுக்குத் தேனும் பாலும் கன்னலின் தெளிவுமாக இனிக்கும் இறைவனுக்கு யான் அடியான், அவன் ஆண்டான் என்றால் அச்செயல் எனக்கே சிரிப்பை விளைப்பதாம் என்பது கருத்து.

அதிதீவிர பக்குவிகளாகிய தீவிரதரருக்குத் தேன்போல உடன் மிக இனிப்பவனும், தீவிர பக்குவிகளுக்குப் பால்போல உண்டபோது இனிப்பவனும், மந்த பக்குவிகளுக்குக் கரும்பின் தெளிவாய்ச் சக்கையும் கோதும் நீக்கி நுகரப்படும்போது இனிப்பவனும் உள்ளான் என ஆன்மாக்களின் மூவகை நிலைகளையும் அவர்களுக்கு இறைவன் நுகரப்படுபொருளாய் விளங்கும் நிலைவேறுபாட்டினையும் விளக்கியவாறு.

இறைவன் இனிமை பயக்கும் பொருள் அனைத்துமாக விளங்குவதைத் 'தேனைப் பாலைக் கன்னலின் தெளியை' என்பதால் உணர்த்தினார்.

இங்ஙனம் கருவி கரணங்களுக்கு இனிமை பயக்கும் இறைவன் உயிருணர்வுக்கும் இனியைபயக்கும் ஞான ஒளியாக இருக்கின்றான் என்பார் 'ஒளியை' என்றார்.

தெளிந்தார் - இறைவன் ஞானமே திருமேனியாய், இன்ப வடிவாய் விளங்குபவன் என்பதை ஆகம அறிவானும், ஆசாரிய உபதேசத்தானும் கேட்டுச் சிந்தித்துத் தம் அநுபவத்தானும் தெளிந்த மெய்ஞ்ஞானியர். அவர்கள் இறைவனை இடைவிடாது தியானிக்க அவர்களுக்கு உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தத்தைச் சொரிந்து ஊனினையுருக்குகின்றான் என்பார் 'ஊனையுருக்கும் உடையானை' என்றார்.

உம்பர் - மேலிடம்; உம்பரான் - மேலிடங்களாகிய கைலாய முதல் பரநாதவெளிவரை உள்ள இடங்களுக்குத் தலைவன். தேனை என்பதுமுதல் உம்பரானை என்பதுவரை எளிமையிற் கிட்டும் பொருளாகவும் இன்புறுத்தும் பொருளாகவும் சேய்மைக்கண்ணனாகவும் முறையே கண்டு, அதன்பிறகு அநுபவம் முதிர அறிவொளியாய்த் தனக்குள் கண்டு ஆனந்தமுற்று, அதற்குமேல் அனைத்தையுங்கடந்த பேரின்ப நிலைக்களனாகவும் கண்டு கூறுவதால் சோபானக் கிரமமாகப் பரசிவநிலையைக் காட்டுதல் தெளிக.

அத்தகைய அநுபவப்பொருளாகிய நீ என்னையாண்டாய்; யானோ வம்பன்; இப்போது நீ ஆண்டான், யான் நினக்கு அடிமை; இதனை எண்ணிப்பார்க்கும்போது எனக்கே என் தன்மை சிரிக்கலாம்போலத் தோன்றுகிறது என்பார் 'வம்பனேன் நான் நின் அடியேன்; நீ என்னை ஆண்டாய்; என்றால் என்தன்மை அடியேற்குத் தானும் சிரித்தேயருளலாம் தன்மையாம்' என்றார்.

வம்பனேன் - வீணாகிய யான். ஒரு பயனும் இல்லாத வாழ்வையுடையவனாகிய யான் என்றவாறு. 'நின்' என்றது தேன் முதலியவாக இனிக்கும் பெருமைகளை உளங்கொண்டு நின்றது. நான் என்றது புழுவுடம்பைப் போகங்கருதி ஓம்பும் இழிதகைமை எண்ண நின்றது.

தன் செயலின் இழிவைக் கண்டு யாரும் தான் நகையார் ஆயினும் என்செயல் எனக்கே நகை தருவதாயிற்று என்பதாம்.

சிரிக்கலாந்தன்மையது என்தன்மையே என்னாது சிரித்தே யருளலாம் தன்மையது என்றது இறையநுபவத்திலேயே ஈடுபட்டிருப்பவர்கள் இறைவன் விஷயமாகச் சொல்லவேண்டிய 'அருளலாம்' என்பதைத் தன்பொருட்டும் பழக்கவசத்தாற் சொல்லியதாம். இது சிவாநுபவத்தின் முதிர்ச்சியைக் காட்டுவது. தலைவனை எஜமான் என்றும் சாமி என்றும் சொல்லிப் பழகிய ஒருவன் யாரைக்கண்டாலும் எஜமான், சாமி என்பது போலக் கொள்க.

தன் தன்மையின் இழிவை உணர்ந்து, அது நீங்கி, மெய்யன்பர் நிலையை விரும்பும் குறிப்பு வெளிப்படுதலின் இது அநுபோகசுத்தி என்னும் பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாயிற்று.

63 தன்மை பிறரா லறியாத
 தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை யாண்டையா
 புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே
 யென்னான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி
 யெந்தாய் எங்குப் புகுவேனே. 59

இ - ள்: தன் தன்மை பிற தேவர் யாவராலும் அறியப்படாத இறைவனே! பொல்லாத நாய்போன்ற சிறுமையையுடைய என்னை அடிமையாக ஆட்கொண்டு, ஐயா! புறத்தே செல்ல விட்டுவிடுவாயோ? அங்ஙனம் நீ விட்டொழித்தால் அடியேனைக் கண்காணிப்பார் யார்? நான் என்ன செய்வேன்? எம்பெருமானே! பொன்போல் விளங்கும் திருமேனியுடையவனே! வேறு எங்கு அடைக்கலம் புகுவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், ஆட்கொண்ட தேவரீர் என்னைப் புறம் போகவிட்டால் நான் எங்குப் புகுவேன்; அடைக்கலம் யார்?

ஆதலால் தூய்மைதந்து காப்பாற்றவேண்டும் என்று அடிகள் வேண்டுகிறார்.

நீயோ தன்மை பிறரால் அறியவொண்ணாத தலைவன்; யானோ பொல்லாத நாயினுமிழிந்தவன்; நீ என்னை ஆண்டனை; பின் விடுவாயானால் என்னைப் பார்ப்பவர்கள் யார்? நான் என் செய்வேன்? எங்கே போவேன் என்பது கருத்து.

ஆள்வதற்குமுன் அடியேன் புன்மைகண்டு விலக்கியிருக்க வேண்டுமேயொழிய, ஆண்டபின்பு புன்மைகண்டு ஒழிதல் கூடாது என்பார் 'புன்மையேனை ஆண்டு புறம்போக விடுவாயோ' என்று வினவுகின்றார். விடுதல் இறைமைக்கு முறையன்று என்பது குறிப்பு. தலைவனாகிய நீ சுதந்திரனாதலானும், விலக்கும் உன்வகையில் விதியாம் ஆதலானும், என்னை விடுவாயானால் மேல் என் கதியென்ன என்று இரங்கிய உரைகள் மேல் வருவன யாவும்.

தலைவன், குடிகளுடைய நலம் தீங்கு இரண்டுக்கும் உதவியாக இருந்து அவர்களைக் காப்பவன். உலகியலில் தலைவன் என்பது அரசனையும், உயிரநுபவத்தில் தலைவன் என்பது இறைவனையும் உணர்த்தும்.

உலகியல் தலைவர்கள் அனைவரானும் உணரப்பட்டவர்களாய், குணமும் செயலும் இத்தகையதென வரையறுத்து அறியப் பெற்றவர்களாய், தாம் அனைவரையும் அங்ஙனம் அறியும் ஆற்றல் இல்லாதவராய் இருப்பர். உயிர்த் தலைவனாகிய இறைவனோ இப்படியன் இவ்வண்ணத்தன் என யாரானும் அறியப்பெறாதவனாகி, எல்லாரையும் எல்லாவற்றையும் இருந்த நிலையில் ஒருசேர அறியும் பேராற்றலுடையவனாகி விளங்குபவன் ஆதலின் 'பிறரால் தன்மை அறியாத தலைவா' என்றார். ஒருவரானும் அறியப்பெறாதவன் இறைவன் எனின், அவனால் உலகிற்குப் பயனின்மையைத் திருவுளத்தடைத்துப் பிறரால் அறியப்பெறாதான் எனவே தமரால் அறியப்பெறுபவன் எனக்கொள்ளவும் வைத்தமை காண்க. தமர் - சிவாநுபூதிமான்களாகிய மெய்யன்பர்கள். அவர்கள் ஞானநுபவமாக இறைவனை அறிவர் என்பதாம்.

பொல்லா நாயான புன்மையேன் - பிறப்பினாலே இழிந்த நாயாகத் தன்மையோடு அதனிடமுள்ள நன்றியறிதல் குணமும் இல்லாத இழிதகையேன்.

புறம்போக விடுதல் - அகம்படிமைத் தொண்டருள் ஒருவனுகச் சேர்த்து எப்போதும் ஆனந்தத்தில் அழுத்தாது வினைக்கீடான உடலோடுகூட்டி அலையச்செய்தல்.

தேவரீருடைய திருவருளுக்கில் விலகி, புறம் போகின்றபோது என் விருப்பின்படி எங்கும் போவேன்; எனக்குத் தீமைகளே மிக விளையும்; அப்போது அடித்துத் திருத்தி நன்னெறியிற் செலுத்துவார் யார் என்றிரங்குவார் 'என்னை நோக்குவார் யாரே' என்றார். அன்றியும் யான் உன் அடிமை என்ற உரிமையுள்ளவரையில் என்னை இவன் ஒரு சிவனடியான் என்று நோக்கிப் போற்றுவார்கள்; நீ ஒதுக்கிவிட்டால் பின்பு என்னைப் போற்றுவார் யார் என்றார் எனலுமாம்.

அங்ஙனம் ஒதுக்கியகாலத்து என்னை நானே காத்துக் கொள்ளும் ஆற்றலாவது எனக்கு உண்டோ? எனக்குச் செய்வது இன்னது என்றுதான் தெரியுமோ? என்பார் 'நான் என் செய்கேன்' என்றார். இது செயலறவு தோன்றநின்றது.

மேலும், நீ எனக்குப் பெருமானும், தாயும் போன்றவன்; அதனால் விடலாகாது என விண்ணப்பிப்பார் 'எம் பெருமான்! எந்தாய்! எங்குப் புகுவேன்' என்றார்.

இங்ஙனம் தன் குறையை உணர்ந்து, தனக்குச் சார்பற்ற தன்மையை விண்ணப்பித்தல்வாயிலாகத் தூய்மையை வேண்டுதலின் இது அனுபோகசுத்தியாயிற்று.

64 புகுவே னெனதே நின்பாதம்
போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோளுக்கி
நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண
நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் றன்மையே
யெந்தா யந்தோ தரியேனே. 60

திருச்சிற்றம்பலம்

இ - ள்: வெட்கமில்லாத நாயையொத்த யான், முன்பு உன்னை வணங்கும் அடியார் கூட்டத்துள் நின்று, என் தோளின் வலி பருமன் அழகு இவற்றை நோக்கிக்கொண்டு நகையாடுவேன்; உன்னைத் தரிசிப்பதற்குரிய கனிந்த அன்பு

எனக்கு இல்லை; ஆதலால் அடியேனும் நீ ஆண்டருளத் தகுதி யுடையேனோ? எம் தந்தையே அடியேன்தன்மை என்னே! ஐயோ பொறுத்திரேன்; இதோ புகுவேன்; நின் திருவடிகள் எனக்கு உரியனவே என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் 'யானோ அன்பு இல்லேன்; தேவரீர் ஆட்கொள்ளத் தகுதியுடையேனோ? நின் திருவடி எனக்கு உரியது ஆனமையின் அதனை அடைக்கலமாக அடைவேன் என்று விண்ணப்பிக்கின்றார்.

வணங்கும் அடியார்கூட்டத்தில் நின்றுகொண்டு உன்னை அவர்கள்போல் வணங்காமல், என் தோள் வனப்பைக் கண்டு நகையாடிக்கொண்டிருந்தேன்; உன்னைக் காணத்தக்க அன்பும் எனக்கில்லை; என் தன்மை என்னே! பொறுக்கிலேன்; இதோ வருகிறேன்; உன் பாதங்கள் எனக்கு உரியனவே என்பது கருத்து.

அயலார் உண்ணப் பார்த்திருக்கும் ஒருவனுக்குப் பசி மிகுவதுபோல, மெய்யடியார் திருவடியடைய இவருக்கு ஆற்றாமை மிக்கது. அதனால் நின் பாதம் எனதே புகுவேனென்று உறுதிகொண்டு எழுகின்றார். அதன்பின், அடியார் கூட்டத்து நடுவில் இருக்கும் தகுதி தனக்கின்மையை உணர்கின்றவராய்ப் பண்டு அடியாருள் நின்று தோள்நோக்கி நகுவென் என்கிறார். அடியார் நடுவுள் இருக்கும்போது நகையாடலும் பயனற்ற பேச்சுக்களைப் பேசுதலும் கலகம் விளைவித்தலும் அவர்கள் கூறுவனவற்றை அன்றி வேறொன்றை நோக்குதலும் கூடாதன என்பதை அறியாமல் என் தோளழகை நானே பார்த்துக் கொண்டு நகுவேனாயினேன் என்பது கருத்து.

இரண்டாவதான குறையாக நாணம் இல்லா நாயினேன் என்கின்றார். வெட்கம் இல்லாத பிறவிகளுள் நாய் முதன்மை யானது என்பதை உலகம் நன்கறியும். மெய்யடியார்களத்தனை பேரும் சிவபரம்பொருளைச் சிந்தையால் கண்டு திருவடியில் செறிந்திருக்க, நான்மட்டும் அவர்களைப்போல் ஆகாமல் என் தோளை நோக்கிச் சிரித்தேன்; அடியார் கூட்டத்துள் செய்யத் த்காத காரியத்தைச் செய்த நான் வெட்கியிருக்க வேண்டும்; அங்ஙனம் செய்யாமையால் நாணம் இல்லாத நாயானேன் என்றார்.

இறைவன் பக்திவலையில் படுவோன், அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை என்பது அறிந்தும் நின்னைக் காணவேண்டிக்

கசிந்த அன்பு தனக்கில்லை என்ற குறையை 'நினைக் காண நெகும் அன்பு இல்லை' என அறிவிக்கின்றார்.

இவ்வண்ணம் மூன்று குற்றங்கள் உண்மையால் அடியேனும் ஆண்டருளத்தகுவனே என்று வினவுகின்றார். அதன் மேல் செயலறவு தோன்ற தாயே என் தன்மைக்குத் தரியேன்; அந்தோ ! என அரற்றுகின்றார்.

தோள் நோக்கி நகுவேன் என்பதற்குத் தோள் நோக்கமாடிக் களிப்பேன் என்று பொருள்கொண்டு, இத்தோள் தலைவன் துயில்கொள்ளும் இனிய பாயலன்றே என்று எண்ணி அன்புகொண்டிலேன் என நயமுரைப்பாருமுளர்.

என் தன்மையைத் தரியேன் என்றமையால் அனுபோகத் திற்குரிய தூய்மையை விரும்புகின்றாராதலின் அனுபோகசுத்தி என்னும் பதிகத்திற்கு இப்பாடல் இயைபுடைத்தாயிற்று.

## எ. காருணியத்திரங்கல்

காருணியம் - கருணையின் விளைவு. கருணை சிவபெருமானுடைய பிரிப்பிலாற்றல். முன் பதிகத்தில் பாசநீக்கமாகிய உயிர்த் தூய்மையை வேண்டிப்பெற்று, அனுபோகத் தூய்மையையடைந்த அடிகளார்க்குச் சிவகருணை 'பூவினில் கந்தம் பொருந்தியவாறு' போலப் பொருந்த, அதனால் தன் ஆற்றாமையை விளக்கி இந்தப் பதிகத்தில் இறைவனுக்குப் போற்றி கூறுகின்றார்.

காருணியத்திரங்கல் என்பதற்குக் கருணையைக் குறித்து இரங்குதலென்றும் பொருள் உரைப்பார் சிலர். பழைய உரை அருள் வழியாகச் செலுத்தும் சிவசத்தி அனுபூதி என்னும். அஃதாவது, அகக்கரணங்களும் புறக்கரணங்களும் தம் விருப்பப்படிப் புறத்தே செல்ல, அவற்றைத் தடுத்து, சிவசத்தி அருள்வழியாகச் செலுத்துவதே காருணியமாதலின் அதனை அறிந்து, தன் தகுதியின்மையை உணர்ந்து இரங்கி விண்ணப்பித்தலாம்.

### அறுசீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

65 தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி யெங்கள்
விடலையே போற்றி ஒப்பில்

ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி. 61

இ - ள்: இவ்வுடலோடுகூடி வாழும் வாழ்க்கையை நான் பொறேன்; சுகத்தைச்செய்பவனே போற்றி; பராகாயத்து விளங்கும் தொன்மையானவனே போற்றி; எங்களுக்குக் காளைப்பருவத்தில் காட்சியளிப்பவனே போற்றி; ஒப்பற்ற தனிமுதல்வனே போற்றி; தேவர்கள் எல்லார்க்கும் தலைவனே போற்றி; திருத்தில்லையில் நடனம் புரிபவனே போற்றி; எமது அநாதியே மலங்களினின்று நீங்கியவனே போற்றி; போற்றி என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் தமக்கு இறைவன் அருளிய காருணியத்தால் உயிர் உடலோடுகூடி வாழும் வாழ்க்கையை ஆற்றேன் எனப் போற்றி உரைத்து விண்ணப்பிக்கின்றார்.

வினைக்கீடான இவ்வுடலோடுகூடிக் கன்மபூமியில் வாழும் வாழ்க்கையைவெறுத்து, சங்கரா! வானவிருத்தனே! விடலையே! ஒருத்தனே! உம்பர் தம்பிரான்! உனக்கு வணக்கம் வணக்கம்; காக்க காக்க என்பது கருத்து. சங்கரன் - சுகத்தைச்செய்பவன். எங்கள் என்றது மல மாயை கன்மங்களோடு கூடிய எமது என்னும் குறிப்பில் நின்றது.

தரிக்கிலேன் காய வாழ்க்கை என்பது பொறுக்கமாட்டேன் இனித் துயரம் என்புழிப்போல ஆற்றாமை மிகுதியை விளக்கி நின்றது. காய வாழ்க்கை - காயத்தோடு கூடி உயிர் வாழும் வாழ்க்கை. காயம் - உடல். துன்பக் கொள்கலமாகிய காய வாழ்க்கையைத் தரிக்கிலேன் என்றமையால் இவரால் விரும்பப் படுவது பேரின்பமாகிய சுகம்; அதனைச் செய்பவன் சிவன் ஒருவனே என்பார் 'சங்கரா போற்றி' என்றார்.

தரிக்கிலேன் காய வாழ்க்கை என்று வினைமுற்றை முன் வைத்துக் கூறியது உடலின் அருவருப்பைப்பொறாது விரைந்து வெளிப்படவேண்டும் என்னும் ஆர்வ மிகுதியை விளக்குகிறது எனலுமாம். போற்றி - வணக்கம், போற்றுக என இரு பொருளும் படும். ஆயினும், ஈண்டுப் போற்றுக என்னும் பொருளிலேயே வந்தது.

வானம் - ஞானாகாயம். உபநிடதங்கள் இதனைத் தகர ஆகாசம் என்னும். அவ்வெளியில் இறைவனைக் கண்டு வழி படுதல் தகரவித்தை எனப்படும். அங்கே விளங்கும் மூர்த்தியா னதலின் 'வான விருத்தனே போற்றி' என்றார். ஞானாகாசமே எல்லாவற்றிற்கும் முந்தியது. அதற்கும் முந்தியவன் இறைவன் என்பார் வானவிருத்தனே என்றார் எனலும் ஆம். அங்ஙனம் முதுமைக்கு முதுமையாய், காலங்கடந்தவனாயிருக்கும் கடவுள் யாங்கள் அறிந்து உய்யும் வழியில் காளைப் பருவத்தனாகவும் விளங்குகின்றான் என்பார் 'எங்கள் விடலையே போற்றி' என்றார்.

விடலை என்னும் ஆண்பாற் பெயர்ச்சொல் பதினாறு முதல் முப்பது வயதுவரை உள்ள ஆண் மகனை உணர்த்தும். முதற்கண் விருத்தனே என்றவர் அடுத்து விடலையே என்றது, பால குமார கிழவனாகும் மக்களைப் போலாது விருத்த குமார பாலனாகும் இறைவன் திருவிளையாடலின் இயல்பை நோக்கி என்க.

ஒருத்தன் - ஒப்பற்றவன். இரண்டாவதாக ஒருங்குவைத்து எண்ணத்தகாதவன். அங்ஙனமாகவும் ஒப்பில் ஒருவன் என் றது உயிர்களுக்கு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் அரும்பிய போதுதான் சிவன் ஒருவனே முதல்வன், அவனே தியானிக்கத் தக்கவன் என்ற உறுதி பிறக்கும். ஆதலால் அடியேனது வினையொப்பில் அறியப்படும் ஒருத்தனே என்பார் 'ஒப்பில் ஒருத்தனே' என்றார். இதற்கு ஒப்பில்லாத ஒருத்தனே என்று உரை கூறுவாருமுளர். ஒப்பில் ஒருத்தனாக அறிவில் விளங்கும் பரம்பொருள் அதிகாரமலமுடைய பசுபுண்ணிய சீலர்களாகிய தேவர்களுக்கு ஏற்பத் தலைவனாகவும் விளங்குகிறான் என்பார் 'உம்பர் தம்பிரான் போற்றி' என்றார்.

அடுத்து உலகமெல்லாம் உய்ய ஐந்தொழில் செய்து நாம் அனைவருங்காணத் தில்லையில் திருநடம்செய்கின்றான் என்பார் 'தில்லை நிருத்தனே' என்றார்.

காயவாழ்க்கையாகிய மலமாயைகளின் கூட்டுறவை விலக்கி ஆட்கொள்ளும் தகுதியும் தன்மையும் இயல்பாகவே பாசங்களி னீங்கிய இறைவனுக்கே உண்டு என்பார் 'நின்மலா போற்றி போற்றி' என்றார்.

இத்திருப்பாட்டில் சங்கரன், வானவிருத்தன் முதலிய திருப் பெயர்களால் இறைவனை ஏழு முறை விளித்து எட்டுமுறை

போற்றிக்கூறுவது கருணையைத் துணைக்கொண்டு ஆனந்தத் தழுந்துதலிலுள்ள விரைவுபற்றி என்க. இப்பதிகம் நுதலிய பொருளும் இதனுனே விளங்கும்.

66 போற்றியோ நமச்சி வாய
புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய
புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய
சயசய போற்றி போற்றி. 62

இ - ள் : ஓம் நமச்சிவாய போற்றி; பாம்பை அணிந்த வனே! மயங்குகின்றேன்; ஓம் நமச்சிவாய போற்றி; அடைக் கலம் புகுதற்கு உரிய இடம் பிறிதொன்றும் இல்லை; ஓம் நமச்சிவாய போற்றி; அடியேனைப் புறத்தே தள்ளிவிடாதே; ஓம் நமச்சிவாய போற்றி; சய சய போற்றி என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் என்னைப் புறம்போகவிடாது திருவடியிற்சேர்த்து அருள்செய் என இரங்கி வேண்டுகின்றார்.

அடியேனைப் புறத்தே ஒதுக்கிவிடாதே; எனக்கு அடைக் கலம் புகக்கூடிய இடம் வேறு எங்குமேயில்லை; ஓம் நமச்சிவாய சய சய போற்றி என்பது கருத்து.

இதில் ஓம் நமச்சிவாய என்ற பிரணவ பஞ்சாக்கரம் நான்கு முறை வந்திருத்தல் காண்க. ஓம் என்பது அகார உகார மகார நாத விந்துக்களாகிய ஐந்தொலியின் கூட்டமாய் விளங்கும் பிரணவம் திருவைந்தெழுத்தின் தொகையாகும். நமச்சிவாய என்பது திருவைந்தெழுத்தின் தூல வடிவாகும். இதற்குப் பிரணவத்தின் வேருகாத திருவைந்தெழுத்தின் சொற்பொருளாக விளங்குபவனே என்பது பொருளாம். இந் நூல் தோத்திரமாதலின், பரிபாகமுருத சமயிகளும் உரைத்து ஈடேற, தூலபஞ்சாக்கரமாய இதனை ஓதினர். பின்னர், சூக்கும பஞ்சாக்கரத்தையும், மற்றோரிடத்தில் காரண பஞ்சாக்கரத்தை யும் உரைப்பர். அவை ஆங்காங்கு மக்களின் பரிபாகம் கரு தியே பகரப்பட்டவை. திருவைந்தெழுத்து ஓதுமுறை நிற்கும் முறைகளையும், இவை இரண்டும் சுத்தாத்துவைத சைவநெறி யில் ஒன்றேயாதலையும் சிவஞானபோத மாபாடியத்துச் சிவ ஞான முனிவர் திருவாக்கால் உணர்க.

புயங்கம் - பாம்பு. புயங்கன் - பாம்பை அணிந்தவன். தேவரீரைக் கொல்ல வந்த நச்சுப்பாம்பையும் அணியாக ஏற்று அவற்றை வாழவைத்த நீர் என்னை ஏன் இன்னும் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை எண்ணி மயங்குகின்றேன் என்பார் 'புயங்கனே மயங்குகின்றேன்' என்றார்.

மீட்டும் திருவைந்தெழுத்து ஓதச் சிறிது தெளிவு பிறந்தது; அப்போது தனக்குப் புகலிடம் வேறில்லாததை உணர்ந்து 'புகலிடம் பிறிதொன்றில்லை' என்கின்றார். ஆன்மாக்களுக்கு நம்மைப் பாதுகாக்கும் இடம் இது அது என்ற வேற்றுமை உணர்ச்சி உள்ளவரை இன்பம் சித்தியாது என்பதனைத் திருவுளம்கொண்ட அடிகளார் தன் உறுதியைத் தெரிவித்துக் கொண்டவாறு.

அங்ஙனம் உறுதிபூண்டமையால் என்னைப் புறம்போக்கற்க என்று விண்ணப்பிக்கின்றவர் 'புறமெனைப் போக்கல் கண்டாய்' என்கின்றார்.

அடியேனது விருப்பப்படி என்னை ஏற்றுக்கொண்டால் எனக்கு வெற்றிமேல் வெற்றி என்று விண்ணப்பிப்பார் சய சய போற்றி போற்றி என இருமுறை விண்ணப்பிக்கின்றார்.

இத்திருப்பாட்டில் மயங்குகின்றேன், புகலிடமில்லை, புறம் எனைப் போக்கல் என இறைவனை வேண்டிக் கூறலின் இது காருணியத்திரங்கலாயிற்று. பேய் முதலியவற்றால்மால்கொண்டார்க்கு மந்திரம் ஓத மயக்கம் நீங்குதல்போலத் திருவைந்தெழுத்தை இவ்வாறு ஓதினேன்; திகைப்பு அற்றேன்; திருவடி அடையப்பெற்று வெற்றி அடைவேன் என்பது கருத்து.

67 போற்றியென் போலும் பொய்யர்
 தம்மையாட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி
 நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப்
 புதுமதுப் புவன நீர்தீக்
காற்றிய மானன் வானம்
 இருசுடர்க் கடவு ளானே. 63

இ-ள்: என்னைப்போன்ற பொய்யர்களை ஆட்கொள்ளும் வள்ளலே போற்றி; நின் திருவடிகள் போற்றி; நாதனே போற்றி போற்றி; மண், புனல், தீ, காற்று, இயமானன்,

விண், சூரியன், சந்திரன் இவ்வெட்டு வடிவாகவும் விளங்குபவனே! உன்னுடைய கருணைப்பெருக்காகிற புதிய தேன் போற்றி என்றவாறு.

எண்வகை உருவத்து ஒருவனே! அடியேனை ஆட்கொள்ளும் வள்ளலே! போற்றி என்று இரங்கிக் கூறுகின்றார்.

இங்கும் போற்றி, காத்தருளுக என்னும் பொருளதே. கருணையை மதுவாகக் கூறியது உண்டான் அறிவையிழந்து மதுவயப்படுமாறுபோலக் கருணையும் உண்டானைத் தன்வசமிழக்கச்செய்து தலைவன் வசமாக்கலின் என்க.

உவமை கூறுமிடத்து "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" என்ற விதிப்படி உயர்ந்த பொருளை இழிந்த பொருளுக்கு உவமித்தல் இலக்கண மரபு ஆதலின் ஈண்டு என்போலும் பொய்யர் என்ற உவமையை ஆழ்ந்து எண்ணி, உள்ளும் புறமும் ஒவ்வாத பொய்யான நடிப்பில் நானே எல்லார்க்கும் உவமப்பொருளாகச் சிறந்து விளங்குகின்றேன் என்பார் 'என்போலும் பொய்யனேன்' என்றார். பொய்யரை யாரும் ஆளாக ஏற்றுக்கொள்ளார்கள்; அங்ஙனமாகவும் நீ ஏற்றது உன்னுடைய வள்ளன்மைக்கு ஏற்றதே என்பார் 'பொய்யர்தம்மை யாட்கொள்ளும் வள்ளல்' என்றார்.

கருணை எல்லையின்றிப் பெருகித் தன்னை அதனுள் ஆழ்த்தி மயங்கவும் செய்தது என்பதை விளக்க 'நின் கருணை வெள்ளப் புது மது' என்றார்.

மண் முதலாக ஓதப்பட்ட ஐந்து பூதங்களும் இருசுடரும் இயமானனாகிய உயிருமே உலகமாதலின் இவையன்றி உலகம் வேறின்மையின் இவை எல்லா வடிவமாகியும் விளங்குகின்ற இறைவனைப் 'புவனம் நீர் தீ காற்று இயமானன்' என்றார்.

இத்திருப்பாடலில் நின் கருணை வெள்ளப் புது மது போற்றப்படுதலால் காருணியத்திரங்கல் என்னும் பதிகப்பொருள் விளங்குதல் காண்க.

68 *கடவுளே போற்றி யென்னைக்*
*கண்டுகொண் டருளு போற்றி*
*விடவுளே யுருக்கி யென்னை*
*யாண்டிட வேண்டும் போற்றி*

உடலிது களைந்திட் டொல்லை
யும்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த
சங்கரா போற்றி போற்றி. 64

இ - ள்: கடவுளே போற்றி; என்னை இடர்க்கடலில் புகாதவண்ணம் கடைக்கண்ணால் கண்டுகொண்டு அருளுவாயாக; போற்றி; யான் இருவகையான பற்றுக்களையும் அறவே விட்டொழிக்கும் வண்ணம் மனத்தை உருக்கி என்னை ஆட்கொண்டருளவேண்டும் போற்றி; வினைவசத்தால் கிடைத்த இவ்வுடலை நீக்கி விரைவாக மேலான நிலையை அளித்தருளுவாயாக; போற்றி; சடையில் கங்கையை வைத்த சங்கரனே! போற்றி என்றவாறு.

இத்திருப்பாட்டில் கருணைத்தேனை உண்ண அடியேனைத் தகுதியுடையவனுக்குக என்று வேண்டிக்கொள்கிறார்.

கடவுளே என்னைக் காத்தருள்க; அவ்வண்ணம் நீ காத்தற்கு ஏற்றநிலையில் என் மனத்தைப் பற்றியுள்ள ஆசா பாசங்களை அகற்றி உன்னையே நினைந்து உருகும் பரிபாகநிலையை அதற்குத் தந்தருளவேண்டும். அதற்கு இடையூறாக நிற்பது வினையின் வந்ததும் வினைக்கு விளைவாயதுமாகிய இவ்வுடல். இது ஒரு பெரிய களை போல்வது; அதனைக் களைந்துவிட்டு மேலான நிலையை அளித்தருளுக. ஆணவவலிபடைத்த கங்கையின் மிடுக்கை ஒடுக்கி, திருச்சடையில் ஒரு மயிர்க்கால் முனையில் அடக்கி ஆட்கொண்ட, சுகத்தைச் செய்பவனாகிய சங்கரனல்லரோ தேவரீர் போற்றி என்பது கருத்து.

'கண்டுகொண்டு அருளு' என்பது நயனதீக்கை செய்து ஆட்கொண்டருளு என்பதையும், 'உள் உருக்கி என்னை ஆண்டிடவேண்டும்' என்பது உன் அருளை ஏற்றுப்பிரியாது நிலைக்கு நிலையில் மன பரிபாகத்தை அருளுக என்பதையும், 'உடல் களைந்து உம்பர் தந்தருளு' என்பது பரமுத்தியருளுக என்பதையும், 'கங்கை வைத்த சங்கரா' என்பது இவ்வளவிற்கும் எடுத்துக்காட்டு நீ செய்த இச்செயல் என்பதையும் முறையே குறித்தவாறு காண்க.

கடவுள் - எல்லாவற்றையும் கடந்தவர். சிவஞானமாகிய மெஞ்ஞானத்தாலன்றிப் பாச பசு ஞானங்களால் அறியப்படாதவர் என்பதாம்.

நீ அங்ஙனம் கடந்த பொருளாக இருத்தலின் நின்னை அறிந்து அடையும் வாய்ப்பு அடியேற்கு இல்லையாதலால் நீயே கருணை பாலித்துக் காப்பாற்றவேண்டும் என்பதை 'என்னைக் கண்டுகொண்டு அருளு போற்றி' என்பதால் அறிவிக்கின்றார். யாருக வந்து நின் திருவடியை அடையத் தடையாயிருப்பன யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றுமாம் என்பதை அறிந்து புறப்பற்று விடவும் அகப்பற்று அகல மனமுருகவும் திருவருள் பாலிக்க வேண்டுவார் 'விட உளே உருக்கி என்னை ஆண்டிடவேண்டும்' என்கிறார்.

விட என்பதற்குப் புறப்பற்று என எழுவாய் வருவித்துக் கொள்க. உளே உருக்கி என்பதில் உயிருக்குள் யான் என்னும் அகப்பற்றைக் கெடுத்து என செயப்படுபொருள் வருவித்து உரைக்க. உளே என்பதில் ஏகாரம் சாரியை.

உடல் உள்ளவரை பற்றுக்கள் நீங்காமைகண்டு இவ்வுடற் பொறையை விரைவில் நீக்கி உயர்நிலையடைய உதவவேண்டு மென்பதனை 'உடலிது ஒல்லை களைந்திட்டு உம்பர் தந்தருளு போற்றி' என்கின்றார்.

மிடுக்காக வந்த கங்கையின் துடுக்கு அடக்கிச் சடையுள் மறைத்துவைத்த நீ என் செருக்குகளை அடக்குதலும் எனக்கு இனிமையைச் செய்தலும் எளிய செயலாம் என்பார் 'சடையுளே கங்கை வைத்த சங்கரா' என்கின்றார்.

இத்திருப்பாட்டில் மனமுருக்கி ஆட்கொண்டு மேலாம் பதவியை விரைந்து அருளுக என வேண்டிக்கொள்ளுதலின் காருணியத்திரங்கல் என்னும் இப்பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

**69** *சங்கரா போற்றி மற்றோர்*
*சரணிலேன் போற்றி கோலப்*
*பொங்கரா வல்குற் செவ்வாய்*
*வெண்ணகைக் கரிய வாட்கண்*
*மங்கையோர் பங்க போற்றி*
*மால்விடை யூர்தி போற்றி*
*இங்கிவாழ் வாற்ற கில்லேன்*
*எம்பிரா னிழித்திட் டேனே.* **65**

இ - ள்: சங்கரா போற்றி; வேறொரு புகலிடம் அடியேற்கு இல்லை போற்றி; அழகிய சீறியெழுகின்ற பாம்பின்

படம் போலும் அல்குலையும், சிவந்த வாயையும், வெண்மை யான பற்களையும், கரிய ஒளிபொருந்திய கண்களையுமுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற்கொண்டவனே போற்றி; திருமாலாகிய இடபத்தை வாகனமாகஉடையவனே போற்றி; இக்கன்மபூமியில் கன்மத்திற்கீடாகக் கிடைத்த இவ்வுடலைக் கொண்டு வாழும் உலகவாழ்வைத் தாங்கமாட்டேன் எம்பி ரானே! என்னை யானே இழித்துக்கொண்டேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் ஊனுடல் வாழ்க்கையை வெறுத்துவிட்டேன்; கருணையினால் கலந்தாளவேண்டும் என விண்ணப்பிக்கின்றார்.

மற்றோர் சரண் இலேன் என்றது அடிமையின் உறுதியை யும், அதுவும் ஆய்ந்து செய்யப்பெற்ற முடிவு என்பதையும் உணர்த்தியது. 'மங்கை பங்க' என்றது என்னைப்போன்றவர் களுக்கு அருள் செய்வதற்கென்றே அம்மையும் அப்பனுமாக ஒரே மேனியில் விளங்குகின்றீர் என்பதை விளக்கியது.

பொங்கு அரா - வெகுளும்பாம்பு. பாம்பு வெகுண்டபோது தான் படம் எடுக்கும். அதுவே அல்குலுக்கு ஒப்பு. ஆதலால் பொங்கு அராவல்குல் என்றார். 'செவ்வாய் வெண்ணகை கரிய வாட்கண்' என்பன முரணணி. பொங்கரா......மங்கை பங்க என விளித்தமையால், புன்முறுவல் பூத்த சிவந்த வாயும், அருளொளி வீசும் கண்களும் உடைய உமையம்மையுடன் இறைவன் போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தை அருளு கின்றான் என்பதை விளக்கியவாறு.

மால்விடையூர்தி என்பது அறவடிவான இடபத்தை என்று ஞான்றும் ஊர்ந்தே இருப்பதால் மெய்யன்பர்கள் எப்போது மனம் ஒன்றி அழைப்பார்களோ நாம் காலந்தாழ்த்திச் செல்லுத லாகாதே என்ற கருணையுள்ளத்தால் விடையின்மேல் ஏறியே இருக்கின்றாய் என்பதைத் தெரிவிப்பது.

திருமால் இடபமாக இருந்து பெருமானைத் தாங்கிச் சிவப் பணி புரிகின்றான். ஆகவே, எம் போன்ற மனிதர்கள் செய்யக் கடவ பணி எவ்வளவோ உண்டு; அவற்றைச் செய்யாத இவ் வாழ்வை நான் பொறுக்கமாட்டேனென்ற வெறுப்புத் தோன்ற 'இங்கு இவ்வாழ்வு ஆற்றகில்லேன்' - என்றருளினார்கள்.

'இங்கு இவ்வாழ்வு ஆற்றகில்லேன்' 'தாழ்த்திட்டேன்' என்பன தனக்குவந்த ஆபத்துப்பெரிது; வந்து காக்கவேண்டு மென்று விரைவது.

ஆராமைமீதூர மீட்டும் எம்பிரான் என விளித்து அவ் வாழ்வை இழித்திட்டேன் என்கின்றார்கள்.

மற்றோர் சரணில்லாமையை விண்ணப்பித்து, ஆற்றகில் லேன் இழித்திட்டேன் என இரங்குதலின் இது காருணியத் திரங்கல் என்னும் பதிகக்கருத்துக்கியைதல் காண்க.

70 இழித்தனன் என்னை யானே
யெம்பிரான் போற்றி போற்றி
பழித்திலே னுன்னை யென்னை
யாளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி
உம்பர்நாட் டெம்பி ரானே. 66

இ-ள்: எம்பிரான்! என்னை யானே இழித்துக்கொண் டேன் ஆதலால் காத்தருள்க; காத்தருள்க; அடியேனை ஆட் கொண்டருளும் பாதங்களையுடையவனே! சிவநிந்தை ஒரு போதும் செய்திலேன் ஆதலால் காத்தருள்க; காத்தருள்க; சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய எங்களைப்போன்றவர்கள் செய்த பிழைகள் அனைத்தையும் பொறுத்தல் பெரியோர்கள் கடமையாகும் போற்றி; வீட்டுலகத்திற்குத் தலைவனே! இவ் வுடலோடுகூடிய இவ்வுலக வாழ்வை நீக்கியருளுக; போற்றி என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகள், இவ்வாறு தன் வாழ்வை வெறுத்தும் இறைவன் இன்னும் ஆளாமைக்குத் தன்பிழைகள் காரணமாகுமோ என்று ஐயுற்று, சிறியோர் செய்த சிறு பிழை களைப் பொறுப்பது கடன் ஆதலால் நீயே இவ்வாழ்வை ஒழித் திடு என வேண்டிக்கொள்கின்றார்.

"கெடுவாரிலானும் கெடும்" என்புழிப்போல, என்னைத் தாழ்த்துவார் பிறரின்றி யானே தாழ்த்திக்கொண்டேன்; இந்த நிலையில் எனக்கு ஞானம் நல்கிக் காக்கவேண்டியவர் என் தலைவராகிய தேவரீரே ஆதலால் காத்தருள்க, காத்தருள்க. அடுக்கு விரைவுப்பொருளில் வந்தது.

காத்தற்குரிய குணங்கள் இல்லாதவன் அல்லன் அடியேன் என்பார் சிவநிந்தை செய்தும் அறியேன் என்றார். ஆளுடைப் பாதம் என்றது சினையாகுபெயராகப் பாதத்தை உடையவனைக்

காட்டியது. "சிறியோர் பெரும்பிழை செய்தன ராயினும் பெரியோராயிற் பொறுத்தலும் கடனே" என்ற பழமொழியை விளக்குவது மூன்றும் அடி.

ஆக்கவேலையாகிய அருளாயின் செய்பவனுக்குக் கொஞ்சம் சிரமம். ஒழிக்கின்ற அருள்தான் உம்மை வேண்டுவது. அது மிக எளிது. அதுவும் சங்கார காரணன் நீர். உமக்கு மிகமிக எளிது. அதனைச் செய்யவேண்டும் என்பார் 'இவ்வாழ்வு ஒழித்திடு' என்றார்.

தாமே எல்லாம் வல்லேம் எனத் தருக்கி ஆணவத்தில் அழுந்தியிருக்கும் உயிர் தம்குறையைத் தாம் உணருங்காலமே மெஞ்ஞான வித்து முளைகண்ட காலம். அத்தகைய பரிபாகம் வந்தமையையும் அதனால் குறையைத் தாமேயுணர்ந்து இழிவு படுத்திக் கொண்டமையையும் அறிவிப்பார் 'என்னை யானே இழித்தனன்' என்றார்.

தன்முனைப்பறவே தலைவனொருவன் உளன்; அவனே நம்மைக் காப்பவன் என்ற ஞானம் தலைப்படுதலின் 'எம்பிரான் போற்றி போற்றி' என்றார்.

பசுபோதங்கெட்டு, பதிஞானமேவியும் இன்னும் திருவடிப் பேறு கிடையாமையைக்கருதி இதற்குரிய காரணம் ஒருசமயம் யான் ஏதேனும் சிவநிந்தை முதலியன செய்திருப்பேனோ? என்ற எண்ணம் தோன்றியது. பின் சிந்தித்து, திருவடிமேல் ஆணை; நான் ஒரு பிழையும் செய்திலேன் என்பார் போல, திருவடிமேல் ஆணையிடுதல் சிவஞானியர்க்கு மரபன்றாதலின் என்னை ஆளாகவுடைய பாதத்திற்கு வணக்கம்; உன்னை ஒருக்காலும் பழித்திலேன் என்றார்.

மீண்டும் பிழையிருக்குமோ என்ற ஐயம் தோன்றியலைக்க, தவறுகளைப் பொறுத்தல் பெரியோர் கடமை ஆதலால் என் பிழையெலாம் தவிரப் பணித்து, எனது இவ்வுடல் வாழ்வை ஒழித்திடு என்று வேண்டிக்கொள்கின்றவர் 'உம்பர்நாட்டு எம்பிரானே' என விளிக்கின்றார்.

உம்பர் - தேவர். இவர்கள் தருக்கித் தக்க யாகத்திலும், பிறவிடங்களிலும் எத்தனையோ பிழைகள் செய்திருந்தும் அவர்களை ஆட்கொண்டு அவர்களுக்குத் தலைவனாக விளங்கும் பெருமானாகிய நீர் என் பிழையையும் போக்கி என்னை ஆட்கொண்டு எம்பிரானாக வேண்டும் என்று குறிப்பித்தவாறும்.

இவ்வாழ்வு ஒழித்திடுக என வேண்டிக்கோடலின் இப்பாடல் காருணியத்திரங்கலாயிற்று.

71 எம்பிரான் போற்றி வானத்
  தவ்ரவ ரேறு போற்றி
கொம்பரார் மருங்குன் மங்கை
  கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத்
  திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி யென்னை
  யாளுடை யொருவ போற்றி. 67

இ-ள்: எங்கள் தலைவனே! காக்க; விண்ணவர்கள் அனைவருக்கும் ஏறு போல்பவனே! காக்க; பூங்கொம்பு போன்ற உமாதேவியாரை இடப்பக்கத்துடையவனே! வெண்ணீற்றை அணிந்தவனே! காக்க; செம்மேனியையுடைய பிரானே! காக்க; திருத்தில்லைநகரின்கண் திருச்சிற்றம்பலம் என்னும் ஞானகாயத்து எழுந்தருளியிருப்பவனே! காக்க; சிவலோகா காக்க; என்னையாளாகவுடைய ஒப்பற்றவனே! காத்தருளுக என்றவாறு.

முன்னைத் திருப்பாட்டில் 'வாழ்வு ஒழித்திடு' என வரங் கேட்டவர், வரங்கேட்க யான் யார்? வேண்டத்தக்கது அறிவோனாகிய சிவன் எம் குறை அனைத்தையும் அறிவான்; யான் வாழ்வு ஒழித்திடு என வேண்டியதும் பெரும் பிழையாம் என உட்கொண்ட அடிகள் இத்திருப்பாட்டில் போற்றுதல்மட்டும் செய்கின்றார்.

வானத்து அவர் அவர் ஏறு - விண்ணுலகில் இந்திரன் முதலிய பதங்களில் வைகும் அவரவர்களுக்கு ஏறுபோல்வான் எனினுமாம். ஏறுபோல்வானை ஏறு என்றது உபசாரவழக்கு. உவம ஆகுபெயருமாம்.

'மங்கை கூற' என்றது அவன் போகியாயிருந்து போகம் நல்குதலையும், 'வெண்ணீற' என்றது இயல்பாகவே மலங்களின் நீங்கிய தூயதன்மையையும் விளக்கின.

இறைவன் ஆன்மாக்களுக்காக உருமேனி தாங்கும்போது செந்நிறமாக விளங்குகின்றான் என்பார் 'செம்பிரான்' என்றார்.

அவனாலே உலகம் ஐந்தொழிற்பட்டு இயங்குகிறது; இறுதியில் எல்லையிலா ஆனந்த இன்பத்தை எய்துகிறது என்பார்

'திருச்சிற்றம்பலவ' என்றார். அங்ஙனம் அறிவாக விளங்கியும் அறியமாட்டாத தேவர்களுக்கு அவருள் ஒருவனாகவும் விளங்கும் கருணை மிகுதியை 'உம்பரா' என்பதால் உணர்த்துகின்றார். உம்பரா என்பதற்குச் சிவபுரனே என்பாரும் உளர்.

எனக்குக் குருவாக வந்து ஆட்கொண்ட எளிமையும் உடையான் என்பதை விளக்க 'என்னை ஆளுடை ஒருவ' என்றார்.

இத்திருப்பாட்டில் இறைவனது அருட்செயல்களைக் கூறிப் போற்றி கூறுதலின் காருணியத்திரங்கலாயிற்று.

72 ஒருவனே போற்றி ஒப்பில்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி வெங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே. 68

இ-ள்: தனி முதல்வனே! வணக்கம்; ஒப்பற்ற எந்தையே! வணக்கம்; தேவர்களுக்குக் குருவே! வணக்கம்; எமது அழகிய தளிர்போன்றவனே! வணக்கம்; அடியேனை நின்பால் வருக என்று பணித்து ஏற்றருளவேண்டும் வணக்கம்; துணையற்ற எனது தனிமையைத் தீர்த்து நின்திருவடியைத் தந்தருளல் வேண்டும் வணக்கம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் ஒருவனே! அப்பனே! குருவனே! அடியேனை வருக என அழைத்துப் பாதந்தந்து அருள வேண்டும் என்று வேண்டுகிறார்.

சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை ஆதலின் 'ஒருவனே போற்றி' என்றும், இறைவனுடைய எல்லையற்ற குணங்களில் ஒவ்வொன்றால் நான் ஒத்துள்ளேன் என்று பிற தேவர்களும் கூறுதற்கு அரியவன் ஆதலின் ஒருவாற்றானும் யாரும் 'ஒப்பில் அப்பனே' என்றும் கூறினார்.

பாலையுள் பொழிலுண்டாக்குவதுபோலாம் போகபூமியுள் வாழ்வாராகிய தேவர்களுக்கு ஞானம் விளைத்தல். அத்தகைய அரிய செயலைப் புரிந்தவன் என்பார் 'வானோர் குருவனே'

என்றார். குருவனே என்பதற்கு அந்தணனே எனப் பொருள் கொள்வாரும் உளர். 'அந்தணனாவதுங்காட்டி வந்தாண்டாய்' என்ற இடத்தும் அச்சொல் பிறப்பால் விளைந்த சாதியைப் பற்றாது ஞானத்தாலுயர்ந்த நிலையை உணர்த்துதல் காண்க.

கொழுந்து - இளந்தளிர். கோமளம் - மென்மை. இறைவன் சிவக்கொழுந்து என்னுந்திருநாமமும் உடையனாதல் காண்க. இறைவன் என்றும் இளமை குன்றாது வளரும் தகைமையான கொழுந்தாகவே அடியார்களுக்கு இன்பமூட்டுகின்றானாதலின் 'எங்கள் கோமளக் கொழுந்தே' என்றார். இங்ஙனமன்றி அடியார்களும் அன்பர்களும் பூஞ்செடியும் பூங்கொடியும் போல்வர்; செடி கொடிகளின் வேர்க்குள்ள தீங்கைக் கொழுந்து வாடி முன்னால் அறிவிக்கும்; அது தெரிந்து பொழில் காப்பான் கொத்தி வெட்டி எருவிட்டு மருந்திட்டுத் தீங்குநீக்கிச் செடியைக் காக்க உதவும். அதுபோல அடியார்களுக்கு வாசனையால் விளைந்த கேடுகளை முன்னறியச் செய்பவனாதலின் இறைவனைக் கொழுந்தென்றார் என்பாரும் உளர். விடாமையும் மாறாமையும் அடியார் தீங்குகளைத் தாமே திருவுளங்கொண்டு காக்கும் பேராற்றலும் உடைய பெருமானுடைய முழுமுதற்றன்மைக்கு இழுக்கு இவ்வுவமையால் நேராதாயின் இந்நயம் கொள்க. பெரிய வெள்ளத்தில் சிக்கிச் சுழியிடைப்பட்டான் ஒருவனைக் கைகொடுத்து வருக என்று கூவித் தூக்குவதுபோன்று பிறவி வெள்ளத்தில் துன்பச்சூழலில் அறியாமையாகிய முதலை கவ்வ வருந்தும் அடியேனை 'வருக என்று நின்பால் வாங்கிடவேண்டும்' என வேண்டுகிறார்.

என்னைத் தூக்கி எடுத்தால்மட்டும் போதாது; இன்பமயமான திருவடியையும் தந்தருளவேண்டும்; நான் சுற்றமும் பற்றும் விட்ட தனியனாயினேன்; என் தனிமையைத் தீர்த்துத் திருவடிச்சார்பு அருளவேண்டுமென்பார் 'தமியனேன் தனிமை தீர்த்து நின் பாதம் தருக' என வேண்டிக்கொள்கின்றார்.

அடியேனை வருக என்று அழைத்து நின்பால் வாங்கிட வேண்டும், பாதம் வேண்டும் என வேண்டுதலால் இறைவன் காருணியமும், தமியேன் தனிமை தீர்த்து என்பதால் இரக்கமும் குறிக்கப்பெறுதலின் இது காருணியத்திரங்கலாயிற்று.

73 *தீர்ந்தஅன் பாய அன்பர்க்*
*கவரினும் அன்ப போற்றி*
*பேர்ந்துமென் பொய்மை யாட்கொண்*
*டருளிடும் பெருமை போற்றி*

வார்ந்தநஞ் சயின்று வானோர்க்
கமுதமீ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாத நாயேற்
கருளிட வேண்டும் போற்றி. 69

இ - ள் : முதிர்ந்த அன்புடைய அடியார்களுக்கு அவரினும் அன்புடையவனே! போற்றி; மீண்டும் எனது பொய்மையை நீக்கி ஆட்கொள்ளும் பெருமைக்குணமுடையவனே! வணக்கம்; ஒழுகிய நஞ்சையுண்டு, தேவர்களுக்கு அமுதமீந்த வள்ளலே போற்றி; இன்பம்நிறைந்த நின்திருவடியை நாயை ஒத்த எனக்குத் தந்தருளவேண்டும் வணக்கம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகள் பெரும்! அடியேனது பிழை பொறுத்து அடிகளைத் தந்தருளவேண்டுமென்று விண்ணப்பிக்கின்றார்.

தீர்ந்த அழகு, தீர்ந்த காய் என்பன போலத் தீர்ந்த அன்பு - முதிர்ந்த அன்பை உணர்த்தியது. முதிர்ந்த அன்பர்களுக்கு அவரினும் முதிர்ந்த அன்பனாக விளங்குகின்றான் இறைவன் என்பதாம். முதிர்ந்த அன்பு - அருள். அன்பாய அன்பர் - அன்பு உருக்கொண்டாலொத்த அன்பர் எனக் குணமும் குணியும் ஒன்றான அன்பர் என்பதை விளக்கி நின்றது. அன்புடைமையை அன்பர்கள் குறிப்பறிந்து பணி செய்வதானும், துன்பம்வந்தகாலத்து இரக்கம் காட்டுதலானும் உதவி செய்தலானும் வெளிப்படுத்துவர். அதுபோல, இறைவனும் சுந்தரருக்குத் தூது நடந்தும், சம்பந்தப்பெருமானுக்கு அம்பொனாயிரம் கொடுத்தும், வந்திக்கு மண் சுமந்தும், மாணிக்கவாசகருக்கு வையையைப் பெருக்கியும், தருமிக்காகப் புலவனாக வந்தும் அருள்செய்தமை காண்க.

நாடகத்தாலுன் அடியார்போல நடிக்கும் பொய்ம்மையைக் கண்டும், இவன் தீயன் கடியன் என்று ஒதுக்கிவிடாது மீட்டும் ஆட்கொண்டருளிய பெருமை பெருமானுடைய எல்லையில் கருணைக்கு எடுத்துக்காட்டென வியப்பாராய், 'என் பொய்மை (கண்டும்) பேர்ந்தும் ஆட்கொண்டு அருளிடும் பெருமை போற்றி' என்றருளினார். இங்ஙனமன்றிப் பொய்மை பேர்ந்தும் ஆட்கொண்டும் அருளிடும் பெருமை போற்றி எனக்கூட்டிப் பொருள்காண்டலும் ஆம். வார்ந்த நஞ்சு - பாற்கடல்கடைந்த காலத்து வாசுகியாகிய கடைகயிற்றின் வாயினின்று ஒழுகிய நஞ்சு. இறைவன் நஞ்சு உண்டு தேவர்களைக் காத்தாராதலின் இங்ஙனம் கூறினார். ஈ வள்ளல்: வினைத்தொகை.

ஆர்ந்த நின் பாதம் - எல்லா அருட்குணங்களும் அதன் பயனாக ஆன்மாக்கள் நுகரும் இன்பமும்நிறைந்த நின்திருவடி. ஆகாத நஞ்சையுண்டு, ஆக்கமளிக்கும் அமுதத்தை அமரர்க்கு ஈந்த வள்ளலாதலின், என் குற்றங்களைக் கடிந்து திருவடி யின்பைத் தந்தருளவேண்டினார் என்க. இந்நன்றியை என்றும் மறவாது போற்று வேனாயினும் பிறப்பிலிழிந்த நாயை ஒப்பேன் என்பார் 'நாயேற்கு' என்றார்.

இப்பாடலில் பொய்மைபோக்கி ஆட்கொண்டருள வேண்டு மென்றும், பாதம் அருளிடவேண்டுமென்றும் வேண்டுதலான் காருணியத்து இரங்கலாதல் காண்க.

74 போற்றியிப் புவன நீர்தீக்
காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற
மாகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவு யிர்க்கும்
ஈறுயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கை யானே. 70

திருச்சிற்றம்பலம்

இ - ள்: இந்த நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் என்னும் ஐம்பெரும்பூதங்களும் ஆனவனே! வணக்கம்; எல்லா உயிர்களும் தோன்றுதற்கிடமாகியிருந்து, தனக்கு ஓர்வகை யினும் தோற்றமில்லாதவனே! வணக்கம்; எல்லாவுயிர்களும் ஒடுங்குதற்கு இடனாகித் தனக்கு ஈறில்லாதவனே! வணக்கம்; அடியேனுடைய ஐம்புலன்களாலும் அறியப்படாது என்னைச் சார்ந்திருப்பவனே வணக்கம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகள், எல்லாமாய் அல்லவுமாய், புல னறிவைக் கடந்துவிளங்கும் இறைநிலையையுணர்த்துகின்றார்.

இப்புவனம் என்றது நாம் வாழும் இப்பூமியைக் குறிப்ப தாகலின் அண்மைச்சுட்டுப் புணர்க்கப்பெற்றது. 'புவனம் நீர் தீ கால் வானம்' என்று ஒடுக்கமுறைபற்றி அருளியவாறும். இறைவனுடைய அட்டமூர்த்தியுருவில் ஐம்பூத உரு அறிவிக்கப் பட்டமையானும், பின்னர் 'எவ்வுயிர்க்கும் தோற்றமாகி' என உடம்பொடு புணர்த்தலாக உயிராகிய புருடன் அறிவிக்கப் பெற்றமையானும் தீயென்ற ஒளிதரும் பொருளில் ஞாயிறும்

திங்களும் சேர்த்து எண்ணப்பெற்றதாகக் கொள்க. இதனால் இறைவன் விசுவரூபனுதலை விளக்கியவாறும்.

உயிர்க்குத் தோற்றமுமில்லை அழிவுமில்லை. உயிர் இறை போல அநாதி நித்தியமாகவும் 'எவ்வுயிர்க்கும் தோற்றம் ஆகி' என்று இறைவனைக் குறிப்பித்தது, உயிர்களுக்கு உடலோடு கூட்டித் தோற்றுவித்தலையாம் என்க. இதற்குப் பிறர் பிறவாறு உரைகண்டு இடர்ப்படுவர். திருமூலர் "எம் ஆருயிர் ஆக்குகின்றான்" "சத்தி சிவன் விளையாட்டால் உயிராக்கி" என்றருளுதலையும் காண்க. எனவே, இப்பகுதி இறைவனே தனு கரண புவனம் முதலியவற்றிற்குப் பரமகாரணன் என்பது உணர்த்தியவாறும். இங்ஙனம் எல்லாவற்றிற்கும் காரணனுய சிவம் தனக்குக் காரணமாவார் பிறரில்லாதது என்றுணர்த்துவார் 'நீ தோற்றம் இல்லாய்' என்றார். இதனால் காலங்கடந்த தொன்மையும், முழுமுதற்றன்மையும் உணர்த்தியவாறும்.

காணப்படுகின்ற சித்தும் சடமுமாய பொருள்கள் யாவும் தத்தம் காரணத்துள் ஒடுங்க, காரணங்கள் யாவும் சத்தியுள் ஒடுங்க, சத்தி தன்னுள் ஒடுங்க, தான் மட்டும் ஒன்றினும் ஒடுங்காமல், புனருற்பவத்திற்குக் காரணமாக அந்தமாதியாயிருத்தலின் 'எல்லா உயிர்க்கும் ஈறாய் (தனக்கு) ஈறின்மையானாய்' என்றார். 'ஈறில்லாதவனானாய்' என இன்மையைப் பொருளொடு புணர்த்தி ஓதாது இன்மையானாய் எனப் பண்பாகவே ஓதியது சிவம் தன்னிலையில் அருளாய் வியாபகமாயிருக்கும் சிறப்புநோக்கி என்க.

புலன்கள் - விடயங்கள். ஈண்டு விடயங்களைச் சென்று பற்றும் பொறிகளை உணர்த்திற்று. ஆகவே, மனமும் மனம் வாயிலாகக்கொண்டு சென்று பற்றும் பொறிகளும் மாயையின் காரியமாய்ச்சடமாதலின்,அவை ஞானசொரூபனாகிய சிவத்தைப் பொருந்தாது என்பார் 'ஐம்புலன்கள் நின்னைப் புணர்கிலா' என்றார். 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்' என்ற கோவைப் பகுதிக்குப் பேராசிரியர் ஞானிகட்கும் கருவி கரணங்களால் உணர்தற்கு அரியவன் என உரைத்ததும் காண்க.

ஐம்பொறிகள் அவனை அடையாவாயினும், ஐம்பொறிகளை அவன் சார்ந்திருப்பன்: எதுவரை எனின், வினைக்கீடாக உடல் எடுத்த உயிர்கள் வினைப்போகம் துய்த்து வினைகளை ஒழித்து ஈடேறும்வரையில் உடனாய் நிற்பன் ஆதலின் 'புணர்க்கையானே' என்றார்.

'இப்புவனம் ... ... வானம் ஆனாய்' என்பது இறைவன் ஒன்றாய் நிற்றலையும், 'தோற்றம் ஆகி, தோற்றம் இல்லாய், ஈறாயீறின்மையானாய்' என்பன வேறாய்நிற்றலையும், 'ஐம்புலன் கள் புணர்கிலாப் புணர்க்கையானே' என்பது உடனாய் நிற்ற லையும் உணர்த்தியவாறு.

இங்ஙனம் இறைவன் சிறப்பியல்புகளைக் கூறி இன்புற்றுப் போற்றுதலின்இச்செய்யுள் காருணியத்திரங்கற்குஇயைபுடைத் தாதல் அறிக.

## அ. ஆனந்தத்தழுந்தல்

ஆனந்தம் - இன்பநுகர்ச்சியால் விளையும் களிப்பு. இது அநு பவம் ஒன்றற்கே உரியதாய், உரையாலும் குறிப்பாலும் உணர்த்த ஒண்ணாததாயிருப்பது. தேனுண்ட வண்டு மயங்கிக்கிடத்தல்போல ஆனந்தத்தழுந்திய உயிர் செயலற்று, களிப்பே கருத்தாய் வேறு உணர்வும் செயலுமின்றிக் கிடக்கும். அந்நிலையை இறைவனிடம் அடிகளார் வேண்டுதலின் இப்பதிகம் ஆனந்தத்தழுந்தலாயிற்று. இதனைப் பின்வரும் 'அங்கணாள புங்கமானபோகமே புணர்ப்பதாக' 'ஆகம் விண்டு, கம்பம் வந்து, குஞ்சியஞ்சலிக்கணே என் கை ஆக, கண்கள் தாரையாறது ஆக' என வேண்டுவதால் தெளிக.

இதற்கு இங்ஙனம் அன்றி இன்பத்தில் அழுந்திநிற்றல் எனப் பொருள்காண்பர் சிலர். அழுந்தியநிலை சிவபோகமாதலானும், அந் நிலையில் பிரார்த்தனை முதலியன நிகழாமையானும், இன்ப நுகர்ச் சியை வயாற்சொல்லும் செயல் இன்பநுகர்ச்சியினின்று பிரிந்த பின்னன்றி அழுந்தியநிலையில் நிகழாமையைச் சிற்றின்பத்தில் புணர்ச்சியின் மகிழ்தலாகவும் புணர்ந்தபின் நலம்பாராட்டுதலாக வும் திருக்கோவைவாயிலாக அறிகின்றேமாதலானும் இக்கருத்து ஏலாதென்பதறிக.

ஆகவே, ஆனந்தம் என்பது மெய்யுணர்வாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானத்தைத் துணைக்கொண்டு, உரை மனம் கடந்தநிலையில் உயிர் சிவத்தொடு ஒன்றி நுகரும் உலப்பிலா ஆனந்தமென்பதும், அழுந்தல் என்பது ஈண்டு அதிலழுந்தியிருக்கும் சிவபோகத்தை அடிகளார் இறைவனிடம் வேண்டுகிறார் என்றும் கருத்துக்கோடல் வேண்டும்.

ஆத்துமசுத்திபெற்ற உயிர் சிவகருணைக்காக இரங்கிப்பெற்று, அதன் மேனிலையாகிய ஆனந்தத்து அழுந்துதலை வேண்டுதலே சோபானக்கிரமமும் ஆதல் தெளிக.

பழையவுரையும் 'பெற்ருேர் பயன்போலப் பெறக் கிடைத்த தில்லையெனப் பேரின்ப அவாக்கேட்கும் சிவசத்தி யனுபூதி' என உரைத்தலும் இக்கருத்தையே வலியுறுத்தல் காண்க.

## எழுசீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

75 புணர்ப்ப தொக்க எந்தை யென்னை
யாண்டு பூண நோக்கினுய்
புணர்ப்ப தன்றி தென்ற போது
நின்னெ டென்னெ டென்னிதாம்
புணர்ப்ப தாக அன்றி தாக
அன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்க ணுள
புங்க மான போகமே. 71

இ-ள்: எம் தந்தையே! எம்மோடு புணர்க்கப்படுவ தாகிய இருவினைகளும் ஒத்தவேளையில், என்னை ஆளாக ஏற்று மேற்கொள்ளத் திருவருள்நோக்கம் செய்தாய்; இந்த அருள் நோக்கம் தேவரீரோடும் அடியேனேடும் இக்கணமே கூட்டுவ தன்ரும் என்றபோது, இது என்ன பயனைத் தரவல்லதாம்; ஆதலால் அழகிய கண்ணேட்டம் உடையவனே! திருவடிக் கண் கூட்டிவைப்பதாகட்டும்; இல்லையாகட்டும்; நின் திரு வடிக்கண் அன்பை எனக்குப் பொருத்துவது மிக உயர்ந்த சிவாநுபவமாக என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், அடியேனை ஆட்கொண்ட நீ திருவடியின்கண் சேர்த்தருளக் காலம் தாழ்க்குமாயின் இடையருப் பேரன்பேனும் தந்தருளுக என வேண்டுகின்ருர்.

நின் திருவடியும், திருவடிக்கண் பெறக்கடவதாகிய பேரின் பச் செல்வமும் மகன் முறையில் எனக்கே உரியது என்பார் இறைவனை 'எந்தை' என விளித்தார்.

புணர்ப்பது - வினை. உயிர்கள் என்றும் சுதந்திரமற்றவை. வினைகள் சடமாதலின் உயிர்களைச் சென்றணையமாட்டா. ஆத லால் இறைவன் நடுநின்று புணர்க்கப் புணர்வது வினை. அத னைப் 'புணர்ப்பது' என்ருர். இதுவரை புணர்க்கப்பெற்ற வினை கள் துன்ப இன்பமாய் விருப்பு வெறுப்பாக நுகர்ந்து கழிக்கப் பெற்றவை. இனிவரும் வினைகளே விருப்பு வெறுப்புக்கள்

சமனாக அநுபவிக்கத்தக்கவை. ஆதலால் புணர்ப்பது என எதிர்கால வாய்பாட்டாற் கூறினர்.

ஒக்க - சமமாக. வினை ஒத்தலாவது நல்வினையின் அளவும் தீவினையின் அளவும் ஏறிக்குறையாது தம்முள் ஒத்திருத்தல் அன்று. நல்லதின் நலனாகிய இன்பத்தை நுகருங்காலும், தீயதின் தீமையாகிய துன்பத்தை நுகருங்காலும் விருப்பு வெறுப்பின்றிச் சமபுத்திபுரிதல். அப்பர்சுவாமிகள் "நஞ்சும் அமுதாம்" என்றது போலவும், நீற்றறை மூசு வண்டறை பொய்கையாயிருந்தது போலவும் கண்டு நுகர்தல். இறைவன் இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்ற ஆன்மாக்களையே ஆட்கொள்வானாதலின் 'ஒக்க ஆண்டு' எனக் காரண காரிய முறைபற்றி அமைத்தார்.

சரியையாதி தவத்தின் பயனாக எனக்கு அருட்பார்வைக்கு இலக்காகும் வாய்ப்பு வாய்த்ததென்பார் 'புணர்ப்பது ஒக்க' என்றார் என்பர் சிலர். அடியேனை ஆட்கொள்ளத் திருவுளம் பற்றியபோதே அடியேனைத் திருவடிக்கண் புணர்ப்பதற்கு ஏதுவாகிய இருவினையும் ஒக்க என்றும் உரைக்கலாம். அன்றி, ஆட்கொள்கின்ற காலத்தே ஏதோ இன்றைக்கே இக்கணமே திருவடியில் சேர்த்துக்கொள்ளுவதை ஒப்ப ஆட்கொண்டாய் எனலுமாம். நயமுடையதை நாடுக.

பூண நோக்கினாய் - சுட்டுத் தூய்மையுறுத்திய பொன்னைப் பணியாக்கி அணிவதுபோல இருவினை ஒப்பும் மலபரிபாகமும் பெற்ற என்னை ஆட்கொண்டு பூண்போலப்பூணத் திருவருள் நோக்கம் செய்தாய். உடனே பூணநோக்கிய நீ அங்ஙனம் புணர்க்கவில்லையாயின் உன்னோடும் என்னோடும் என்ன இயைபுளது என்று மனம் வெம்பிக் கூறுவார் 'இது புணர்ப்பது அன்று என்றபோது நின்னொடு என்னொடு இது என் ஆம்' எனக் கூறினர். இங்ஙனம் கண்ணழித்துப் பொருள் காண்க.

பூண - அடியேன் அடிமையை மேற்கொள்ள. யான் அடியேன், நீ ஆண்டான் என்ற கருத்தைமட்டும் யான் மேற்கொள்ளத் திருவுளம்பாலித்தாய் என்பாரும் உளர்.

இது புணர்ப்பது அன்று என்றபோது என்னொடு நின்னொடு என்னுமெனக் கூட்டி, இவ்வான்மா திருவடிச்சேர்க்கைக் குரியது அன்று என்று நீ திருவுள்ளம் கொள்கின்றபோது எனக்கும் உனக்கும் என்ன இருக்கிறது எனப் புலவிதோன்றக் கூறியதாம். இங்ஙனம் அன்றி, பின்னர் உன்னை என்னோடு

இக்காலம் இயைவிப்பது அன்று என்று எண்ணியபோது யான் செய்யத்தக்கது யாதுளது எனப் பொருள் கொள்வாரும் உளர்.

புணர்ப்பது ஆக இது அன்று ஆக - நீ அடியேனைப் பூணுக புணர்ப்பது ஆகட்டும் அன்றாகட்டும். நின் கழற்கணே அன்பு புணர்ப்பது புங்கமான போகம் ஆக - திருவடிக்கன்பு அளிப்பதொன்றே அடியேற்கு மிக உயர்ந்த இன்பம் ஆகுக என வேண்டியவாறு. இவ்வண்ணம் கொண்டுகூட்டி இடர்ப் படாது பொருள் இயங்குவதாக இருக்க வேண்டியவாறே பல சொற்களை வருவித்துரைத்து இசையெச்சப் பொருள்கொண்டு இடர்ப்படுவாரும் உளர். சிறந்தன தெளிக. மெய்யன்பு ஒன்றே திருவடிப்பேற்றைத் தருவதாகலின் அதுவே போகமாம் என வேண்டிக்கொண்டதாம். புங்கம் - உயர்ச்சி. ஆக: வியங்கோள்.

'தில்லைக்கு வருக' என இறைவனுணை பிறந்தபோது இறைவனைவிட்டுப்பிரிதலில் சிறிது வருத்தம்தோன்ற 'ஆமாம்; இது நீ அடைதற்குரிய காலம் அன்று' என்று கூறியபோது உனக்கும் எனக்கும் என்ன இயைபு இருக்கிறதென்று ஆராமை மீதூரக் கூறியதாகக் கோடலே பொருத்தமாதல் காண்க.

மேலும், நீ சேர்த்துக் கொள்; சேர்க்காமல் விடு; திருவடிக் கண் அன்பாவது வேண்டும் என்பதும் இக்கருத்திற்கு அரண் செய்தல் காண்க.

கண்ணில் சிறப்புடையானைக் கண்ணன் என்பதுபோலக் கண்ணில் சிறப்பாகிய கண்ணோட்டமுடையான் இறைவனென் பது குறிக்க 'அங்கணுள' என விளித்தார். கண்ணுள என்பது காதன்மையால் தலைவி தலைவனை விளிக்கும் விளி.

தலைவனை அடையாவிடினும் அவன் தீண்டிய பொருளைப் பெறுதலும், அவன் பெயரைக் கூறக் கேட்டலுமே தலைவிக்குப் பேரின்பமாதல் போல, நின் திருவடிக்கு அன்பு ஒன்றளித் தாலே போதும், அதுவே எனக்கு உயர்ந்த சிவபோகமாம் என்பார் 'புங்கமான போகமே' என்றார். போகத்தை விளை விப்பதாக என இரண்டனுருபு விரித்துப் பொருள் கொள்ளு வாரும் உளர்.

ஆனந்தத்தழுந்துதல் பெறாத ஆராமை மிக்கு உரைப்பன ஆதலின், முத்தியில் உடனே சேர்ப்பது போல ஆண்டனை; இப்போது முடியாது என்றனை; அப்படியானால் உனக்கும்

எனக்கும் என்ன இருக்கின்றது; நீ சேர், சேர்க்காமல் விடு; திருவடிக்கண் அன்பாவது வேண்டும்; அங்கணா! இதுவே எனக்கு உயர்ந்தபோகமாம் என உரையாடுதல்போலக் கொள்வதே பொருந்துவதாதல் காண்க.

இங்ஙனம் ஆனந்தமாகிய சிவபோகத்தழுந்துதலேவேண்டுகின்றமையின் இப்பாடல் பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாயினமை காண்க.

76 *போகம் வேண்டி வேண்டி லேன்பு*
*ரந்த ராதி யின்பமும்*
*ஏக நின்க ழலிணைய*
*லாது லேனெ னெம்பிரான்*
*ஆகம் விண்டு கம்பம் வந்து*
*குஞ்சி யஞ்ச லிக்கணே*
*யாக என்கை கண்கள் தாரை*
*யாற தாக ஐயனே.* 72

இ-ள்: உலகபோகத்தை விரும்பி இந்திரன் முதலான இறையவர் எய்தும் இன்பங்களையும் வேண்டேன்; முழுமுதற் கடவுளே! நினது திருவடிகளல்லாது வேறு விருப்பில்லேன்; எம்பிரானே! உள்ளம் பிளந்து, நடுக்கம் எய்தி, கைகூப்பு எனது சிரத்தின்கண்ணது ஆக; ஐயனே! என் கண்களிலிருந்து ஒழுகும் ஆனந்த நீரொழுக்கு ஆறுகப்பெருகுக என்றவாறு.

முன்னர் உண்மையன்பை உதவுமாறு வேண்டிய வாதவூரண்ணல், இப்பாட்டில் அன்பையும் அதனால் எய்தும் மெய்ப்பாடுகளையும் எய்தவேண்டும் என்கின்றார்கள்.

உலக இன்பம் ஒன்றையே விரும்புபவனாயின் இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகு தேவர்களின் பதவியை விரும்பியிருப்பேன்; நான் வேண்டியது திருவடிக்கு அன்பு ஒன்றே என்பார் 'போகம் வேண்டிப் புரந்தராதி இன்பமும் வேண்டிலேன்' என்றார். இதன் கருத்து அடியேன்செய்த வினைக்கீடாக வினைக்கழிவிற்காக அப்பதவிகள் கிடைப்பின் யான் செய்யக் கடவது என்ன இருக்கிறது? நோய் நீக்கத்திற்காக மருந்துண்பார்போலப் பதவி பெற்று வினைப்போகங்களை உண்டு கழிப்பேன் என்றருளியது. இருவினையொப்புள் நல்வினையின் பயனாகிய இன்பத்தையும் வினைக்கழிவு என்று நுகரும் சமபுத்தி தெரிவித்தவாறும்.

அங்ஙனமாயின் நீர் வேண்டுவதுதான் யாது என்னின், 'கழலிணையலாது இலேன்' என்றார். தன்னேரில்லான், தனக்கு ஒப்பாரில்லாத தனித்தலைவன் ஆதலின் 'ஏக' என்றார். 'சிவ ஏவ அத்துவிதீய:' என்பது வேதம் ஆதலின் அவன் திருவடியே வேண்டத்தகுவன என்றவாறு. சிவ ஏவ சரண்ய: என்பது உபநிடதம். ஆகவே அடைக்கலமாக அடையத்தகுவன நின் கழலிணையே என்பதனை வலியுறுக்க, எதிர்மறை வாய்பாட்டால் 'இணையலாது இலேன்' என்றருளினார்கள்.

எம்பிரான் - எமக்குத் தலைவன் அல்லது வள்ளன்மையுடையவன் எனப் பொதுமையிற் சுவைத்தது. என் எம்பிரான் என்றது தனக்குச் சிறப்பாகவும் பிறருக்குப் பொதுவாகவும் தலைவன் எனக் குறிப்பித்தவாறும். கற்புடைய அரசி ஒருத்தி தன் கணவனைத் தனக்குக் காதலனாகவும் அரசனாகவும், ஏனையோர்க்கு அரசனாகவும் காண்பதுபோல என்க.

ஆகம் - உள்ளம். விரும்பிய பொருளிடத்து எல்லை கடந்த அன்பு சுரக்குமாயின், உள்ளம் பிளப்பதுபோன்ற ஒருணர்வு பிறக்கும். அங்ஙனம் ஆகி என்பார் 'ஆகம் விண்டு' என்றார். கம்பம் - நடுக்கம். என் கை அஞ்சலி குஞ்சிக்கணே ஆக எனக் கூட்டி என் கைகளின் அஞ்சலி சிரத்தின்மீது ஆக எனப் பொருள் காண்க. ஆக: வியங்கோள் வினைமுற்று.

ஐயன் - ஆசாரியன். சரண்யன் ஒருவன் என்றதால் அன்பு உண்டாகி, என் எம்பிரான் என்ற முறைமையால் மனம் விள்ள, மெய் நடுங்கிக் கைகள் சிரமேற்குவிய, என் ஆசாரியன் என்ற தொடர்பால் ஆனந்தக்கண்ணீரின் தாரை ஆறாகப் பெருகுக என முதிர்ந்த அன்பின் மெய்ப்பாட்டு விளக்கம் வெளிப்படுத்தப்பெற்றது.

இப்பாடலில் 'ஆகம் விண்டு' என்பது முதல் 'கண்கள் தாரை ஆறு அது ஆக' என்பது வரை பக்தியும், 'நின் கழல் அலாது இலேன்' 'போகம் வேண்டி வேண்டிலேன்' என்பன வற்றால் வைராக்கிய விசித்திரமும் தோன்ற நிற்றலின் சதகப் பொருளும், ஆனந்தானுபவத்தில் திளைப்பார் எய்தும் மெய்ப்பாடுகளைக் கூறுதலின் பதிகக் கருத்தும் தோன்றல் காண்க.

77

ஐய நின்ன தல்ல தில்லை
மற்றொர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை
பொய்ம்மை யேனெ னெம்பிரான்

மைக லந்த கண்ணி பங்க
வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ
னக்கு மாக வேண்டுமே. 73

இ - ள்: ஐயனே! உன்னுடையதாகிய பற்றையன்றி வேறொரு பற்றும் அடியேனுக்கு இல்லை; என் தலைவனே! வஞ்சனையையுடையவனும் பொய்மையுடையவனும் ஆகிய என்னிடத்து பொய்கலந்த சொற்செயல்களன்றிக் கலவாத சொற்செயல்கள் ஒன்றும் இல்லை; மைகலந்து விளங்குகின்ற கண்களையுடைய உமாதேவியை ஒருபாகத்து உடையவனே! நின் திருவடிக்கண் ஒன்றவந்துகலந்த உண்மைஅடியார்களின் அன்பே அடியேற்கும் உண்டாகவேண்டும் என்றவாறு.

நின்னது அல்லது பற்று எனக்கூட்டுக. நின்னது என்னும் குறிப்புவினையாலணையும் பெயர் நின்னதாகிய பற்று எனப் பொருள்தோன்ற நின்றது. மற்றொர் பற்று - தனு கரண புவன போகங்களில் நிகழ்வதாகிய புறப்பற்று.

பொய் கலந்தது - பொய்மையுடன் கலந்த சொல்லும் செயலும் உண்மையன்பு கலவாத சொற்செயல்கள் என்பது கருத்து. என் எம்பிரான் என்றதொடரில் எம்பிரான் என்பது தலைவன் என்னும் பொருளதாய் இடுகுறிப்பெயரளவாய் நின்றது. பங்க - இடப்பாகத்தை உடையவனே. 'நின் கழற்கணே வந்து கலந்த மெய்யன்பர் அன்பு எனக்கும் ஆகவேண்டும்' எனக் கூட்டிப் பொருள் காண்க. திருவடிநீழலில் வந்து கலந்தொன்றுன உண்மையடியார்களது உண்மையன்பு எனக்கும் உண்டாகத் திருவுள்ளம்பற்றவேண்டும் என்பதாம்.

யான் பொய்யனேன் என்றமையால் என்னன்பும் பொய் என்றுராயிற்று. 'யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்' எனக் கூறுதல் காண்க. என் எம்பிரான் எனக் கிழமை தோன்றக் கூறியது பொய்யன் வஞ்சகனுக இருத்தலை என்னுடனுயும் ஒன்றுயும் இருந்து அறிந்தும் ஆட்கொண்ட சிறப்பை விளக்குவதாம்.

அன்பு எனக்கும் ஆகவேண்டுமென வேண்டுகின்றவர்கள் இறைவனை 'மை கலந்த கண்ணிபங்க' என அம்மையப்பராகக் கண்டு வேண்டுதல் காண்க.

நின்னது அல்லது மற்றோர் பற்று இல்லை என்றது பக்தி வைராக்கிய விசித்திரத்தையும், அன்பர் அன்பு எனக்கும் ஆக வேண்டும் என்பது ஆனந்தத்தழுந்தற்கு விழைவையும்விளக்கி நிற்றலின் சதக பதிக இயைபுகள் வெளிப்படுகின்றமைகாண்க.

78 வேண்டு நின்க ழற்க ணன்பு
பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை
யாவ வென்ற ருளு நீ
பூண்டுகொண் டடிய னேனும்
போற்றி போற்றி யென்று மென்று
மாண்டு மாண்டு வந்து வந்து
மன்ன நின்வ ணங்கவே. 74

இ-ள்: மன்னவனே! நாயை ஒத்த அடியேனை, பொய்மை யைப்போக்கி ஆளாக ஏற்று, ஆஅ என்று இரங்கிக் கருணை செய்; அடியேனும் அவ்வடிமையை அணிபோலப் பூண்டு பலகால் பிறந்து இறந்து, வந்து வந்தும் போற்றி போற்றி என்று கூறியும் நின்னை வணங்குவதற்காக, உன் திருவடியில் உண்மையான அன்பே எனக்கு வேண்டுவதாகும் என்றவாறு.

இப்பாட்டில் அன்புவேண்டியதன் காரணத்தை விளக்கி யருளுகின்றார்.

மெய்யன்பின் இன்றியமையாமை தம் மனத்து விரைதலால் முதன்முதல் 'வேண்டும் நின் கழற்கண் அன்பு' என விண் ணப்பிக்கின்றார். பின், அவ்வேண்டுகோளை இறைவன் நிறை வேற்றற்கு இடையூறாகத் தம்மிடமுள்ள குறை பொய்ம்மையே என உணருகிறார். 'பொய்ம்மை தீர்த்து' என அதனையும் நீக்கி அருளவேண்டுகிறார். ஆட்கொண்ட பிறகு இரக்க உள்ளத் தோடு அருளவேண்டும் என்கின்றார்.

அடியேனும் உம்முடைய கருணைக்குத்தக நீ கொடுத்த அடிமைத்தன்மையை ஓராபரணம்போலப் பூண்டு போற்றி போற்றி என்று எத்தனைதரம் பிறந்திறந்து வந்தாலும் நின்னை வணங்குவதற்காக மெய்யன்பு உதவுக என்று வேண்டுகிறார். இவ்வண்ணம் அன்பர் உள்ள வளர்ச்சியும் விழைவும் இப் பாட்டில் சித்தரிக்கப்படுகின்றன. இதனால் இது சதகக்கருத்தை விளக்குவதாகின்றது.

மெய்ம்மை அன்பே வேண்டும் எனப் பிரித்துக் கூட்டுக. ஆவ - இரக்கக் குறிப்பு இடைச்சொல். மாண்டு மாண்டு வந்து வந்து - இறந்து இறந்து பிறந்து பிறந்து எனப் பலமுறை மாறிப் பிறத்தலையும் இறத்தலையும் உணர்த்தியது. மாறிமாறிப் பிறந்திறக்குங்கால் வினைக்கூட்டம் ஏறியும் குறைந்தும் வருமாதலின் அவ்வினை ஏறுமைப் பொருட்டு 'போற்றி போற்றி' என்று வணங்க அன்பை விழைகின்ற அடிகளின் நோக்கு அறிந்து இன்புறற்பாலது ஒன்றும்.

'வேண்டு நின் கழல்' என்றது 'நின் கழற்கண் அன்பு' என்கின்றமையால் அடிகளாருடைய குறையுள்ளமும் அதற்குக் காரணம் தம்மிடமுள்ள பொய்ம்மையான ஒழுக்கமும் அன்புமே என்பதும் தெரிவிக்கப்பெறுகின்றன. ஆதலால், பரிபாக விசேடத்தைப் படிப்படியாக விழைதல் காண்க.

79 வணங்கு நின்னை மண்ணும் விண்ணும்
வேத நான்கு மோலமிட்
டுணங்கு நின்னை யெய்த லுற்று
மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன
வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க
என்கொ லோநி னைப்பதே. 75

இ-ள்: நெருங்கிய கொங்கைகளையுடைய உமாதேவியை இடப்பாகத்துக் கொண்டவனே! மண்ணுலகும் விண்ணுலகும் உம்மை வணங்கும்; நான்கு வேதங்களும் உம்மை அடைய முயன்று, மாட்டாமையான் ஓலம் இட்டு வருந்தும்; நாங்கள் உம்மையன்றி மெய்ப்பொருள் வேறொன்று இல்லாமையின் விடமாட்டோம் என இறுகப்பற்ற நீர் எளிவந்து எமக்கு வெளிப்பட்டு நின்று அருள் வழங்குவதற்கு என்ன நினைக்கின்றீர் என்றவாறு.

இத்திருப்பாடல், யாம் விடாது பற்றிநின்று வணங்கத் தேவரீர் அருள்வழங்க வேண்டுவதுதானே! என்ன எண்ணுகிறீர் என அடிமையின் உரிமை தோன்ற வினவுகின்ற அன்பின் மிகுதியை உணர்த்துவது.

மண்ணும், விண்ணும், வேதம் நான்கும் சிவமே முழுமுதல் என உணராமையான், காமியப்பயனைக் கருதி வணங்கின. யாம் உம்மையன்றி ஒரு முதலில்லை என உண்மை உணர்ந்து

உறுதியையும் உடையேமாய் விடேங்கள் என்றனம். வேதங் களையும் விண்ணையும் மண்ணையும் அருளாமைக்கு ஏதுண்டு. எம்மை அங்ஙனம் ஏமாற்ற முடியாது. அருளவேண்டியது தானே! அதற்குத் தடையாக என்ன எண்ணுகிறீர்? என்று உண்மையான அடிமை கடமையைச் சரிவர நிறைவேற்றிய பிறகு காலம் தாழ்த்தும் முதலாளியை நோக்கி, கூலி கொடுக்க என்ன தடை என்று உரிமையிற்கேட்பதுபோல வினவுகிறார்.

மண் விண் என்பன இட ஆகுபெயராக மக்களையும் தேவர் களையும் உணர்த்தின. உலகம் மூன்றனுள் இரண்டையே கூறியது பாதலத்துள்ளார் பாவமே நுகர்பவர்களாகப் பல பிறவி எடுக்கவேண்டியவர்கள் ஆதலின் அவர்களுக்கு இறை வனை வணங்கவேண்டும் என்ற எண்ணம் துன்பப்படுகின்ற போது சிறிது உண்டாம் ஆயினும், பக்தி ஞான பரிபாகம் உண்டாகாமையின் வணங்கமாட்டார்கள். ஆதலின் அவர்களை ஒழித்து இருவரையே கூறினார். மண்ணவர்கள் புண்ணிய பாவக் கலப்புடையவர்களாக இன்பத் துன்பப்பயனைக் கன்ம பூமியாகிய இங்கிருந்து நுகரும்போது இறைவனை வணங்க வேண்டிய இன்றியமையாமையை எப்போதும் உணர்ந்து ஈடேறுகின்றார்கள் ஆதலின் அவர்களை முற்கூறினார். விண்ண வர்கள் புண்ணியப் பயனாகிய போகத்தை அனுபவித்துத் தொலைக்கும் வரையில் ஞானமின்றிப் போகமே தானாய் அத னுள் அழுந்திப் புண்ணியம் தொலைந்ததும் அசுரர்களால் துன்பமோ பதவியிழப்போ வந்தபோது இறைவனை வணங்கும் சிறப்பில் குணம் பெற்றவர்களாதலின் அவர்களைப் பின்னும் கூறினார்.

வேதம் நான்கும் - இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்ற வேதங்கள் நான்கும். வேதங்கள் பல கடவுளரைப் பல கார ணங்களுக்காகத் துதித்து உண்மை உணராது வருந்தி, ஒவ் வொரு தேவராலுமெய்தும் பயன் எல்லையிறுவதாக இருத்தலைக் கண்டு, எல்லையில்லா இன்பவடிவினன் சிவபரம்பொருளாகிய நீ ஒருவனே என்பதை இறுதியில் உணர்ந்து, தன்னறிவு பாச ஞானமாக இருத்தலின் உன்னை அடையமாட்டாது ஓலமிட்டு உணங்கின என்பதாம்.

யாங்கள் கன்மபூமியில், மிக்க புண்ணியத்தாலும் தரை யினில் கீழைவிட்டுத் தவஞ்செய் சாதியினில் வந்து பரசமயங் களிற் செல்லாப் பாக்கியம் பண்ணியிருக்கின்றோம் ஆகையால் உம்மையன்றி உண்மைப் பொருள் வேறு இல்லை என்பதை

உணர்ந்துள்ளோம்; உம்மைக் கண்டோம்; விடேங்கள் எனப் பற்றியுள்ளோம்; அத்தகைய எமக்கு மேலும் அருளுதற்கு என்ன நினைக்கின்றீர் என வினவுகிருர்.

80

*நினைப்ப தாக சிந்தை செல்லும்*
*எல்லை யேய வாக்கினல்*
*தினைத்த னையு மாவ தில்லை*
*சொல்ல லாவ கேட்பவே*
*அனைத் துலகு மாய நின்னை*
*யைம்பு லன்கள் காண்கிலா*
*எனைத்தெ னைத்த தெப்பு றத்த*
*தெந்தை பாதம் எய்தவே.* 76

இ-ள்: எந்தையே! என் சிந்தை தேவரீரை நினைப்பதாக எண்ணிச் செல்லும்; முடிவுவரை சென்ற வாக்கினல் தினையளவுகூடப் பயன் ஒன்றும் விளையப்போவதில்லை; அவைகள் யான் சொல்லக்கூடியவற்றைக் கேட்பனவா? எல்லாவுலகுமாக இருக்கிற உன்னை ஐம்பொறிகளையும் வாயிலாகவுடைய ஐம்புலன்களோ காணும் ஆற்றலுடையனவல்ல; நின்பாதம் எவ்வளவிற்று? எவ்வளவிற்று? எங்குள்ளது? அதனை அடைய அறிவித்தருளவேண்டும் என்றவாறு.

இத்திருப்பாட்டில் ஐம்புலன்களாலும் காணவியலாத நின் பாதங்களின் தன்மைகள் யாவை? எங்குள்ளது? அவற்றை நான் எய்தவேண்டும்; உரைத்தருள்க என வினவுகிருர்.

என் மனமும் வாக்கும் உன்னைப்பற்றி நினைக்க, சொல்ல, கடைசிவரை செல்லுகின்றன. ஆனல், அவற்ருல் தினைத்துணையும் ஆகப்போவது ஒன்றுமில்லை; என் சிந்தையும் என் வாக்குமாக இருப்பினும் அவை நான் சொல்லலாவனவற்றைக் கேட்பனவா? இல்லவே இல்லை; அந்தக்கரணங்கள்பாடு இப்படிப் போகட்டும். ஐம்புலன்களோ எல்லா உலகுமாய் இருக்கின்ற உன்னைக் காண்கிலா; நானே பாதம் எய்தவேண்டும். விரைகின்றேன்; அப்பாதம் எனைத்தெனைத்து எப்புறத்தது அருளிச் செய்யவேண்டும் என்று வேண்டிக்கொள்கின்ருர். இவ்வண்ணம் ஆற்ரெழுக்காக அமைந்த இப்பாடலுக்கு வேறு பொருள் காண்பாரும் உளர். சிறந்தன காண்க.

நினைப்பதாகச்செல்லும் என்றதன் குறிப்பு அவன் நினையுமா நினைந்தால் அன்றி அகக்கருவியாகிய மனம் நினைக்கமாட்டாது என்பதை விளக்கியவாறு.

எல்லையேய வாக்கு - கற்பனையாகக் கடைசிவரை கண்டது போலக் கூறும் வாக்கு. பேச்சினல் தினையளவும் பயனில்லை என்பது. இவை இரண்டையும் நோக்கி, யான், மனமே! நீ ஒரு கருவி; உணருந்தன்மையற்ற சடம். சிவம் - சித்து. நீ உயிர் இயக்க இயங்குகின்றவன். உன்னை இயக்கும் உயிராகிய நானே உணர்த்த உணரும் சித்து. என்னல் இயங்கிப் பொறிகளைக் கொண்டு அறிந்ததைச் சிந்திக்கின்ற உன்னல் பரம் பொருளின் எல்லையற்ற குணங்களை எங்ஙனம் நினைக்கமுடியும்? எண்ணிப் பார். உன் கதியே இப்படியிருக்க, நீ நினைத்ததைச் சொல்லும் வாக்கு. கடைசிவரை எவ்வளவு முயன்றுலென்ன? தினையளவும் ஆகப்போவதில்லை என்று என்னல் சொல்லக் கூடிய அளவு சொல்லியும், அவை ஆணவத்தோடு கலந்து அறியாமை வயப்பட்டிருப்பதனல் கேட்கின்றனவா என்றூர்கள்.

கருவி கரணங்களால் இறைவன் உணர முடியாதவன் என்பார் ‘அனைத்து உலகும் ஆய நின்னை’ என்றுர். கருவி கரணங்கள் இவ்வுலகில் சுட்டியறியப்படும் பொருள்களையே ஏகதேசம் அறிவன; நீயோ எல்லாவுலகுமானவன்; உன்னைப் புலன்கள் அறிவது எப்படி என்றுர் என்பதாம்.

எந்தையே என்றது நீ எம் தந்தையாக இருந்தும் நின் பாதத்தை யான் அறிந்திலேன்; எத்துணைத்து என்பதை நீ உணர்த்திலைன்றி, எனக்கு உணரும் ஆற்றல் இல்லை; எங்கு உள்ளது என்றும் அறியேன் என்று ஆன்மாவின் சிற்றறிவுடைமை விளக்க விண்ணப்பித்தவாறு. எனைத்து எனைத்து என்ற அடுக்கு அதனை எய்துவதில் உள்ள விழைவு மிகுதியை வெளிப்படுத்தியதாம்.

*81*

எய்த லாவ தென்று நின்னை
 யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி
 மற்றெ ருண்மை யின்மையிற்
பைத லாவ தென்று பாது
 காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும்
 வண்ண மில்லை யீசனே. 77

இ - ள்: எங்களுடைய தலைவனே! வஞ்சனையுடையவனுகிய இந்த எனக்கு, நின்னையடைதலால் உளதாவதாகிய இன்பத்தைப் பொருந்துவது எப்பொழுது? உன்னிடமன்றி

மற்று ஓரிடத்தும், மெய்யாகிய பற்றுக்கோடில்லாமையால் யான் உய்வது எங்ஙனம்? இவ்வுயிர் துன்பத்தின்கண் ஆகுமே யென்று பாதுகாத்து இரங்குவாயாக; ஈசனே! பாவியாகிய எனக்கு இதனையன்றி உன்னிடத்தில் பொருந்தும் உபாயம் ஒன்றுமில்லை என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடியேற்கு உன் திருவடியையடைதற்கு வேறோர் உபாயமின்மையால், நீயே அதனையும் உணர்த்துதல் வேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றார்.

இறைவனை அடைவதற்கு வஞ்சனை இடையூறாயிருத்தலின் வஞ்சர் நெஞ்சில் நில்லான் ஈசன் ஆகையால், 'வஞ்சனேற்கு எய்தலாவது என்று' என்றார். கண் மாசு நீங்கின் ஒளியைக் காணுதல்போல வஞ்சனை நீங்கியகாலத்து உன்னை எய்தலாம். அது நீங்கும் காலமோ என்னல் அறியத்தக்கது ஒன்றன்று என்பதாம். எய்தல் ஆவது - எய்தலால் விளைவதாகிய இன்பம். அல்லது அடைவது எனினுமாம். 'இவ்வஞ்சனேற்கு' என்னும் சுட்டு தன்னை உணர்த்துவதாய், தாழ்வுப் பொருளைத் தந்தது. உண்மை ஈண்டு ஆகுபெயராய் உண்மைப் பற்றுக்கோட்டை உணர்த்தியது.

உன்கணன்றி மற்றோரிடத்தில் உண்மை இன்மையின் உய்தல் ஆவது எனக்கூட்டுக. ஆவது என்பது யாவது என்ற சொல்லின் மரூஉ. எங்கே என்னும் பொருட்டு. பைதல் - துன்பம். நாம் அருளாவிடின் இவ்வுயிர் துன்பத்தின்கண் ஆவதாமென்று பாதுகாத்து இரங்குவாயாக என்று வேண்டிக் கொள்கிறார். ஈது என்னும் சுட்டு நீ பாதுகாத்து இரங்குத லாகிய இது என்னும் பொருளைச் சுட்டி நின்றது. ஒன்றும் வண்ணம் - பொருந்தும்வண்ணம்.

ஆன்மாக்களின் முயற்சியாகிய கிரியையும் யோகமும் மனத் தூய்மைக்கும் ஒருமைப்பாட்டிற்கும் வாயிலாகுமே அன்றி வீட்டின்பத்தை எய்துதற்கு நேரே உபகாரமாகா. நேரே உதவுவது இறைவன் கருணை ஒன்றே என்பதை உணர்த்த 'ஈதலாவது நின்கண் ஒன்றும் வண்ணம் இல்லை' என்றார்.

இறைவன் காலதத்துவமாய்நின்று வஞ்சனையைப்போக்கி, உயிர்கள் தம்மை எய்தச்செய்து நிலைத்த பற்றுக்கோடாய் இருந்து ஒன்றச் செய்கின்றான் என்பதாம்.

82 ஈச னேநீ யல்ல தில்லை
யிங்கு மங்கு மென்பதும்
பேசி னேனொர் பேத மின்மை
பேதை யேனெ னெம்பிரான்
நீச னேனை யாண்டு கொண்ட
நின்ம லாவொர் நின்னலால்
தேச னேயொர் தேவ ருண்மை
சிந்தி யாது சிந்தையே. 78

இ-ள்: ஈசனே! இவ்வுலகத்தும் அவ்வுலகத்தும் நீயன்றி வேறொரு முழுமுதற்கடவுள் இல்லை என்பதையும் முடிந்த முத்திநிலையில் உயிர்களுள் வேறுபாடு இல்லாமையைப் பற்றியும் பேசினேன் பேதையேனாகிய நான்; எனது எம்பிரானே! இழிமகனாகிய என்னை ஆண்டுகொண்ட தூயவனே! ஒளிவடிவானவனே! உன்னையல்லாது மற்றொரு கடவுள் இருப்பதை என் மனமானது எண்ணவே எண்ணாது என்றவாறு.

இத்திருப்பாட்டில் நீ அல்லாது இறைவேறின்மையை என் சிந்தை நன்றாக உணர்ந்திருக்கிறது. ஆதலால் அது என்றும் பணிசெய்யத் திருவருள் சுரக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார்.

ஈசனே! எங்கும் நிறைந்தபொருள் நீயே என்பதும் தேவர்களுக்குள் பேதம் இல்லை என்பதும் பேதையேனாகிய நான் அந்நிலையில் பேசினேன். நீ ஆண்டுகொண்ட இந்நிலையில் தேசனே! நின்மலா! ஒப்பற்ற உன்னையன்றி மற்றோர் தேவர் உளர் என்பது என் சிந்தை சிந்தியாது என்பது கருத்து.

ஈசன் - செல்வங்கள் நிறைந்தவன். 'அல்லதில்லை' என்னும் சொற்றொடருக்கு நீ அல்லாது ஈசத்தன்மை அடைந்த வேறு பொருள் இல்லை என எழுவாய் வருவித்து உரைக்க. இங்கும் அங்கும் - காணப்படுகின்ற இவ்வுலகத்தும் வேதாகமங்களின் கூற்றாலும் ஆன்றோர் உரையாலும் அறியப்படுகின்ற மறுமை உலகத்தும். விண்ணாதி உலகங்களில் எனினும் ஆம்.

ஓர் பேதமின்மை பேசினேன் என்பதற்கு வீட்டுலகின் தன்மையைப் பேசினேன் என்று உரைப்பாரும் உளர். பேதமின்மை - உயிர் இறை என்னும் வேறுபாடின்றி உயிர் பாச நீக்கம்பெற்றுப் பதியோடு ஒன்றுதலாகிய பேதமின்மை எனக் கொண்டு அங்ஙனம் உரைப்பர். முத்திநிலையில் பேதமின்மை

இயல்பேயாதலின் அதனைப் பேதையேன் பேசினேன் என ஒரு குறையாகக் கூறக் காரணமில்லை. ஆகவே "உம்பரின் ஒருவனென்பார்" "தேவரின் ஒருவன் என்பார் திருவுருச் சிவனே தேவர் மூவராய் நின்றது ஓரார்" என்னும் நிலையில் பேதையாயிருந்தபோது எல்லாத் தெய்வமும் ஒன்றே என்று பேதமின்மையைப் பேசினேன் என்றார். ஆண்டுகொண்ட பின்பு என் சிந்தை நின்னலால் தேவருண்மை சிந்தியாது என்கின்றார். சிறந்த உரை தெளிக.

'என் எம்பிரான்' என்றது என்மகன் என்தந்தை என்பது போலச் சிறப்புரிமை தோன்ற நின்றது. நீசன் - இழிமகன். கூடத்தகாத மல மாயா கன்மங்களுடன் கூடி இழிநிலையிலிருப்பதால் இங்ஙனம் கூறினார். ஆண்டு - என்னுடைய உயிர்க்குற்றங்கள் நீங்க என்னைத் தம்தாக்கிக்கொண்டு. கொண்ட - அக்குற்றங்கள் மீளவும் தொடராதபடி பாதுகாத்துக்கொண்ட. நின்மலன் - இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன்.

83 *சிந்தை செய்கை கேள்வி வாக்குச்*
*சீரி லைம்பு லன்களான்*
*முந்தை யான கால நின்னை*
*யெய்தி டாத மூர்க்கனேன்*
*வெந்தை யாவி ழுந்தி லேனெ*
*னுள்ளம் வெள்கி விண்டிலேன்*
*எந்தை யாய நின்னை யின்னம்*
*எய்த லுற்றி ருப்பனே.* 79

இ - ள்: மனத்தாலும் செயல்களாலும் கேள்வியாலும் மொழிகளாலும் சிறப்பில்லாத ஐம்புலன்களாலும் மிகமிக முன்பேயே நின்னை அடையாத அறிவிலியாகிய நான், ஐயா! தீயில் வெந்து விழுந்திலேன்; என் மனம் வெட்கி உடைந்திலேன்; இன்னமும் எம் தந்தையாகிய உன்னை அடைதற்கு விரும்பியிருக்கின்றேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் இதுவரை பொறி புலன்களால் நின்னை எய்தமுடியாத நான், எய்தலாம் என்ற நோக்குடன் இனியும் இருக்கின்றேன் என்று இரங்கிக் கூறுகின்றார்.

இவ்வளவுகாலம் இத்தனை பிறவிகளில் மனம் புத்தி சித்தங்களாலும் பொறிகளாலும் பரிபாகமுற்று நின்னை அடையாத நான், வெந்தொழியாத நான் உன்னை அடையலாமென்று எதிர் நோக்கியிருக்கிறேன்; என்னே என்மடமை என்பது கருத்து.

முக்கரணங்களாலும் பொறிகளாலும் அடைதலாவது இறைவனையே எண்ணியும் அவன் பணிகளைச்செய்தும் அவன் புகழைச் சொல்லியும் பிறர் சொல்லக்கேட்டும் ஐந்து பேரறிவுகளும் கண்களே கொள்ள இறைவனுடன் ஒன்றியும் அடைதல். இதுவே உயிரின் இயல்பும் கடமையுமாகும். இவற்றை இழந்து தனு கரண புவன போகங்களாகிய இவற்றை இறுகப்பற்றி, கொண்டது விடாத்தன்மையோடு இருத்தலின் 'மூர்க்கனேன்' என்று மொழிந்தார். ஐயா! விழுந்து வெந்திலேன் எனப் பிரித்துக்கூட்டுக.

மனம் வெட்கத்தால் விள்ளுதலாவது கடமை தவறியதால் வெட்கிச் செயலற்றிருத்தல். இன்னம் என்பது என் குறையை யான் அறிந்தும் நின்னை அடைய விரும்புகின்ற இழிதகைமையை விளக்கியது.

சிந்தை முதலானவற்றால் சிவனை அடையும் சிறப்பினை, 'சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன் கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன் மணிவார்த்தைக் காக்கி' என்ற (30) பாடலால் அறிக. சீரில் ஐம்புலன்கள் என்றது வேப்பங்கனிகளைச் சிவலிங்கமாகவும் தவளைகளின் ஒலிகளைச் சிவநாமமாகவும் கண்ட பெரிய அன்பின் வரகுணதேவர்போல் உண்பனவும் தின்பனவும் காண்பனவும் கேட்பனவும் ஆகிய எல்லாம் சிவமயமாக அறிதல் ஆகையால் இத்தன்மை இழந்தமையின் என்க. சீரில் ஐம்புலன்கள் என்றது இதனால் என்க.

84 இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை
யாண்டு கொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ
னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டி யாஅனு முண்டி
ருந்த துண்ட தாயினும்
விருப்பு முண்டு நின்க ணென்க
ணென்ப தென்ன விச்சையே. 80

திருச்சிற்றம்பலம்

இ-ள்: இரும்பை ஒத்த மனமுடைய வஞ்சகனாகிய என்னை அடிமையாக ஏற்றுக்கொண்டு நின் திருவடிக்கண் சுரக்கின்ற கருப்பஞ்சாறுபோன்ற அருளமுதத்தை ஊட்டி என்னுயிரோடு ஒன்றியிருந்து பின் பிரிந்துபோகவும், தீயும்

உளது; யானும் உணவுண்டு உயிரோடு இருந்ததும் உண்டு; அது அப்படியாயினும் என்னிடத்து நின்மாட்டு உளதாகிய விருப்பம்மட்டும் உண்டு என்பது என்ன வித்தையோ யான் அறிந்திலேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் சிவானந்தானுபவம் கிடைத்து நழுவிய பிறகும் உயிரைத் துறவாது இன்னும் உண்டு உயிர் வாழ்கின்றேன்: ஆனாலும், உன்மாட்டு அன்பு என்னிடம் இருக்கிறது என்பது வியத்தகு செயல்களில் ஒன்று என்றருளுகின்றார்.

சிவனருள் அமுதம் கைக்கு எட்டியது தவறிப்போகவும் நெருப்பிருந்தும் வெந்து வீழாது, நானும் உண்டு உயிரோடு இருந்தது உண்டு. அப்படியேயானாலும் உன்னைப்பற்றிய அன்புமட்டும் என்னிடம் இருந்துகொண்டே இருக்கின்றது. இது என்ன வித்தையோ தெரியவில்லை.

'இருப்பு நெஞ்ச வஞ்சனேனை' என்றது இரும்பு நீரைச் சார்ந்திருக்கின்றபொழுது கருமையும் தண்மையும் உடையதாயிருப்பினும் தீயைச் சார்ந்தபொழுது செம்மையும் ஒளியும் சூடும் தன்னிடம் பொருந்திய பொருளைத் தீய்த்துத் தூய்மைப் படுத்துதலும் உடையதாதல்போல நெஞ்சம் மலமாயைகளுடன் சேர்ந்து அஞ்ஞானவடிவாயிருந்தது. பின் சிவத்தைச்சார்ந்து செம்மையதாய் அறிவொளிவுடையதாய் அமையும் சிறப்பினைத் தெரிவிக்க.

கருப்பு மட்டு - கருப்பஞ்சாறாகிய அமுதம். திருவடி சுரக்கின்ற திருவருளை இனிமையாகிய பொறிச்சுவை ஒன்றேகருதிக் கருப்பஞ்சாற்றுக்கும், சுவையும் சாவாமையுமாகிய இருபயன்களைக் கருதி அமுதத்திற்கும் ஒப்புக் கூறினர். வாய்மடுத்து என்பதனை வாய் மடுப்பித்து எனப் பிறவினை வாய்பாட்டால் பொருள் காண்க. கலந்துபோகவும் என்றது திருவாதவூரில் குருந்தடியில் குருவாக எழுந்தருளிய பெருமான் பொய்கையிலெழுந்த சோதியில் அடியார்கள் கூட்டத்தோடு மறைகின்ற காலத்து, 'தில்லைக்கு வா' என்றருளி மறைந்த வரலாற்றை நினைவூட்டுவது.

நெருப்பும் உண்டு என்றது, சென்ற திருப்பாட்டில் தீயில் வீழ்ந்து வெந்திலேன் என்பதை அனுமானித்தது. யானும் உண்டிருந்தது. உண்டு என்றது உணவு உண்ணுதலை. உயிர் உடலில் தங்கியிருப்பது இறைபணி இயற்றுதற்கேயாதலின்

அது செய்யாது உணவு உண்பது ஒன்றையே கருதியிருந்தே னென இழித்துக் கூறியவாறு. உண்ணாவேகிற்பன் என்பது இக்கருத்தை வலியுறுத்துவதொன்றாகும். அதாயினும் என்பது அப்படியாயினும் என்னும் பொருளைத் தருவதோர் வழக்கு.

நின்கண் விருப்பம் என்கண் உண்டு - இவ்வண்ணம் வாளா நான் உயிர்வாழ்வேனாயினும் நின்மாட்டு அன்பு என்னிடத்திலிருக்கிறது. இதனை என்கண் விருப்பம் நின்கண் விருப்பமுண்டு எனக்கூட்டி, தகுதியற்ற என்னிடத்தும் இவனை உய்விக்கவேண்டும் என்ற விருப்பம் நின்னிடத்து இருக்கிறது என்று இறைவன் கருணையை வியந்ததாக அமையும்.

## ௯. ஆனந்தபரவசம்

நுகர்வானும் நுகர்பொருளும் நுகர்ச்சியுமாக இருந்து நுகர்கின்றபொழுது ஆனந்தம் என்று அனுபவித்த ஒரு நிலை முதிர்ந்து நுகர்பவன் தன் வசமழிந்து நுகர்ச்சிப்பயனே தானாய் இருக்கும் நிலை ஆனந்த பரவசமாகும். ஆனந்தத்தில் அழுந்திய உயிர் ஆனந்தமாகிய வியாபகத்துள் வியாப்பியமாய், தன் முனைப்பற்று, அதுவே தானாய் அமர்ந்துள்ள நிலையை வேண்டுதலின் பதிக இயைபு நன்கு விளங்கும்.

### கலிநிலைத்துறை

திருச்சிற்றம்பலம்

85 விச்சுக் கேடு பொய்க்காகா
தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும்
வந்துன் றாள்சேர்ந்தார்
அச்சத் தாலே யாழ்ந்திடு
கின்றேன் ஆரூரெம்
பிச்சைத் தேவா என்னான்
செய்கேன் பேசாயே. 81

இ-ள்: திருவாரூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற பிச்சையெடுக்கும் பெருமானே! பொய்ம்மைக்கு விதை அழிந்து விடுதல் கூடாது என்பதற்காக இக்கன்ம பூமியில் வைத்துச் சென்றாய்; உமது விருப்பத்திற்கு ஆளான அடியார்கள் அத்தனைபேரும் நின்னோடுவந்து நின்திருவடியைச் சார்ந்தார்கள்; யான்மட்டும் இடையறாதுவரும் பிறப்புப்பற்றிய அச்சக்

கடலில் மூழ்குகின்றேன்; நான் என் செய்வேன்? சொல்லி யருளுக என்றவாறு.

இத்திருப்பாட்டில் இறைவன் தன்னைத் தனிக்கவைத்துப் பிரிந்ததும் ஏதோ ஒரு திருவருட்குறிப்பாகும் என்று எண்ணு கிருர்.

உன் அன்புக்குரிய அடியார் அத்தனைபேரும் உன்னேடு திருவருட்சோதியில் மறைய, பொய்ம்மைக்கு விதை வேண்டு மென நினைத்து என்னை வைத்துச் சென்ருய்; நான் என்ன செய்வேன் என்பது கருத்து.

விச்சு, வித்து என்பதன் போலிமொழி. அச்சம், மீளவும் இப்பொய் வாழ்வு இடையருது பற்றுமோ என்னும் அச்சம். ஆரூரில் பெருமான் தியாகராசர் என்ற பெயருடன் கொடை வள்ளலாகவிளங்க இவர் 'ஆரூர் எம் பிச்சைத்தேவா' என்றது அடியார்கள் இடுகின்ற அன்புப் பிச்சையை ஏற்கும் அருட் டிறத்தை நோக்கி. அவர் மாணிக்க நாச்சியார்வீட்டில் பிச்சை யேற்ற தலபுராண வரலாற்றைக் குறிப்பதுமாகலாம்.

86 பேசப் பட்டே னின்னடி
யாரிற் றிருநீறே
பூசப் பட்டேன் பூதல
ராலுன் னடியானென்
றேசப் பட்டே னினிப்படு
கின்ற தமையா தால்
ஆசைப் பட்டே னாட்பட்
டேனுன் னடியேனே. 82

இ-ள்: உம்முடைய மெய்யடியார்களில் ஒருவனுக வைத்துப் பேசப்பட்டேன்; தேவரீர் குருவாக எழுந்தருளிய காலத்து நெற்றியில் திருநீறு பூசப்பட்டேன்; பூமியிலுள்ள மக்களால் இவன் ஒரு சிவனடியான் என்று இகழப்பட்டேன்; இனியும் துன்பப்படுவது பொருந்தாது ஆதலால் யான் வீடு அடைய விரும்பினேன்; உன் அடியாகை ஆட்பட்டேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் பொய்ம்மைக்கு விதையாக வைக்கப்பட் டாலும் உலகம் என்னை உன் அடியார்களில் ஒருவனுக உரைக் கின்றது ஆதலால், வீட்டின்பத்தை விரும்பினேன்; அதற்காக உமக்கும் ஆளானேன் என்று அருளிச்செய்கின்ருர்.

வீடு எய்த இருவினை ஒப்பு இன்றியமையாததாகலின் நின் மெய்யடியார் தம்முள் ஒருவனாக என்னைப் புகழ்ந்தார்கள். நீரே நும் திருக்கையால் திருநீற்றை என் நெற்றியில் பூசினீர். இவற்றால் எனக்கு அளவற்ற ஆனந்தமும் பெருமையும் தோன்றியன. உலகமக்கள் இவன் ஒரு சிவனடியான் என்று இகழ்ந்தார்கள். இந்த இரண்டிலும் எனக்கு விருப்பு வெறுப்புக்கள் தோன்றவில்லை; ஆனாலும் இனித் துன்பப்பட முடியாது; வீடு அடைய விரும்பினேன்; உனக்கு ஆளுமானேன் என்பது கருத்து.

'நாடவர் நம்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப' என்றாற்போல உலகவர்களால் 'இவன் ஒரு சிவப்பித்தன்' என்று ஏசப்பட்டேன் என்றார். ஆல்: அசை.

87

அடியே னல்லேன் கொல்லோதானெனை
யாட்கொண் டிலைகொல்லோ
அடியா ரானா ரெல்லாரும்
வந்துன் றன்சேர்ந்தார்
செடிசே ருடல மிதுநீக்கமாட்டே
னெங்கள் சிவலோகா
கடியே னுன்னைக் கண்ணாரக்
காணுமாறு காணேனே. 83

இ - ள் : உண்மை அடியார்கள் அனைவரும் வந்து உன் திருவடி நிழலை அடைந்தார்கள். கடியத்தக்கவனாகிய யான் மட்டும் முடைநாற்றம் வீசும் உடலமாகிய இதனை நீக்க மாட்டேன். எங்கள் சிவலோகா! உன்னைக் கண்ணாரக்காணும் நெறியையும் யான் அறியேன். இவ்வண்ணம் தியங்குவதற்குக் காரணம் யான் உனக்கு அடியவன் அல்லேனா? அல்லது என்னை நீர் ஆட்கொள்ளவில்லையோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியார்களெல்லாம் உன் திருவடியை அடையவும் நான்மட்டும் அடையாமலும் இப்பிறவியை நீக்காமலும் உன்னைக் கண்ணாரக் காணமலும் வருந்துகின்றேனே; நான் உண்மையான அடியவன் அல்லேனா? அல்லது நீர் என்னை ஆட்கொள்ளவில்லையா? என்று இரங்குகின்றார்.

அடியாரானார் எல்லாரும் சாமுசித்தராக இயற்கையிலேயே மலத்துடன் சாராத அடியார்களும் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் எனப் பரிபாகத்தால் மலநீக்கம்பெற்ற அடியார்களுமென இருவகையர். அவர்களுள் மலநீக்கம் பெற்றவர்களையே

'அடியாரானூர் எல்லாரும்' என்னும் இத்தொடர் குறிக்கின்றது. ஆக்கச்சொல் இயற்கையோடு பொருந்தாமையின். வந்து - திருவடிக்கு அணுக்கராக வந்து. தாள் சேர்ந்தார் - திருவடிப் பேருகிய முத்தியை அடைந்தார்கள்.

செடி சேர் உடலம். செடி - முடை நாற்றம். பூசுவ பூசிக் காலந்தோறும் கழுவப்படாதாயின் புழுவழுக்கு மூடி நாறுதலின் செடிசேருடலம் என்ருர். "செடியாய உடல் தீர்ப்பான்" எனும் புள்ளிருக்கும் வேளூர்த் தேவாரம்கொண்டு தெளிக. செடி - துன்பம் எனினும் ஆம். உடலம் நீக்கமாட்டேன் என்றது உயிர் உடலோடு கூடியிருத்தற்கு ஏதுவாகிய விணைகள் ஒழியா மையின்.

கடியேன் : நீக்கத்தகும் யான். இப்பொருட்டாதலைக் 'கடி யென் கிளவி' என்னும் உரிச்சொல் சூத்திரம்கொண்டு தெளிக. கடுமையான இயல்புடையவன் எனினும் ஆம். பரிபாகக்குறை வால் எப்பொழுதும் காணப்பெருமல் மின்போலத் தோன்றி மறையும் அளவே என் புண்ணியம் இருத்தலின் 'கண்ணூரக் காணுமாறு காணேன்' என்ருர். காணுமாறு காணல் - உன் திருவருள் நோக்கம் என்மீது விழுமாறு யான் தரிசித்தல் எனினும் ஆம்.

உனக்கு அடியனுதற்கு உள்ள தகுதி இல்லாமையாலும் நீ ஆட்கொண்டதை அறிந்து ஈடேறும் பெற்றிமை, வாசனையால் அவ்வப்போது உண்டாதலாலும், அது தன் ஆன்ம அறிவால் அறிய முடியாமையானும் 'அடியேன் அல்லேன் கொல்லோ' என வினவினர். ஆட்கொண்டிருந்தால் மற்றைய அடியார் களைப்போலத் திருவடிநீழலை அடைந்திருப்பேன்; இவ்வுடலம் நீங்கியிருப்பேன்; உன்னை என்றும் கண்டுகொண்டே இருப் பேன்; அவை இன்மையால் 'என்னை நீ ஆட்கொண்டனை கொல்லோ' என்ருர். இதற்கு 'என்னை ஆட்கொள்ளும் திறம் உனக்கில்லையோ' என்று உரைகூறின், அது கடவுட்டன்மைக்கு இழுக்காதல்கண்டு தெளிக. கொல் ஐயப்பொருளிலும் ஓ வினுப் பொருளிலும் வந்தன. இப்பாடல் தன் வசமிழந்து இரங்கு கின்றமையின் பதிகக் கருத்திற்கு ஏற்புடைத்தாதல் அறிக.

88
காணு மாறு காணே னுன்னை
யந்நாட் கண்டே னும்
பாணே பேசி யென்றன்னைப்
படுத்ததென்ன பரஞ்சோதி

ஆணே பெண்ணே யாரமுதே
யத்தாசெத்தே போயினேன்
ஏறு ணில்லா நாயினேன்
என்கொண்டெழுகேன் எம்மானே. 84

இ-ள்: மேலான ஒளிவடிவானவனே! ஆணே! பெண்ணே! கிடைத்தற்கரிய அமுதமே! அத்தா! எம்தலைவனே! உன்னைக் காணும் முறைமையில் கண்டிலேன்; உன்னைக் குருந்தடியில் அந்நாள் கண்ட யானும் இச்சகம் பேசி எனக்குச் செய்து கொண்ட நன்மை என்ன? யான் ஆற்றலும் வெட்கமும் இல்லாத நாயை ஒத்தவன்; இறந்தே போனேன்; எதனைப் பற்றுக்கோடாகக்கொண்டு எழுவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், நீ ஆட்கொண்டது உண்மையாயினும் அடியேன் அதன் அருமையை அறியாது பேசி, காலத்தைப் போக்கினேன்; அங்ஙனமாக, யான் எங்ஙனம் உய்வேனென்று இரங்குகின்றார்.

இறைவா! உண்மையன்றி இச்சகம் பேசி எனக்கு நான் சாதித்துக்கொண்டதென்ன? இறக்கும்நிலையில் இருக்கிறேன்; எதனைக் கொண்டு உய்வேன் என்பதாம்.

சோதி - எங்கும் நிறைந்து தன்னையும் பொருளையும் காட்டுவது. அதுபோல் பூதச்சோதியாகாமல் கருவி கரணங்களைக் கடந்து நின்ற ஒளியாய், தானன்றி அறியப்படும் பொருள் வேறின்மையாய், தன்னையே உணர்த்தி நிற்கும் இறைவனைப் பரஞ்சோதி என்றார். ஒரே திருமேனியில் இரண்டும் ஒன்றாயும் அம்மையும் அப்பனுமாக வேறுவேறாயும் இருத்தலின் 'ஆணே பெண்ணே' என்றார்.

தேவர்களால் கடையப்பட்ட அமுதம் எளிதாய், வரையறைப் பட்ட இன்பமுடையதாய், அழியாமையை அளிப்பது என்னும் பயனை உபசாரமாகப் பெற்றதாய் உள்ளது. இறைவனாகிய அமுதம் அங்ஙனமாகாது உண்டற்குரியதாய், தெவிட்டாததாய், நிறைந்ததாய், கிடைத்தற்கரியதாய், சாவாமூவாப் பெருவாழ்வு அளிக்கவல்லது. தந்தை, தனயன் செய்த தீமையைக் கடிந்து ஒறுத்தானாயினும் இடரில் புகுதவிடான்; அதுபோல என்றும் காக்கவேண்டுதலின் 'அத்தா' என்றார்.

செத்தேபோயினேன் என்றது உயிருக்கு என்றும் அழிவு இல்லையாயினும் தத்தம் கால எல்லையில் இறைவனிடம் ஒடுங்கும்

இயல்பினதாயினும் சிவானந்தத்தை எய்தாமல் பயனின்றி ஒடுங்குதலின் என்க. எல்லையற்ற துன்பமுறுவார் அத்துன்ப மிகுதியை அறிவிக்க 'செத்தேபோயினேன்' என்றார் எனினும் ஆம். ஏண் - ஆற்றல். நாண் - வெட்கம்.

இதனுள் இறைவன் எங்குமாய் நிறைந்த ஒளியாயுள்ள அருவநிலையும், அமுதமாய் நாவிற்குமட்டும் புலனாகும் அருவுருவநிலையும், ஆணும் பெண்ணுமிருக்கும் உருவநிலையுமாக எழுந்தருளி மூவகை ஆன்மாக்களுக்கும் அருள்வழங்கும் இயல்பு குறிக்கப் பெறுகின்றது. பாண் - இச்சக வார்த்தை. படுத்தது - விளைவித்தது.

இன்பவடிவினனாகிய இறைவனைப் பெறாது 'பாணே பேசிப் படுத்ததென்ன' என்றும், 'என்கொண்டெழுகேன்' என்றும், 'காணுமாறு காணேன்' என்றும் தன்வயமிழந்து இரங்குகின்றமையின் இச்செய்யுள் இப்பதிகத்திற்கு ஏற்புடைத்தாயிற்று.

*89* *மானேர் நோக்கி யுடையாள்பங்கா*
*மறையீ றறியா மறையோனே*
*தேனே யமுதே சிந்தைக்கரியாய்*
*சிறியேன் பிழைபொறுக்குங்*
*கோனே சிறிதே கொடுமைபறைந்தேன்*
*சிவமா நகர்குறுகப்*
*போனா ரடியார் யானும்பொய்யும்*
*புறமே போந்தோமே.* *85*

இ-ள்: மான்விழிபோன்ற விழிகளையுடைய உமாதேவியை ஒருகூறாக உள்ளவனே! வேதங்களும் வேத முடிவான உபநிடதங்களும் அறியமுடியாத மறைபொருளாய் உள்ளவனே! தேன் போன்றவனே! அமுதம் போன்றவனே! மனத்திற்கு எட்டாதவனே! சிறியேனுடைய பிழைகளைப் பொறுக்கும் தலைவனே! மெய்யடியார்கள் சிவபுரத்தை அணுகச்சென்றார்கள்; யானும் என் பொய்யும் புறம்பாக வந்துவிட்டோம்; அதனால் கொடுமைகளைச் சிறிது கூறினேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தான் இதுவரை திருவருட்குறிப்பை அறியாது கூறியதற்காக வருந்திப் பிழைபொறுத்து அருள வேண்டுகின்றார்.

மெய்யன்பர்கள் உமது திருவடியைச் சார, பொய்யைத் துணையாகக்கொண்ட நான் புறத்திலே ஒதுக்கப்பட்டேன்;

அதனால் சிறிது கொடுமைகளைச் சொன்னேன்; நீர் அதனைப் பொறுத்தருளல்வேண்டும் என்பது கருத்து.

மானின்விழி கண்டாரைக் கவர்வதாய், பிறருக்குத் தீங்கு செய்யாதது. அதுபோல உமாதேவியின் திருக்கண்ணும் மெய்யடியாரைக் கவர்வதாய், கருணையைப் பயப்பதாதலின் 'மான் நேர் நோக்கி' என்றார். உடையாள் என்றது என்னை என்றென்றும் ஆளாக உடையவள் என்றது. உடைமையாக உடையது எனினும் ஆம். மறையீறு: மறையும் ஈறும் என உம்மைத்தொகை. தேனும் அமுதும் இனிப்பால் ஒன்றாயினும் உடலுக்கு உறுதி அளிப்பது தேன்; உயிருக்கு உறுதி அளிப்பது அமுது. பயனால் வேறுபாடு உடையதென்க.

அதனை இறைவற்கு உவமையாக்கியது ஆன்மாக்களின் பரிபாக நிலைக்கேற்ப அனுபவிக்கப் பெறுதலான் என்க. பறைந்தேன் - சொன்னேன்.

இப்பாடலில், அடியார்கள் அடைந்துள்ள பேற்றை யான் அடையாமையால் இறைவன் அணுக்கத்திலே வந்து சிறிதே கொடுமைபறைந்தேன் எனப் பரவசப்பட்டுக் கூறுகின்றமையின் பதிகத்திற்கு ஏற்புடைத்தாயிற்று.

*90*

புறமே போந்தோம் பொய்யும்
யானு மெய்யன்பு
பெறவே வல்லே னல்லா
வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்தவடியார்
மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்துசிவனே
நின்றாள் சேர்ந்தாரே. *86*

இ - ள்: சிவனே! உன்னை முழுதும் அடைக்கலமாகச் சேர்ந்த அடியார்கள் உனக்குத் தொண்டுசெய்தலே அன்றி வேறு ஒன்றையும் அறியாதவர்கள்; அதனால் சிறந்த செயல்கள் பலவற்றைச்செய்து சமயநெறிக்கண் நின்று உனது திருவடியை அடைந்தார்கள்; அங்ஙனமாகப் பொய்யும் யானும் உன்னைச் சாரவும் முடியாமல் புறமாகப்போயினோம்; அதனால் அடியேன் உண்மை அன்பைப் பெறக்கூடிய வல்லமையற்ற தன்மையைப் பெற்றேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், மெய்யடியார்கள் வேறு ஒன்றையும் அறியாதபடி நின் தாளைச் சேர்ந்தார்கள்; நான் மெய்யன்பும் பெற இயலாதவனானேன் என்று இரங்கிக்கூறுகின்றார்.

தன்குணமாகிய பொய்யைத் தன்னுடன் சேர்த்துப் 'பொய்யும் யானும் புறம் போந்தோம்' என்றார். தன் குணத்தையும் தன்னோடு வினைமுதலாகக் கூறியது தன்னினும் ஆற்றல் மிக்கது என்பதனை அறிவிக்க. புறம்போதலாவது இறைவன் திருவடியை அணுகமாட்டாது ஆணவ இருளில் அழுந்தியிருத்தல். அது நீங்கி இறைவன் திருவடியை அணுக உண்மைச்சாதனமாவது உண்மை அன்பு ஒன்றே; அதனைப் பெறுந்தன்மையையும் இழந்துவிட்டேன் என்பார் 'மெய்யன்பு பெற வல்லேனல்லா வண்ணம் பெற்றேன்' என்றார்.

அடியார் என்றது ஈண்டு மெய்யடியாரை. உண்ணுநீரும் உணவும் இன்பமும் துன்பமும் எல்லாம் நீயே என்று தனக்கு என ஒன்றையும் சாராது நின்னையே சார்ந்து இருக்கின்ற அடியார்கள் என்பதாம். இத்தகைய அடியார்களுக்கு அறியப் படும் பொருள் சிவம் ஒன்றுமேயன்றி வேறொன்றும் இல்லை; எங்கும் சிவமாகக் காணுகின்ற பேறே சித்திக்கும் ஆதலால், 'மற்றொன்றறியாதார்' என்றார். சிறவு - சிறப்பு. "பிறவியோடு இறவுமானான்" "இறவியை யார்க்கும் அறிவரியோன்" என்புழி இறவு இறப்பாதற்போல, "பிறவு ஆழி" என்பதில் பிறவு பிறப் பாதற்போல, சிறவு சிறப்பு என்னும் பொருளில்வந்தது.

வழி வந்து - ஆற்றின்வழி மிதவைபோல அருள் வெள்ளத் தின் வழியே வந்து என்றது. தற்போத முனைப்பற்று என்ற வாறும். இதனால் தனக்கென்று ஒரு சிறிதும் தலைமையும் உரிமையும் பாராட்டாது, தன்னை முழுவதும் இறைவனிடம் ஒப்பித்து, இறைவனையன்றி வேறொன்றையும் அறியாத அடி யார்கள் சிறந்த சிவஞானத்தால் சிவனை அறிதல்செய்து தன் வசமற்று நிற்பார்களாயின் சிவன்தாளில் சேர்வரெனத் திரு வடி அடையும் உபாயம் உரைக்கப்பெற்றமை காண்க.

சிறவு என்பதற்குச் சரியை முதலிய தவங்களென்றும், சிவ ஞானநெறியும் அன்புநெறியும் என்றும் உரைப்பாருமுளர். சிறந்தது கொள்க.

கடலுள் அமிழ்ந்தார்க்குக் கடல் அறியப்படாதவாறுபோல ஆனந்தத்தில் பரவசமாயினார்களுக்கு ஆனந்தம் தோன்றாது.

ஆகவே புறம்போந்த அடிகள் சிவன்தாள் சேர்ந்த அடியார் களின் பரவசநிலையை நின்று கண்டு பேசுகின்றார். ஆதலின் இது ஆனந்த பரவசம் என்னும் பதிகத்தோடு இயைபுடைத் தாயிற்று.

**91**

*தாரா யுடையா யடியேற்*
*குன்று ளிணையன்பு*
*பேரா வுலகம் புக்காரடியார்*
*புறமே போந்தேன்யான்*
*ஊரா மிலைக்கக் குருட்டாமிலைத்தாங்*
*குன்று ளிணையன்புக்*
*காரா யடியே னயலே*
*மயல்கொண் டழுகேனே.* 87

இ - ள்: அடியேனை வழிவழி ஆளாக உடையவனே! அடியேனுக்கு உன் திருவடிக்கண் இணைந்த அன்பைத் தருவாயாக; மெய்யடியார்கள் மீண்டுவாராத வீட்டுலகத்தை அடைந்தார்கள்; யானே அதற்குப் புறம்பாய கன்மபூமியை அடைந்தேன்; ஊர்ப்பசு கனைக்கக் குருட்டுப் பசுவும் கனைத்தது போல உனது திருவடியோடு இணைந்த அன்புக்காக அனுபவம்பெறாத நான் புறம்பாக நின்று மயங்கி அழுகின்றேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், திருவடி அடைதற்குச் சாதனமாகிய உண்மையன்பை உதவுக என வேண்டுகின்றார்.

ஊர்ப்பசு கத்தக் குருட்டுப் பசுவும் கத்தினற்போல அடியார்கள் பேரின்பம்பெற அடியேனும் அதனை அடைய அழுகின்றேன்; உண்மை அன்பை உதவி உன் தாளை அருளுவாயாக என்பது கருத்து.

தாராய்: முன்னிலை ஏவல் வினைமுற்று. ஆன்மாக்கள் என்றும் சுதந்திரம் அற்றவர்களாய் உடைமைப் பொருளைப் போன்றவர்களாதலின் இறைவனை 'உடையாய்' என்றார்.

தாள் இணை அன்பு - தாளின்கண் இணைந்த அன்பு. இது வினைத்தொகை. அன்றித் தாளிணையில் வைத்த அன்பு எனினும் ஆம். பேரா உலகம் - புக்கவர் மீண்டும் வாரா உலகம். அது வீட்டுலகம். மிலைத்தல் - கனைத்தல். 'ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தது' என்பது பழமொழி. ஆரா அடியேன் - பொருந்தாத அடியேன். பொருந்தாமையாவது மல மாயை கன்மங்களோடு கூடிப் பரிபாகம் பெறாமலிருத்தல். மயல்கொண்டு - பொய்யை மெய்யென்று மயங்கி.

இதுவும் முன்பாட்டுப்போல, ஆனந்த பரவசம் என்னும் பதிகக் கருத்துக்கு இயைபுடைத்தாதல் காண்க.

92 *அழுதே னின்பா லன்பா*
*மனமா யழல்சேர்ந்த*
*மெழுகே யன்னார் மின்னார்*
*பொன்னார் கழல்கண்டு*
*தொழுதே யுன்னைத் தொடர்ந்தா*
*ரோடுந் தொடராதே*
*பழுதே பிறந்தே னென்கொண்*
*டுன்னைப் பணிகேனே.* 88

இ - ள்: உன்னிடத்து அன்பு மயமான மனம் உடையவர்களாய், ஒளிபொருந்திய பொன்போன்ற திருவடிகளைத் தரிசித்து, தீயைச்சேர்ந்த மெழுகை ஒத்தவர்களாய் வணங்கியே உன்னைத் தொடர்ந்துவந்த அடியார்களோடு அடியேனும் தொடர்ந்து வாராமல் தனித்து அழுகின்றேன்; பயனின்றிப் பிறந்துவிட்டேன்; எதனைத் துணைக்கொண்டு உன்னை வணங்குவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், ஆராமை மீதூர எதனைப்பற்றி உன்னை அடைவேன் என்று இரங்குகின்றார்.

உண்மை அன்பர்கள் மனமெலாம் குழைந்து அன்புமயம் ஆயினமையின் உன்னை அடைந்தார்கள் என்பார் 'அன்பாம் மனமாய்' என்றார். 'அழல்சேர் மெழுகு' என முக்காலத்திற்கும் ஒத்த வினைத்தொகையைக் கொடுத்தது எப்பொழுதும் ஆன்மா இறைவனைச் சார்ந்து கனிந்த உள்ளத்துடன் இருக்கவேண்டுமென்ற குறிப்பை உணர்த்த. அனல்சேர் மெழுகினை ஒப்ப உள்ளம் குழைதலும் தொழுதலும் இறுகப்பற்றித் தொடர்தலும் உன்னை அடைதற்கு உரிய உபாயங்கள். அதனை அடியேன் நேரே அடையத் தகுதி இல்லையாயினும் அடைந்தவர்களைத் தொடர்ந்தாவது வந்திருக்கலாமே; அதனையும் இழந்தேன் என்பார் 'தொடராதே பழுதே பிறந்தேன்' என்றார். பிறந்தேன் என்பதை வினையாலணையும் பெயராக்கிப் பணிகேன் என்பதற்கு எழுவாயாகக் கூட்டிப் பொருள் உரைப்பாருமுளர். எங்கும் நிறைந்த பரம்பொருளே சிவம் ஆதலால் அடியார்கள் அதனைக் காணுதலும் தொடர்தலும் எங்ஙனம் இயலும் எனின், பரிபாகம் பெறுதநிலையில் மல கன்மங்களோடு கூடி அதுவதுவாயிருந்த உயிர் அதனினீங்கித் திருவருளின் தன்மை தெரிந்து கூடுதலாகிய உயிரின் தொழிலையே இங்ஙனம் கூறினார்.

93 பணிவார் பிணிதீர்ந் தருளிப்
பழைய வடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி
அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன்
வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லைதாராய்
பொய்தீர் மெய்யானே. 89

இ - ள்: அநாதியே பொய்மையினின்று நீங்கிய மெய்ப் பொருளாக உள்ளவனே! நின்னைப் பணிவார்களாகிய பழைய அடியார்களுக்குப் பிறவியாகிற பிணியைத் தீர்த்தருளி அழகு நிறைந்த திருவடிகளைக் கொடுத்தாய்; அதுவும் என்போன்றவர்களுக்கு அரிதாம் என்றாலும் கல் மூங்கிலை ஒத்த எனது வினையைப் பொடியாக்கி விரைந்து வந்து தண்மை நிறைந்த திருவடியைத் தருவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில் வினைகளை ஒழித்துத் திருவடிப்பேற்றினை விரைவில் அளித்தருள வேண்டுகின்றார்.

பணிவார் அடியாரெனக் கூட்டிப் பணிபவர்களாகிய அடியார்களென இருபெயரொட்டாகக் கொள்க. பிணி - உயிரினறிவைப் பிணித்துநிற்றலின் பிறவி பிணியாயிற்று. விதையை முளையாதவாறு தீய்த்தல்போல உயிர்கள் மீட்டும் பிறவாத வண்ணம் பிறவிக்குக் காரணமாகிய வினைகளைப் போக்குவார் என்பதாம்.

அணியார் பாதம் - அழகு நிறைந்த திருவடி. கொடுத்தி: முன்னிலை வினைமுற்று. அது அரிதன்றாலும் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. திணியார் மூங்கிலைத் தனக்குவமை கூறிக் கொண்டது கல்மூங்கில் உள் ஒட்டையும் புறக்கசிவும் இல்லாததுபோல தமக்கும் அகக்கனிவும் புறக்கசிவுமில்லை என்பதை உணர்த்தற்காகவும், மூங்கில் தன் இனத்தையே பெருக்குவது போலத் தாமும் வினைகளையேபெருக்கி வினைவயத்தால்பிறந்த மக்களையே துணையாகக்கொண்டு வாழ்ந்துவருவேனென்பதை உணர்த்தவும் கூறியவாறும்.

தணி - தண்மை. தணியார் பாதம் - குளிர்ந்த திருவடி. "நனைந்தனைய திருவடி" என்று சிவானுபவச் செல்வர் அப்பர் சுவாமிகள் அறிவித்தலும் காண்க. 'பொய் தீர் மெய்யான்'

என்றது இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவனுடைய சிறப்பியல்பைத் தெரிவிக்க.

94 யானே பொய்யென் னெஞ்சும்
பொய்யென் அன்பும்பொய்
யானால் வினையே னழுதா
லுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின்
றெளிவே தித்திக்கு
மானே யருளா யடியே
னுனைவந் துறுமாறே. 90

திருச்சிற்றம்பலம்

இ - ள்: தேனும் அமுதமும் கருப்பஞ்சாறும் போலத் தித்திக்கும் பெருமானே! அடியேன் உன்னை வந்து அடையும் உபாயத்தினை அறிவித்தருளுவாயாக; யானும் என் நெஞ்சும் என் அன்பும் பொய்மையையுடையேம் ஆனாலும், வினையேனாகிய யான் அழுதால் உன்னை அடையலாமா? என்றவாறு.

இத்திருப்பாட்டில், தாய்முகம் நோக்கி அழும் சேய்போல அழுதால் உன்னை அடையலாமா? என்று வினவுகின்றார்.

தேன் மலரில் தோன்றி, வண்டொன்றினாலேயே எடுக்கப் படுவதாய், இனியதாய், உண்டார்க்கு அறிவையும் ஆற்றலையும் அளிப்பதாயுள்ளது. அதுபோல இறைவனும் அன்பர் அகத் தாமரையில் ஊறும் தேனாய், அன்பர்களாகிய வண்டுகளால் நுகரப்படுவதாய், பேரின்பம் தந்து நிற்றலின் இறைவனைத் 'தேன்' என்றார்.

அரிதில் முயன்று மத்தும் கடைகயிறும் அணைதடியும் கடை வாரும் கூட்டி வாங்கிக் கடைய வெளிப்படும் அமுதம்; அது போல அன்பர் மனமாகிற கடலில் உறுதி என்னும் மத்தை யிட்டு, அன்பு நாணால், அடியார்கள் ஆலயம் அரனுரு என்ற அணைதடிகளைச் சார்த்தி, முறுக வாங்கிக் கடைய முன்னிற்கும் இறைவனுக்கு அமுது ஒப்பாயிற்று.

"கண் தகர நூறி இடித்துக்கொள்ள" வெளிப்படுவது கருப்பஞ்சாறு. அதுபோல இறைவன் பரிபாகமில்லாத மக்கள் சரியையாதி தவங்களில் முறையே நின்று முயல, அதனால் நல் லறிவு சற்றே நக வெளிப்படுவனாதலின் 'கரும்பின் தெளிவே' என்றார்.

தித்திக்கும் மானே - இனிக்கும் பெரியோனே. இறைவனைத் தேன் முதலியவாகச் சொல்லி இன்புற்றவர், உவமையைக் காட்டிலும் பொருளின் தன்மை இழிந்ததாயிற்றே அங்ஙனம் இயற்கையே இனிய பொருளுக்கு இனிப்பாய்த்தோன்றி உண்டபின் புளிக்கும் பொருள்களை உவமித்தல் பொருந்தாதே என்ற எண்ணம் விளைய, தேன் முதலிய தித்திக்கும் பொருள்கள் அனைத்திலும் சிறந்த பெரிய தித்திக்கும் பொருளே என்றார். உயிர்களாகிய நாங்கள் உணர்த்த உணருவோமேயன்றித் தாமாக உணர்ந்து உய்யும் ஆற்றலும் அறிவும் சுதந்திரமும் இலேம் ஆதலின் உன்னை வந்தடைதற்குரிய உபாயங்களையும் நீரே தெரிவித்தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டவாரும் 'உறுமாறு அருளாய்' என்றது.

## ய. ஆனந்தாதீதம்

ஆனந்த அதீதம் - களிப்பின் கடந்தநிலை. ஆனந்தத்தின் வரைவிலக்கணம் ஆனந்தத்தழுந்தல் என்னும் பதிகத்தொடக்கத்து விரித்துரைக்கப்பெற்றது. ஆனந்த பரவசமாய் உயிர் அப்பேரின்ப நுகர்ச்சியில் விளையும் இன்பமே வடிவாய்த் தன் தன்மை கெட்டுக் கடந்தநிலை எய்தும். அந்நிலையில் உயிரே தான் என்னும் உணர்வும் மடங்கியிருக்கும். அதாவது 'நீயும் நானுமாய் ஏக போகமாய்' இருக்கும். அதனை மெய்யடியார்கள் பெற்றதுபோல அடியேனும் பெறத் திருவருள் சுரக்கவேண்டுமென வேண்டுதலின் இப்பெயர்த்தாயிற்று. கடந்தநிலையைக் கூறுகிறது இப்பகுதி என்பாருமுளர்.

மெய்யன்பர் பேறும், தனக்கு இறைவன் செய்த உபகாரமும், திருவருள் இருந்தும் அதீதத்தைப்போய்த் தான் அண்ண முடியாமையும், அதனை உபகரிக்கவேண்டும் என்னும் பிரார்த்தனையுமாக இப்பதிகப் பொருள் அமைதலின் ஆனந்தாதீதத்தை வேண்டுதலேயன்றி, ஓங்கு சிவானந்த வெள்ளம் திளைத்து அதுவாய் மேவுதலாகிய அதீதமே கூறுவதாகாது. ஆகவே பதிக இயைபும், சோபானக் கிரமத்தில் அமைந்திருப்பதைத் தெளிக.

### எண்சீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

95 மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொ டாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்மை யன்பருன் மெய்மை மேவினார்

ஈறி லாதநீ யெளியை யாகிவந்
 தொளிசெய் மானுட மாக நோக்கியும்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
 கடைய னாயினேன் பட்ட கீழ்மையே. 91

இ - ள் : வேறுபாடில்லாத பெருங்கருணை வெள்ளமே! நின்னுடைய தாமரை மலர்போன்ற திருவடித் துணைகளை, வேறன்றிக் கலத்தற்குரிய பரிபாகத்தைப்பெற்ற உன் மெய் யன்பர்கள் முந்திவந்து உனது திருவடிப்பேறாகிய உண்மை இன்பத்தை அடைந்தார்கள்; அழிவற்ற நித்தியப் பொரு ளாகிய நீ எளியையாகக் குருமேனி தாங்கிவந்து, அடியேனை ஞானம்பெற்ற மானுடமாகத் திருக்கண்ணோக்கம் பாலித்தும், ஒருவகை வடுவும் பெறாத நெஞ்சினையுடைய நாயேன் கடைப் பட்டவனாயினேன்; இதுவே நான்பட்ட கீழ்மை என்றவாறு.

இத்திருப்பாட்டில் மெய்யடியார் வீடடையக் கண்டும், நீ கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து மானுடமேனி தாங்கி, குருவாக எழுந்தருளி ஞானோபதேசம் செய்தும் கடையனாயி னேன் என்று இரங்கிக் கூறுகிறார்.

இறைவனுடைய உரு திருவருளே என்பதை "நந்தம் கரு மேனி கழிக்கவந்த கருணையின் உருவு காணே" என்பதனால் அறியலாம். ஆதலின், இறைவனைக் 'கருணை வெள்ளமே' என்றருளினார். பித்த வாத சிலேட்டும பேதத்தால் வேறுபட்ட மக்களுடைய உடலுக்கு ஒத்த மருந்தினைப்போல, பலதரப்பட்ட பரிபாகமுற்ற உயிர்களுக்கும் மாறுபாடாகாத கருணைவெள்ளம் என்பார் 'மாறிலாத மாக்கருணை வெள்ளமே' என்றார்.

பெருக்கு, அளவொடுவரின் பயிருக்குப் பயன்பட்டு ஆக்கம் பெருக்கும்; கரை கடந்தும் வேகம் மிக்கும் வரின் பயிரை அழிக்கும். முன்னது மாறிலாத வெள்ளம். பின்னது மாறு பட்ட வெள்ளம். இறைவன் எந்தவகையிலும் எவ்வகைப்பட்ட உயிரும் உணர்ந்து ஈடேறவேண்டுமென்ற திருவருட்குறிப்பு நிரம்பிய வெள்ளம் போல்பவர் ஆதலின் இங்ஙனம் கூறினார் என்றலும் ஒன்று.

மெய்யன்பர் இயல்பு, தமக்குத்துணை வேறொன்றும் இல்லை திருவடியே உறுதுணையாவது என்னும் உறுதியுடைமையும், அதுவே நாம் பிறவியெடுத்ததன் பயனாக அடையத்தகும் பரிசு என்னும் நினைப்பும் ஆம். அவ்விரண்டும் உடையார் மெய்ம் மையை அடைந்தார். மெய்ம்மை - வீடு. என்றும் அழியாதது

ஆகலின் வீடு மெய்ம்மை எனப்பட்டது. மெய்ம்மையையுடைய தனை மெய்ம்மை என்றார். மெய்ம்மையன்பர் வந்து மெய்ம்மை மேவினார். குரங்குக் குட்டி குரங்கைச் சென்று பற்றுமாறு போல அவர்கள் அடைந்தார்கள். என் விஷயத்திலோ பூனை போலத் தேவரீர் குருவாக வந்து திருக்கண்ணோக்கருளினீர் என்னும் நயம் தெளிக.

எளியையாகி வந்து என்றமையால் உருமேனி தாங்கி வந்தமை உணரப்படும். படவே உருக்கொண்ட ஒருபொருட்கு அழிவும் உளதாமே; இவருக்கும் அப்படியோ என்று எழும் ஐயத்தை அகற்றுதற்கு, என்றுமே ஈறு இலாத நீ என்றார். தனக்கு ஈறில்லாத ஒருவனே எல்லாவற்றிற்கும் ஈறாக இருக்க முடியும் என்ற முடிபுங்காண்க.

பெரிய நிலையிலிருப்பார் தன் பெருமை நோக்காது, பிறர் நிலை கருதி அந்நிலைக்கு இறங்கி வருதலே எளியவாதலாம். அங்ஙனமே எல்லையிலாக் கருணை வெள்ளமான இறைவன் என்னிலை நோக்கி இகழாது, என்னை ஆட்கொள்ளவேண்டி, என்போலவே கை கால் தலை முதலிய உறுப்புக்களுடையனாக உபதேச குருமூர்த்தியாக வந்தான் என்பதை 'எளியையாகி வந்து' என்பதாற்றெளியவைத்தார்கள்.

வந்தவன், மானுடமாக மல மாயை கன்மங்களோடு கூடி யிருந்த என்னைச் சிவஞானம்பெற்ற மானுடமாக நோக்கிச் சட்சுதீட்சை செய்தருளினான் என்பார் 'ஒளி செய் மானுடமாக நோக்கி' என்றார்.

எளியையாகி, ஒளிசெய் மானுடமாக வந்து நோக்கியும் எனச் சொற்களைச் சிந்தைத்துக் கூட்டி, எளிமையுடையையாகி ஒளிபொருந்திய மக்கள் வடிவில் ஞானசாரியனாக எழுந்தருளி வந்து எனப் பொருள் காண்பர். இவ்வுரையில் ஆகி என்னும் செய்தென்னெச்சம், ஆக என்னும் செயவென்னெச்சத்தோடு இயைந்து, அது வந்துநோக்கியும் என்பதனோடு தொடர்பின்றி முடிதலும், பொருட்சிறப்பின்மையும் தெளிக. இரும்பு போல இருந்த என்னை, பொன்போல் ஒளிசெய் மானுடமாக நோக்கினான் என்பதே சிறத்தல் காண்க.

நடந்த வழியில் தேய்வும், படித்த பகுதியில் தோய்வும், ஆண்ட பாத்திரத்தில் கீறும் இருக்கும் என்பது பழமொழி. இறைவன் குருவாக எழுந்தருளிவந்து ஞானம்பெற்ற ஆன்மா வாகச் செய்யத் திருக்கண்ணோக்கருளியும் என் மனத்தில் ஒரு

கீறும் விழுந்திலதென்பார் 'கீறிலாத நெஞ்சுடைய நாயினேன்' என்றார். கீறு - அடையாளம்.

அவன் செய்த அருளுபதேசத்தைத் துணையாகக்கொண்டு ஈடேற மாட்டேனாயினும், உபகாரத்தை மறவேன் என்பார் 'நாயினேன்' என்றார். உடனிருந்த மெய்யடியார்கள் வீடு பெறுகின்றவகையில் முந்திக்கொள்ள நான் மட்டும் கடைசியாயினேன் என்பார் 'கடையன் ஆயினேன்' என்றார். அன்றிக் கீழ்ப்பட்டவனாயினேனெனத் தகுதிபற்றி உரை கூறுதலுமாம்.

மெய்யன்பர் பெற்ற அதீதநிலையைக் கூறித் தான் பிற்பட்டமைக்கு இரங்குதலின் இது ஆனந்தாதீதமாயிற்று. அன்பர்க்கு அதீனமான ஆனந்தம் எனக்கு அதீதமாயிற்று என்றிரங்கினார் எனலுமாம். அதீனம் - உடைமை. அதீதம் - கடத்தல்.

96 மையி லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழுக்
கையி லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்மை யன்பருன் மெய்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே. 92

இ - ள்: மை விளக்கம் பெறுதற்குக் காரணமான கண்களையுடைய உமாதேவியாரை ஒருபாகத்தில் உடையவனே! தேவரீர் எளிவந்த கருணையால் தாமே எழுந்தருளி வந்து என்னை அடிமையாக ஏற்றுக்கொண்டபின், குழந்தையின் கையில் விளங்குகின்ற பொற்கிண்ணத்தைப்போல எளியையாக எண்ணினேன் அல்லாது, உன்னை அருமையானவன் என்று எண்ணிலேன், இது என் தவறு; ஆயினும், உண்மை வடிவாக விளங்குகின்ற திருவெண்ணீற்றை அணிந்த திருமேனியையுடையவனே! உண்மையடியார்கள் உனது நித்தியமான வீட்டின்பத்தைப் பெற்றனர்; அப்போது அவ்விடத்து, என்னைமட்டும் இப்பொய்யான உலகில் போக விட்டுவிட்டு நீ போகலாமா? உன் பெருங்கருணைக்கு இது பொருத்தமா சொல்வாய் என்றவாறு.

இத்திருப்பாட்டில் என்னிடமும் தவறு உண்டு ; ஆயினும், மெய்யன்பர்க்குமட்டும் வீடருளி என்னைப் பொய்யில் புகவிட்டுச்

செல்லலாமா? இது உனக்குப் பொருத்தமா? சொல் என்று அடிமை என்ற உரிமையால் வாதிடுகின்றார்கள் அடிகள்.

மை இலங்கு கண் என்பதற்கு மையானது விளங்குதல் காரணமான கண் என்றும், மையினால் விளங்குகின்ற கண் என்றும் பொருள் கொள்ளலாம். உலக மாதர்க்காயின் கண், மை முதலிய ஒப்பனைகள் செய்யப்பெறுதலான் அழகுபெறுவது. பராசத்தியின் கண்களால் மை முதலிய அழகு சாதனங்கள் அழகைப் பெறுவன ஆதலால் மை விளங்குதற்குக் காரணமான கண்கள் என்று உரை கூறப்பெற்றது.

குற்றமே செய்யினும் குணமெனக்கொண்டு, பால்நினைந் தூட்டும் தாயின் கண்களாதலின் கருணையே காட்டும் இயல்பு பற்றி 'நற்கண்' என்றார். நீ திருவருட்சத்தியை ஒருபக்கங் கொண்டிருந்தும், அருளே செய்து என்னையும் பேரின்பத்து அழைத்துப் போகவேண்டியிருக்க, அதனை விடுத்து, ஒரு கண் சுண்ணாம்பும், ஒரு கண் வெண்ணெயுமாகப் பாவிப்பார்போல மெய்யன்பர்க்கு வீடருளி என்னைப் பொய்யில் புகவிட்டாய்; இச்செயல் அருளன்னையோடு இருக்கிற அனுக்கிரக மூர்த்தியாகிற உனக்கு அடாது என்பார் 'கண்ணி பங்கனே' என்று விளித்துக் கூறுகின்றார்.

மழ - குழந்தை. குழந்தை தனது கையில் உள்ள பொற் கிண்ணத்தின் பெருமையை அறியாது எறியும்; தட்டும்; நசுக் கும்; எல்லாம் செய்யும். அதுபோல நீ குருநாதனாக எனக்குக் கிடைத்தும் உன் பெருமையை உணராதவனாயினேன் என்பார் 'மழக்கை இலங்கு பொற்கிண்ணம் என்றலால் உனை அரியை என்று கருதுகின்றிலேன்' என்றார்.

தாய் தன் குழந்தைமீதுள்ள அளவுகடந்த பாசத்தால் பொற்கிண்ணத்தையும் கொடுத்துவிட்டு, அது கிண்ணத்தின் பெருமை அறியாமல் எங்கே எறியுமோ நசுக்குமோ என்று அஞ்சி அஞ்சி உடன்போய்க்கொண்டே இருப்பதுபோல நீயும் என்னுடன் வந்து ஞானோபதேசத்தை வாசனாமலவயப்பட்டு இழந்து போவேனோ என்று கவனித்துக் காப்பாற்றவேண்டிய நீ பொய்யில் புகவிடலாமா என்றார் எனலுமாம்.

மெய்யிலங்கு வெண்ணீறு - உண்மைத் தன்மை விளங்கு கின்ற திருநீறு. "சத்தியமாவது நீறு" என்ற திருநீற்றுப் பதிகமும் சிந்திக்க. உடம்பின்கண் விளங்கும் வெண்ணீற்றால் வெண்ணிறம் உடையவனே எனப் பொருள் காண்பாரும்

உளர். அவர்கள் மெய் என்பதற்கு உடல் எனப் பொருள் கொண்டமையால், பின்வரும் மேனியாய் என்பதற்கு நிறமுடையாய் எனப் பொருள்கண்டு இடர்ப்படுவர். என்றும் அழியாத உண்மைத் தன்மையையுடையது என்ற காரணத்தால் திருநீற்றிற்கு அட்சரம், சத்தியம் என்ற பெயர்களை வடமொழியில் வழங்குவதும் ஈண்டு இணைத்து எண்ணற்குரியது.

அங்கு - திருப்பெருந்துறையில் (பிரிகின்றகாலத்து). எனை - கூடவந்தவர்கள் அனைவரும் உன்னுடன் சோதியில் மறையத் தனியனாகிய என்னை. பொய்மில் புகுதவிட்டு - பொய்யான இவ்வுலக வாழ்வில் புகவிட்டு. நீ - கருணையாளனாகிய நீ என்னும் குறிப்பு. போவதோ என்ற வினா நின் பெருமைக்குத் தகாது என்னும் விடையை எதிர்நோக்கி நின்றது. எனக்குக் கேட்க உரிமை உண்டு அடிமையாதலின்; நீ சொல்ல வாயிருந்தால் சொல் என்றதாம்.

97 பொருத்த மின்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
 போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
 மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செ யன்பரும்
 நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
 வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. 93

இ - ள்: தாமரை மலர்போன்ற பாதங்களையுடையவனே! சிவந்த திருமேனியையுடையவனே! வருக என்று நீ விரும்பித் திருவருணோக்கம் செய்யவும் யான் உன் திருவடி சார்தற்குச் சிறிதும் பொருத்தம் இன்மையையுடையேன்; பொய்த்தன்மையுடையேன்; நீ பிரியவும் அதனால் வருத்தமிலேன்; வஞ்சனை உடையேன்; இவ்வளவு தீயகுணம் நிறைந்த யான் இறந்தொழிந்திலேன்; உன்னால் அருள்செய்யப்பெற்ற உண்மையடியார்களும் நீயும் வீட்டுலகமாகிய அங்கு எழுந்தருளி, இவ்வுலகத்து என்னை இருக்கப் பணித்தாய்; இது முறையோ? என் தலைவனே! என் வினைகட்கு ஒருமுடிவும் இல்லையோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியேனிடம் பல குறைபாடுகள் உள ஆயினும், என்னுடனிருந்தார்களைமட்டும் இன்பவுலகத்திருத்தி அடியேனை இங்கிருக்கச் செய்தாய்; ஆனால், என் வினைக்கு ஒரு முடிவு இல்லையா? என்று இரங்குகின்றார்.

அடிகள் முதன்முதல் ஞானசிரியனைக் குருந்தடியிற் கண்ட போது அவன் திருவடிமலரும், பின்னர்த் திருமேனிச் செம்மையும் இவரை வசப்படுத்தின ஆதலின் அவ்விரண்டையும் சுட்டி 'மலர்க்கமல பாதனே, அரத்த மேனியாய்' என்று விளித்தார்.

நின் அருட்பார்வை 'நீயும் வருக' என்றழைப்பதுபோல இருந்தது; அதனை உணர்ந்துய்யமாட்டாது என் வினைகளும் அறியாமையும் தடுத்தன என்பார், நீ போத எனப் புரிந்து நோக்கவும், பொருத்தமில்லாதவனாகப் பொய்யனாக ஆயினேன் என்றார். பொருத்தம் - வீடு அடைந்த அடியார்களைப்போல உண்மைத் தன்மையும் உறுதியுமுடையனாதல். அஃதில்லாத பொய்யனாதலின் என்னை விட்டு நீ பிரிந்தாய் என்பதாம்.

கிடைத்தற்கரிய பொருள் கிடைத்து அது கை நழுவுமானால் வருந்துதல் உலகியலாக இருக்கவும், கிடைத்தற்கரிய நீ குருநாதனாக வலிய வந்து என்னைக்கிற்கிலக்காக வீற்றிருந்தும், உன்னை இறுகப்பற்றியும் விடாதே தொடர்ந்தும் பற்றவேண்டியிருக்க அங்ஙனம் செய்யாது உன்னைப் பிரியவிட்டுச் சிறிதும் வருத்தமின்றி இருந்தேன். அதற்குக் காரணம் என் மனம் வஞ்சனை படைத்திருப்பதனாலே என்பது. வஞ்சம் - பிரபஞ்சம் என்பதன் சிதைவாகக்கொண்டு பிரபஞ்சவாதனை அருமையால் பிரபஞ்சத்தோடு ஒட்டி உன்னைப் பிரிந்து வருத்தமின்மையேன் ஆயினேன் என்றாரெனினுமாம். மாண்டிலேன் - பிறந்ததன் பயன் வலிய எளிமையிற் கிட்டியும், அடைந்துய்ய அறியாதேன் இறந்திருக்கவேண்டும்; அங்ஙனம் இறந்திலேன் என்று இரங்கிக் கூறியவாறு.

அருள் செய் அன்பர் - உன்னால் அருள் செய்யப்பெற்ற அன்பர் எனச் செயப்பாட்டு வினைப் பெயரெச்சமாகப் பொருள் காண்க.

அங்கு என்பது பேரின்பத்தின் எல்லையற்ற பெருமையும், இங்கு என்பது இவ்வுலக வாழ்வின் சிறுமையும் தோன்ற நெஞ்சறிகட்டாக நின்றது. இருத்தினாய் என்றது தன் விருப்பமின்மையை விளக்கிநின்றது. வம்பனேன் - வம்பனாகிய யான். வினைக்கிறுதியில்லையே என்று வினவியது வினைச் சேடங்கள் உன்னருட்கண்ணால் ஒழிக்கப்படின் யானும் அவர்களோடு போயிருப்பேனே; அவை தீர்தற்குரிய காலம் எதுவோ என விரைந்து தீர்த்தருளுமாறு வேண்டிக்கொண்டதாம்.

98 இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏல மேலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்
எல்லை யில்லைநின் கருணை யெம்பிரான்
ஏது கொண்டுநா னேது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னு முன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே. 94

இ - ள் : குற்றமற்ற பரவெளியில் வீற்றிருப்பவனே! மயிர்ச்சாந்தை ஏற்ற நல்ல கூந்தலையுடைய உமாதேவியைப் பாகத்துடையவனே! எம்பெருமானே! உன் திருவடிக்கண் அன்பு என்பால் இல்லை; வலிய கல்லைக் கனிந்து மென்மையான பழமாக்கும் வித்தையைக்கொண்டு, பரிபாகமில்லாத என்னை நின் திருவடிக்கு அன்பனாக்கினாய்; உனது கருணைக்கு ஓர் அளவில்லை; நான் எதனைத் துணையாகக்கொண்டு எத்தகைய தீயவற்றைச் செய்யினும், இன்னும் எனக்கு உன் திருவடியைக் காட்டிப் பிறவிக் கடலினின்றும் மீட்கவும் வல்லமையுடையையோ என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடியேற்குத் தகுதி இல்லை ஆயினும் அளவற்ற கருணையால் நின் திருவடிக்கண் அன்பனாக்கினாய்; யான் எதுசெய்யினும் மீண்டும் உன் திருவடியைக்காட்டி, அடியேனைப் பிறவித்துன்பத்தினின்று மீட்டருளவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகின்றார்.

மறுவில் வானனே! எம்பிரான்! ஏலம் ஏலும் நற்குழலி பங்கனே! என விளிகளை முறைப்படுத்துக. வானம் எல்லாப் பூதங்களும் தோன்றி நிலைபெற விரிந்து இடங்கொடுத்து நிற்பது; தனக்கோர் வடிவில்லாதது; ஒரு குற்றமும் இல்லாதது. இது மாயாகாரியமாகிய ஐம்பூதங்களில் ஒன்றாகிய வானம். இதனிடம் தோற்றமும் கேடும் ஏனைய பூதங்களின் சார்வால் தன் தன்மை திரிதலும் ஆகிய மறுக்கள் உள்ளன. இறைவன் இவ்வானம் ஆகான் ஆகையால் 'மறுவில் வானனே' என்றார்.

மறு இல் வானம் - பரவானம். இது நுண்ணிது. எல்லா அண்டங்களிலும் உள்ள ஐம்பூதங்களும் பொருட் பிரபஞ்சமாகத் தோன்ற இடந்தந்து நிற்கும் ஒலியுலகிற்கு மூலமாய்த் தோற்றமும் கேடும் இன்றி என்றும் இருப்பது. இதுவே சிவத் திருமேனி. ஆதலால் இறைவனை 'மறுவில் வானனே' என்றார்.

அவ்வண்ணம் எல்லையற்ற பரவெளி வடிவினனாயினும் உயிர்கள்மீது வைத்த கருணையினால் அவர்களுக்குத் தலைவனாகவும் திருவுள்ளம் கொள்ளுதலின் 'எம்பிரான்' என்றார். பிரான் - தலைவன். வள்ளன்மையுடையவன் எனினுமாம்.

அங்ஙனம் தலைவனான்போது உயிர்களுக்கு அருள் வழங்குதற்பொருட்டு உமையொருபாகமாக எளிவந்த தன்மையால் இறங்குகின்றார் என்பார் 'குழலி பங்கனே' என்றார்.

ஏலம் - மயிர்ச்சாந்து. போகப்பொருளாகிய மாலை சந்தனம் முதலியவற்றுள் ஒன்று; அதனையுடைய குழலி என்றது நம்மனோர் தரத்தில் போகியாயிருப்பான் என்பது உணர்த்த.. இவ்வண்ணம் எங்குமாய்த் தானன்றி வேறுபொருளின்றி இருத்தலாகிய முழுமுதற்றன்மையும் எம்போன்ற பல அடிமைகளையுடைமையாகிய உடையனுந்தன்மையும் ஆகிய சிறப்பியல்பும் உமையொருபங்கனாகக் கருணையுருக்கொண்ட பொதுவியல்பும் உணர்த்தப்பெறுகின்றன.

கல்லை மென்கனியாக்கும் விச்சை: காய் கனியாதல் காலஞ் செல்லத் தானே இயைவதொன்றும்; கனியாதற்கேற்ற உட்கூறுக்கள் காயினிடம் நிரம்பிக் காலத்தை எதிர்நோக்கி முதிர்கின்றன. கல்லிடம் அத்தன்மையில்லாமை மட்டுமன்றிப் பொருளே வேறு. அங்ஙனமிருந்தும் தன் தன்மை கெடுத்தலோடுமட்டுமன்றி, இனிப்பும் மென்மையும் நிறமும் மணமுமாகிய தன்மைகளையும் ஒருசேர உண்டாக்கிக் கனியாக்குகின்ற வித்தை. அதனைக் கொண்டு அன்பனாக்கினாய் என்றார். என்னிடம் உண்மையன்பு விளைதற்கேற்ற பண்படி சிறிதேனும் இல்லையாகவும் கல்லைப் பிசைந்து கனியாக்கும் வித்தையைக்கொண்டு அன்பனாக்கினாய் என்றார். "தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டு என்னை ஆண்டுகொண்ட, செவ்வரை மேனியன்" என்ற கோவை திருவாசகப் பகுதியையும், அதற்குப் பேராசிரியர் வலியனவற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னையாண்டான் என்று உரை எழுதியமையும் ஈண்டு இணைத்து எண்ணற்கு உரியன.

பாலைவனத்தில் புல் முளைக்கவும் நெல் விளையவும் செய்வது போலப் பொருந்தாத தகுதியற்ற என்னிடமும் அன்பு விளையச் செய்தமையால், நின் கருணைக்கு ஓர் எல்லை இல்லையாதலை அறிந்தேன் என்கின்றார். எல்லையாவது இத்தகைய பரிபாகமும் பயனும் தாம் எய்துகின்ற எல்லை. நின் கருணையிருந்தால் கொதுவும் கருடனாம்; அணுவும் மலையாம்; ஆகவே நீ

அன்பனுக்கிய பிறகு யான் ஏது செய்யினும் அது உன்செயலே; அதனை உன்னை அடைதற்குரிய செயலாகவே நீ திருவுள்ளங் கொண்டருளவேண்டும்.

ஏது கொண்டு - எதனைக்கொண்டு. இன்னதென்று வரையறுத்துரையாது இங்ஙனம் கூறினர். யான் பிறந்ததன் பயனை அடைதற்குச் சிறிதும் ஒவ்வாத மாயேயமான பொருள்களைத் துணையாகக்கொண்டு; ஏது செய்யினும் - புலனுற்பெறும் இன்பங்களுக்கு ஆசைப்பட்டு ஆன்மலாபமாகாத செயல்களையே செய்யினும்; அச்செயல்களாவன உண்டலும், உறங்கலும், இணைதலும், பிணைதலும் முதலாயின. ஆன்மலாபச் செயல்களாவன சரியை கிரியை யோகம் முதலியன. செய்யினுமென்பது ஆட்கொண்டபிறகு செய்ய இயலாமையை விளக்கிற்று.

சுவைகண்ட பூனை உறியைத் தாவுவதுபோல என்னுள்ளம் முன்னொருக்கால் நின் திருவடியைத் தரிசித்தமையால் மீட்டும் அதனைக் காண விழைகிறது. எனக்கோ அதனைக் கணமும் பிரியாது கண்டுகொண்டேயிருக்கவேண்டுமென்ற பேராதரம் பிணித்திருக்கிறது. அத்தகைய பேறு அடியேனுக்கு வினைச் செறிவாலும், மலத்தொடக்காலும் இல்லை என்பதையறிகிறேன். ஆசை வெட்கமறியாது ஆதலின் திருவடியை மீட்டும் ஒருமுறை காட்டவேண்டும். யானோ பிறவியாகிற கடலில் வீழ்ந்து தவிக்கிறேன். என்னை அக்கடலினின்று மீட்டருளவல்லையே என்கிறார். வல்லையே என்று வினவியது இறைவருக்கு அத்தகைய வன்மை இல்லை என்னும் குறிப்பன்று; நின்க்கு அத்தகைய கருணை பிறக்குமா என்ற அளவிற்றும். வல்லையே என்பதில் ஏகாரத்தைத் தேற்றமாகக்கொண்டு நீ வன்மை உடையையே யாவாய் எனலும் ஒன்று சிறந்தன கொள்க.

99 வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி னீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே. 95

இ - ள்: தேவர்களால் அறியமுடியாத நீ, வேத முடிபாகிய உபநிடதங்களாலும் தொடர்ந்து அறியமுடியாத நீ,

மற்றைய புவனங்களிலுள்ளவர்களாலும் அறியப்படாத நீ, அடியேனை இனிமையாக ஆண்டுகொண்டவாறும், எனது ஊனுடலை நாடகம் ஆடச்செய்தவாறும், நான் உம்மையே நினைத்து உருகிப் பாடுவித்தவாறும், சிவஞானம் கைவரப் பெற்றபின் ஞானக்கூத்து ஆடுவித்தவாறும், என்னுடைய உலக இச்சை நைந்து ஒழியவேயாம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் தன்னை ஆட்கொண்டது தன்னையே தியானித்து, மனம் உருகிச் சிவஞானம் பெற்றுப் பரிபாகம் பெறுவதற்காகவே என்கின்றார்.

அடியேன் வினைகளினீங்கிப் பரிபாகம் எய்துவதற்காகவே இங்ஙனம் ஆடவும் பாடவும் உருகவும் அறியவும் செய்தீர் என்று கருணையை வியந்து அதீதம் எய்தியவாறும். உம்மைகள் உயர்வு சிறப்பு.

வானநாடர் யான் இந்திரன், யான் சந்திரன், யான் பிரமன், யான் திருமால் என்று தம்முலக வாழ்வையும் பதவிகளையும், அதற்குரிய ஆற்றல்களையும் எண்ணி மூலமல மூனைப்பும், அதிகாரமல மிகுதியும் உடையவர்களாதலின் அவர்களால் இறைவன் அறிய ஒண்ணாதவனாயினன்.

வேதம், வேதபுருடனாகிய இறைவனைத் தொடர்ந்து செல்வது. அதன்முடிவாகிய உபநிடதம் ஞானபாகங்கள். அங்ஙனமிருந்தும் அவை இறைவனைத் தொடர்ந்து செல்லமாட்டாமையின், 'முன் மறையில் ஈறும் தொடரொணாத நீ' என்றார். முன் என்றது வேதபுருடனாகிய சிவனிடத்திருந்து தோன்றிய அக்காலத்திலேயே.

ஏனை நாடர் - அஷ்டவித்தியேசுர புவனவாசிகள். அவர்கள் பரிபாகமுற்ற ஆன்மாக்கள். அவர்களாலும் இறைவன் அறியப்படாதவன் என்றார். தெரிதல் - சிவனுடைய சிறப்பியல்பை அனுபவித்தறிதல். இவர்கள் இறைவனை நேரிற்கண்டு உய்யும் பேறுபெற்றும் முத்தான்மாக்களைப்போலச் சிவசாயுச்சியமாகிய திருவடிப்பேறு எய்தாமையின் இங்ஙனம் கூறினார்.

என்னை என்றது அத்தகைய அளவற்ற பெருமையையுடைய நீ ஒன்றற்கும் பற்றாத என்னை என இழிபு தோன்ற நின்றது.

இன்னிதாய் - இனிமையுடையதாய். மாணவன் உள்ளம் அறிந்து உபதேசிக்கும் ஆசிரியன்போல ஆன்மாக்களின் நிலை

அறிந்து, குழந்தைக்குச் சர்க்கரையைக் காட்டியும் தீற்றியும் மருந்தூட்டுந்தாய்போல ஆட்கொண்டான் என்பார் 'என்னை இன்னிதாய் ஆண்டுகொண்டவாறும்' என்றருளினர்.

ஊன் - உடல்; ஆகுபெயர். கதைகளுக்கு ஏற்பப் பாவையைச் சூத்திரதாரி ஆட்டுவித்தல் போல, உடலை உயிருடன் கூட்டி வினைக்கயிற்றால் பிணித்துப் புண்ணிய பாவங்களாகிய கதைகளுக்கேற்ப ஆட்டுவித்தல். கேவலாவத்தையில் மலத்துள் அழுந்திக் குருடாக இருக்கும் உயிர்களைப் பரிபாகமுறுத்துதற் பொருட்டாக வினைக்கீடாகத் தனு கரணங்களை உதவிச் சிவபுண்ணியச் செயல்களில் தொடர்புறுத்துகின்ற நிலையும் விளக்கப்பெற்றது.

ஒருவன் செய்த உபகாரத்தை ஒருவன் எண்ணும்போது அவன்பால் எல்லைகடந்த ஆதரம்பெருக மனம் நெக்கு நெக்கு உருகும். அப்போது அன்புசெய்யப்பட்ட பொருளைக் குடிக்கலாமா விழுங்கலாமா என்று எண்ணுவான். அதுபோல அடிகளார்க்கு ஆண்டவன் பரமாயதோர் ஆனந்தமாயினன். அப்போது பருகலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதுவும் அவன் செய்த விச்சையே என்பார் 'நான் உருகி உன்னைப் பருக வைத்தவாறும்' என்றார்.

ஞான நாடகம் ஆடுவித்தவாறு: புருவ மத்தியாகிய கனக மன்றுள் சுழிமுனைத் துடிப்பாகிய சிவானந்தக் கூத்து திருவைந்தெழுத்தின் நாடகமாக நடப்பதைக் கண்டு ஞானியாகிய தன்னையும் அவன் ஆடவைத்தான் என்பார் 'ஞான நாடகம் ஆடுவித்தவா' என்றார்.

வையகத்து இச்சை - இவ்வுலகிலுள்ள மாலை மாதர் மனை முதலிய போகவிருப்பு. நையவே - தன்மை கெட்டு மீட்டும் அங்குரியாது வாசனையும் கெட்டு ஒழியவே. இச்சை நையவேயாம் எனக் கூட்டுக.

100 விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய அன்பருக்
குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானும் அங்ஙனே யுடைய நாதனே. 96

இ - ள் : விதை இல்லாமலே விளையச்செய்வாய்; விண்ணுலகம் மண்ணுலகம் எல்லாவற்றையும் நிலைபெறச்செய்து உரியகாலத்தில் அழிக்கவும் செய்வாய்; வஞ்சகத்தால் மிகப் பெரிய புலையனாகிய என்னையும் உனது திருக்கோயிலின் வாயில் முன்னே வைத்துப் பித்தனாக்கினாய்; அன்பால் பெரிய மெய்யடியார்களுக்கு உரியனாகவும் செய்தாய்; உலகத்தவர்கள் தம்மால் வளர்க்கப்பட்டது நஞ்சுள்ள மாமரமானாலும் தாமே வெட்டிக் கொல்லமாட்டார்கள்; என்னை அடிமையாகவுடைய தலைவனே! யானும் அத்தகையேனாவன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், எல்லாம்வல்ல நீ என்னைக் கைவிடல் ஆகாது என்று வேண்டுகிறார்.

விச்சதின்றியே விளைவு செய்குவாய்: உலகத்தில் விதைக்காமல் விளைவு இல்லையாதலால் எத்தகைய வல்லுநராலும் காரணமின்றிக் காரியம் நிகழ்த்துதல் ஒண்ணாது. அங்ஙனமிருக்க இறைவன் வித்தின்றி விளைவு செய்கின்றான் என்றால் எவ்வாறு இயைவதாகும் எனின், முதல் உற்பவ காலத்துக் கேவலநிலையில் ஆணவமலத்தில் கட்டுண்டுகிடக்கும் உயிருக்கு நுண்கருமமாக விருப்பு வெறுப்பு நிகழ, அதனை வித்தாகக் கொண்டு தனு கரணங்களைக் கொடுத்துச் சிருட்டிப்பன் என்க.

இச்சூக்கும கன்ம உண்மையைச் சிவஞானபோத மாபாடியத்துள் சிவஞான சுவாமிகளும் 'பிரபஞ்சம் அநாதியாதலால் முதற்படைப்பு நம்மனோரான் அறிய வாராமையான் முதற்படைப்பின்கண் 'விச்சதின்றியே விளைவு செய்குவாய் . .' என ஓதிய திருவாக்கான் கண்டுகொள்க' என உரைத்தார். இதனால் காரியப்படும் கன்மமில்லாமலே இறைவன் சிருட்டிப்பன் என்பது பெறப்படுதலின் இங்ஙனம் கூறினார். திருநாவுக்கரசுசுவாமிகளும் 'விச்சின்றி நாறு செய்வானும்' என்கின்றார்கள். உலகத்திற்கு வித்து மாயையாதலின் அது காணப்படாததாய், காரியத்தின் உடனிற்பதாய், வேறின்றி விளங்கும். ஆதலால் அது அறியப்படாததாயிற்று. அதனால் 'விச்சது இன்றியே விளைவு செய்குவாய்' என்றார்.

விண்ணும் என்றது மேலுலகங்கள் அனைத்தையுமென்பது. மண்ணகம் என்றது கன்மபூமியாகிய இவ்வுலகம் முழுவதையும் என்பது. யாவையும் என்றது மண்ணின் கீழும் வேறு அண்டங்களிலுமுள்ள எல்லாஉலகத்தையும். வைச்சு வாங்குதலாவது காத்து அழித்தலாம். காத்தல் தத்தம் கால எல்லைவரை இடையூறு எய்தாமல் வினைப்போகங்களை நுகரச்செய்தல். அழித்த

லாவது கால எல்லையில் தத்தம் காரணத்துள் ஒடுக்கி அதனை மாயையுள் ஒடுக்கி, மாயை சத்தியுள் ஒடுங்க, சத்தி தன்னுள் ஒடுங்க இருத்தல். விளைவு செய்குவாய் என்பது படைத்தலை யும், வைச்சு வாங்குவாய் என்பது காத்தல் அழித்தல்களையும் முறையே உணர்த்தின.

புலைமை பிறப்பால்மட்டும் வருவதன்று; குணத்தினாலும் வரும் என்பார் 'வஞ்சகப் பெரும் புலையனேனை' என்றார். உன் கோயில் வாயிலில் பிச்சனாக்கினாய்' என்றது தில்லைவாழந்தணார் கள் பித்தனென்று ஏச இருந்த அனுபவநிலையைஅறிவிப்பதாம்.

பெரிய அன்பர்: அன்பு குணம். குணத்தில் பெருமை சிறுமை இல்லையாயினும் செலுத்தப்படும் இடம் நோக்கியும் பயன் நோக்கியும் பெரிய அன்பாகிறது. அதனை உடையார் பெரிய அன்பர். அவர்களுக்கு அடியேனை உரியனாக்கினாய். அவர்கள் ஆண்டான் நான் அடிமை என்று உணரவைத்தாய். பெரிய அன்பரும் யானுமாகிய அனைவரையும் ஆளாகவுடைய நாதனே என்னையும் வருத்துதல் ஆகாது என்பார் 'உடைய நாதனே நானும் அங்ஙனே' என்றார்.

தாம் வளர்த்த நச்சு மரத்தைக் கொல்லார் என்பது பழ மொழி. மாமரம் இனிய கனி தருவதை ஒழித்து நச்சுத்தன்மை எய்தினாலும் உலகவர் வளர்த்த பாசத்தால் வெட்டாததுபோல வினைகளை ஊட்டிப் பரிபாகமுறுத்த உலகு உடல் போகங்களை உதவி வளர்க்கப்பெற்ற நான் அதற்கு மாறாகக் 'கண்டதே கண்டும் உண்டதே உண்டும்' ஆசை வலைப்பட்டு அலையினும் காத்தருளவேண்டும் என்கிறார். இதற்கு முதிய மரமாயினும் கொல்லார் என்று உரைகண்டு எட்டிபோல நச்சுமரமாயினும் வளர்த்த பாசத்தால் கொல்லார் எனப் பொருளுரைப்பர் சிலர். அதில் நற்பயன் கருதிவைத்த ஒன்று நற்பயன் தராததுமட்டு மின்றி, தீயபயன் தருவதாயினும் வளர்த்த பாசத்தால் கொல் லார் என்பது உயிர்நிலையில் ஏற்றதாதல் காண்க. இப்பொரு ளுக்கு, தாம் வளர்த்ததோர் மாமரம் நச்சு ஆயினும் எனக் கூட்டுக. கொல்லார் என்பது கொலார் எனத் தொகுத்தல் விகாரம்பெற்றது.

101 உடைய நாதனே போற்றி நின்னலாற்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினும்

*கடைய னாயினேன் போற்றி யென்பெருங்*
*கருணை யாளனே போற்றி யென்னைநின்*
*அடிய னாக்கினாய் போற்றி ஆதியும்*
*அந்த மாயினாய் போற்றி யப்பனே.* 97

இ - ள் : என்னைத் தொன்றுதொட்டு ஆளாகவுடைய தலைவனே! வணக்கம்; எனக்கு இனி உன்னையல்லால் வேறு பற்றுக்கோடாவது ஒன்றினை உடையனாவேனோ நீ சொல்லு வாயாக வணக்கம்; தேவர்களைக்காட்டிலும் மேலானவற்றிற் கெல்லாம் மேலானவனே! அடியேன் எல்லாரினும் கடைப் பட்டவனாயினேன் வணக்கம்; என்னைப் பெருங்கருணையால் ஆள்பவனே! வணக்கம்; என்னை நின் அடியானாகச் செய்த வனே! வணக்கம்; என் தந்தையே! முதலும் இறுதியுமாக விளங்குபவனே! வணக்கம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவனை அன்றித் தனக்கு வேறோர் பற்றுக்கோடின்மையை விளக்குகின்றார்.

இவ்வண்ணம் இறைவன் தனக்குத் தலைவனாகவும், தேவர் களுக்குப் பெருந்தலைவனாகவும், தனக்குக் கருணையாளனாகவும் இருக்கின்ற திருவருளை வியந்து பலமுறை போற்றிக் கூறு கின்றார்.

பற்றலாவதொருபொருள் உயிருக்கு வேறொன்று இல்லை என்னும் உறுதி பிறந்தாலல்லது உயிர் அருளுக்குரியதாகாது என்ற உண்மையைவிளக்க 'மற்று பற்று உடையனோ' என்றார். தனக்கு வேறு பற்றில்லாமையைத் தானே சொல்லிக்கொண்டு பயன் இல்லையென்பார் இறைவனை நோக்கிப் 'பணி' என்று வேண்டுகின்றார்.

தேவர்கள் தமக்குத்தாமே பரம் என்றிருப்பார்கள். அவர்க ளனைவருக்கும் பரமானவர்கள், இந்திரன் மால் பிரமன் முதலா னவர்கள். அவர்களுக்கும் மேலானவர் என்பார் 'உம்பரார் தம் பராபரா' என்றார். இவ்வண்ணம் இறைவன் உயர்வை எண்ணிக்கொண்டேபோகும்போது அறிதோறும் அறியாமை கண்டாற்போல, தன் இழிவு தனக்குப் புலனாக 'யாரினும் கடைய னாயினேன்' என்றருளினார். அந்தமும் ஆயினாய் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. எல்லாம் இறுதியை எய்த, தான் அனைத்திற்கும் இறுதியாய் இருப்பவன் இறைவன் ஆதலின் 'அந்தம் ஆயினாய்' என்றார்.

உன்னுடைய திருவருளைப் பெறுவதற்கு முழுதும் தனக்கு உரிமையுண்மையை உணர்த்த 'அப்பனே' என்று விளிக்கின்றார். தந்தையின் சொத்து மகனுக்கு உரிமையாதல் உலகியல் ஆதலின்.

102 அப்ப னேயெனக் கமுத னேயா
னந்த னேயக நெகவள் ளூறுதேன்
ஒப்ப னேயுனக் குரிய அன்பரில்
உரிய னாயுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணை
யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
நைய வையகத் தெங்கள் மன்னனே. 98

இ - ள் : என் தந்தையே! எனக்கு அமுதம்போன்றவனே! இன்பமயமானவனே! என் மனம் உருகும்படி வாய் ஊறுவதற்குக் காரணமான தேனை ஒப்பானவனே! உனக்கு உரிமையுடைய உண்மை அன்பரைப்போல யானும் உனக்கு உரியவனாய் உன்னைப் பருகும்படி நின்ற ஒப்பற்ற உணவானவனே! ஒளி விடுகின்ற திருமுடியை உடையவனே! அனைவருக்கும் உறுதுணையாக இருந்து ஆள்பவனே! அடியார்களுக்குச் சேம நிதியாய் விளங்குபவனே! எங்கள் அரசே! இக்கன்ம பூமியாகிய உலகத்தில் என்னை வருந்தவைப்பது முறையாகுமோ? சொல்லாய் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அனைவரையும் உய்யக்கொண்டருளும் நீ அடியேனை மட்டும் இவ்வுலக வாழ்வில் நையவைப்பது முறையாகுமா? என்று விண்ணப்பம் செய்கின்றார்.

இந்தத் திருப்பாட்டில் பல்வேறு முறைகளில் இறைவனைச் சொல்லி இன்புறுகின்றார். இதில் பிள்ளை தகாதன செய்யின் ஊக்கியும் உயர்த்தும் தந்தைபோல இறைவன் தன்னை அரச போகமாகிய உலகியல் வாழ்விலிருந்து நீக்கி உபதேசித்து அருள்வாழ்வில் நிற்கப் பணித்தலின் 'அப்பனே' என்றார்.

அமுதம் இறவாமையை அளிப்பது; உணவாவது. அது போல இறைவன் சாவாமையை அளிக்கவல்ல இனிய உணவாக இருத்தலின் 'அமுதனே' என்று அனுபவிக்கின்றார். முன் நுகர்ச்சியுடைய மனிதன் சர்க்கரை என்றவுடனே இனிப்பை நுகர்ந்தான் போல இன்புறுவன்; அதுபோல அமுதனே, அமுதனே என்று வாயாரச்சொல்லி அதன் பயனை நுகர்கின்றார்.

ஆனந்தம் - மகிழ்ச்சி. அது மாலை மாதர் அமுதம் போன்ற பொருள்களை நுகரும்போது விளையும் மனநிறைவு. இவை நீங்கத் துன்பமாம். இடைவிடாது நெருங்கிப் பழகுவது துன்ப மாம். ஆதலின், இவற்றால் விளையும் ஆனந்தமின்றி, கூடினால் பிரியவும் மனமின்றி, அது அதுவாக அனுபவிக்கச் செய்யும் ஆனந்தம் சிவானந்தம்; அதன் வடிவானவன் சிவனாதலின், 'ஆனந்தனே' என்று அழைத்து இன்புறுகிறார்.

தேன் கண்டாருக்கு வாய் ஊறும். மனம் விருப்பத்தால் குழையும். அதுபோல இறைவனைக் கண்டஞான்றும், பெயரைக் கேட்டஞான்றும் அகம்நெக நாவில் எச்சில் ஊறுதலின் 'தேன் ஒப்பனே' என்றார்.

அன்பரில் என்பது அன்பரைப்போல என ஐந்தனுருபு ஒப்புப்பொருளில் வந்தது. அன்பருக்கு உரிய இறைவன் என்னாது உனக்குரிய இறைவன் என்றது உரிமை இறைவன் மேற்றாய், உரிய பொருளாதல் அன்பர் மேற்றாய் இறைவனது முழுமுதற்றன்மையும் அன்பர்கள் அடிமைத்தன்மையும் விளங் குதல் காண்க. வாரம்பட்டுழித் தீயவும் நல்லவாமாதலின் உனக்குரிய அன்பரைப்போல யானும் ஆயினேன் என்றவழி யான் செய்யும் சிறு துரிசுகள் உனக்குத் தோன்றலாகாது என்ற கருத்தும் வெளிப்பட நிற்றல் காண்க.

இறைவனை முன்னர் அமுதம் தேன் என்றதற்கேற்ப 'பருக நின்றதோர் துப்பனே' என்றார். துப்பன் - உணவானவன். இவ்வண்ணம் தந்தையாய், அமுதமாய், களிப்பாய், தேனாய், உணவாய், உணற்பொருளாய் நின்ற இறைவன் குணியாகத் திருமுடி முதலியவற்றோடு விளங்குதலை அறிவிப்பார் 'சுடர் முடியனே' என்று அருளுகிறார்.

உயிர்களைத் தீநெறிச் செல்லாது ஆளும்போது அரசன் போல அடக்கி ஆளுதலும், தோழன்போலக் குற்றநற்றங்களுக் கெல்லாம் உடனாக இருந்து ஆளுதலும், மனைவிபோல ஒன்றாய் நின்று ஆளுதலும் எனப் பலவகை. அவற்றுள் தனக்கு இறை வன் துணையாயிருந்து ஆளுவதை அறிவிப்பார் 'துணை ஆளனே' என்றார்.

அடிமைகளுக்குச் செயலற்ற காலத்தில் பயன்படுவது சேம நிதி. அதுபோலச் சிவனடித் தொழும்பாளர்கள் மல மாயா கன்மங்கள் நீங்கப்பெற்று, தனித்து இளைத்தகாலத்து இறை வன் வைத்த மாநிதியாய் இருந்து பாதுகாக்கின்றானாதலின்

'தொழும்பாளர் எய்ப்பினில் வைப்பனே' என்றார். அரசனால் ஆகாத செயல் உலகில் ஒன்றுமில்லை ஆதலானும், அரசன் ஒருவருக்கு உரிமை உடையனாயின் அவனுக்கு எவ்வகைத் துன்பமுமில்லை ஆதலானும் 'எங்கள் மன்னனே! என்னை நையவைப்பதோ சொலாய்' என்று வினவுகின்றார்.

வையகத்து என்றார் புண்ணிய பாவங்களுக்கு ஈடாக உயிர் உடலிடத்து உழலும் இப்பூமி துன்பமயமானது; துன்ப விளைபுலம் என்று அறிவிக்க.

103 மன்ன வெம்பிரான் வருக வென்னெனை
மாலு நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன வெம்பிரான் வருக வென்னெனை
முழுதும் யாவையு மிறுதி யுற்றநாட்
பின்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
பெய்க ழற்கணன் பாயெ னாவினாற்
பன்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே. 99

இ - ள் : மன்னனே! எம் தலைவனே! என்னை வருக என்று ஆணை வழங்குவாயாக; திருமாலும் பிரமனும் முதலான எல்லாத் தேவர்களிலும் முதன்மையானவனே! எம்பிரானே! என்னை வருக என்பாயாக; இயங்குவ நிற்பவான எவையும் முற்றும் இறுதியை அடைந்த காலத்து, அவை எல்லாவற்றிற்கும் பின்னாக இருப்பவனே! எம்பிரானே! என்னை வருக என்பாயாக; எம்பெருமானே! வீரக்கழலை அணிந்த திருவடிக்கண் அன்பாகி என் நாவினால் பன்னித் தோத்தரிக்கவும் என்னுடைய பாவங்களை எல்லாம் அழிப்பவனே! நின்புகழ்களைப் பாடவும் என்னை வருக என்பாயாக.

இத்திருப்பாட்டில், அடிகள் தன்னை வருக என ஆணை வழங்க வேண்டுகின்றார்.

தன்னைத் திருப்பெருந்துறையில் விட்டுப் பிரிந்த துன்பம் மிகமிக உள்ளத்தை வருத்த, என்னை வருக என் என்று பலமுறை வேண்டிக்கொள்கின்றார். தன்னை ஆண்டவன் வரவேற்க வேண்டுமென்ற குறிப்பு அன்று; 'தில்லைக்கு வா; அதுவரை உலகத்து இரு' என்று ஆணையிட்டமுதல்வன், வா என ஆணை தந்தாலல்லது அடிமைக்கு உடன் செல்லலாகாமையின் வருக என்று சொல்லு என்னும் ஆணைவிருப்பே குறிப்பு.

மன்ன எம்பிரான் என்றது எல்லாருக்கும் தலைவனுயிருக்கும் தன்மையையும், முன்ன எம்பிரான் என்றது எல்லாருக்கும் முன்னே தோன்றி மூத்த தொன்மையையும், பின்ன எம் பிரான் என்றது எல்லாம் தத்தம் காரணத்துள் ஒடுங்கக் கார ணங்கள் பரம காரணமாகிய தன்னிடம் ஒடுங்கவும் தான் அழி வின்றி நிற்கும் அநாதிநித்தியத் தன்மையையும் அறிவிப்பன. அடியேன் வருக என்று அழைக்க வேண்டும் என்று விரும் புவன்; நோக்கம் உன் புகழ்களைப் பாடவும் நின் திருவடிக்கண் நீங்காஅன்போடு நாவினுல் பன்னி ஆதரித்து ஏத்தவுமேயாம். திருமால் நான்முகன் முதலாயினும் குறித்தகால எல்லைக்குள் தோன்றி மறித்தும் இறந்து பிறப்பவர். அவர்கள் அங்ஙனம் தோன்றி அழிய முதற்பொருளாய் இருந்து இயக்குபவன் இறைவனே என்பார் 'மாலும் நான்முகத்து ஒருவன் யாரினும் முன்ன' என்ருர். யாவையும் - முழுதும். இறுதியுற்ற நாள் - பேரூழிக்காலம்; அதற்குப் பின்னேனுவது எல்லாம் அழியத் தான் அழியாமை ஒன்ருனே அமையும் ஆதலின் இறைவனைப் 'பின்ன' என்ருர். பன்னுதல் - ஒன்றையே பலகால் சொல்லல். நீ பாவநாசனுக இருப்பதால் நின் சீர்கள்பாட என் பாவங்கள் பறையுமாதலால் எனை வருக என் என வேண்டிக்கொள்கிருர்.

மக்கள் புண்ணியம் பாவம் என்ற இரண்டனையும் ஒக்கச் செய்திருக்க இறைவன் பாவத்தைமட்டும் அழிப்பன் என்பது எங்ஙனம் பொருந்துமெனின், புண்ணியமும் பாவமும் பாலும் நீரும் போல்வன ஆகலின் காய்ச்ச நீர் முன் உலர்ந்து பால் இறுகி நெய்யாய் மாறுதல்போல, சிவச்சோதியைச் சார்ந்து பாவம் உலர, புண்ணியம் பதிபுண்ணியமாய் மாறி வீட்டின் பத்தை அளிக்கும். 'பண்ணிய தழல்காய் பாலளாம் நீர்போல் பாவமுன் பறைந்து பால் அனைய, புண்ணியம் பின்சென்று அறிவினுக்கரிய' என்னும் திருவிசைப்பா இக்கருத்தை நன்கு விளக்கும்.

*104* பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டுநான் போற்றி யம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே. 100

திருச்சிற்றம்பலம்

இ - ள் : மெய்யடியார்களுக்கு மெய்ப்பொருளாய் உள்ளவனே! உன்னையே நான் பாடவேண்டும் வணக்கம்; அங்ஙனம் பாடி மனம் நைந்து நெக்குநெக்கு உருகி ஆனந்த பரவசத்தால் ஆடவேண்டும்; சிற்றம்பலத்தில் திருநடனம் புரிகின்ற உன் திருவடித் தாமரைகளை நாயை ஒத்த நான் கூடவேண்டும்; அதற்கு இடையூருக உள்ள இப்புழுக்கூடாகிய உடலை நீக்கியருள்வாயாக; என்னிடம் பொய்மை எல்லாம் அழிதல்வேண்டும்; எனக்கு நித்தியமான வீட்டின்பத்தைத் தந்தருள்வாயாக வணக்கம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், முடிந்தமுடிபாக வினைக்கு ஈடாகிய இவ்வுடலை ஒழித்து எஞ்சிய வினைகளைப் போக்கி வீடு தந்தருள வேண்டுகிருர்.

இப்பாட்டில் போற்றி போற்றி என ஆறுமுறை அறிவிக்கின்ருர். கருத்தறிந்து முடிப்பாருகிய கடவுளிடம் தான் வினையைப் போக்கு; வீட்டை அருளு என்று வேண்டிக்கொள்ளுதலும் அடிமைக்கு இழுக்காதலின் அவ்வாறு கூறினர்.

இறைவனைப் பாடுதல் மனம் நைந்து உருக வாயிலாதலாலும், நைந்தவிடத்துப் பரவசமாய் ஆடுதலும் திருவடிப் போதுகளையே சாரவேண்டும் என்ற உறுதி பிறத்தலும் அதற்குத் தடையான இவ்வுடலை நீக்க விரும்புதலும் வினைகளாகிற பொய்யைப் போக்க விரும்புதலும் முறைமுறையே நிகழ்வனவாதலாலும் இவ்வண்ணம் முறையாகப் பகர்ந்தார்.

நாயினேன் என்று தன்னைக் கூறிக்கொண்டது உணவிட்ட தலைவன் தன்னை நையப் புடைத்தாலும் அவன் காலடியேயன்றிப் பிறிதொன்றையும் சாராத நாய்போல என்னை இங்கு இருத்திப் பிரிந்தாலும் இன்னல் பல வந்தாலும் உன்னுடைய திருவடியே கூடுவேன் என்னும் இயைபுபற்றி.

இதனுல் பேருகிய வீடுபெறச் சாதனங்களைத் தந்து, அதன் விளைவாகிய வீட்டின்பத்தையும் நீயே அருளவேண்டுமென்று வேண்டிக்கொள்கிருர். முக்கரணங்களாலும் இறைவனுக்குப் பணிசெய்யின் வீடுபெறலாமென்பது நூன்முடிபாதல் தெளிக.

இவ்வண்ணம் இப்பாடல்கள் நூறும் ஒரே கருத்துடையனவாக அந்தாதியாய் அமைந்திருத்தல் உணர்ந்து இன்புறத்தக்கது.

# 6. நீத்தல்விண்ணப்பம்

[பிரபஞ்ச வைராக்கியம்]

அடிகளார் திருச்சதகத்தைத் திருப்பெருந்துறையில் அருளிச்செய்து தனித்திருந்தபோது, பெருமான் தமக்கு அன்று அருளிச்செய்த ஆணையை அகத்துக்கொண்டார். உத்தரகோசமங்கையை அடைந்து திருக்கோயிலுட் புகுந்தார்; அங்கே தன்னை அடிமைகொண்ட ஆண்டவனைக் காணாது மயங்கினார்; அடியேன் பெற்ற பேறு இவ்வளவு தானோ என்று பெருமூச்சு விட்டார்; என்னை விட்டுவிடுகின்றாயோ என இறைவனை நோக்கி நைந்தார்; நீத்தல் விண்ணப்பமாகிய இந்தப் பதிகத்தைப் பாடியருளுகின்றார். அப்போது இறைவன் கருப்பஞ்சாற்றையும் தேவாமிர்தத்தையும் பாலையும் ஒத்து என்றும் இனிப்பு அறாத தம் திருமேனியைக் காட்டியருளினார். கண்டு மகிழ்ந்த அடிகள் அத்தலத்திலேயே சிலநாள் எழுந்தருளியிருந்தனர்.

நீத்தல் விண்ணப்பம் என்பது இறைவன் திருப்பெருந்துறையில் தன்னை இவ்வையகத்தில் இருக்க எனப் பணித்து நீத்தமையால் வருந்திய அடிகளார் 'அடியேனைமட்டும் இவ்வண்ணம் நீத்தல் தகுமா?' என்று விண்ணப்பித்தருளுகின்றார். அதனால் இது இப்பெயர்த்தாயிற்று என்பர் சிலர். மற்றும் சிலர் உலகப்பற்றை நீத்தற்கு இறைவனை வேண்டிக்கொண்டது என்பர். என்னை நீக்கி விடாதே என்று விண்ணப்பித்தலாம் என்பர் சிலர். இவற்றுள் இறைவன் தன்னை நீத்தமைக்காக விண்ணப்பித்தமை இதன் கருத்தாயின் பிரபஞ்ச வைராக்கியமென்னும் பழையகுறிப்புடன் பொருந்துவதாகாது. திருவாதவூரடிகள்புராணம்செய்த கடவுள்மாமுனிகள் 'விடுதிகொல் என்னை என்று நீத்தல் விண்ணப்பமென்னும்தொடைகெழு பாடல் ஓதிக் காட்டினார்' என்று இப்பகுதி தோன்றுவதற்குக் காரணத்தையும் காட்டினார். இவை அனைத்தையும் ஒற்றித்து ஊன்றி நோக்கும்போது பிரபஞ்ச வைராக்கியமென்னும் குறிப்பே மிகச் சிறந்ததாகிறது. பிரபஞ்ச வைராக்கியமாவது மாயா காரியமான இப்பிரபஞ்சம் நிலையற்றதென எண்ணி அதனிடம் தனக்கு அறியாமையால் அகலாதிருக்கின்ற பற்றினை நீக்கியருளவேண்டுமென்று வைராக்கியம் தோன்றக்கூறுதலால் 'பற்றறத் துறத்தலை

விண்ணப்பித்தல்' என்னும் பொருளே சிறந்ததாம். அன்றியும் திருச்சதகத்தால் பொதுவகையான பத்தி வைராக்கிய விசித்தி ரத்தை விண்ணப்பித்த வாதவூர் அண்ணல், சிறப்பு வகையானும் உலகப்பற்றை ஒழிக்க விண்ணப்பிக்கின்றார். இதனால் முன் சதகத் திற்கும் இதற்கும் பொருளியல்பு உண்மையும் ஊன்றி உணர்தற் குரியது.

இறைவன் அடிகளாரை இன்னும் சிலநாள் இங்கிருக்க எனப் பணித்தது, அவருக்குப் பிரபஞ்ச வைராக்கியம் உண்டாகாமை காரணமன்று; சிவானுபவத்திறத்தை அவர் வாயிலாக என்றென் றும் உலகமறிந்து உய்யட்டும் என்ற திருவருட்குறிப்பேயாம்.

இது ஐம்பது கட்டளைக் கலித்துறையான் ஆகியது. அந்தாதித் தொடையால் அமைந்தது.

## கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

105 கடையவ னேனைக் கருணையி
னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண்
டாய்விறல் வேங்கையின்தோல்
உடையவ னேமன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பிரா
னென்னைத் தாங்கிக்கொள்ளே. 1

இ - ள்: கடைப்பட்டவனாகிய என்னைக் கருணையினால் கலந்து ஆட்கொண்ட இடபவாகனத்தை உடையவனே! என்னைக் கைவிடுகிறாய்; நீயே சிந்தித்துக்காண். வலிமை மிக்க புலியின் தோலாகிய உடையை உடையவனே! நிலைபெற்ற உத்தரகோசமங்கை என்னும் தலத்திற்கு அரசனே! சடையை உடையவனே! சோர்ந்துபோனேன்; எம் தலைவா! என்னைத் தாங்கிப் பிடித்துக்கொள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், முற்பகுதியில் பொய்யெலாம் விட வேண்டும்; வீடு தந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்ட மணிவாசகப்பெருமான் இறைவனது பிரிவைப் பொறாமல் சோர்ந்து தாங்கிக்கொள்ளவும் வேண்டுகிறார்.

உயர்ந்தவற்றிற்கெல்லாம் உயர்ந்த பொருளாகிய சிவம் ஆட்கொள்ளுதற்குரிய பரிபாகச்சிறப்பு தன்னிடம் சிறிதுமில்லை யென்பார் 'கடையவனேனை' என்றார். அங்ஙனம் கடையவனு யிருந்தும் என்னுடன் ஒன்றி உயிர்க்குயிராய்க் கலந்து ஆண்டு கொண்டது கைம்மாறு வேண்டாக் கருணையால் என்பார் 'கருணையினால் கலந்து ஆண்டுகொண்ட' என்றார்.

விடை - அறவடிவாகிய இடபம். அதனை ஊர்வதால் என்னை ஆண்டான் என்பார் 'ஆண்டுகொண்ட விடையவனே' என உடம்பொடு புணர்த்தார்.

விட்டிடுதிகண்டாய் என்பது விட்டுவிடுகிறாய் பார் என்பது போல் ஒருவகை வழக்கு.

ஆணவமல காரியமான அவா ஆற்றல் முதலியவற்றை உடைய வேங்கையின் தோலை உரித்து உடையாகப் போர்த் தினர் என்பது. உடையவன் - உடையை உடையவன். மன்னும் உத்தரகோசமங்கை - என்றும் அழியாது நிலைபெற்ற இடமாத லானும் அங்கிருந்தே இறைவன் அனைவருக்கும் அருள் உப தேசம் செய்தாராதலானும் இங்ஙனம் கூறினார்.

வழிநடையிற் சோர்ந்தவன் தன்னைத் தாங்கிக்கொள்ள வேண்டுதல்போலப் பிரபஞ்சத்தில் எனக்கு வைராக்கியம் பிற வாமையால், பற்றிற்றேபற்றிநின்று தளர்ந்தேன்; நீ தாங்கிக் கொள்வாய் என வேண்டுதலின் பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

106 கொள்ளேர் பிளவக லாத்தடங்
கொங்கையர் கொவ்வைச் செவ்வாயி
வின்ளே னெனினும் விடுதிகண்
டாய்நின் விழுத்தொ ழும்பின்
உள்ளேன் புறமல்லேன் உத்தர
கோசமங் கைக்கரசே
கள்ளே னொழியவுங் கண்டுகொண்
டாண்டதெக் காரணமே. 2

இ - ள்: திருவுத்தரகோசமங்கை யென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள அரசே! கொள்ளென்னும் தானியத்தின் பிளவு அளவான இடைவெளியுமில்லாத அடிபரந்த கொங்கை களையுடைய மாதர்களது கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயிதழினின்றும் யான் கணமும் நீங்கேனாயினும், தேவரீ ருடைய பெருமைபொருந்திய அடியார்கூட்டத்திலுள்ளேன்;

புறம்பானவன் அல்லேன்; கள்ளம் செய்யேன்; அங்ஙன மாகவும் என்னை விடுகின்றாய்; அன்று, நான் நீங்கவும் தேடிப் பிடித்தாண்டது எக்காரணத்தாலோ சொல்லும் என்றவாறு

இத்திருப்பாட்டில், என்னிடம் நீ விடக்கூடாமைக்கு உரிய காரணங்களும் சிலவுள்ளன; அங்ஙனமிருந்தும் விடுதி; அன்று நான் ஒழிந்துபோகவும், நீர் என்னைத் தேடிப்பிடித்து ஆட் கொண்டது எக்காரணத்தாலோ? என்று வினவுகிறார்.

கொள் ஏர் பிளவு - கொள்ளிற் பொருந்திய பகுப்பு. 'ஈர்க் கிடை போகா இளமுலை' என்றாற்போல, கொட்பிளவும் இடை நுழையவியலாத கொங்கை என்றதாம். முன்னர்க்கவரும் உறுப் புப் பெண்மைக்கு முலையேயாம் என்பதை "முலையிரண்டும் இல்லாதாள் பெண் காமுற்றற்று" என்று வள்ளுவர் கூறிய தாலும் காண்க. எந்நேரமும் அவர்கள் வாயிதழைப் பிரியேன் எனினும் என்றது புணர்வேன் எனினும் என்பதை மறைத்துக் கூறியது. விழுத்தொழும்பு-விழுப்பத்திற்கு ஏதுவாகிய அடிமை. மனிதர்க்கு மனிதர் அடிமையாதல் இழிவுக்கேதுவானது. இது விழுமைக்கு ஏதுவானது எனச் சிறப்புத் தெரிவித்தவாறு.

அடியவர் கூட்டத்தில் ஒருவன் இத்தகைய சிறு பிழையைச் செய்வனாயின் அவனைத் திருத்திப் புறம்போகவிடாது வைத்துப் பாதுகாக்க வேண்டியது ஆண்ட உன்கடமை; அன்றியும் ஆட் கொண்ட பிறகு புறம்பேசித் தவறேசெய்து திரிவதால் புறம்பா னவனும் அல்லன்; அங்ஙனம் இருந்தும் விடுகின்றாயே! இது தகுமா? என்பது கருத்து.

கள்ளேன் - திருடேன்; வஞ்சமுடையேன் அல்லேன் எனலு மாம். ஒழியவும் - அறியாமை வயப்பட்டிருந்த பெத்தகாலத்து உன்னை அடையாமல் நான் விலகிப்போகவும். கண்டு ஆண்டு கொண்டது எக்காரணம் எனச் சொற்சிதைவுசெய்து கூட்டுக.

நான் வலியவந்து ஆட்பட்டேன் அல்லேன்; ஒதுங்கிப் போனேன்; நீ தேடி ஆண்டுகொண்டாய் ஆதலால் நீ விடுதல் ஆகாது என உரிமைக்கு வழக்குரைத்ததும் ஆம்.

கொங்கையர் கொவ்வைச் செவ்வாய் விள்ளேன் என்றது, உலகவர் நிலையைத் தம்மேல் ஏறிட்டுக் கூறியது. மலைமேல் ஏறியவன் கீழே ஆழத்தை நோக்குவதுபோலச் சிவஞானத்து உச்சியையடைந்த அடிகளார் உலகவர் நிலையை உற்றுநோக்கி அதனைத் தன்மேலிட்டுக்கொண்டு வருந்துகின்றார்.

107 காருறு கண்ணிய ரைம்புல
ஞற்றங் கரைமரமாய்
வேருறு வேனே விடுதிகண்
டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன் னும் உத்தர
கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க
வென்னை வளர்ப்பவனே. 3

இ - ள்: விளங்குகின்ற திருவாரூர் என்னும் தலத்தின் கண் உறைபவனே! நிலைபேறுடைய உத்தரகோசமங்கைக்கு அரசே! கச்சணிந்த அணிகளோடு கூடிய முலையினையுடைய உமாதேவியினை இடப்பாகத்தில் கொண்டவனே! அடியேனை இடர்க்கடலிற் புகாது வளர்ப்பவனே! கருமைநிறம் பொருந்திய கண்களையுடைய பெண்களது ஐம்புலன்களாகிய ஆற்றங் கரையில் இருக்கின்ற மரமாக வேரூன்றியிருக்கின்ற என்னை விடுகின்றாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் முற்கூறிய காரணத்தையே வற்புறுத்துகின்றார்.

விளங்கும் திருவாரூர் என்பதற்கு எழுவாய் வருவித்துப் புகழ்விளங்கும் திருவாரூர் என்று பொருள் கொள்க. புகழ், தியாகத்தால் விளைவது. கொடையரசராகிய தியாகேசப்பெருமான் எழுந்தருளியிருப்பதே அதற்குக் காரணமாகும்.

தேவரீர் வாருறு பூண்முலையாள் பங்கனுகப் போகியாய் இருத்தலின் உலகமும் அந்நிலை எய்துகிறது. உலகில் ஒருவனாகிய யானே மங்கையர் ஐம்புலன்களாகிற ஆற்றங்கரையின் மரமாக இருக்கின்றேன். இது ஒரு எல்லைகடந்த நிலைதான். ஆனாலும் எனக்கு அம்மையப்பராக எழுந்தருளி என்னை வளர்க்கும் தேவரீர் ஒதுக்கிவிடாதிருத்தல் வேண்டுமேயன்றி விடுதல் கூடாது என்று விண்ணப்பிக்கின்றார்.

காருறு கண்ணியர் என்றது மங்கையர் கண்களே நோயும் மருந்துமாக இருந்து, வற்றாத கலைக்கடலையும் வற்றச்செய்து வசப்படுத்துதலின், கண்ணியர் எனக் கண்ணை முன்னிட்டுக் கூறுகின்றார். ஐம்புலன் - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலன்கள். இவ்வைம்புலன்களும் எல்லையின்றி ஆசைநீரைப் பெருக்குதலின் ஆற்றுநீருக்கு உவமையாயின. அதன் கரையிலேயுள்ள மரம் ஆணிவேர்வரையில் மணல்

அரித்துப்போக எந்த நேரத்திலும் சாய்ந்துவிடும் நிலையில் இருக்கும். அதுபோல யான் நிலை தளர்ந்திருக்கிறேன்; என்னை விட்டுவிடுதலாகாது என்று வேண்டுகின்றார். வேர் உறுவேனை என்றது வேரை ஒத்த என்னை என்பதுதான் பொருள். உறுவேன் - ஒப்பேன். இங்ஙனமன்றி வேர் ஊன்றியிருப்பேனை என்று உரைப்பாரும் உளர். அது உவமைக்கு ஏலாமை உணர்க.

108 வளர்கின்ற நின்கரு ணைக்கையில்
 வாங்கவு நீங்கியிப்பால்
மிளிர்கின்ற வென்னை விடுதிகண்
 டாய்வெண் மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்ற நீண்முடி யுத்தர
 கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னுமின் னும்மன்ன
 தோற்றச் செழுஞ்சுடரே. 4

இ - ள்: வெண்மையான இளம்பிறையொன்று விளங்குகின்ற நீண்ட சடைமுடியினையுடைய உத்தரகோசமங்கைக்கு அரசே! உருக்கி ஓடவிட்டுத் தெளிந்த பொன்னையும் மின்னலையும் ஒத்த தோற்றத்தினையுடைய பேரொளிப் பிழம்பே! மேன்மேலும் வளர்கின்ற உன் கருணைக் கையினாலே என்னை எடுக்கவும் நான் அதற்கு அகப்படாமல் அகன்று உலகவாழ்வில் விளங்குகின்ற என்னை விடுகிறாய்? நின் பெருங்கருணைக்கு இது தகாது என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் கருணைக்கையால் அணைக்கவும் நான் அகன்றே போகின்றேன் ஆயினும் என்னை விடுதல் கூடாது என்று வேண்டுகிறார்.

மதிக்கொழுந்து - பிறைமதி. அடி அடைந்தாரை முடிமீது வைத்துக் காக்கும் பேரருளாளன் என்பார் 'மதிக்கொழுந்து ஒன்று ஒளிர்கின்ற நீள் முடி அரசே' என்றார்.

தெளிகின்ற பொன் - சொக்கப்பொன். "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமேனி பொலிந்திலங்கும் மின்வண்ணம்" என்னும் பொன்வண்ணத்தந்தாதிப் பாடல் ஈண்டு இணைத்து எண்ணுதற்குரியது.

உலகில் நற்செயல் தொடங்குவார் வாசியுள்ள வளர்கின்ற கையால் தொடங்குவர். அதுபோல இறைவனும் வளர்கின்ற

கருணைக் கையால் எடுத்தார். கருணையைக் கையாக உருவகித்தது திருவருள்சத்தியின் தன்மை அதுவாதலின். வாங்கவும் என்ற சொல்லாற்றலால், பிறவிக்கடலில் வீழ்ந்து பிணியும் காமமுமாகிய சுறுமீன் பற்ற ஐம்பொறிகளாகிய அரவுகள் பிடுங்கத் தான் அலைகின்ற நிலையைக் குறிப்பிடுகின்றார்.

நீங்கி-தாய் தனயனுக்குப் பாலூட்டவும் அதனை வெறுத்து விடமருந்தும் பிள்ளைபோலக் கருணைக்கையின் அணைப்பை விட்டகன்று. இப்பால் மிளிர்கின்ற என்றது குறிப்புமொழி. உலகியல் துன்பத்துள் சிக்கி வருந்துதலை இகழ்ச்சி தோன்றக் குறிப்பித்தவாறு.

> செழுகின்ற தீப்புகு விட்டிலிற்
> சின்மொழி யாரிற் பன்னாள்
> விழுகின்ற வென்னை விடுதிகண்
> டாய்வெறி வாயறுகால்
> உழுகின்ற பூமுடி யுத்தர
> கோசமங் கைக்கரசே
> வழிநின்று நின்னரு ளாரமு
> தூட்ட மறுத்தனனே. 5

இ - ள் : தேன்பொருந்திய வாயினையுடைய வண்டுகள் கிண்டுகின்ற மலர்களணிந்த முடியினையுடைய உத்தரகோசமங்கைக்கு அரசே! வழியிலேநின்று உனது கருணையாகிய அரிய அமுதத்தை ஊட்டவும் மறுத்தவனாய், ஓங்கி எரிகின்ற தீயில் வலிய விழுந்த விட்டில்பூச்சியைப்போலச் சிலவாகிய மொழியினையுடைய பெண்களிடத்துப் பலநாள் விரும்பிக் கிடக்கின்ற என்னை விட்டுவிடுகிறாய்; அங்ஙனம் நீ விடுதல் ஆகாது என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், வழியில் நின்று இறைவன் அமுது ஊட்டவும், அதை மறுத்துவிட்டேனே என்று கழிந்ததற்கு இரங்குகின்றார்.

வெறி - தேன். தேன் உண்டாருக்குக் களிப்பை ஊட்டுதல் போல முதனிலைத்தொழிலாகுபெயராய் வெறி என்பது தேனுக்குப் பெயராயிற்று. அறுகால் - வண்டு: பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

உண்ண மறுக்கும் குழந்தையைத் தாய் அது விளையாடப் போகின்ற வழியிலே நின்று மறைத்துப் பாலூட்டுதல் போல

இறைவன் நான் போகின்ற வழிகளிலெல்லாம் நின்று கருணையாகிற அமுதத்தை ஊட்டினுன்; யானும், அதன் அருமையும் இன்றியமையாமையும் அறியாதபடி மறுத்தேன் என்றதாம்.

செழிகின்ற தீப்புகு விட்டில்: செழிக்கின்ற என்பது ஈண்டு எதுகைநோக்கிச் செழிகின்ற எனவாயிற்று. விட்டிற்பூச்சி தீயைக் கனியெனக் கருதி, அதில் தானே வலிய விழுந்து அது சுடுமாயினும் திரும்பி மீளவும் விழுந்து சாதல்போலத் தாமும் மங்கையர்தம் மையலில் விழுந்து காமத்தீயினுல் பலகாலும் சூடுண்டு மீளாது மடிவேனுயினேன் என்ருர்.

குழந்தை அறியாது படுகுழியில் விழப்போகும் சமயத்தில் தாய் 'குறும்புக்காரன் தொலையட்டும்' என்று இருப்பாளா? ஓடோடியும்வந்து தடுத்து எடுத்து அணைப்பாள். அதுபோலத் தாயாய் முலையைத் தருவானுகிய நீ விடுதல் ஆகாது என்ருர். விழுகின்ற - விரும்பி உறைகின்ற. "தாம் வீழ்வார்" என்புழிப் போல விழுதல் விரும்புதல் என்னும் பொருளது. கீழே விழுகின்ற எனவும் சொல்நயம் தோன்றல் காண்க.

110 மறுத்தனன் யானுன் னருளறி
யாமையி லென்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண்
டாய்வினை யின்தொகுதி
ஒறுத்தெனை யாண்டுகொள் உத்தர
கோசமங் கைக்கரசே
பொறுப்பரன் றேபெரி யோர்சிறு
நாய்கடம் பொய்யினையே.

இ - ள்: என் மணியே! உத்தரகோசமங்கைக்கு அரசே! உமது அருளின் அருமைப்பாட்டினை அறியமாட்டாமையின் யான் அதனை ஏற்கமறுத்தேன். ஆதலால் நீ என்னை வெறுத்து விடுகிருய். அங்ஙனம் விடாமல் நீ வெறுப்பதற்குக் காரணமாகிய என் வினைக்கூட்டங்களைக் கடிந்து அடியேனை ஆட்கொண்டருளுக. சிறிய நாய்போல்வார் செய்த பொய்மைகளைப் பெரியோர்கள் பொறுப்பரன்றே? என்றவாறு.

இத்திருப்பாட்டில் தான்செய்த தவற்றினைப் பொறுத்தருள வேண்டுகின்ருர்.

மாணிக்கமணி இறைவன். அதன் ஒளி போன்றது அவனுடைய திருவருள். அதன் மதிப்பை அறியாமையால் யான்

மறுத்தேன் என்கிறார். அங்ஙனம் மறுத்த என்னை நீ வெறுத்து விடலாமா? என்று வினவுகின்றவர் உள்ளத்தில் அங்ஙனம் இறைவன் ஆட்கொள்ளத் தடையாயிருந்தது தன் வினையின் தொகுதியே என்பது நினைவிற்கு வர அதனை நீக்கி ஆண்டு கொள் என வேண்டுகின்றார். "சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே" என்ற முது மொழி இத்திருப்பாடலின் ஈற்றடியில் இடம் பெறுகின்றது. நாயின் பொல்லாங்கு குறித்து நீக்காது அதன் நன்றியறிதல் குறித்துப் போற்றுவதுபோல உன்னைப்போன்ற பெரியோர்கள் என் பொய்ம்மையாகிய சிறுமை நோக்காது தம் பெருமையை எண்ணிப் பொறுப்பர் என்ற நயம் ஊன்றி அறியத்தக்கது. இது வேற்றுப்பொருள்வைப்பணி.

**111** பொய்யவ னேனைப் பொருளென
வாண்டொன்று பொத்திக்கொண்ட
மெய்யவ னேவிட் டிடுதிகண்
டாய்விட முண்மிடற்று
மையவ னேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி
யேன்பவந் தீர்ப்பவனே. 7

இ - ள்: நஞ்சினை உண்டதால் கழுத்தில் கருமைநிறம் உடையவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசே! சிவந்த திருமேனியுடையவனே! சிவனே! எல்லாவகையிலும் சிறியனாகிய எனது பிறவிநோயைத் தீர்ப்பவனே! பொய்ய னாகிய என்னையும் ஒருபொருளாக ஆட்கொண்டு, அணைத்துக் கொண்ட உண்மை வடிவானவனே! அடியேனை விட்டுவிடு வாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், பொய்யன் என்றறிந்தும் என் குற்றத்தை மறைத்து ஆட்கொண்ட நீ விடுதலாகாது என வேண்டிக்கொள்கிறார்.

விடம் தீயது; நீ அதனை உண்டுச் சிவந்த திருமிடற்றில் கருமை தோன்ற அழகாக வைத்துக்கொண்டனை. அதனால் பல தேவர்கள் உயிர் பிழைத்தனர். அதுமட்டுமன்றி, அவர்க ளுக்கு அமுதமும் அளித்த பெருங்கருணையுடையாய். அது போலப் பொய்யனாகிய எனது பொய்ம்மையைப் போக்கி வீடு பேறளித்து ஆட்கொள்ளுதல் நின்னால் ஆகாததொன்றன்று

எனக் குறிப்பிக்க 'விடம் உண் மிடற்று மையவனே' என்று அக்கருணையை நினைவூட்டி விளிக்கின்றார்.

மிடறு விடத்தால் கரியதாயிருப்பினும் திருமேனி முழுதும் சிவந்தது என்பது தோன்ற அடுத்துச் 'செய்யவனே' என்றார். தாம் விடமுண்டு தேவர்களுக்கு அமுதமீந்ததுபோல, உயிர்களின் பொல்லாத ஆணவத்தைப் போக்கி நல்ல இன்பத்தை அவைகட்கு அளிக்க வல்லவன் என்பார் 'சிவனே' என்றார். சிவன் - இன்பம் செய்பவன் என்னும் பொருளுடையது.

ஆன்மாக்கள் ஆணவத்தோடுகூடி 'அணு' என்னும் பெயரைப் பெற்றுச் சிறுமையடைவன ஆதலின் மலமாயை கன்மங்களோடு கூடிய தன்னைச் சிறியேன் என்றார். அவ்வண்ணம் ஆணவத்தோடு கூடி இருப்பதாலே எனக்குப் பிறவி உண்டாகிறது என்பதைத் திருவுளங்கொண்டு, நோய்முதலறிந்து நோய் தீர்க்கும் மருத்துவன்போல, நீ பவரோக வைத்தியநாதனாக ஆணவத்தின் வன்மையை வாட்டிப் பிறவியைத் தீர்க்கவேண்டுமென்பார் 'பவம் தீர்ப்பவனே' என்றார்.

பிறவியும், அதற்குக் காரணமாய ஆணவமும், அதனைப் பரிபாகமுறுத்தும் கன்மங்களுமே என்னை நின்னைப் பிரியச் செய்தன என்பார் 'பொய்யவனேனை' என்றருளினார். பொய்யவன் - பொய்யான பிரபஞ்சவாதனையில் பற்றுடையவன்.

பொருள் ஒன்று என - ஒரு பொருளாக. பெரிய பெருமானாகிய உன்னால் பொருளாக மதிக்கத் தகாத என்னையும் ஒரு பொருளாக எண்ணி ஆண்டு என்பதாம்.

இங்ஙனம் அன்றி, ஒன்று - ஒன்றான அருளால் பொத்திக் கொண்ட என இயைத்துப் பொருள் காண்பாரும், ஒன்றாகிய முத்தியுலகை நான் அடையாதவண்ணம் மறைத்துக்கொண்ட எனப் பொருள் கொள்வாரும் உளர். இவ்விரு பொருளிலும் ஒன்று என்பது எண்ணுகுபெயர்.

ஒன்று பொத்திக்கொண்ட - ஒன்றாகச் சேர்த்தணைத்துக் கொண்ட. 'கையது கொண்டு மெய்யது பொத்தி' என்புழிப் போலப் பொத்துதல் - சேர்த்தல் என்னும் பொருளது. குற்றம் மறைத்து எனில், குற்றம் போக்கும் அருளிறை குற்றத்தை மறைக்குமா என்பதும், பிழையெலாம் தவிரப் பணித்தலும் பிழையெலாம் பொறுத்தலுமே இறைவனது இயல்பு என்பதும் சிந்தித்தற்குரியன.

விட்டிடுதி கண்டாய் என்பது விடுதலாகிய இதுவும் நின்னருட்செயலேயாயினும் இப்பிரிவு என்னால் ஆற்றவொண்ணாதது என இரங்கியவாறு.

112 தீர்க்கின்ற வாறென் பிழையைநின்
சீரரு ளென்கொலென்று
வேர்க்கின்ற வென்னை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை யுத்தர
கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற வஞ்சொடச் சம்வினை
யேனை யிருதலையே. 8

இ - ள்: பகைவர்கள் அஞ்ச ஆர்ப்பரிக்கின்ற கிண்கிணி மாலையை அணிந்த, இடபவாகனத்தையுடைய உத்தரகோசமங்கைக்கு அரசே! அஞ்சு புலன்களோடு அச்சமும் எதிரெதிரான இருபக்கமும் நின்று, தீவினையுடையேனாகிய என்னை இழுக்கின்றன. இது ஒருபுறமிருக்கட்டும்; தேவரீர் திருவருள் என் பிழையைத் தவிர்ப்பது எப்படியோ என்று புழுங்கும் என்னை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், என்னை அச்சம் ஒரு பக்கமும் புலன்கள் ஒரு பக்கமும் ஆக இழுக்கின்றன. ஆதலால், நின்னருள் என் பிழையைத் தீர்ப்பதெப்படி என்று தாம் கவல்வதாக விண்ணப்பிக்கின்றார்.

வேண்டுதல் வேண்டாமை இன்மையே இறைவனுக்கு இயல்பாக, பகைவர் அஞ்ச அவனேறுகின்ற விடை ஆர்ப்பரிக்கின்றது என்பது எங்ஙனம் பொருந்தும் எனின், இறைவனுக்குப் பகையும் நண்பும் அயலும் இல்லையே ஆயினும் உயிர்கள் தம் அறியாமையான் தம்மாட்டு அக்குணங்களைப் பொருந்தி அழிகின்றன; என்பில்லாத புழுக்கள் தன்னியல்பால் வெயிலிற் சென்று மாய்வதுபோல என்பதாம். விரவார் - கலந்த உள்ளமில்லாதார். இறைவனுக்குப் பகைவர் பாவநண்பர்கள். இறைவன் ஏறும் இடபம் அறவடிவானது ஆதலின் அறத்தின் ஆர்ப்பு மறத்தை அஞ்சச்செய்கின்றது என்பது. தார் - கிண்கிணி மாலை.

அஞ்சு - ஐந்து என்பதன் போலி. ஐந்து எண்ணுகு பெயராகப் புலன்களை உணர்த்தின. அச்சம் - தவறு செய்கின்றமையால் எதையும் கண்டு அஞ்சுதல். ஐம்புலன்களின் வழியே

இழுபட்டுச் செல்பவர்க்கு அச்சமும் உடன் விளையுமாதலின் அஞ்சொடு அச்சம் என ஓடுவுருபை உயர்ந்ததோடு பிணைத்து ஓதினார். 'அஞ்சையும் அடக்கியவர்கட்கு அச்சமில்லை. அச்சம் ஒரு பக்கமும், அஞ்சும் ஒரு பக்கமுமாக இருதலையும் நின்று இழுக்கின்றன; இடைப்பட்டு ஒரு பக்கமும் போக முடியாதபடி வருந்துகின்றேன் என்றார். ஈர்க்கின்ற - இழுக்கின்றன: பன்மை வினைமுற்று.

*சீர் அருள்* - சிறந்தன எவற்றினும் சிறந்ததாய், எல்லாப் பொருளுக்கும் சிறப்பினைத் தரும் திருவருள். நின் என்பது எல்லையற்ற பெருமையையுடைய நின் என உயர்வும், என் என்பது மலமாயைகளோடுகூடி மிக இழிந்த என் என இழிவும் தோன்றநிற்கின்றன. பிழையைத்தீர்த்தலாவது பிழைகள் பகவ உருவின் வந்து, தம் பயனை உயிருக்கு ஊட்டாது அழித்தே விடுதல். "பிழையெலாம் தவிரப் பணிப்பானை" என்பதும் இப்பொருட்டு.

நின் சீரருள் என் பிழையைத் தீர்க்கின்றவாறு என்கொல் என்று கூட்டுக. என்கொல் என்பது எவன்கொல் என்பதன் திரிபு. எப்படித் தீர்க்கத் திருவுள்ளமோ என்பது பொருள். நின் அருளால் ஆகாததொன்று உண்டோ? அருள் நினையின் என் பிழைகளை அக்கணமே நீக்கும்; திருவடியைப் பிரியாத பேரின்பநிலையை ஆக்கியிருக்கும். அங்ஙனமிருந்தும் காலந் தாழ்க்கின்றமையின் என்பிழை நீக்கத் தேவரீர் மேற்கொள்ள இருக்கும் உபாயம் எப்படியோ என்கின்றார் என்பது கருத்து.

வேர்த்தல் - மனம் புழுங்குதல். எப்படிப் போக்குவார்! எம் பிழை பெரிதாயிற்றே! என்று என் இழிவையும் நின் கருணையின் உயர்வையும் நினைந்து அடியேன் இரங்கும் செயல் ஒன்றுமே யான் உன்னால் விடத்தகாதவன் ஆயினேன்; அங்ஙனமிருந்தும் விடுதி கண்டாய் இது தகுமோ என்று விண்ணப்பிக்கின்றார்,

113. இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்
 பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண்
 டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னும் உத்தர
 கோசமங் கைக்கரசே,
பொருதலை மூவிலை வேல்வல
 னேந்திப் பொலிபவனே.

இ - ள் : பெரிய மூன்று உலகங்களுக்கும் ஒப்பற்ற ஒரு தலைவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசே! போரிட்டு வருத்துகின்ற மூன்றாகிய இலைவடிவாக உள்ள சூலத்தை வலமாக ஏந்தி விளங்குபவனே! இருபக்கமும் தீப் பிடித்தெரியும் கொள்ளிக்கட்டையில் உள்ளே அகப்பட்ட எறும்பைப்போன்று, உன்னை விட்டுப்பிரிந்து தலைவிரி கோலமான என்னை விடுகின்றாயே என்றவாறு.

இத்திருப்பாட்டில், உய்யும்நெறி அறியாத இந்நிலையில் என்னை விடுதலாகாது என விண்ணப்பிக்கின்றார்.

காலன் தக்கன் போன்றவர்களோடு பொருது வருத்து கின்ற சூலம் என்பார் 'பொருது அலை வேல்' என்றார். அது இலைவடிவான நுனிகளை உடைமையின் 'மூவிலைவேல்' என்றார். இது உயிர்கள் ஆணவமலத்தைப் பொருந்திக் கெடாதவாறு காப்பது என்பதனை 'அழுக்கடையாமல் ஆண்டுகொண்டருள் பவன் கழுக்கடை தன்னைக் கைக்கொண்டருளியும்' என்ற பகுதி யானும் (கீர்த்தி - 109, 110) விளக்கியருளினார். அன்றியும் காசியில் இறந்தார்செய்த பாவங்களை வைரவக்கடவுள் தம் சூல நுனியில் ஒரு கணப்பொழுது வைத்து அலைத்துத் தீவினைப் பயனையூட்டிக் கழித்துத் தூய்மையுறுத்துவர் என்ற காசி காண்டச் செய்தியும் கருதுக. வலன் ஏந்தி - வலக்கரத்துத் தாங்கி; வெற்றியாகத் தாங்கி எனலுமாம். இங்ஙனம் அன்றிப் பொரு இலை முத்தலைவேல் வலனேந்தி எனச் சிதைவுசெய்து கூட்டி, பொருகின்ற இலைவடிவான மூன்று நுனிகளையுடைய சூலம் என்பாரும் உளர்.

இருதலைக்கொள்ளியின் உள் எறும்பு ஒத்து - இருபக்கமும் தீப்பிடித்த உள்தொளையுடைய கொள்ளிக்கட்டையின் உள்ளி ருக்கும் எறும்பை ஒத்து. வண்டுதுளைத்த மூங்கில், செல்பிடித்த உளுத்த மரத்துண்டு இவற்றின் உள்ளே எறும்பு புகுந்திருப்ப துண்டு. அக்கட்டை இருமருங்கும் தீப்பிடிக்குமாயின் அவ் வெறும்பு ஒருமருங்கும் போகமுடியாமலும் குறுக்கே தப்பமுடி யாமலும் இங்கும்அங்குமாகத் தீ அணுகும்வரை ஓடித்தவிக்கும். இருமருங்கும் தீ அணுகி ஒன்றாயின் தான் அதனுள் அகப்பட்டு இறக்கும். அதுபோல யான் பொறி உணர்ச்சி வயப்பட்டு, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற புலன்களாகிய தீ ஒரு பக்கமும், அப்புலன்கள்வழிச் செல்வதால் அச்சம் ஒருபக்கமும் உடலாகிய கட்டையைத் துன்புறுத்தலின் அதனுள் அகப்பட்ட உயிராகிய யான் உன்னை வந்து ஒன்றித் தப்பமுடியாது தவிக் கின்றேன்; கருணையாளனாகிய நீ உடற்கட்டையை உடைத்து

என்னை வெளிப்படுத்தாது விட்டிடுதி கண்டாய் என்கின்றார். பின்வரும் பாட்டிலும் 'ஆக்கையைப் போக்கப்பெற்று' என்று கூறுதலும் காண்க. முன்னர் வேறொரு வாய்பாட்டால் 'அஞ் சொடு அச்சம் வினையேனை இருதலை ஈர்க்கின்ற' என்று கூறிய அதனையே ஈண்டு உவமைமுகத்தால் விளக்குதல் காண்க.

இங்ஙனமன்றி ஒருதலை இவ்வுலக வாழ்க்கையின் வெறுப் பிற்கும், மற்றொருதலை ஆண்டவனின் பிரிவுக்குமாக வருந்து வார் தன்னை இருதலைக்கொள்ளி எறும்புக்கு உவமமாக்கினர் என்பர்.

இறைவனைப் பிரிந்த உணர்ச்சி, அறியாமையால் இறைவ னைப் பிரிந்துவிட்டோமே என்ற சுவட்டினை மனத்தகத்தழுத்திப் பின் இறைவனோடு ஒன்றுதற்குரிய வாய்ப்பாதலானும், உல கியல் வெறுப்பு இறைவனடியைச் சாரத் துணைசெய்தலானும் அவை இருதலைக் கொள்ளிக்கு உவமமாதற்கு ஏலாமை அறிக.

விரிதலையேன் - பிரிந்த அலைவால் சிதறிக்கிடக்கிற தலையை உடையேன்; என்றது பரபரப்பின் விளைவை அறிவிப்பதாம். பலதிறப்பட்ட எண்ணங்களை உடைய என்னை என்பாருமுளர்.

வியன் - பெரிய. உரிச்சொல். ஓரிடத்திருந்து நாட்டைத் தன் ஆணையால் காக்கும் அரசனைப்போலாது அகன்ற பெரிய மூன்று உலகங்களிலும் தான் ஒருவனே வியாபித்து, நீக்கமற நின்று இறைமை இயற்றுதலின் 'வியன் மூவுலகுக்கும் ஒரு தலைவா' என்றது. மூவுலகங்களிலும் அங்கங்கே செறிந்து காணப்படுவானாயினும் அவன் தலைநகரம் உத்தரகோச மங்கை என்பார் 'மன்னும் உத்தரகோசமங்கைக்கு அரசே' என்றார்.

மூவுலகுக்கு - விண், மண், பாதலமாகிய மூன்றுலகுக்கும். இனைத்தென்றறிபொருளாதலின் மூவுலகுக்கும் என்று இருக்க வேண்டிய முற்றும்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது.

114 பொலிகின்ற நின்றாள் புகுதப்பெற்
    றாக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற வென்னை விடுதிகண்
    டாயளி தேர்விளரி
ஒலிநின்ற பூம்பொழி லுத்தர
    கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித்
    தாய்புர மாறுபட்டே. 10

இ-ள்: வண்டுகள் தேர்ந்து பாடுகின்ற விளரிப்பண்ணின் ஓசையானது நிலைபெற்ற பூஞ்சோலைகள்சூழ்ந்த உத்தரகோச மங்கைக்கு அரசே! முப்புரங்களையும் மாறுபட்டு வலிமை நிலைபெற்ற திண்ணிய வில்லால் எரித்தவனே! விளங்குகின்ற நின் திருவடியானது என் மனத்தின்கண் புக அப்பேற்றினைப்பெற்று இவ்வுடம்பை ஒழித்தற்குரிய விருப்பத்தையும் பெற்று, திருவடிப்பேறு விரைவில் கைகூடாமையால் மெலிகின்ற என்னை விடுகின்றாயே என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் தனக்குப் பரிபாகம் வரப்பெற்றும் விடுகின்றாயே என்று இரங்கி விண்ணப்பிக்கின்றார்.

அளி - நறுநாற்றத்திலே செல்வதாகிய தேன் என்னும் ஒருவகை வண்டு. அளிதேர் விளரி ஒலி - வண்டானது தனக்கு வாய்ப்பானது இது என்று தேர்ந்த விளரிப்பண் ஒலியலைகள் காற்றோடு கலந்து விண்ணில் நுண்ணணுவாய் என்றும் நிலைபெற்றுள்ளன ஆதலின் 'விளரி ஒலி நின்ற பூம்பொழில்' என்றார். நின்ற - நிலைபெற்ற. வலி நின்ற திண் சிலை - மேருமலையாகிற வில். மாறுபட்டு எரித்தாய் என்றது, அரக்கர்களின் மாறுபட்ட செயல், இறைவன் திருவுள்ளக்கருத்தோடு ஒட்டிப் பார்க்க மாறுபட்டிருந்தது என்பது கருத்தே அன்றிப் பகை கொண்டு என்னும் பொருளது ஆகாது. இறைவன் 'நட்பொடு பகை நாடாதவன்' ஆகலின். பின்னும் இங்ஙனம் வருமிடங்களிலெல்லாம் இவ்வாறே பொருள்கொள்க.

குருந்தடியில் இறைவன் குருவாக எழுந்தருளியிருந்தபோது கண்டதிருவடி இவர்கருத்தின்கண் இன்னும் விளங்கிக் கொண்டிருத்தலின் 'பொலிகின்ற நின் தாள்' என நிகழ்கால வாய்பாட்டால் கூறினார். இறைவன் திருவடி அநாதி நித்தியமாய் முக்காலத்தினும் ஒத்தியல் பொருளாதலின் நிகழ்காலத்தால் செப்பப்பட்டது எனலும் ஆம்.

ஆக்கை - உடல். வினையின் வந்ததாய் வினைக்கு விளைவாவதாய் எழுவகைத் தாதுக்களால் யாக்கப்பெற்றது. காரணப்பெயர். அவ்வுடலைப் போக்குதற்கான ஆசையைப் பெற்று.

இடைவிடாத இந்த இருவகையான பற்றும் மெலிவைக் கொடுக்குமாதலின் 'மெலிகின்ற' என்றார். இவ்வண்ணம் பல தகுதி பெற்றும் என்னை விடுதல் ஆகாது என வேண்டுவார் 'விடுதிகண்டாய்' என விண்ணப்பிக்கின்றார்.

115 மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப
யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண்
டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன்
மேனி நெடுந்தகையே. 11

இ - ள் : வினைகளையுடையவனாகிய அடியேன் மனத்துள் ஊறுகின்ற தேனே! நிலைபெற்று விளங்கும் உத்தரகோசமங்கைக்கு அரசே! திருநீற்றினை அணிந்து பேரொளிசெய்யும் பொன்னிறமான திருமேனியையுடைய பெரியோனே! ஐந்து புலன்களும் என்னோடு மாறுபட்டு என்னை வஞ்சிப்பதால், அடியேன் அழகிய மலர்போன்ற நின் திருவடிகளுக்குத் தொண்டு செய்யாது வேறுபட்டேன்; ஆகையால் என்னை விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியேன் அடிசேராது மாறுபட்டிருப்பதும் என் பிழையன்று; புலன்களின் வஞ்சனை ஆதலால் விடுதலாகாது என விண்ணப்பிக்கின்றார்.

வினை - நல்வினை தீவினை இரண்டற்கும் பொது. இருவினைகளுமே பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போல்வனவாகச் சிவஞானம்பெறத் தடைசெய்வன. பாலைவனத்துப் பாறையில் நீருற்றுப்போல இருவினைத் தொடக்கறுத என் மனத்துள் ஊறுகின்ற தேனே என்று இறைவனை உருவகித்தார். மலரின்கண் ஊறுவது மட்டு. மனமலரில் அறிவானந்தமாக ஊறுபவன் சிவன் என்க. இது சிந்தைக்கினிய சிவன் என்பதை உணர்த்திற்று.

நீறு - திருநீறு. இறைவன் வெண்ணீறு சண்ணித்த திருமேனியனும் பொன்னார் மேனியனும் ஆதலின் 'நீறுபட்டே ஒளிகாட்டும் பொன்மேனி நெடுந்தகை' என்றார். இறைவன் கண்ணுக்கினியனாகக் காட்சிதந்தமையை இது விளக்கிற்று.

அஞ்சு - ஐந்தாகிய புலன்கள். சிவஞானியர் புலன்கள் சிவனை எல்லா இன்பமுமாகக் கண்டு, ஐந்து பேரறிவும் வந்த யோறிவாக விளங்க வேண்டிய நிலையின் மாறி, உலகியலில் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் பாசஞானமாய் நிற்றலின் 'அஞ்சு மாறுபட்டு என்னை வஞ்சிப்ப' என்றார்.

இவ்வண்ணம் கருவிகள் மாறுபட்டதால் கருவிகளை வாயிலாகக்கொண்டு உணரும் உயிராகிய யான் திருவடிச் சார்பினின்றும் வேறுபட்டேன் என்பார் 'உன் மணி மலர்த்தாள் வேறுபட்டேன்' என்றார். வேறுபடுதலாவது திருவடியைச் சார்ந்து திருவருள் வடிவாக இருக்கின்ற நிலை மாறிப் பாசத்தைச்சார்ந்து பாசமாயிருந்தமை. தன்னைக் கண்ட உயிர் வேறொன்றையும் நோக்காதவண்ணம் உன் திருவடி தாமரை போல அழகும் நிறமும் மணமும் மென்மையும் செம்மையும் உடையதாயினும் வேறுபட்டேன்; என்னே என் அறியாமை என்று இரங்கியவாறு.

குற்றம் புரிந்தான் ஒருவன் உணர்ந்து யான் செய்தது குற்றமே என்று ஒப்புவானாயின் தலைவரானவர் அதனைப் பொறுத்து ஆக்கம் அளிப்பர் ஆதலால் யான் சகவாச தோடத்தால் கெட்டேன் என்று ஒப்புகிறேன்; அங்ஙனமாக நீ விடலாகாது என்று விண்ணப்பிக்கின்றார்.

*116* நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள
யானைம் புலன்கள்கொண்டு
விடுந்தகை யேனை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
அடுந்தகை வேல்வல வுத்தர
கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேனுண் ணுந் தெண்ணீ
ரமுதப் பெருங்கடலே. 12

இ-ள்: பகைவரை அஞ்சக் கொல்லும் சூலப்படையை வலக்கரத்தில் ஏந்தியவனே! உத்தரகோச மங்கைக்கு அரசே! கொடுந்தன்மையுடையேனாகிய யான் பருகுதற்குக் கிடைத்த தெளிந்த தன்மையையுடைய அமுதமயமான பெரிய கடலே! பெருந்தன்மையுடையனாகிய நீ, என்னை ஆட்கொள்ளவும், யான் ஐம்புலன்களைப் பற்றிக்கொண்டு, நின் சார்பை விடும் தன்மையேனாதலின் என்னை விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் ஐம்புலன்களைத் துணைக்கொண்டு நின்னை விட்டேன்; ஆனாலும் நீ என்னை விடலாகாது என விண்ணப்பிக்கிறார்.

நின் கையில் இலங்குகின்ற சூலத்தைக்கண்டு பகைவர்கள் தானே அஞ்சியோடுகின்றனர்; அதற்குக் காரணம் அதனிடம் உள்ள கொல்லுந்தன்மையே என்பார் 'விரவார் வெருவ

அடுந்தகை வேல்வல' என்றார். அதன் தன்மைகண்டே அனை வரும் அஞ்சுவர் என்றது கொல்லும் வாய்ப்பு இதுவரை வாய்த் திலது என்பது. 'வேல்வல்ல' எனப் பாடங்கொண்டு 'வல்ல அரசு' எனக் கூட்டுவாரும் உளர்.

தன்னைக் 'கடுந்தகையேன்' என்று சொல்லிக்கொள்வதற்கு ஏற்ப, அக்கடுமையை மாற்றும் அமுதப் பெருங்கடலாக இறை வனைக் காணுகின்றவர் 'தெண்ணீர் அமுதப் பெருங்கடலே' என்றனர். இறைவன் கருணை எத்தனையாயிரம் அடியார்கள் முகந்துகொள்ளினும் குறைவுபடாது ஒருபடித்தாக இருத்தலே யன்றி, ஒருகாலைக்கொருகால் பெருகியும் தோன்றுதலானும் அப்பெருக்கம் இவ்வளவிற்று என்று யாரானும் அளவிட்டறி யப்படாமையானும் 'அமுதப் பெருங்கடலே' என்றார்.

இறைவனுடைய பலவேறு குணங்களை அடுக்கிச் சொல்லி யும் அது தம் உரையுள் அடங்காமை கண்டு, எல்லாக் குணங் களும் தோன்ற 'நெடுந்தகை நீ' என்றார். நெடுந்தகை - பெரிய குணங்கள் பல படைத்தவன்.

நினது கைம்மாறில்லாக் கருணை, என்குறையும் சிறுமையுங் கண்டும் அவற்றைப் பொருட்படுத்தாது ஆட்கொண்டது; அதன் அருமையும் பெருமையும் அறியாது அடியேன் ஐம்புலச் சார்புகொண்டு விடும் தகுதியுடையேன் ஆயினேன் என்றார்.

ஐம்புலன்களுக்கும் இவருக்கும் நடக்கும் மனப்போரில் புலன்கள் வெல்லும்போது நின் திருவடிச் சார்பைவிட்டு அகல் கிறேன். பின் புலன்கள் ஓய்ந்து மடங்கும்போதும், புலனின்பம் சிற்றின்பம் ஆதலின் அதன்கண் உவர்ப்புத் தலைக்காட்டும் போதும் நின் திருவடியைச் சார்கின்றேன். இவ்வண்ணம் நின் திருவடிச்சார்பை முற்றும் விட்டேன் அல்லேன் என்பார் 'விட்டேனை' என்னாது 'விடுந்தகையேனை' என்றார். அதனால் நீ என்னை விடுதலாகாது என்று விண்ணப்பிக்கின்றார்.

117 கடலினுள் நாய்நக்கி யாங்குன்
கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண்
டாய்விட லில்லடியார்
உடலில மேமன் னும் உத்தர
கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேயமு
தேயென் மதுவெள்ளமே. 13

இ - ள் : உன்னை விடாமல் பற்றியே நிற்கும் மெய்யடியாரின் உடலையே இல்லமாகக்கொண்டு எப்போதும் எழுந்தருளியிருக்கும் உத்தரகோசமங்கைக்கு அரசே! பூவிதழில் சுரக்கும் தேன்போன்றவனே! மாணிக்கமணியே! அமுதமே! எனது கள்ளின் பெருக்கே! கடலின்கண் உள்ள நீரை நாய் நக்கிக் குடித்ததுபோல உன் கருணைக்கடலில் என் மனத்தினை ஆழ்த்த அறியாத என்னை விடுதியோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகள், தன்னால் கருணைக்கடலின் இன்பம் விடமுடியாமல் இருப்பதை உணர்த்தி அதனால் நீ விடக்கூடாது என விண்ணப்பிக்கின்றார்.

அன்பு தலையன்பு, இடையன்பு, கடையன்பு என மூவகைப்படும். கடையன்பு இறைவனையும், திருக்கோயிலையும், சிவனடியாரையும் கண்டவிடத்து மனத்தின்கண் சிறிது சுரப்பதாய், விலகிய இடத்து வெளிப்படாததாய் இருப்பது; தீயை அணுகின் இளகுவதாய் விலகின் இறுகுவதாய மெழுகுபோன்றது. இடையன்பு இறைவன் பெயரையும், அடியார்கள் பெயரையும் கேட்ட அளவிலும் சுரப்பது. தலையன்பு தைலதாரைபோல இடையறாது நிகழ்வது. இத்தகைய தலையன்புடைய அடியார்களையே ஈண்டு 'விடல் இல் அடியார்' என்று குறிப்பித்தது. சேக்கிழார்சுவாமிகள் "நாயகன் சேவடி தைவரு சிந்தையும்" "சிந்தைதனில் இடையறாப் பேரன்பும்" என்று கூறுவனவும் இத்தகைய அன்பர்களையே. அன்பர்களது உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் ஆதலின் அடியாருடலே இலம் (ஆக) மன்னும் என்றார்.

மடல் - இதழ். மட்டு - தேன். 'மடலின் மட்டே' என்றது வண்டு தீண்டி எச்சிலாக்காத இனிய தூய்மையான தேனே! என அழைத்ததாம். திருக்குற்றாலபுராணத்தும் "சுரும்புணராப் பூந்தேனே" என்றது இக்கருத்தை ஒட்டியென்க.

இயற்கை ஒளி மிகுந்தது மணி. அது எங்குக் கிடப்பினும் பெருமையும் சிறப்பும் குன்றாதது. அதுபோல இறைவன் சுயஞ்சோதியாய், பெத்தான்மாக்களின் உள்ளத்து இருப்பினும் தன் பெருமை குன்றாது இருக்கின்றனர் என்பது விளக்கப்பெற்றது. மணி - செம்மணி; மாணிக்கம். அமுது - தேவாமுதம். அது உண்டார்க்கு நீண்டகால வாழ்வுதருவது; இனிமையாக இருப்பது. சாவா மூவாப் பெருவாழ்வு அளித்தலானும், காணக்காண இனிமை பயத்தலானும் இறைவனை அமுதாக உருவகித்தார்.

என் மது வெள்ளமே - எனக்குக்கிடைத்த மதுப்பெருக்கே. தேன், மணி, அமுதம் போல்வன உயர்ந்தார்க்குக் கிடைப்பன. அவை எனக்கும் கிடைக்குமோ என்ற ஐயம் தோன்ற, தேவர் முதலாயினார்க்கு அவ்வண்ணமிருப்பினும் எனக்குக் கள்ளின் பெருக்காக விளங்குகின்றார் என்றவாறு. உயர்ந்தோர்க்கு உயர்ந்த பொருளாயும், இழிந்தோர்க்கு எளிய பொருளாயும் விளங்குவதே இறைவனுடைய தனித்தன்மை என்பதையுணர்த்தவே 'என் மது வெள்ளமே' என்றது.

'கடலில் எவ்வளவு நீர் இருந்தாலும் நாய் நக்கித்தானே குடிக்கும்' என்பது ஒரு முதுவழக்கு. அதில் வாய்வைத்து வயிறார உண்ணும் ஆற்றல் நாய்க்கு இல்லை என்பது கருத்து. கடலில் நீர்போல் உன்னிடத்துக் கருணை வெள்ளமாக இருக்கிறது. அதில் ஆழ்ந்து அள்ளிக் குடிக்கவேண்டும். அத்தகைய ஆற்றல் அடியேனுக்கு இல்லை; ஆயினும் விடமுடியாதவனாக உள்ளேன்; இந்த ஈடுபாட்டைத் திருவுளத்தெண்ணியேனும் நீ விடலாகாது என்று விண்ணப்பிக்கிறார்.

*118* வெள்ளத் துள்நா வற்றி யாங்குன்
அருள்பெற் றுந் துன்பத்தின் றும்
விள்ளக் கிலேனை விடுதிகண்
டாய்விரும் பும்மடியார்
உள்ளத்துள் ளாய்மன் னும் உத்தர
கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி
யாத களியெனக்கே. *14*

இ - ள் : நின்னை விரும்பும் அடியார்களின் உள்ளத்துள் இருப்பவனே! நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கு அரசே! நல்ல வெள்ளத்தில் கிடந்தும் ஒருவனுக்கு நாவறண்டு தாகம் எடுத்ததுபோல, உன்னருளைப்பெற்றும், துன்பத்தில் இன்றும் பிரியமுடியாத என்னை விடுவாயோ? வஞ்சக மனமுடைய எனக்குக் கள்ளால் விளையாத களிப்பை அருள்புரிவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், கிடைத்தற்கரிய உன்னருள் கிடைத்தும் துன்பத்தினின்று என்னால் நீங்கமுடியவில்லை; நீயும் விடுவாயானால் என் கதி என்னவாகும் என்று விண்ணப்பிக்கிறார்.

விரும்புதல் மனத்தின் செயல். புறஞ்செல்லா மனத்தால் இறைவனையே விரும்பும் அடியார் உள்ளத்துள்ளாய் என்றார்,

இறைவன் 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' ஆதலின்.

நன்னீர் வெள்ளத்துள் அகப்பட்டவன் தாகங்கொள்வானாயின், அதற்குக் காரணம் நீரின்மையன்று; அவன் வினைக் குறையே. அதுபோல, உன் கருணைப் பெருவெள்ளம் எங்கும் பாய்ந்து நிறைந்திருக்குமாயினும் அதனைத் துணைக்கொண்டு என் துன்பத்தையும் தொலைத்து இன்பம் எய்தவேண்டியிருக்க அதனை நான் செய்யமாட்டாதவனாயினேன்; அதற்குக் காரணம் என் தீவினைப்பயனே என்று இரங்குவார் 'துன்பத்தின்றும் விள்ளகிலேன்' என்றார். விள்ளகிலேன் என்பது விள்ளக்கிலேன் என எதுகைநோக்கி மிகுந்தது.

மேலும், நீரை உண்பதால் வறட்சி நீக்கம் முதற்பயன். உடல் குளிர்தல் அடுத்த பயன். வெள்ளத்துள் அகப்பட்டும் வினைக்குறையுடையான் முதற்பயனையே எய்தமாட்டாது எய்த்தாற்போல, அருட்பேற்றால் ஆகும் முதற்பயன் துன்பநீக்கம். முடிந்த பயன் பேரின்பப்பேறு. இவ்விரண்டனுள் யானும் முதற்பயனையே பெற்றிலேன் என்று வருந்தியவாறும்.

உயிர்கள் என்றுமே சுதந்திரமற்றன ஆதலின் எனக்கு அருளை அளித்த தேவரீர், அவ்வருளால் துன்பத்தினீங்கும் அறிவையும் ஆற்றலையும் அளியாமையால் 'அருள் பெற்றுத் துன்பத்தின்றும் விள்ளக்கிலேன்' என்றார். "காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக்காலே" "உணருமா உணரே" "செய்யுமா செய்யே" "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்ற பகுதிகளை ஈண்டு இணைத்து எண்ணுக. கில்: ஆற்றல் பொருளைத் தருவதோர் இடைச்சொல். இதனால் துன்பந்துடையாதது என் தவறன்று என்று விண்ணப்பித்து, விடலாகாது என்று வற்புறுத்துகிறார்.

இறைவன் என்னிடம் நீ வேண்டுவதுதான் என்னை எனின் அதற்கு விடையாகத் தான் வேண்டுவது 'களியாத களி அருளாய்' என்கிறார். களி - மகிழ்ச்சி.

களி - இன்பந்துய்த்த உயிரின் மன நிறைவு. ஐம்பொறிகளானும் ஐம்புலன்களையும் துய்த்து இன்பமெய்திய உயிர் எய்தும் நிறைவே களிப்பு எனப்படுவது. இந்தக் களிப்பு கால எல்லையுள் அழிவதாய்ச் சிற்றின்பவினைவானது. வாயில்களான் வரும் இதனை விரும்பாது, களியாத களியை வேண்டுகின்றார் அடிகள். வாயில்லாக் குடத்தினுள் நீர் நிறைந்தாற்போல.

பொறி புலன்கள் வாயிலாக அன்றி நேரே உயிரினிடமாக நிறையும் நிறைவே களியாத களி. பூண்டவைம்புலனிற் புலப் படா இன்பம் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்க வரும் களியே களியாத களி. மேலும், "இந்துவாழ் சடையான் ஆடும் எல்லையில் தனிப்பெருங் கூத்தில், வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" என்றதுபோலப் பேரின்பத்தில் அனவரதமும் திளைப்பதால் உண்டான மாறில்லாத மகிழ்ச்சியே களியாத களி. அதனை வேண்டுகின்றார் அடிகளார்.

**119** *களிவந்த சிந்தையொ டுன்கழல்*
*கண்டுங் கலந்தருள*
*வெளிவந்தி லேனை விடுதிகண்*
*டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்*
*ஒளிவந்த பூங்கழ லுத்தர*
*கோசமங் கைக்கரசே*
*எளிவந்த வெந்தைபி ரானென்னை*
*யாளுடை யென்னப்பனே.* **15**

இ - ள் : மெய்ம்மையான ஒளிப்பொருள்கள் அனைத்திற்கும் ஒளி வருதற்கு ஏதுவாகிய பொலிவுபெற்ற திருவடியினை யுடைய உத்தரகோசமங்கைக்கு அரசே! அடியேனுக்கு எளி வந்து இரங்கிய, என் தந்தைக்கும் தலைவனே! என்னை ஆளாக உடைய என் தந்தையே! மகிழ்ச்சி மிக்க மனத்தோடு உன் திருவடிகளைத் தரிசிக்கப்பெற்றும், நீ என்னுடன் கலந்து ஒன்றாய் விளங்கியருள, பாச பந்தங்களின் பிணிப்பினின்றும் வெளிவராத என்னை விட்டுவிடுவாயோ? விடாதே என்றவாறு.

இத்திருப்பாட்டில், அறிவால் சிவமேயான அடிகளார், திருவடியைக் காணப்பெற்றும், இறைவனோடு ஒன்றுந்தன்மையில் விளையும் இன்பத்தைப் பெறப் பாசங்களினின்றும் வெளி வந்திலேனே அதனால் என்னை விட்டிடாதே என விண்ணப்பிக்கின்றார்.

இயல்பாகவே ஒளிபடைத்த பொருள்களாகிய சோம சூரிய அக்கினியாகிய மூன்றும், இவை ஒவ்வொரு அண்டங்களிலும் ஒளி செய்வனவாகப் பலவாகியுள்ளன. இவைகள் எல்லாவற்றிற்கும் ஒளி தருவன இறைவனுடைய திருவடிகள் ஆதலின் 'மெய்ச்சுடருக்கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்' என்றார். அங்கியில் சூடும், ஞாயிற்றில் ஒளியும், திங்களில் தண்மையும் சூடும்

வைத்தோன் இறைவன் ஆயினும் கழல்கள் தந்தன என்றது முதலுக்கும் சினைக்குமுள்ள ஒற்றுமைநயம்பற்றி என்க.

இறைவனுருவே ஒளியான திருமேனி. "ஒங்கொளியாய் அருண்ஞான மூர்த்தியாகி" எனவரும் சிவப்பிரகாசம் பரசிவ வணக்கப் பாடற்பகுதிக்கு உரைவகுத்த மதுரைச் சிவப்பிர காசர் இத்திருப்பாட்டையே மேற்கோளாகக் காட்டுதல்காண்க. ஐயாறன் அடித்தலம் சோதியும் செஞ்சுடர் ஞாயிறும் தூமதியும் ஒப்பனஎன்ற திருநாவுக்கரசர் திருவுள்ளமும் எண்ணத்தக்கது. வந்த - வருதற்குக் காரணமான கழல் என்னின் காரணப் பொருளில்வந்த செய்த என்னும் பெயரெச்சம்.

—அத்தகைய ஒளியான திருவடி எம்போலியரால் அடைதற்கு அரியது எனத் தெரிந்தும், எளியேன்மீது வைத்த கருணையால் பூனைக்குட்டியைத் தன் வாயால் தூக்கிச்சென்றே காப்பது போலத் தாமே வலிய எழுந்தருளிவந்து அருளிய எளிமையை 'எளிவந்த எந்தைபிரான்' என்ற தொடரால் குறிப்பித்தார்.

எம்+தந்தை=எந்தையென மருவிற்று. எம் தந்தைக்குத் தலைவனே. பிரான் - வள்ளன்மையுடையவனே! எம்தந்தையா யிருந்தும் எமக்குத் தலைவனுமாயிருந்து தண்டித்துத் திருத்து வானென்பார் ' எந்தை பிரான் ' என்றார்.

என்னப்பனே என முறை பாராட்டி இறையை விளித்த வாறு. என் தந்தையாக இருந்தும் என்னை ஆளாகவும் உடையவன் நீ என்பார் 'என்னையாளுடை என்னப்பனே' என்றார். ஆளாக ஏற்றுக்கொண்டாலும், சிவனடிமை என்று எப்போதும் புத்தி பண்ணவேண்டியவன் நான். நீர் தந்தை யாக வாத்சல்யமாகிற புத்திரவாஞ்சை காட்டி ஆதரிக்கவேண்டு மென்பார் 'என்னையாளுடை என்னப்பனே' என்றார்.

களி வந்த சிந்தை - இறைவன் கருணை புரிந்தமையால் வற்றாத மகிழ்ச்சி நிறைந்த மனம். உன்னருளே கண்ணாக - உன் தாளைத் தரிசித்தும் என்பார் 'களி வந்த சிந்தையொடு உன் கழல் கண்டும்' என்றார்.

கலந்து அருள்: நீ என்னுடன் ஒன்றாகக்கலந்து என் கருவி கரணங்களை எல்லாம் சிவகரணமாக அருளிச்செய்ய.

வெளிவந்திலேனை: தீவழிச் செல்லும் துணைவர்களுடன் சேர்ந்து புறம்பே திரியும் மகன், தடுத்து நல்வழிப்படுத்தும்

தந்தையைக் கண்டவழித் துணைவர்கூட்டத்தை விட்டுப்பிரிந்து வருவதுபோல உலகியற் பாசங்களில் கட்டுண்டு, பாசமாய் அத னுள் அகப்பட்டுத் தவிக்கும் நான் கழல்கண்டதும் பாசத்தை விட்டுப் பதியின் கழலைச் சாராதவன் ஆயினேன்; அதற்காக அடியேனை விட்டிடுதி கண்டாய் என்றதாம்.

இங்ஙனம் அன்றிக் 'கலந்தருள' என்பதற்கு, பாசத்தை என்னின் வேறாகக்கண்டு இறையருளில் வேறறத்தோய என வும், கலந்தருளுதற்கு உரிய ஞானவொளியில் போந்திலேன் எனவும் கூறுவாரும் உளர்.

120 என்னையப் பாவஞ்ச லென்பவ
ரின்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண்
டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன் னும் உத்தர
கோசமங் கைக்கரசே
அன்னையொப் பாயெனக் கத்தனொப்
பாயென் னரும்பொருளே. 16

இ - ள் : நிலைபேறுடைய உத்தரகோசமங்கைக்குத் தலை வனே! மெய்ம்மையாகவே நினக்கு ஒப்புக்கூறத் தொடங்கின், நின்னையே நீ ஒப்பாய்; எனக்குத் தாய் ஒப்பாய்; தந்தை ஒப்பாய்; எனது பெறுதற்கரிய பொருளாக உள்ளவனே! 'அப்பா! அஞ்சாதே' என்று என்னை நோக்கிச் சொல்பவர்கள் யாருமில்லாமையால் தனியே நின்று இளைத்து அலைந்தேன்; மின்னலை ஒப்பவனே! என்னை இந்நிலையில் விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகள், அடைக்கலம் அளிப்பவர்கள் யாருமின்மையால் யான் மிகமிக இளைத்தேன் ஆகையால் நீ என்னை விடாதே; ஆட்கொள் என விண்ணப்பிக்கின்றார்.

மின்னை ஒப்பாய் அன்னை ஒப்பாய் என்று சொல்லிவந்த அடிகளார் இறைவனுக்கு உவமானமாகச் சொல்லப்படும் பொருள்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருதன்மையே விளங்கக் கண்டமையின் எல்லாக்குணங்களும் ஒருங்கு நிறைந்துள்ள பொருள் வேறொன்றுமின்மையின் மிகமிகத் தேர்ந்து நோக்கிய போது, நீயே நினக்கு ஒப்பாய் என்பது துணியப்படுதலின் இங்ஙனம் கூறினார். உலகில் உவமை கூறும் புலவர்பெருமக்கள்

"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" என்ற மரபுபற்றி உயர்ந்த பொருளையே ஒன்றற்கு உவமை கூறுவர். சில இடங்களில் 'இழிந்தவாயினும் கடிவரை யிலவே' என்பதனாலும் உயர்ந்ததை இழிந்ததற்கு உவமித்தலுமுண்டு. இறைவனைவிட உயர்ந்த ஒரு பொருள் யாண்டும் இன்மையானும் இழிந்த பொருளுக்கு எள்ளளவும் ஒப்பாக உரைக்க முடியாமையானும் தானே உவமை தனக்கு என்புழிப்போல உரைத்தனர் எனலுமாம். அப்பர்சுவாமிகளும் "நின்னுவார் பிறரின்றி நீயே ஆனாய்" "ஓர் உவமனில்லி" என்றெல்லாம் உரைத்திருப்பதையும் ஈண்டு இணைத்து எண்ணுக.

'அன்னை ஒப்பாய்' என்றது 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க. 'அத்தன் ஒப்பாய்' என்றது தீயகுணம் போக்கி நல்லறிவு புகட்டிச் சான்றோன் ஆக்குதலானும் இம்மை மறுமைக்கு வேண்டுவனவெல்லாம் சேம வைப்பாக வைத்து உதவுதலானும் என்க.

'அரும் பொருளே' என்றது தானாகக் கிடைத்தாலல்லது தேடிப் பெறமாட்டாப் பொருளானமையின் என்க. 'அப்பா' என்பது பெரிய விபத்தில் சிக்கிய ஒருவர் காக்கவல்ல கருணை வள்ளலாய் இருப்பவரை அழைக்கக் கூறும் அன்புரை.

எய்த்து அலைந்தேன் என்பதனை அலைந்து எய்த்தேன் என விகுதி பிரித்துக்கூட்டி அலைதலால் இளைத்தேனெனப் பொருள் கொள்க. 'மின்னை ஒப்பாய்' என்றது தன்னைக்காட்டி மறையும் மின்னலைப்போல இறைவனும் தன்னைக்காட்டி மறைந்த நிலை நோக்கி என்க. விட்டிடுதி கண்டாய் என்பதில் கண்டாய் முன்னிலையசை.

*121* *பொருளே தமியேன் புகலிட*
*மேநின் புகழிகழ்வார்*
*வெருளே யெனைவிட் டிடுதிகண்*
*டாய்மெய்மை யார்விழுங்கும்*
*அருளே யணிபொழி லுத்தர*
*கோசமங் கைக்கரசே*
*இருளே வெளியே யிகபர*
*மாகி யிருந்தவனே.* *17*

இ - ள் : மெய்ப்பொருளாக உள்ளவனே! தனியனாகிய எனக்கு அடைக்கலத்தானமாக இருப்பவனே! உண்மையான

உன் புகழை இகழ்ந்து உரைப்பவருக்கு அஞ்சத்தக்க பொருளாக இருப்பவனே! உண்மை அடியார்களுக்கு விழுங்கக் கிடைத்த அருளமுதத்தை ஒத்தவனே! அழகிய சோலைகள் சூழ்ந்த உத்தரகோசமங்கைக்கு அரசே! நின் அருளுக்குப் புறம்பான மாயைத் தொடர்புடைய மக்களுக்கு இருளாக இருப்பவனே! சிவஞானத்துணை கொண்டு அகமுகமாக நோக்குவார்க்கு வெளியாய் விளங்குபவனே! இம்மையும் மறுமையுமாக இருந்த பெருமானே! அடியேனை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், தமக்கு அடைக்கலமாக அடைதற்குரிய இடம் இறைவனே எனத் துணிந்து, என்னை விட்டுவிடாதே என விண்ணப்பிக்கின்றார்.

பொருள் - மெய்ப்பொருள்; என்றது சிவஞானத்தால் அறியப்படும் செம்பொருள் என்றவாறு.

என்னை அஞ்சாதே என்று ஆதரிப்பார் யாருமின்மையால் தனித்தவனுமினேன்; என் நிலைகண்டு இரங்கி அடியேனுக்கு அடைக்கலத்தானமாக ஆயினீர் என்பதை விளக்கத் 'தமியேன் புகலிடமே' என்றார். இறைவனுடைய புகழைத் திருவள்ளுவர் "பொருள்சேர் புகழ்" என்பார். அத்தகைய புகழை விரும்புவது உயிரின் கடமையாயிருக்க விரும்பாமை மட்டுமேயன்றி, இகழவும் செய்யுமாயின் அவ்வுயிர்க்கு இறைவன் அஞ்சத்தக்க பொருளாவார் என்பதனை விளக்க 'நின் புகழ் இகழ்வார் வெருவே' என்றார்.

உண்ணும் உணவு அமுதமேயாயினும், பசிக்கொடுமை உள்ள அளவு அதனை மக்கள்விரும்பியுண்பர். அது அளவிற்கு மிகுமாயின் தேவையை முன்னிட்டு விழுங்கிவைப்பர். அது போல உண்மையடியார்கள் சிவகருணை தம்மிடம் தேக்கெறிய நிற்றலின் விழுங்குகின்றார்கள் என்பார் 'மெய்மையார் விழுங்கும் அருளே' என்று அழைக்கின்றார்.

"புறச்சமயத்தவர்க்கு இருளாய்" இறைவன் இருத்தலின் இருளே என்றார். இருள் பொருள்புலப்படுத்தாமைமட்டுமன்றி, தன்னையும் புலப்படுத்தாது. அதுபோல இறைவனும் தன்னையும் தன்னை அடைவதற்கு உரிய உபாயத்தையும் உணர்த்தாமையின் 'இருளே' என்றார்.

வெளி - ஆகாயம். மறைப்பின்றி பரந்துபட்டதாய் அறிவு உருவாய் ஒளிமயமாய் இருத்தலின் 'வெளியே' என்றார். வெளி- பரவெளியாகிய சிதாகாசம்.

இறைவன் இம்மை இன்பமும் மறுமை இன்பமுமாக இருக்கின்றான். அவ்வின்பங்களும் அவன் வடிவாகி நிலைபெற்று விளங்குகின்றன என்பதுணர்த்த 'இகபரமாகி இருந்தவனே' என்றார். அவன் இகசுகமாக இருப்பது உயிர்கள் வினைக்கண் அழுந்திப் போகத்தை நுகர்ந்து வினைகளை வீட்ட. பரசுகமாக இருப்பது பேரின்பத்திருத்த என்க.

அடிகளார்நிலையில் இறைவன் இகமாக இருந்தமை ஞானாசாரியனாக வந்து திருவடிக்கு அன்புண்டாக்கினமை. பரமாக இருந்தது அந்தமிலின்பத்து அழிவில்வீடு அடையச்செய்வது. இவ்விரண்டினையும் ஒருசேர உதவுபவன் ஆதலின் இகபரமாய் இருந்தவன் என்றார் எனினுமாம்.

122 இருந்தென்னை யாண்டுகொள் விற்றுக்கொள்
ஒற்றிவை யென்னினல்லால்
விருந்தின னேனை விடுதிகண்
டாய்மிக்க நஞ்சமுதா
அருந்தின னேமன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப்
பட்டு மடங்கினர்க்கே. 18

இ - ள் : மிகுந்த விடத்தை அமுதாக அருந்தியவனே! நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கு அரசே! பிறவியாகிற பிணியின்பாற்பட்டு முடங்கிய உயிர்களுக்கு மருந்தாகவுள்ளவனே! என் மனத்தே எழுந்தருளியிருந்து, அடியேனை ஆண்டு கொள்; அல்லது விற்றுக்கொள்; ஒற்றியாகவை என்று சொல்லுவது அல்லாமல் புதுமையான என்னை விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியேனுக்குப் புகலிடமான நீ என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்; கைவிடல் மட்டும் ஆகாது என விண்ணப்பிக்கின்றார் அடிகளார்.

மிக்க நஞ்சு - அளவாலும், கொடுமையாலும் மிக்க நஞ்சு. இது தேவர்களும் அசுரர்களும் வாசுகியைக் கடைகயிறாகக்

கொண்டு பாற்கடலைக் கடைந்தகாலத்து வாசுகி கக்கிய ஆல காலம் என்னும் நஞ்சு. இதனை இறைவன் அமுதமாக உண்டு தேவர்களைக் காத்தார். இவ்வரலாற்றை அடக்கியே 'நஞ்சமுதா அருந்தினனே' என்றார். நஞ்சு குடிப்பார் மிக வெறுப்போடு அஞ்சிக் குடிப்பார். அமுதருந்துவார் விரும்பி ஆர்வத்தோடு குடிப்பர். இறைவன் நஞ்சை விரும்பி ஆர்வத்தோடு அருந் தினார் என்பார் 'அமுதா அருந்தினனே' என்றார். இது இறைவ னுடைய அழியாத் தன்மையையும் பேரருளாற்றலையும் நமக்கு அறிவிப்பதாகும்.

வாத பித்த சிலேட்டுமங்களாக உடலைப் பிணித்து நிற்பது ஆகுபெயராகப் பிணியெனப்பட்டதுபோல, மலமாயை கன்மங் களால் உயிரைப் பிணித்து இருப்பதாகிய பிறவியும் பிணி எனப்பட்டது. உடற்பிணி உடலைச் செயற்படாதவாறு தடுப் பதுபோலப் பிறவிப்பிணி ஆன்மாவின் அறிவாற்றலைத் தடுப் பது ஆகலின் 'பிறவிப் பிணிப்பட்டு மடங்கினர்க்கு' என்றார். மடங்குதல் - வாதரோகத்தால் கை கால்கள் வளைந்து செயற் படாதவாறுபோலப் பிறவியில் ஆன்ம வியாபகம் எடுத்த தேகத்தினளவாகக் குறைதல். மருந்தினனே - மருந்துபோல் பவனே. "மருந்துமாகித் தீராத வல்வினைநோய் தீர்த்தருளவல் லானறன்னை" எனத் திருத்தாண்டகத்தும் இறைவன் மருந்தா யும் மருந்தினனாயும் இருத்தல் உணர்த்தப்பெற்றமை உணர்க. மருந்தினன் - மருந்தானவன், மருந்தையுடையவன் என இரு வகையாகவும் பொருள் அமைய இருத்தல் காண்க.

இருத்தல் - என்னுயிர்க்குயிராகக் கலந்திருத்தல். அவ்வண் ணம் கலந்த பிறகு என்னை ஆளுதல் ஒற்றிவைத்தல் விற்றல் ஆகிய மூன்றனுள் எதனையும் செய். என்னுள்ளத்து இருந்த பின் நீ எதுசெய்யினும் அது உன்னையும் பந்திக்கும் என்பது மட்டும் திருமுன்னர்த் தெரிவித்துக் கொள்கிறேன்; மணிவிற் றால் மணியினுட் சோதியும் விற்கப்பட்டதாதல்போல, என்னை விற்றும் ஒற்றிவைத்தும் ஆண்டுகொண்டாலும் இம்மூத்திறச் செயல்களினும் நீரும் தொடக்குண்டீர் என்றவாறும். உடைய வன் எண்ணம் போன்றது உடைமை. ஆகவே எது வேண்டு மாயினும் செய் என்று விண்ணப்பித்துக் கொள்வதல்லது வேறொன்றும் எனக்குத் தெரியாது.

உடன்சென்ற மெய்யடியார்கள் பழவடியார்கள்; ஆகவே பிற்பட்டொழிந்த இவர் புத்தடியார் ஆயினேன் என்பார் விருந் தினனேனை என்றார்.

ஆனந்தமாலையுள் 'பன்னுளுன்னைப் பணிந்தேத்தும் பழைய அடியாரொடும் கூடாது' என மெய்யடியாரைப் பழவடியார் என்றும், 'புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ' எனத் தம்மைப் புது அடியார் என்றும் கூறுதல் காண்க.

123 மடங்கவென் வல்வினைக் காட்டைநின்
மன்னருட் டீக்கொளுவும்
விடங்கவென் றன்னை விடுதிகண்
டாயென் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொ ளுத்தர
கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித்
தாய்வஞ்சிக் கொம்பினையே. 19

இ - ள் : உத்தரகோசமங்கைக்கு அரசே! கொடிய யானையாகிய மலையை உரித்து, வஞ்சிக்கொம்புபோலும் உமாதேவியை அஞ்சச்செய்தவனே! அடியேனது வலிய வினையாகிற காட்டை அழியும்வண்ணம் நின் நிலைபெற்ற அருளாகிய தீயையிட்டுக் கொளுத்தும் ஆண்மையிற் சிறந்தவனே! என்னை விட்டுவிடுவாயோ? எனது பிறவியை வேரொடுங்களைந்து வீட்டின்பத்திருத்தி ஆண்டுகொள்வாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் வினைக்காட்டை அருட்டீயால் அழிக்கும் ஆற்றலுடைய தேவரீர் என் பிறவியை வேரறுக்க வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றார்.

குன்றுபோற் கொடிய யானை என்றது உவமை. கொடுங்கரிக்குன்று என்றது உருவகம். மலைபோல உருவுடையதாய் மிகக் கொடியதான யானை என்பார் இங்ஙனம் கூறினார் என்க. கொடுங்கரிக்குன்று எனச் சொல் கிடந்த முறையில் உருவகமாகக் கொண்டு பொருள் காணும்போது, குன்றினும் தோல் உரிக்கும் இறைவன் ஆற்றல் வெளிப்பட்டு, அடிகள் கூறும் "வருங்குன்றம் ஒன்றுரித்தோன்" என்னும் திருக்கோவையாரொடு முழுதும் ஒத்திருத்தலும், 'கன்றுருரித்தென்ன' என்னும் தெள்ளேணப் பகுதியை நினைவூட்டுதலும் கண்டு நயமுணர்க.

வஞ்சி - ஒருவகைக்கொடி. வஞ்சிக்கொம்பு - கொடியின் கொம்புபோலும் இளைத்த உடலையுடைய உமாதேவி. வஞ்சிக் கொம்பு : ஆரும்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அணியுள் உருவக அணி. தமிழ்மறையுள்

பலவிடங்களில் யானையுரித்த வரலாறு பாராட்டப்படும்போ தெல்லாம் மலையான்மகள் வெருவுதலும் இணைத்துச்சொல்லப் பெறுதல் காண்க.

காட்டை அழிக்கவேண்டியவர்கள் தீயிட்டுக் கொளுத்துதல் மரபு. அதுபோல என் வினைக்காட்டை அடியோடு அழிக்க அருளாகிற தீயையிட்டுக் கொளுத்து என வேண்டிக்கொள் கின்றார். மடங்க - அழிய. வல்வினை என்றார் மானைக்கண்ட வுடன் உறுமும் பசித்த புலிபோல யான் பல பிறவிகளில் ஈட்டிய வினைகள் பரிபாகப்பட்டுத் தம் பயனை ஊட்ட முனைந்து நிற்ப தால். வினைகள் எல்லையில்லாதன ஆதலின் காடு என்றார். காட்டில் நுழைந்தார் வழி தெரியாது சுற்றிச்சுற்றி அதனுள் அகப்பட்டுத் தவித்தல்போல, வினைவயப்பட்டாரும் அதனுள் சிக்கி வெளிப்பட இயலாது வருந்துவர் என்ற நயந்தோன்ற நிற்றல் காண்க.

நின் மன் அருள் - நினது நிலைபெற்ற அருள். பாடவேளை யில் மாணிக்கம் பளபளப்பதுபோல என் பரிபாகவேளையில் நின்னருட்சுடர் என்மீது விழும். வினைக்காடு அழியும். என் பரிபாகம் மாறியபோது மீட்டும் நின்னருளை யான் அறியகி லாது தடுமாறுவேன். அங்ஙனமாகாது என்றும் நின்னருளை என்மீது செலுத்தவேண்டும் என்பார் 'நின் மன் அருள்' என்றார்.

அருளைத் தீயாக உருவகித்தது. தீயும் அதன் தெறலும் போலச் சிவமும் சத்தியும் ஆதலின் ஒற்றுமை நயம்பற்றி அருளையே தீ என்றார். மேலும் ஆகாமிய சஞ்சித வினைகளை அடியோடு ஒழித்தலானும், பிராரத்த வினையின் வலியைக் குறைத்தலானும் அருளைத் தீயாகக் கூறினார் எனலும் ஆம்.

விடங்கம் - ஆண்மை. விடங்கன் ஆண்மை உடையவன். பிங்கலந்தை சூத்திரமும் காண்க. வெவ்வினையை வேரறுக்க வன்மையிருந்தும் என்னை விடுதலாகாது என்பார் 'விட்டிடுதி கண்டாய்' என்றார்.

கொடிய மரத்தை வேரொடும் களையாது மேல் வளரும் பகுதியைமட்டும் வெட்டின் மீளவும் வளரும். அதுபோல எடுத்த பிறவியைக் கெடுக்கின் அடுத்துவரும் பிறவி உளதாம். ஆகவே வேரொடுங்களைய வேண்டுகின்றார்.

பிறவிக்கு வேர் வினை. வினைக்கு வேர் அவா. இதுவே மூல கன்மம் எனப்படும். காரண காரிய ஒற்றுமைபற்றி வள்ளுவர் "அவா என்ப எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும், தவாஅப் பிறப் பீனும் வித்து" என்றார். ஆகவே அவா உண்டாகாதவாறு பற்றற்றானாகிய நின்னையே பற்றிநிற்கச் செய்வாயாயின் வினை ஏறாது; வினை குறைந்து ஒழியவே பிறவியறும் என்பார் 'பிறவியை வேரொடும் களைந்து ஆண்டுகொள்' என்றார். களைதல் - நோய்நீக்கம் போல்வது. நோய் நீங்கிய பின்பு உடல் உறுதிபெற்று வளரச் சத்தான உணவும் அளித்தல்போலப் பிறவிவேரைக் களைந்ததுடன் நில்லாது நிலைத்த இன்பத்தில் இருக்கச் செய்தலாகிய ஆண்டுகொண்டருளவும் வேண்டும் என விண்ணப்பிக்கிறார்.

*124* *கொம்பரில் லாக்கொடி போலல*
*மந்தனன் கோமளமே*
*வெம்புகின் றேனை விடுதிகண்*
*டாய்விண்ணர் நண்ணுகில்லா*
*உம்பருள் ளாய்மன்னும் உத்தர*
*கோசமங் கைக்கரசே*
*அம்பர மேநில னேயனல்*
*காலொடப் பானவனே.* *20*

இ - ள்: தேவர்களும் அணுக இயலாத மேலாய சிவ லோகத்து இருப்பவனே! உத்தரகோசமங்கைக்கு அரசே! ஆகாயம் நிலன் அனல் காற்று தண்ணீர் ஆகிய ஐம்பூதங் களும் ஆனவனே! அழகிய பொருளே! கொழுகொம்பில்லாத கொடியைப்போல யான் வருந்தினேன்; வெதும்புகின்றேன்; என்னை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், கொழுகொம்பு இல்லாக் கொடிபோல யான் வருந்துகின்றேன்; வெதும்புகின்றேன். ஆதலால் அடியேனை விடுதல் கூடாது என விண்ணப்பிக்கின்றார்.

இந்திரன் முதலிய தேவர்கள் தாம்தாம்செய்த பசுபுண்ணிய விசேடத்தால் இந்திரபதவி முதலியவற்றில் இருப்பவர்கள்; நல் வினை குறைந்ததும் கன்மபூமியாகிய இம்மண்ணுக்கு வரவேண் டியவர்களே; ஆதலால் அவர்களும் நம்மைப்போல மூன்று மலங்களாலும் கட்டுண்டவர்களே; அவர்களால் சிவலோகம் அடைய முடியாத ஒன்று என்பார் 'விண்ணர் நண்ணுகில்லா உம்பர்' என்றார். உம்பர் - மேலுலகமாகிய சிவலோகம்.

இறைவன் மண் புனல் அனல் கால் விண் ஆகிய ஐம்பூதங்களாயும் இருப்பான் என்பார் அம்பரம் முதலாகக் கூறினர். பூதங்களின் தோற்றமுறையில் அம்பரமே என்று தொடங்கிய அடிகள், செய்யுள் ஓசைநோக்கி முறைபிறழ அமைத்துள்ளார். அதிலும் அம்பரமே நிலனே என ஆதியும் அந்தமும் அறிவித்துப் பின்வரும் பூதங்கள் இதனிடைப்பட்டனவாய் அனைத்தையும் தன்னகத்தடக்கி விரிந்து நிற்பது ஆகாயமே என்பார் 'அம்பரமே' என அதனை முற்கூறினர்.

'கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன்' என்பது பழமொழியை நினைவூட்டுவது. கொம்பர்: இறுதிப்போலி. கொம்பரில்லாக் கோமளக் கொடிபோல் அலமந்தனன் என்று கூட்டிப் பொருள் காண்பாரும் உளர். சொற்கிடக்கையை ஒட்டிக் கோமளமே என்பதற்கு அழகிய மெல்லிய பொருள்கள் அனைத்திற்கும் மிக மேலாக மென்மையும் அழகையும் படைத்தவனே என்று இறைவனுக்கே ஆக்குதலும் ஒன்று.

உலகில் வருந்துவார், வெயிலில் விழுந்த புழுப்போலத் துடிக்கின்றேன்; அப்பா! காப்பாற்றுவாய் என்று இரங்குதல் போலக் கூறியதென் அமைதிகாண்க. 'கோமளக்கொடி' என்று இயைப்பின் ஏகாரத்தைச் சாரியையாகக் கொள்ளல்வேண்டும். அரசே! அப்பு ஆனவனே! உள்ளாய் என்பன போல அதனையும் இறைவனைக் குறிக்கும் விளிப்பெயராகக் கூறுதலே சாலச் சிறப்புடைத்தென்க.

125 ஆனைவெம் போரிற் குறுந்தூ
றெனப்புல னலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண்
டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை
யும்மமு தத்தையுமொத்
தூனையு மென்பினை யும்முருக்
காநின்ற வொண்மையனே. 21

இ - ள்: வினைகளை உடையேனாகிய என் மனத்து, தேனையும், பாலையும், கருப்பஞ்சாற்றையும், அமுதத்தையும் போல இனித்து என் உடம்பின் ஊனையும் என்பையும் உருக்கும் ஞான வடிவினனே! யானைகளின் கொடிய போரில் இடையில் அகப்பட்டுக்கொண்ட சிறு புதரைப்போல, ஐம்புலனாலும் அலைக்கப்பெற்ற என்னை விட்டுவிடுவாயோ? விடாதே காத்தருள் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், அடியேனை என் ஐம்புலன்களே அலைக்கின்றன; அதனால் அடியேன் வாடுகின்றேன்; இந்நிலையில் தேவரீரும் விடலாகாது என்று விண்ணப்பிக்கின்றார்.

பித்தம் மிகுந்தவன் எச்சுவையை உண்ணினும் அவன் நா அச்சுவையைக் கசப்பாகவே அனுபவிப்பதுபோல நான் வினை நோய் கொண்டவனாய் ஒரு சுவையும் தோன்றாது இருந்தேன். அத்தன்மையை மாற்றி, எனக்குத் தேன் முதலிய பொருளாய் என் மனத்துள் புகுந்து இனித்தாய்; ஞானவடிவாய் இருந்து ஊனினை உருக்கினாய்; என்பினை நெக்கு நெக்குருகச் செய்தாய்; அங்ஙனம் பேரருள் செய்த நீ ஐம்புலக் களிறுகள் தம்முள் மோதிக்கொண்டு என்னை மிதித்துத் துவைக்கின்றனவே; அதனின்று காத்து நிலைத்த இன்பம் அருளுவது உன்னால் முடியாத காரியமா? திருவுள்ளம் இரங்கிக் காத்தருள்க என்று வேண்டியவாறாம்.

ஒண்மை - ஞானம். நோய் தணிய மருந்து உண்பவர்கள் மருந்தைத் தேனில் குழைத்து உண்பார்கள். தேன் பித்தந் தணிக்கும் மருந்துமாகும். ஆதலால் அதனை முற்கூறினார். தேன் முதலிய அனைத்தும் இனிமைப் பொருளாயினும் ஒவ்வொன்றின் தன்மையும் பயனும் வேறுதல் முன்னரே காட்டப் பெற்றது.

இத்தகைய இனிப்பாக இறைவனை உயிர் நுகர்வது முத்திக் காலத்து. "கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பன் அந்த முத்தியினில் கலந்தே" என்னும் சிவஞான சித்தியாரினும் இக்கருத்து மிளிர்தல் காண்க. இதனால் அடிகள் தம்மை வினையேன் என்றாராயினும், அவ்வினை பரிபாகமுற்ற பிராரத்த கன்ம சேடமாய், உடற்கழிவை எதிர்நோக்கி ஒழிய நிற்கிறது என்பதும், அடிகளார் சீவன்முத்தநிலையில் இருக்கின்றார்கள் என்பதும் அறியப்பெறும். அந்நிலையிலும் ஐம்புலக் களிறுகள் அலைக்கின்றன என்றது. வாசனையாகத் தாக்குதலையும் ஆற்றகிலாது உரைத்தார் என்று உணர்க.

சிவனிடமிருந்து பெறும் ஆனந்தம் உவமையளவையானும் உரைக்க முடியாததாய், உணர்ந்தார்க்கும் உணர்வரியதாய் இருப்பதாயினும், உலகவர்க்கு உணர்த்த தேன் முதலியவற்றைக் காட்டிய அவ்வளவேயாம்.

'ஆனைப் போரில் குறுந்தூறு' என்பது ஓர் உலகப் பழமொழி. புலன்கள் ஒன்றுசென்றவழி ஒன்று செல்லாமல் தத்தம்

நுகர்ச்சியே பெரிது என்று தம்முள் மோதிக்கொள்கின்றன; அவற்றைக் கருவியாகவைத்துப் படைக்கின்ற யான், யானைச் சண்டையிலகப்பட்ட புதர்போல நசுக்குறுகின்றேன் என்றார்.

126 ஒண்மைய னேதிரு நீற்றையுத்
தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண்
டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென் றுஞ் சேயாய்
பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை யாண்மைய
னேயலிப் பெற்றியனே. 22

இ - ள்: மெய்த்தொண்டர்களுக்கு மிக அணுமையில் உள்ளவனே! அல்லாத பிறர்க்கு என்றைக்கும் தூரத்தில் இருப்பவனே! பழமை அறிதற்கியலாத ஆண்மை பெண்மை அலித்தன்மை இவற்றை உடையவனே! ஞானவடிவினனே! திருநீற்றை உத்தூளனமாகப் பூசியதால் ஒளியோடு விளங்கும் வெண்மை நிறமுடையவனே! என்னை விடுவாயோ? விடாதே அருள் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், இறைவனை நோக்கி, நின் சிறப்பியல்புகள் பலவற்றையும் உணர்ந்து போற்றுகின்றேன்; ஆகையால் என்னை விடாதே கொள் என்று விண்ணப்பிக்கின்றார்.

மெய்யடியார் சிவவேடந்தாங்கித் தவ ஒழுக்கம் பூண்டு நாயகன் சேவடி தைவரு சிந்தையராக விளங்குபவர். அவர்களுக்கு இறைவன் என்றும் அண்மையில் உள்ளவன்.

பிறர் - அவரல்லாத உலகவர். அவர்கள் தன்மை ஒரு வரையறைக்குட்பட்டது அன்மையானும், கூறத்தகாமையானும் பல தன்மையதானமையானும் அடியாரல்லாதாரைப் பிறர் என்று உய்த்துணரவைத்தார். அவர்கட்குச் சேய்மையிலுள்ளவனே என்றார். முன்னும் 'புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க' என்றதும் காண்க.

இறைவன் உருக்கொள்ளுதல் உயிர்கள் தத்தம் பரிபாக நிலைக்கு ஏற்ப வழிபட்டு வீடு பெறுவதற்காகவும் பஞ்சகிருத்தியம் புரியவுமாம். அவ்வுருவம் அவர் தாமே விரும்பி மேற்கொண்டதன்றி எம்போலியர்க்குப் போல வினை வயத்தான்

வந்ததன்று. ஆதலால், அவன் கொண்ட உருவின் பழமை அறிய முடியாத ஒன்றுமிற்று. ஆண், பெண், அலி, உரு. ஆண்மை, பெண்மை, அலித்தன்மை, உருவின் தன்மை. பொருளுக்கும் பொருள்தன்மைக்கும் வேறுபாடு. பொருளுக்குத் தோற்றமும் அழிவும் உண்டு; அதனால் அது காலத்தொடு பிணைந்து பழமையும் புதுமையும் கணிக்கப்படும். பொருள் தன்மை என்றும் நித்தியமானது; அதற்குக் கால எல்லையே இல்லை; ஆதலால், இறைவனைத் தன்மையை உடையவனாகக் கூறினர்.

உயிர்கள் ஒரு பிறவியில் ஒரு தன்மையுடன் ஆணாகவோ பெண்ணாகவோ அலியாகவோ பிறக்கும். இறைவனே ஒரே காலத்து மூன்று தன்மையும் உடையவன். அவனிடம் உள்ள அத்தன்மைகளே உயிர்களின் வினைக்கும் பரிபாகத்திற்கும் ஏற்ப அவைகளுக்குரிய உடம்பாக வழங்கப்பட்டன.

தன்மையோ ஒரு பொருளைச்சார்ந்தே இருக்கும். ஆண்மை முதலியன இறைவனுக்கு உடைமையாய்ச் சிருட்டிக்குப் பின் ஆண் பெண் அலியைச் சார்ந்து தன்மையாக அறியப்படுவன வாயின. இறைவனுக்கு அவை உடைமையானகாலம் அறியப் படாத ஒன்று என்பதை வற்புறுத்தியவாறு.

இறைவன் ஆண்மையுடையனாதல் சிவமாகிய தன் தன்மையில். பெண்மையுடையனாதல் உலகப் படைப்பைத் திருவுளத்து எண்ணித் திருவருளைத் தன்னின் வேறாகக் கண்டு அவ்வருளை உடைமையாகக்கொண்டு விளங்கும்போது. அலிமையாதல் சிவ பரம்பொருளாய்த் தன்னிலையில் இருக்கும்போது. இதனையே பிரமம் என்பர். இவ்வண்ணம் சிவபரம்பொருள் முத்தன்மையினையும் உடையதாதல் ஆன்மாக்களுக்காகப் படைப்புமுதலிய ஐந்தொழில்களைச் செய்யவும், அவர்கள் அறிந்து வழிபட்டு உய்யவுமேயாம்.

ஒண்மை - ஒளியின் தன்மை. இங்கும் ஒளி என்னாது ஒளியின் தன்மையுடையவன் என்றது ஆண்மை பெண்மை அலி என்பனபோல அறிந்து இன்புறத்தக்கது. உத்தூளித்து - திருநீற்றைத் தண்ணீரில் குழையாமல் பூசி. இறைவன் செம்மேனி எம்மானாதலின் உத்தூளனமாகப் பூசப்பெற்ற திருநீற்றால் வெண்மையன் ஆகின்றான் என்றார். இறைவன் திருநீறு அணிவது உயிர்களினுடைய மலமாசுகளைக் கழுவ; ஆதலின் என்னுடைய வினை மாசுகளைக் கழுவி வீடு அருளவேண்டும் என்பார் 'வெண்மையனே' என்றார். இவ்வண்ணம் ஆற்றல்

இருந்தும் என்னை விட்டுவிடுதல் நின் பெரிய கருணைக்கு ஏலாது என்பார் 'விட்டிடுதி கண்டாய்' என்றார்.

127 பெற்றது கொண்டு பிழையே
பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண்
டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்றன்னைத் தாங்குந
ரில்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின்
றேனெனக் குள்ளவனே. 23

இ - ள்: என் வாழ்வுக்கு மூலகாரணமானவனே! நீ தர யான் பெற்ற தனு கரண புவன போகங்களைக்கொண்டே தீமைகளை மிகுதியாகச் செய்து அன்பினைச் சுருக்குகின்ற போலித்தொண்டனாகிய என்னைக் கைவிடுவாயோ? நீ கைவிட்டால் நான் கெட்டொழிவேன்; அடியேனை இந்நிலையில் தாங்கிக்கொள்பவர்கள் யாருமில்லை; எனக்குத் தலைவனாக உள்ளவனே! அடியேன் உன்னையே அடைக்கலமாக உற்று மிகத் தெளிந்து நின்றேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், இறைவனை நோக்கி எனது தகுதியின்மையை நான் நன்கு அறிவேன்; ஆயினும், விடுதல் ஆகாது என்று விண்ணப்பிக்கின்றார்.

மரத்திற்கு வித்து மூலகாரணமானாற்போல உயிர்களுடைய வாழ்விற்கு இறைவனே மூலகாரணம்; அதனை உயிர்கள் அனைத்தும் உணர்ந்தில; யான் உன் அருளாலே உணர்ந்து இருக்கின்றேன் என்பார் 'என் வாழ்முதலே' என்றார். பின்னும் 'போற்றி என் வாழ்முதலாகிய பொருளே' என்றதும் காண்க. அன்றியும் எல்லா உயிர்கட்கும் மாயையாகிய முதற்காரணத்தினின்று கன்மத்தினுக்கு ஈடாக உடல் முதலியவற்றை வாழ உதவும் இறைவனை என் வாழ்முதலே என்றது, பின்னர் தாம் கூறும் விண்ணப்பங்களை ஏற்றுப் பாதுகாக்கும் பொறுப்பை அப்பெருமான்பாலதாக்குவதற்கு என்பாரும் உளர்.

பெற்றது - பெற்றதாகிய உடல், பெற்றதாகிய உலகு, பெற்றதாகிய கரணமெனத் தனித்தனியே எண்ணுக. பெற்றது என்பது ஈறு தோன்றிய சாதி ஒருமை எனலும் ஆம். நிமித்த காரணமாகிய இறைவன், உயிர்களின் ஆணவ மலத்தை அகற்றவேண்டி, உடலாதிகளை உதவுகின்றான் ஆதலின்

பெற்றது என்பது, அவனுதவ உயிர்கள் பெற்றுக்கொண்ட தாகிய உடல் உலகு முதலியவற்றையே உணர்த்தும். மன மொழி மெய்கள் என்பாருமுளர். அவை இவற்றின் ஏகதேசமே ஆதல் காண்க.

இறைவன் நமக்கு உடல் முதலியவற்றைக் கொடுத்தது வினைகளையுண்டு கழித்து ஆணவமலத்தின் வன்மையைவாட்டி வீட்டின்பம் உதவவே ஆம். அங்ஙனமாகவும் குறிக்கோள் பிழைத்து உலகவின்பமே பெரிதென நச்சுவோமாயின் அதனால் தீங்கே விளையும். இதனையே 'பிழையே பெருக்கி' என்று குறிப் பித்தது. பின் 'பொய்மையே பெருக்கி' என்பதும் இக்கருத்துப் பற்றியே என்க.

அன்பினைச் சுருக்கும் வெற்றடியேன் என்று கூட்டிப் பொருள் காண்க. அன்பு, இறைவனிடம் செலுத்தும்போது தான் பேரின்பம் தருவதாகிறது. அதனை அவன்மேற் செல் லாது சுருக்கி உலகியலில் செலுத்திப் பயன்பெறாது ஒழிந்தமை யின் 'வெற்றடியேனை' என்றார்.

காக்கக்கடவிய நீ காவாது ஒழிந்தக்கால் யான் கெட்டுப் போவேன் என்பார் 'விடிலோ கெடுவேன்' என்றார். கெடுத லாவது தனது நிலையில் தவறுதலும் குறிக்கோள் பிழைத் தலும் ஆம். மற்று: அசை.

இத்தகைய கொடிய என்னைப் பிழை பொறுத்தும் பிழை நீக்கியும் ஏதம் புகாதவாறு தாங்கிக்கொள்பவர்கள் யாரும் இல்லை; ஆனால் எனக்குரிமையாக உள்ளவன் நீ ஒருவனே என்பார் 'எனக்கு உள்ளவனே' என்றருளினார். கற்புடைய நங்கைக்குக்கவலை வந்துற்றபோது 'எனக்குள்ளவன் இப்படிக் கைவிட்டால் நான் என்னசெய்வேன்' என்று கவல்கின்றாள். இவ்வழக்கில் எனக்குள்ளவன் என்பது கணவனையே உணர்த் திற்று. அதுபோல ஈண்டும் தன்னிகரில்லாத் தலைவனையே உணர்த்தியது காண்க. உள்ளவன் என்பதற்கு உள்ளத்தில் உள்ளவன் என்று உரைப்பாருமுளர். அடிகளார் பழமொழி களையும் உலக வழக்கியலையுமே அமைத்துப் பாடுதல் சிந்திக்கத் தக்கது.

உற்று - அடைக்கலமாக அடைந்து. பலர்வீட்டு விருந் தாளி பட்டினிகிடந்து இறத்தல்போல அவர் சரண் இவர் சரண் என்று இரண்டாட்டுவார்க்கு ஒருவரும் சரண் ஆகமாட் டார்கள். அங்ஙனமாகாமல் நான் உன் முழுமுதற்றன்மையை

அறிந்து உன்னையே சரணாக அடைந்தேன்; அதனால் மிகத் தெளிந்தேன் என்பார் 'உற்றடியேன் மிகத்தேறி நின்றேன்' என்றார். இதன் பயன் வெற்றடியேனாயினும் தெளிந்து நின்றே னாதலால் என்னை விடுதலாகாது என்பது வற்புறுத்தியவாறு.

128 உள்ளன வேநிற்க இல்லன
செய்யுமை யற்றுழனி
வெள்ளன லேனை விடுதிகண்
டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய்
புலனின்கட் போதலொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந்
தன்னை யெறும்பெனவே. 24

இ - ள்: மிகப்பெரிய துதிக்கையில் துளையையுடைய நல்ல யானையினது தோலை உடையவனே! என்னுடைய புலன் கள், நின்னிடம் சேரவொட்டாமல், நெய்க்குடத்தை எறும்பு மொய்ப்பதுபோல மொய்த்துத் தடைசெய்கின்றன; செய்யத் தக்க சிவபுண்ணியங்களிருக்க, தகுதி இல்லாதனவற்றையே செய்கின்ற மயக்கத்தையும் ஆரவாரத்தையும் உடைய தூய்மையற்றவனாகிய என்னை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகள், புலன்கள் தடையாயிருத்தலை எடுத்துக்கூறித் தன்னை விடலாகாது என்று வேண்டுகிறார்.

வியன்மாத்தடக்கைப் பொள்ளல்வேழம், நல்வேழம் எனத் தனித்தனிக்கூட்டுக. வியன் மா தட இம்மூன்றும் பெருமை என்னும் பொருளைத்தரும் உரிச்சொல்; ஒருபொருட் பன்மொழி. மிகப் பெரிய என்பது பொருளாம். இறைவன் உரித்துப் போர்த்த வேழத்தை நல்வேழமென்றது யாகத் தீயினின்று தோன்றித் தான் இறந்துபட்டாலும் தன் தோலால் இறைவன் திருமேனியை எஞ்ஞான்றும் தீண்டும் புண்ணியம் பெற்றமை யின் என்க. உரி - தோல்.

இடைவிடாத தியானத்தால் மனம் நின்னைப்பற்ற எண்ணும் காலத்தும் புலன்கள் தத்தம்வழி ஈர்த்து மயக்கிக் கெடுக்கின் றமையின் 'புலன் நின்கண் போதலொட்டா' எனக் கூறினார்.

நெய்க்குடத்தை எறும்பு மொய்த்தாற்போலப் புலன்கள் என்னை மொய்க்கின்றன என்பார் 'எறும்பெனப் புலன்கள் மொய்க்கும்' என்றார்.

மெள்ளனவே மொய்க்கும்: புலன்கள் விரைந்து மொய்த்தால் விஷயபோகங்கள் கழியும்; வருபிறவி உண்டாம்; அதிலாவது திருவடிச்சார்பு பெறலாம் என்று இருக்கின்ற எனது ஆசைக்கு இடையூறாகப் புலன்கள் மெதுவாக மொய்க்கின்றன என்றார்.

உள்ளன என்றது அழியாது நிலைபெற்றனவாகிய சிவப்பணிகளை. இல்லன என்றது கணத்தில் அழியும் உலகியல் இன்பங்களுக்குரிய புலச்செயல்களை. மையல் - ஆணவமலத்தின் காரியமாகிய அறியாமை. துழனி - பயனற்ற ஆரவாரம். வெள்ளன் - தூய்மையானவன். கள்ளச் சிந்தையற்ற வெள்ளை உள்ளத்தை உடையவன். இதன் கருத்து உண்மையான பயனை அடைய உள்ள காரியத்தைச் செய்யாது, அழிவை அளிக்கும் இல்லாத காரியத்தை இயற்றுதலின் அறியாமையையும் ஆரவாரத்தையும் உடையவனாய், தூய்மையும் அற்றவனாய் ஆயினேன் என்பதாம்.

உள்ளன இல்லன என்பவற்றிற்குத் தகுதி உடையன இல்லாதன என்று உரைப்பாருமுளர். வெள்ளன் - வஞ்சனையற்றவன். "வெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறையனாரே" (அப்பர். 1190:9) என்ற இடத்தும் இப்பொருளதாதல் அறிக. வெள் அனலேனை எனப் பிரித்து மயக்கத்துடன் ஆரவாரமுடையதாய் வெள்ளொளி செய்யும் நெருப்பை ஒத்த என்னை என்று பொருள் கொள்ளலும் ஆம்.

129 எறும்பிடை நாங்கூ ழெனப்புல
  னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண்
  டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர்
  வுற்றவ ரும்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய
  ராத பெருமையனே. 25

இ - ள்: கொடிய கூற்றுவன் ஒடுங்க, உறுவனவாகிய மணமுள்ள தாமரைமலர்போன்ற திருவடிகளையே உணர்ந்த மெய்யன்பர்களும், மிகமிக மேலானதாகப் பெறும் சாயுச்சிய பதவியை அவர்கள் மீளாதவண்ணம் அருளும் பெருமையையுடையவனே! எறும்புகளின் நடுவில் அகப்பட்ட நாங்கூழ்ப் புழுவைப்போல ஐம்புலன்களாலும் அரிக்கப்பட்டு வருந்திய பயனற்ற தமியனாகிய என்னை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், புலன்களால் விளையும் துன்பத்தையும் அத்துன்பத்துள் துணையாவார் இல்லாமையையும் எடுத்துக் கூறி விடலாகாது என விண்ணப்பிக்கின்றார்.

கூற்று - உயிரை உடம்பினின்று கூறுசெய்பவன். இவன் இறைவன் ஆணையின்வண்ணம் ஊனையும் உயிரையும் கூறு செய்து, அவரவர் புண்ணியபாவங்களைக் கூறுசெய்து சுவர்க்க நரகங்களை அளிப்பவன். அவனை 'வெய்ய கூற்று' என்றார். வெய்ய கூற்று - கொடுங்கூற்று. அரசன் ஆணைவழித் தண்டஞ் செய்வாரைக் கொடிய காவலர் என்றல் பொருந்தாமைபோல இவனைக் கொடுங்கூற்று என்பது பொருந்துமாறு என்னை எனின், மார்க்கண்டேயர் போன்ற சிவனடியார்களிடத்தில் நியதியைக் கடந்து, சிவபெருமான் திருவுளத்திற்கு உவப்பு எதுவோ அதனைச் செய்யவேண்டியிருக்க, நடுவனாக இருந்து பகுத்தறிவற்று நேர்மையே செய்தலும் கொடுமையேயாதலின் பொருந்தும் என்க.

ஓடுங்க - அவன் அழிய. தம் செருக்கு அடங்கி ஒடுங்க எனலுமாம். உறும் கடிப்போது அவையே உணர்வு உற்றவர் - அவனழியச் சென்று உதைத்தலால் உறுவதாகிய மணமுள்ள தாமரைப்போது போன்றனவாகிய திருவடிகளையே தம்முணர்வின்கண் பொருந்தியவர்கள், அதாவது காலனை உதைத்த திருவடித் தாமரைகளையே தியானிக்கின்ற திருவடி ஞானம் உடையவர்கள் என்பதாம்.

பெறும்பதம் - பெறுகின்ற பதவி. அது எத்தகைத்தெனின் 'உம்பர் உம்பர்' மிக மேலானவிடம் என்பதாம். இதன் கருத்து, திருவடிகளையே தம் உணர்வாகப்பெற்ற அடியார்கள் மேலான இடங்கள் யாவற்றினும் மேலானதாகப்பெறும் சாயுச்சியபதவியை, அவ்வடியார்கள் நீங்காதவண்ணம்செய்த பெருமையை உடையவன் இறைவன் என்றவாறும்.

இங்ஙனமன்றித் திருவடி உணர்வுற்றவர் - சரியையாளர். உம்பர் - அவர்களுக்கு மேலானவர்களாகிய கிரியையாளர். உம்பர் - அவர்களுக்கு மேலானவர்களாகிய யோகியர். அவர்கள் பெறும்பதம் - சாலோக சாமீப சாரூபம். அவை மூன்றாகவும் விளங்குபவனே. அடியார் அம்மூவரினும் மேம்பட்ட சிவஞானியர். (அவர்கள்) பெயராத பெருமையனே - அவர்கள் மீண்டு வாராமைக்கு ஏதுவான சாயுச்சியமாக விளங்கும் பெருமையனே என்று வேண்டும் பல சொற்களை வருவித்து உரை வகுப்பாரும் உளர்.

திருவடிப்போதவையே உணர்வு உற்றவர் - திருவடித் தாமரைகளையே உணர்வாகப் பொருந்தியவர் சரியையாளர் ஆகார். அவர் யாவரினும் மேம்பட்ட ஞானியரேயாவர்.

உம்பர் என்பது அம்பர் இம்பர் என்ற சுட்டடியாகப் பிறந்த இடப்பெயராயும், மேலிடத்தார் என இடத்து நிகழ்பொருளாயும் வருதல் மரபாதலின் யாம் இடப்பெயராகக்கொண்டு மேலானவற்றுள் மேலானதாகப்பெறும் பதவியே அவ்வடியார்கள் பெயராமைக்குக் காரணமான காருண்யப் பெருமையுடையவனே என்று ஒரு தொடராக்கியுரைத்தேம். திருவடி போது போல் மெல்லியதாயினும் வெய்ய கூற்றை ஒடுங்கச்செய்தது, அடியார் மனத்தில் உற்று அவர்களுக்கு இன்பமூட்டியது என்ற நயம்தோன்ற நிற்பது காண்க.

நாங்கூழ்ப் புழு: நாக்குப்பூச்சி என வழங்கும் இது எலும்பு இல்லாத மெல்லிய தசைத்திரளாலான உடலுடையது. இது எறும்பின் நடுவில்/அகப்பட்டால், எறும்புகள் இதனைச் சல்லடைக் கண்ணாக அரித்துத் தின்றுவிடும். அதுபோல, நான் ஐம்புலன்களாலும் ஒருசேர அரிக்கப்பெற்று வருந்தினேன். அதனால் யான் பயனற்ற வெறுந்தமியன் ஆயினேன் என்றார். நாங்கூழ் பயனற்ற புழு. அதுபோலப் பயனற்றேன் நான் என்பாரும் உளர். நாங்கூழ் பயனற்ற புழுவன்று. மண்ணைக் கிளறி, பிராணவாயு மண்ணுட்புகச்செய்து பயிர்வகை செழித்து வளரத் துணை புரிவது என்பதை உயிர் நூலார் ஒப்புவர். ஆயினும், அது அரிப்புண்ட பிறகு பயனை இழந்துவிடுகிறது. அதுபோல யானும் புலன்வயப்பட்டு அரிப்புண்டு, பயனற்றுத் தமியேனாயினேன் எனலே பொருந்துவதாம்.

130 பெருநீ ரறச்சிறு மீன்றுவண்
டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண்
டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுண் மலைச்சிறு
தோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை
வானக் கொழுமணியே. 26

இ - ள்: பெரிய கங்கையையும், பொங்கி வருகின்ற நீரையுடைய மடுவில் கரையொடு பொருகிற சிறிய தோணியின் வடிவமான வெண்மை நிறமுடைய குளிர்ந்த மதியையும் முடித்துள்ள சடையையுடைய ஞானகாயத்து விளங்கும்

ஞான சூரியனே! வெள்ளம் வற்றச் சிறுமீன் துவண்டு வருந்தியதுபோல நின்னைப் பிரிந்தமையால் அஞ்சுகின்ற தன்மையனாகிய என்னை விடுவாயோ? திருவுளமிரங்கி விடாதே அருள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், நின்னைப் பிரிந்தமையாலேயே நான் இங்ஙனம் வருந்துவேனாயினேன்; ஆதலால், விடாதே ஆண்டு கொள் என விண்ணப்பிக்கின்றார்.

கங்கையும் மதியும் சடையுள் ஒருசேரப் பொதிந்துள்ள தோற்றம், மடுவும் அதில் அலைகின்ற தோணியும்போலுள்ளது என்றவாறும். கங்கையும் மதியும் பொதியும் சடை என எண்ணும்மை விரித்துப் பொருள் கொள்க. இங்ஙனம் அன்றி, கங்கையாகிய மடுவென இயைத்தலும் ஒன்று. இங்ஙனம் கொள்ளின் கங்கை மடுவாய், மதியை அடுத்துவந்த அடைமொழியாய், மதிப்பொதியும் சடையென்றே பொருள் தந்து கங்கையுள் தோணியென மதி காட்சி வழங்குகிறது என்ற கருத்து வலிந்துகோடலாகக் கிடைக்குமாறறிக.

வானக் கொழுமணி - ஞான வானிலுள்ள ஞான சூரியன். சூரியனுக்கு விண்மணி, தினமணி என்ற பெயர்கள் உண்டு. ஆகவே, ஈண்டு இறைவனை உணர்த்துதலின் ஞான சூரியன் எனப் பொருள் கூறப்பெற்றுளது. வானத்தில் மாணிக்கம் திகழாமை அறிக. கொழுமணி என்றது கோள் மறையாமையால் அமைந்த கொழுமையுடையதென்பது கருத்து. பௌதிக சூரியனைக் கேதுக்கோள் மறைக்கும். இது ஒன்றாலும் மறைவு உறாதது என்பார் இங்ஙனம் கூறினர்.

பெருநீர் - வெள்ளம் என்பதன் மறுபெயர். குளம் வற்றிய காலத்துச் சிறுநீரிலும் சேற்றிலுங்கூடச் சிறிய மீன் உயிர் வாழ்ந்து மீள வெள்ளம் வந்தகாலத்துத் தழைக்கக் காண்கின்றோம். வெள்ளம் அற வற்றியகாலத்துச் சிறுமீன் உடனே துடித்து வாடும். அதுபோல, நின் பிரிவால் யானும் துவள்கின்றேன் என்பதாம். சிறுமீன் இறந்தாங்கு என்னாது துவண்டாங்கு என்றமையால் மீட்டும் நீர் பெறின் களிப்பதுபோல நும்மைச்சேரின் தளிர்ப்பேன் என்னும் நயமுணர்க. சிறுமீன் - அடிகளார். பெருநீர் - இறைவன். பிரிவு - அறவற்றுதலாகிய தொழில். இவ்வண்ணம் உவமையும் பொருளும் இயைத்துக் காண்க. வெருநீர்மை - வெருவும் நீர்மை; அஞ்சுந்தன்மை. பிரிந்த நீர்மையேன் வெரு நீர்மையேன் எனத் தனித்தனிக் கூட்டிப் பொருள் காண்க.

131 கொழுமணி யேர்நகை யார்கொங்கைக்
குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடி யேனை விடுதிகண்
டாய்மெய்ம் முழுதுங்கம்பித்
தழுமடி யாரிடை யார்த்துவைத்
தாட்கொண் டருளியென்னைக்
கழுமணி யேயின்னுங் காட்டுகண்
டாய்நின் பொலன்கழலே. 27

இ - ள்: முதிர்ந்த முத்துக்களையொத்த பற்களையுடைய பெண்களின் மலைபோலும் கொங்கைகளிற் சென்று இடறி விழும் அடியேனை, உடலெலாம் நடுங்கி ஆனந்தாதீதத்தால் அழுகின்ற அடியார்களின் நடுவே கட்டிவைத்து என்னை ஆளாக ஏற்று, என் மாசுகளைக் கழுவுகின்ற மாணிக்கமே! என்னை விடுவாயோ? இன்னமும் நின் ஞானமேயான திருவடியைக் காட்டுவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், மாதர்போகத்திடை அழுந்தும் என்னை அடியார் கூட்டத்தில்வைத்து ஆட்கொண்டு என் குற்றங்களைக் கழுவிய மணியே! என்னைக் கைவிடாதீர் என விண்ணப்பிக்கின்றார்.

கொழு மணி - செழு முத்து, முதிர்ந்த முத்து. அதுவே வெள்ளொளி உடையதாகலின் மாதர் பல்லுக்கு உவமையாம் எனக் கருதி 'கொழுமணி ஏர் நகையார்' என்றார். நகையைச் சொன்னது அவர்கள் சிரிப்பால் ஆண்மக்கள் வசப்படுதலின் என்க.

மலையேறுகின்றவன் தடுமாறி விழுதல்போல நான் அவர்கள் கொங்கைகளாகிற குன்றுகளில் சென்று தடுமாறி விழுந்தேன். விழுந்தவனைக் கைகொடுத்துத் தூக்கி நிறுத்துவது போல என்னைத் தூக்கி, என் குற்றம் நீங்க அடியார் கூட்டத்தில் இருத்திக் கழுவினார் என்பார் 'அடியேனை வைத்து ஆட்கொண்டு கழுமணியே' என்றார்.

அடியார் கூட்டத்தில் வைத்தபோதும் என் புலன்களின் ஆற்றலால் மீண்டும் புக்க விடத்தையே புக எண்ணினேன்; இஃதுணர்ந்து புறம்போக விடாது கட்டிவைத்து ஆட்கொண்டார் இறைவன் என்பதனை 'அடியாரிடை ஆர்த்து வைத்து' என்ற பகுதியால் அறிவிக்கிறார். ஆர்த்தல் - கட்டுதல். 'ஆர்த்த பிறவித் துயர் கெட' என்புழியும் இப்பொருளதாதல் காண்க.

கட்டிவைத்தாலும் உயிர்கட்குத்தக்க பணியைக் கொடுக்கா விட்டால் அவற்றின் மனம் புறந்திரிந்துகொண்டேயிருக்கும் ஆதலின் அதனைத் தடுத்து நல்லோரிணக்கத்திலேயே திருவடி சம்பந்தத்திலேயே இருக்க வைத்தான் என்பார் 'ஆட்கொண் டருளி' என்றார்.

ஆகவே, இறைவன் ஐம்புலவேடரின் அயர்ந்து வளர்ந்த என்னை மாதர் கூட்டத்தினின் பிரித்தது முதல் உபகாரம். அடியார் கூட்டத்திருத்தியது இரண்டாம் உபகாரம். ஆட் கொண்டு அருளியது மூன்றும் உபகாரம். இந்த மூன்றாலும் விளைந்த பயன் என்னைப்பற்றி நின்ற பாச கன்மங்களைக் கழுவி யது என்க.

மல பாசகன்மங்கள் ஆன்மாவைப்பற்றிநிற்கும் நோய்கள். நோயைப் போக்க மணி மந்திர ஔஷதங்களைப் பயன்படுத்த வேண்டும். இறைவனே மணியாக வந்து தரிசனமாத்திரத் தால் என்னுடைய பாசகன்மங்களைக் கழுவி, மலவலியை மாற்றி னான் என்பார் 'கழு மணியே' என்றார்.

என்னை விடுதிகண்டாய்: மாசு படிந்திருந்த மாணிக்கத் தைப் பூமியினின்று தோண்டியெடுத்து அழுக்கையும் போக்கிப் பட்டைதீர்த்துப் பதினாயிரம் விலைபெறக் கூடியதாக மதிப்பூட் டியபின் அதனைக் கைநழுவ விடுவார்போல என்னைக் கழுவி எடுத்தும் விடுவாயோ என்கின்றார்.

வேறு என்செய்யவேண்டும் என இறைவன் வினவுவார் என்பதைத் திருவுளத்தெண்ணி, தன் விருப்பு நின் ஞானமய மான திருவடியை மீட்டும் காணுதலே ஆதலால் காட்டுக என வேண்டிக்கொள்கிறார். இதன் பயன் திருவடிக் காட்சியால் நிலைபேறான பேரின்பத்தில் வீற்றிருக்கலாம் என்பதே.

132 புலன்கடி கைப்பிக்க யானுந்
திகைத்திங்கோர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண்
டாய்விண் ணுமண் ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய்
தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை
யாயென் றொழுகுலமே. 28

இ - ள்: விண்ணுலகமும் மண்ணுலகமும் கலக்கமடைய அதனைக்கண்டு இரங்கி, பாற்கடலினின்று எழுந்த ஆலகால விடத்தைத் திருவமுது செய்தவனே! கருணைக்கு இருப்பிட மானவனே! அடியேன் நிலைகலங்குகிறேன்: என்னை உடைமை யாகக் கொண்டவனே! என் குலதெய்வமே! ஐம்புலன் மயக்க யானும் மயங்கி இங்கு ஒரு பொய்யான தீநெறியில் விலகிச் செல்ல இருக்கின்ற என்னை விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், புலன்கள் மயக்க நான் வழி விலகிப் போகின்றேன்; என்னை விடலாகாது என வேண்டுகின்றார்.

பாற்கடல் கடைந்த காலத்து ஆலகாலம் எழ, அதன் கொடுமையைத் தாங்கமுடியாமல் விண்ணவரும் மண்ணவரும் கலக்கமுற, அதனைப்போக்க அதனை அமுதுசெய்தார் என்ற வரலாறு, அஞ்சிய உயிர்களுக்கு அபயமளிக்கும் ஆற்றலும் அருளும் உடைய நீ கலங்கிய என்னையும் காத்தருளவேண்டும் என்னும் குறிப்பிற்காகக் கூறியதாம். அன்றியும் அந்நஞ்சின் கொடுமை வெளிப்படாதவண்ணம் அடக்கி அமுதுசெய்த நீ என் தீக்குணத்தையும், புலன்களின் பொல்லாங்கையும் போக்கி யாளவேண்டும் என்னும் குறிப்பும் வெளிப்படுத்துவதாம். விண்ணவர் முதலில் நடுங்கினர் ஆதலின் அவரை முற்கூறினார்.

ஆகரம் - கடல். கருணாகரன் - கருணைக்கடலே என்றார் உயிர்களின் ஊறுகண்டு பரிபாகமும் நோக்காது காத்தருளும் சிறப்பு நோக்கி.

துலங்குகின்றேன் - நடுங்குகின்றேன். நீ என்னை உடையாய்; நான் உன் அடியான்; எனக்கு நேர்ந்த நடுக்கத்தைப் போக்கிக் காக்கக் கடமைப்பட்டவன் நீ; ஆதலால் கடமையில் தவறலாகாது என விண்ணப்பிப்பார் 'உடையாய்! அடியேன் துலங்குகின்றேன்' என்றார்.

தொழு குலம் - தொழத்தக்க கோயில். குலம், தேவகுலம் என்பதுபோலக் கோயிலைக் காட்டியது. ஈண்டு இடவாகு பெயராகக் கோயில் என்பது கோயிலுள்ளிருக்கும் தெய்வத்தை உணர்த்திற்று. ஆகவே நான் தொழுகின்ற குலதெய்வமே என்றவாறும். துன்ப இன்பங்களுக்குத் துணைநின்று காக்க வல்லது குலதெய்வம்; என் குலதெய்வம் நீ ஆதலின் புலன்க ளால் மயங்கும் இத்துன்பக்காலத்துக் கைவிடாமல் காப்பாற்ற வேண்டியது தேவரீர் கடமை என்பார் இங்ஙனம் கூறினார்.

திகைப்பிக்க - மயக்க; புலன்கள் தாம்தாம் கண்டனவே பேரின்பம் என்றும், அதனில் சிறந்த இன்பம் இல்லையென்றும் தேற்றி மயக்க. 'மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலன் ஐந்தின் வழியடைத்து' எனப் பின்னும் கூறுதல் காண்க.

யானும் திகைத்து - யானும் மயங்கி. யானும் என்ற உம்மை உயர்வு சிறப்பு. எங்ஙனமெனின், புலன்கள் திகைக்கச் செய்கின்றன என்பதைத் தெரிந்துவைத்தும் திகைக்கின்றேனாதலின். இவன் வருத்துவான் என்பதை அறிந்த ஒருவன் அவனை விட்டுப் பிரிதலின்றி அவனுடன் சேரான். அதுபோல மயக்குகின்றன என்பது அறிந்தும் மயங்குகின்றேன் என்ற நயம் தோன்ற நின்றமை காண்க. அசை என்பாரும் உளர். அதன் பயனின்மை அறிக.

மீண்டுவாரராப் பேரின்பநெறிக்கண் திருவருள் வழிகாட்டச் செல்லவேண்டிய நான், புலன்கள் கவர்வழியில் அழைத்துச் செல்ல அவற்றின் வழிப்பட்டு நெறியல்லா நெறிக்கண் விலகிச் செல்லுகின்றேன் என்பார் 'பொய்ந்நெறிக்கே விலங்குகின்றேனை' என்றார். திகைத்தவன் வழி விலகிப்போனால் அவனை விடாது கையைப் பிடித்து இழுத்து நேரிய நெறியில் செலுத்த வேண்டுமேயன்றி விடலாகாது என்பார் 'விட்டிடுதி கண்டாய்' என்றார்.

133 குலங்களைந் தாய்களைந் தாயென்னைக்
குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய்விட் டிடுதிகண்
டாய்பொன்னின் மின்னுகொன்றை
அலங்கலந் தாமரை மேனியப்
பாவொப்பி லாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்றயி
ரிற்பொரு மத்துறவே. 29

இ - ள்: பொன்னைப்போல மின்னுகிற கொன்றைமலர் மாலையையும் அழகிய தாமரைமலர் போன்ற மேனியையும் உடைய அப்பா! ஒப்பற்றவனே! தயிரில் சுழலுகின்ற மத்தைப் போல ஐந்து மலங்களால் சுழலுகின்றேன்; இந்நிலையில் நீ என்னுடைய குலப்பெருமையை நீக்கினாய்; என்னைக் குற்றங்களிலிருந்து நீக்கினாய்; (அவ்வண்ணம் உபகரித்த) மேரு மலையாகிய வெற்றிபொருந்திய வில்லை ஏந்திய என் தந்தையே! என்னை விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் ஐந்து மலங்களால் வருந்துகின்ற என்னை விடாதே கொள் என்று விண்ணப்பிக்கின்றார்.

பொன், கொன்றைமலரின் நிறத்திற்கும் ஒளிக்கும் உவமை ஆயிற்று. இறைவனுக்குக் கொன்றை அடையாளப் பூவும் அழகிற்காக அணியும் பூவும் போர்க்குரிய பூவுமாக விளங்குகிறது. வெண்ணீறு சண்ணித்தநிலையில் திருமேனி வெண்டாமரை போலவும் இயற்கையில் செந்தாமரைபோலவும் இருத்தலின் இரண்டையும் கருதி, 'தாமரைமேனி அப்பா' என்று பொதுமையில் கூறினார்.

ஞானத்தந்தையாதலின் 'அப்பா' என்றார். எளி வந்த கருணையால் தம்பொருட்டுக் குருமேனி தாங்கி எழுந்தருளினும் தனியன் என்பார் 'ஒப்பிலாதவனே' என்றார். தன்னேர் இல்லாத் தனித் தலைவன் என்றது இக்கருத்தை விளக்குவதாம்.

மலங்கள் ஐந்தாவன: ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. அவற்றுள் ஆணவம் என்பது உயிரின் வியாபகத்தை மறைக்கும் மூலமலம். கன்மம் என்பது புண்ணிய பாவங்களாக நிகழ்ந்து இன்பத் துன்பங்களை விளைவிப்பது. மாயை என்பது வினைகளுக்கு ஈடாக உயிருக்கு உடல் உலகு முதலியவற்றை உதவுவது. மாயேயம் என்பது மாயையின் காரியமாய உடல் உலகு முதலியன. திரோதாயி என்பது உயிரோடு ஒன்றிநின்று மலங்களைத் தொழிற்படுத்தி உயிரைப் பரிபாகப்படுத்துவது. இந்த ஐந்து மலங்களும் உயிரை அலைக்கின்றன. அதனை இங்கும் அங்குமாகச் சுழன்று தயிரினை அலைக்கும் மத்துப்போன்றதென உவமிப்பார் 'தயிரில் பொரும் மத்துறவே மலங்கள் ஐந்தால் சுழல்வன்' என்றார். சுழலுதலாவது, புண்ணிய பாவங்களுக்கு ஈடாக எல்லா அண்டங்களிலும் எல்லாப் பிறவிகளிலுமாகப் பிறந்து வருந்துதல்.

'சாதி குலம் பிறப்பு என்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயேன்' என்று தன்னை மற்றோரிடத்துக் குறிக்கும் மணிவாசகப்பெருமான் குலப்பற்றை நீக்கிய உபகாரியாக இறைவனைக் காணுகின்றவர் 'குலம் களைந்தாய்' என்றார். குலம் என்பது எடுத்த தேகத்திற்கு உரியது. நல்ல குலம் என்றும் தீய குலம் என்றும் சொல்லளவல்லாற் பயனிலை ஆதலானும் குலப்பற்று பொதுமைக்கு இடையூறாய் அறியாமை மிகுவித்தலானும் ஞானியர் அனுபவத்தில் தீமை செய்வதாயிற்று. அதனால் 'களைந்தாய்' என்றார்.

குற்றம் - மனமொழி மெய்களால் நிகழ்த்தப்பெறும் தீங்கு. அதனைச் சுவடுமில்லாதபடி இறைவன் வேரொடு களைகின்றானாதலின் 'என்னைக் குற்றம் களைந்தாய்' என்று கூறினார். களைந்தாயென்னும் சொல்லுக்குரிய ஆற்றல் மீண்டும் முளையாதவாறு வேரோடு பிடுங்குவதைக் குறிப்பது. என்னைக் குற்றம் களைந்தாயென்பது இரண்டாம் வேற்றுமை ஆறும் வேற்றுமைப் பொருளில் வந்த மயக்கம்.

கொற்றச் சிலையாம் விலங்கல் எந்தாய் - வெற்றி பொருந்திய வில்லாக வளைக்கப்பெற்ற மேருமலையையுடைய எந்தையே! நீ விடுவாயோ என்பதாம். குலம் - குடிப் பிறப்பு. "மானம் குலம் கல்வி" என்புழிப்போல.

சிலையாம் விலங்கல் என்றது உருவகம். குலமும் குற்றமும் இறைவனை அடைவதற்குத் தடையாக இருத்தலின் 'களைந்தாய்' என்றார்.

மலையை வில்லாக வளைத்த உனக்கு என் மலங்களை நீக்கி ஆட்கொள்ளல் மிக எளிய செயல்; ஆதலால், விட்டுவிடாமல் ஆட்கொள்ளுக என்பது கருத்து.

*134* *மத்துறு தண்டயி ரிற்புலன்*
*தீக்கது வக்கலங்கி*
*வித்துறு வேனை விடுதிகண்*
*டாய்வெண் டலைமிலைச்சிக்*
*கொத்துறு போது மிலைந்து*
*குடர்நெடு மாலைசுற்றித்*
*தத்துறு நீறுட னாரச்செஞ்*
*சாந்தணி சச்சையனே.* *30*

இ - ள்: வெண்மையான தலைகளையும் சூடி, கொத்தாகிய பூக்களையும் அணிந்து, குடராகிய மாலைகளையும் கழுத்தில் சுற்றி, திருமேனி முழுதும் பரவிய திருநீற்றுடன் செஞ்சந்தனக் கலவையையும் அணிந்த மெய்ப்பொருளாக உள்ளவனே! ஐம்புலன்களாகிய தீயும்பற்ற மத்தினால் கடையப்பெறுகின்ற குளிர்மையான தயிரைப்போலக் கலங்கி, பிறவிக்கு வித்தாக உறும் என்னை விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் ஐம்புல இன்பங்களாகிற தீப் பற்றக் கலங்குகின்ற என்னை விட்டுவிடாமல், நீ ஆட்கொள் என்று விண்ணப்பிக்கின்றார்.

தாருகவனத்து முனிவர் செய்த கொடிய யாகத்தினின்று உண்டாகிய வெண்டலையொன்று இறைவனைக் கொல்ல வந்த போது இறைவன் அதனைத் திருக்கரத்தால் பிடித்துச் சடைக் காட்டில் வைத்தார் என்பது வரலாறு. மிலைச்சுதல் - தலையில் சூடுதல். இதனால் இறைவனிடம் பகைமையும் அதனால் விளைக் கப்பெறும் தீமையும் சாரா. அன்புடைமையும் அதனால் விளையும் அடிமையுமே அணுகும் என்பது உணர்த்தப்பெறுகின்றது.

கொத்து - பூங்கொத்து. கொத்துறு போது - கொத்துக் கொத்தாகப் பூக்கும் பூ. அவை கொன்றை போல்வன. இறைவன் சரபாவதாரம் எடுத்து நரசிங்கத்தின் வீறடக்கிய காலத்து அந்நரசிங்கத்தின் குடரை மாலையாக அணிந்தார் என்ற வரலாற்றைக் கருதி 'குடர் நெடுமாலை சுற்றி' என்றார். பிரமனுடைய என்பு முதலியவற்றை மாலையாக அணிந்துள்ள மையை இதனால் குறித்தார் என்பாரும் உளர்.

தத்துறு நீறு - பரந்த நீறு. 'தத்தரி நெடுங்கண்' என்புழி யும் இப்பொருட்டாதல் காண்க. நீறுடன் செஞ்சாந்தணி சச்சையன் எனக் கூட்டுக. திருநீற்றை மேனியில் உத்தூளன மாகப் பூசி, செஞ்சந்தனத்தையும் நிறைய அணிந்த மெய்ப் பொருளானவன் என்பதாம். திருநீறு மாற்றமில்லாததாய், புனிதமாய் உள்ளது. அது வெண்மையாய் மேனி முழுதும் விளங்கச் செஞ்சந்தனத்தையும் அணிந்துள்ளமையால் செந் நிறம் திருவருட்சத்தியையும், வெண்மை சிவபரம்பொருளாகிய தன்னிலையையும் நினைப்பிக்கின்றன என்றவாரும். ஆர - மிக. சந்தனம் என்பாரும் உளர்.

ஐம்புலன்களும் தத்தம் விடயங்களில் விருப்பத்தை மிகு விக்க, அவ்விருப்பமாகிய தீ வடவைத்தீப்போல என்னைச் சுடு கின்றது அதனால் கலங்கி என்றார்.

அங்ஙனம் கலங்குதற்கு ஒருவமை 'மத்துறு தண்தயிரின்' என்பது. தயிர் மத்துறக் கலங்குவதுபோல, யான் புலத்தீப் பற்றக் கலங்குகிறேன் என்பதாம். கடையும் சூட்டால் வெண் ணெய் உருகித் திரளாமையும் குளிர வைத்துத் திரட்டுவதும் மரபு.

135 சச்சைய னேமிக்க தண்புனல்
விண்கால் நிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண்
டாய்வெளி யாய்கரியாய்

பச்சைய னேசெய்ய மேனிய
னேயொண் படவரவக்
கச்சைய னேகடந் தாய்தடந்
தாள அடற்கரியே. 31

இ - ள் : வெண்மை, கருமை, பசுமை, செம்மை ஆகிய நிறங்களைப்பெற்ற திருமேனியையுடையவனே! ஒளிபொருந்திய படத்தையுடைய பாம்பாகிய அரைப்பட்டிகை உடையவனே! பெரிய கால்களையுடைய கொல்லுந்தன்மை வாய்ந்த யானையை வென்றவனே! மெய்ப்பொருளே! மிகுந்ததும் குளிர்ந்ததுமாகிய நீர், ஆகாயம், காற்று, பூமி, தீ ஆகிய ஐம்பெரும் பூதங்களாகவும் விளங்கும் வித்தையுடையவனே! கைவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவனே! நீ எல்லாமாயிருப்பதால் என்னை விடுதியாயினும் யான் நின்னையன்றி என்றும் பிரிவிலேன் என்பதனைக் குறிப்பிடுகின்றார்.

'நிறங்களோரைந்துடையாய்' என்று முற்கூறியதை ஈண்டு வெளியாய் முதலியவற்றால் வெளிப்படுத்துகின்றார். நிறங்கள் ஐந்தொழிலை உணர்த்துதல் மரபாதலால் ஈண்டுக்கூறப்பெறாத நீலத்தையும் கொள்க. இறைவன் பஞ்சவண்ணேசர் என்ற பெயருடன் விளங்குதலும் காண்க. அன்றியும், ஈசானுதி ஐந்து முகங்களும் ஐந்து நிறமுடையன என்பது சிவாகமத்துச் சதாசிவமூர்த்தித் தியானச் சுலோகம்.

அன்றியும், 'வெளியாய் கரியாய்' என்ற இவற்றை ஒரு தொடராகக்கொண்டு, பதிஞானம் கைவரப்பெற்ற பக்குவான்மாக்களுக்கு வெளியாயும், பாச பசுஞானங்களில் நிற்பார்க்கு வெளிப்படாமல் இருளாய்க் கரியாயும் இருத்தலை விளக்குவது எனப் பொருள்கோடலுமாம்.

அங்ஙனமே 'பச்சையனே செய்ய மேனியனே' என்பதனை ஒரு தொடராக்கி உமையொருபாகனாக விளங்கும்போது இடப்பாகம் பச்சைநிறமுடையனாகவும் வலது புறம் செய்யனாகவும் விளங்குபவனே எனலுமாம். முன்னது அருளனுபவநிலையிலும், இது உருவத் தியானநிலையிலும் என்க.

அங்ஙனம் அடியார்களுக்காக உருமேனி தாங்கி நிற்கும்போது, திருவரையில் படமெடுத்தாடுகின்ற பாம்பை அரைக் கச்சையாக அணிந்திருக்கின்றாராதலின் 'பட அரவக் கச்சையனே' என்றார்.

மறக்கருணை காட்டியும் அடியார்களைப் பாதுகாத்தருளும் பேரருட்டிறத்தை, 'தடந்தாள் அடற்கரி கடந்தாய்' என்பதால் குறித்தவாறும். சச்சையன் - சர்ச்சையன் என்பதன் திரிபு. சர்ச்சை - ஆராய்ச்சி: தத்துவங்களைத் தரிசித்து அவற்றிறுய் வால் துணிந்து தெளிதற்கு உரியவன் என்பார் இவ்வண்ணம் கூறினர்.

காணப்படுமுலகில் முக்காற்பகுதி நீரும், காற்பகுதி பூமி முதலிய ஏனையவுமாக இருத்தலின் 'மிக்க தண்புனல்' எனக் கூறினர்.

தோற்றமுறைபற்றி விண், கால், தீ, புனல், மண் என்றும், ஒடுக்கமுறைபற்றி மண், புனல், அனல், கால், விண் என்றும் கூறப்பெறுமாயினும் ஈண்டு புனல், விண், கால், நிலம், நெருப்பு என்றது. அணுகுதற்குத் தண்ணிதாய் எங்கும் பரந்து காணப் படும் எளிமையும் தன்மையுங்கண்டு இறைவனை முதலில் மிக்க தண்புனலாகக் கண்டவர், எங்கும் பரவி யாவற்றையும் அடக்கி நிற்கும் வியாபகப் பொருள் இறைவன் என்பதை உணர்த்த விண்ணை அடுத்தும், அதில் நிரம்பி உயிர்களுக்குத் தாரகமாக இருப்பதால் காலை அதனையடுத்தும், மண் வசித்தற்கு இடமாய் வினைப்பயனை நுகரச் சாதனமாயிருத்தல்போலச் சிவப்பணிக ளைச் செய்யவும் துணையாயிருத்தலின் மண்ணை அதன்பின்னும் தியான நிலையில் சிவம் பேரொளிப் பிழம்பாய் அனுபவத்திற்குக் கைவரலின் நெருப்பை இறுதியிலுமாகக் கோத்தனர் என்க. விச்சை - ஒருவனே எல்லாமாக விளங்கும் அற்புதம்.

இறைவன் வடிவாகிய அட்டமூர்த்திகளும், மாயாகாரியமான பஞ்ச பூதங்களும் சூரிய சந்திரர்களும் இயமானனும் அன்று; இவை தோன்றி நின்று ஒடுங்க மூலமாய் நிற்கும் அருட்குணம் என்க. இவை மாயா காரியம். இறைவன் மாயையொடு ஒட்டா தவன். ஆகவே, இவையே இறைவன் திருமேனி என்றலும், இதனை அடிக்கொண்டு நயங்கூறுதலும் பொருந்தாது என்க. முன்னும் பின்னும் இங்ஙனம் வருமிடங்களில் இதுவே கருத் தாகக்கொள்க.

விட்டிடுதிகண்டாய் என்பது இங்குத் தனி நயமுடையது. நீயோ ஐம்பெரும் பூதங்களுமாக இருப்பவன். எல்லா நிறங்க ளுமாக இருப்பவன்; ஆகவே, நீ விடினும் யான் இப்பௌதிக உலகில் ஒட்டி வாழ்பவனே ஆகையால் நீ விட்டும் பயனில்லை எனக் குறிப்பித்தவாறும்.

136 அடற்கரி போலைம் புலன்களுக்
கஞ்சி யழிந்தவென்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண்
டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி
யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு
தாக்கும் கறைக்கண்டனே. 32

இ - ள்: சிறந்த அடியார்களுக்கு அல்லாமல் பிறருக்குத் தீண்டுதற்கு அரியவனே! ஒளிவிடுகின்ற பெரிய மாணிக்கமே! சுடுகின்ற தீ, சுழலும்படி கடல்முழுவதும் கரிதாய் எழுகின்ற நஞ்சத்தை உணவாக்கிய நீலகண்டனே! வலிமையோடுகூடிய யானைகளைப்போல வருத்துகின்ற ஐம்புலன்களுக்கும் அஞ்சி நிலையழிந்த என்னை, விடுதற்கரியவனே நீ விட்டுவிடுகின்றாய் என்றவாறு.

இத்திருப்பாட்டில், புலன்களுக்கு அஞ்சிய என்னை விட லாகாது என விண்ணப்பிக்கின்றார்.

தொண்டின் விழுமை பயனால் அறியப்படுவது. பசுவறம் பதியறம் என அது இருவகைப்படும். பதியறமே நிலைத்த பேரின்பத்தைத் தருதலின் விழுத்தொண்டாயிற்று. அதனைச் செய்வார் விழுத்தொண்டர் எனப்படுவர். அவர்களே இறைவனைத் தீண்டுதற்கு உரியவராவர். நாயகன் சேவடி தைவரு சிந்தை அவர்க்கேயாம் ஆதலால் பிறருக்குத் 'தொடற்கரியாய்' என்றார்.

சுடர் - ஒளி. தீயொளி சுடவும் செய்யும். மணி ஒளி தட்ப மானது. ஆதலால், கருணைப் பொலிவும் ஒளியுமுடைய இறைவனைச் 'சுடர் மா மணியே' என்றார்.

துன்பம் வந்தகாலத்து அனைவரையும் காத்தருளும் ஆற்றலுடையவன் சிவபெருமான் ஒருவனே என்பார் நஞ்சமுதாக்கும் செயலைச் சிந்திக்கச் செய்கின்றார். நஞ்சின் கொடுமை உலகமனைத்தையும் சுடுகின்ற தீயாகச் சூழ்ந்தமையின் 'சுடு தீச்சுழல' என்று உரைக்கப்பெற்றது. பாற்கடல் வெண்மை மாறிக் கரிதாயிற்று ஆதலின் 'கடல் கரிதாய்' என்றார். உயர்ந்த இறைவனைச் சார்ந்தும் நஞ்சு தன்னிறமும் குணமும் மாறிற்று இல்லை என்பார் 'கறைக் கண்டன்' என்றார்.

கடற்கு என்பது கடற்கண் எனப் பொருள்படுதலின் உருபு மயக்கம். அரிதாய் எழும் என்றது ஏதோ ஒருகாலத்து அருமையாகத் தோன்றின விஷம் என்பாரும் உளர்.

ஐம்பொறிகளும் ஐந்து யானைகளை ஒத்தவை. ஒவ்வொரு கணமும் ஐம்புலன்களாகிற யானைக்கு அஞ்சி அழிந்துகொண்டிருக்கின்றேன் என்பார் 'ஐம்புலன்களுக்கு அஞ்சி அழிந்த என்னை' என்றார். துன்பு எய்தியவனைக் கைவிடாதிருத்தல் அயலார்க்கும் இயல்பாயிருக்க, என்னை ஆண்டவனாகிய நீ விடுதல் ஆகாது முறையுமன்று என்பார் 'விடற்கரியாய் விட்டிடுதிகண்டாய்' என்றார்.

கரி—கைகளை உடையது என்னும் காரணத்தான் வந்த பெயர்ச்சொல். அடியேன் அறிவென்னும் அங்குசங்கொண்டு ஐம்புலக் களிற்றை அடக்கியாள எண்ணினும் அவை மிக்க வலிவுடன் விடயங்களில் சென்றுபற்றித் தாக்குதலின் 'அடல் கரிபோல் ஐம்புலன்கள்' என்றார்.

பகைவன் தாக்குகின்றபோது அவனைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் விஞ்சியபோது வீரம் தோன்றும். அது முடியாத போது அச்சம் நிகழும். அதுபோல் புலன்களை அடக்கியாள முடியாதநிலையில் அச்சம் விளைந்ததை உணர்த்துவார் 'ஐம் புலன்களுக்கு அஞ்சி' என்றார்.

கூடியவரை தன்னைத் தானே காத்துக்கொள்ளலாம் என்ற சீவபோதம் சீவித்திருந்தவரை வீரமும், அது முடியாதென்பதை உணர அச்சமும் முறையே விளைந்து, பின் துணை தேடிய பொழுது ஆ ஆ என்னுடன் என்றும் இறைவன் பிரியாதிருக்கின்றாரே அவர் துணையாவர் என்ற துணிவு தோன்றுமாதலின் 'விடற்கு அரியாய்' என்றருளினார். அவ்வண்ணம் துணையாக உன்னை உணர்ந்த பிறகும் விடுதல் ஆகாது என்பார் அடுத்து 'விடுதிகண்டாய்' என்றார்.

ஐம்புலன்களின் கொடுமையறிதலும் இறைவனைத் துணை வேண்டுதலும் ஆகிய இவை பிரபஞ்ச வைராக்கியம் ஆதல் காண்க.

137 கண்டது செய்து கருணைமட்
டுப்பருகிக்களித்து
மிண்டுகின்றேனை விடுதிகண்
டாய்நின் விரைமலர்த்தாள்

பண்டுதந் தாற்போற் பணித்துப்
பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை
யாய குதுகுதுப்பே. 33

இ - ள்: எந்தையே! நினது கருணையாகிய தேனைப் பருகிக் களித்தும், மனத்தில் தோன்றியவற்றையெல்லாம் செய்து செருக்கித் திரிகின்ற என்னை, விட்டுவிடுவாயோ! தேவரீருடைய, மணமிக்க தாமரைமலர் போன்ற திருவடிகளை முன்னே அளித்தாற்போல இன்னும் அளித்து, தொண்டு செய்யக் கூவி அழைப்பித்து, என்னையும் அடிமையாக ஏற்று, என் ஞானவளர்ச்சிக்கு இடையூறான ஆசையைக் களைவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவரீர் திருக்கடைக்கண் அருள்பெற்றும் மிண்டுகின்ற என்னைப் புறக்கணிக்காது ஆட்கொள்ளுதல் வேண்டும் என விண்ணப்பிக்கின்றார்.

தாய் தந்தையர்கள், தங்கள் சலுகையைத் துணையாகக் கொண்டு தம் மக்கள் தவறுகள் பல இழைப்பினும் அவற்றைத் திருத்தி அவர்களை அன்புடன் அணைத்துக்கொள்ளுதல்போல, தேவரீரும் கருணைகாட்டியும் அடங்கியிராது மிண்டுசெய்வேன்; என்னையும் அடக்கி ஆட்கொள்ளவேண்டும் என்ற நயம் தோன்ற 'எந்தாய்' என இறைவனை விளித்தார்.

தந்தை உணவும், உடையும், அணி மணிகளும் நிரம்ப அளித்துத் தன் மகனை மகிழவைப்பதுபோல நீ கருணைத்தேனை ஊட்டிக் களிக்கவைத்தனை; அதனை உண்டவன் வண்டுபோல அவ்வானந்தத்துள் தன் செயலற்று அநுபவமே பொருளாக இருக்கவேண்டியிருக்க யானோ மிண்டுகின்றேன்; அது என் சிவபோத முனைப்பு என்பார் 'கருணைமட்டுப் பருகிக் களித்தும் மிண்டுகின்றேனை' என்றார்.

தூண்டது செய்து - தக்கன இன்ன தகாதன இன்ன என்று ஆராயாமல் மனத்திற்குத் தோன்றியபடி எல்லாம் செய்து. மிண்டுகின்றேனை - ஆண்டவன் கருணையைப்பெற்று, அதுவே அனுபவமாக அடங்கி இருக்கவேண்டிய நிலையை விட்டுத் தற்போத முனைப்பால் செருக்கித் திரிகின்ற என்னை.

உன்திருவடி, மலர்போன்ற மென்மையும், செம்மையும், மணமும் உடையதாகி ஐம்புல இன்பமாகவும் அதனைக் கடந்த

அறிவின் விருந்தாகவும் இருந்தது என்பார் 'விரை மலர்த் தாள்' என்றார்.

குருந்தடியில் குருவாக எழுந்தருளி முன்னே கொடுத்தது போல என்று பழைய அனுபவத்தின் ஞாபகம் கூறியது. அந்த இன்பம் இப்போது பிரிந்தமையால் இலதாயிற்று. இன்றும் அளித்தருளவேண்டுமென்பார் 'பணித்து' என்றார்.

தாள் தருதல் ஒன்றாலேயே என் தகுதியின்மைகள் யாவும் ஒழிந்துபோதலின் அடிமையாக ஏற்றுக்கொள்ளும் தகுதி பெற்றேன் என்பார் 'என்னைக்கொண்டு' என்றும், கருணை தந்தும் மீண்டு செய்தவன் மீட்டும் தாள் தந்தும் புறம்போவானோ என்று திருவுளத்து ஐயப்படாமல் வேலை கொடுக்கலாமென்பார் 'பணி செயக் கூவித்து' என்றும், நீ ஆட்கொண்ட நிலையிலும் ஆசையின் குதுகுதுப்புச் சிறிது உளது அதனை நீக்கவேண்டுமென்பார் 'குதுகுதுப்பாய களை களையாய்' என்றும் கூறினார். கூவுவித்து என்பதன் பிறவினைவிகுதி தொக்குக் கூவித்து என நின்றது. இறைவன் நேரே அழைக்குந்தகுதி தனக்கின்மையை அறிந்து வழியடியார் ஒருவரை விட்டு அழைப்பித்து எனப் பிறவினைவாய்பாட்டால் கூறினார்.

அடிகளே அநுபவம் முதிர்ந்தநிலையில் 'கூவி' எனல் இதனொடு மாறுபடாமையும் உணர்க. அடிமை வேண்டுவது முதல்வன்போல முதன்மையில் இருப்பதன்று. பணிசெய்தலே அவனுக்குள்ள பெருமை ஆதலின் பணிசெய்ய அழைப்பி என்கின்றார்கள். குதுகுதுப்பு - ஆசை மிகுதியால் மனம் ஒருநிலைப் படாதும் செய்வதறியாதும் பரபரத்தல். இது இந்நிலையை விளைக்கும் ஆசைக்கே வழங்குவதாயிற்று.

என் தடையாகிய ஆசையை அகற்றி முன்போலத் திருவடி மலரைத் தந்தருளவேண்டும் என்பதால் பிரபஞ்சவைராக்கியம் புலப்படுதல் காண்க.

138 குதுகுதுப் பின்றி நின் றென்குறிப்
பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண்
டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப்
பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக்
கயிலைப் பரம்பரனே. 34

இ - ள் : திருக்கைலை மலையில் விளங்கும் மேலானவற் றிற்கும் மேலானவனே! தேவரீர் திருவுள்ளக் குறிப்பின்படி ஒழுகுவதில் விருப்பமின்றி, என் மனம்போன போக்கிலேயே நின்று விரைகின்ற என்னை விடுவாயோ! வாழைப்பழத்தைப் போல என்னை மனங்கனியச்செய்து, மணம்நிறைந்து இனிமை பொருந்திய பூந்துகளோடு கூடிய தேனைப் போன்று என் எதிரில்வந்து நீ காட்சி அளிப்பது எப்போது? அத்தேனைப் போன்ற நின்னிடம் விரைவில் பழகச்செய் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவரீரது திருவுள்ளக்குறிப்பின் வழி யொழுகாது என் விருப்பப்படி நடக்கின்ற என்னைப் பரிபாக முறுத்திக் காட்சி வழங்குவது எப்போது? விளக்கியருளும் என வேண்டுகின்றார்.

இறைவன் பலதலங்களில் எழுந்தருளியிருப்பினும் இடையீ டில்லாத ஞானபரம்பரை திருக்கைலையினின்றே தொடங்குத லின் குருமூர்த்தியாக முதலில் இறைவனைக் கண்ட அடிகளார் திருவுள்ளத்தில் உபதேச பரம்பரையின் முதலிடமே எண்ணத் திற்குவரக் 'கயிலைப் பரம்பரனே' என விளிப்பாராயினர் என்க. கயிலை புண்ணியமே திரண்டாலொத்த புனிதமுடைமையால் எனினுமாம்.

என் குறிப்பு : யான் மலமறைப்புடன் இருவினைக்கீடாகப் பிறவியை அடுத்தவன். என் குறிப்போ வினைச் சார்பால் விளைவது, அறியாமை வயப்பட்டதாக மேல்வினைக்கு வித்தா வது. ஆதலால், வினைவயப்பட்டு என் மனம் போனவழியே ஒழுகலானேன் என்பார் 'என் குறிப்பில் நின்று' என்றார்.

நின் குறிப்பு : இறைவன் பரமகருணாநிதி. எல்லா உயிர் களும் தடைநீங்கிப் பேரின்பம்பெறச் சரியை கிரியை முதலிய வற்றையே செய்து சதா சிவசிந்தனையோடு இருக்கவேண்டும் என்று எண்ணுதலே நின்குறிப்பு என்பதால் உணர்த்தப் பெறுவது. கெடுமதி கண்தோன்றுதவாறு போல இறைவன் திருவுள்ளக்குறிப்பில் விருப்பம் பிறக்கவேண்டியிருக்க அதிற் பிறவாது என்போக்கிலே ஒழுகினேன் என்பார் 'நின்குறிப்பில் குதுகுதுப்பின்றி என்குறிப்பே செய்து' என்றார். விதுவிதுத் தல் - மிகவிரைதல். அதாவது பரபரத்தல். இப்பகுதிக்கு, செய் வன எல்லாவற்றையும் என்குறிப்பின்படியே செய்துவிட்டு நின் குறிப்பின்படியே செய்தேன் என்று சாதித்து மகிழ்வேனை என உரைப்பாரும் உளர். அப்பொருளில் விதுவிதுத்தல் - மகிழ்தல்.

வாழைப்பழம் தானே பழுப்பதும், புகையிட்டுப்பழுப்பதும் என இருமுறையான் பழுக்கும். என் மனம் தானே பழுப்பதாக இல்லை. இறைவன் திருவுள்ளக் குறிப்பை அறிந்தும் அதன் வழியொழுகாமை ஒன்றே அதற்கு அடையாளமாம். ஆகவே பழுக்கச்செய்யவேண்டும் என்பார் மனம் கனிவித்து என்று பிறவினை வாய்பாட்டாற் கூறினர். என்னை மனங்கனிவித்து என்பது பசுவைப் பாலைக்கறந்தான் என்புழிப்போலச் செயப் படுபொருள் ஈருருபிணைந்து வந்தது.

மணம் காற்றில் பரவித் தானிருக்கும் இடத்தை வெளிப் படுத்தும். பின்னர் அணுகிவந்தவர்கட்கு இனிமை வழங்கும். அதுபோலச் சிவகந்தம் பரந்து நாறி அடியேன் நுகர்ச்சிக்கு இனிமையாயுமிருந்தது என்பார் விரையார்ந்து இனிய மதுப் போன்று எதிர்ப்படுவதென்று? என்றார். மது - மகரந்தம். மது ஆகுபெயராகத் தேனடையை யுணர்த்தியதாகக்கொண்டு, தேனடையில் தேன் வெளிப்படுவதுபோல என்பாரும் உளர். இறைவன் வண்டு எச்சிலாகாத தேனுதலின் மகரந்தத்தோடு கூடிய பூவிலுள்ள மது என்றலே சிறப்புடைத்தாதல் தெரிக. மதுமது - தேனின் தெளிவு என்பர் சிலர்.

பயில்வி - பயிற்று. நின் குறிப்பின்கண்ணே ஒழுகப் பழக்கு என்பதாம். பயில்வி, முன்னிலை ஏவல் வினைமுற்று. பயில் விக் கயிலை எனப் பிரித்து வி பயில் கயிலை எனக் கூட்டி விண்ணிற் பயிலுகின்ற கயிலை என்பாரும் உளர்.

என் மனம் போனபோக்கில் செல்லுதலாகிய பிரபஞ்ச வாழ்வில் வைராக்கியத்தை உண்டுபண்ணி, தேன்போல நீ எதிர்ப்படும்போது அதிலே தோய்ந்து, நின் குறிப்பிலேயே ஒழுகப்பயிற்று என வேண்டிக்கோடலின் இது பிரபஞ்ச வைராக்கியம் ஆயிற்று.

139 பரம்பர னேநின் பழவடி
யாரொடு மென்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண்
டாய்மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய்
பிறவியை வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மன
மஞ்சிப் பொதும்புறவே.

இ-ள்: முயலாகிய கறையினையுடைய திங்களின் மெல்லிய அரும்புபோன்ற பிறையைப் பாம்புக்கு நேராகவைத்துச் சடையில் அணிந்தவனே! பெருமானே! ஐந்து தலைகளையுடைய பிறவியாகிய பாம்பு, இருவினை வயப்பட்ட அடியேனது உள்ளம் அஞ்சிப் பொதும்பில் புகும்வண்ணம் வந்து தாக்கும்; பரம்பரனே! உன் பழவடியார்களின் மெய்யன்புடன் கூடிய தூய ஒழுக்கத்தோடு, என் பொய்யொழுக்கத்தையும் விரும்புகின்ற அரனே! விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில் வாதவூர் வள்ளல், நான் நெறி தவறி நடத்தற்குக் காரணம் புலன்களாகிய ஐந்து தலைகளையுடைய பிறவியாகிற பாம்பு பொருதலாலேயாம்; என் பிழை அன்று; ஆதலால், பொறுத்தருளவேண்டுமென விண்ணப்பிக்கின்றார்.

அரும்பு என்றது சாபத்தால் தேய்ந்ததாயினும் இறைவனை அடைந்தமையால் கலை வளருந்தன்மை பெற்றது என்பதைக் குறிக்க என்க. முயற்கறை அன்மொழித் தொகையாய் முயல் உருவம் போன்ற களங்கமுடைய திங்களை உணர்த்தியதாகக் கொண்டு, அதன் மெல்லரும்பு - பிறை என்க. அர - அரா, பாம்பு. செய்யுளாதலின் குறியதனிறுதிச் சினைகெட வந்தது. சாதிப் பகையாகிய அவ்விரண்டையும் ஒக்கத் திருமுடியிலே வைத்தது காமக் குரோதாதிகளாகிய சீவகுணம் போக்கி, வேண்டுதல் வேண்டாமையின்மையாகிய சிவகுணமாக்கி ஆட்கொள்ளும் அருமை விளங்க என்க.

நேர்வைத்தல்-ஒன்றற்கொன்று அணிமையில் கண் பார்க்க வைத்தல். இங்ஙனம் பகைத்தன்மை நீக்கி ஆட்கொள்ளும் பரமனாகிய உனக்கு என் வஞ்சம் போக்கி ஆட்கொள்ளுதல் இயலாத ஒரு காரியமன்று எனக் குறிப்பித்தவாறும். பாம்பும் மதியும் உனக்கு அணியாயின. அவைகட்கு உயர்வு கிடைத்தது என்பார் 'அணிந்தாய்' என்றார்.

பிறவியை ஐவாய் அரவம் என்றது ஏகதேச உருவகம். பிறவியை அரவாக உருகித்து, அதன் ஐவாயைப் பொறிகளாக உருவகிக்காமையின். பொதும்பு - பொந்து அல்லது வளை. அரவிற்கு அஞ்சி எலி வளையுள் ஒளிதல்போல என் மனம் பிறவிக்கு அஞ்சி ஒடுங்குகிறது என்பதாம். "பொறி எனும் பெயர் ஐவாய்ப் பொங்கழ லரவின்கண்ணே வெறிபுலன் கன்றி நின்றார் வேதனைக் கடலுணின்றார்" எனப் பிறரும் கூறுதல் காண்க.

அடியாரொடு என் படிறும் விரும்பு அரனே என முதற் பொருளோடு வேறொருவர் பண்பை உடனிகழ்ச்சியாகக் கூறிய தால் அடியார் குணத்தோடு என் வஞ்சகத்தையும் விரும்பும் அரனே எனப் பொருள்கொள்க.

பழவடியார் - பன்னாள் இறைவனைப் பணிந்தேத்துவார். அரன் ஹரன் என்பதன் திரிபு. ஹரன் - போக்குபவன். என் படிற்றொழுக்கத்தைப் போக்கி ஆட்கொள்ளவேண்டுமென்னும் குறிப்பால் 'அரனே' என விளித்தார்.

பிறவிக்கு இது அஞ்சியதால் பிரபஞ்சவைராக்கியம் ஆதல் காண்க.

140 பொதும்புறு தீப்போற் புகைந்தெரி
யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண்
டாய்விரை யார்நறவந்
ததும்புமந் தாரத்திற் றாம்
பயின் றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தே னவிர்சடை
வானத் தடலரைசே. 36

இ - ள் : மணம்பொருந்திய தேன் துளும்புகின்ற மந்தார மலரில், எடுத்தலிசையைப் பாடிப் பின் படுத்தலிசையைப் பயிலும் வண்டுகள் அழுந்துதற்குக் காரணமாகிய செழித்த தேன் விளங்குகின்ற சடையினையுடைய ஞானகாயத்து விளங் கும் வலிமைமிக்க வேந்தர் வேந்தே! மரப்பொந்திற்பற்றிய தீயைப்போல உள் கனன்று புகைந்து எரிகின்ற அப்புலன்க ளாகிய தீப்பற்ற அதனால் வெதும்புகின்ற என்னை விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில் ஐம்புலத் தீ கொளுத்தும் கொடுமையை விண்ணப்பிக்கின்றார்.

மந்தாரம் - தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று. ஈண்டு ஆகு பெயராக அதன் மலரை உணர்த்திற்று. அடியார்களுடைய தியானநிலையில் இறைவனது திருமுடியில் மந்தார மலர்கள் நிறைந்திருத்தலையும், அவற்றில் தேன் ததும்புதலையும் அகக் கண்ணால் கண்டு அவ்வனுபவத்தை அறிவிக்கின்றார்கள். அந்த மலரின் மணம் 'விரையார்' என்பதனாலும், 'மந்தாரம்' என அதன் தோற்றமாகிய நிறமும், 'நறவந்ததும்பும்' என்பதனால்

தேனும் கூறப்பெற்றன. தேவுமலரை இறைவன் திருமுடியில் சூடியிருக்க, அவற்றில் மொய்க்க வருகின்ற வண்டுகள் இரைத்துக்கொண்டு அதாவது உச்ச ஸ்தாயியில் எடுத்தல் இசையில் பாடிக்கொண்டு வருகின்றன. அணுகி வந்ததும் படுத்தலிசையில் அதாவது மந்தஸ்தாயியில் பாடுகின்றன. தேனுகர்ந்ததும் அதில் அழுந்தி, சுவையே தானாய் தன்னுடைய அறிவுகெட்டுக் கிடக்கின்றன.

மந்தாரமலர் தெய்வமலர் என்பதும், இறைவன் திருமுடிக்கண் எம்மலர் இருப்பினும் அவற்றுள் வண்டு மொய்க்காது என்பதும் அடிகளார் அறியாதது அன்று. ஆயினும், வண்டின் மேல் வைத்து அனுபூதிமானின் உண்மைநிலையை உணர்த்துகின்றார் எனத்தெரிக.

மந்தாரமலரின் வண்ணம் உண்மையையும், மணம் அறிவையும், தேன் இன்பத்தையும் அறிவிப்பன. இம்மூன்றையும் ஒருசேரப் படைத்த மந்தார மலர், சத் சித் ஆனந்தவடிவினனாகிய பரசிவன். வண்டு, இறைவனை அடைந்து முத்தியின்பம் பெறுதற்காகப் பரிபாகமுற்ற உயிர். உயிர்கட்குப் பக்குவம் முதிர்தற்குமுன்பு உயிர் தாங்கள் கற்ற ஏட்டுநூல்களில் தருக்க வாதம் செய்து தருக்கி, வீண்வாதஞ்செய்து இரையும். படித்த படிப்பும், தன்னறிவும் ஒன்றுகின்றபோது சிந்தனையளவிலே அமையும். சிந்தித்துத் தெளிந்தபோது இன்பமே தானாய் நிட்டை கூடி மவுனமாகும். இவற்றை முறையே பாசஞானம் பசுஞானம் பதிஞானம் என்பர். இரைந்தாலும், எண்ணினும் அரன் அனுபவத்திற்கு வாரான். பதிஞானம் ஒன்றுனே அழுந்தி அறியச் சிவானுபவம் சித்திக்கும். அதுவே வீட்டுநிலை. இதனை உணர்த்தவே இவ்வண்ணம் கூறியதாம். மந்தாரம் - நிலவுலகப் பூவாகிய கொக்கிறகுமந்தாரமெனலுமாம்.

வானம் - சிதாகாயப் பெருவெளி. பொதும்பு - மரப்பொந்து. மரப்பொந்தில்பட்ட தீ உள்ளே கன்று புகைந்து மரத்தையே கொன்றுவிடும். அதுபோல என் புலத்தீ கண் காது மூக்கு நாக்கு மெய் வழியாகப்பற்றி, உடலைப் பற்றிநிற்கும் உயிராகிய என்னை வருத்தும் என்பார் 'புலன் தீக்கதுவ வெதும்புறுவேனை' என்றார்.

வெதும்புகின்ற இந்நிலையில் தேவரீர் அருள்மழைபெய்து காப்பாற்றலாமேயன்றி, வெதுப்புநிலையில் முற்றி வெந்து சாம்பராய் வீழின் பின்னர், செய்யலாவது ஒன்றில்லை; வருந்தும்போது காக்கலாமேயன்றி இறந்த பின்னர் ஆவதொன்று

இல்லையே; ஆதலால் காக்கவிருப்பாயின் இப்போதே விரைய விட்டிடாமல் காக்கவேண்டும் என விண்ணப்பித்துக்கொண்டதாம். 'புலன் தீக்கதுவ வெதும்புறுவேனை' என்பது பிரபஞ்ச வைராக்கியம் உணர்த்தியது.

அதும்பும் - ஒதுங்கும். கொழுந்தேன் - செழுமையான தேன் என்னும் வண்டுகள். தாரம் பயின்று மந்தாரம் முரல் வண்டினைக் (கண்டு) அதும்பும் சடையினையுடைய அரசே எனப் பொருள் கொள்வாரும் உளர். வண்டு, தேன் என்பன வண்டின் சாதி நான்கினுள் நல்ல நாற்றத்தில் செல்லுங்குணமுடையன. தேன் மந்தாரத் தேனுண்டு, இன்னும் வண்டு உண்டிலதே என எண்ணித் தான் ஒதுங்கிக்கொண்டு அதற்கு இடம் கொடுத்தல்போல மெய்யடியார்கள் நின்னருட்டேன் உண்டு கொழுத்திருக்க, யானும் உண்டு மகிழ்தலாகாதா என்னும் குறிப்பு உணர்த்துவதாக அவர் உரைப்பர்.

141 *அரைசே யறியாச் சிறியேன்*
*பிழைக்கஞ்ச லென்னினல்லால்*
*விரைசேர் முடியாய் விடுதிகண்*
*டாய்வெண் ணகைக்கருங்கட்*
*டிரைசேர் மடந்தை மணந்த*
*திருப்பொற் பதப்புயங்கா*
*வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை*
*தான்வந் தடர்வனவே.* 37

இ - ள் : வெண்மையான பற்களையும், கரிய கண்ணாகிய கடலையும் பொருந்திய உமாதேவியாரைக் கூடிய அழகிய பொன்னிறமான திருவடிகளையுடைய பாம்பையணிந்தவனே! மலைகள் பல ஒருங்குகூடி வந்து நெருக்கினாற்போல, என் வல்வினைகள் பலவும் ஒன்றுசேர்ந்து வந்து நெருக்குவன; ஆதலால், அரசே! மணம்பொருந்திய சடையையுடையவனே! செய்வதறியாச் சிறுமையேனாகிய யான் செய்த பிழைக்காகப் புறக்கணியாது, அஞ்சாதே என்று நீ கூறினையல்லது வேறு கதியில்லையாம்; ஆதலால் விட்டுவிடாது பாதுகாத்துக்கொள் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடியேனை வினைகள் வந்தடர்க்கின்றன; ஆதலால் அபயம் அளித்தருளவேண்டும் என விண்ணப்பிக்கின்றார்.

அம்மையின் நகை இறைவன் நகைபோன்றதன்று. அருட்குறிப்பு ஒன்றேயுடையது என்பார் 'வெள்நகை' என்றார்.

கருங்கண் திரை - கரிய கண்ணாகிய கடல். கண்ணைக் கடல் என்றது அருள்வெள்ளம் அளவிடற்கரியதாய்த் தேங்கி நிற்றலின். திரை - அலை. ஆகுபெயராகக் கடலை உணர்த்தியது. கண்ணைக் கடலாக உருவகித்தல் இலக்கிய மரபு. மணந்த - கூடிய. உமாதேவியைக் கூடிய புயங்கன் என்க. புயங்கன் - பாம்புணியும் பரன். இறைவன் போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரியுங்குறிப்பில் உமாதேவியையும், போகியாகிற பாம்பையும் உடையவன் எனக் குறிப்பித்தவாறும். பாம்பு போகத்திற்சிறந்தது என்பதைக் காம நூலும் உணர்த்தும்.

திரு - ஞானம். பொன் - செல்வம். ஆகவே இறைவன் திருவடி பொன்தந்து போகம் புணர்ப்பதும், மெய்ப்பொருள் தந்து திரு புணர்ப்பதும் ஆகிய போக மோட்சங்களைத் தர வல்லது என்பதைத் 'திருப்பொற்பதப் புயங்கா' என்னும்பகுதி விளக்கும்.

ஒருவரையின் ஒரு சிறு கல் உருண்டு வீழ்ந்தாலே தாங்க முடியாது. ஆகவே, மலைவரின் அதுவும் பல மலைகள் திரண்டு வரின் எங்ஙனம் தாங்க இயலும். அதுபோல வினைகள் ஒருங்கு திரண்டு வருகின்றன; தம்மகப்படுத்தி நெருக்குகின்றன என்பார் 'வரைசேர்ந்து அடர்ந்தென்ன வல்வினைதான் (சேர்ந்து) வந்து அடர்வன' என்றார். வல்வினை - தம் பயனால் கொடிய வினைகள்.

வினைகள் இவ்வண்ணம் படைதிரண்டுவரின் பாதுகாக்கும் திறல் தனி மனிதனுக்கு இல்லை, ஓர் அரசனால்தான் இயலும் என்பார் 'அரசே' என விளிக்கின்றார்.

பிழை உணர்தல் ஒன்றே பிழை செய்யாமைக்கு முதற்படி. அதனை முழுதும் உணர்ந்திருக்கின்றேன். இனி ஒருக்காலும் பிழை செய்யேன். அன்றியும், இது பிழை என்பதை அறியாத சிறுமை உடையேன். சிறியோர் சிறு பிழை செய்வாராயின் பெரியோர் அப்பிழை பொறுத்தல் கடன். ஆதலால் பிழை பொறுத்து அஞ்சற்க என அபயம் அளித்தருள்வாயாக. அன்றி, விட்டிடாதே என்ற விண்ணப்பத்தை 'அறியாச் சிறியேன் பிழைக்கு அஞ்சல் என்னின் அல்லால் விடுதிகண்டாய்' என்ற பகுதி விளக்கும். பிழைக்கு அஞ்சல் என்னின் என்பது பிணிக்கு மருந்து, துன்பத்திற்கு யாரே துணையாவார் என்பதைப்போல, பிழைகளை நீக்குதற்பொருட்டு அஞ்சற்க என்று கூறின் அல்லது என்க.

துன்பங்கள் மலைபோல் ஒருங்கு திரண்டு வருகின்றன என்றது பிரபஞ்ச வைராக்கியம்.

142 அடர்புல னால்நிற் பிரிந்தஞ்சி
யஞ்சொனல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண்
டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர
சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்றனி
நீக்குந் தனித்துணையே. 38

இ-ள்: எங்கும் விரிந்து எரிகின்ற தீப்பிழம்பை ஒத்தவனே! சுடுகாட்டை இடமாகவுடையவனே! அடியார்களுக்கு அமுதம்போல மிக இனிமையானவனே! தொடர்ந்து பற்றுதற்கு அரியவனே! தனித்த அடியேனுடைய தனிமையைப் போக்கும் ஒப்பற்ற துணையே! நெருக்கி வருத்துகின்ற புலன்களால் நின்னைப் பிரிந்து புலன்களுக்குப் பயந்து, அழகிய சொல்லினையுடைய பெண்களின் முழைஞ்சுபோலும் உறுப்பினை விடாது பற்றிக்கிடக்கும் அடியேனை விட்டுவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவரீரைப் பிரிந்ததற்குக் காரணம் ஐம்புலன்களே என்றும், பிரிந்த யான் மங்கையர் தொடர்பை விடாது பற்றி நின்றேன் ஆயினும் கருணைப் பெருமானாகிய தேவரீர் விடலாகாது என்றும் விண்ணப்பிக்கின்றார்.

எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும் இறைவனை அவன் காட்டியநெறியில் நின்று காணும் சிவஞானிகள் இறைவனைப் பேரொளிப் பிழம்பாகவே காண்பர் என்னும் பொருள்பட [illegible] என்று சிவாகமம் சொல்லுகிறது. உலக ஒளிகள் போலாது இறைவன் அகவிருளாகிய அறியாமையையும் போக்குதலின் உள்ளும் புறம்பும் எங்கும் விரிந்தே எரியும் சுடர் அனையாய் என்றார். சுடரே என்றவர் ஈண்டு அனையாய் என்றது கண்ட சுடரைக் கொண்டு காணாத இறைவன் பேரொளிக்கு எல்லை ஓரளவு உரைக்கப்புகுந்த அவ்வளவே என்க. பின்னரும் பலவிடங்களில் அடிகளார் ஒளிப்பரப்பாகவே இறைவனைக் கண்டு கூறுதல் காண்க.

சுடுகாடு, மகாசங்காரமாகிய பேரூழிக்காலத்து இறைவன் எல்லாரையும் எல்லாவற்றையும் தத்தம் காரணங்களுள் ஒடுக்கித் தானொருவனே விளங்குமிடம். அக்காலத்து அவ்விடத்து விளங்குபவர் புனருற்பவமாகிய சிருட்டிக்கு நிமித்தகாரணனாய், சங்கார கர்த்தாவாய் இருக்கும் சங்கரனன்றி வேறொருவரும் இல்லாமையால் அவனே முதல்வன் என்பதைச் 'சுடுகாட்டரசே' என்பதனால் உணர்த்தியவாறு.

பேரொளிப்பிழம்பாய், தனிமுழுமுதலுமாய், அரியனாயிருக்கும் இறைவன் தன் அடியார்களுக்கு அமுதம்போல இனியனாக எளியனுமாகின்றான் என்பது 'தொழும்பர்க்கு அமுதே' என்பதனால் உணர்த்தப்பெறுகின்றது.

எளியனாயினும் தற்போத முனைப்பால் வலிந்து அறிவேன் பற்றுவேன் என முயற்சிப்பார்களுக்குத் தொடரவும் அரியனாதலை விளக்க 'தொடரவும் அரியாய்' என்றார். அடிமுடியைக் காண்பேன் என முனைத்தெழுந்த மால் அயன் வரலாற்றைக் காண்க. பத்திவலையிற் படுபவனாகிய இறைவனைச் சுந்தரர் பெருமானன்றி வேறு யார் தொடர இயலும் என்று சேக்கிழார் பெருமான் வியத்தலும் காண்க.

இங்ஙனம் ஒளியாய், முதலுமாய், எளிமையாய், அருமையாய் இருக்கும் இறைவன் அடியேனுக்கு ஒப்பற்ற துணையாகின்றார் என்பது தோன்றத் 'தனித்துணையே' என விளிக்கின்றார்.

தன் வாழ்விற்கு மிக இன்றியமையாத பொருள் ஒன்றனைத் தன்மடியில்வைத்து வேற்றலுவல்மீது சென்றநினைவால் மறந்த ஒருவன் அச்சார்பகன்று வீடு திரும்பியதும் நினைவு வந்து மடியில் வைத்ததை உணருகிறான். இறைவன் எப்போதும் உடனிருந்தும், உலகியலைச்சார்ந்து உடனிருப்பதை அறியாத நிலையில் - உலகச்சார்பால் விளையுந்தீமையின் பெருக்கத்தைச் சிந்திக்கிறநிலையில் தனக்கு யாரும் துணையில்லாமையையுணர்கிறார். புறச்சார்பு நீங்கித் தலைவனைச் சாரும்போது தனக்கு அவன் துணையாக உடனிருப்பதைத் தனிநீக்குந்தனித்துணையாக விளித்து இன்புறுகின்றார்.

அடர்புலன் - ஒன்றேடொன்று தொடர்புடையதாக வந்து அடர்க்கின்ற புலன். நின் பிரிந்து - உன்னை மறந்து; குருவாக வந்த தேவரீரைப் பிரிந்து எனலுமாம். பேய்க்குப் பயந்தவன்

புலிக்குகையுள் நுழைந்தது போல ஐம்புலன்களுக்கு அஞ்சிய யான் ஐம்புலன்கள் ஆரத்துய்க்கும் ஒருபொருளாய மாதர் விடரைச் சேர்ந்தேன். வங்கிளைச்சென்று பற்றும் வல்லுடும் பென்ன விடமுடியாதவனாகப் பற்றிநின்றேன் என்றார். நல்லதை விடுதலினும் தீயவற்றைப் பற்றுதலில் விரைந்த அவா மிகுதி அறிவிக்கப்பட்டது.

அஞ்சொல் - சிங்கி குளிர்ந்தும் கொல்லுவதுபோலக் கேட்டற்கினிதாய், பயனில் தீதாயிருக்கும் அழகிய சொல். நல்லார் அவர்தம் விடர் என்பதற்கு நல்லாரைப்பற்றி அறிமுகப்படுத்தப் பயனில்சொல் பகரும் அவர்களின் கையாட்களாகிய விடர் என்பாரும் உளர். விடர், காமுகர் தூர்த்தர் இனத்தவர்.

இக்குறை நீக்குதல் உம்முடைய பேராற்றலால் முடியாத தொன்றன்று; அதற்காக நீ விட்டுவிடுதலாகாது; என்னுடைய குறையைப்போக்கி ஆட்கொள்ளவேண்டும் என்பார் விட்டிடுதி கண்டாய் என்றார்.

'அடர் புலனால் நிற்பிரிந்து அஞ்சி அஞ்சொல் நல்லாரவர் தம் விடர் விடலேனை' எனத் தன் குறையறிந்து இரங்குதலால் பிரபஞ்சவைராக்கியமாதல் அறிக.

143 தனித்துணை நீநிற்க யான்தருக்
கித்தலை யானடந்த
வினைத்துணை யேனை விடுதிகண்
டாய்வினை யேனுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முத
லேயெனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்றுய
ராக்கை யின் திண்வலையே. 39

இ - ள்: தீவினையேனாகிய என் உள்ளத்திற்குத் துணையானவனே! என் நல்வாழ்விற்குக் கிடைத்த முதற்பொருளே! எனக்கு இளைத்தகாலத்துப் பயன்படும் சேமிப்பான செல்வமே! ஒப்பற்ற துணையாக நீ இருக்க, நான் உன் துணையைக் கொண்டு ஈடேறமாட்டாமல் செருக்கித் தலையால் நடந்த வினையைத் துணையாகவுடைய என்னை விடுவாயோ! உடலாகிய திண்ணிய வலையிற்பட்டு எய்தும் துன்பத்தைச் சிறிதும் பொறுக்கலாற்றேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் எனக்குத் துணையாகத் தேவரீரிருக்கவும் யான் செருக்கித் தலைகீழாக நடந்தேன்; தினைப்பொழுதுகூட இவ்வுடற்சிறையில் இருக்க இயலாது என விண்ணப்பிக்கிறார்.

வினை, புகையுண்மையான் தீயுண்மையறிதல்போலத் தன் பயனாலன்றி அறியவொண்ணாததாய், அருவாய் உயிரைப்பற்றி நிற்பது. அதற்குத் துணையாவாரும் புரியும் அருளானன்றி அறிய ஒண்ணாதவராக அருவாக உயிரைப்பற்றி இருத்தல் வேண்டும். இறைவன் அங்ஙனமாக இருக்கின்றார் என்பதனை 'வினையேனுடைய மனத்துணையே' என விளக்கியருளுகின்றார். மாயையைப்பற்றி நிற்கும் மனத்திற்குத் துணையாகி நம்மைப் பற்றி நிற்கச்செய்யின் வினையோராது என்பார் 'மனத்துணையே' என்றார் எனலுமாம்.

வாழ்முதல்-வாழ்விற்கு இன்றியமையாத கைம்முதல், "முதலிலார்க்கு ஊதியமில்லை" என்புழியும் இப்பொருளில் வருதல் காண்க. பின்னரும் 'போற்றியென் வாழ்முதலாகிய பொருளே' என்றருளுகின்றமை இதனை நன்கு விளக்கும். வாழ்க்கை எடுத்த பிறவியில் இவ்வுலகில் வாழ்கின்ற வாழ்க்கையொன்று, இப்பிறவியில் நம்பனருள் சுற்றே நக அதனால் வினையும் வீட்டிற்கு வாயிலான ஞானவாழ்க்கை ஒன்று, காமியப் பயனாகிய தவத்தால் விளையும் தேவராதிய மறுமைவாழ்க்கை ஒன்று. எல்லா வாழ்க்கைக்கும் முதல்வன் சிவனேயாதலின் 'வாழ்முதல்' எனப் பொதுப்படக் கூறினார் ஆயினும் தம்நோக்கு வீட்டின்ப வாழ்க்கைக்குரிய முதல் என்பதே என்பதைத் 'துயராக்கையின் திண்வலை தினைத்துணையேனும் பொறேன்' என்பதனால் குறித்தல் தெளிக. எய்ப்பு-இளைப்பு. எய்ப்பினில்வைப்பு-சேமநிதி. வினை வயப்பட்டு உழன்று ஓய்ந்தபோது இறையருள் உறுதுணையாய் உதவுதலின் 'எய்ப்பினில் வைப்பே' என்று விளித்தார். பரிபாகமுற்ற நிலையினும் வாசனாமலம் தாக்கி முத்தியின்பம் துய்த்தற்கு இடையீடு பட்டுழி இறைவன் தன்னையே தந்து, பேரின்பத்திருத்தலின் எய்ப்பினில் வைப்பாகக் கூறினார் என்றலுமாம்.

உலகத்துத் துணையாவார் பலரும் உண்ட கைகாயப் பிரிவாரும், கொடுப்பது குறையில் பிரிவாரும், உடற்றொடர்பால் துணையாகிக் காலவேறுபாட்டானும் இறப்பானும் பிரிவாரும் ஆகக் கழியக் காண்கின்றோம். எல்லாப் பிறவியினும் எஞ்ஞான்றும் நீங்காத் துணையாய் இருப்பவன் ஈசன் ஒருவனே என்பார் 'தனித்துணை நீ நிற்க' என்றார்.

இறைவன் எஞ்ஞான்றும் துணையாயின் துன்பம் ஏன் வருத்துகின்றது எனின், அதுவும் உயிர்களைத் தூய்மை உறுத்துதற்காகச் சிவன் செய்யும் கருணைவகையாம் என்க.

வழித்துணையோடு மலைவழி போகின்றவன் துணையைப் பிரிந்து கொடுவழி சென்று வருந்தியதுபோல, நீ இருக்கவும் யான் பிரிந்து துணையல்லாத கன்மங்களைத் துணையாக நம்பி மயங்கிச் செருக்கி, தலைகீழாக நடந்தேன் ஆயினும் விடுதலாகாதென வேண்டிக்கொண்டதாம்.

இறைவன் தனித் துணையாக நின்றதனால் தருக்கித் தலைகீழாக நடந்தேன் என்று உரை காண்பார் சிலர். சிவஞானியர் துணை அவஞானத்தை ஆக்காததுபோல, சிவத்துணை மலகாரியமாகிய செருக்கை விளைவிக்காமை மட்டுமன்றித் தீய பயனையும் விளைவியாது ஆதலின் அவ்வுரை பொருந்துமேற் கொள்க.

வலை, பறவை விலங்கு முதலிய பகுத்தறிவற்றவைகளைப் பிடிக்கும் கருவி. உடல் ஒரு வலை. அதனுள் அகப்பட்ட உயிர் மலத்தால் அறிவு திரிந்த புள் அல்லது விலங்கு போல்வது. வலையுள் அகப்பட்ட உயிர், சுதந்திரம் இழந்து வேடன்கையதாய் வருந்தும்; உடலுள் அகப்பட்ட உயிர் வினைவயப்பட்டு உழலும்; இந்நிலையைத் தினையளவு காலங்கூட என்னால் இனிப் பொறுக்கமுடியாது என வேண்டுகிறார்.

வலையுள் அகப்பட்ட ஒன்று வலி மிக்கதாயின், வலையை அறுத்துக்கொண்டும் தப்பும். இவ்வுடலில் அகப்பட்ட உயிர் வினைக்கயிறு தானாகக் காலத்து அறுந்தாலன்றி, தப்ப இயலாதென்பதனைத் 'திண் வலையே' என்றதால் குறிப்பித்தார்.

இது உலகத்து உடலோடு கூடி வாழ்தலை வெறுத்துக் கூறுகின்றமையான் பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

*144* வலைத்தலை மானன்ன நோக்கியர்
நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண்
டாய்வெண் மதியினொற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர
னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாண்மண
வாளவென் வாழ்முதலே. *40*

இ - ள்: வெண்மையாகிய திங்களின் ஒரு கலைப் பிறையைத் தலையின்கண் அணிந்தவனே! கருணைக்கு இருப்பிடமானவனே! கைலாயம் என்னும் மலையின்கண் உள்ள தலைவனே! மலையரசன் மகளாகிய உமாதேவியின் கணவனே! என் வாழ்வுக்கு மூலகாரணமானவனே! வலையில் அகப்பட்ட மானின் கண்போன்ற கண்களையுடைய பெண்களின் பார்வையாகிற வலையில்பட்டு மயங்கித் திரிந்த என்னை விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், மகளிர் கண்வலைப்பட்டுக் கலங்கிய என்னை விடேற்க என்று வேண்டுகின்றார்.

வெண்மதி என்பதில் அடைமொழி இனம் விலக்க வந்தது அன்று; இயல்பு கூறினது. இது இனச்சுட்டில்லாப் பண்பு கொள் பெயராகும். தக்கனுடைய பெண்கள் இருபத்தெழுவரையும் திங்கள் மணந்திருந்தான். அவருள் உரோகிணி மீது காதல் மிக்கு ஒழுகிவர, ஏனைய மகளிர்கள் தங்கள் தந்தையிடம் முறையிட்டனர். அவன் சொல்லியும் திங்கள் திருந்தாமையால் 'தக்கன் உன் கலைகள் யாவும் குறைந்தொழிக' எனச் சபித்தான். அதனால் அவன் கலைகள் குறைந்தன. ஒற்றைக் கலையுடன் ஒளி குன்றி, சிவபெருமானிடம் சென்று குறையிரந்தான். சிவபெருமான் அஞ்சற்க எனக் கூறித் தன் தலைமீது எடுத்து அணிந்தார். கலை நாள்தோறும் வளரவும் குறையவும் ஆகுக எனச் சாபவிடை தந்தார். திங்கள் கலைகள் வளரப் பெற்று வெள்ளொளி பெற்று விளங்கினான் என்பது வரலாறு.

இறைவனை ஒற்றைக் கலைத் தலையா என்றது இறைவன் அஞ்சி அடியடைந்தாரைத் தலைமேல் தாங்கிக் காப்பவன் என்னும் கருணைத்திறத்தைக் காட்டுவது.

ஆகரம் - இருப்பிடம். கருணாகரன் - கருணைக்கு இருப்பிடமானவன். கருணை - திருவருள். திருவருள் இறைவனது சத்தி. இறையும் சத்தியும் என்றும் பிரியாதவை. ஆதலால், கருணாகரனே எனவிளித்தார். பிறையைத் தலைமேல் சூடியதையடுத்து, கருணாகரனே என்றதன் இயைபை எண்ணி இன்புறுக.

கயிலாயம் - விளையாட்டிற்கு உரிய இடம், கயிலாய மலை. அம்மையப்பரின் பஞ்சகிருத்திய பரமானந்தத் திருவிளையாட்டிற்கு இடமாவது என்னும் காரணம் பற்றிவந்த பெயர். அத்தகைய கயிலாய மலைக்குத் தலைவன் சிவனே என்பார் 'கயிலாயமென்னும் மலைத்தலைவா' என்றார்.

ஒரு மலைத்தலைவன் ஒரு மலைமகளையே மணத்தல் இயை பாதலின் அடுத்து 'மலையாள் மணவாள' என்றார்.

இவ்வண்ணம் அம்மையப்பராக விளங்கும் நீவிர், என் னுடைய வாழ்விற்கு முதற்காரணமாய் அமைந்திருக்கின்றீர் என்ற குறிப்புத்தோன்ற 'வாழ்முதலே' என விளித்தார்.

மானன்ன நோக்கு என்புழி மான் நோக்கன்ன நோக்கு எனச் சினையொடு சினையை உவமித்ததாகக் கொள்க. வலையி லகப்பட்ட மானின் நோக்கு அச்சத்தால் மிக்க மருட்சியடையு மாதலின் மருட்டும் மங்கையர்நோக்கிற்கு உவமித்தார். வலையி லகப்பட்ட உயிர் வலைஞன் கையது ஆதல்போல, மாதர் கண் வலையில் சிக்குண்ட யான் மயங்கித்திரிந்தேன் என்பார் 'நோக் கின் வலையிற்பட்டு மிலைத்தலைந்தேன்' என்றார். மிலைத்தல் - மயங்குதல். அலைந்தேனை என இறந்தகாலத்தால் கூறினார், இப்போது அக்குற்றமில்லை என்பதைப் புலப்படுத்த.

மங்கையர் கண்வலைப்பட்டுக் கலங்கி அலைந்தேன் என்பத னால் இது பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

145 முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந்
 நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதி கண்
 டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ
 னேமுறை யோமுறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங்
 காவென் சிவகதியே. 41

இ - ள்: தேமல் படர்ந்தனவும் பூண்களை அணிந்தனவு மாகிய முலைகளையுடைய உமாதேவியை இடப்பாகத்திலே உடையவனே! எனக்கு வீடுபேறாக உள்ளவனே! ஆசையாகிற கொடிய நீரில் மூழ்கி, சிவந்த வாயினையுடைய பெண்களாகிற முதலை கடிக்க நடுங்குகின்ற என்னை விட்டுவிடுவாயோ? புலால் நாறுகின்ற ஊன் செறிந்துள்ள நோயை விளைவிக் கின்ற இவ்வுடலைப் பொறேன். இவ்வுடலில் என்னை இருத் துதல் சிவபெருமானே! முறையோ? முறையோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், மகளிர் காமநீரில் மூழ்கி நடுங்குகின்ற என்னைக் கைவிடலாகாது என வேண்டுகின்றார்.

கூத்தப்பெருமான் பக்கத்திலிருந்தும் இறைவி சிவகாமி ஆதலால், இறைவன் பிரிந்ததுபோலத் திதலை பூத்திருத்தலின் 'திதலை செய் முலை' என்றார். பரஞானம் அபரஞானமாகிய இரண்டுமே அம்மையாருக்கு முலைகளாக அமைந்துள்ளன. சிவகதி - வீடுபேறு. புறச்சமயிகளாகிய சமணரும் வீடுபேற்றினைச் சிவகதி என அழைத்தல் சிவநெறிக்குள்ள மேன்மையினைக் குறிப்பதாம். வெம் நீர் - கொடிய நீர். தன்னிடைப்பட்டாரை ஆழ்த்தும் கொடுமை உடைமையின் வெந்நீர் என்று அருளப்பட்டது. வேட்கை - பொருள்களின்மேற் றோன்றும் பற்றுள்ளம். அதனைக் கொடிய நீராக உருவகித்தார்.

செவ்வாய்ச்சியர் - சிவந்த வாயினையுடையார். செவ்வாய்ச்சியராகிய முதலை கடிப்ப வேட்கையாகிற கொடிய நீரில் மூழ்கி நடுங்குவேனை விடுதி கண்டாய் என்றார்.

சார்ந்தாரை நோய் முதலியவற்றால் துன்புறுத்திச் சுடுதலால் காமத்தை வெந்நீர் என்றார். "உள்ளினும் சுட்டிடும் உணரும் கேள்வியிற் கொள்ளினும் சுட்டிடும்" என்பர் கச்சியப்ப சிவாசாரியர் என்பர் சிலர். முதலை வெந்நீரில் இராது ஆதலின் வெந்நீர் என்பதற்குக் கொடுந்தன்மையுடைய நீர் எனப் பொருள்கோடலே பொருந்துவதாகும். முதலை நீருள் எல்லாவற்றையும் வெல்லுந்தன்மையதாதல் போல மகளிரும், காமநீர்ப் பெருக்கில் சிக்குண்டவர்கள் விசுவாமித்திரர்போன்ற தவத்தினராயினும் துன்புறுத்துவர் என்பதாம். இப்பகுதிக்குச் செந்நெட்டிபோலச் சிவந்த வாயினையுடைய மகளிரின் காதலென்ற விரும்பத்தக்க நீரில் அச்சம் தோன்ற மூழ்கி எனப் பொருள்கோடலும் ஆம்.

விதலை - நடுக்கம். ஆழ் நீரில் மூழ்கி அவதிப்படும்போது நீ கைவிடலாகாது என விண்ணப்பிக்கின்றார்; இவ்வுடலைப் பொறேன் என்று.

உடல், முடைநாற்றம் வீசும் ஊனுலானது; நோய் நிறைந்தது. ஆதலால், இவ்வுடலினுள் இருக்க ஆற்றேன் என்பார் 'விடக்கூன் மிடைந்த சிதலைச்செய் காயம் பொறேன்' என்றார். அங்ஙனம் பொறுக்கலாற்றாமையால் 'சிவனே! முறையோ முறையோ' எனக் கூவி முறையிடுகின்றார். பொறுத்தற்கரிய துன்பத்தில் சிக்கிய ஒருவன் பாதுகாப்பாரைக் கண்டவிடத்து அரற்றுதலும் அழைத்தலும் இயல்பாதலின், சுகத்தைச் செய்யும் மங்கல வடிவினனாகிய சிவசங்கரனைக் கண்டபோது, சிவனே முறையோ முறையோ என அரற்றுகின்றார்.

இவ்வண்ணம் இப்பாடல் உடலினிழிவைப் புலப்படுத்திப் பொறுக்க முடியாமையை விண்ணப்பித்தலால் பிரபஞ்சவைராக் கியமாயிற்று.

146 கதியடி யேற்குன் கழறந்
தருளவு மூன்கழியா
விதியடி யேனை விடுதிகண்
டரய்வெண் டலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை
பைத்துச் சுருங்கவஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக்
குஞ்சடை மன்னவனே. 42

இ-ள்: வெண்மைநிறமான கபாலத்துளையில் இருக்கும் ஒளிபொருந்திய பாம்பு அருகிலுள்ள பிறைமதியைப் பார்த்துச் சிறிது படமெடுத்து, சுருங்க, அதுகண்டு மதி அஞ்சிக் கங்கையில் மூழ்கி மறையும் சடையினை உடைய அரசே! அடியேனுக்கு உன் திருவடிகளைக் கதியாகத் தந்தருளவும், இவ்வுடல் உள்ளவரை நீங்காத பிராரத்த கன்மத்தையுடைய அடியேனை விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், திருவடியைப் பெற்றும் பிராரத்தவினை தடையாயிருந்து பரமுத்தி அடையவிடாமல் தடை செய்கிறது; இந்நிலையில் விடலாகாது என விண்ணப்பிக்கின்றார்.

வெண்டலை - ஊன் கழிந்த பிரமனுடைய மண்டையோடு. அதனை இறைவன் தன் சடையில் தரித்திருக்கின்றார் ஆதலின், அதன் கண் காது மூக்குத் தொளைகளில் பாம்பு பதிவிருக்கிறது என்பதை உணர்த்த 'வெண்டலை முழையிற் பதியுடை வாள் அர' என்றார். முழை - தொளை: பதி - பதிதல். இது முதனிலைத் தொழிற்பெயர்: தங்குதல். அர - பாம்பு. அரா என்பது குறியதன்கீழ் ஆக் குறுகி வந்தது. பார்த்து என்பதற்கு மதியை எனச் செயப்படுபொருள் வருவித்து உரைக்க. இறை பைத்து - இது நமக்கு உணவாம் எனக் கருதி இருக்குமிடத்தையும் மறந்து சிறிது படமெடுத்து சுருங்க - இருக்குமிடம் இறைவன் திருமுடியாயிற்றே! பகையும் சினமும் இல்லாத அமைதிச் சூழலாயிற்றே! ஆணவமகற்றும் இடமாயிற்றே என்ற எண்ணம்தோன்ற அஞ்சி, படம் தானே சுருங்க.

நெடு நீர் - மிக்க நீரையுடைய கங்கை. மதி கங்கையில் மூழ்கி மறையும். இவ்வண்ணம் அஞ்சிய அரவுக்கும், அஞ்சிய

மதிக்கும் புகலிடமான கபாலத்தையும் கங்கையையும் ஒருசேரத் தன்சடையில் அணிந்து எல்லா உயிர்களும் பகை தணிந்து வாழக் கடைக்கணித்துவருதலின் 'சடை மன்னவனே' என விளித்தார்.

பல பிறவிகளில் ஈட்டிய சிவபுண்ணியச் சிறப்பானும், இப் பிறவியில் [தேவரீர் திருக்கடைக்கண்ணோக்கியருளிய பரிபாகத் தானும் அடியேற்குத் திருவடியைத் தந்து ஆண்டுகொண்டருளினீர். கிடைத்தற்கரிய தேவாமுதம் கிடைத்தும் வாயருகில் கொண்டுவந்தவுடன் குமட்டும் பித்தநோயாளிபோல, திருவடி கிடைக்கப்பெற்றும், அதனை அனுபவிக்கவிடாமல் என் பிராரத் தம் வாசனுமலமாக இருந்து தடை செய்கின்றது. வினைக்கழி விற்காக உதவிய இவ்வுடல் இன்னும் கழியாமையால், பிராரத்த சேடம் பெருங்காயமிருந்த பாண்டம்போல் வாசனாமாத்திரை யாக இருப்பதை உணர்ந்தேன். ஆதலால், அது கருதி விட்டு விடாதே என்பார் 'அடியேற்குக் கதி உன் கழல் தந்தருளவும் ஊன்கழியா விதி அடியேனை விட்டிடுதி கண்டாய்' என்றார்.

பாம்பு சிவபெருமான் சடைக்காட்டில அவனுணையின்கீழ் அடங்கியிருந்தும், உணவுண்ணல் என்னும் பொறியுணர்ச்சி தலைகாட்ட மதியைக்கண்டு படமெடுத்தல்போல, நான் திருவடி பெற்றிருக்கவும், என் பிராரத்தவினை தலைகாட்டித் தடை செய் கிறது. மதி நாம் இறைவன் சார்பில் இருக்கும்போது இந்தப் பாம்பு என்ன செய்ய வல்லதென்றிருக்க இயலாமல் அஞ்சியது போல, திருவடிச்சார்பினைப்பெற்ற எம்மை 'வினைதான் என் செயும்' என்று இருக்கலாற்றாது அடியேனும் அஞ்சுகிறேன். மதி அஞ்சி, சடையில் புகலிடம் ஒன்றிருந்தமையால் ஒளித்தது. எனக்கு நீ விட்டிடுவதால் அது கிடைக்கப்பெற்றிலேன் என்பன போன்ற இயைபுகள் பல தோன்ற நிற்றல் காண்க. ஆகவே, வினையைப் பாம்பாகவும், மதியை உயிராகவும், அச்சத்தை வாசனுமலமாகவும் கொள்க.

இவ்வண்ணம் ஊன் பொதியாகிய இவ்வுடல் இன்னும் கழிந்திலதே என வெறுத்தலின் இது பிரபஞ்ச வைராக்கிய மாயிற்று.

*147* மன்னவ னேயொன்று மாறறி
யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண்
டாய்மிக்க வேதமெய்ந்நூல்

சொன்னவ னேசொற் கழிந்தவ
னேகழி யாத்தொழும்பர்
முன்னவ னேபின்னு மானவ
னேயிம் முழுதையுமே. 43

இ-ள்: வேத சிவாகமங்களை அருளியவனே! சொற்களுக்கு அப்பாற்பட்டவனே! என்றும் நீங்காத மெய்யடியார்களுக்கு முன்நின்று அவர்கட்கு இடர்புகுதாமல் காப்பவனே! பின்னிற்பவனும் எல்லாமும் ஆனவனே! நிலைபேறுனவனே! நின்னோடு இரண்டறக் கலக்கும் நெறியொன்றும் அறியாத சிறியேனாகிய எனக்கு ஆனந்த ஒளியாகத் திகழ்பவனே! விடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், ஊனுடலைக் கழிக்கும் நெறியொன்றும் அறிந்திலேன்; என்னசெய்வேன் என இரங்கி விண்ணப்பிக்கின்றார்.

வேதம் - நால்வேதம். மெய்ந்நூல் - சிவாகமம். இவை இரண்டும் பொதுவும் சிறப்புமானவை. "வேதமொடாகமம் மெய்யாம் இறைவனூல், ஓதும் பொதுவும் சிறப்புமென்றுன்னுக" என்பது திருமந்திரம். எடுத்த இடங்களுக்கு ஏற்ப எல்லாத் தெய்வங்களுக்கும் தலைமைகூறும் வேதம் பொதுவும், சிவன் ஒருவனே கடவுள் அவனே தியானிக்கத்தக்கவன் என உறுதி கூறும் சிவாகமங்கள் சிறப்புமாதல் காண்க. இவை இரண்டையும் உயிர்களின் பரிபாகத்திற்கேற்ப இறைவன் அருளிச்செய்தான் ஆதலின் 'வேதம் மெய்ந்நூல் சொன்னவனே' என்றார்.

சொல், மாயையின் காரியமாகிய ஒலி. அவை இறைவன் இயல்பு முழுதையும் சொல்லுந்தரத்தன அல்ல. இறைவன் அவற்றின் எல்லையைக்கடந்து நிற்றலிற் கடவுளாகிறான் ஆதலால் 'சொல்கழிந்தவனே' என்றார். 'சொற்பதம் கடந்துநின்ற தொல்லோன்' என்றதும் காண்க. சொல் ஆகுபெயராக அதனையியன்ற நூலை உணர்த்தும். ஆகவே, நூலளவையாகிற ஆகமப் பிரமாணங்களால் அறியப்படாதவன் எனலுமாம்.

கழியாத் தொழும்பர் - நீங்காத அடியார். உலகில் அடிமையாவார் சிலகாலம் பழகிப் பின் புறங்கூறிக் கழிவர்; வேற்றிடம் விரைவர். முதல்வராவாரும் இத்தொழும்பர் இன்ன தீக்குணம் உடையார் எனக் கழிப்பர். இவ்வண்ணம் அடியார்களும் இறைவனைவிட்டு நீங்கவியலாது. இறைவனும் நீக்கவியலாது.

இங்ஙனம் ஆண்டானடிமைத் தொடர்பை அநாதி நித்யமாகப் பெற்றவர்கள் என்பார் 'கழியாத் தொழும்பர்' என்றார். அவர்களுக்கு நேருகின்ற நலம் தீங்குகளில் பாதுகாக்கும் பொறுப்பு இறைவனுக்கு எங்கும் உண்டு எப்போதும் உண்டு என்பார், காலத்திற்கும் இடத்திற்கும் பொதுப்பெயராக முன்னவனே! பின்னவனே! இம்முழுதையும் ஆனவனே! என விளித்தார்.

வேத ஆகமங்களாகிய விதிகளைச் செய்தது மட்டுமன்று; அவைகளில் கூறியவண்ணம் உயிர்கள் நடக்க மன்னவனாகவும் இருந்து தன்னாணையின்வண்ணம் நடத்துகின்றான் என்பார் 'மன்னவனே' என்றார்.

இவ்வண்ணம் இன்பமயமான இறைவனை ஒன்றுவது எப்படி என்ற ஏக்கம் உதிக்க அதனால் 'ஒன்றும் ஆறு அறியாச் சிறியேன்' எனத் தன்னிழிவுதோன்ற இரங்குகின்றார்.

மகிழ்ச்சி மின் - ஆனந்த ஒளி. ஒருவருள்ளத்துக் களிப்பு மிகுமாயின் முகத்திலே ஒளியுண்டாம் அதுபோல அடிகளார்க்குத் திருவடிப்பேறு குருந்தடியிற் கிடைத்தபோது ஆனந்த ஒளி உண்டாயிற்று. அவ்வநுபவத்தை 'மகிழ்ச்சி மின்னவனே' என்று குறிப்பிடுகின்றார். ஒளியை மின் என்றது தோன்றி மறையுந்தன்மையதாதலின் என்க. குருந்தடியில் குருவனுபவம் மின்னல்போலத் தோன்றி மறைந்ததாகலின் மீளவும் பெற விரும்பி இங்ஙனம் கூறுகின்றார்.

உலகியல் தொடர்பை விட்டு, உன்னை அடையும் நெறியில் அன்பைத் துணைக்கொண்டு சிறிது தூரம் வந்துவிட்டேன். மேலும், உன்னை வந்தெய்தும் நெறியறிந்திலேன். திகைக்கின்றேன். இந்நிலையில் கைகொடுத்து அழைத்துச் செல்ல வேண்டிய நீ விடுவாயல்லை என்பார் 'விட்டிடுதி கண்டாய்' என்கிறார்.

'ஒன்றும் ஆறறியாதவன் ஆனேன்' என்ற அனுபவமே உலகத்தை வெறுத்துவந்தமை உணர்த்துதலின் பிரபஞ்ச வைராக்கியமாயிற்று.

*148* முழுதயில் வேற்கண் ணியரென்று
மூரித் தழன்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண்
டாய்நின் வெறிமலர்த்தாள்

*தொழுதுசெல் வானத் தொழும்பரிற்*
*கூட்டிடு சோத்தெம்பிரான்*
*பழுதுசெய் வேனை விடேலுடை*
*யாயுன்னைப் பாடுவனே.* **44**

இ - ள் : எம்பிரானே! கூரிய வேலை முழுதும் ஒத்த கண்களையுடைய மகளிர் என்னும் வலிய நெருப்பில் முழுகும் நெய்யைப்போன்ற என்னை விட்டுவிடுவாயோ? உடையாய்! வணக்கம்; குற்றமே செய்யும் என்னை விடாதே கொள்; உன்னையே பாடுவேன்; அதனால், உனது மணம் வீசும் மலர் போலும் திருவடியைத் தொழுது செல்லுகின்ற சிதாகாசப் பெருவெளியை அடைந்த முன்னைய அடியார்களோடு என்னையும் ஒருவனாகக் கூட்டுவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், என் குறையை முழுதும் உணர்ந்து வருந்துகிறேன்; உனக்கு வணக்கம்; உன்னைப் பாடுகிறேன்; என்னை விடாதே கொள் என வேண்டுகின்றார்.

மகளிர் கண்ணிற்கு வேலை உவமை கூறுதல் இலக்கிய மரபு. வேல் கூரிது; சென்று தைத்தாரைத் தப்ப விடாதது; விடம் பூசப்பெற்றது. கண்ணும் கூரிதாய், சென்று உள்ளத்தில் தைப்பதாய், தைத்தாரை மீளவிடாததாய், கொல்வதாய் இருப்பது. அதனால் முழுதும் ஒப்பாயிற்று. மற்றும் உவமம், வண்ணம் வடிவு அளவு சுவை இவற்றுள் ஒன்றானும் பலவற்றானும் உரைக்கப்பெறும். வேலும் கண்ணும் கடை சிவந்திருத்தலாகிய வண்ணத்தானும், இலைபோல் அகன்று கடை குறுகிக் கூரியதாக இருத்தலின் வடிவானும், அளவானும், அச்சத்தை விளைவித்தலாகிய பயனானும் முழுதும் ஒத்திருத்தலின் 'முழுது அயில் வேல் கண்ணியர்' என்றார். முழுதும் என்ற உம்மை விகாரத்தாற்றொக்கது.

மூரி - வலிமை. பெண்களாகிய வலிய தழல்: நெருப்பிற்குக் கந்தழி என்றும் சேர்ந்தாரைக்கொல்லி என்றும் மறு பெயர்களுண்டு. சார்ந்த இடத்தைச் சாம்பராக்கும் தீப்போலக் கைப்பற்றியவர்களை உருக் குலைப்பவர்கள் மங்கையர். நெருப்பில் விழுந்த நெய்த்திரள் உருகிப் பின் இல்லையாம். அதுபோலப் பெண்களாகிய தீயிற்பட்டு உருகி ஒழிவேன் என்பார் 'கண்ணியரென்னும் மூரித்தழல் முழுகும் விழுதனையேனை' என்றார். விழுது - நெய் அல்லது வெண்ணெயின் திரட்சி. வேள்வித் தழலாகிய சிவாக்கினியில் முழுகவேண்டிய அடியேன் தப்பி,

நாரியராகிய மூரித்தழலின் மூழ்கி அழிவேன் என்றவாறு. இந் நிலையில் விடுவாயோ என்றது, பின்வரும் விடேல் என்னும் வேண்டுகோளை ஏற்க விண்ணப்பித்தது.

வெறிமலர்த்தாள் - தெய்வமணங்கமழும் திருவடித்தாமரை. மலர் மணமும், தேனும், நிறமும், மென்மையும், வண்டொலி யும் உடையதாகி ஐம்புல இன்பத்தையும் அளிப்பது போலத் திருவடியும் ஐம்புலன்களாலும் நுகரும் தன்மையுடையது. உயிர்கள் உலகைப்பற்றிநின்று பொறியுணர்ச்சி நிறைவித்துக் கொள்ளுதல்போல, சிவஞானியர் திருவடியைச்சார்ந்து பேரின் பத்தை எய்துகின்றனர். ஆகையால் தாள் மலர்க்கு ஒப்பாதல் காண்க. அத்தகைய திருவடியை எப்போதும் தொழுது கூடவே செல்லுகின்ற சிதாகாசப் பெருவெளியை அடைந்த அடியா ரோடு என்னையும் கூட்டுக என வேண்டிக்கொள்கின்றார்.

சோத்தம் - இழிந்தார் உயர்ந்தோர்க்குச் செய்யும் வணக் கம். இது அம் ஈறுகெட்டுச் சோத்து என நின்றது. பழுது - குற்றம். அதாவது மன மொழி மெய்கள் இறைவனிடம் செல் லாது புறம்போனமை. உன்னைப் பாடுவேன் என வாய்த் தொண்டும், சோத்து என மெய்த்தொண்டும் குறிப்பித்த அடிக ளார், மனத்தொண்டுபுரிய விருப்புளது; அதற்கு இடையூறாக மங்கையரென்னும் தழலில்மூழ்கும் விழுதாக இருக்கின்றேன்; அதனை விலக்கி மனத்தொண்டும் செய்து உய்ய நின்னடியா ரொடு கூட்டு என வேண்டிக்கொள்ளுதல் காண்க.

இப்பாடலுக்கு, அயில் வேல் கண்ணியர் என்னும் மூரித் தழல் முழுது முழுகும் விழுது அடியேனை விடுதிகண்டாய் எனவும், நின் வெறிமலர்த்தாள் தொழுது வானம்செல் தொழும் பரில் கூட்டிடு எனவும் இயைத்துப் பொருள் காண்பர். தழல் முழுகும் விழுது எனவே முழுதும் முழுகுதல் பெறப்படுதலா னும் முழுது முழுகும் என இயைப்பதால் பொருட்சிறப்பின்மை யானும் முழுதும் (ஒத்த) அயில்வேல் கண்ணியர் என்றியைத்து மூற்கூறிய நயங்களை எண்ணுக.

'வானத் தொழும்பர்' என்னும் தொகைச்சொல்லை வானம் செல் தொழும்பர் எனக்கூட்டுவர் சிலர். சொற்கிடக்கைமுறை அதற்கு இடந்தருமா என்பதை ஆய்க.

உன்னைப் பாடுவனே என்பதற்கு உன்னைப் பாடுவனோ? பாடேன் என உரைப்பாரும் உளர். ஏகாரம் எல்லாக் கட்டளைக்

கலித்துறையினும் வரும் ஈற்றசையேகாரம் ஆமேயன்றி இச் செய்யுளில்மட்டும் பொருள் குறித்ததாகக் கோடல் மரபன்மை உணர்க.

நின் வெறி மலர்த்தாள் தொழுது செல்வான் அத்தொழும் பரில் கூட்டிடு எனக்கூட்டி, நின் திருவடிகளைத் தொழுதுசெல்வ தற்காக, இறைவனோடு சென்ற அத்தொண்டரில் கூட்டு என்று உரைத்தலுமாம்.

எனக்குத் தகுதி இல்லையாயினும் கோவுடனே கூடிய ஒரு குருட்டாவும் ஊர் புகுவதுபோல மெய்த்தொண்டரோடு கூடி அடியேனும் திருவடியைச் சார்வேன் என்றார் என்பதாம்.

மங்கையரைத் தீயாகக் கூறுதலால் பிரபஞ்சவைராக்கியம் புலனாதல் காண்க.

149 பாடிற்றி லேன்பணி யேன்மணி
நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண்
டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத்
தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு
கேனின் றுழைத்தனனே. 45

இ - ள்: மாணிக்கமணியே! உன்னைப் பாடிலேன்; பணி யேன்; நீ எனக்கு ஒளித்துச் சென்ற பின்னர் இந்தப் பச்சை ஊனாலான உடம்பை ஒழித்திலேனாகிய என்னை விட்டுவிடு வாயோ? நீ பிரிந்த பிறகு சிவன் எவ்விடத்தான்? யார் கண்ட வர்கள்? என்று வியந்து அப்பொழுதே தேடிச் சென்றிலேன்; ஓடிலேன்; செயலற்றுக்கிடந்து மனம் உருகேன்; வீணாக நின்று வருந்தினேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவனைப் பிரிந்ததால் உண்டான ஆற்றாமையைப் பலவகையால் சொல்லி இரங்குகின்றார்.

குருந்தமரத்தடியில் குருவாக எழுந்தருளியிருந்தகாலத்து தோட்டத்துப் பச்சிலையாக எண்ணிப் பாடாமலும் பணியாம லும் இருந்துவிட்டேன். பிரிந்த பிறகு உன் அருமை தெரிய வருந்துகின்றேனே அன்றி இறந்தேனில்லை. என் குருநாதன்

எங்கே இருக்கின்றான்? யாரேனும் கண்டீர்களா? என்று வினவிக்கொண்டு தேடி ஓடிலேன்; கிடந்து உருகேன்; வீணாக வருந்தினேன் என்பது கருத்து.

பெறுதற்கரிய மணி ஒன்று உழைப்பின்றி எளிதில் கிடைக்குமாயின், அதன் அருமை தெரியாமையால் அதனைப் பாதுகாவாததுபோல, குருமணியாகிய உன்னையும் அப்போது பாடிலேன்; பணிந்திலேன் என்பார் 'மணி பாடிற்றிலேன் பணியேன்' என்றார். மணி அண்மைவிளி. மணிபோல்வானை ஈண்டு மணி என்றது உருவகம். கண் கெட்ட பிறகு சூரிய வணக்கம் செய்வார்போல நீ மறைந்த பிறகு வருந்துகின்றேன் என்பார் 'நீ ஒளித்தாய்க்குப் பச்சூன் வீடிற்றிலேன்' என்றார்.

மனத்திற்கு உகந்த பொருள் நழுவிப்போகுமானால் ஊன் வற்றி, உடம்பினைத்தலைக் காண்கிறோமாதலின் 'ஒளித்தாய்க்கு ஊன் வீடிற்றிலேன்' என்றார். ஊன் ஆகுபெயராக உடலை உணர்த்திற்று எனலுமாம். இத்திருப்பாட்டில் பாடிற்றிலேன் என்றது குருமணியைக்கண்ட தொடக்ககாலத்திலும், உன்னைப் பாடுவனே என்று முன் திருப்பாட்டில் மொழிந்தது பிரிந்த பின்னருமாதலால் முரணாகாமை உணர்க.

அன்புக்குரிய அரும்பொருளை இழந்த ஒருவன் அந்தப் பொருள் எங்கிருக்கிறதெனத் தேடுதலும், வருகின்றவரெல்லோரையும் பார்த்து நீவிர் கண்டீரோ நீவிர் கண்டீரோ எனக் கேட்டலும், பரபரந்து ஓடுதலும், அப்பொருளைப்பற்றிய புலன் தெரியாதபோது மனம் உருகுதலும் இயல்பு ஆதலால் அதில் ஒன்றும் யான் செய்திலேன் என்று இரங்கியவாறு.

பச்சூன் வீடிற்றிலேன் என்பதற்கு ஊனுடலை ஒழித்தேன் இல்லை என்றும், உழைத்தனன் என்பதற்கு உழைக்கலானேன் என்றும் பொருள் உரைப்பாருமுளர்.

அடிகள் இவ்வாறு கூறியது இறைவன் செய்த பேரருட்டிறத்தை நோக்க, தம் தொண்டுகள் எள்ளளவும் ஒவ்வாதன என்ற சிறுமை உணர்ச்சியைத் தெரிவித்துக்கொண்ட அவ்வளவே. குருமணியைப் பிரிந்த பிறகு, பல தலங்களுக்கும் சென்று இரங்கி அலறி ஆடிப்பாடியதை இந்நூலில் பல இடங்களிலும் பார்க்கலாமாதலின் என்க.

இது நின்று உழைத்தேன் என உலகை வெறுத்துக் கூறியதால் பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

150 உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத் தீயினொப்பாய்
விழைதரு வேனை விடுதிகண்
டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி
மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபர னென்றென்
றறைவன் பழிப்பினையே. 46

இ - ள்: மான்பார்வை போன்ற பார்வையினையுடைய மகளிரின் கொங்கைகளைப் பலாப்பழத்தில் மொய்க்கும் ஈக்கு ஒப்பாக விரும்புகின்ற என்னை விட்டிடுவாயோ? அங்ஙனம் கைவிடுவாயாயின், கடலிற்றோன்றிய நஞ்சை உண்ட கரிய மேகம்போலும் கழுத்தையுடையவன் என்றும், குணமில்லா தவனென்றும், மானிடனென்றும், குறைந்த அறிவினையுடையவனென்றும், மிகப்பழைய பரதேசி என்றும் என்றைக்கும் உன் பழிப்புரையைக் கூறுவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இதுவரை தலைவனது பெருமையை எண்ணியும் தன் குறையை உன்னியும் இரங்கி விண்ணப்பித்த அடிகளார் பிரிவால் துன்பம் மீதூர மனமிறுகி என்னை விடுவாயானால் உன்னைப் பழிப்பேன் என்று தெரிவிக்கின்றார்.

பலாப்பழத்தில் மொய்க்கும் ஈ மணங்கண்டு உள்ளேயிருக்கும் சுவையைச் சுவைக்கமுடியாமல் முட்புறத்தே மொய்த்தல் போல, பெண்களின் சிறப்புறுப்பினைக் கண்டு நீங்காமலும் நுகரமுடியாமலும் விரும்பிக்கொண்டேயிருக்கிறேன் என்பார் 'கொங்கைப் பலாப்பழத்தின் ஈயின் ஒப்பாய் விழைதருவேனை' என்றார். உழை - பக்கம், மான் என இருபொருளும்படுதலின் உழைதரு நோக்கியர் என்பதற்கு மானைப்போன்ற மருண்ட பார்வை, என்னை அவர்கள் பக்கத்தும்கொண்டு உய்த்தது எனவும் வேறொரு நயந்தோன்ற நிற்றல்காண்க.

கொங்கையைப் பலாப்பழத்திற்கு உவமித்தது வடிவான் மட்டுமன்றிச் செயலானும் என்க. அச்செயலாவது பலாப்பழம் உடையவன் கீறித்தின்று பயன்பெறுதல் போல, கொங்கைகள் கொண்டாற்கே பயன்படுமன்றி, நறும்பூ பலவற்றை நாடிச் செல்லும் வண்டனைய மாந்தர்க்குப் பயன்படாமை காண்க.

மழை நோக்கினர் கண்களுக்குத் தண்மை செய்தல்போல இறைவன் கழுத்திலிருந்து நஞ்சு அழகு செய்கின்றது என்பார்

'வேலை நஞ்சுண் மழைதரு கண்டன்' என்றார். இது இறைவ னுடைய பேரருட்குணத்தை விளக்கியது. இதில் அமுதமிருக்க நஞ்சையுண்டவன் என்னும் பழிப்பும் காண்க. வேலை - கடல்.

இறைவனுக்குத் தன்வயத்தனாதல் முதலிய எட்டுக் குணங் கள் உளவேனும் அவற்றையும் கடந்து விளங்குபவனாதலின் குணமிலி என்றார். இதனால் இறைவன் தத்துவவியாபியாயும் தத்துவாதீதனாயும் இருத்தல் உணர்த்தப்பட்டது. இதில் நற் குணமே இல்லாதவன் என்ற பழிப்புரையும் தோன்றல்காண்க.

மானிடன்: தேவதேவனாகிய இறைவனை மானிடன் என்பது பழிப்புரை. மானை இடது திருக்கிரத்தில் உடையவன் என்பது உண்மை உரை. இதனால் இறைவனது நிக்கிரகத்தன்மை உணர்த்தப்பெறுகின்றது. தாருகவனத்து இருடிகள் பிச்சைக் கோலம்கொண்ட பெரிய பெருமானைக் கொல்ல வேள்வித்தீயில் எழுப்பிய மானை இடது திருக்கரத்திலே ஏந்தினார் என்பது வரலாறு.

தேய்மதியன்: தேய்ந்த அறிவினையுடையன் என்பது பழிப் புரை. அறிவு தொட்டனைத்து ஊறும் மணற்கேணி ஒப்பது. மேலும் மேலும் வளர்ச்சிக்குரியது. அது நாள்தோறும் தேய்தல் இழிவு. ஒரு கலையாகத் தேய்ந்த பிறைமதியைத் தலைக்கணிந் தவன் என்பது உண்மை உரை. இது இறைவனது அநுக்கிரக ஆற்றலுணர்த்துவது

பழைதரு மா பரன் மிகப் பழமையான பெரிய பரதேசி என்பது பழிப்புரை. பரன் - பரதேசி. அநாதி நித்தியமான பெரிய பரம்பொருள் என்பது உண்மையுரை. இவை நிந்தை யாகவும் துதியாகவும் இருத்தலைக் காண்க. இது முழுமுதற் றன்மை உணர்த்துவது

இனி, 'கொங்கைப் பலாப்பழத்து ஈயின் ஒப்பாய்' என்ப தற்கு ஈக்கள் மணத்தால் கவரப்பட்டுச் சுவையில் ஈடுபடுதல் போல ஆடவர் மனம் உருவத்தால் கவரப்பட்டுத் தீண்டுதல் இன்பத்தைப் பெறுகின்றது ஆதலின் உவமமாயிற்று என் பாரும், பலாப்பழம் முட்புறக் கனியாயிருத்தலின் அதனைக் கூறி யது கொங்கை கச்சகத்துட்பட்டிருத்தலால் என்பாரும் ஆகப் பலவாறு நயம் உரைப்பர்.

குணமிலி என்பதற்கு முக்குணங்களைக் கடந்தவனென்றும் பொருளுரைப்பர்.

அடிகளார், மங்கையர் விருப்பு ஒன்றே தன்னிடத்துள்ள குறையென்பதை விண்ணப்பித்து, விடலாகாது என வேண்டுகின்றார் ஆதலின் இது பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

151 பழிப்பினின் பாதப் பழந்தொழும்
 பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண்
 டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி
 நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ்
 சேர்தரு தாரவனே. 47

இ - ள் : முத்துக்களையுடைய சங்குகளை இருமருங்கும் கொழித்து, மந்தாரமலர்களையும் ஒதுக்கும் அழகிய பெருமையினையுடைய கரைகளோடுகூடிய நீரில் பிறைமதியாகிற மரக்கலம் சேர்ந்திருக்கின்ற கொன்றைமாலையையுடைய தலைவா! குற்றமற்ற நின் திருவடிக்குப் பழமையான தொண்டர்கள் உன்னை அணுகிவந்து வீழ்ந்து வணங்க, அதனைக்கண்டு, பழித்துச்சொல்லி விழித்துக்கொண்டிருந்த என்னை நீ விட்டுவிடுவாயோ என்றவாறு.

இத்திருப்பாட்டில், நின் பழவடியார் கீழேவிழுந்து வணங்கப் பழித்த என்னை விடேற்க என வேண்டிக்கொள்கின்றார்.

முத்து நீரில் சிப்பியினின்றும் சங்கினின்றும் மீன்தலையினின்றும் பிறக்கும். அவற்றுள், சங்கின் முத்தே சிறந்ததாகலின் 'முத்துப் பணிலம் கொழிக்கும் நீர்' என்றார்.

மந்தாரம்: இது முதலாகுபெயராக மலரை உணர்த்திற்று. மந்தாரமலர்கள் இறைவன் திருமுடியில் மெய்யடியார்களால் சூட்டப்பட்டவை. அவைகளைக் கங்கைநீர் கொழித்துத் தள்ளுகின்றது என்பதாம்.

மந்தாகினி - அசையுந்தன்மை உடையதெனக் கங்கைக்குக் காரணப்பெயர். நுந்தும் - ஒதுக்கும். பந்தம் - அழகு. தழி - தழீஇ என்னும் வினையெச்சம் எதுகை நோக்கிக் குறைந்தது: தழுவி. சிறை நீர் - கரைகளோடுகூடிய நீர்.

மந்தாகினி, கொழித்து நுந்தும் பந்தம் தழீஇ (உள்ள) நீரில் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

இங்ஙனமன்றி, முத்துக்களையுடைய சங்குகளைக் கொழித்து, சடையாகிய அணையின் பெருமையைச்சார்ந்து மந்தாரமலர்களை ஒதுக்குகின்ற மந்தாகினியாகிய கங்கையின் வரம்பிற்குட்பட்ட நீரில் பிறைக்கலம் சேரும் என உரை கூறுவாரும் உளர். இப்பொருளில், பந்தம் - அணை. சிறை - வரம்பு.

வேறு சிலர், மந்தாகினியாகிய ஆகாயகங்கையைக் கட்டுப் படுத்தும் பெருமையும் நீரில் அக்கட்டினைத்தழுவிப் பிறைக்கலம் சேரும் எனவும் உரைப்பர். இவ்வுரையில், பந்தப்பெருமை - கட்டுப்படுத்தும் பெருமை எனவும், சிறை - கட்டு எனவும் பொருள்படும்.

எல்லாருரையினும் பொதுவான கருத்து கங்கை சங்கினைக் கொழித்தலும், மந்தாரமலர்களை ஒதுக்குதலும், வேகவதியான கங்கை மந்தாகினியாய்க் கரைக்குள் அடங்கியிருத்தலும், அதில் பிறைமதி கலம்போல உலா வருதலுமாம்.

இறைவன் சடைக்கண் வரம்புக்குள் அடங்கித் ததும்பும் கங்கை பேரருட்பெருக்கையும், சங்கைக்கொழித்தல் சிவஞானம் வெளிப்படுதலையும், மந்தாரமலர்களை ஒதுக்குதல் அன்புசெய் தலையும், கங்கைப்பெருக்குச் சடைவரம்புள் அடங்கியிருத்தல் திருவருள் இறைவன் திருவுள்ளத்தளவாகவே அமைதலையும், பிறைக்கலம் உலாவருதல் பரிபாகமுற்ற ஆன்மா திருவருட் பெருக்கிற்றிளைத்து மகிழ்தலையும் குறிப்பன. வேறு கூறுவாரும் உளர். தாரவன் - பிறையாகிற மாலையையுடையான் என்பாரும உளர். பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே என்னும் சொல லமைதி அங்ஙனம் பொருள்கோடற்கு இயையாமையைப் புலப் படுத்துதல் காண்க. வண்ணமார்பில் தாரும் கொன்றையாத லின் கொன்றைமாலையை உடையவன் என்றலே இயைபுடைத் தாதல் காண்க.

இறைவனுடைய திருவடிகள் எத்தகைய குற்றமும் இல்லா தன; பழிச்சப்படுதலன்றிப் பழிக்கப்படாதன; "அரவணையான் சிந்தித்து அரற்றுமடி" என்பன முதலியவாகப் புகழப்படுவன வன்றி இகழப்படாதன என்பது 'பழிப்பில் நின் பாதம்' என்றதால் உணர்த்தப்பெற்றது.

பழந்தொழும்பு - பழவடிமை. ஆகுபெயராகப் பழவடியாரை உணர்த்திற்று. பழவடியார் இறைவன் திருமேனியைக் கண்ட போதும், நினைத்தபோதும், அவன் எழுந்தருளியுள்ள கோயிலை யும், கோபுரத்தையும், அவனடியார்களையும் கண்டபோதும்

விழுந்து வணங்குவர்; அதனைக்கண்டு நான் பழிப்புரை பகர்ந்து பயனின்றி விழித்திருந்தேன் என்பார் 'பழந்தொழும்பு எய்தி விழ, பழித்து விழித்திருந்தேனை' என்றார். இந்தப் பகுதிக்கு, பழமையான தொண்டு மேற்கொண்டு, விழ - அது நழுவுத லால், பழித்து விழித்திருந்தேனை - திருவடியைப் பழித்து விழித் திருந்த என்னை என்று உரை கூறுவர் சிலர். அடிகளார் தம் கூற்றாகக் கூறும் இப்பகுதியில் பழவடியனாக இருந்தும், அதனை நழுவவிட்ட குற்றமும், திருவடியைக் கனவிலும் பழியாத இவர் பழித்துரைத்த குற்றமும் இவரிடம் தங்குதலின், அடியார்கள் வீழ்ந்து வணங்க இளமையில் பழித்து விழித்திருந்தேன்; அது அறியாதகாலத்து ஆற்றிய குற்றம்; அதற்காக என்னை விட்டு விடாதே என்றார் எனலே சிறந்ததாதல் தெளிக. பழைய உரை யும் 'சீரடியார் தரிசித்துப் பணிவதைக் கண்டு இகழ்ந்து உண்மையிலாது விழிப்பெய்தி இருப்பதான வினை' என உரைத்தலின் சிறப்பை உன்னுக.

இப்பாடல் முழுதும் சிந்திக்க, முத்துடைய சங்கையும், அன்பரிட்ட மந்தாரமலரையும் தள்ளி, சாபத்தால் வந்தடைந்த பிறையைக் கங்கைவெள்ளம் தாங்குதல்போல, பழவடியாரினும் அடியாரைப்பழித்த எனக்கே சிறப்புச்செய்து விடாமல் தாங்க வேண்டும் என்ற வேறொரு குறிப்பும் தோன்ற நிற்றலைக் காண்க.

அடியாரைப் பழித்து, அவனியில் விருப்பாய் விழித்திருந்த குற்றத்தை உணர்ந்து கூறலின் பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

152 தாரகை போலுந் தலைத்தலை
மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண்
டாய்விடி லென்னை மிக்கார்
ஆரடி யானென்னி னுத்தர
கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று
நின்னைச் சிரிப்பிப்பனே. 48

இ - ள்: தலையில் நட்சத்திரங்களைப்போன்ற தலைமாலை யையும், தீப்போலும் நஞ்சு கக்குகின்ற பாம்பணிகளையும் பூண்ட வீர, என்னை விடாதே; விடிலோ என்னை நோக்கி உயர்ந்தவர்கள் இவன் யாரடியான்? என வினவுவாராயின்

உத்தரகோச மங்கையென்னும் சிவராசதானிக்கு அரசனுடைய அடியார்க்கு அடியான் என்று உன்னை உலகம் சிரிக்கச் செய்துவிடுவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில், என்னை உன்னோடு தொடர்பற்றவன் போலக் கருதி விடுதியாயின், நான் உன்னடியார்க்கு அடியான் என்ற உண்மையைச் சொல்லி உலகம் சிரிக்கச்செய்வேன் என விண்ணப்பிக்கின்றார்.

பேரூழிக்காலத்தும், பிறவூழிக்காலத்தும் இறந்த பிரமனாதியர் கபாலங்களை மாலையாகக் கோத்துத் தலையில் சூடியுள்ளார் என்பது புராண வரலாறு. அங்ஙனம் இறைவன் சூடியது, சங்காரகாரணனாகிய தானே முழுமுதல்வன் என்பதை அடுத்து வரும் பிறவியிடைப்பட்டாரும் அறிந்து உய்வதற்காகவன்றித் தன் பெருமையை அறிவிப்பதற்காக அன்றென்க. தலைமாலை வெண்மையாக நட்சத்திரங்கள்போல ஒளிவிடுகின்றன என்பார் 'தலை தாரகைபோலும் தலைமாலை'' என்றார்.

தழல்போலும் நஞ்சினைத் தழலென்றார். அரா - அர எனக் குறியதன்கீழ் 'ஆ' குறுகி வந்தது. தலைமாலையையும் அரவையும் பூண வீரம் இன்றியமையாதது என்பார் 'வீர' என்றார். வீரம் மிகுதியும் வெளிப்படுவது தலைமையுள்ள இடத்தேயாகலின், சங்காரகாரணனாகிய முதல்வன் என விளித்தார்.

தழல் அர-வேள்வித்தீயில் வெளிப்பட்ட பாம்பு எனலுமாம். வீர என்பது குறிப்புமொழி. என்னை விடுவதனால் உன் வீரம் வீரமாமோ என்னும் இழிவுகுறித்து நின்றது என்பாருமுளர்.

'அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் மிகை மக்களான் மதிக்கற் பாலன' ஆதலின், மிக்கார் வினவின் அவர்களிடையில் உன்னைச் சிரிக்க அடித்துவிடுவேன் என்றார். மிக்கார் - அறிவொழுக்கங்களான் மிக்கார். என் நிலைகண்டிரங்கிய அவர்கள் அப்பா நீ யாருடைய அடிமை? என்று கேட்பார்கள். அப்போது யான் சிவபுரத்தரசரின் அடியார்க்கு அடியான் என்பேன். பூ! அத்துணை பெரிய அரசன், அடிமையை இப்படியா அலையவிடுவது; அவருக்கு வைத்துப் பாதுகாக்க வழியில்லையா என்று நகைப்பார்கள். அந்நிலை வாராதவண்ணம் என்னை விடாதே என்றார் என்க.

மற்றொருவகையினும் உன்னை நகைப்பர் தெரியுமா? யான் ஒரு அறிவிலி. சீரடியாரோ திருவருள்பெற்ற மெய்ஞ்ஞானியர்.

அவர்களோடு இவனையும் எப்படி இறைவன் ஆட்கொண்டார் என்று உமது ஆட்கொள்ளுந்திறத்தின் தகுதியின்மையைக் குறித்தும் நகைப்பர் என்றுணர்க என்றார் எனலுமாம்.

மன்னன் எப்படி மன்னுயிர் அப்படித்தானே! நீ என்னை விட்டுப் பிரிகின்றகாலத்து உடன்வந்த அடியார்களாவது, கடையடியானை விட்டுப்போதல் கூடாது அவனையும் உடன் வரப் பணிக்க எனத் திருமுன்னர் தெரிவித்திருக்கலாமே; அது செய்யாமையின் அவர்களைச் சீரடியார் என்றார் எனலும் ஆம். அண்ணனைப் பாராட்டுகின்ற தந்தையைப் பார்த்து இளைய மகன், இப்புத்தகம் யாருடையது எனக் கேட்ட தந்தைக்கு 'எல்லாம் தங்கள் செல்லப்பிள்ளையினுடையது' என்பதுபோல் தன்னைமட்டும் விட்டு ஏனையோரை உடனழைத்துச் சென்றமையால் அரசின் சீரடியார் எனக் கூறினர் என நயம் உரைப்பாரு முளர். இவை இலக்கிய அளவில் சுவை தருமாயினும் யான் உன் அடியார்க்கு அடியானென உரைப்பதிலேயே தாழ்வெனுந் தன்மையதாகிய சைவமரபு இருத்தல் எண்ணுதற்குரியது

இறைவன் தன்னை விட்டமையான் விளைந்த பயனைக் கருதி இரங்குதல் உலகத்தில் பற்றுக்கொண்டு உழன்றமையாலேயே என்னும் காரணத்தைக் குறிப்பித்தலின் இது பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

**153** *சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்*
*தொழும்பையு மீசற்கென்று*
*விரிப்பிப்ப னென்னை விடுதிகண்*
*டாய்விடின் வெங்கரியின்*
*உரிப்பிச்சன் றோலுடைப் பிச்சனஞ்*
*சூண்பிச்ச னூர்ச்சுடுகாட்*
*டெரிப்பிச்ச னென்னையு மாளுடைப்*
*பிச்சனென் றேசுவனே.* **49**

இ-ள்: யான் தொண்டுபூண்டு ஒழுகுதலை இறைவனுக்கே என்று எங்கும் பரவச்செய்வேன், ஆதலால் என்னைப் புறக்கணிக்காமல் ஏற்றுக்கொள். விட்டுவிட்டால், கொடிய யானையின் தோலைப் போர்த்திக்கொண்ட பித்தன், புலித் தோலை ஆடையாகவும், கருமான்தோலை மேலாடையாகவும் கொண்ட பித்தன், விடமுண்ட பித்தன், ஊருக்குப் புறம்பேயுள்ள சுடுகாட்டு எரியிலே நின்று ஆடுகின்ற பித்தன்; என்னைப்போன்ற இழிந்தவர்களையும் ஆளுகின்ற பித்தன்

என்று யானும் ஏசுவேன். வெறுக்கத்தக்க உன் தவற்றினைச் சிரிக்கவும் வைத்துவிடுவேன் என்றவாறு.

இத்திருப்பாட்டில் 'அடியேன் ஒரு சிவனடியான்' என்பதை உலகறியச் செய்வேனுதலால் விட்டுவிடாதே; விடின் உன்னை யானும் பலவகையான் இகழ்ந்து உரைப்பதன்றி உன் பிழைக்காக ஊரவரையும் சிரிக்கச் செய்வேன் என்று விண்ணப்பிக்கின்றார்.

மக்கள் பிறவியெடுத்தது கடவுளை வணங்கி வீட்டின்பம் பெறுதற்கே ஆதலால், அடியேன் செய்யுந்தொழில்கள் யாவும் சிவப்பணியே ஆகச்செய்வேன்; என்னுடல்நலனுக்காகச் செய்யேன் என்பார் 'தொழும்பையும் ஈசற்கென்று விரிப்பிப்பன்' என்றார். விரித்தல் - எங்கும் பரப்புதல். சிலர் ஆணவமல காரியமாகிய அகங்காரத்துள் சிக்கிச் சிவத்தொண்டு செய்யார்; செய்யினும் பிறர் அறியாமல் செய்வர்; பிறர் அறியின் நாணவும் செய்வர்; அங்ஙனமின்றி அடியேன் எல்லார்க்கும் சொல்லி, எல்லாரையும் எங்கும் சொல்லவும் செய்வேன் என்பார் 'விரிப்பிப்பன்' என்றார்.

இவ்வண்ணம் பலரறிந்த உன் அடிமையை விடுதலாகாது காண் என்பதை 'விடுதிகண்டாய்' என்பதனுல் குறிப்பித்தார்.

கரியின் உரிப்பிச்சன் முதலிய பிச்சன் என்பன யாவும் பழிப்பதுபோலப் புகழ்தலாம். பழிப்புப்பொருள் வெளிப்படை. புகழ்ச்சிப்பொருள் வருமாறு:

வழுவூர் என்னும் தலத்தில் கன்மப் பிரம வாதிகளாகிய முனிவர்கள்செய்த யாகத்தீயினின்று ஒரு யானை எழுந்து இறைவனைக் கொல்லவந்தது. இறைவன் அதனையுரித்துத் தோலைப் போர்த்திக்கொண்டார் என்பது வரலாறு.

யானையின் பச்சைத்தோலைப் போர்த்தினுல், போர்த்தியவன் இறந்துபடுவான். தோல் அவ்வளவு கொடிய வெப்பமானது. அதனைப் போர்த்தியும் வாழ்ந்திருக்கின்றமையின் இறைவன் பேராற்றல் போந்தது என்னும் தக்கயாகப் பரணியையும் அதன் உரையையும் எண்ணப் புகழ் வெளிப்படும்.

புலியும், கருமானும் அந்த வேள்வித்தீயினின்று வந்தனவே. அவற்றையும் இறைவன் உரித்து அரையில் ஆடையாகவும், உத்தரீயமாகவும் உடுத்தான் என்பது வரலாறு.

மந்திரங்களை வடிவாகவுடைய இறைவனை மந்திரங்கள் ஒன்றும் செய்யா என்னும் புகழ்விளங்க நின்றமை உணர்க.

நஞ்சுண்ட வரலாறு முன்னரே விளக்கப்பெற்றது. தேவரனைவரும் அமுதுண்டும் இறக்கத் தான் நஞ்சுண்டும் இறவாது விளங்கும் ஆற்றலை விளக்கியது புகழாம்

ஊர்ச்சுடுகாட்டு எரி - சர்வசங்காரகாலத்துத் தீ. எல்லாரும் அதனால் இறந்தொழியத் தான்மட்டும் தனித்து நின்று ஆடுதலின் முதன்மை வெளிப்படுத்தும் புகழ் தோன்றுதல் காண்க.

சீறும் பிழைப்பைச் சிரிப்பிப்பன்: இப்பகுதிக்கு ஒருவர், வெறுக்கத்தக்க என் உலகவாழ்க்கையை எள்ளி நகையாடச் செய்வேன் என்பர். ஒருவர், நீ குற்றம் எனச் சினந்துகொள்ளும் என் செயல்களைக் குற்றமாகா நற்றமே எனப் பெரியோர்களால் கொள்ளவைத்து உன்னை எள்ளி நகையாடச் செய்வேன் என்றுரைப்பர்.

பழையவுரைகாரர், என் குற்றத்தைக்கண்டு நீ சீறுவதால், நான் எங்குந்திரிந்து தேவரீரை உலகம் நகைக்கும்படிச் செய்துவிடுவேன் என்பர். இவையனைத்தையும் முன்னையவுரையோடு இணைத்து ஏற்றமுடையது கொள்க.

'தொழும்பையும் ஈசற்கு என்று விரிப்பன்' என்று பிரபஞ்ச வைராக்கியம் பிறந்து கூறுகின்றமையால் அதிகாரப்பொருள் தோன்றுதல் காண்க.

154 ஏசினும் யானுன்னை யேத்தினும்
என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண்
டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை யாளுடை
யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின வாலமுண் டாயமு
துண்ணக் கடையவனே. 50

திருச்சிற்றம்பலம்

இ - ள் : சிவந்த பவளமலையினும் சிறந்த ஒளியுடையவனே! என்னை அநாதியே அடிமையாகவுடையவனே! அமுதம் உண்ண உரியவனாக இருந்தும் சிறிய உயிர்களுக்கு உண்டாகும் துன்பத்திற்காக மனமிரங்கிக் கொடுமைமிக்க ஆலகாலம்

உண்டவனே! அடியேன் உன்னை வைதாலும் வாழ்த்தினு லும், என் குற்றத்தையே எண்ணி மனங்குழைந்து வருந்தும் என்னைக் கைவிடுவாயோ? என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியேன் வைதாலும் வாழ்த்தினலும் என் குற்றத்தை எண்ணி மனம் குழைவேன் ஆதலால், புறக் கணிக்காதே என வேண்டிக்கொள்கின்றார்.

இறைவன் ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் உருவம் கொள்ளும்போது பல நிறங்களைத் தாங்குகின்றானயினும் குரு மூர்த்தியாக எழுந்தருளியபோது அடிகள் கண்டது சிவந்த திருமேனியுடன் ஆதலின் 'செம்பவள வெற்பின் தேசுடையாய்' என்றார். பவளவெற்பு இயற்கையான செந்நிறம் தவிர, தேசா கிய ஒளியில்லை என்பதை விளக்கச் செம்பவளவெற்பினும் மிக்க ஒளியுடையாய் என்றார். வெற்பின் என்பதிலுள்ள இன் உருபு உறழ்ச்சிப் பொருளில் வந்தது. அப்பர்சுவாமிகளும் "செம்பவ ளத் திருவுருவர் திகழ் சோதிக் குழைக்காதர்" என்றருளினமை காண்க.

என்னை ஆளுடையாய்: "என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லனே" என்ற அனுபூதி வாக்கின்படி என்னை அநாதியே ஆளாக உடையவனே என்பதாம்.

அமுதம் உண்ண உரியவனாக இருந்தும் விடமருந்தியது உயிர்கள்மேல்வைத்த கருணையாலென இறைவனுடைய எல்லை யில்லாக் கருணையைக் குறித்தவாறு.

உணர்த்த உணரும் சிற்றறிவும், சிறுதொழிலும் உடைமை யால் உயிர்கள் சிற்றுயிர் எனப்பட்டன. இறைவன் ஆலகாலம் உண்டது தன்னாற்றல் வெளிப்படுத்த அன்று; உயிர்கள்மீது வைத்த கருணையால் என்பார் 'இரங்கி' என்றார்.

ஆலகாலத்திற்குள்ள வெதுப்புதலும் கொல்லுதலுமாகிய குணங்கள் சினத்தலும் காய்தலுமாகக் கூறப்பட்டன. ஈரடை கொடுத்து ஆலத்தை விசேடித்தது அதனாற்றல் அவ்வளவும் இறைவன் உண்ட பொழுதே இல்லையாயிற்று என்பதை விளக்குதற்கு.

குற்றம் புரிந்தவன் உணர்ந்து வருந்துவனாயின், அந்தக் குற்றத்தை மறத்தல் பெரியோரியல்பு. யான் பழிப்பதுபோலப் புகழ்ந்தேனாயினும் புகழ்வதுபோலப் பழித்தேனாயினும் என் குற்றத்தை உணர்ந்து மனம் குழைகிறேன் வருந்துகிறேன்

என்றுகூறுதல் தன்னைக் கைவிடலாகாமைக்குக் கூறும் காரணங்கள் என்க. வேசறுதல் - வருந்துதல். இது இந்தக் காலத்து 'வேசாடிப்போச்சு' என உலகவழக்கில் உள்ளது.

'என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்' என்றதால் பிரபஞ்சவைராக்கியமாயிற்று.

நீத்தல் விண்ணப்பம் ஐம்பது பாடல்களும் அந்தாதித் தொடையான் அமைந்தன. இறுதிப் பாடலாகிய இதன்கண் இறுதியிலுள்ள 'கடையவனே' என்பது முதற்பாடலின் முதல் சீராகிய 'கடையவனேனைக் கருணையினால்' என்பதனோடு இயைந்து அந்தாதியாக அமைந்திருத்தல் காண்க.

# 7. திருவெம்பாவை

[சத்தியை வியந்தது]

வாதவூரடிகள் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு, திருவண்ணுமலைப்பக்கத்தை அடைந்தார். அவ் அணிநகர் மாடகூடங்களும், கோபுரமும், தோரணவாயிலும், மதிலும், மதிலைச்சுற்றிக் கமுகும் பொழிலுமாகக் காட்சி அளித்தது. 'இம்மலைதானே அன்று அனல் வடிவமாய் அண்ணமுடியாததாக இருந்தது; இன்றைக்கு மனம் நிறைந்த பெரு வாழ்வாகக் காட்சி அளிக்கின்றதே' என்று மகிழ்ந்தவராய் நகருட்புகுந்தார்; ஆலயத்தைக் கண்டார்; அதனுள் பனி மலை மருந்தாய்த் தம்மை ஆட்கொண்ட குருமணியைக் கண்டார்; பச்சைக்கொடி படர்ந்த பவளமலையாக இறைவனை எண்ணினர்; வாழ்த்தினர். அடிகளார் திருவண்ணுமலையை அடைந்தகாலம் மார்கழிமாதம் திருவாதிரைக்கு முந்திய பத்துநாள். மாதர்கள் பலரும் விடியற்காலையில் எழுந்திருந்து வீட்டையும் முற்றத்தையும் கூட்டி மெழுகிக் கோலமிட்டு, விளக்கேற்றிவைத்து வீட்டுத் தெய்வத்தை வரவழைத்து, குளத்திற்கு நீராடச் செல்லுகின்றூர்கள். அவர்கள் வாயில் அரன்புகழ் இன்னிசையோடு தவழ் தலைக் கண்டார். அவை கவிதையாயின. அவர்கள் வாய் மொழியாக இத்திருவெம்பாவையை அருளிச்செய்கின்றூர்.

திரு எம்பாவை என்பது, மார்கழி மாதத்திலே, கன்னிமை கழியாத பெண்கள் ஒருவரையொருவர் துயிலெழுப்பி அனைவரும் ஒருங்குசேர்ந்து குளத்திற்குச் சென்று நீராடும் வரலாற்றினைக் கூறும் பகுதி. நீராடச் செல்லும்போது கன்னியர் தாம் வழிபட்டு வந்த தேவியின் திருவுருவாகிய பாவையை உள்ளத்து எண்ணி, அதனை விளித்து, தம் இயல்புகளை அறிவித்து, மற்றவர்களையும் எழுப்புவதால் இப்பகுதி 'திரு எம்பாவை' எனப்பட்டது.

'எம்பாவாய்' என்னும் தொடர்மொழி இப்பகுதியின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வருவதால், அதுவே இதற்குப் பெயராக அமைந்தது. இங்ஙனமே திருவாசகத்தில் மகளிர் விளையாட்டாக



அண்ணலார் உறையும் அண்ணாமலையிது

வரும் பெரும்பாலான பகுதிகள், அதனதன் இறுதித் தொடரா லேயே பெயர்பெற்றுள்ளதை ஆங்காங்கு அறியலாம்.

திரு என்பது மங்கலமொழியாக இருப்பதால், சிவத்தொடர் புடைய இப்பகுதிக்கு முதலில் அடைமொழியாகச் சேர்க்கப்பெற்றுத் திருவெம்பாவை என வழங்கப்படுவதாயிற்று. ஆகவே, தெய்வத் தன்மையுடைய எம்பாவை என்னும் பொருள்படும்.

திரு என்பது ஞானம் என்னும் பொருளதாதலே, "போகமும் திருவும் புணர்ப்பானை" என்னும் திருமறையில் தெரிகின்றமையா தலின் ஞானமயமான எம்பாவை எனவும் பொருள்படும்.

திரு என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்க மெனப் பேராசிரியர் திருக்கோவையாருரையில் கூறுவதால் மழை யையும் கணவனையும் அடைதலாகிய போகமும், பரமுத்தியாகிய மோக்கமும் ஆகிய இவ்விருபயனையும் வேண்டுவார் வேண்டியபடி எய்துவதால் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமுடைய எம்பாவை எனப் பொருள்பட்டு இப்பெயர் பெற்றது எனலுமாம். அழகிய எம்பாவை எனலுமாம்.

இறைவனது தொன்மையையும், புகழையும், அவர் அண்ட மாயும் அதனுள் அனைத்துமாயும் இருக்கின்ற நிலைமையினையும் அறிந்த ஆன்மா அவனே முழுமுதற்கடவுள் எனத் தெளிந்து போற்றற்குரியது. அங்ஙனம் போற்றுதற்கு மெய்யுணர்வு முதலி யன இன்றியமையாதன. ஆதலின், அவற்றைச் சோபானக் கிரம மாகச் சிந்தித்து ஆனந்தத்து அழுந்தி அதீதநிலையை அண்மிக் களித்திருக்கும் காலத்தில் ஓரொருக்கால் வாசனாமலம் தாக்கப் பிரிவு நிகழ்ந்துழி அதனையும் பொறுக்கலாற்றாது 'விடுதிகண்டாய்' என இரங்கும். இதுவரையில் உபகாரமாக இருந்து உண்மையை விளக் கிய திருவருட்சத்தியை வியக்கும். அதனால் சத்தியின் நிபாதம் அதாவது வீழ்ச்சி பதியும். அதனால் தானும் தனது உண்மை அறிந்து சத்தியாய், மகளிரைப்போல நீராடுதல் அம்மானையாடுதல் பூக்கொய்தல் முதலிய விளையாட்டை மேற்கொண்டு, அங்கெல்லாம் இறைவனாகிய உயிர்க்காதலனை உற்று உணர்ச்சிவசத்ததாக விளங் கும். இதில் முதற்கண்ணதாகிய சத்திநிபாத அநுபவமே திரு வெம்பாவை. அதனாலேயே சத்தியை வியந்தது என்று பழைய குறிப்புக் கூறுகின்றது.

இப்பகுதிக்கண் அமைந்த பாடல்கள் 'பாவைப் பாடல்கள்' என்றே அழைக்கப்பெறுவன. தொல்காப்பியத்தில் பொருளதி காரச் செய்யுளியல் உரையில் பேராசிரியர் பாவைப் பாட்டிற்கும்

அம்மானைப் பாட்டிற்கும் விதி கூறியிருத்தல் இதன் தொன்மையை விளக்கும். யாப்பருங்கல விருத்தியில்,

"கோழியுங் கூவின குக்கில் அழைத்தன
தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழிசூழ் வையத் தறிவன் அடியேத்தி
கூழை நனையக் குடைந்துங் குளிர்புனல்
வாழியுண் மன்னுவே மென்றேலோ ரெம்பாவாய்"

என்ற பாடலொன்று எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது. அதுவும் தொன்மைக்கு ஓர் சான்று.

பாவைப்பாட்டு பாவை நோன்பைப்பற்றியதாக எழுந்தது என்பது தெளிவு. திருப்பாவை வியாக்கியானத்தில், கண்ணனும் ஆயர் கன்னியரும் காதல்விளையாட்டில் ஈடுபட்டுத் திரிய, அதனைக் கண்ட ஆயமுதியோர் தத்தம் கன்னியரை நிலவறையில் இட்டுப் பூட்டிவைத்துக் 'கண்ணனை நீங்கள் பார்க்கவே கூடாது' என்று கட்டளையிட்டனர்; அன்றுதொட்டு ஆயர்பாடியில் மழையில்லாமற் போயிற்று; அதனால் ஆயர்கள் கன்னியரை விடுவித்து 'மழை வேண்டி நோற்பீர்களாக' என்று ஏவினர்; கன்னியரும், கண்ணனைத் தலைவனாக அடையவேண்டும் எனக் கருதியிருந்தவர்களாதலின் இப்போதும் அவனையே தலைவனாகக்கொண்டு தங்கள் ஆயத்தாரையும் தம்முடனழைத்துக்கொண்டு யமுனா நதிக்குச் சென்று நீராடி நோற்றுக் கண்ணனை நாயகனாக அடையும் மனவிருப்பம் நிறைவேறப்பெற்றனர் என்று கூறப்பெற்றுள்ளது.

பாகவதம் பத்தாங்கந்தத்தில், கோகுலப் பெண்கள் மார்கழி மாதம் முதல்நாள் தொடங்கி விடியற்காலையில் எழுந்து யமுனா நதிக்குச் சென்று நீராடி, மணலில் காத்தியாயனியின் பாவையைச் செய்து வைத்து, பூவும் புகையுங்கொடுத்து, தங்களுக்குக் கண்ணனையே கணவனாகத் தந்தருளல்வேண்டும் எனப் பிரார்த்தித்து வந்தனர்; ஒருநாள் கண்ணனும் அவர்கள்முன் வந்து அருள் செய்து மணந்தான் என்று கூறப்பெற்றுள்ளது.

சங்கநூல்களில் மார்கழி நீராடலாகிய இந்நோன்பு தைந்நீராடுதல் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. தலைவன் கன்னிப்பெண்கள் விளையாடும் பொழிலின்பக்கம் விதிகூட்டவந்து, சிறந்தாள் ஒருத்தியைத் தனித்துக்கண்டு, அவளிடத்துத் தழையும் தாரும் கொடுக்க, அவளும் அதன் முடிவும் பயனும் என்ன என்பதை அறியாமலே ஏற்றாளாக, பின் கற்பின் உயர்வைக்கருதி, தழை தந்தாரையே கணவராகக் கொள்ளக் கருதித் தைந்நீராடினார் என்பதனை,

"பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
தழையுந் தாருந் தந்தனன் இவனென
இழையணி யாயமொடு உதவிநாண் தடைஇத்
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள்"

என்ற பகுதியால் நற்றிணை விளக்கும்.

கலித்தொகை "தையில் நீராடிய தவம் தலைப்படுவாயோ" என்றுகூறும். ஐங்குறுநூறு "நறுவீயைம்பான் மகளிராடும், தைஇத் தண்கயம் போல" என்று தெரிவிக்கிறது.

முன்பனிப் பருவத்தில் மார்கழி மாதத்தில் திங்கள் மறுவோடு நிறைந்த திருவாதிரைநாளில் விரிநூல் அந்தணர் திருவாதிரைக் குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழாவைத் தொடங்க, கன்னியர் 'மழை பல பெய்க நாடு வளஞ்சுரக்க' எனத் தாயர் பக்கலிலே நின்று அம்பா ஆடுகையிலே, முனிபத்தினிகள் மார்கழி நோன்பு நோற்கு முறைகளைக்கூற விடியலில் நீராடி அந்தணர்கள் வேள்வித் தீயிலே ஆடையை உலர்த்தும் வையை எனக் குறிப்பிடும் பரி பாடல் 'கனைக்குரல் அதிர்வானம்' என்பது. அப்பாடல் இந்நோன் பின் நோக்கம், முறை முதலியவற்றைக் காட்டும்.

இங்ஙனம் தொன்றுதொட்டுப் பயின்றுவரும் நோன்பைநோற் கும் பெண்கள், ஒருவரையொருவர் எழுப்பிக்கொண்டு, நீராடச் செல்வதாகப் பாடப்படுவது இது. இக்கருத்தைப் பழைய திருப் பெருந்துறைப் புராணம் "மலவிருளூற் றுறங்காமல் மன்னுபரி பாகர்அருள், செல்வமுழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை" என்னும்.

பழைய உரையாகிய திருவாசக வியாக்கியானம் கூறுவது:- "திருவெம்பாவையார் தசசத்திகளையும், மருவி வியந்து வாய்மொழி பகர்ந்து" என்பது அகத்தியச்சூத்திரம். திருவெம்பாவையில் முதல் பத்துப் பாடல்களாகிய இப்பதிகம், திருவருட்செயலே தன் செய லாக வருவதென அருளியது. அஃதாவது அநாதியாகிய மலசத்தி யைத் திரோதானசத்திகள் எழுப்புதல்போல, ஒரு பெண்ணைப் பல பெண்கள் எழுப்பி நீராடுந்துறைக்கு அழைத்துப் போதலாம். பின் பத்துப் பாடல்களும் அருட்சத்தி மேலீடாக ஆனந்த நீராடலைக் குறிக்கும் பரைவழிபாடாக இருக்கின்றது என்றுரைக்கும். திருவாத வூரர் புராணம்,

"மாதர்கொண் மாத ரெல்லாம் மார்கழித் திங்க டன்னில்
ஆதிரை முன்னீ ரைந்தே யாகிய தினங்க ளெல்லாம்

மேதகு மனைக டோறும் மழைத்திருள் விடிவ தான
போதிவர் தம்மிற் கூடிப் புனற்றட மாடல் செய்வார்.

அன்னவ ரியல்பு கண்டார் ஆங்கவர் புகன்ற தாக
மன்னிய திருவெம் பாவை வாசகம் பேசி"

என்று அறிவிக்கும்.

உலகிற்கு அருள் வழங்கும் நிமித்தம் பரையில் தோன்றிய ஞானமும் கிரியையும் ஒத்த இச்சையே திருமேனியாகக்கொண்ட சதாசிவமூர்த்தி, மகேச்சுர தத்துவத்திலே சத்திமண்டலத்திலே இருந்த மனோன்மணி சத்தியைப் பிரேரிக்க, அது சர்வபூத தமனியைச் சிருட்டிக்க, அச்சத்தி பலப்பிரமதனியைப் பிரேரிக்க, அது பலவிகரிணியையும், அது காளியையும், அது ரௌத்திரியையும், அது சேட்டையையும், அது வாமையையும் பிரேரிக்க இவ்வண்ணம் பிரேரிக்கிற நவசத்திகளின் ஏவலால் மாயையை அதிட்டித்து நிற்கின்ற அநந்ததேவரால் அசுத்தமாயை காரியப்பட்டு, மண்ணீறான பிரபஞ்சகாரியம் நடைபெறும். இந்தச் சிருட்டிக் கிரமத்தை ஒவ்வொரு சைவனும் சிவபூசையின் தொடக்கத்தில் எண்ணியும் இயற்றியும் வருதலையும் அறிக. இதனை உணர்ந்து நோற்பதே திருவெம்பாவை நோன்பாகும்.

சிலர் பெண்களின் செயலாக இலக்கிய நயந்தோன்ற எழுதப்பட்டனவேயன்றித் தத்துவக்கருத்தமைய எழுந்தனவல்ல; ஆகவே இதற்கு நவசத்திகளைக் கொண்டுவந்து நிறுத்தி இடர்ப்பட்டுப் பொருள்காண வேண்டுவதின்றும் என்பர். மணிவாசகப்பெருமான் ஞானுனுபவமாகிய பெருநிலையிலிருந்து உலகமக்களைத் தம் அநுபவ நிலையில் உயர்த்தத் தந்நிலையினின்று கீழிறங்கிவந்து உபதேசிக்கின்றார் ஆதலின் சத்திகளைப் பெண்களாகக்கொண்டு கூறினார் என்றலே சிவஞானியர் நிலைக்குச் சிறந்ததாம். நம்பனருளாமையால் இலக்கிய நயம் மட்டும் நுகர்வாரும், அநுபவம் முதிரச் சிவனருள்காட்ட இவற்றைக் கற்குஞ் சரக்காக அன்றிச் சிவானுபவமாகச் சிந்திப்பர் எனத்தெளிக.

ஆகவே திருவெம்பாவையின் அடிப்படைக் கருத்து இளமகளிர் நீராடுதலே. பதினோராம் பாடல் முதல் இருபதாம் பாடல் வரை நீராடுதல் கூறப்பெறுகின்றது. முதல் பத்துப் பாடல்கள் மகளிர் ஒருவரை ஒருவர் எழுப்பிக்கொண்டு எல்லாருமாகச் சேர்ந்து இறைவன் புகழைப் பாடிக்கொண்டு நீராடச் செல்லுதலைக் குறிப்பனவாகும்.

நீத்தல்விண்ணப்பத்தில் இறைவன் பிரிந்தமையால் விளைந்த துன்பம் ஆற்ருமல், அடிகள் விட்டிடுதி கண்டாய் விடிலோ சிரிப்பிப்பன் ஏசுவன் என்றெல்லாம் நயந்தும் இடித்தும் இரந்தும் விண்ணப்பித்து, பிரிவுத்துன்பம் விஞ்சவே எடுத்த உடலைப்பற்றிய தான ஆண் என்ற உணர்ச்சியும் மடங்கிப்போக, காதல் சிறந்த ஒரு தலைவியின் நிலையை அடைந்து நீராடுதலும் பூக்கொய்தலும் தோணோக்கமாடுதலும் உந்திபறத்தலும் சுண்ணமிடித்தலுமாதியாய செயல்களையமைத்த பாடல்களை அருளுகின்ருர். இவ்வண்ணம் சிவானுபவம் முதிர்ந்தநிலையில் முதற்கண் எழுந்த நீராடலே திருவெம்பாவை.

## கொச்சகக் கலிப்பா

### திருச்சிற்றம்பலம்

155 ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தாள் என்னேயென்னே
ஈதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய். 1

இ - ள்: (ஒருத்தி) முதலும் முடிவும் இல்லாத அரியவற்றுளெல்லாம் அரிய - பெரியவற்றுளெல்லாம் பெரிய ஒளியான பெருமானை நாம் அனைவரும் புகழ்ந்து பாட அதனைக் கேட்டும், ஒளிபொருந்திய பெரிய கண்ணினையுடைய மாதே! நீ தூங்குகின்றனையோ! உன் காதுகள் வன்செவியோ? என்ன;

(மற்றவள்) தேவதேவனுடைய நீண்ட வீரக்கழல்களை நாங்கள் வாழ்த்திய வாழ்த்தொலியானது சென்று வீதியிற் கேட்டலும், உடனே விம்மிவிம்மி மெய்ம்மறந்து, பூக்கள் நிறைந்த படுக்கையினின்றும் கீழே புரண்டு இவ்வாறு தான் ஒன்றற்கும் பயன்படாதவளாக மயங்கிக் கிடந்தாளே; இது என்னே! என்னே! எம்மால் வழிபடப்பெறும் பாவையே! இதுவோ எம் தோழியின் தன்மைகள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், நோன்பின் முதற்சடங்காகிய நீராட்டுக்குச் செல்ல இருக்கும் பெண்களில், பரிபாகம் பெற்ருர் நிலையும் பரிபாகம் பெருதார் நிலையும் இத்தகையன என்பது.

உணர்த்தப்பெறுகிறது. இதனாற்போந்த சிவாநுபவம், மலபரிபாகம் பெற்று முறுகிய அன்புடைய ஆன்மா இறைவனுமைத்தைக் கேட்டலும் தற்போதம் அழிந்து சிவானந்தத்திலேயே திளைத்துச் செயலற்றுக்கிடத்தலும், அஃதில்லாத உயிர் கேட்டும் அறியாமையிலழுந்திக் கிடத்தலும் ஆகிய இருவகை நிலைகளும் உடையன என்பது.

ஏல் ஓர் எம்பாவாய் என்பன இப்பகுதி இருபது பாட்டிலும் இறுதியில் வருவனவாகிய பாவைப் பாடலுக்குரிய சொற்றொடர். இவற்றை வைணவப் பேருரை ஆசிரியராகிய பெரியவாச்சான் பிள்ளை அசைகளாகக் கொண்டுள்ளார். ஆதலால் ஈண்டும் அசைகளாகவே கொள்க அல்லது எமது பாவை போன்ற பெண்ணே! ஏற்றுக்கொள்; சிந்தித்துப்பார் என்று உரைத்தலும் ஆம்.

சிலர், பாவை நோன்பிற்கும் பாடலுக்கும் இயைபுபடுத்தக் கருதி, நோன்பில் ஆற்றங்கரையில் மணலாலமைக்கப்பெறும் காத்தியாயனி உருவத்தை விளித்ததாகக்கொண்டு, நோன்பிற்குரிய தெய்வமாகிய பாவையே! நோன்பெடுக்கும் எம் நிலை இவ்வாறுளது ஏற்றுத் திருவுளம் பற்றுக என்றும் உரைப்பர். [illegible] விளையாடும்போது தம் இயற்பெயரை மறைத்து விளையாட்டுப் பெயரையே தமக்கிட்டு வழங்குவர்; அங்ஙனம் பாவை என்னும் இவ்விளையாட்டுப்பெயரை வழங்கினர் என்பர்.

நோன்பு எடுக்கும் பெண்களுள் யாரும் எழுப்பவேண்டாது தானே எழும்பும் தீவிரதரமான அன்புடையாள் ஒருத்தி எழுந்து அங்ஙனம் எழும்பிவந்த சிலரையும் கூட்டிக்கொண்டு, நீராடப் போகின்றவள், முதல்நாள் நானும் நோன்பு மேற்கொள்ளுவேன் நீராட வருவேன் எனக்கூறிச் சொன்ன வண்ணம் வராமல் உறங்கிக்கிடக்கின்ற ஒருத்தியின் வாயிலில் சென்று எழுப்புவதுபோல இயற்றப்பட்டது இப்பாட்டு. இதில் சென்றவள் உறங்குபவளை வாள் தடங்கண் மாதே! என விளிக்கின்றாள்.

காலையில் எழுந்ததும் காணத்தக்க பெரும்பொருள் சிவம். கண் படைத்ததன் பயன் பேரழகனாகிய சிவபெருமானைத் தரிசித்தல். அவனே கண்ணுக்கு விருந்தாகிய ஒளியாகக் காட்சி தருகிறான்; எல்லாவற்றையும் காட்டுகிறான். அவனைக் காணாது கண்களை இறுக மூடிக்கொண்டு இருளில் அழுந்திக் கிடக்கின்றாயே! இது முறையா? என்பாள் இங்ஙனம் விளித்தாள்.

ஒரு காரியத்தில் சிறிதேனும் விருப்பமுடையாரை அன்றி விருப்பில்லாரை ஏவுதல் முடியாது. நீ இறைவனிடம் காதன்மை கொண்டவள்; அழகி; இருந்தும் பயன் கொள்ளவேண்டிய காலத்தைக் கைநழுவவிடலாமா என்றெல்லாம் கருதச் செய்பவள் 'மாதே' என்ருள். காதல், அழகு எனப் பலபொருள் தரும் மாதர் என்னும் சொல்லின் திரிபு மாது என்பது.

காதல் நிறைவெய்துவது கண்களால். அக்கண்களோ ஒளியும் பரப்பும் உடையன. அங்ஙனமிருந்தும் அவற்றைக் கொண்டு உரியகாலத்துப் பயனெய்தாமலிருப்பது அறிவீனம் என்பாள் 'வாள் தடம் கண் மாதே' என்ருள்.

வளருதியோ - உறங்குகின்ருயோ. கண் வளருதல் என்பது ஒரு சொல்லாய் உறங்குதலைக் காட்டும். ஆயினும் ஈண்டுப் பிரிந்து நின்றும் இடம்நோக்கி அப்பொருள் தந்தது.

விழித்த நிலையில் ஒளியொடுகூடி இன்படையும் கண்களை, உறங்கி இருளில் அழுந்தித் துன்படைவது நியாயமாகுமா என்பது உணர்த்தப்பெற்றது.

ஆதி என்பது ஈண்டுத் தோற்றம் என்னும் பொருள் தருவது. அந்தம் - இறுதி. அது ஈண்டு ஒடுக்கம் என்னும் பொருள் தருவது. ஆதியும் அந்தமும் இல்லாமையாவது தோற்ற ஒடுக்கங்களின்றி அநாதிநித்தியப் பொருளாகத் தான் விளங்குதல்.

உருவம் உடையன யாவும் சுட்டி உணரப்படுவனவாய்த் தோற்றமும் ஒடுக்கமும் உடையன. இறைவன் பேரொளிப் பிழம்பாக அறிவிற்கன்றி, பொறிகளால் உணரப்படுபவனல்ல ணுதலின் 'ஆதியுமந்தமும் இல்லாச் சோதி' என்ருர். இல்லாமை என்றும் இல்லாமையும், இருந்தும் இல்லாமையும், ஒன்றிஞென் றில்லாமையுமென மூவகைப்படும். இறைவனுக்குள்ள தோற்ற ஒடுக்கங்களின் இல்லாமை தீக்குத் தண்மை இல்லை, நீருக்கு வெப்பம் இல்லை என்பன போல என்றும் இல்லாமையாகும். ஆகவே, இறைவன் மாயையின் காரியமாகிய அனைத்தையும் தோற்றுவித்து ஒடுக்கி, அவற்றிற்குத் தான் காரணனுக இருத்தலேயன்றித் தனக்குக் காரணமாவார் யாரும் இல்லாதவன் என்பதாம். இதனுல் முழுமுதற்றன்மையும், அவன் ஒருவனே உயிர்களால் சரணமாக அடையத் தக்கவன்: வணங்கத்தக்கவன்: தியானிக்கத்தக்கவன் என்பதும் வலியுறுத்தப்பெற்றமை காண்க.

அருமை - எளிமையில் அகப்படாததால் ஒரொருகாலத்துப் புலப்படுவதாக உள்ளது. அங்ஙனம் அரிய பொருள் என்று கருதப்படுகின்றவற்றுள் மிக மிக அரிய ஒளி வடிவானவன் என்பாள் அரிய சோதி என்றுள். சோதியுள் அண்ட சோதி, பிண்ட சோதி, மனச்சோதி, ஞானச்சோதி, சிவச்சோதி என ஐந்து என்பர் திருமூலர். அவற்றுள், அண்டஒளி ஒவ்வோர் அண்டங்களிலும் உள்ள சூரியன் சந்திரன் அங்கி விண்மீன் முதலியன (திரு.1975). பிண்ட ஒளி உடம்போடு கூடிய உயி ரறிவின்கண்ணதாய் - மலநாசம் விளைக்க உபாயமாகும் பசு ஞான ஒளி (1985). மனவொளி உயிரைச் சூரியன், சந்திரன், அனல், கலையாகிய நான்குமாக அறிதல் (1990). ஞானஒளி பரநாதத்தின் செயலாய் வைகரியாதி வாக்குகள் உதயமாவ தற்கு இடமாய் இருப்பது. சிவ ஒளி முற்கூறிய நான்கு ஒளி களும் சிவ ஒளியின்முன் இருள்போல அகன்றொழிய, குடங்கள் தோறும் சூரிய ஒளி தோன்றினும் அந்தக் குடங்களின் வாயை மூடச் சூரிய ஒளி அந்தக் குடங்களில்மட்டும் அடங்கியதாகச் சொல்ல முடியாததுபோல எல்லா உயிர்களிடத்தும் விளங்குவ தாயிருப்பது இதுவே அகண்ட ஒளி எனப்படும். இதனையே பின்னரும் திருமூலர்,

> "அண்ட ஒளியும் அகண்ட ஒளியுடன்
> பிண்ட ஒளியுடன் பிதற்றும் பெருமையை
> உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
> கொண்ட குறியைக் குலைத்தது தானே"

என உணர்த்துவர். இம்மந்திரத்தினுள்ளும் அண்ட ஒளி, பிண்ட ஒளி, பிதற்றும்பெருமையையுண்ட வெளியாகிய மனத் துள் விளங்கும் ஒளியாம் மனவொளி, அவ்வொளிக்குள் ஒளி யாகிய ஞான ஒளி, அகண்ட ஒளி என ஐந்து கூறுதல் காண்க. இவ்வண்ணம் இறைவன் நால்வகை ஒளியினும் சிறந்து, பெரிய ஒளியாய சிவஞானமாகிய ஸ்ரீதற்படியில் நின்றும் அறி தற்கரிதாய் இருத்தலின் 'அரும்பெருஞ்சோதியை' என்றுள்.

இப்பகுதியியற்றப்பெற்ற இடம் திருவண்ணாமலையாதலின் திருமாலும் பிரமனும் அடியையும் முடியையும் தேடியறிய முடி யாத ஒளிப்பிழம்பாக நின்றுர் இறைவன் என்னும் தலபுராண வரலாற்றை அடக்கிக் கூறியதாக உரைத்தலுமாம்.

ஆதித்தன் அங்கி முதலிய புறச்சோதிகள் புற இருளைப் போக்குமேயன்றி இறையொளியைப் போல, உயிரைப் பற்றி நிற்கும் ஆணவமாகிய அருவமான அகவிருளைப் போக்காது.

ஆதலின் அகவிருளையும் புறவிருளையும் ஒருசேரப் போக்கும் சோதி அரும்பெருஞ்சோதியாயிற்று என்க.

'யாம் பாட' என்பது "யாமார்க்கும் குடியல்லோம்" என்புழிப்போல ஒரு தலைமை தோன்ற நின்றது. நின்னின் மூத்தவர்களாய், தானே விழித்தெழும் பரிபாகமுற்ற யாங்கள் பாட என்பது கருத்து. யாம் எங்ஙனம் பாடுகின்றோமெனில், இறைவனை உண்மைத்தன்மையால் முழுதும் உணர்ந்து உரைக்கும் ஆற்றலும் ஞான விளக்கமும் எங்களுக்கு இல்லை; ஆகவே ஆதியும் அந்தமுமில்லாத அரும்பெருஞ்சோதியாகக் கண்டு பாடுகிறோம் என்பதாம். 'பாட' இசையொடு கலந்து பாட. என்றது இசையின்பமாவது உன்செவிவழி நுழைந்து உணர்ச்சியை ஊட்டியிருக்கக்கூடாதா? என்னும் குறிப்பால் கூறினளாம்.

கேட்டேயும் - கேட்டும். ஏகாரம் அசை. கேட்டவுடன் நோன்பும், கடமையும், முந்தியநாள் நாம்அனைவரும் செய்து கொண்ட முடிவும், பிறர் வந்து எழுப்பக்கூடியநிலையில் மெய் மறந்து உறங்கிவிட்டோமே என்ற குறையுள்ளமும், அதற்குப் பரிகாரமாக எழும்புதலில் பரபரப்பும் காட்டவேண்டிய நீ அங் ஙனம் ஒன்றும் செய்திலையே என்னும் இழிவைச் சிறப்பித்தது உம்மை.

வன்செவி: குறிப்புமொழி. கேளாத செவியை வலிய செவி யெனக் கூறியதால், மெல்லிய ஒலியசைவையும் உணரத்தக்க அளவிற்கு மெல்லியதாக அமைய வேண்டிய செவி, உனது வீட்டு வாயிலில் வந்து நாங்கள் இவ்வளவு உரக்கப் பாடியும் எழவில்லையே என்று இடித்துரைத்தாள். உன் நிலை இதுவாக, வேறொருத்தியின் நிலை சொல்லுகிறோம் கேள் என்று கூறத் தொடங்குகிறாள்.

மாதேவன் - மகாதேவன் என்பதன் திரிபுமாம்; பெரிய பெருமான். அவன் கழல் 'பாதாளமேழினும் சொற்கழிவு பாத மலர்' என்பாராதலின் மிகப் புகழாலும், அருட்டன்மையாலும் நீண்டன என்பாள் 'மாதேவன் வார் கழல்கள்' என்றாள். கழல் தானியாகுபெயராகத் திருவடியை உணர்த்திற்று. கழல்கள் வேதங்களின் வடிவாக மும்மலங்களையும் வென்ற வெற்றிச் சின்னமாக விளங்குவன ஆதலின், அவற்றைக் கொண்டு இறைவன் திருவடியை ஆகுபெயரால் நினைவூட்டுகிறார்.

வாழ்த்து - ஒருவன் செய்த உபகாரத்தையும் ஆற்றலையும் அருளையும் பொருளாகக்கொண்ட சொற்கூட்டம். இது அண்மையில் இருப்பார்க்குச் சொல்லுருவம் முழுதும் புலப்படுவதால் பொருளுணர்ச்சியை ஊட்டிக் கிளர்விக்கும்; எங்கோ நெடுந் துலைவிலிருந்து வருமாயின் அப்பாடலின் ஓசைமட்டுந்தான் கேட்கும். அதுவே இவளுக்கு எத்தகைய உயர்ந்த நிலையை உண்டாக்கிவிட்டது பார் என்பாள் 'ஒலி வீதிவாய்க் கேட்டலுமே' என்றாள்.

கரைகடந்த அன்புடையளாதலின் கேட்டவுடன் தேம்பித் தேம்பி அழுது, ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, புரண்டு விழுந்து மெய்ம்மறந்து கிடக்கின்றாள் என்கின்றாள். விம்முதல் உவகைக் கலுழ்ச்சி. மெய்ம்மறத்தல் - தற்போதமாகிய சீவ போதங்கெடுதல். போதார் அமளி - பூப்படுக்கை. பூப்படுக்கையிலேயே படுத்துறங்கும் மென்மையுடையாள் புரண்டு வீழ்ந்ததும் தரையின்வன்மையுறுத்த ஊறுணர்ச்சியாலரவது விழித்திருக்கலாம்; அவள் அது செய்யாமைக்குக் காரணம் மெய்ம் மறந்தமையே என்கிறாள். வெள்ளந்தாழ் விரிசடையாய் விண்ணோர் பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய், பள்ளந் தாழுறுபுனலிற் கீழ்மேலாகப் பதைத்துருகுகிறாள் என்கிறாள்.

உருகுகின்றவரையில், அவளது உள்ளம் காரியப்பட்டது. அதற்குமேல் அவள் மெய்ம்மறந்தாள். புரண்டதும் விழுந்ததும் அறிகிற்றிலள் கிடந்தாள் என்பதாம்.

படுக்கை, புலன்களின் நுகர்ச்சியாகிய உலக இன்பத்தைக் குறிப்பது. வாழ்த்தொலி, மந்திரமாகிய ஐந்தெழுத்து; உபதேச மொழி. அதைக் கேட்டதும் விம்மியது ஆனந்தாதிசயமாகிய உவகை; மெய்ப்பாடு. மெய்ம்மறத்தல் - ஆனந்தாதீதமாகிய அநுபவம். கிடத்தல் - அவ்வநுபவத்துள் அழுந்திச் செயலற்ற நிலை. "ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாந்துணையான்" என்பதுபோல, பிரபஞ்ச வாசனை அற்றமையால் அவளுக்குச் சிவமாகுந் தரை தாரகமாயிற்று. உயிர் தன்னை இந்திரியங்களின் வேறுவான் காணவே தனது முதல் சீபாதத்தை அணைந்தது என்பதாம்.

அங்ஙனம் சிவபோதமானவர்கள் உலகியலுக்கு - நோன்பு முதலிய சடங்குகளுக்கு - கன்மங்களுக்கு உதவார்கள். அதுபோல இவளும் அங்ஙனம் ஆயினள் என்பார் 'ஏதேனும் ஆகாள் கிடந்தாள்' என்றாள்.

கிடந்தாள் எனில் கல்போல ஞானசூனியமாய்க் கிடந்தாள் என்பதன்று. அங்ஙனம் கிடத்தலில் அநுபவம் இன்மையான். வாழ்த்தொலியின் பொருளாவானுடைய அருளேதாளுய் அநு பவநிலேயில் கிடந்தாள் என்பதாம்.

என்னே: வியப்பிடைச்சொல். இவள் நிலே இவ்வாருக, நீ நாம் பாடவும் மூடநிலேயில் உறங்கிக்கிடக்கின்ருயே! என் தோழியானல் நீயும் அவளேப்போலல்லவா அநுபூதிமானுக இருக்கவேண்டும் என்று இடித்து உணர்த்துகின்றவள் 'என் தோழி பரிசு ஈதே' என்ருள்.

இத்திருப்பாட்டில் மூவர் மகளிர் கலந்துகொள்கின்றனர். ஒருத்தி எழுப்புகின்றவள்; மற்ருெருத்தி தூக்கத்தில் மயங்கிக் கிடக்கின்றவள்; மற்ருெருத்தி வாழ்த்தொலி கேட்டு ஆனந்த மேலிட்டிருப்பவள். இம்மூவருள் எழுப்புகின்றவள் பரிபாக முற்ற சகல நிலேயிலுள்ள ஆன்மா. அது விரதம் தவம் தானம் பூசை செபம் செய்ய முற்படுநிலேயில் இறைவனேப் பாடிப் பரவு கிறது. அதற்குத் துணேயாவரை அழைக்கிறது.

எழுப்பியும் உறக்கத்திலாழ்ந்து கிடப்பவள் ஆணவத்தாற் கட்டுண்டு, இருள்மூடி, இறைவனே நினையாது வாளாகிடக்கும் கேவலாவத்தையிலுள்ள ஆன்மா.

வாழ்த்தொலி கேட்டு மெய்ம்மறந்து கிடப்பவள் முன்னம் அவனுடைய நாமங்கேட்டவுடனேயே தீப்பட்டமெழுகுபோல் மனம் உருகிச் சீவபோதங் கெட்டுச் சிவானந்தத்தில் மூழ்கிப் பேரின்பந்துய்க்கும் சுத்தாவத்தையிலுள்ள பரிபாக முற்றிய உயிர். ஆகையால் சுத்தான்மாவைப்பற்றிக் கவலே இல்லே; அவள் ஏதேனும் ஆகாள்; கேவலத்தில் கட்டுண்டு கிடக்கும் உன்னே எழுப்புகிருேம்; எழுந்திரு; நீராடு; நோன்பு எடு; பாடு; அவள்நிலேயை நாமும் எய்துவோம் என்று அறிவுறுத்தினுள் என்க.

இறைவன் திருவடி திருவருளாகிய சிவசத்தியையே குறிப்ப தாகலின் மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி சத்தியை வியந்ததாம். ஆதலால் பழைமையான கருத்துக்கும் இப்பாடல் இயைபுடைத்தாதல் அறிக.

**156** *பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகல்நாம்*
*பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே*
*நேசமும் வைத்தனேயோ நேரிழையாய் நேரிழையீர்*
*சீசி இவையுஞ் சிலவோ விளேயாடி*

ஏசு மிடமீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யா மாரேலோ ரெம்பாவாய். 2

இ - ள்: தகுதியான அணிகலங்களையுடைய பெண்ணே! நாம் பேசும்போதெல்லாம் இரவும் பகலும் எனது அன்பு மேலான ஒளிவடிவினனை இறைவனுக்கே உரியதென்பாய்; இப்போது மலர்நிறைந்த படுக்கையில் அன்பு வைத்தாயோ? (என்று வந்தவர்கள் கேட்க);

(உள்ளிருந்தவள்) தக்க அணிகலன்களை அணிந்தவர்களே! சீ! சீ! இவைகளும் சிலவா? யாம் விளையாடி ஏசிக்கொள்ளும் இடம் இதுவா? (என்ன);

(வந்தவர்கள்) யாம் யார்? தேவர்கள் வணங்குவதற்குக் கூசுகின்ற திருவடிகளை எமக்குத் தந்தருள இந்தப் பூமியின் கண் எழுந்தருளும் பேரொளிப் பிழம்பானவனும், சிவபுரத்தானும், தில்லைத்தலத்தில் திருச்சிற்றம்பலம் என்னும் ஞானாகாயத்தில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய இறைவனுக்கு அன்பு நிறைந்தவர்கள் என்றவாறு.

முதற்பாட்டில் இடையன்புகொண்ட யாம் கடையன்பினை உடைய உன்னை எழுப்ப வந்தோம்; எம் பாட்டைக் கேட்டும் நீ தூங்கிக்கிடக்கின்றாய்; தலையன்பு பூண்டவள் எம் பாட்டைக் கேட்டதும் பரவசமாயினாள்; அவள் உலகியலுக்கும், சிவானுபவத்திற்கும் இடைப்பட்ட நம் நிலையாகிய நோன்பு முதலிய சடங்குகட்கு ஆகாள்; நீ எழுந்திரு என்று உணர்த்துகின்றாள் என்று உணர்த்திய வாதவூர்வள்ளல் இத்திருப்பாட்டில் நான் எப்போதும் கடவுளிடம் அன்புகொண்டவள் என்ற நீ பள்ளியில் நேசம்வைத்தது எப்போது என்று வந்தவர்கள் கேட்க, அவள் சீசீ இப்படி விளையாடுதற்கு இதுவா இடம்; நாம் அனைவரும் ஈசனுக்கு அன்பர் அன்றோ என்றுணர்த்துகின்றாளாக ஈடுபடுகின்றார்.

இறைவனை அடைந்து பூசித்து வீடுபேறு அடைதற்காகப் பிறந்த உயிர், குறிக்கோள் தவறிப் பிரபஞ்சமயலில் சிக்குண்டு கிடக்க, அதனைப் பரிபாகமுற்ற ஞானாசாரியன் உபதேச வாயிலாகத் தீயன போக்கக் கடிந்து உரைத்தலும், அதனை நகைபடச் சொன்னபோது சிவனடியார்கள் நகைச்சுவைதோன்றப்

பேசலாமோ என ஞானக்கண் திறந்த உயிர் வினவுதலுமாக இப்பாடற்கருத்து அறியத்தக்கது என்க.

இங்ஙனமன்றி, ஆயத்தார் பரிகசித்துத் தலைவியை எழுப்ப, அவளும் அவர்களோடு நகையாட, வீணாகக் காலங்கழிதலைக் கண்ட மற்றொருத்தி காலப்போக்கிற்காக வருந்திக் கடிந்த தாகக்கூறுவர். அது செய்யுளமைதிக்கும் அடிகளார் நிலைக்கும் ஏலுமேற்கொள்க.

மேற்பாட்டில் துயின்ற ஒருத்தியை எழுப்பிக்கொண்டு மற்றொரு தோழியையும் எழுப்புவதற்காக அவள் வீட்டு வாசலை அடைந்து அழைக்கின்றவள், பிராமி முகூர்த்தமாகிய விடியல் நேரத்தில் நன்றாக அயர்ந்து அணிந்த அணியும் அசையாமல் உறங்குவதைக் கண்டு அணிகள் கண்ணிற்பட நேரிழையாய்! என்றாள். அணி கண்ணில் படுவானேன் எனின், கன்னிமை கழிந்தாள் கழுத்தணியையும் மங்கலநாணையும் பிறர் கண்ணில் பட அணிதலாகாது; கன்னிமை கழியாதாள் கழுத்தணிகளை மேலாடைமீது தோன்ற அணிவாள்; ஆதலால், அவள் கழுத் தணி கண்ணிற்பட விளித்தாள் என்க. நேரிழையீர் என அவள் விளித்தற்கும் இதுவே கருத்தாதல் காண்க.

நாம் பேசும்போது எப்போது: "காலையும்மாலையுமெல்லாம் உரையில் விரவி வருவான்" என்று நம்பியாரூரர் சொல்வது போலப் பேசும்போதெல்லாம் என்பது.

பரஞ்சோதி-மேலான சோதிவடிவானவன். இருளில் மூழ்கி யிருக்கின்றவர்களுக்கு ஒளியே இன்பப் பொருளாக எதிர் தோன்றுமாதலின், இறைவனைப் பாடல்கள்தோறும் சோதி யாகவே கண்டு வருகிறாள். பரஞ்சோதிக்குப் பாசம் - 'கிழங்கு மணற்கு ஈன்ற முளை' என்பதுபோல நான்கனுருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்ததாகக்கொண்டு பரஞ்சோதியி னிடத்தன்பு எனப் பொருள் காண்க. இக்கருத்து "ஈசனறியும் இராப்பகலுந்தன்னைப் பாசத்துள் வைத்துப் பரிவு செய்வார் களை" என்ற குறுந்தொகையாலும் நன்கு விளங்கும்.

'என்பாய்' என்றது சொல்லளவிற் சொல்லும் நீ செயலில் காட்ட வேண்டிய காலத்தைக் கைவிடுகிறாய் என்று குறிப்பித் தாளாம். முற்பிறவிகளில் செய்த சிவபுண்ணிய விசேடத்தால் இராப்பகலாக நாம் பேசுகின்றபோதெல்லாம் எனக்குச் சிவ னிடத்தன்பு என்பாயே; அத்தகைய நீ பிரபஞ்சவாழ்வில் நேசம்

வைத்தாயோ என்பாள் 'இப் போது ஆர் அமளிக்கே நேச மும் வைத்தனையோ' என்றாள். இப்போது ஆர் அமளி எனப் பிரித்து இதுபோழ்து (மலர்) நிறைந்த படுக்கையின்மேல் என்று உரைப்பாரும் உளர்.

சீசி என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இவையும் சிலவோ - இப் படிப் பேசுகின்ற இவையும் சில உன்னிடத்து உள்ளனவோ. ஒழுக்கமுடையார்க்குத் தீய வழுக்கியும் வாயில் வராததுபோல நகையாடல் முதலிய இவைகள் சிவநெறி பூண்ட செம்மனச் செல்வரிடம் தோன்றா என்பாள் 'இவையும் சிலவோ' என்றாள்.

காலத்தின் பெருமையை எண்ணிப் பார்; நல்ல வைகறை தெய்வ வணக்கத்திற்கு உரிய காலம்; இக்காலத்தில் நகை யுரையும் விளையாட்டுரையும் ஏச்சுரையுமா பேசுவது என்பாள் விளையாடி ஏசுமிடம் ஈதோ?' என்றாள். ஈதோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. இதுவன்று என்பதாம்.

விண்ணோர்கள் தாம் செய்த பசுபுண்ணிய விசேடத்தால் வினைப்போகம் தீரும்வரையில் போகபூமியில் போகதனுவோடு பிறந்து பதவிகளில் இருப்பவர்கள். அவர்களுக்கும் பதவி யாகிய மலம் இருப்பதால், தாமே தம்மை அனைவரும் வணங்கல் வேண்டும் என்ற முனைப்புடையவர்களாதலின் இறைவன் திருவடியை வணங்கியுய்ய நாணுகின்றார்கள் என்பாள் 'விண் ணோர்கள் ஏத்தக் கூசும் பாதம்' என்றாள். இப்பொருளால் திருவடி மெய்யன்பர் பொய்யன்பர் அனைவரையும் ஆட்கொள் ளும் அருள்வடிவினதாக இருந்தும் தேவர்கள் தம் அறியாமை யால் கூசுகின்றார்கள் என்றவாறு. அவ்வண்ணம் தேவர்கள் வணங்க நாணத்தை அடையும் திருவடியென நாணுதலைத் திருவடியின் செயலாகக் கூறுவாரும் உளர். வானவர்கள் வாழ்த்துவதும் மனம் தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல் லாம் தொழவேண்டியாதலின், அவர்களுடைய பொய்ம்மையான காமியப்பயனைக் கருதிய வணக்கத்தைக் கண்டு இறைவன் நாணி நக்கு நிற்பர் ஆதலின் நாணுதலாகிய அவர் செயலை அடியின் செயலாக்கிக் கூறுதலும் அமையும்.

கண்டார் கருத்தையும் கண்ணையும் கவரும் மாட்சியும் மென்மையும் உடையது என்பாள் 'மலர்ப்பாதம்' என்றாள்.

தேவர்கள் திருவடியைத் தொழக் கைலையாதி தலங்களை நோக்கிச் சென்றும் பெறாது வருந்த, எமக்கு அவனே திருவடி யைத்தந்து இரட்சிக்கவேண்டும் என்று, வயல்களைச் சென்று

வளமுறுத்தும் பள்ளவாய்க்கால்போல விரைந்து வருகின்றான் என்பாள் 'பாதம் தந்தருள வந்தருளும் தேசன்' என்றாள். ஈண்டும் தேசன் என்றது ஒளியுருவினன் என்பதைக் குறிப்பித்தது.

சிவலோகம் மாயாதீதமாய் அப்பிராகிருதமானது. அங்கே ஆனந்தவடிவாக இறைவன் எழுந்தருளியிருந்து பிரகிருதி மாயாபுவனம் வரை அனைத்துலகினும் ஆட்சிசெலுத்துகின்றான் ஆதலின், அது சிவராசதானியாயிற்று. ஆதலால், அங்கு விளங்கும் மன்னன் சிவலோகன்.

ஒளியுருவினனாய் எங்கும் பரந்தும், சிவலோகனாகக் கரந்தும் உயிர்கட்கு அரியனாக உறைவானாயினும், எமக்கெல்லாம் தோட்டத்துப்பச்சிலைபோல எளிமையில் பயன்படும்பொருட்டுத் தில்லைச் சிற்றம்பலத்துள்ளும் விளங்குகின்றான் என்பாள் 'தில்லைச்சிற்றம்பலத்துள் ஈசனார்க்கு' என்றாள்.

அன்பு ஆர் யாம் யார் - அன்புபொருந்திய நாம்; வேறு யார். ஒத்த கருத்துடைய மக்களுக்குள் ஏச்சும் பேச்சும் வரலாமா? யாம் அனைவரும் ஈசனார்க்கு அன்புபொருந்தியவர்களல்லரோ வேறு யார் என்றாள்.

பலவுரைகளில், இறுதியில் உள்ள 'ஆர்' என்பதை நழுவவிட்டு ஈசனார்க்கு அன்பு ஆர் யாம் எனக்கொண்டு, நாம் அனைவரும் அன்புடையர் அல்லவா? என்று பொருள்கொள்ளப் பெற்றுள்ளது. வேறு சிலர், ஈசனார்க்கு - ஈசனாகிய பெருமான் பொருட்டுச் செய்யப்படும், அன்பு யார் யாம் ஆர் - அன்பு எத்தகையது யாம் எத்தகையோம் என்று உரை வகுத்து, இறைவன் திருவடியில்வைத்த அன்பு எத்துணை உயர்ந்தது; அன்புவைத்த யாம் எவ்வளவு சிறப்புடையேம்; அங்ஙனமிருக்க ஒருவரை ஒருவர் எள்ளி நகையாடுதல் ஆகாது என்றாள் என் நயமும் காண்பர். மற்றும் சிலர், ஈசன் ஆர்க்கு அன்பு ஆர் - ஈசன் அணிந்துள்ள கொன்றைமலர் மாலையைக் கொள்ளும் உரிமையையுடையார் யாவர்; யாம் ஆர் - யாம் எத்தகையேம் எனப் பொருள்கொள்வர். ஆர் - கொன்றை; ஆத்தியுமாம் என்பர். இவற்றுள் எளிமையும் இனிமையுமான பொருள் கொள்ளத்தக்கது.

வாயன்புமட்டும் போதாது; செயலிலே காட்டவேண்டிய காலத்து அன்பைக் காட்டவேண்டும். விண்ணோர்க்கு அரிய பெருமான் நமக்கு எளியர். இறைவனிடம் உண்மையன்பு

கொண்டார் ஒருக்காலும் நிலைமிற்றாழார்; நகையாடார்; ஏசார்; ஆழிநீர்போல் அமைதியாய்க் களிப்பாய் நிறைந்திருப்பர் என்ப துணர்த்தப்பெற்றன.

இதுவும் திருவடியின் பெருமையும் எளிமையும் உணர்த்து தலின் சத்தியை வியந்ததாம்.

157 முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீ ரீசன் பழவடியீர் பாங்குடையீர் [லாதோ
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்
எத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமோ
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய். 3

இ-ள்: முத்தைப்போன்ற வெண்மையான பற்களை யுடைய பெண்ணே! முன்பெல்லாம் எமக்கு முன்னே எழுந்து எதிரே வந்து, என் தந்தை; இன்பவடிவினன்; அமுதம்போல இனியன் என்று வாயூறித் தித்திக்கப் பேசுவாய்; எழுந்து வந்து வாயிற்கதவைத் திற (என்று வந்தவர்கள் கூற);

(உறங்குகின்றவள்) இறைவனிடம் மெய்யன்புடையீர்!, பழமையான அடிமையுடையீர்! பண்புடையீர்! அத்தகைய நீவிர் புதிய அடிமையாகிய எங்கள் குற்றத்தைப் போக்கி ஆட்கொண்டால் அது பொல்லாததாமோ? (என்று கூற);

(வந்தவர்கள்) ஏதோ உன் அன்புடைமை அனைத்தையும் யாமெல்லோரும் அறியமாட்டோமா? மனந்தூயவர்கள் நம் சிவபெருமானைப் பாடமாட்டார்களோ? உன்னை எழுப்ப வந்த எங்களுக்கு இத்தனையும் வேண்டியதுதான் என்றார்கள் என்றவாறு.

இத்திருப்பாடல், வாயினிக்கப் பேசிப் பயனில்லை; வந்து வாசலைத் திற என்று பல கழற்றுரைகளைச் சொல்லித் துயில் உணர்த்தியவற்றை உணர்த்துவது.

சென்ற சென்ற ஆண்டு மார்கழித் திங்களில் எல்லாம், தன்னைப் பிறர் எழுப்புதற்கு முன்பே எழுந்து கால் கைகளைத் தூய்மை செய்துகொண்டு நீறணிந்து இறைவன் புகழை வாய் இனிக்கப் பாடிவருப்வள் என்பாள் 'முத்தன்ன வெண்ணகை யாய்...தித்திக்கப் பேசுவாய்' என்றாள்.

நகை - பல்: தொழிலாகு பெயர். பண்பாகு பெயருமாம். அப்பெண்ணின் மலர்ந்த முகத்தின் அலர்ந்த நகையே அவளுடைய உள்ள மலர்ச்சியையும் நிறைவையும் காட்டுகின்றது என்பாள் 'முத்தன்ன வெண்ணகையாய்' என்றாள்.

முத்து நிறமும், ஒளியும், தூய்மையும், தண்மையுமாகிய குணங்களாலே பல்லுக்கு ஒப்பாயிற்று. 'முன் வந்து எதிர் எழுந்து' என்பதனை முன் எழுந்து எதிர் வந்து எனக் கூட்டிப் பொருள் கொள்க. இது யாரும் எழுப்பாமலே தானே வந்தமையை உணர்த்தியது.

அத்தன் பிறவிக்குக் காரணனாக வளர்ச்சிக்கு எல்லா வகையினும் துணை செய்பவன். இறைவனும் பிறவிக்கு நிமித்த காரணனாகத் திரோதாயியைக்கொண்டு போகங்களை ஊட்டி, மல நீக்கம் பெறச்செய்து உயிரின் வளர்ச்சிக்குத் துணை செய்பவன் ஆதலால், 'என் அத்தன்' என்றாள். பெண்களுக்குத் திருமணத்திற்கு முன் தந்தையும், பின் கணவனும், முதுமையில் ஈசனும் பற்றுக்கோடாக விளங்குபவர்கள் ஆதலின் இளமையிலும் எனக்கு உறுதுணையானவன் என்பாள் 'அத்தன்' என்றாள்.

ஆனந்தன் - இன்ப வடிவினன். உண்மையானும் அறிவானும் ஒத்த கணவனைக் கலந்தகாலத்து விளையும் இன்பம்போல இறைவன் எல்லா உயிர்களும் பெண்களாகத் தானொருவனே தலைவனாகக் கலந்திருந்து இன்பம் பயப்பவனாதலின் இங்ஙனம் கூறினாள்.

நாவிற்கு இனிமையாய்ச் சாவாமை பயக்கும் அமுதம்போல உயிர்க்கு இனியனாய்ப் பேரின்பம் பயப்பவனாதலின் 'அமுதன்' என்றாள்.

அள்ளூறல் - நாவில் எச்சில் ஊறுதல். புளி கண்டார்க்கு நாவில் நீர் ஊறுதல்போல இறைவன் பெயர்களாகிய அத்தன் ஆனந்தன் அமுதன் என்றவற்றைச் சொல்லும்போது சொல் நிறைந்த பொருளுணர்ச்சி அனுபவத்திற்கு வர அதனால் கேட்பவர்களுக்கும் நாவில் எச்சிலூறித் தித்திக்கப் பேசுவாயென்றாள். பேசுவாய் என்றது செயலில் காட்டவில்லை என்னும் குறிப்புணர்த்தி நின்றது.

பள்ளியைவிட்டு எழுந்திருக்கவும், கடைவாயில்வரை வரவும் வாயில் திறக்கவும் சோம்பல் படாதே எனக் குறிப்பிப்பாள் 'வந்து உன் கடை திறவாய்' என்றாள். இதுவரை உள்ள பகுதி எழுப்பவந்த தோழியர் கூறியது.

பற்று என்பதன் மரூஉ பத்து. பத்துடையீர் - அன்புடையீர். ஈசன் என்பதை இடைநிலை விளக்காகக்கொண்டு ஈசன் பத்துடையீர், ஈசன் பழவடியீர், ஈசன் பாங்குடையீர் எனக் கூட்டுக. பத்துடையீர் - அடியார்களுக்கு அமைய வேண்டிய பத்துக் குணங்களை உடையீர் எனலுமாம். "பத்துகொலாம் அடியார் செய்கை தானே" என்ற அப்பர்சுவாமிகள் வாக்கையும் ஒப்புநோக்குக. பத்துக் குணங்களாவன: விபூதி உருத்திராக்கம் தரித்தல், குரு வழிபாடு, அன்புடன் சிவதோத்திரம் செய்தல், மந்திரசெபம், இறைவழிபாடு செய்தல், பதிபுண்ணியங்களைச் செய்தல், சிவபுராணம் கேட்டல், சிவாலய பரிபாலனம், சிவனடியாரிடத்து உண்டல், அடியார்க்கு அடியனுதல் என்பன. இப்பத்துக் குணங்களும் உடையவர்களே பழவடியராதற்கு உரியராதலால் பத்துடையீர் என்பதனை அடுத்துப் பழவடியீர் என்றுள்.

பாங்கு - பக்கம். குணம்: ஈசன் பாங்குடையீர் - சீவகுணம் நீங்கிச் சிவகுணத்தினரானவர்களே என்றுள். இவ்வண்ணம் துயிலெழுப்ப வந்தவர்களியல்பைச் சொன்ன அவள் தன்னிலையாகக் கூறுவன: புத்தடியோம் - புதிய அடியேம். புன்மை - கீழ்மை அல்லது குற்றம். புத்தடியவற்கு எது ஆண்டானுக்கு உவப்பு என்பதும், எவ்வெப்போது எங்ஙனம் நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பதும் தெரியாது. அதனுல் பல குறைகள் விளையக்கூடும். பழவடியாராக இருக்கின்றவர்கள் இது ஆண்டானுக்கு உவப்புத்தராது என்றும், இப்போது ஆண்டானுக்கு இது வேண்டுவது என்றும் தெரிவித்துத் திருத்தித் தம்மிடம் ஆண்டானுக்குப் பேரருள் விளைவித்துக்கொள்ளுதல் போலப் புத்தடியவரிடமும் ஆண்டான் கருணை ஆம் வண்ணம் பழக்குதல் கடமையாம் என்பார் 'புத்தடியோம் புன்மைதீர்த்து ஆட்கொண்டாற் பொல்லாதோ' என்றுள்.

இங்ஙனம் உறங்கிக் கடைதிறப்பவள் கூறுவதைக் கேட்ட எழுப்பவந்தவர்கள், ஏதோ உன் அன்புடைமை அனைத்தையும் நாங்கள் அறியோமா? மனத்தூய்மையுடையவர்கள் சிவனைப் பாடத்தானே செய்வார்கள்; சும்மாயிருப்பார்களா? என்று கூறியவர்கள் தங்களைப் பழவடியீர் என்றும், தன்னைப் புத்தடியேம் என்றும் கூறிக்கொண்டதில் இலைமறைகாய்போல் கரந்து கிடக்கும் மனக்கசப்புணர்ந்து, ஏதோ அம்மா! நின் அன்புடைமை எங்களனைவருக்கும் தெரியும்; மனந்தூயார் கடவுளைத் தோத்தரிப்பது இயற்கைதானே! ஆனுலும் உன்னைச் சொல்லிப்பயன் என்ன; எழுப்ப வந்தோமே எங்களுக்கு இவ்வளவும் வேண்டியதே என்றுள்.

எத்தோ நின் அன்புடைமை என்பதற்கு நின் அன்புடைமை சூதோ (ஆகாது) என்பாரும், உனது அன்புடைமை வேறு எவ்வகையினதோ என்பாரும் உளர்.

முற்பிறவிகளில் ஈட்டிய சிவபுண்யவிசேடத்தால் இறைவன் புகழைச் சொல்லி ஏத்தும் அளவு பரிபாகமுற்ற உயிரைச் சிவ ஞானம் கைவரப்பெற்ற பழவடியார்கள் கிரியைத்தொண்டுக்கும் வழிப்படுத்த அழைத்தாராக; தம் அன்புடைமையில் ஓரளவு உறுதியையுடைய சுத்தாகங்காரம் தலைதூக்க, அதனால் நீங்க ளனைவரும் பழவடியீர் பாங்குடையீர் நாளோ புத்தடியேன் எனக்குப் புன்மை உண்டு அதனைத்தீர்த்து ஆட்கொள்ளக் கூடாதா என்று சினங்கரந்த குறிப்புரையாற் குத்திக்காட்ட, அந்த அகங்காரமுங்கூட சிவானுபவத்திற்கு இடையூறுதலின் அதனையும் நீக்கத் திருவுளம்பண்ணி உன் அன்புநிலை எங்க ளுக்கும் தெரியும்; உனக்கு மனத்தூய்மையிருந்தால் இத்தனை நேரம் எழுந்து கடைதிறந்து எம்மொடு வந்து கூடி இறைவ னைப் பாடிப் பரவ வேண்டாமா? பரிபாகம் சரிவரப்பெறாத உன்னை உணர்த்தவந்ததற்கு இவ்வளவும் எமக்கு வேண்டியது தான் என்று கூறிப் பரிபாக முறுத்தும் உபதேசவுரையாக இதனைக்கொள்க.

*158* *ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ*
*வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ*
*எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்*
*கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே*
*விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்*
*கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்*
*உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்*
*தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய்.* *4*

*இ-ள்:* ஒளிபொருந்திய முத்துப்போன்ற பற்களையுடைய பெண்ணே! இன்னம் பொழுது விடியவில்லையா? *(என்று வந்தவர்கள் கூற);*

*(உறங்குபவள்)* நிறம் பொருந்திய கிளியின் மழலைச் சொல்போலும் சொல்லையுடைய தோழிகள் எல்லாரும் வந்து விட்டார்களோ *(என்று கேட்க);*

*(வந்தவர்கள்)* எண்ணிக்கொண்டு உள்ளபடி சொல்லு கிறோம்; அதுவரையும் கண்ணைத் தூங்கப்பண்ணிக் காலத்தை வீண்போக்காதே; தேவர்களுக்கு ஒப்பற்ற அமுதானவனை,

ஞானமயமான வேதங்களின் விழுமிய பொருளானவனை, கண் களுக்கு இனிமை பயப்பவனைப் பாடி மனங்கசிந்து நெக்கு உருகுவதால் யாம் எண்ணிச் சொல்லமாட்டேம் ஆயினேம்; ஆதலால் நீயே வந்து எண்ணிக்குறைந்தால் மீட்டும் துயில் வாயாக என்றார்கள் என்றவாறு.

இத்திருப்பாடல் எண்ணிச் சொல்கின்றவரை தூங்கலாம் என்று எண்ணுகின்ற அவளைப் பார்த்து, எண்ணிச் சொல் கின்ற அளவு எமக்குச் சீவபோதநிலை இல்லை; ஆதலால் நீயே வந்து எண்ணுக; குறைந்தால் தூங்கப்போவாயாக என்று பக்குவான்மாவின் நிலையும், அபக்குவான்மாவின் தகுதியின் மையும், அதனைத் தகுதியுண்டாக்கும் முறையும் உணர்த்து கிறது.

கன்னியர்கூட்டம், ஒருத்தி மலர்ந்த முகத்துடன் அரைத் தூக்கத்தில் அசதியாலும் குளிராலும் எழுந்திருக்கமாட்டாமற் கிடந்தாளாக, அவளை நோக்கி இன்னும் பொழுது புலர வில்லையா? என்று வினவுகிறவள் 'ஒள் நித்தில நகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ' என்றாள். அயர்ந்து தூங்குகின்ற போது முகமலர்ச்சியும் பல்லழகும் வெளிப்படா. பல் இயற்கை யாகவே வெளிப்பட்டிருக்குமாயின் உறக்கத்தில் விகாரமாகவும் இருக்கும். ஆதலால் அரைத்தூக்கத்தில் இருக்கின்றவளைப் பார்த்தே அழைக்கின்றாள் எனக்கொள்க.

வண்ணம் மேனியின் பொலிவையும், கிளிமொழி மொழி யின் இனிமையையும் தோன்றச் செய்வன ஆதலின் 'வண்ணக் கிளிமொழியார்' எனத் தோழியரைக் குறிப்பித்தாள். முன்னாள் பேசிய முடிவின்படி எல்லாரும் வந்தார்களோ என்றாள். அவள் கேட்டதன் நோக்கம், அவள் வரட்டும் இவள் வரட்டும் அதற் குள் யானும் வந்துவிடுகிறேன் என்று அதுவரை கண் மூடிக் கிடக்கலாம் என்பது. இதனைப் புரிந்துகொண்ட தோழியர், எண்ணிச் சொல்கின்றேம்; அதுவரை தூங்கி வீணாகக் காலத் தைக் கழிக்க வேண்டாம் என்றவர்கள், மீளவும் தமக்கு எண்ணிச் சொல்லக்கூடிய நிலை இல்லாமையை உணர்ந்து இறைவனைப் பாடிப் பரவசமுற்றிருப்பதால் யாம் முடியாதவர் களாக இருக்கிறோம்; நீயே எண்ணிக் குறைந்தால் திரும்பவும் தூங்கச் செல் என்றார்கள்.

வண்ணம் - நிறம், அழகுமாம். பேசாத நாளெல்லாம் பிறவா நாள் ஆம் ஆதலின் 'அவமே காலத்தைப் போக்காதே' என்றார்கள்.

விண், இட ஆகுபெயராகத் தேவர்களை உணர்த்தியது. தேவர்கள் அமுதம் கிடைத்து உண்டு, சுவை கண்டவர்கள். ஆனால், இறையமுதாகிய இது, இதுவரை அவர்களுக்குக் கிடைத்த அமுதம்போலாதது; ஒப்பற்ற மருந்து. இது ஆயுளை நீட்டிக்கச் செய்து சாவின்மையைமட்டும் அளிப்பது அன்று. நிலைத்த பேரின்பத்தையே தரவல்லது என்பார் 'ஒரு மருந்தை' என்றார்.

வேதம் இந்திரன் சந்திரன் முதலிய எல்லாத் தெய்வங்களுக்கும் இடம்நோக்கிப் பரத்துவம் கூறிச்செல்லும். அங்ஙனம் கூறும் பொருள்களுள் சிவபெருமானே விழுமையுடையவராக வேதமுதலிலும் இறுதியிலும் இடையிலும் விளங்குகின்றார் ஆதலின், 'வேத விழுப்பொருளை' என்றார்.

'உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான் இவை நான்கும் மருந்தெனற்குரியன' ஆதலின் பிறவிநோய் தீர்ப்பவனாகிய இறைவன் மருந்தெனப்பட்டான் என்க. "மருந்தவை மந்திரம் மறுமைநன் நெறியவை" என்னும் திருநெல்வேலித் தேவாரமும் காண்க.

கண்ணுக்கு இனியானை - கண்களுக்கு அழகனாக இருந்து இனிமை தருபவனை. பொறிகளுள் ஒன்றாகிய கண் அழகிய பொருளைக் கண்டு ஆனந்திக்கவல்லது. அதற்கும் நிறைவு வழங்க இறைவன் பேரழகனாக சோமசுந்தரனாக கல்யாண சுந்தரனாகக் காட்சி வழங்குகின்றார். ஏவலர் வெற்றி இறைவனைச் சேருவது போல, கருவியாகிய கண்கண்ட காட்சியின்பம் பின் அறிவாய் உயிர்க்கு இன்பூட்டுவதாகலின் அகக்கண்ணாகிய ஞானத்திற்கும் இனியான் என்றாள்.

மருந்து - அமுதம். பசிக்கு உணவாவது. தேவர்கள் காமியப்பயனைக் கருதி வழிபடுபவர்கள். அவர்கள் நிலைக்குத்தக இறைவன் அமுதாயிருந்து பசி தணிக்கும் மருந்தாகின்றான்.

தெய்வமென்பதோர் சித்தமுண்டாக, அதனால் இறைவனை யடையும் உபாயங்களை அறியும் முயற்சி பிறக்க, வேத சிவாகம புராண இதிகாசங்களைப் படித்து அதனால் ஆம் ஞானத்தைத் துணையாகக்கொண்டு இறைவனை அறிய முற்படும் பாசஞானிகளுக்கு வேதவிழுப்பொருளாகக் காட்சி அளித்து, தெய்வம் என்ற பொதுமையினீங்கித் தேவதேவன் என்ற சிறப்புவகையான் உணரும் பொருளும் ஆவான் இறைவன் என்பது 'வேத விழுப்பொருளை' என்பதனால் உணரப்படுவதாயிற்று.

காட்சி - ஞானம்: பாசஞானத்தால் இறைவனுடைய சிறப்பியல்புகள் உணரப்படாமற்போகவே சரியையாதி உபாயங்களினின்றும், திருவருளாலும் பதிஞானம் கைவரப்பெற, அதனல் இறைவனை உள்ளவாறு உணர்ந்து நுகருங்கால் கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்து இனிக்கின்ற நிலையைப் பூரண பரிபாகமுற்ற ஆன்மா உணருமாதலின் அதனைக் 'கண்ணுக்கினியானை' என்பது தெரிவிப்பதாயிற்று. ஆகவே இம்மூன்று புகழுரைகளாலும், பெத்தான்மாவின் காமியப் பொருளாயும் பாசஞானியர்க்கேற்ப நூலறிவாயும், சிவஞானியர்க்கு ஏற்ப அநுபவப்பொருளாயும் விளங்கும் இறையியல்புகள் உணர்த்தப்பெற்றமை காண்க.

இன்னும் இதனல், எல்லாரும் வந்துவிட்டார்களா என்று கேட்டுத் துயில்கின்ற சகலான்மாவின் பெத்தநிலையனுபவமும், பாடி உள்ளம் உருகுவதால் யாம் செயலற்றேம் என்னும் சிவஞானியர் திடமும், சிவஞானியர் பாச பசுஞானமுடையாரைக் கடிந்துரைத்துத் திருத்தும் கருணையும் உணரப்பெறுகின்றன.

இறைவனைப் பாடி உள்ளம் கசிந்துருக யாம் மாட்டேமாயினேம் எனச் சத்திநிபாதம் பெற்றூர் நிலை குறிக்கப்பெறுதலின் சத்தியை வியந்ததாயிற்று.

**159** *மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்*
*போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்*
*பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்*
*ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்*
*கோலமு நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டுஞ்*
*சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்*
*றோல மிடினும் உணரா யுணராய்காண்*
*ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய்.* 5

இ - ள்: திருமாலால் அறியப்படாததும், பிரமனல் காணப்படாததுமான மலையாகக் காட்சி வழங்கியவனை, நாம் முழுதும் அறிவோமென்று உளவாகிய பொய்களையே பேசும், சுரக்கின்றபாலையும் தேனையும்போல இனிமையொழுகப் பேசுகின்ற வாயையுடைய பொய்யளே! உன்கடைவாசலைத் திறப்பாயாக; மண்ணும் விண்ணும் பிறவுலகங்களும் அறிதற்கரிய சிவனுடைய திருவடிவும், அவன் நம்மை ஆளாக ஏற்றுச் சீராட்டும் அருட்குணமும் ஆகிய இவற்றைப் பாடி, சிவனே சிவனே என்று ஓலமிட்டுக் கூவியும், துயிலுணராய் ஆயினை;

உணர்ந்துகொள்ளாயாயினை; காண்; இதுவே மயிர்ச்சாந்து அணிந்த கூந்தலையுடைய கன்னியின் தன்மையாம் என்றவாறு.

அரி பிரமரும் அறியாத சிவபெருமானைப் பார்த்தறிந்தாற் போலப் பேசும் வஞ்சகி! நாங்கள் சிவன் கோலத்தையும் சீலத்தையும் சொல்லி ஓலமிடுகின்றோம், நீ உணராய் என்று இடித்துரை இயம்புகின்றாள்; இதனால் பிரபஞ்சவாழ்வே பெரிதென மயங்கி அறியாமையாகிய இருளில் அழுந்திக்கிடக்கும் ஆன்மாவை ஞானாசாரியர்கள் இறைவன் நாமத்தை உபதேசித்து உயர்த்தவும் உயரமாட்டாத இழிவைப் புலப்படுத்துகின்றார்.

திருமால் பிரமனினும் பெரியவனாகப் பரிபாகமுற்றவனாதலின் அவன் இறைவனை முற்றுமறிய முயன்றும் அவனுக்குத் தோற்றான் என்பார் 'மால் அறியா மலையினை' என்றார். நான்முகன் எண்கண்ணுடையனாதலின் அடைந்தனுபவிக்க வேண்டிய திருவடியைக் காணமுயற்சித்துத் தோற்றான் என்பார் 'நான்முகன் காணா மலையினை' என்றார். ஆகவே அவர்களால் அறியவும் காணவும் முடியாத மலையுருவத்து இறைவனை நாம் அறிவோம் என்று பேசும் உன் பொய் மிகப் பெரிது என்பாள் 'படிறீ' என்றாள். நஞ்சு குளிர்ந்து வெய்தாதல்போலப் பொய் கேட்க இனிதாய், தேனும்பாலும் கலந்தாற்போல இனிக்கும் என்பாள் 'ஊறு பால் தேன்போல்வாய் படிறீ' என்றாள். கடைதிறவாய் என்றது பேச்சழகி! செயல்செய்ய வா என்றும் குறிப்பினது. பொக்கம் - பொய்.

ஞாலம் - இருவினை நுகர்ச்சிக்கும் இருவினைகளை இயற்றிக் கோடற்கும் இடனாகிய கன்மபூமி. விண் - பசுபுண்ணியப் பயனை நுகர்தல் ஒன்றற்கேயுரிய போகபூமி. பிற - தீவினைப் பயனைப் பலவேறு உருவங்களிலிருந்து துய்த்தற்குரிய நரக பூமி. நரகமுதலான இடங்களில் உள்ளார் துன்புற்று அதனால் சித்தவிருத்தி இழந்திருத்தலின், ஞானவாய்ப்பு ஒருபோதும் கூடாமையான் அறியார் ஆயினர். விண்ணிலுள்ளார் பொன் விலங்கு பூண்டவர்கள் போல இன்பநோக்கே உடையவர்களாய், பதவிமோகத்தில் கட்டுண்டு இறைவனை அறியாராயினர். மண்ணுலகில் உள்ளார் குருவருள் பெற்றுப் பரிபாகம் எய்துகின்ற வரையில் அருமையும், பரிபாகம் பெற்றபின் அறிதலும் உடையராதலின் ஞாலத்திற்கு அறிவும் அருமையும் உடையான் ஆயினர் என்க. விண்ணிற்கும் பிறவற்றிற்கும் கூறும்போது அறிவரியான் என்பதனை ஒருதொடராகக்கொண்டு அறிதற்கு அரியான் எனவும், ஞாலத்திற்குக் கூறும்போது அறிவும் அருமையும் உடையான் என உம்மைத்தொகையாகவும் கொள்க.

அவனருளே கண்ணாகக் காணின் அல்லால், எவராயினும் தன் முனைப்பால் சார்ந்து அறிதற்கரியான் எனலுமாம்.

'மாலறியா நான்முகனும் காணா மலை' என்ற சொல்லமைப்பில் மால் - மயக்கம் என்னும் பொருளுந்தரும் சொல்லாதலின் மயங்கிய விஷ்ணுவும், ஒருமுகப்படாத நான்முகனும் கண்டறியாத மலையானவன் என ஒரு நயந்தோன்றி நிற்றலுங் காண்க. இதனை வடநூலார் சப்தசத்தி மூலத்தொனி என்பர்.

கோலம் - வடிவு. அது நந்தம் கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவு ஆதலால் உருவும் அருவும் உபயமுமாகிய முத்திறத்ததாய், அவ்வவ்வான்மாக்களின் பரிபாகத்திற்கு ஏற்ப அறியப்படுவதாகலின் அதனைப்பற்றிப் பாடி என்றாள். இவ்வுருவம் எம்மைப்போல வினைவயத்தான் வந்ததன்று; ஒருவன் உதவ எழுந்ததன்று என்பதனை "அகளமா யாரும் அறிவரிதப்பொருள், சகளமாய் வந்ததென் றுந்தீபற. தானாகத்தந்ததென் றுந்தீபற' என்னும் திருவுந்தியார் தெரிவிக்கும். இம் மூவகைத் திருமேனிகளையும் கொண்டு உயிர்கள் சிந்திக்கவும், வழிபடவும், உபதேசம்பெறவும் உரியனாகின்றான் என்பதாம்.

கோதாட்டுதல் - குற்றங்களைப் போக்குதல்; கருத்துப் பொருள் சீராட்டுதல். நம்மிடம் அநாதியே உள்ள குற்றம் மல மறைப்பு. அதன் வலியை ஒடுக்கி மறைக்காதவண்ணம் செய்து. சீலம் - அடியார்க்கு எளியனாந்தன்மை. சௌலப்பியம் என்னும் வைணவ உரைநூல்கள். ஆகவே இறைவன் கோலத்தையும் சீலத்தையும் பாடி என்றாள். இங்ஙனம் பொதுவகையால் பாடி உணராதாளை உணர்த்த நாதனுமமாகிய சிவனே என்று கூவி உணர்த்தத் தொடங்கினேம் என்பாள். 'சிவனே சிவனே என்று ஓலமிடினும் உணராய் காண்' என்றாள். உண்மை அன்பு இருக்குமாயின் இறைவன் கோலத்தையும் சீலத்தையும் பாடிய போதே விழித்திருக்கவேண்டும்; சிவநாமத்தை பொதுவாகச் சொன்னவுடனாவது விழித்தெழவேண்டும்; நாங்கள் மறைவாக மந்திரமாகச் சொல்லவேண்டிய மிக உயர்ந்த சொல்லை உன் பரிபாகமின்மையை அறிந்து ஓலமிடுதலாக உரக்கக்கூவினேம்; அப்படியும் எழுந்தாயல்லை என்றாளாம்.

மார்கழி மாதம் பிறந்ததுமே நோன்பெடுக்கவேண்டிய நீமயிர்ச்சாந்து முதலிய போகப்பொருள்களை அணிந்து உறங்குகின்றாய் என்பாள் 'ஏலக்குழலி' என்றாள். திருப்பாவையில் "மையிட்டெழுதோம் மலரிட்டு நாமுடியோம்" என வருவதுங் காண்க.

ஏலம் குழலிலணிதல், ஓலமிட்டும் உணராமை, நாம் அறிவோம் என்று பொக்கங்களே பேசுதல் ஆகிய இவைகள் இறைவனால் ஆட்கொள்ளப்படுதற்கு இடையூறுவன என்பதை உணர்த்தி, திருமந்திர உபதேசத்தை உபதேசக் கிரமத்தில் செய்ய முடியாமையால் உரக்கக்கூவி உணர்த்தியது மலபரிபாக முறாத உயிரைப் பரிபாகமுறுத்தும் முறையைத் தெரிவிப்பதாம்.

இப்பாட்டில் இறைவன் உருக்கொள்ளும் பொதுவியல்பும், அறிவரிய தன்மையாகிய சிறப்பியல்பும் உணர்த்தப் பெறுவதாலும், உருமேனி தாங்குதற்குக் காயம் காண்பது சத்திதன்னாலாதலின் சத்தியை வியந்ததாயிற்று.

160 மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலு நாணுமே
போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே யறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா யுனக்கே யுறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய். 6

இ - ள்: மான்போலும் மருண்ட பார்வையுடையவளே! நீ நேற்று 'நாளைக்கு நானே வந்து உங்களை எழுப்புவேன்' என்று சொன்ன அளவிலே, நீ போன திசையை நாணுமே சொல்வாயாக; இன்னம் பொழுது விடியவில்லையா? வானுலகத் தேவர்களும் மண்ணுலக மக்களும் பிறவுலகத்தினரும் அறிதற்கு அரியனாகிய சிவன் தானே எளியனாக வந்து தலையளி செய்து எம்மை யாட்கொள்ளும் அழகிய நெடிய வீரக்கழலை அணிந்த திருவடிகளைப் பாடிக்கொண்டு வந்தவர்களாகிய எமக்கு உன் வாய்திறந்து ஒருவார்த்தை கூறினையல்லை; உடல் உருகினையல்லை; உனக்காகவேவந்த எங்கட்கும், மற்றையோர் கட்குமாகவாவது தலைவனைப் பாடுவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டு, மன மொழி மெய்களால் வழிபடும் மெய்யடியார்க்கு இறைவன் பள்ளமடை நோக்கிப் பாயும் புனல் போல்வான்; ஆதலால் துயில் எழுந்து திருவடியைப் பாடி உன் மனத்தைப் பள்ளமடையாக்கிக்கொள் என்று உணர்த்துகிறது.

முதல் நாள் கன்னியர் பலர் கூடி, மார்கழி நோன்பைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது, இப்பாடலில் கூறப்படும்

பெண் எல்லாரையும் பார்த்து, 'நாளைக்கு நானேவந்து எழுப்புகின்றேன் பாருங்கள்' என்று சொல்லிச் சென்றவள், சொன்ன வண்ணம் வந்து எழுப்பாமையால், சொல்லைக் காப்பாற்றும் நாணிழந்து நீபோன திசை சொல்வாய்; இன்னமுமா பொழுது புலரவில்லை; அது போகட்டும். அறிதற்கு அரிய இறைவன் எம்மை வலிய வந்து ஆட்கொள்ளும் திருவடிகளைப் பாடி வந்திருக்கிறோம்; நீ உனக்காகப் பாடவில்லையாயினும், உன்னை எழுப்பவந்த எங்களுக்கும் ஊரார் மெச்சிக்கொள்ளவுமாகவாவது பாடுக என்றாள்.

கன்னியர் உரையாடலாக உலக இயல்பை ஒட்டி அமைந்திருக்கும் இப்பகுதிக்கு 'உனக்கேயுறும்; எமக்கும் ஏனோர்க்கும் தங்கோனைப் பாடு' எனப் பிரித்து, வாய் திறவாமையாகிற இந்நிலை உனக்கே பொருந்துவதாம்; எங்களுக்கும் பிறர்க்கும் தலைவனைப் பாடுக எனப் பொருள் உரைப்பர். சிறந்தன சிந்தித்துக் கொள்க.

மானே என்று உவம ஆகுபெயராக உறங்கும் கன்னியை விளித்தார்கள். குற்றம் செய்தார் அந்தக் குற்றத்தைப் பிறர் உணர்ந்தார் என்றறிந்தவழி நாணுதல் இயற்கை ஆதலின், 'நானே முன்னர் எழுந்து வந்து உங்கள் அனைவரையும் எழுப்புவேன்' என்றவள் அங்ஙனம் வாராமையினால் சொல் காவாத நீ போன திசையை நாணாமல் சொல் என்றார்கள்.

சொல் காவாமைக்குப் பொழுது விடியாமையைக் காரணமாகக் கூறுவாள் என்பதை உட்கொண்டு 'இன்னம் புலர்ந்தின்றோ' என்றார்கள்.

'வானே நிலனே பிறவே அறிவரியான்' என்பதற்கு முன் பாட்டில் 'ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்' என் பதற்கு உரைத்ததைக்கொள்க. அத்துணைப் பெரியபெருமான் தவம் சிறிதுமில்லாத எம்மையும் ஒருபொருளாக்கத் திருவுளங் கொண்டு தானே வந்து நம்மையும் ஆட்கொண்டு, சிறந்த கருணையைப்புரிந்தான்; அங்ஙனம் அவன்புரிதற்குக் கருவியாக இருந்தது அவன் திருவடியே என்பார் 'தலையளித்தாட்கொண்டருளும் வான் வார் கழல்' என்றார். அறிவரியானது கழல், ஆட்கொண்டருளும் கழல், வான் வார் கழல் என இயைத்துப் பொருள்காண்க. வான் - அழகு. கழல் தானியாகுபெயராகத் திருவடியை உணர்த்திற்று. இவ்வண்ணம் இறைவனுடைய அருட்டிறத்தைப்பற்றிப் பாடிவந்ததைக் கேட்டுங்கூட நீ வாய்

திறவாதிருத்தல் தவறு என்பார் 'பாடிவந்தோர்க்கு உன் வாய் திறவாய்' என்றார். இறைவன் புகழைக் கேட்டதும் நீ செய்ய வேண்டிய செயல் வாய்திறந்து பாடுதல்மட்டுமன்று. புன் புலால் யாக்கை புரைபுரை கனிய, என்பெலாம் உருக ஊனினை உருக்கவேண்டும்; பாடாத உனக்கு அந்நிலை எங்கு வரப் போகிறது என்றார்.

பரிபாகமின்மையால் இறைவனது புகழைக் கேட்டவுடன் பாடுதலும் பரிசழிதலும் உருகுதலும் உனக்கே நிகழாவிடினும், எமக்காகவும் பிறர்க்காகவுமாவது பாடுதல் வேண்டுமென்பார் 'எமக்கும் ஏனோர்க்கும் தங்கோனைப் பாடு' என்றாள். உங்களுக்குக் கோனயினனை நான் பாடுவானேன் என்பாள் என எண்ணி 'உனக்கேயுறும் எமக்கு' என நாங்கள் இங்கு வந்தது உன்னையும் இத்தொண்டில் ஈடுபடுத்தவேயாதலின் எமக்காக நீயும் பாடுதல் ஒப்புரவாம் என்றாள். தங்கோன் - தலைவன். தம்பிரான் என்பது போலத் தமக்குக் கோன் தானேயாயினன் என்பது.

கழல் பாடுதல் திருவருளை வியந்தது ஆதலின் சத்தியை வியந்ததாயிற்று.

161 *அன்னே யிவையுஞ் சிலவோ பலவமரர்*
*உன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்*
*சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்*
*தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்*
*என்னானை யென்னரைய னின்னமுதென் றெல்லோமும்*
*சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந் துயிலுதியோ*
*வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்*
*என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய்.*

இ - ள்: அம்மா தாயே! இப்படியும் சில உன்னிடம் உள்ளனவோ? தேவர் பலரால் நினைத்தற்கரியவனும், ஒப்பு இல்லாத முதல்வனும், பெரிய கீர்த்தியுடையானும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளி வருவதற்கு அடையாளமான 'சின்னம்' என்னும் வாத்திய ஒலி கேட்ட அளவிலே சிவா என்று வாய்திறப்பாயே! தென்னா என்று அவன் பெயரைச் சொல்வதற்குமுன் தீயையணுகிய மெழுகைப்போல மனம் உருகுவாயே! அத்தகைய நீ, யாங்கள் எல்லோமும் என்னானை போல்வான், என் அரசன், இனிய அமுதன் என்று வெவ் வேறாகச் சொன்னோம் அவற்றைக் கேள்; அப்படிக் கேட்டும்

உறங்குகிறாயோ? கனியாத நெஞ்சத்தையுடைய அறிவிலிகள் போலச் சும்மா கிடக்கின்றாயே; உனது தூக்கத்தின் தன்மை என்னே என்றவாறு.

இத்திருப்பாட்டில், அம்மா தாயே! இப்படியும் ஒரு நிலை உனக்குண்டோ? முன்பெல்லாம் சின்ன ஒலி கேட்டால் 'சிவா சிவா' என்றுசொல்லித் தீ சேர் மெழுகுபோல நீ உருகுவாயே; இப்போது யாங்கள் அனைவரும் சேர்ந்து இறைவனைப்பற்றிப் பேசவும் தூக்கத்தால் பேதைபோலக் கிடக்கின்றாயே! என்னம்மா தூக்கம் என்று, தலையன்பு கொண்டு மனங்கசியும் பரிபாகியான உயிர் வாசனுமலந்தாக்க மனமிறுகி அறியாமை மேலிட்டுக் கிடக்கும்நிலையைத் தெரிவிக்கின்றார்.

அன்னே என்றது உவப்பால் இளையாளை அழைக்கும் முறை வழுவமைதி. முன்னே தீசேர் மெழுகொப்ப இறைவன் பெயரைக் கேட்டளவில் மனமுருகியவள் இன்று வன்நெஞ்சப் பேதையர்போலக் கிடக்கின்ற நிலையைக் கண்டு 'இவையும் சிலவோ' என்றார். வீடுதோறும் சென்று எழுப்பும் தொழிலில் வெறுப்புக் கண்டு உரைத்தார் எனலுமாம்.

பல அமரர் - அமரர் பலரும் என்க. முற்றும்மை விகாரத்தால் தொக்கது. அமரர்கள் ஞானத்தால் அறிபவர்களல்லர்; மனம் முதலிய அந்தக்கரணங்களைக்கொண்டு அறிய முயல்பவர்கள் ஆகையால், அவர்களால் உன்னுதற்கு அரியனாயினன் என்பது. இவ்வண்ணம் உன்னுதற்கு அரியனென இறைவன் மேலேற்றிக்கூறினும் இறைவன் பரமதயாநிதி ஆதலின், அவன் எளியனே; ஆயினும், தேவர்கள் அதிகார மலத்துள் அகப்பட்டும், புண்ணியப்பயனாகிய போகத்துள் மயங்கியும் கிடப்பவர்கள் ஆதலின் அவர்களே மலமறைப்பால் இறைவனை எண்ணமாட்டார்கள்; எண்ணமாட்டாமையால் இறைவன் அரியனாகிறான் என்பதாம்.

ஒப்பாவார் இல்லாமையால் 'ஒருவன்' என்றது. அங்ஙனம் அரியனும் பெரியனும் ஆயினும் அவரவர் தகுதிக்கேற்ப ஆட்கொண்டு அருளும் தன்மையால் புகழ் மிக்கவன் என்பார் 'இருஞ்சீரான்' என்றனர்.

சின்னம் - ஒருவகைக் குழல்வாச்சியம். எக்காளம் தாரை போன்றது; சிறியது; குரு, இறைவன், அரசர் முதலாயினோர் வெளிப்புறப்படும்போது அவர்கள் வருகையைக்குறிக்க ஊதப்பெறுவது. அதன் ஒலியைக்கேட்டதும் 'சிவா' என்று பேசுவாய்

என்றார்கள். கூறுவாய் என்றது வாய் திறப்பாய் என்றது வாய்திறந்தாலே "நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவா யவே" என்பதுபோல 'சிவ' என்பதே வெளிப்படும் என்பதாம்.

தென்னா - தென்னவனே. பாண்டிநாட்டரசனே; என்றது சௌந்தரபாண்டியனாக வீற்றிருந்து அரசாண்ட நிகழ்ச்சியை நினைவூட்டுவது. அழகியாய் என்றுமாம். தென் - அழகு. என்னா முன்னம் என்பது விரைவு குறித்து நின்றது. 'தென்னா என்னா முன்னம் தீசேர் மெழுகொப்பாய்' என்றது காரணமுந்துறு காரிய நிலை.

எல்லோரும் சொன்னோம், வெவ்வேறாய்ச் சொன்னோம் கேள் எனக் கூட்டி, கூட்டாக இருந்தும் போற்றினோம் தனித் தனியாகவும் போற்றினோம் எனப் பொருள் காண்க. என்றது கூட்டாக இருந்து போற்றிய பேரொலியைக் கேட்டாவது நீ எழுந்திருக்கலாம்; அது முடியாதபோது வேறாகச் சொன்ன போது பொருளுணர்ச்சி புந்தியிற்பதிந்து அருளனுபவத்தை ஊட்ட அதனாலாவது எழுந்திருக்கலாம்; இரண்டும் செய்திலை என்பார் இங்ஙனம் கூறினார்கள்.

என் ஆன் ஐ: ஆன் தவிர்வழிவந்தசாரியையாகக்கொண்டு என் ஐ யெனக்கூட்டி என் தலைவன் எனப் பொருள் கொள்க. எனது ஆனைபோல்பவனே எனலுமாம். யானை தன்னைக்கட்டச் சங்கிலியையும் தானே தூக்கிச்சென்று தம்பத்தை யணுகிநின்று கொண்டு சங்கிலியைப் பாகன் கையில் கொடுத்துக் கட்டச் செய்வது போல, இறைவன் உள்ளமெனும் கூடத்தில் ஊக்க மெனும் தறியைச் சார்ந்துநின்று அன்பென்னும் தளையை உதவித் தான் அதில் கட்டுண்டு நிற்கின்றான் ஆதலின் 'என் ஆனை' என்றார் எனலுமாம். என் அரையன் - என் அரசன். போலிமொழி. இன் அமுதன் - நஞ்சுடன் பிறவாத அநாதி நித்தியமான அமுதம்போல்வான்.

பேதை, பருவம் குறித்த பெயரன்று; அறிவிலி என்னும் காரணம் கருதிய பெயர். வன் நெஞ்சப் பேதையர் - இறைவன் புகழைக் கேட்டும் கசியாத கனியாத உருகாத உள்ளம் படைத்த அறிவிலிகள். பேதையர்போல் என்றமையால் இவள் உண்மையில் பேதையல்லள் என்பது பெறப்படும். இங்ஙனம் நீ கிடப்பதற்குக் காரணம் தூக்கமே என்பார் 'என்னே துயி லின் பரிசு' என்றார்கள். இறையன்பில் ஈடுபட்ட உன்னையும் தூக்கம் இங்ஙனம் செய்துவிட்டதே என ஆற்றலைவியந்தவாறு.

பாசத்தைப்பற்றிப் பாசமாயும், சிவத்தைப்பற்றிச் சிவமாயும் நிற்கும் ஆன்மா, சிவச்சார்பின் நீங்கி, மலச்சார்பைப் பெற்ற காலத்துமயங்கி அறிவழிந்து வன்நெஞ்சப் பேதையாயிருக்கும். அப்போது இறைவன் தோழனாகவும் ஆசாரியனாகவும் எழுந்தருளி, உன் உண்மை நிலை இது; இப்போது மயங்கிக் கிடக்கின்றாய் என்று உணர்த்தி, தன் தாள்சாரவைப்பன் என்பதனை உட்கிடையாகக்கொண்டிருத்தல் காண்க.

இங்ஙனம் இறையருள் உணர்த்துதலைக் குறிப்பித்தலின் சத்தியை வியந்ததாயிற்று.

162 கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழி லியம்ப வியம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். 8

இ - ள் : கோழி கூவ, எங்கும் பறவைகள் ஒலிப்பவாயின; நாதசுரம் ஒலிக்க வெண்மையான சங்குகளும் எங்கும் ஒலிக்கும்; ஒப்பற்ற மேலான ஒளி வடிவினனாகிய இறைவனுடைய, ஒப்பில்லாத மேலான கருணை முதலான ஒப்பற்ற சிறந்த பொருள்கள்நிறைந்த பாடலைப்பாடினோம்; நீ கேட்டிலையோ? வாழ்வாயாக! இது என்ன தூக்கமோ! வாய்திறந்து சொல்; அருட்கடலாகிய இறைவனுக்கு அன்பு செய்கின்ற முறை இப்படித்தானோ? இனியாவது பேரூழிக்குப் பின்னும் தலைவனாக விளங்குபவனும், உமாதேவியை ஒருபாகத்து உடையவனும் ஆகிய பெருமானையே பாடுவாயாக என்றவாறு.

புட்கள் ஒலித்தன; பல்லியங்கள் முழங்கின; நாங்கள் பரம்பொருளைப்பற்றிப் பாடினோம்; இவை உனக்குக் கேட்கவில்லையா? இது என்ன உறக்கமோ! இறைவனையே நீயும் பாடுக என்பார், சித்தும் சடமுமாகிய பிரபஞ்சம் அனைத்தும் பொழுது விடிந்ததை உணர்ந்தபோது உணர்த்த உணரும் சித்தாகிய நீ மல இருளில் மயங்கி இருத்தல் கூடாது என்று உணர்த்துகிறார்.

கோழி - சேவல். 'கோழி கூவப் பொழுது புலர்ந்தது' என்பது இலக்கணநூலில்வரும் உதாரணம். அது பொழுது

புலர்வதை முன்னரே அறிவிக்கும். அது கூவியவுடன் ஏனைய பறவைகள் எழுந்து ஒலிக்கும். ஆகையால் 'கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்' என முறைபற்றி அமைத்தார். குருகு - பறவைப் பொதுப்பெயர்.

ஏழில் - நாதசுரம். ஏழு சுரங்களுக்கும் இருப்பிடமானது என்னும் காரணம்பற்றி வந்த பெயர். ஒருவகை குழற்கருவி என்பாருமுளர். கோயில்களில் அதிகாலையில் சங்குஊத, அதன் பின்னர் நாதசுரம் முதலிய ஏனைய வாத்தியங்கள் வாசிக்கப் பெறும். சிலர், இசைவாணர்கள் அதிகாலையில் நாதசுரம் பயில்வர்; அவ்வோசைகேட்டுக் கோயில்களில் சங்கூதுவார் சங்கொலிப்பர் என்பர். சங்கு கோயில், அரண்மனை, மடம், செல்வர்மனை எங்கும் முழங்கப்பெறுவதாகலின் 'வெண்சங்கு எங்கும் இயம்பும்' என்றார். இத்துணையும் விடியல்நிகழ்ச்சிகள்.

கேழ் - ஒப்பு. விழுப்பொருள் என்றது பொருள் அமைந்த பாடல்களை உணர்த்தியது. பொருள் - இறைமைக்குணங்கள் முற்றவும் உடைய இறைவன்புகழ் எனப் பரிமேலழகர் கூறுவர். கேட்டிலையோ என்பதில் ஓகாரம் வினா. கேட்டாயாயின் நீ உறங்காய் ஆதலின் கேட்டிலை என்பதே எம்முடிவு என்றார்கள்.

ஈது என்ன உறக்கமோ - இது எப்படிப்பட்ட உறக்கமோ? என்றது பக்கத்திலே இவ்வளவு பேர் இருந்து, இறைவனைப் பற்றி உரக்கப் பாடியும் எழாமையால் கூறினார்களாம். 'வாய் திறவாய்' என்றமையால் கண் திறந்தமை பெறப்பட்டது எனக் கருதுவாரும் உளர்.

இறைவன் அருட்கடலாதலின் 'ஆழியான்' என்றார். அவனிடத்து அன்புடையார் தீசேர் மெழுகொப்பக் கசிவார்களன்றி இங்ஙனமிரார் என்பார் 'ஆழியான் அன்புடைமையாமாறும் இவ்வாறோ?' என்றார். ஆழியானது அன்புடைமையாமாறும் இப்படியோ என விரித்து, சக்கரப்படையுடையவனாகிய திருமால் தாருகாவனத்தில் ஆனந்தத் தாண்டவதரிசனம் செய்துவிட்டு, ஆதிசேடனாகிய சயனத்தில் அறிதுயிலமர்ந்த மூர்த்தியாகவே படுத்திருந்து தைலதாரைபோல இடையீடில்லாத அன்புகொண்டிருந்தானே அத்தகைய அன்பு ஆமாறும் இவ்வாறோ என்றார் என்பாரும் உளர்.

நீ ஒரு சைவ நங்கையாய், சிவனடி மறவாத செல்வியாக இருந்தும், ஆழியானாகிய திருமாலினிடத்தில் அன்புடையை

ஆமாறும் இவ்வாறே என உரைத்து, ஆழியான் பாற்கடலில் பையத் துயில்பவனுதலின் அவனிடம் அன்புகொண்டமையை இவ்வண்ணம் தூக்கத்தால் வெளிப்படுத்துகின்றாயோ என்று நகையாடினர் எனலுமாம்.

ஊழி முதல்வனாய் எல்லாவற்றையும் தம்முளடக்கிநின்ற நிலையில் ஒருவனாய் நின்றவன் பிரபஞ்ச சிருட்டியை எண்ணிய காலத்து ஏழை பங்காளனாயினன் அவனைப் பாடுக; என்பார் 'ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை ஏழைபங்காளனையே பாடு' என்றார்.

இவ்வண்ணம் எல்லாம் தன்னுள்கரக்கத் தானொருவனே யாய் இருக்குமுதல்வன் புனருற்பவத்தை எண்ணித் தன்னின் வேறாகத் திருவருட்சத்தியைக்கொண்டு அதனுடன் ஒன்றி யிருக்கின்ற சத்தியுத்தனாகிய நிலையை உணர்த்துதலின் இது சத்தியை வியந்தது ஆயிற்று. "சிவமெனும் பொருளும் ஆதி சத்தியொடு புணரின் எத்தொழிலும் வல்லதாம்" என்பதும் காண்க.

163 *முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே*
*உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்*
*உன்னடியார்தாள்பணிவோமாங்கவர்க்கேபாங்காவோம்*
*அன்னவரே யெங்கணவர் ஆவா ரவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்*
*இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்*
*என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய்.* 9

இ-ள்: முற்பட்ட பழமையான பொருள்கள் எவற்றிற்கும் முற்பட்ட பழம்பொருளாகவுள்ளவனே! பின்னர் உண்டாக இருக்கின்ற புதிய பொருள்கள் எல்லாவற்றிற்கும் மீண்டும் அத்தன்மை வாய்ந்தவனே! உன்னைத் தலைவனாகப் பெற்ற உன்னுடைய சிறந்த அடியார்களாகிய நாம் உன்னடியார் களின் திருவடிகளையே வணங்குவோம்; அங்ஙனமே அவர்க ளுக்கே தோழமை உடையவர்கள் ஆவோம்; அவர்களே எமக்குக் கணவர்கள் ஆவார்கள்; அவர்கள் மகிழ்ந்துசொன்ன முறையே அடிமையாகி அவர்களிட்ட பணிகளைச் செய்வோம்; இத்தகைய முறைகளையே எங்கட்கு எம் தலைவனாகிய தேவரீர் கொடுத்து அருளுவீராயின் எந்தக்குறையும் இல்லாதவர்க ளாவோம் என்றவாறு.

கன்னியர் அனைவரும் ஒருங்குகூடி, இறைவா! உன்னைத் தலைவனாகப்பெற்ற நாங்கள் உன்னடியார்களையே மணப்போம்; அவர்களே எம் கணவராவர்' என நோன்பின் இம்மைப்பயனை விண்ணப்பித்து அதன்வாயிலாக உன்னிடம் மெய்யன்பு குன்று திருந்து மறுமைக்கும் பேரின்பத்தைப் பெறுவோம் ஆவோம் என விண்ணப்பிக்கின்றார்கள் என்று, சீவன்முத்தநிலையில் வாசனை தாக்காதவண்ணம் மால் அற நேயமலிந்தவர்வேடமே மெய்ப்பொருளாகக் கொண்டொழுகும் நிட்காமியமான விருப் பத்தைத் தெரிவிக்கிறது இப்பாடல்.

இவ்வண்ணம் எல்லாக் கன்னியரும் கூட்டாகத் தங்கள் விருப்பினை விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

முன், பின் என்பன காலத்தொடு சார்த்தித் தோற்றிய பொருள்களைக் கணிக்கும்போது கருதப்படுவன. இறைவன் காலமென்னும் தத்துவம் தோற்றுதற்குமுன்பே விளங்குபவன். அவன்பழைமையை ஒருவாற்றான் கருதச்செய்யுமுறையில் ஏதோ சில பொருள்களைப் பழைமையானவைகளாகக் கருதி அவை ஒரு நிமித்தகாரணனை உடையதாதலை எண்ணி அவன் சிவனே எனத் துணிந்து 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளே' என்றார். அங்ஙனம் பழைமையைப் பொருள்களைக் கொண்டறிந்து துணிந்தவர், இனி என்ன உண்டாகப்போகிறது என்பதனை மனித உள்ளம் அறியாது ஆகலின் பொருட் பெற்றியாகிய தன்மையின்மேல் வைத்துப் 'பின்னைப் புதுமைக் கும் பேர்த்தும் அப்பெற்றியனே' என்றார். இதனால் சிவனது அநாதிநித்யத்துவமாகிய சத்தாந்தன்மை அறிவிக்கப்பட்டது. இவ்வண்ணம் விளங்கும் சிவசத்தே இயங்குவ நிற்பவான அனைத்திற்கும் தலைமையாதலின் எங்களுக்கும் அவனே தலைவனாதலை யாங்களும் பரிபாகவிசேடத்தால் உணர்ந்தோம் என்பார் 'உன்னைப் பிரானாகப்பெற்ற உன் சீரடியோம்' என்றார். இதனால் சிவமாகிய உமக்கும் எமக்கும் உள்ள தொடர்பு ஆண்டானடிமைத்தொடர்பென்பது பெறப்பட்டது. இதனையே வாதவூரண்ணல் 'பவனெம் பிரான்' என்னும் திருச்சதகத்துள் 'அவன் எம்பிரான் என்ன நான் அடியேன் என்ன' என்று விளக்குதல் காண்க.

பெற்ற - பெற்றதனால். உன் தொடர்பு இல்லாதாரை மணவோம், வணங்கோம்; தொடர்பு உடையாரையே மணப்போம் என்றார்கள். அடிமையின் மணம் முதலான சுக துக்க நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆண்டவன் ஆணைபெற்ற பின்னரே நிகழ்த்த

வேண்டலின் 'இப்பரிசே எமக்கு நல்குதியேல்' எனக்கூறி அவனுணையை எதிர்நோக்கி நிற்கின்றனர். சீரடியோம் - மெய்யடியார்களின் கூட்டத்தேம்.

உன்னைப் பிரானுகப் பெற்ருேம்; உன் சீரடியோம் என்ற உணர்வு எமக்கு எஞ்ஞான்றும் மறத்தலாகாது ஆதலின், எமக்குக் கணவராவாரும் உன் அடியாராக வாய்க்க அருள் புரிய வேண்டுகிருர்கள். தாள் பணிதல் - மன மொழி மெய்களான் வணங்குதல். பாங்கு - பக்கத்துணை அல்லது தோழமை. சிவனடியார் என்ற பொதுமையில்தோன்றிய சைவப்பற்ருல் நேயம் மலிந்தவர் வேடத்தை அரனெனவே புத்திபண்ணித் தொழுது பின்னர், தோழமை கொண்டு அவர்களின் நலம் தீங்குகளைக் கண்டு, அதன் பின்னரே அவர்கள் எம் கணவராக இசைவேம் என்றமுறை நன்கு உணர்தற்கு உரியது. அதன் பிறகுதான் அவர்கள் மகிழ்ந்து சொன்னதன்மையில் அடியாளாகப் பணி செய்தல் புரிவேம் என்ருர்கள்.

பாங்கு உரிமை என்ப் பொருள்கண்டு ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் உரிமையாவோம் என்று உரைப்பாரும் உளர். இந்நிலை அவர்களைக் கணவராகப் பெற்றபின் நிகழத்தக்கதாதல் உணர்க.

அடியார்கள் எமக்குக் கணவரான பிறகு அவர்க்கு உகப்பான தொழும்பு எதுவோ அதுவே எமக்கும் உகப்பு; எமக்கென்ற தலைமையும் விருப்பும் ஒன்றும் இல்லை என்பார் 'அவருகந்து சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்' என்ருர். தொழும்பு - கடமையாக மேற்கொள்ளும் அடிமைத் தன்மை. 'மீளா ஆளாய் உனக்கே அடிமை' என்றதும் காண்க.

எங்கள் ஆண்டானுகிய நீ எதனைத்தரினும் விரும்பியேற்பேமாயினும் எமது விருப்பம் இருந்தபடி இது; நும் திருவுள்ளத்திற்கும் உகப்பானதே; ஆதலால் 'இன்னவகையே நல்குதியேல் என்ன குறையும் இலோம்' என்ருர் என்க.

'அரனே முதல்' எனத்துணிந்த ஆன்மா சிவனடியாரைச் சிவனெனவே தொழுது பின்னரும் வாசனை வந்து தாக்காமைப் பொருட்டு அடியார் கூட்டத்திலே திளைத்து வாழ விரும்பும் விண்ணப்பத்தை உணர்த்தியது இப்பாடல்.

சிவம், பழமைக்குப் பழமையாகவும் புதுமைக்குப் புதுமையாகவும் இருத்தலும், யாம் மனைவியர், அடியார்கள் கணவர் என்ற விருப்பு விளைவித்தலும், அடியார்கள் கேட்டவரத்தை

நல்குதலும் சத்தியொடு புணர்ந்த நிலையிலேயாதலின் இது சத்தியை வியந்ததாயிற்று.

*164* *பாதாள மேழி னுங்கீழ் சொற்கழிவு பாதமலர்*
*போதார் புனைமுடியும் எல்லாப் பொருண்முடிவே*
*பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்*
*வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்*
*ஓத வுலவா வொருதோழன் றொண்டருளன்*
*கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்*
*ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்*
*ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்.* *10*

இ - ள் : சிவபெருமானுடைய கோயிலின்கண் விளங்கும், குற்றமில்லாத குலத்துதித்த பணிப்பெண்களே! கீழுலகங்கள் ஏழினும் கீழாகச் சொல்லின் எல்லையையும் கடந்து நிற்பது அவனுடைய திருவடித்தாமரை; பூக்கள் நிறைந்து அணி செய்யப்பெற்ற திருமுடியும் எல்லாப் பொருள்களின் முடிவாக உள்ளது; உமாதேவியாரைத் தனது திருமேனியில் ஒரு பாகமாக உடையவன்; அவன் கொள்ளும் திருமேனி ஒன்றே அல்லன்; அவன் வேதங்களுக்கு முதலாகவுள்ளவன்; தேவர்களும், மக்களும் எத்தனை ஆண்டுகள் எவ்வெவ்வகையில் துதித்தாலும், அவர்களால் ஓத வற்றாத புகழாளனாகவும் ஒப்பற்ற தோழனாகவும் உள்ளவன்; தொண்டர் கூட்டத்தில் அவர்கள் உள்ளத்திலுள்ளவன்; இத்தகைய இறைவனுக்கு உரிய ஊர் யாது? அவன் பேர் யாது? அவனுக்கு உறவினர் யார்? அயலார் யார்? அவனைப் புகழ்ந்து பாடும் தன்மை எது? சொல்லுங்கள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் மகளிர் நிலையிலேயிருந்து, கோயிற் பணிப்பெண்களைக் கண்டு இறைவனியல்பை வினவுவார்போல, அவனுக்கு ஒருநாமம் ஒருருவம் இல்லாமையைப் புலப்படுத்துகின்றார்.

ஒருவரைப்பற்றி எவ்வளவுதான் தெரிந்திருந்தாலுங்கூட அவருக்கு அணுக்கத்தில் அனவரதமும் பழகுகின்றவர்களைக் கண்டபோது, மேலும் அறிந்து அறிவு ஒப்பக்காண வினவுதல் உலகியல். சிவபெருமானுக்கு அணுக்கத்தொண்டு புரிகின்ற பெண்களைக்கண்டு, அவன் ஊர் பேர் யாது? உறவு அயல் யார்? என்றும், எதனைச்சொல்லி எப்படிப் பாடினால் அவனுக்கு உவப்பாகும் என்றும் வினவுகின்றவள், தானறிந்திருக்கின்ற

இயல்புகளை முதற்கண் கூறுகின்றார், 'பாதாளம் ஏழினும்' என்பது முதல் 'தொண்டருளன்' என்பதுவரை.

பிள்ளை என்பது மக்கள் பாற்பொதுப்பெயராயிருத்தலின் ஆண்பாலை யொழிக்கப் 'பிணாப் பிள்ளைகாள்' என்றார். "பெண்ணும் பிணாவும் மக்கட்குரிய" என்பது மரபியற்சூத்திர விதியாகலான் என்க. இவர்களுடைய ஒழுகலாறு முழுதும் இறைவன் சந்நிதியை விட்டுப் புறம்செல்லாததும் அவர்கள் செய்வன யாவுமே தவமும் ஆதலின், கோயிற் பிணாப்பிள்ளை காள்! என்றார். அரன் கோயிலில் எப்போதும் வாழ்கின்றவர்க ளாதலின் சுத்த அந்தக்கரணமும், மலவன்மை வாடிய தூய ஞானமும் பெற்ற அவர்களிடம் அவன் சிறந்து விளங்கும் இடம் முதலியவற்றைக் கேட்டுத் தெரியலாம் என்று விரும்பி வினவுகிறார். அவர்கள் குலம் அரன்பணிக்கேயாகிய உருத்திர குலமாதலின் 'கோதில் குலத்துப் பிணாப்பிள்ளைகாள்' என்றார்.

கோதில் குலம் என்பதற்கு குற்றமற்ற நலம் என்று பொருள் காண்பர் பலர். குலமும் நலமும் வேறுதல் இலக்கிய மரபு. அன்றியும் இன்றைய நிலையை மனத்தெண்ணி அஞ்சி இங்ஙனம் பொருள் கூற வேண்டிய இன்றியமையாமையும் ஈண்டு இல்லை என்க. இக்குலத்தாரில் பெண்கள் சில ஆண்டு சிவப்பணி செய்து வாழ்ந்து, பின்னர்ப் பாரசைவரை மணம் பூண்டு, இல்லறம் நடத்திய குறிப்புக்களைச் சிவாகமங்களில் பாரசைவ லட்சணத்தில் காண்க. கோதில் குலத்தரன் எனச் சிவபெருமானுக்கே அடையாக்கி மகாசைவராகிய குற்றமற்ற குலத்தினை அநாதியேயுடைய சிவபெருமான் என்னும் ஒன்று.

பாதாளம் - கீழுலகம். அவை ஏழாவன: அதல விதல சுதல தராதல ரசாதல மகாதல பாதாளம் என்பன. பாதாளம் ஏழினும் என்பதற்குப் பாதாளத்தை இறுதியாக உடைய ஏழ் தலம் எனப் பொருள் கோடலும் ஒன்று. இவை ஆகமங்களில் கூறப்பட்ட உலகங்கள். நூல்வாயிலாக இவை அறியப்படுகின் றமையின், இறைவன் திருவடி இவற்றில் வியாபித்திருப்பதை ஒருவாறு சொல்லளவையால் புகழவும் இயலும்; அவற்றின் கீழும் வியாபித்தமை ஆன்மபோதத்தால் அறியப்படாமையின் சொல்லொணாததாம் என்பார் 'சொற்கழிவு பாதமலர்' என்றார். இதனால் பாதாளம்வரை உள்ள உலகமாகிய ஆதேயங்கள் இறைவன் திருவடிமலராகிய ஆதாரத்தில் நிலைபெற்றுள்ளன; இதனைப் பரிபாகமுற்ற ஆன்மாக்கள் ஆதாரமாக அறியலாமே யன்றிச் சொல்லமுடியாது என்பது உணர்த்தியவாறும்.

'சொற்கழிவு பாதமலர்' என்றவள் 'பொருள்முடிவு முடி' என்றது ஆழ்ந்து அனுபவித்தற்குரியது. பொருள் சொல்லை நிலைக்களனாகக்கொண்டு இயங்குவது. பாதமலர் சொல்லளவையைக் கடந்தபொழுது அதனை நிலைக்களனாகக் கொண்ட திருமுடி பொருளின் அளவைக் கடந்ததாதலே பொருத்தமாதலால் அங்ஙனம் கூறினர். போதுகள் நிறைந்து புனையப்பட்ட உருவுடையதாகத் திகழினும் அது எல்லாப்பொருள்களுக்கும் அப்பாற்பட்டதேயாம். இதனாலேயே வேதமாகிய சொற்பிரபஞ்சத்திலேயே என்றும் ஓதி உழலும் பிரமன், சொற்கழிவாகிய பாதமலரைத் தேடாமல் பொருள்முடிவாகிய முடியைத் தேடிச் சென்று தோற்றான். பொருட்பிரபஞ்சத்தின் தலைவனாய திருமால் சொற்பிரபஞ்சத்தின் முடிவான திருவடியைத் தேடிச் சென்று உலைவுற்றான். அன்றியும், அவர்களறியும் சொல்லும் பொருளுமாகிய எல்லையில் அடிமுடிகள் இல்லை; கடந்துள்ளன என்று குறிப்பித்தவாறு.

பேதை - உமாதேவி. உமாதேவி உலகெலாமீன்ற அன்னையாயினும் பான்மொழிக் கன்னியாகும் ஆதலால் 'பேதை' என்றதாம். 'திருமேனி ஒருபால் பேதை' எனக் கூட்டுக. "முதல் உருப் பாதி மாதர் ஆவதும் உணரார்" என்பது சிவஞான சித்தித் திருவிருத்தப் பகுதி.

திருமேனி ஒன்றல்லன் - அன்பர் நினைந்த வடிவொடு அவர் மனத்து விரைந்து சேறலின் அவன் கொள்ளுகின்ற வடிவம் ஒன்றன்று; பல என்பதாம். இதனை "நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளினாலே" என்பது கொண்டு தெளிக. 'பேதை ஒருபால், திருமேனி ஒன்றல்லன்' என ஒரு தொடராக்கி உமாதேவியை ஒருபாகத்துடைமையின் ஆணுருவும் பெண்ணுருவுமாகிய இருமேனி உடையான் எனவும் உரைத்தலும் ஒன்று. இருமேனியான் என்னாது ஒன்றல்லன் என்றது ஒரு மேனியில் ஈருருவும் உடைமையான் ஒருவன் என்றோ ஒருத்தியென்றோ கூறலாகாமைபற்றி என்க.

வேதம் ஞானவடிவினது. நூலாக நின்று உயிர்களுக்கு உணர்வை நல்குவது. அவ்வேதம் இறைவனிடமிருந்தே தோன்றியது ஆதலின் இறைவனை 'வேதமுதல்' என்றார்.

விண்ணோர் திருக்கயிலைக்குச்சென்று அடிக்கடி இறைவனைத் தரிசிக்கும் பேறு பெற்றவர்கள். அணுக்கத்தால் இறைவனைப் பற்றி அறிந்தவர்கள். மண்ணோர்கள் அறிவுக் காட்சியால் இறைவனுடைய எல்லையற்ற குணங்களின் ஏகதேசத்தைச்

சரியையாதிகளில் நிற்றலால் தெரிந்து கொண்டவர்கள். இவ் விருவகையாரும் தத்தம் அறிவினளவாகத்துதித்தாலும் மேலும் ஓதும்படியாக முற்றுப்பெறாத ஒரு தோழனை உள்ளவன் என்பதை 'விண்ணோரும் மண்ணோரும் துதித்தாலும், ஓத உலவா ஒரு தோழன்' என்ற பகுதியால் குறித்துரைத்தார். அவர்கள் அவ்வளவு துதித்தாலும் மேலும் ஓதி உணரக்கூடிய அளவாக உலவாத புகழுடைய தோழன் என்பது கருத்து.

இப்பகுதிக்கு 'வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித் தாலும் ஓத உலவா ஒரு தோழன்' எனக்கூட்டி மறைமுதலாக விண்ணோரும் மண்ணோரும் புகழ்ந்து பாராட்டினாலும் புகழ்ச்சி முற்றுப்பெறாத ஒப்பற்ற தோழன் 'எனவும், விண்ணோரும் மண்ணும் துதித்து ஆலும் வேதமுதல் ஓத உலவா ஒரு தோழன் எனக்கூட்டி வானவரும் மண்ணவரும் துதித்துக் களிக்கின்ற வேதங்களுக்கு முதல்வனாகிய புகழ்ச்சிநீங்கா ஒப் பற்ற உயிர்த்துணைவன் எனவும் உரைப்பர்.

இனி ஒருதோழம் தொண்டருளன் எனப் பாடங்கொண்டு பெருந்தொகையாகிய தொண்டர்களை உள்ளவன் என்றுரைப் பாருமுளர். தோழம் என்பது பேரெண்ணிற்கு ஒருபெயர்.

பழைய உரை சொற்கழிவு பாதமலர் என்பதற்குப் பாச ஞான அளவைக்கு எட்டாத திருவடி என்றும், எல்லாப்பொருள் முடிவே என்பதற்குப் பரஞான அபரஞானமாகிய இரண்டின் முடிவான சிவானந்தப்பொருள் எனவும் உரைக்கும்.

இராமசாமி முதலியார் அவர்களுடைய பதிப்பிலுள்ள குறிப்பு:- 'பாதாள மேழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்' என்ப தற்குப் பூமியின்கண் கன்மத்தையே முக்கியமாகக் கொண்ட வர்கள் வாழுமிடமாகிய பாதாளம். அதன் கீழேயுள்ள அசுரர் இராக்கதர் இவர்கள் வாழ்கின்ற ஆடகேசுர புவனங்களாகிய ஏழு பாதாளங்கள். அதன்கீழ் ரௌரவம் முதலான நரகங்கள். கூசுமாண்ட புவனமாகிற நாகலோகங்கள். அதன் கீழுள்ள காலாக்கினி ருத்ரபுவனம். இவ்வனைத்திற்கும் தாங்கும் ஆற்ற லாய் விளங்குகின்ற ஆதாரசத்தி. இவை அனைத்திற்கும் ஆதார மாகத் திருவடி விளங்குதலின் சொல்லமுடியாத தன்மையை வாய்ந்தது திருவடித்தாமரை என்றும், 'போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே' என்பதற்குப் பிருதிவி அண்டம் முதலாகச் சிவலோகம்வரை சொல்லப்பட்ட மேல் ஏழு உலகங் களும் அதற்கு மேலே முறையாக அமைந்துள்ள பிரமாண்டம் அப்புவண்டம் தேயுவண்டம் வாயுவண்டம் ஆகாசவண்டம்

அகங்காரகுணம், அராகம் வித்தை கலை நியதி காலம் அசுத்த மாயை சுத்த வித்தை, மயேச்சுரம், சாதாக்கியம், பரவிந்து, பர நாதம் இவை அனைத்தையும் கடந்து சிவசத்தியினுடைய பரி பூரண முடியின் அளவு, அளவுக்குட்படாததாக இருக்கிறதென் றும், 'பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்' என்பதற்குச் சத்தியும் சிவமுமாக எங்கும் நிறைந்திருக்கையால் ஒருருவம் உடையனல்லன் என்றும், 'வேதமுதல் விண்ணோரும்..தொண் டருளன்' என்பதற்கு வேதங்களும் மால் அயன்முதலான தேவர் களும் மக்களும் எல்லையில்லாமல் தோத்தரித்தாலும் அவர்க ளால் அறியப்படாததும் அளவுக்குட்படாததும் அளவிலடங் காததுமாகிய பிரமப்பொருளாயிருப்பவன் என்றும், 'கோயிற் பிணாப் பிள்ளைகாள்' என்பதற்குச் சிவாலயமாகிய சுத்தமாயை யில் சுத்த வித்தையிலிருந்துகொண்டு சிவப் பணிவிடையாகப் பிரபஞ்ச காரியத்தைப் பண்ணுகிற வாமை முதலான சிவசத்திக ளென்றும், 'ஏதவனூர்..எம்பாவாய்' என்பதற்கு ஊர் பேர் முதலியன ஏது? உறவு அயல் யார்? இவைகள் ஒன்றுமில்லாத இறைவனை வழிபடுவது எங்ஙனம்? எனவும் நயந்தோன்ற உரைகூறும்.

இத்திருப்பாட்டில் 'பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்' எனச் சத்தியின் ஆற்றலால் இறைவன் பலவடிவந்தாங்குதலைக் குறிப்பித்தலின் சத்தியை வியந்தமை அறிக.

165 மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்க ளுய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். 11

இ - ள்: நிறைந்த தீயைப் போன்ற செம்மைநிறம் உடை யவனே! வெண்மையான திருநீற்றைப் பூசியவனே! திருவரு ளாகிய செல்வத்தையுடையவனே! சிறிய இடையினையும் மை பூசிய அகன்ற கண்ணையுமுடைய உமாதேவிக்குக் கணவனே! தலைவனே! வண்டுகள் மொய்க்கின்ற அகன்ற பொய்கையிலே புகுந்து, கைகளால் தண்ணீரை முகேரெனத்தட்டித்]துளைந்து துளைந்து உன் திருவடியைப் புகழ்ந்துபாடி, வழியடியோமா கிய நாங்கள் இதுவரை தேவரீர் திருவருளால் வாழ்ந்தோம்;

தலைவனாகிய நீ ஆட்கொண்டருளுகின்ற விளையாட்டினாலே திருவடியைச் சார்ந்து பேரின்பமுற்ற அடியார்கள் உய்ந்த வழிகள் யாவற்றிலும் நாங்களும் உய்ந்தோம்; ஆகையால் நாங்கள் இளைத்துப் போகாவண்ணம் காத்தருள்வாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், கடந்தபொருளாயிருக்கும் இறைவன் காலதேசங்களில் கட்டுப்பட்ட உயிர்களைப் பாதுகாப்பதற்காகத் திருமேனிதாங்கி ஆட்கொண்டு திருவிளையாடல்கள் செய்கின்றான் என்பதை உணர்த்துகின்றார்.

மலசத்தி பரிபாகமானதால் வெளியிலே வந்து திரோதானமே திருவருளாக, அதனால் தன் முனைப்பு அடங்கி நின்று பேரின்பமாகிய நீரில் ஆடுதலை அறிவிப்பது இத்திருப்பாடல் என்பது பழைய உரைக்கருத்து.

வாழ்ந்தோங்காண் என்பதில் உள்ள காண் என்பதும் 'ஏலோர்' என்பனவும் அசைநிலைகள். இதனால் பாவை நோன்பு மேற்கொண்ட கன்னிப்பெண்கள் எல்லாரும் ஒன்றுகூடித் தமக்குக் காப்பு வேண்டுதல் காண்க.

ஆர் அழல் - அணுகுதற்கரிய தீ. இறைவன் அயன் அரி இவர்களால் அணுகுதற்கரிய தீப்பிழம்பாகச் செம்மையாய் இருந்தாராதலின் 'ஆரழல்போல் செய்யா' என்றார்.

செம்மை வெண்மை இவ்விரண்டும், இராசத சாத்துவித குணங்களை உணர்த்துவன ஆதலின், அந்தந்தக் குணங்களில் நின்று படைத்தல் காத்தலைச் செய்பவனும், நீறணிந்தமையால் ஒடுக்கத்தைச்செய்பவனும் சிவனே என்பதனைச் 'செய்யாவெண்ணீறாடி' என்ற பகுதி குறிப்பிக்கின்றது. தீ சென்று பற்றிய பொருளைச் சுட்டுத் தூய்மையாக்குதலும் ஒன்றுவித்தலும் உடையது. அதுபோல இறைவனும் உயிர்களின் மலமாயைகளைச் சுட்டெரித்துத் திருவருளோடு உயிரை ஒன்றுவித்தலின் 'ஆரழல்போல் செய்யா' என்றார் எனலும் ஆம்.

திருமேனியழகில் ஈடுபட்ட மாதர்கள் அவன்மேல் அணிந்துள்ள திருநீற்றினைக் குறித்து இறைவனை வெண்ணீறாடி என விளிக்கின்றார்கள். நெருப்பு உள்ள இடத்தில் நீறு இருத்தல் இயல்பாதலின் 'அழல்போற்செய்யா' என்றவர்கள் 'வெண்ணீறாடி' என்றும் பாராட்டினார்கள். ஞானசம்பந்தப்பெருமான் "செய்ய மேனி வெளிறப் பொடிப் பூசுவர்" என்றதும் காண்க.

வினைவயத்தாலுடலெடுத்த நாம் வெண்ணீறு பூசுவது மலத்தினின்றும்நீங்கித் தூய்மை பெறுவதற்காக. இறைவன் பூசுவது இறைவனைக் காணுகின்ற நமது வினைக்கொடுமை விலகுவதற்காக என்க.

செல்வம் - திருவருளாகிய செல்வம். செல்வனே தன்னைச் சார்ந்தார் அனைவருக்கும் இன்பமும் அருளும் புரிகின்றவனாதலின் 'செல்வா' என்றார். இங்ஙனம் கூறியது இறைவன் யோகியாய் இருந்து உயிர்க்கு யோகத்தை உதவலின் என்க.

'மடந்தை மணவாளா' என்றது இறைவன் போகியாய் இருந்து போகத்தைப் புரிதலின் என்க. 'ஐயா நீ' என்றது தலைவனே நீ என்றவாறு. ஐ ஆம் நீ எனப் பிரித்து இந்தப் பொருள் கொள்வாரும் உளர்.

மொய் - செறிவு. வண்டுகள் மொய்த்தல் பொருந்திய அகன்ற பொய்கை எனலுமாம். பனிக்காலத்து மிக்க குளிரில் நீராடுவார் படிப்படியாக இறங்கிக் குளித்தல் இயலாதாகலின் 'முகேரென்னப் புக்கு' என்றார். முகேரென்ன என்பது திடீர் என்று என்றாற்போல விரைவுப்பொருளைத்தரும் இடைச்சொல். முகேரென்பது நீரைக் குடையுங்கால்த்து உண்டாகும் ஒலிக் குறிப்பு என்பாரும் உளர்.

தண்ணீரிலிறங்கியவர்கள் குளிரால் தண்ணீரைக் குடைந்தாடுதல் இயல்பு என்பார் 'குடைந்து குடைந்து' என்றார். இறைவனது பொதுவும் சிறப்புமாகிய இயல்புகளை அறிந்தவளாதலின் வழியடியோம் என்றும், வாழ்ந்தோங்காண் என்றும் வியந்தாள். அண்டங்களை இறைவன் ஆட்கொண்டு ஆளுவது மன்னன் மண்ணைச்சுமப்பதுபோல வருத்தத்தை விளைவியாது; ஆட்கொண்டருளும் விளையாட்டில் அதுவும் ஒன்றும் என்பார் 'விளையாட்டின்' என்றார்.

உய்வார்கள் - மலம் நீக்கப்பெற்று வீடுபேறு எய்துபவர்களாகிய சிவஞானிகள். அவர்கள் பசுகரணம் பதிகரணமாகச் சிவபூசை சிவயோகம் முதலியவற்றையும், வாசனை தாக்காமல் இருக்கத் திருவைந்தெழுத்து ஓதுதலையும் செய்பவர்களாதலின் உய்யும்வகை அனைத்தையும்பற்றி 'உய்ந்தோம்' என்றாள்.

ஐயா! நீ அடிமைகொண்டு திருவிளையாடல் செய்யும் சுத்த பஞ்சகிருத்திய அனுபூதியில் உண்மையடியார்கள் பெறுவதான அன்புமார்க்கம் எல்லாம் தெரிந்தவர்களைப் போல

நடித்து, எங்கட்கு உண்மை அன்பில்லாமையை உள்ளத்தான் அறிந்து, நாமே ஒழிந்தோம் ஆதலால் 'எய்யாமல் காக்க' என்ருள் என்பது பழைய உரை.

எய்யாமல் - இளையாதவண்ணம். தலைவன் புறக்கணித்த காலத்துத் தலைவிக்கு உடல் இளைத்தல் போல அடிமைகளாகிய எங்களைப் புறம்போகாவிட்டால் இளைப்போம் ஆதலால் 'எய்யாமல் காப்பாய்' என்ருள்.

இத்திருப்பாட்டில், 'மையார் தடங்கண் மடந்தை மணவாளா' என்று சத்தியை வியந்தமை காண்க.

**166** *ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடுந்*
*தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்*
*கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமும்*
*காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி*
*வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்*
*ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழன்மேல் வண்டார்ப்பப்*
*பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்*
*ஏத்தி யிருஞ்சுனை நீ ராடேலோ ரெம்பாவாய்.* **12**

இ - ள்: நம்மை அநாதியே பிணித்துள்ள பிறவித்துன்பம் கெட்டொழியும்வண்ணம் நாம் களிப்பால் ஆரவாரம்செய்து முழுகும் தூயநீரை உடையவனும், நல்ல தில்லை நகரின்கண் உள்ள திருச்சிற்றம்பலம் என்னும் ஞானவெளியிலே தீயை ஒருகரத்தில் ஏந்தித் திருநடனம் புரிகின்ற கூத்தப்பெருமானும், இப்பூமியையும் விண்ணையும் நம் எல்லோரையும் படைத்தும் காத்தும் அழித்தும் விளையாடுகின்றவனுமாகிய சிவபெருமானது திருவைந்தெழுத்தாகிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டு, கைகளில் அணிந்துள்ள வளையல் ஒலிக்கவும், இடையில் மேகலை முதலிய அணிகள் ஆரவாரம் செய்யவும், பூக்களணிந்த கூந்தல்மேலுள்ள வண்டுகள் எழுந்தெழுந்து ஒலிக்கவும், நீலம் முதலிய பூக்கள் விளங்கும் பொய்கையிலே மூழ்கி, எம்மை ஆளாகவுடைய சிவபெருமானுடைய பொன் போலுந் திருவடிகளைப் போற்றிப் பெரிய சுனைநீரிலும் நாம் மூழ்குவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், விண்ணும் மண்ணும் பிறவுமாகிய அனைத்தையும் படைப்பவன் காப்பவன் அழிப்பவன் என இறைவன் திருவிளையாட்டின் பெருமையைப் புலப்படுத்திச் சுனையாடுவோம் என்கின்ருள்.

நீராடும்போதும் இறைவன்புகழைப் பாடியே ஆடவேண்டு மென்பது கருத்து.

ஆர்த்தல் - கட்டுதல். 'மும்மலக்கல் ஆர்த்தலின்' என்புழி யும் இப்பொருட்டாதல் அறிக. உயிர் மும்மலத்தோடு பிணிக் கப்பட்டுப் பிறவிக்கடலுள் வீழ்த்தப்படுதலின் 'ஆர்த்த பிறவி' என்றார். ஆர்த்த என்பதற்கு உண்பிக்க அல்லது நுகர்விக்க எனப் பொருள்கொண்டு, வினைப்பயன்களை நுகர்விக்க வந்த பிறவித்துன்பம் என்பாரும் உளர். இப்பொருளில் 'நசையு நர்க்கு ஆர்த்தும் இசைபேராள' என்ற திருமுருகாற்றுப்படை உதவிசெய்யும்.

நாம் ஆர்த்த பிறவி - அச்சத்தைத்தரும் அநாதியே கட்டிய பிறவி என்பர் திருமயிலை மகாவித்வான் தணிகாசலமுதலியார் அவர்கள். பஞ்சபாசப் பிறவி என்பது பழையவுரை.

பிறவி, உயிர்கள் மல்வாதனையற்றுப் பேரின்பம் உறுவதற் காகவே இறைவனுலுதவப்பெற்ற மருந்துபோல்வது. மருந்து பின் இன்பம் பயப்பதாயினும் உண்ணுங்கால் துன்பம் தருவது போலப் பிறவியும் தீவினைப் பயனை நுகர்த்துங்கால் உயிர் துன்புறுதலால் பிறவியைத் துன்பம் என்றார். பிறவியே துன்ப மாதலைக் குறித்துக் கூறினர் எனலுமாம்.

பிறவித்துன்பமாகிய வெப்பம் நீங்கவும், அழுக்குத்தொலை யவும் நீராடுதல் இன்றியமையாதது. அதற்குரிய புனித தீர்த்த மாக விளங்குவான் என்பார் 'நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்' என்றார். கங்கையாகிய தீர்த்தத்தையுடையான் என்பாரும் உளர். ஆர்த்தல் - இத்தீர்த்தத்தில் நீராடுவதால் நமக்குத் திருவருட்பேறும் சிவஞானத்தெளிவும் உண்டாகப்போகிறதே என்னும் களிப்பால் ஆரவாரித்தல். புறத்தூய்மை நீரானமை தலின் நாம் இந்நீர்நிலையில் மகிழ்ச்சியுடன் நீராடுவோம் என் பார் 'நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்' என்றார் என நலங்கூறுவர். தீர்த்தன் என்பது இறைவனையே உணர்த்துதலின் புறத் தூய்மையொன்றே அவனுலாகும் என்றல், மரபுவழுவாதலின் அக்கருத்து ஏலாமை யறிக. அன்றியும் தீர்த்தங்கள் ஆடுவார் புறத்தூய்மை ஒன்றே கருதி ஆடுகின்றிலர். பல பிறவிகளில் ஈட்டிய வினைகள் ஒழியவே ஆடுகின்றனர். அதனுலேயே இறை வனைச் "சென்றாடும் தீர்த்தங்கள் ஆனார் தாமே" என அருட் செல்வர்கள் அறிவித்தனர் என்க. "தீது நீங்கக் கடலாடியும் மாசு போகப் புனல் படிந்தும்" என்ற பட்டினப்பாலையடியும் இருவகைத் தூய்மையும் தீர்த்தங்களால் விளையும் என்றல்

காண்க. ஆடும் என்பதற்கு ஆனந்தக்கூத்து ஆடும் எனக் கோடலுமாம். பழையவுரையும், நாம் அலங்கார ஓசையுடன் விளையாடல் செய்யும் ஞானனந்த தீர்த்த சொரூபன் என்றல் காண்க.

தலங்களெல்லாவற்றிற்கும் தலையாயதால் நற்றில்லை எனப் பட்டது. நற்றில்லையிலே விளங்கும் ஞானப்பரவெளி. அதனைச் சித் அம்பரம் எனல் மரபு. தீயாடும் கூத்தன் - அனலேந்தி யாடுதல் சங்காரகிருத்தியத்தை அறிவிப்பது. தீ ஞானத்தைக் குறிப்பதெனக்கொண்டு, ஞானத்தால் தன்னைக் காண விழை வார்க்குக் காட்சியளிப்பவன் என்பாரும் உளர். ஞானத்தைக் குறிப்பது அவன் தூக்கிய திருவடியேயன்றி அனலாகாமையும், 'அங்கியிலே சங்காரம்' என்ற உண்மை விளக்கமும் கொண்டு தெளிக. பிறவித்துயர் கெட உடனே வேண்டப்படுவது ஒடுக்க மாதலின் தீ ஆடும் கூத்தன் என்றமை இயைபுடைத்தாதலும் தெளிக. ஆடும் என்பதற்கு உரையாடும் என்பது போல உபதேசம் செய்யும் எனப் பொருள்கொண்டு, தீயாடும் என் பதற்கு ஞானோபதேசம் செய்யும் கூத்தன் என்பாரும் உளர். "கழுக்காணிக்கண்ணன் போல" பொருளுக்குப் பொருள் கண்டு, சொல்லைவிட்டுத் தூரச்செல்லுதல் உரைமரபாகாமை உணர்க.

'வானும் குவலயமும்' என்பது சடப்பொருளனைத்தையும், 'எல்லோமும்' என்பது சித்துப்பொருள் அனைத்தையும் ஐந் தொழிற்படுத்தினமை அறிவித்தது. படைத்தும் காத்தும் கரந் தும் என்பதே முறையாயினும், காத்தலை முற்கூறியது பிறவி யொடு உயிர்களைக் கூட்டுவதே காத்தலாகிய பெருங்கருணை யாதலான் என்க. 'விளையாடி' என்பது ஐங்கலப்பாரம் சுமத்தல் சாத்தற்கு விளையாட்டு என்பதுபோல ஐந்தொழிலாற்றுதலான் இறைவன் விகாரியாகான் என்பதுணர்த்திய அளவேயன்றி இளஞ்சிறுர் விளையாட்டுப்போல வெறுவிளையாகாமை தெளிக. விளையாடி - விளையாடுபவன், இகரம் வினைமுதற்பொருளில் வந்த விகுதி. மதி மயங்கி, ஒடுங்கி என்பன போல.

இங்ஙனம் 'தீர்த்தனாய்' எனத் தீர்த்தமும், 'நற்றில்லைச் சிற்றம்பலம்' எனத் தலமும், 'கூத்தன்' என மூர்த்தியும் ஆக இறைவனே விளங்குதல் உணர்த்தப்பெற்றது. மூர்த்தி தலம் தீர்த்தமாக இறைவனே விளங்குகின்றான். அவனைச் சென்று அடைவார்க்கு, ஆடுவார்க்கு, பேசுவார்க்கு அகத்தூய்மையும் புறத்தூய்மையும், அதனால் விளையும் ஆனந்தமும், வீடுபேறும் விளையும் எனக் கொள்க.

நீராடுகின்றகாலத்தும் சிவமந்திரம் செபித்தலும், சிவனடியைத் தியானித்தலும் இன்றியமையாத சைவமரபு என்பார் 'வார்த்தையும் பேசி' என்றும், 'உடையான் பொற்பாதம் ஏத்தி' என்றும் உரைத்தார். 'பொய்கை குடைந்து, சுனைநீர் ஆடு' என்றது இரண்டிலும் ஆடுக என வேண்டியவாறும். சுனை - மானிடராக்காத மலையிலுள்ள குண்டகழி.

இதில், உடையான் பொற்பாதமாகிய திருவருட்சத்தி ஏத்தப் பெறுதலின் பதிகக் கருத்திற்கு இயைந்தமை காண்க.

*167 பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்*
*அங்கங் குருகினத்தால் பின்னு மரவத்தால்*
*தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்*
*எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த*
*பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்*
*சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்*
*கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்*
*பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 13*

இ-ள்: பாவாய்! பசுமையான குவளைக் கருமலர்களாலும், செந்தாமரையாகிய பசிய பூக்களாலும், அழகிய நீர்வாழ் பறவைகளாலும், பின்னிக்கிடக்கின்ற பலவகை அரவங்களாலும், தங்கள் அழுக்கினைப் போக்கிக் கொள்கின்றவர்கள் வந்து சார்தலினாலும், எம் தலைவியாகிய உமாதேவியையும் எம் தலைவனாகிய சிவபெருமானையும் ஒத்திருக்கும் பொங்குகின்ற நீரையுடைய மடுவிலே புகுந்து, பாய்ந்து பாய்ந்து, நம்முடைய வளையல்கள் ஒலிப்ப, சிலம்புகள் கலந்தொலிக்க, கொங்கைகள் விம்ம, நாம் ஆடுகின்ற நீர் மேலே எழும்ப, தாமரையோடு கூடிய பொலிவான நீரிலே பாய்ந்து ஆடுக என்றவாறு.

இந்தத் திருப்பாட்டில் பொய்கையைச் சிவசத்திமயமாகப் பாவித்து, அதில் நீராடுவது அவர்கள் திருவருளில் நாம் தோய்வதாக எண்ணி ஆடுக எனப் பணிக்கின்றார்.

முதல் இரண்டடிகளானும் பொய்கை அர்த்தநாரீசுரராகிய இறைவனை ஒத்தது என்கின்றாள். நீலமலரும் கை முதலான அங்கங்களில் வளையல் முதலான அணிகளும் விளங்குவதால் அம்மையையும், செந்தாமரை மலரும் பின்னிக் கிடக்கின்ற பாம்புகளும் உடைமையால் சிவபெருமானையும் ஒத்து, உள் மலமாகிய ஆணவம் முதலானவற்றைப் போக்கிக்கொள்ளும்

மெய்யன்பர்கள்வந்து சார்தலால் இருவரையும் ஒத்து விளங்குகின்ற மடு எனச் சிவசத்திகளிணைந்த ஒருமேனியான நிலையை உணர்த்துவது என்பதாம்.

இங்ஙனம் அன்றி, அன்பர்கள் அருச்சித்த குவளைப்பூ, தாமரைப்பூ, கங்கை, சிரம், நாரை இறகு, பாம்பணிகள் இவற்றை உடைமையானும், மலத்தைப் போக்குவார் வந்து அடைதலானும் எங்கள் தலைவனாகிய சிவனையும், குவளைப்பூப் போன்ற கண்களையும், செந்தாமரை போன்ற திருவடி திருமுகம் திருக்கரங்களையுடைமையானும், அவயவங்களில் வளையல் முதலான அணிகளை உடைமையானும், கூந்தலில் வைத்துப் பின்னப்பெற்ற சடை நாகம் முதலியவற்றானும், மலங்கழுவுவார் வந்து சார்தலினானும் எங்கள் பிராட்டியாகிய உமாதேவியாரையும் ஒத்திருக்கும் பொய்கையெனத் தனித்தனியே கூட்டி உரைத்தலுமாம்.

இவ்வண்ணம் பெருமானையும் பிராட்டியையும் வேறாக எண்ணுவார்க்கும் ஒரே திருமேனியில் விளங்கும் ஈருருவமாக எண்ணுவார்க்கும் ஒத்த இலக்கணங்களை உடையதாக மடு விளங்குகிறது. அதில் புகுந்தாடுகின்றபோது நீங்கள் இறைவனுடைய வியாபகத்தன்மையில் அடங்கிய வியாப்பியமாக எண்ணி ஆடுக. இறையருள் நம்மைச் சூழ இருக்கிறது. நாம் அதனுள் மூழ்கித் தன்முனைப்பற்றுக் கிடக்கிறோம் என்பதைக் கருதி ஆடுக என்பது கருத்தாம்.

இவ்வண்ணம் முதல் இரண்டடிகளையும் பொய்கைக்கும், உமையொருபாதியனுக்கும், உமைக்கும், பெருமானுக்குமாக இயைத்து நான்கு வகையால் பொருள்கொள்க.

இங்ஙனம் பொருள்கொள்கின்ற வகையில், அம் கம் குருகின் நத்தான் எனப் பிரித்து அழகிய நீரிலுள்ள குருகாலும் சங்காலும் எனவும், நீர் தலை கொக்கிறகு இவற்றின் கூட்டத்தாலெனவும், அங்கம் குருகு இனத்தானெனவும் வேறுபடுவர் சிலர். எல்லாவகையானும் பொருள் முடிபு ஒன்றே கொள்ளக் கிடத்தல் காண்க. பிராட்டியும் கோனும் போன்றிசைந்த என்னும் சிறப்பால் உமையொருபாதியனாகிய திருமேனியாகக்காண வைத்தார் என்பதே சிறத்தல் காண்க. புகப்பாய்ந்து என்பதற்கு நன்றாகப் பாய்ந்து, உள்ளே ஊடுருவப் பாய்ந்து எனப் பொருள்கொள்க. எல்லாம் ஆர்ப்ப, அவயவங்கள் பொங்க ஆடுவோம் என்றது பேரின்பத்துள் திளைக்கும் முத்தான்மா ஆவோம் என்றாளாம்.

இத்திருப்பாடலில் குவளை இறைவன் திருக்கண்களையும் திருமேனியின் நிறத்தையும் நினைப்பிப்பதால் இறைவனுடைய பேரருளுடைமையையும், செங்கமலமலர் மலர்ந்து பல நாள் தேனூறி இன்பந்தருதலான் அவனது வரம்பிலின்பமுடைமை யையும், குருகினம் வெண்மையாக இருத்தலின் தூய உடம்பினனாதலையும், அரவம் பலதிசைகளிலும் பரந்து திருமேனி எங்கும் அணியாக விளங்கும் ஆற்றலுடைமையின் அவனது வரம்பி லாற்றலுடைமையையும், மலமுடையார் வந்து கழுவுதற்குரிய வண்ணம் இயல்பாகவே தூயதாதலின் இயல்பாகவே பாசங் களின் நீங்கிய தன்மையையும் குறிப்பித்தன எனலாம்.

மற்றும் இவ்வேதுக்கள் முற்கூறியகாரணங்களான் நயன, மானசிக, பரிச, வாசிக தீக்கைகளால் ஞானசாரியன் பரிபாக முற்ற ஆன்மாக்கட்குப் பாசவிமோசனம் செய்தலைக்குறிக்கும் எனக் கதிர்மணிவிளக்கம் காட்டுகிறது.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றாற்போல, பிராட்டியும் பெருமானும் போன்றிசைந்த என அம்மையை முன்னுரைத்தது தாயை அறிந்தபின் அவளுணர்த்தத் தந்தை யையறிதல் முறையாகலான் என்க. அன்றியும் சிவசத்தியே உயிர்களை எடுத்துச் சிவத்தைச்சார வைக்கும் என்னும் சைவ மரபும் சிந்திக்க. நம் சங்கம் சிலம்ப, நம் சிலம்பு கலந்தார்ப்ப, நம் கொங்கைகள் பொங்க என நம் என்பதை எல்லாவற்றோ டும் ஒட்டுக. மகளிர் நீராடுவது விடியற்காலத்திலாதலின் குளிர் மிகுதியானும், நீருள் நிற்றலானும் கொங்கைகள் விம்மின; அதனால் நீரும் மேலெழுவதாயிற்று என்க.

'பங்கயப் பூம்புனல்' என்றது முன் அம்மையப்பராகக் காட்சியளித்த அதே பொய்கை ஆழ்ந்து முழுகும்போது சிவம் முற்பட்டுத்தோன்றுகிறது என்ற நயம்தோன்ற நிற்றல்காண்க. ஈண்டும் ஆடுக என்னும் வியங்கோள் ஈறு குறைந்து ஆடு என நின்றமைகாண்க.

இச்செய்யுளிலும் நீர்மடுவைப் பிராட்டியாகக் காணலின் சத்தியை வியந்ததாம்.

***168*** *காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்*
*கோதை குழலாட வண்டின் குழாமாடச்*
*சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி*
*வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்*

*சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி*
*ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்*
*பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்*
*பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய்.* 14

*இ-ள்:* எம்பாவாய்! காதில் அணிந்த தோடு அசைய, பசிய பொன்னாலான பிற அணிகள் ஆட, கூந்தலின்கண் சூடிய மாலை ஆட, அதில் மொய்த்துள்ள வண்டுக் கூட்டங்கள் எழுந்து சுழல, குளிர்ந்தநீரில் மூழ்கி, திருச்சிற்றம்பலத்தைப் புகழ்ந்துபாடி, வேதங்களினுட்பொருளான சிவபெருமான் கீர்த்திகளைப் பாடி, அவன் வேதமான அப்பொருளாகவே விளங்குதலைப் பாடி, ஒளிப்பிழம்பான இறைவன் நமக்கு அருள்வழங்கும் திறங்களைப் பாராட்டிப்பாடி, அவன் திருமுடியைச் சூழ்ந்துள்ள கொன்றைமாலையைப் பாடி, அவன் எப்பொருட்கும் முதலாக விளங்குந்தன்மையைப்பாடி, ஈறாக இருக்குந்தன்மையையும் எடுத்துப்பாடி, நம்மைவேறுபடுத்தி எடுத்து வளர்த்துப் பாதுகாத்த வளையலையணிந்த உமாதேவியாரின் திருவடிச் சிறப்பை எடுத்துப்பாடி ஆடுக என்றவாறு.

இத்திருப்பாட்டு சிவன் கீர்த்தியையும், அம்மையின் புகழையும் பாடி ஆடுக என்கின்றது.

'குழையாட என்பது' முதல் 'வண்டின்குழாம் ஆட' என்பது வரை மகளிர் நீராடும்போது நிகழ்வனவற்றைத் தொகுத்துக் கூறினர். மாலை அசைகின்றபோது அதில் மொய்த்த வண்டுக் கூட்டங்களுக்கு இருக்கக் கூடாமையால் விண்ணில் எழுந்து சுழன்றன என்பார் 'வண்டின்குழாம் ஆட' என்றார்.

சீதப்புனல் - குளிர்ந்தநீர். பனிக்காலம் ஆதலின் மிகக் குளிர்ந்தநீர் என நயம் உரைப்பர் சிலர். பொய்கைத்தண்ணீர் சீதக்காலத்து வெப்பமாயிருத்தல் இயல்பாதலின் அந்நயம் ஆகாதென்க. திருப்பெருந்துறையிலுள்ள ஒரு தீர்த்தத்தின் பெயர் என்பாரும் உளர். 'சீதப்புனலாடிச் சிற்றம்பலம் பாடி' என்ற இணைந்த எண்ணம் உண்டானமைக்குக்காரணம் திருப்பெருந்துறையில் அடிகள் நீத்தல்விண்ணப்பம் செய்து எழுந்தருளியிருந்தகாலத்து அவர்கள் சிவபோகத்தமர்ந்த இடம் சீதப்புனலின் கரை. 'தில்லைக்கு வருக' எனச் சிவனாணை பிறந்ததும் அங்கு; ஆதலின் இணைந்து சிந்தனை எழக்கூறினர் என்க.

சிற்றம்பலம் - ஞானப்பரவெளி. தில்லையில் கூத்தப்பெருமான் எழுந்தருளியுள்ள மன்று.

அப்பொருள் ஆமா(று) பாடி - வேதப்பொருளாகவுள்ள ஞானமேயான சிவம் சிற்றறிவினராகிய எமக்கு உபகாரப்படும் முறையை வியந்து போற்றி என்க. இதற்கு வேதப்பொருளை இசைத்தமிழாக இயைத்துப் பாடியும், இறைவன் அப்பொருளாக விளங்குதலைப் பாடியும் என உரைகூறி, பிரமம் தாம்தாம் எனத் தருக்கிய தேவர்கள் செருக்கடங்கச் சிவபெருமான் ஓர் இயக்கமூர்த்தியாக எழுந்தருளிவந்து ஒரு துரும்பைக் கிள்ளித் தேவர்கள் முன்பு இட்டு, இதனிடம் உங்களில் யார் ஆற்றலை வெளிப்படுத்துகின்றீர்களோ அவர்களே பிரமமாவர் எனத் தேவர்கள் அவரவர் ஆற்றலைச் செலுத்தியும், அதனை அசைக்கவும் முடியாமற்போகவே, இந்திரன் இவ்வியக்கன் யார்? என்று திகைத்திருக்கும் நேரத்தில் உமாதேவியார் இவ்வியக்கனே பிரமம் என்று தெரிவித்தார். இந்திரன் மறைந்தான். சிவசத்தியால் தெளிவிக்கப்பட்ட பிரமம் சிவமே என்பது போதரும் எனக் கேநோபநிடத வரலாற்றையும் காட்டுவர். அவ்வுரையும் எடுத்துக்காட்டும் ஈண்டு இயைபின்மையை அவர்கள் உரை கொண்டே தெளியலாம். ஆகவே சிவன் வேதப்பொருளாக விளங்குவதையும், அப்பொருள் ஆன்மாக்களுக்கு உபகாரப்படும் முறையையும் பாடி எனக் கொள்க. பழையவுரையும் 'வேதத்திற்குக் காரணமான் பொருளே! வேதாந்த வத்துவே' என உரைத்தல் காண்க.

வேதப்பொருள் என்றது இறைவனது புகழை என்றும், அப்பொருளாமாறு என்றது அப்பொருளாய் நிற்கும் இறைவனென்றும் உரை காண்பர் சிலர். இதனால் பொருளுக்கும் பொருளாமாற்றிற்கும் வேற்றுமை அறியப் பெருமையானும், அவர்கள் எடுத்துக்காட்டும் மேற்கோள் வேதமாயும் வேதப் பொருளாயும் இறைவன் விளங்குவதை வற்புறுத்தலானும், வேதப்பொருளை இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கொள்ளின் வேதமாகிய பொருளாயும் எனவும், ஏழன் தொகையாகக் கொள்ளின் வேதத்தில் கூறப்பெற்ற பொருளாயுமெனவும் கொள்ளுதலும், 'அப்பொருள் ஆமாறு பாடி' என்பதற்கு வேதத்தில் சொல்லப்பெற்ற பொருளாய சிவம் ஆன்மாக்களாகிய நம் அநுபவத்திற்கு ஆமாறும் பாடி எனவும் கூறுதலே பொருந்துதல் காண்க.

சோதி - ஒளி. ஒளியுள் மாயேயமான பௌதிகச்சோதியும், அப்பிராகிருதமான தற்சோதியும் என இருவகையுண்டு. பௌதிகச்சோதி - சூரியன் சந்திரன் அக்கினி முதலியன. தற்சோதி - சிவம். ஆகையால் ஈண்டுச் சோதி என்றது எல்லா

ஒளிப் பொருள்களுக்கும் ஒளி தருவதாய், புறவிருளையும் அக விருளாய ஆணவத்தையும் அகற்றவல்லதான ஞானசொரூப் சிவச்சோதியையாம். அதன் திறமாவது ஆன்மாக்களின் அக விருளைப்போக்கி அறிவு விளக்கத்தைச் செய்யும் உபகாரம். அதனைப் பாராட்டிப் பாடி என்க.

மேலும், இறைநிலையை ஆகமங்கள் 'சூரிய கோடி சமப் பிரபம்' - ஆயிரங்கோடி சூரியர் ஒருங்கெழுந்தாற்போன்ற ஒளி உருவினன் எனக் கூறுதலும் காண்க. இதனால் இறைவன் உருவமில்லாத ஒளியாய்க் காட்சி வழங்குந்திறம் காட்டப் பெற்றது.

அருவுருவான பேரொளிப் பிழம்பின் திறம் பாடி என உரைப்பர் சிலர். சோதியுருவையும் காண முடியாத உயிர் களுக்கு உருத்தாங்கி மாலை முதலியன புனைந்து தோன்றுவன் என்பார் அவன் அடையாள மாலையாகிய 'சூழ் கொன்றைத் தார் பாடி' என்றார். ஆகவே, 'வேதப்பொருள் பாடி' என இறைவனது ஞானமேயான அருவநிலையும், 'சோதி' என அருவுருவநிலையும், 'கொன்றைத்தார் பாடி' என உருவ நிலையும் முறையே உணர்த்தப்பெற்றமை காண்க.

சிவனே முதல்வன்; எவ்வகை உயிர்களையும் படைத்து அழிப்பவன் என்பது 'ஆதி' என்பதால் அறிவிக்கப்பெறு கின்றது. அநாதியான பரசிவம் ஆதியாய் உயிர்களோடு உணர்வாய் ஒன்றியிருந்து காட்டும் உபகாரம் புரிதலை 'ஆதி திறம் பாடி' என்றதால் குறித்தவாறு.

சிவனே, அனைத்தும் தத்தம் காரணத்துள் ஒடுங்கத் தான் எல்லாவற்றிற்கும் முடிவாய் விளங்குவன் என்பதை 'அந்தம் ஆமா(று) பாடி' என்றது. ஈண்டு அந்தம் பாடி என்னாது அந்தம் ஆமாறு பாடி என்றது, அந்தமே புனருற்பவகாலத்து எல்லாம் ஆமாறு திருவுள்ளம் பற்றுவது என்பதைக் குறிக்க என்க. இவற்றால் ஈசன் தோற்றுவித்து அளித்துப் பின்னும் துடைத்தருள் தொழில்கள் மூன்றும் போற்றவேயுடையனுதலை விளக்கியவாறு.

தாய், தன் மகனைக் குற்றங்கண்டவிடத்து அடித்துச் சினந்து திருத்தியும், குணங்கண்டவிடத்துக் கொடுத்தும் எடுத்தும் பாராட்டி இன்புறுத்தியும் வளர்ப்பள். அதுபோலச் சிவசத்தியாகிய தாயும், உயிர்கள் பரிபாகம் எய்துதற்பொருட்டு அவைகளைப் பந்தித்துநின்ற மலத்திற்கு அனுகூலமாய் நின்று

வினைப்போகங்களை அழுந்தி அனுபவிக்கச்செய்து, உயிர்கள் பரிபாகம் எய்திய காலத்து, அருட்சத்தியாய் இன்பமூட்டுவள் என்பதைப் 'பேதித்து நம்மை வளர்த்து எடுத்த பெய்வளை' என்றதால் குறிப்பித்தார்.

நம்மைப் பேதித்தலாவது மறைப்புச் சத்தியாய் வினைப்போகத்துள் அழுத்துதல். வளர்த்தலாவது வினைக்கீடாக இன்பத் துன்பங்களை நுகரச்செய்தல். எடுத்தலாவது வினைச்சுழலில் ஆழ்ந்து போகாதவாறு கைகொடுத்துத் தூக்குதல். இவ்வண்ணம் காக்கும் சத்தியின் திருவருளாகிய பாதங்கள் நம்மை ஆட்கொள்ளுந்திறத்தைப் பாடி என்க.

இறைவன் திறத்தையே பாடி வந்தவர், அங்ஙனம் பாடச் செய்யும் திருவருட்சத்தியின் திருவருட்டிறமும் தம் நினைவில் தோன்ற இவ்வண்ணம் இறைவனை ஐந்தொழிலியற்றச்செய்து எம்மை வளர்த்தெடுத்த பராசத்தியின் பாதத்திறம் பாடியாடுக என்கின்றார். பெய் வளை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய் உமாதேவியாரை உணர்த்தியது.

இது பராசத்தியின் பாதத்திறம் பாடி ஆடுக என்றலின் சத்தியை வியந்ததாயிற்று.

169 ஓரொருகா லெம்பெருமா னென்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும் [யாள்
ஆரொருவ ரிவ்வண்ண மாட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 15

இ - ள்: கச்சினை நழுவச்செய்யும் அழகிய பூணணிந்த முலையினையுடைய பெண்களே! ஒருமுறை பூமியில் வந்தவளை ஒத்த இவள் ஒவ்வொரு சமயத்தில் எம்பெருமான்! எம்பெருமான்! என்று பலமுறை கூறி, நம் பெருமானின் புகழை ஒருகாலும் வாயால் சொல்லுதலை ஒழியாள்; அங்ஙனம் சொல்வதால் மனத்தில் களிப்புமிக அதனால் கண்களிலிருந்து ஒருகாலும் நீங்காத நெடுந்தாரையாக நீர்சுரக்கப் பிறதெய்வங்களைப் பணியமாட்டாள்; இப்படி ஒருபெண் பேரரசனாகிய சிவனுக்குப் பித்து ஆமாறும் இவ்வண்ணம் பெண்களை ஆளாகக் கொள்ளும் ஒருவர் யாரோ? அந்த ஞானமே வடிவமாக

விளங்கும் பெருமானுடைய திருவடிகளை வாய் நிறைய நாம் பாடி எழுச்சியும் அழகும் மிக்க பூவொடு கூடிய தண்ணீரில் பாய்ந்து ஆடுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் வசப்பட்ட ஒருத்தியினது சொல்லும் செயலும் இவ்வாறு இருந்தன என அறிவிப்பாள் போல உணர்த்துகின்றார்.

இதில் சிவபெருமானிடம் தலையன்பு பூண்டாள் ஒருத்தியின் தன்மைகளை எல்லாப்பெண்களும் உணரும்வண்ணம் ஒருத்தி கூறுவதுபோல அமைந்திருத்தல் காண்க.

தலைவனிடம் தலையன்பு பூணலும், அதனால் அரற்றலும், பித்தேறுதலுமாகிய இம்மெய்ப்பாடுகள் முதிர்ந்த உள்ளத்து மங்கையர்க்கே உரியன ஆதலானும், இளங்கன்னியரிடத்தில் அதனைக் கூறுதல் விளங்காதது ஆதலானும் அவளோடு ஒத்த பருவத்து மங்கையர்களை 'வாருருவப் பூண் முலையீர்' என்று விளிக்கின்றாள். அணிந்த கச்சு உருவி நழுவும்படியான பூண் முலையீர் என்க. பருவத்தின் துடிப்பால் ஒருகாலைக்கொருகால் முலை வீங்குதலின் வார் உருவ நேர்ந்தது என்க. இத்தகைய பருவத் தோற்றமும் மனபரிபாகமும் இல்லார்க்குத் தலைவரிடம் தலையன்பு பூண்டாள் தம்மனுபவங்கூறின், அது செவிடன் காதில் ஊதிய சங்காய் முடியுமாகலின் 'வார் உருவப் பூண்முலையீர்' எனக் கேட்டற்கு உரியாரது தகுதியினை உணர்த்தினார்.

இங்ஙனமன்றி, கச்சினையுடைய அழகிய பூண்களையுடைய முலையீர் எனலும் ஆம். இதற்கு வேறு உரை கூறி, பூண் முலை என்றது முலைசொரி புர்லைக் குழவிக்கு ஊட்டி வளர்க்குமாறு போல இறைவனது சத்தி உயிர்களைப் பரிபாகம் செய்கின்றது என்ற நினைப்பூட்டியபடியாம் என நயமும் கூறுவர். இந்நயம் ஈண்டு பொருந்துமேற்கொள்க.

இவ்வுரை கொள்ளுமிடத்து வாய் ஓவாள் என்பதற்குத் தலையன்பு பூண்ட ஒருத்தி என எழுவாய் வருவித்துக் கொள்க.

ஒவ்வொரு சமயம் எம்பெருமான் எம்பெருமான் என்று நமது பெருமானின் புகழை ஒருக்காலும் வாய் ஓழியாமல் சொல்கின்றாள் என்பதனால் முறுகிய காதலால் மூர்ச்சித்துக் கிடந்தமையும், நினைவுவந்தபோதெல்லாம் எம்பெருமான் எம்பெருமான் என்று அவன் புகழ்களையும் வாய் ஓயாமல் சொல்லுகின்றமையும் உணர்கிறோம். இங்ஙனம் கூறுதல் அவளுக்கு ஆறுதலாக இருக்கிறது. இது மயக்கமும் அரற்று என்னும் நிலையுமாம்.

அவ்வண்ணம் இடைவிடாமல் சொல்லுவதால் ஓரின்பம் பிறக்கின்றது; அதனால் சித்தத்தில் களிப்பு மிகுகின்றது; ஆனந்தக்கண்ணீர் இரண்டு கண்களிலிருந்தும் தாரைதாரையாக வழிகின்றது; இதனை விளக்குவது "சித்தங்களிகூர ...... நெடுந்தாரை கண் பனிப்ப" என்னும் பகுதி. அங்ஙனம் ஆனந்தக்கண்ணீர் பொழிவதால், சிவனே தன் ஆன்ம நாயகனென்ற உறைப்புத் தன் உள்ளத்தேதோன்ற அதனால் பிற தெய்வம் தொழாமையை 'விண்ணோரைத் தான் பணியாள்' என்பதால் உணர்த்துகிறாள்.

ஒருகால் பார் வந்தனையாள் என மாற்றுக. தலையன்பு பூண்ட நங்கை தெய்வப்பெண்ணே என்பாள் ஏதோ ஒரு முறை பூமியில் வந்தவளை ஒத்தவள் என்று அவளுடைய அழகும் வீறும் தோன்றக் கூறியதாம்.

வந்தனையாள் என்பதனை எழுவாயாகக்கொண்டு ஓவாள் பணியாள் என முடிக்க. வந்த என்பதிலுள்ள பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கு வந்தனையாள் என ஆயிற்று. இதற்கு ஒரு முறை பூமியில் விழுந்து வந்தித்தலையுடையவள் எனவும் உரைப்பர். ஒருமுறை என்பதற்கு விளக்கம் தோன்றா தொழியவே நியமமெனப் பொருள் கண்டு நியமமாகப் பூமியில் வீழ்ந்து வணங்குதலை உடையாள் என்று உரைப்பர். அரற்றுகின்றவள் தனக்கும் தலைவனுக்குமுள்ள சிறப்புரிமையைக் கூறுவதாக 'எம்பெருமான்' என்றும், மகளிர் அனைவர்க்குமுள்ள உரிமை வெளிப்பட 'நம்பெருமான்' என்றும் கூறுதல்காண்க.

சீர் ஒருகாலும் வாய் ஓவாள் என உம்மை வருவித்துக் கொள்க. அரற்றும், அதனால் விளைந்த ஆனந்தத்தால் கண்ணீர் சுரத்தலும், உறுதியால் பிறரைப் பணியாமையுமாகிய அவத்தைகள் முறையே தோன்றுதல் காண்க.

இவ்வாறு ஒருத்தி பித்தேறும்வண்ணம் ஆட்கொள்ளும் இயல்பினை உடையவர் இவரலாது வேறு ஒருவரும் இல்லை என்பார் 'இவ்வண்ணம் ஆட்கொள்ளும் ஒருவர் ஆர்' என்றார். இங்ஙனம் சொற்கிடக்கை முறையை ஒட்டி, யார் ஒருவரையும் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் பரமஞானிகளின் திருவருளைப் பாடி எனலும் ஆம்.

பாடுவதால் வாய்க்கு ஓர் இன்பம் தோன்றுதலை 'வாயார நாம் பாடி' என்றதால் குறிப்பிக்கின்றார். வித்தகர் - சதுரப்பாடு உடையவர். நாம் என்றது நோன்பு நோற்கும் கன்னியர்களை.

ஏர் - எழுச்சி. உருவம் - அழகு. இவை இரண்டும் புனலை விசேடித்தன.

இதில் 'ஆட்கொள்ளும் வித்தகர் தாள்' எனத் தாளாகிய சத்தியை வியந்தவாறு அறிக.

170 முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். 16

இ - ள்: மேகமே! நீ கடலைச்சார்ந்து நீரை முகந்து விண்ணிலெழுந்து, எம்மை ஆளாகவுடையவளாகிய உமா தேவியைப்போல நீலநிறம் பெற்றுவிளங்கி, எம்மை ஆளாக வுடைய அத்தேவியின் நுணுகிய இடையைப்போல மின்னி, எம் தலைவியின் திருவடியின்மேல் விளங்குகின்ற பொன்னு லாகிய அழகிய சிலம்பைப்போல ஒலித்து, அவ்வம்மையாரின் அழகிய புருவம்போல வானவில் விளங்கச் செய்து, நம்மை அடிமையாகவுடைய பெருமாட்டியை விட்டுப்பிரியாத எம் பெருமானுடைய அன்பர்களுக்கும் நமக்குமாக அவ்வம்மை முற்பட்டு முதன்முதலாகச் சுரக்கும் இனிய அருளைப்போலப் பொழிவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், அம்மையின் அருளைப்போல மழை பொழிக என வேண்டப்பெறுகிறது.

'வெம்பாதாக வியனில வரைப்பு' எனப் பாவை நோன்பி னால் விரும்பப்படும் நாடு வளஞ்சுரத்தலாகிய பொதுப் பயனும் திருவருட்பேறாகிய சிறப்புப் பயனும் தோன்ற இதில் கூறப் படுதல் காண்க.

மழை என்னும் காரியப்பெயர் அதன் காரணமாகிய மேகத் திற்கு ஆயிற்று. முன்னி - அடைந்து. சுருக்கி - குறைத்து. "நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி தான்நல்கா தாகி விடின்" என்ற திருக்குறட்கருத்தும், அதற்குப் பரிமே லழகர் தந்த உரையும், "கடல்குறை படுத்தநீர் கல் குறைபட எறிந்து" என்னும் பரிபாடற்பகுதியும் ஈண்டு எண்ணுதற்கு உரியன.

மேகம் விண்ணில் எழுந்தவுடன் நீலநிறம் பெற்று விளங்கியதால், உமாதேவியாரின் நிறத்தோடு ஒத்து விளங்கியது என்பார் 'எழுந்து உடையாள் என்னத் திகழ்ந்து' என்றார். பிற ஆசிரியர்களும் "உமை மேனிபோல் பசந்து" என்றும், "உயர் பனிவரை உயிர்த்த உருவவோடரித் தடங்கணுள் உருக்கொடு மீண்ட" என்றும் கூறுதல் காண்க.

விண்ணில் எங்குமாய்ப் பரந்த மேகம் உமாதேவியாரின் இடையைப்போலத் தோன்றி மறைந்தது என்பதனை 'எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னி' என்றார். இட்டிடை - இடுகு இடை. இட்டிடை - சிறிய இடை. 'இட்டிடையார் அடைந்தார்களே' என்ற சிந்தாமணிப் பகுதிக்கு இடுகிய இடையினையுடைய பெண்கள் வந்து கூடினர் என்று நச்சினார்க்கினியர் கூறியதையும் காண்க.

மின்னலுடன் பிறப்பது இடியாதலின் அதனை எம்பிராட்டியின் திருவடியிலுள்ள சிலம்போசையாக அனுபவிக்கின்றவர் 'எம்பிராட்டி திருவடிமேல் பொன்னஞ்சிலம்பிற்சிலம்பி' என்றார்.

சூரிய ஒளியில் மழை பொழியும்போது அதற்கு எதிர்த் திசையில் வானவில் விழும். அம்மையாகிய அருள்மேகம் சிவசூரியனுக்கு முன்னிலையில் கருணை மழை பொழிய அவரை நோக்கிப் புருவவில் வளைந்திருக்கின்ற நிலையை நுகர்வார் 'திருப்புருவம் என்னச் சிலை குலவி' என்றார்.

அங்கியில் சூடுபோலவும் பூவின்கண் மணம்போலவும் திருவருட்சத்தி இறைவனை விட்டுப் பிரியாது இருக்கின்றவள் ஆதலின், 'நந்தம்மை ஆளுடையாள் தன்னிற் பிரிவிலா எங்கோமான்' என்றார். இறைவன் அம்மையைப் பிரியாதவாறு போல அடியார்கள் இறைவனை இடைவிடாது எண்ணுகின்றனர் என்பதனை 'எங்கோமான் அன்பர்க்கு' என்ற பகுதி உணர்த்துகின்றது.

முன்னி - முற்பட்டு. முன் - முதன் முதலாக. பராசத்தி அடியார்கள்மீதும் நம்மீதும் கருணை கூர்ந்து தாமே வலிய வந்து முற்பட்டு, முதல்முதலாகச் சுரக்கின்ற இன்னருள்போல மழைபொழிய வேண்டுதல் காண்க. திருமுருகாற்றுப்படையில் "தலைப்பெயல் தலைஇய தண்ணறுங்கானம்" என வருதல் காண்க. வேனில் வெப்பத்தில் வெதும்பிய கானம் தலைமழையைப் பெறுமானால் வெப்பம் தணிந்து தழைத்துப் பொலிதலைப்

போல நாமும் தளிர்க்கலாம் என்பதனை 'முன் சுரக்கும் என்பதால் குறிப்பிடுகின்றார்.

ஈண்டு மழைக்கு உவமையாகக் கூறப்படும் உமாதேவியை உடையாள், எம்மை ஆளுடையாள், எம்பிராட்டி, நந்தம்மை ஆளுடையாள், அவள் எனக் கூறியதன் நயம் ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியது.

கருவினுள் அறிவு மயங்கிக் குடரானும், கொடியானும் சிக்குண்டு மலச்சேற்றினுள் அழுந்தி ஒன்றும் உணராமல் உறங்கிக்கிடக்கின்ற குழந்தையையுடைய தாய்போல, அநாதி நித்தியமான உயிர் எல்லாம் ஒடுங்குங்காலத்து மாயையாகிய முதற்காரணத்துள் ஒடுங்கி, படைப்பு வரையில் ஆணவத்தில் அழுந்தி ஒன்றும் அறியாமல் கிடக்கும்போது உடைமையாகக் கொண்டிருத்தலின் உமாதேவியை 'உடையாள்' எனவும், படைப்புத் தொடங்கிச் சர்வசங்காரகாலம்வரை உயிர்களாகிய நமக்குத் தனு கரண புவன போகங்களைத் தந்து, சிறிது அறிவுவிளங்கச்செய்து எம்மை அடிமைகொள்ளுதற்குச் சிறிது தகுதி உண்டாக்குதலின் 'எம்மை ஆளுடையாள்' எனவும், நாம் இங்ஙனம் பிறந்திறந்து கறங்கும் சகடமும் போலத் திரியும் போது திருவருளைத் தந்து இருவினை ஒப்பும் மலபரிபாகமும் குருவருளும் ஞானசாதனமும் வரப்பண்ணித் திருவருளில் திளைத்தலாகிய பெரிய உபகாரத்தைச் செய்யும் நிலைநோக்கி எம்மை ஆட்டிப் படைத்து ஆக்கம் உறுத்தும் தலைவியாயினள் என்பார் 'எம்பிராட்டி' எனவும் கூறியமை காண்க. மேலும், சகல நிலையாகிய இப்பிறவியில் தனக்குச் செய்யும் உதவியினை மீட்டும்நினைந்து எம்மை ஆளுடையாள் எனவும், திருவருளே தானாய்த் தோய்ந்திருக்கும் சுத்தநிலை கருதி எம் பிராட்டி எனவும் கூறியது மிக ஆழ்ந்து இன்புறத்தக்கது. இவை கதிர் மணி விளக்கத்தில் கண்டவை.

இத்திருப்பாட்டில் இறைவி ஐந்து முறையாகக் குறிக்கப் பெற்றிருக்கிறார். கிரியாசத்தியாக இருந்து உயிர்களை இருவினைக்கு ஏற்ப உடலோடு கூட்டிச் செயற்படுத்துதலால் உடையாளென்றும், உடலோடு கூடி இவ்வுலகத்து இன்பமெனத் துய்க்கும் சிறுநிலையைக் காட்டிலும் பேரின்பத்தைப் பெறுதலே சிறந்ததென்ற உணர்ச்சியை ஞானசத்தியாயிருந்து உதவுதலை உணர்ந்தநிலையில் எம்மை ஆளுடையாள் என்றும், ஞானத்தில் தலைப்பட்ட உயிர்களாகிய நம்மை இச்சாசத்தியாய் இருந்து ஈர்த்து ஆட்கொள்ளுதலின் எம்பிராட்டி என்றும், இம்மூவகை வடிவாயும் கலந்து நின்று திரோதான சத்தியாய்ப் பரிபாகம்

வருவிக்கும் ஆதிசத்தியை 'நந்தம்மை ஆளுடையாள்' என்றும், இருவினை ஒப்பு முதலாயின பெற்றுப் பரிபாகமடைந்தபோது சிவானுபவத்தில் திளைக்கச் செய்யும் பரையை அடைமொழி யின்றி அவள் என்றும் கூறியமை காண்க என்பர்.

இவை அனைத்தும் பரிபாகம் பெற்ற ஆன்மாவின் கூற்றாகவே அடுக்கிக் கூறப்படுதலின் ஒரே கருத்துடையனவாக இருத்தலை எண்ணி, உடையாள் அவள் என்றபோது ஒன்றிய நிலையிலும், ஆளுடையாள் எம்பிராட்டி என்றபோது அனுபவ நிலையிலும், ஒன்றாயும் வேறாயுமிருந்து திருவருளைத் துய்க்கின்ற முறை கூறியது எனலும் ஆம்.

மழை இன்னருளே என்னப் பொழி என உலகியல்நோக்கிக் கூறினும் பேரின்பநிலையில் மழை என்ன இன்னருளைப் பொழி என உமாதேவியாரை வேண்டிக்கொள்வதால் இத்திருப்பாடல் சத்தியை வியந்ததாயினமை அறிக.

திருப்பாவையில் 'ஆழி மழைக் கண்ணா' என்னும் திருப் பாடல் இக்கருத்தையே தாங்கி நிற்றல் காண்க.

*171* *செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்*
*எங்கு மிலாததோர் இன்பநம் பாலதாக்*
*கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி*
*இங்குநம் மில்லங்க டோறு மெழுந்தருளிச்*
*செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை*
*அங்க ணரசை அடியோங்கட் காரமுதை*
*நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்*
*பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.* 17

இ - ள் : மணம்தங்கப்பெற்ற கரிய கூந்தலையுடையவளே! திருமால் பிரமன் ஏனைய தேவர்கள் ஒருவரிடத்துமில்லாத ஒப்பற்ற இன்பம் எம்மிடம் உண்டாகும்வண்ணம் நம்முடைய மலமாசுகளைக் கழுவித் தூய்தாக்கி இப்பூமியில் நம் வீடுகள் தோறும் எழுந்தருளி வந்து செந்தாமரை மலர்போன்ற அழகிய திருவடிகளைச்சூட்டி அருளுகின்ற வீரனும், அழகிய கண்களையுடைய அரசனும், அடிமைகளாகிற நமக்குக்கிடைத் தற்கரிய அமுதமானவனுமாகிய நம்தலைவனைப் பாடி நமக் கெல்லாம் நன்மை உண்டாக, தாமரை முதலிய பூக்களால் பொலிந்து விளங்குகின்ற நீரில் பாய்ந்து நீராடுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், திருவருள்மழையால் உலகமும் உயிரும் எய்தும் இன்பத்தைப் பாராட்டுகின்றார்.

இது கன்னியர் பலர் நீராட, ஒருத்திமட்டும் குளிருக்கு அஞ்சிக் கரையில்நிற்க, அவளைநோக்கிக் கூறியதாக அமைந்துள்ளது. எல்லாரும் திருவருட் பொய்கையில் மூழ்கிச் சிவபோகத்து ஆழ்ந்திருக்க நீமட்டும் தனித்திருத்தலாகாது; உனக்கும் அத்தகுதி உண்டு என்று உணர்த்தும் குறிப்பில் 'கொங்குண் கருங்குழலி' என்றார்கள். மணம் பொருந்தி கறுத்த குழலையுடையாய் என்று விளித்தமையால் சிவமணம்பூத்த சிந்தையும் பரிபாகச் சிறப்புமுடையவள் என்பதை உணர்த்தியவாறும்.

திருமால் முதலிய தேவர்கள் யாவரிடத்தும் அவர்களுக்கு மேலுள்ள சுத்தமாயா புவன வாசிகளிடத்தும் காணக்கிடைக்காத பேரின்பத்தை நம்பால் விளைவிக்கச் சிவபெருமான் வயல்கள்தோறும் சென்று சென்று வளம் பெருக்கும் வாய்க்கால் போல இல்லங்கள்தோறும் எழுந்தருளி, கருணை நீர் பாய்ச்சி அறியாமையாகிய ஆணவக் களைகளைக் களைந்து திருவடிகளை உதவி அமுதம்போல் இனிக்கின்றான். அவனைப் பாடி ஆடுவோம் என்று அனுபவப்பொருள்தோன்ற அறிவித்தல்காண்க.

கோதாட்டி : கோது ஆட்டி - குற்றங்களைக் களைந்து. இல்லங்கள் தோறும் எழுந்தருளிய இந்நிகழ்ச்சியைத் திருப்பள்ளியெழுச்சியிலும் 'பந்தணை விரலியும் நீயும் நின் அடியார் பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே' எனக் கூறுதல் காண்க.

இத்திருப்பாட்டில், திருவடியைத் தருதலாகிய திருவருட் சத்தி பாராட்டப்பெற்றிருத்தலின் சத்திவியத்தலாயிற்று.

172 *அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்*
*விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்*
*கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்*
*தண்ணா ரொளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்*
*பெண்ணாகி யாணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்*
*விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்*
*கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்*
*பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.*

இ-ள்: திருவண்ணாமலையான இறைவனுடைய திருவடித் தாமரைகளைச் சென்று வணங்கும் தேவர்களின் முடிகளில்

உள்ள பலவகையான மணிகளின் தொகையும் பொலிவற்றது போல, கண்ணில் நிறைந்து, காட்டும் உபகாரம் புரியும் சூரியனுடைய கதிர்கள் வருதலால் இருள்மாய, நட்சத்திரங்கள் குளிர்ச்சிநிறைந்த ஒளிகுன்றி அகல, பெண் ஆண் அலி என்னும் உயிர்ப்பொருள் மூன்றாயும், விளங்குகின்ற ஒளிப் பொருள்களைப் பொருந்திய விண்ணாகியும், நிலமாகியும், இத்தனைப் பொருள்களினின்றும் வேறாகியும், கண் நிறைந்த அமுதமாகியும் நின்ற பெருமானுடைய திருவடிகளைப் பாடி இப்பங்கயப்பூம்புனலிலே குதித்து ஆடுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் எல்லாமாய், அல்லதுமாய், அமுதமுமாய் நிற்கும் இயல்பினை விளக்கியருளுகின்றார்.

பெண்ணே! பொழுது விடிந்தது; ஆதலால் எல்லாமாய் அல்லவுமாய் கண்ணாரிறைந்த அமுதமுமாயிருக்கும் இறைவன் கழலைப்பாடி இப்பொய்கையில் ஆடுவோமாக என்றாள் என்பது கருத்து.

அண்ணாமலையான் - அண்ணாமலையே தானான இறைவன். பொற்பணியெனின் பொன்னும் பணியும் ஒன்றேயானாற்போல அண்ணாமலை அவனே என்பதாம். அண்ணாமலை பேரொளிப் பிழம்பான செந்தீமலையாதலின், அதுவேயான சிவன்பேரொளி அவன்கழற்கும் உண்டாதலின் அவற்றின்முன்பு தேவர்கள் மணிமுடியில் உள்ள பலவகை மணிகளின் ஒளி தம் சிறப் பொளியை இழந்து மழுங்கின என்பது 'அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும், விண்ணோர் முடியின் மணித் தொகை வீறு அற்றாற்போல்' என்னும் பகுதியால் விளக்கப் பெறுகின்றது. வீறு என்பதற்குச் சிந்தாமணியுள் நச்சினார்க் கினியர் 'வேறொன்றற்கு இல்லாத பெருமை' என்றெழுதுவர். 'வீறுபெறத்தோன்றி' என்ற திருமுருகாற்றுப்படைப் பகுதிக் குப் பொலிவு என உரைகாண்பர். எங்ஙனமாயினும் தனிப் பொலிவிழந்தன மணிகள் என்க. அதுபோலக் கதிர் எழத் தாரகைகள் மழுங்கின என்றார். விண்ணோர் இறைவனருளால் பதவி களில் இருப்பவர்கள். அரசன்முன்செல்லும் அமைச்சர் முதலிய அலுவலர்போலப் பெருமான்முன் முடிகளோடு சென்றனர்; வீழ்ந்து வணங்கினர். திருவடி ஒளிமுன் முடிமணியின் ஒளி மழுங்கியதுபோலக் கதிர்முன் தாரகை ஒளிமழுங்கி அகன்றன என்பதே கருத்தாகக்கொள்க.

இங்ஙனம் அன்றி 'அண்ணாமலையான்' என்பதற்குத் திரு வண்ணாமலையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் எனப்

பொருள் காண்பர் சிலர். இறைவன் அண்ணாமலையான பின் இடம் திருவண்ணாமலையாயிற்றே அன்றித் தலப்பெயர் அத னடியாக இறைவற்கு ஆயிற்றிலது என்பது தெளிக.

கண் ஆர் இரவி - உயிர்களின் கண்ணுள் நிறைந்து பொருள்களைப் புலப்படுத்தும் சூரியன். உலகிற்குக் கண்ணாகிய சூரியன் எனப் பொருள்கொண்டு வேதப் பிரமாணம் காட்டு வாரும் உளர். விளக்குப்புக இருள் மாய்ந்தாற்போல இரவி யின் கதிர்வர இருள் மறைந்தது என்பார் 'கதிர்வந்து கார் கரப்ப' என்றார். இரவிக் கதிர்முன் கார்வந்து கரப்ப எனக் கூட்டி, சூரியகிரணத்தின் முன் இருள்வந்து மறையவும் என உரைகாண்பர். இருள் இரவி இரண்டில் வருதலாகிய தொழி லுக்கு வினைமுதலாந்தன்மை இரவியாகிய தேவனுக்குளதாமே யன்றிச் சடமாகிய இருளுக்கு இயையாமை அறிக. அன்றியும் சூரியன் சந்நிதியில், அவன் கதிர் கண்டமாத்திரத்தே கெட்டு ஒழியும் இருள் வருதல் எங்கே என நகைத்து விடுக்க. ஆதலால், தொல்லோர் முறைபற்றி, கதிர் வந்து என்பதனைக் காரணப் பொருளில் வந்த செயவெனெச்சமாக்கி, கதிர் வரக் கார் கரப்ப எனவே பொருள் கொள்க. கார் - கருமை. பண்பா பாகு பெயராக இருளை உணர்த்திற்று.

தாரகைகள் - கோள்களும், விண்மீன்களும் ஆம். அவை சூரியன்போல வெவ்வொளி உடையன அல்ல; சேய்மைக் கண்ண ஆதலின். அதுபற்றித் 'தண்ணார் ஒளி' என்றார். பேரொளியும் வெம்மையும் உடைய இரவிகதிர்முன், சிறுமை யும் குளிர்மையுமுடைய தாரகைகள் ஒளிமழுங்கி மறைந்தன என்பதாம். இரவிகதிர் என்பது குழவிகை என்பதுபோல இயல்பாய் வந்தது.

அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும் விண் ணோர் முடியின் மணித்தொகை வீறு அற்றாற்போல என்பது உவமை. இரவி கதிர்வரக் கார் கரப்ப, தாரகைகள் ஒளிமழுங்கி அகல என்பது உவமேயமாகிய பொருள். ஒளி மழுங்குதலும், கார் கரத்தலுமாகிய பொருளினடையை உவமைக்கண்ணும், வீறு அறுதலாகிய உவமையின் தொழிலைப் பொருளுக்கும் கூட்டி, விண்ணோர்களின் ஆணவம் ஒடுக்கி, முடிமணிகளின் ஒளியும் மழுங்கியதுபோல இரவிகதிரெழ இருள் அகன்றது; தாரகைகள் ஒளிமழுங்கித் தம் வீறற்றன எனக்கொள்க.

தாரகைகள் அகலா நிற்க, பெண்ணே புனல் பாய்ந்தாடுக என முடிக்க. கரப்ப, அகல, பெண் முதலியன ஆகி நின்றன்

கழல்பாடிப் பாய்ந்து ஆடு என முடிப்பாருமுளர். அகலுதற்கும் இறைவன் எல்லாமாய் நிற்றற்கும் பொருட்டொடர்பு இன்மையின் அங்ஙனம் கொண்டுகூட்டுதல் பொருந்தாமை அறிக.

உலகம் சித்தும் சடமுமாகிய இருபகுப்புடையது. அதில் சித்துப்பொருள் பெண் ஆண் அலி என்னும் மூன்று பகுப்பினை உடையது. சடம் விண்ணும் மண்ணுமாகிய இரண்டிடங்களிலும் செறிந்த ஏனைய பொருள்கள். இறைவன் இவற்றுடனும் வேறும் ஒன்றும்நின்று உயிர்களுக்கு அருளுமுறைமையைப் 'பெண்ணாகி ... நின்றான்' என்பதால் விளக்குகின்றார்கள்.

பெண்ணாகி எனப் பெண்ணை முற்கூறியது, ஈண்டுப் பாடுவார் பெண்களாதலான் தாய்மையே முற்படக் கூறினார்கள் என்பதாம். சிறப்புக் கருதி முற்கூறப்பட்டது எனலும் ஆம். 'அன்னையும் அத்தனும் ஆவாய்' 'பெண் ஆண் அலி எனும் பெற்றியன்' 'அம்மையே யப்பா' என்ற அனைத்தையும் காண்க.

விண்ணை முற்கூறியது ஏனைய பூதங்கள் தோன்றி நிற்க இடந்தந்து வியாபகமாய் நிற்பதாகலின் என்க. விண்ணில் சூரியன் சந்திரன் தாரகைகள் முதலிய ஒளிகள் நிறைந்திருத்தலின் 'பிறங்கொளிசேர் விண்ணாய்' என்றார்கள். விண்ணும் மண்ணும் குறித்தவதனால் இடைநின்ற காற்று, தீ, நீர் முதலியனவும் கொள்க. இவ்வைந்து புவனங்களிலுமுள்ள எல்லா உலகங்களையும் கொள்க.

கண் ஆர் அமுதமாய் - கண்ணுக்கு நிறைந்த அமுதமாய். அமுதம் நாவிற்கு இனிமை பயப்பது போல இறைவன் கண்ணுக்கு இனிய பொருளாய் அழகனாய் இனிக்கின்றமையின் இங்ஙனம் கூறினார். இப்பாடலும் திருவடியைப் புகழ்தலின் சத்தியை வியந்ததாம்.

173 *உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்*
*றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்*
*எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்*
*எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க*
*எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க*
*கங்குல் பகலெங்கண் மற்றொன் றுங் காணற்க*
*இங்கிப் பரிசே யெமக்கெங்கோன் நல்குதியேல்*
*எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்.* 19

இ - ள் : எங்கள் தலைவனே! உன் கையில் ஒப்படைக்கப் பெற்ற பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று கூறப்படும்

அந்தப் பழம்பெருஞ்சொல்லைப் புதுப்பிக்கும் எமக்குப்பிறந்த அச்சத்தால் தேவரீருக்கு விண்ணப்பம் செய்வோம்; கேட்டு அருளுவீராக; எங்கள் கொங்கைகள் நின்னுடைய மெய்யன்ப ரல்லாதார்தோளைத் தழுவாது ஒழிக; எம்முடைய கைகள் உமக்கல்லாது வேறு யாருக்கும் எவ்வகையான பணியும் செய்யாதொழிக; எம் கண்கள் இரவும் பகலும் வேறு எதனை யும் காணாது ஒழிக; இவ்வுலகத்தில் எங்களுக்கு எமது தலைவ னாகிய நீ இவ்வண்ணம் அருளுவையாயின் சூரியன் எங்கே உதித்தாலும் எங்களுக்கென்ன? என்றவாறு.

இத்திருப்பாட்டில், இரண்டற்று ஒன்றும் (அத்துவித) நிலையை அடைந்த பெண்கள் இறைவனை நோக்கி, 'உடல் பொருள் ஆவி அனைத்தையும் உனக்கே ஆக்குக' என்கின்றார் கள். நாங்கள் அநாதியான காலத்தேயே அடிமையானோம்; அதனைப் புதுக்கிக்கொள்ளுகின்ற அச்சத்தாலே எமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் நின்பணிக்கேயாக வரங்கேட் கின்றோம்; இவ்வரத்தை அருளுவையாயின் சூரியன் எங்கே உதித்தால் எங்களுக்கென்ன? என்பது கருத்து.

'உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்பது ஒருபழமொழி. திருமணக்காலத்துப் பெண்ணைப் பெற்றவர் கள் பெண்ணின் கையை எடுத்து மணமகன் கையில் வைத்துத் தாரைவார்த்துக் கொடுக்கும்போது கூறப்பெறுவது. அடைக் கலம் கொடுத்த பொருளை விருப்பம்போல் பயன்படுத்தலாமா யினும் ஆசையால் ஒன்று அறிவித்துக்கொள்கிறோம் என்றாள்.

உரிமைப் பொருளைக்காட்டிலும் அடைக்கலமாகக்கொடுத்த பொருளைப் பாதுகாக்க வேண்டியது இன்றியமையாதது ஆக லின் எங்களுக்குள்ள அன்புபற்றி ஒன்று விண்ணப்பித்துக் கொள்கின்றோம் என்கின்றாள். பல வரங்களை அடுக்கிக் கேட் கின்ற இவள் ஒன்று கேட்கின்றேமென்பது இறைவன் எளிதில் செவியேற்கவேண்டுமென்னும் விருப்பத்தால் என்க.

இங்கு வரம்வேண்டும் கன்னியர் பலராதலின் பன்மையாற் கூறுகிறாள். யாங்கள் அநாதியே உனது அடிமையாதலின் எங்களுக்கு வாய்க்கும் கணவர் சிவனடியாராக ஆகாதொழி யின் இன்பவாழ்க்கை இன்பமில்வாழ்க்கையாகுமென எண்ணி முதற்கண் மெய்யடியாரையே மணக்க வேண்டுகிறாள். சிவனடி யார் எங்களுக்குக் கணவராக வாய்க்கப்பெறின் நாங்கள் சிவ னுக்கே எப்பொழுதும் பணிசெய்து கொண்டிருக்கலாம் என்ற

சிந்தையால் 'எம் கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க' என்கின்றாள்.

நனவிலும் கனவிலும் இரவிலும் பகலிலும் எம் கண்கள் நின்னையே கண்டு களிக்க வேண்டுமென்பாள் 'எம்கண் மற்றொன்றும் காணற்க' என்கின்றாள்.

இவ்வண்ணம் தோள்சேரற்க என்று கருத்தொத்த காதன்மையை உணர்த்துதலின் மனத்தாலும், எப்பணியும் செய்யற்க எனச் செயலை உணர்த்துதலின் மெய்யாலும், மற்றொன்றும் காணற்க எனக் கண்ணாலும் புறஞ்செல்லாமையை வேண்டுதல் காண்க. உயிர் சிவச்சார்பிலிருந்து விலகி உலகத்தைச் சாருமாயின் மீட்டும் பாசத்துட்பட்டுப் பதைக்கும் என்பதை எண்ணி 'இப்பரிசு எமக்கு நல்குதி' என்கின்றாள்.

'கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தால் என்ன' என்பது ஓர் உலகப்பழமொழி. ஞாயிறு காலம் அளப்பானாக, கருமத்தை உயிர்களுக்கு ஊட்டுபவனாக இருத்தலின் அவனுடைய தோற்றம் ஒடுக்கம் இவற்றில் உலகம் பெருங்கவனம் செலுத்துகிறது. ஆனாலும் இவ்வரங்கள் எமக்குக் கிடைத்து விடுமானால் நாங்கள் காலத்தை வென்றவர்கள் ஆவோம் என்பாள் 'எங்கெழில் என் ஞாயிறு எமக்கு' என்றாள்.

இப்பாடலுக்குக் குழந்தையைக் கையிலேந்தி இருக்கும் தாயொருத்தியைப் பார்த்துப் பிறர் கூறுவதாகவும், தனது குழந்தையைப் பாதுகாக்க வேறொருவர்பால் கொடுத்த தாய் கூறுவதாகவும் பொருள் உரைப்பர்.

இத்திருப்பாடலில், இத்தன்மையான வரத்தை எமக்குத் தருவாயாக என இறைவனருளை வேண்டுதலின், சத்தியை வியந்தது என்பது குறிப்பால் புலனாகியவாறு காண்க.

*174* போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 20

திருச்சிற்றம்பலம்

இ - ள் : எங்கள் தலைவனே! எங்களைப் பாதுகாத்து எப்பொருளுக்கும் ஆதியாய் விளங்குகின்ற நின் திருவடித் தாமரையை எமக்கு அருள்வாயாக; எப்பொருட்கும் இறுதியாகிய நின்னுடைய சிவந்த தளிர்களை ஒத்த திருவடியை அருளுவாயாக; எல்லா உயிர்களுக்கும் தோன்றுதற்கு ஏதுவாயுள்ள பொன்போலும் திருவடிகள் எம்மைக்காக்க; எல்லா உயிர்க்கும் நுகர்ச்சியாக இருக்கின்ற அழகிய திருவடிகள் எம்மைக் காக்க; எல்லா உயிர்களுக்கும் ஒடுங்குதற்கு இடமாகிய இரண்டு திருவடிகளும் எம்மைக் காக்க; பிரமனும் திருமாலும் கண்டறியாத திருவடித்தாமரைகள் எம்மைக் காக்க; யாமெல்லாம் உய்யும் வண்ணம் எம்மை ஆளாக ஏற்று அடிமைகொள்ளும் பொன்போன்ற திருவடிமலர்கள் எம்மைக் காக்க; யாம் ஆடுகின்ற இம்மார்கழிநீர் எம்மைக் காக்க என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் திருவடிகளே எல்லாமாகவும் இன்பநிலைக்களனுகவும், ஐந்து தொழில்களை இயற்றும் அருள் நிலையமாகவும், முத்தித் தானமாகவும் இருத்தலைச் சொல்லிப் போற்றுகிறார்.

இவ்வண்ணம் மார்கழிநீராடி அதன் பயனாகக் கன்னியர் அனைவரும் ஒருங்குசேர்ந்து இம்மை மறுமைப் பயன்களை ஒருசேர உதவிய இறைவன் திருவடிகளைத் தளிராகவும் பொற்பூக்களாகவும் அனுபவித்துப் போற்றித் தம்மைக் காத்தருளுக என்று வேண்டிக்கொள்கிறார்கள்.

ஆதி - எப்பொருளும் தோன்றுதற்கு முன்பே உள்ளது. இறைவன் திருவடியாகிய திருவருள் இறைவனோடு உடனாய் எல்லாம் தோன்றுவதற்குக் காரணமாய் அநாதி நித்தியமாய் இருத்தலின் அதனை ஆதி என்றார். அத்தகைய திருவடி செந்தாமரைமலர்போல எல்லாப் பொறிகளுக்கும் இன்பமூட்டுவதாய், பொறிகளைக் கடந்தும் இருத்தலின் அவற்றை மலர்களாகவே எண்ணி இன்புறுதல்காண்க. கன்னியர்க்குப் பூக்களின் மீது நீங்காத விருப்பம் உண்மையால் எனலும் ஆம்.

எல்லாப் பொருள்களும் தத்தம் காரணத்தினுள் ஒடுங்கத் தாம்மட்டும் எஞ்சியிருத்தலின் அந்தமாம் செந்தளிர்கள் என்று பாதங்களை அனுபவிக்கின்றார். திருவடிகள் முடிந்தபொருளாய் விளங்கும் நிலையில் அவற்றைச் செந்தளிர்களாகக் கூறியது

முடிந்த பொருளே தோன்றுதற்கு வித்தாயிருத்தலின் என்க. அடுத்து, தோற்றமாம் பொற்பாதம் என்பதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

தோன்றிய உயிர்கள் தத்தம் கால எல்லையில் நிலைத்து நின்று இன்பங்களை நுகரவும் வினைக்கழிவு பெற்றுப் பரிபாக முற்ற நிலையில் பேரின்பத்தைப் பெறவும் போகப்பொருளாய் விளங்குவன பூங்கழல்களே என்பார் போகமாம் பூங்கழல்கள் என்றார்.

வினைப்போகம் கழிந்த பிறகு எல்லா உயிர்களும் தம்மிடத்து ஒடுங்கப்பெறுதலின் 'ஈறும் இணையடிகள்' என்றார். இங்ஙனம் விளங்கும் திருவடிகள் தாமரையிலேயே பிறந்து தாமரையையே வாழ்க்கைத்துணையாகக்கொண்ட திருமாலானும் பிரமனும் அறியப்படாத புதுமையை உடையது என்பார் அவ்விருவரும் 'காணாத புண்டரிகம்' என்றார். இங்ஙனம் அளவிலா ஆற்றலுடைய திருவடித்தாமரைகள் எம்மீதுள்ள கருணையால் யாங்களுய்ய அடிமையாக்கொண்ட திறத்தையும், அதற்கு உபாயமாக உதவிய மார்கழி நீராட்டையும் போற்றி அமைகிறார்.

இத்திருப்பாட்டில், முதற்கண் கூறிய ஆதியும் அந்தமும் என்பன திருவடிகள் அநாதி நித்தியமானவை என்பதை அறிவிப்பன. பின்னர்க்கூறிய தோற்றமாம் என்பது படைப்பையும், போகமாம் என்பது காப்பையும், ஈறும் என்பது அழிப்பையும், காணாத புண்டரிகம் என்பது மறைப்பையும், ஆட்கொண்டருளும் பொன்மலர்கள் என்பது அருளையுமுணர்த்தி இறைவன் திருவடியே ஐந்தொழில்களைச் செய்கின்றது என்றவாறு.

இறைவனும் அவன் திருவடியாகிய சத்தியும் வேறன்மையின், இறைவன் செய்யும் திருவிளையாடல்கள் திருவடிமேல் ஏற்றிக்கூறப்பட்டன.

இங்ஙனம் மார்கழிநீராட்டு அத்துவித இன்பக் கலப்பாய் அன்புநீராட்டாய் அமைந்து எல்லாவற்றையும் திருவடியாகிய திருவருட்சத்தியாகவே காணவைத்தமையால் சத்தியை வியந்ததாக அமைதல் காண்க.

# 8. திருவம்மானை

[ஆனந்தக்களிப்பு]

அடிகளார் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்குங் காலத்து, ஒருநாள் கன்னிப்பெண்கள் தெரு முற்றத்தில் இருந்து அம்மானை பாடுதலைக் கண்டார். அவர்கள் கூற்றாக அண்ணாமலையார் புகழை அமைத்துத் திருவம்மானை என்ற இதனை அருளிச்செய்தார்.

சிவத்தைத் தரிசித்துச் சிவபோகத்தழுந்திய நிலையில் தற்போதம் அழியப் பெண்மை தலைசிறக்க, ஆன்மநாதன் புகழ் அமைய அம்மானைப் பாட்டாக அருளிச்செய்தமையால் இது ஆனந்தக் களிப்பாயிற்று.

திருவம்மானை – இது மகளிர் ஆடும் விளையாடலில் ஒன்று. இசைதழுவிய பாட்டாக, மகளிர்மூவர் ஒருங்கிருந்து பாட்டுடைத் தலைவனது புகழையும் அழகையும் ஆற்றலையும் வியந்து ஒருத்தி வினாவாகப் பாட, மற்றவள் அதனை ஒட்டியும் வெட்டியும் உரைக்க, மற்றவள் (மூன்றாமவள்) அமைதி கூறுமுறையாகப் பாடப்பெறுவது ஏனைய அம்மானைப் பாட்டினிலக்கணம்.

இதன்கண் இறைவனுடைய கழலையும் மேனியையும் மாலையையும் சிறப்புக்களையும் அவனால் அடையத்தக்க ஆனந்தத்தையும் வியந்து, ஒருத்தி அம்மானாய்! எனத் தன் தோழியை அழைத்துப் பாடும் எனக் கூறியிருத்தல் காண்க.

இந்நூலில், இப்பகுதி அம்மானாய் என ஒருத்தி தோழியை விளித்துப் பாடும் எனப் பணித்தலே தோன்ற உரைக்கப் பெறுதலின் அம்மானைப் பாட்டாகவும், அம்மானை யாட்டமாகவும் இருத்தற்கு இயலாதோ என்பதும் தோழியை முன்னிலைப்படுத்தி உடன் பாடப் பணிக்கும் பாட்டாகவே இருக்கவேண்டும் என்பதும் எண்ணக்கிடத்தல் காண்க.

சிலப்பதிகாரத்து அம்மானை வரியுள், "தம்மனையிற் பாடும் தகவெல்லாம் தார்வேந்தன், கொம்மை வரிமுலைமேல் கூடவே அம்மானை" என வருதலின் அம்மானை ஆடுதலின் பயன் கணவனைக் கூடிக் களித்தலே என்று உரைப்பர் சிலர். இதில் தலைவன்புகழைப் பாடுதல் தலைமகனுக்குக் கருணையைப் பிறப்பிக்க, அவன் தன்னை அணுக, வழிவகுத்தது பாடலே அன்றி ஆடலாகாமை உணர்க.

ஆதலால் விளையாட்டினும் கணவனது புகழையே கருதுகின்ற காரிகையார்க்குக் கணவன் அருள்செய்தல் இயற்கையேயாதலை தெளிவுறுத்தியவாறு காண்க.

சிலர் ஒருத்தியே இருந்து உரைப்பதாகவும் பலரும் தனித்தனி யிருந்து ஆடுதலாகவும் உரைப்பர். இதில் பொருந்துமாற்றைத் தெளிக.

இப்பதிகத்தில் பலவிடங்களிலும் 'ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்' என முடிதலால் ஆனந்தக்களிப்பாயிற்று எனலாம்.

பழைய உரை 'தேனுந்தும் சொல் திருவம்மானை ஆனந்த யோகக் களிப்பதுவாகும்' என்று அறிவிக்கிறது. அம்மானை ஆடும் போது கண்ணும் கருத்தும் புறம்செல்லாது தலைக்குமேற் சென்று கைக்கு மீளும் காயையே நோக்கியிருத்தல்போல, துவாதசாந்தம் வரையில்சென்று மூலாதாரம் வரையில்வந்து ஒடுங்கும் சிவசத்தி களையே நோக்கியிருத்தல் ஆன்மாவின் இயல்பாகும் என்பதனை விளக்க ஆனந்தயோகக் களிப்பாகிய திருவம்மானையை அடிகள் அருளிச்செய்தார் என்க.

பழைய திருப்பெருந்துறைப் புராணம் "நலமுறும் அந்தணர் வடிவாய் நாரணன் காண்பரிய பதம் நிலமதில் வந்தான் கருணை நினைந்து ஆடல் அம்மானை" என்று அறிவிக்கிறது.

## தரவுகொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

175 செங்கணெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனா யறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 1

இ - ள்: தென்னை மரங்கள் திரளாகக்கூடிய சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையிலே எழுந்தருளியிருப்பவனும் பாண்டியனும் அழகிய கண்களையுடையவனுமாகிய இறைவன் அந்தணவடிவம் கொண்டு ஆசாரியனாகி, சிவந்த கண்களை யுடைய திருமாலும் பன்றியாகச்சென்று பாதலம் வரை தோண்டியும் அறிதற்கரிய இன்பம் பொங்குகின்ற திருவடித்

தாமரைமலரை எல்லாரும் காண இப்பூமியின்கண் எழுந்தருளி வலிய அழைத்து எங்கள் தரத்தையும் ஆராயாது. ஆட்கொண்டு இடையீடின்றி வருகின்ற எங்கள் பிறப்பையும் அறுத்து, நிலைத்த பேரின்பமாகிய வீட்டினை அருளும் அழகிய கருணைத்தேன் ஒழுகுகின்ற திருவடியையே பாடுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், தலைவி தலைவனுடைய திருவடிப்புகழைப் பாடத் தோழியை அழைத்தலை உணர்த்துகிறது.

திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள இறைவன் ஆசான்மூர்த்தியாக எழுந்தருளிவந்து வலிய அழைத்து எமது பரிபாகத்திற்கு ஏற்ப ஆட்கொண்டு வீடுபேறு அருளுவன்; அவன் கழலையே யான் பாடுவேன் என்பது கருத்து.

திருப்பெருந்துறை நெய்தலொடு தழீஇய மருதநிலமாதலின் 'தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறை' என்றார்.

'தென்னன் பெருந்துறை' என்றது பாண்டிய நாட்டின் பகுதியாயிருந்தமையை அறிவித்தது, தென்னன் - பாண்டியன். இறைவன் சௌந்தரபாண்டியனாக வந்து அரசாண்டமையின் அவனையே குறித்தது எனலும் ஆம்.

தலைநாள் தண்ணீரளித்த உதவியைத் தெங்கு பலநாளும் தலையாலே தருதலைப்போல, சிவஞானமுதிர்ச்சிக்கண் ஒரொருகால் உயிர்கள் செய்கின்ற சிவத்தொண்டை வாயிலாகவைத்து என்றும் பெருங்கருணை புரிபவன் இறைவன் என்பதனை விளக்கத் 'தெங்கு திரள் சோலைத் தென்னன் பெருந்துறையான்' என்றார்.

அம் கண்ணன் - அழகிய கண்களையுடையான். கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் ஆதலின் இறைவனுடைய மூன்று கண்களும், மூன்றுவகைக் கருணையாகிய அழகையுடையன. இறைவற்கு முச்சுடரும் மூன்று கண்களாதலின் முதற்சுடராகிய ஞாயிறு உயிர்களுக்கு வளர்ச்சியையும், இரண்டாம் சுடராகிய திங்கள் உள்ளீடாகிய பயனையும், மூன்றுவது சுடராகிய தீ சங்கரித்து வீடுபேற்றையும் அளிக்கும் அழகுடைமையின் 'அங்கணன்' என்றார்.

அந்தணன் - அழகிய தட்பத்தினை உடையான். கோடை வெயிலில் சென்றார்க்குக் குளிர்ந்த நிழல் தட்பம் தருதல்போல,

பிறவி வெம்மையில் வெதும்பினார்க்குக் குருநாதனுடைய திரு வடி குளிர்ச்சியாக அனுபவிக்கப்பெறுதலின் 'அந்தணனாய்' என்றார்.

இடந்தும் என்றதற்கேற்பப் பன்றியாய் என்பதனையும், மலர்ப்பாதம் என்றதற்கேற்ப இன்பம் பொங்கும் என்பதனை யும் வருவித்துரைக்க. விண்ணும் மண்ணும் ஒரே அடியில் ஊடுருவிச் சென்ற நெடுமால் பார்வை குன்றாத குருதி ஓட்டம் குறையாத சிவந்த கண்ணை உடையனாயிருந்தும் இறைவன் பாதம் காணுதற்கரியனவாயின என்பார் 'செங்கண் நெடுமா லும்.........மலர்ப்பாதம்' என்றார். மலர், நிறத்தாலும் மணத் தாலும் இனிமைப்பண்பாலும் ஐம்புலன்களாலும் அனுபவிக்கப் படுவதாக இருக்கவும் திருமால் கண்ணாலுங்கூடக் கண்டிலன் எனத் திருமாலின் இழிவும் திருவடியின் உயர்வும் தோன்ற நிற்றல் காண்க.

வெப்பமானிகொண்டு தட்பத்தை அளக்க முற்படுவார் போலச் சிவஞானத்தான் அறியவேண்டிய சிவனடியைப் பசு ஞானத்தான் பார்க்க முற்பட்டமையின் அடிகள் திருமாலுக்குக் காண்பரியவாயின.

இந்தப்பூமி பிரகிருதிமாயா காரியமாயிருந்தும் உயிர்கள் மாட்டு வைத்த பெருங்கருணையால் வலிய தாமே எழுந்தருளி னான் என்பார் 'பூதலத்தே போந்தருளி' என்றார்.

அங்ஙனம் எழுந்தருளியதோடு அமையாது இன்ப உலகு சேர எல்லாரும் வாருங்கள் என்று வலிய அழைத்தான் என் பார் 'அறைகூவி' என்றார்.

பிறவி சகடக்கால்போல மேலும் கீழுமாக மாறிமாறி வந்து கொண்டேயிருப்பது. ஆணவக் கடையாணியோடு வினை அச்சில் கோக்கப்பெற்றுக் காலம் சுற்றச் சுற்றிக்கொண்டே இருப்பது. அத்தகைய பிறவியை அறுத்தருளினான் என்பார் 'எங்கள் பிறப்பறுத்திட்டு' என்றார்.

எந்தரமும் ஆட்கொண்டு - எமது தன்மையாலும் அடிமை கொண்டு. இறைவனால் ஆட்கொள்வதற்குரிய பரிபாகச்சிறப்பு எமக்கு இல்லையாயினும் எம்நிலையில் இரங்கி வந்து, எம்மைப் போலவே மானிடச்சட்டையும் தாங்கி, கண்டும் காட்டியும் தொட்டும் ஆட்கொண்டான் என்பதாம்.

வீடு: முதனிலை திரிந்த தொழிற்பெயர். விடுதலால் ஆகும் பேரின்பம். இறைவனுடைய திருவடி கருணையே வடிவாய், கருணைத்தேனை ஒழுகவிடுகின்ற மலராய் விளங்குகின்றது என்பார் 'அம் கருணை வார் கழலே' என்றார்.

அம்மானாய் - அழகிய மான் போன்றவளே. அம்மானாய் பாடுதுங்காண் என முடிக்க.

இப்பாட்டில் ஏனைய அம்மானைவரிகள் போல அம்மானை என்ற சொல்லாட்சியின்மையும் பிற அம்மானைப்பிரபந்தங்களுக் குரிய இலக்கணங்களின்மையும் நோக்க இப்பதிகத்தின் தலைப்பு இறுதியால் பெயர் பெற்றதாகிய 'திருவம்மானாய்' என்றிருக் குமோ என்று சிந்திக்கத் தோன்றுகிறது. பழைய உரையிலும் ஞானப்பெண்களே என இதனுரை இருத்தல் காண்க.

இது திருவடியைப் புகழ்தலாகிய ஆனந்தத்திற் களித்தலின் ஆனந்தக்களிப்பாயிற்று.

**176** *பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்*
*ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய*
*பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி*
*வாரா வழியருளி வந்தென் னுளம்புகுந்த*
*ஆரா வமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்*
*பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்.* 2

இ - ள்: அம்மானாய்! பூமியின்கண் உள்ள இருடிகள் முதலானோரும், விண்ணுலகிலுள்ள இந்திரன் மால் முதலான பதமுத்தியிலுள்ளோரும், பாதாளத்தில் வசிக்கின்ற நாகர் முதலியோரும், அதற்கும் புறம்பேயுள்ள மற்ற மாயா புவன வாசிகளுமாகிய எவராலும் காணுதற்கரிய பொருளாயுள்ள வனும் எமக்கு மிக எளிய பேராளனும் தென்பாண்டிநாட்டுத் திருப்பெருந்துறையானுமாகிய சிவன் எனக்குத் தன்மாட்டுப் பித்து மிகச் செய்து மீண்டும் பிறவிக்கு வாராத வழியைக் காட்டி என்னுள்ளத்திலே தானே வலியவந்து புகுந்த தெவிட் டாத தெள்ளமுதமாய் அலைகளோடு கூடிய கடலின்கண் மீனைப்பிடிக்க வலையை வீசும் பேரின்பக் கடலான ஈசனைப் பாடுவோம் காண்! என்றவாறு.

இத்திருப்பாட்டில், யார்க்கும் அறிவரிய பரம்பொருள் எமக்கு எளிவந்து, அமுதாய் இனித்தும் மீன் வேடனாகக் காட்சி வழங்கியும் அருள்செய்த முறையைப் பாடுவேம் என உடன் தோழியை அழைக்கின்றார்.

யாராலும் காணுதற்கரிய இறைவன் எனக்கு எளிவந்து என் இதயத்தே எழுந்தருளி அமுதாய் இனித்து அனுபவத் திற்கு எளிதானதே அன்றி, மீன்வேடனாய் கண்ணுக்கு எளி வந்த காட்சியையும் நல்கிய கருணையாளனாவான். ஆதலால், அகத்தும் புறத்தும் வெளிப்பட்டு அருளுகின்ற இறைவனைப் பாடுவோம் என்றார் என்பது கருத்து.

பார் - பூமி, கன்மநுகர்ச்சிக்கு உரியதாய், துன்ப இன்பக் கலப்பாய் இருப்பது. இதன்கண் வதிவார் மக்கள் முனிவர் முதலாயினோர். அவர்கள் பசு ஞானத்தாலும் பாச ஞானத்தா தாலும் அறிய முற்படுவார்களேயாயின் இறைவன் அவர் களால் காண்டற்கு அரியனாவன் என்பார் 'பாரார் காண்டற்கு அரியான்' என்றார்.

விசும்புள்ளார் - தேவர்கள். இவர்கள் தாம் செய்த பசு புண்ணியங்களையே தாரகமாகக் கொண்டு விண்ணுலகத்தில் போக்த்தையே நுகர்பவர்களாய், முப்பத்து முக்கோடியராய், மால் பிரமன் முதலிய பதவிகளில் வாழ்பவர்கள். இவர்கள் போகசரீரிகளாய்ப் போகத்திலழுந்தி அறியாமை மிக்கு மலபந் தம் நீங்கப்பெறாதவர்களாதலின், அவர்களுக்குச் சிவஞானப் பேறு என்றும் சித்தியாது. ஆதலால், இறைவன் அவர்கள் காண்டற்கு அரியனாயினான் என்பார் 'விசும்புளார் காண்டற்கு அரியான்' என்றார்.

பாதாளம் - பூமிக்குக் கீழுள்ள அடிப்பகுதி. அங்கே காலாக் கினிருத்திர புவனமும் நாகலோகமும் நரகலோகமும் இருத்த லின், அங்கங்கே வாழ்கின்ற அனைவரையும் உளப்படுத்திப் 'பாதாளத்தார்' என்றார். அவர்கள் நோய்நீக்கம் வேண்டு கின்ற பிணியாளர்கள்போல் துன்பத்திலும் அறியாமையிலும் அழுந்தியே கிடப்பவர்களாதலின் 'பாதாளத்தார் காண்டற்கு அரியான்' என்றார்.

முற்கூறிய மண்ணும் விசும்பும் பாதளமும் நீங்க அவற்றின் புறம்பான ஏனைய மாயாபுவனங்களில் வசிக்கின்றவர்களாலும் அறியப்படாதவன் என்பார் 'புறத்தார் ஆராலும் காண்டற்கு அரியான்' என்றார்.

அங்ஙனம் யார்க்கும் காண்டற்கு அரியனாயின் அவனால் ஆன்மாக்களுக்கு ஆம்பயன் என்ன என்று கைவிதிர்ப்பார்க்கு விடையாக 'எமக்கு எளிய பேராளன்' என்கின்றார். அவ னுடைய திருவருட்பெருக்கில் ஓரணு அளவு தோயப்பெற்ற

எமக்கு எளியனாயிருந்து பெருமையை ஆளுகின்றான் என்பதை இப்பகுதியால் இனிது விளக்கியவாறு காண்க.

'தென்னன் பெருந்துறையான்' என்பதற்கு முன் உரைத் தாங்கு உரைக்க. மன மயக்கம் செய்விக்கும் சித்தனொருவன் பிறனொருவனைத் தன்னையே நினைக்கவும் தன்னையே பேசவும் தனக்கே பணி செய்யவும் பித்தனாக்கியவாறுபோல, அவனை யன்றியறியாத ஆற்றலையளித்து அவனடிக்கே அன்புசெய்யும் பித்தை மிகுவித்தான் என்பார் 'பிச்சேற்றி' என்றார்.

வாரா வழி - "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப் படுவர், மற்றீண்டு வாரா நெறி" என்புழிப்போல மீண்டுவாரா வழியாகிய வீட்டினை உணர்த்திற்று.

வந்து - தாமே வலிய வந்து. அடியேன் ஆணவமல முனைப்பால் குரங்கு குட்டியைப்பற்றுதல்போல வலிந்து பற்று மையை அறிந்து, பூனை தன்குட்டியைத் தன்வாயால் கவ்விச் செல்வதுபோல அவனே வலியவந்து என் உள்ளம் புகுந்து தெவிட்டாத தெள்ளமுதம் ஆயினான் என்பார் 'வந்து என் உளம் புகுந்த ஆரா அமுதாய்' என்றார். ஆராவமுது - உண்டு அமையாத அமுதம். அமைதல் - உண்டது போதும் என வெறுப்புத் தோன்றல். பேராசை - பெருங்காதல். பேராசை வாரியன் - பெருங்காதற்கடல் போன்றவன்.

இறைவன் வலைஞர் குலத்துப் பிறந்த உமாதேவியாரை மணந்துகொள்ளத் தானும் வலைஞனாய் எழுந்தருளி வலைவீசிய கருணைத்திறத்தைப் பாடுவோம் என்றது தன் அபின்னசக்தி யாயினும் தவறிழைத்தவழி தன்தகுதி குன்றாது சாபங்கொடுத் துத் தண்டித்தும் தகுதிபெற்றவழி தாமே வலியவந்து ஆட் கொண்டும் அருளுவன் என்பதை அறிவித்தவாறும்.

இத்திருப்பாடலில் இறைவன் ஆராவமுதாய் நுகர்ச்சிக்கு எளியனாய் இருந்த தன்மையை விளக்குதலான் திருப்பதிகக் கருத்திற்கு இயைபுண்மை தெரிக.

*177* *இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்*
*அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி*
*எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்*
*சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்*
*பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த*
*அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.* 3

இ - ள்: இந்திரன் திருமால் பிரமன் முதலான தேவர்களும் தேவ இருடிகளும் மற்றுள்ள தேவர்களும் ஆகாயத்தில் நிற்க, சிவபெருமான் இப்பூமியின்கண்ணே எழுந்தருளிவந்து புயத்து விளங்குகின்ற திருநீற்றொளியை உடையனாய் எங்கள் நிலையிலும் வந்து ஆட்கொண்டு எங்கள் மனத்தை உருக்குகின்ற புகழ் நிறைந்த திருப்பெருந்துறை இறைவன் எமது பாசபந்தங்கழிய குதிரை வீரனாக எழுந்தருளிவந்து அருளிய எல்லையில்லாத ஆனந்தத்தைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவர்கள் ஏமாந்து நிற்க எமக்கருளிய ஆனந்தத்தைப் பாடுவோம் எனக் கூறுகின்றார்.

இந்திரன் முதலிய தேவர், இவர் பெற்ற இன்பத்தை யாம் பெற்றிலமே என்று ஏமாந்து அந்தரத்தே நிற்க, எமக்காகப் பூமியில் வந்து குதிரைவீரனாகி அளித்த ஆனந்தத்தைப் பாடுவோம் என்றாள் என்பது கருத்து.

ஒருவர் உண்ணும்போது கண்டு, அயலிருந்து அடிவயிறு கொதிப்பார்போல, சிவன் குதிரைவீரனாகக் குவலயத்தில் எழுந்தருளிய கோலத்தினையும் அவன் எமக்கருளிய ஆனந்தத்தையும் கண்டு விம்மிதமுற்றுப் பொருமி செய்வதறியாது அந்தரத்தில் நிற்கின்றார்கள் என்பதாம். எந்தரமும் என்பது இழிவு சிறப்பும்மை.

இறைவன் குருமேனிதாங்கியகாலத்துத் தோளில் அணிந்திருந்த வெண்ணீறு இன்றும் தம் மனப்படத்திலே காட்சி அளிக்க 'தோட்கொண்ட நீற்றனாய்' என்கின்றார்.

சிந்தனை, இரும்புபோலும் வலியது. அதனை உருக்கிக் கருமை போக்கிச் செம்பொனாக்கிய செந்தீப்போலச் செய்தான் என்பார் 'சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்' என்றார்.

இங்ஙனமன்றிச் சிந்தனையை வந்துருக்கும் தன்மையை இறைவன் சீருக்கு அடைமொழியாக்கலும் உண்டு. இறைவன் ஏறிய பரி வேதமாகிய ஞானமேயாதலின் அறிவும் அறியப்படு பொருளுமாகிய இரண்டையும் ஒருசேரக்கண்ட ஆன்மாக்களது மல மாயா கன்மங்களாகிய பந்தங்கள் பச்சிலை பட்டவுடன் தெறித்த விலங்குபோல நீங்கின என்பார் 'பந்தம் பரியப் பரிமேற் கொண்டருளி' என்றார்.

உதவிய ஆனந்தம் பாடுதும் என ஒருசொல் வருவித்துப் பொருள் கொள்க. சிவபோகத்து அழுந்தி அனுபவிக்கும் ஆனந்தத்திற்கு எல்லையின்மையின் அந்தமில்லா ஆனந்தம் என்றார்.

இத்திருப்பாடல்கள் அனைத்திலும் ஆனந்தம் ஆடும் நிலையைப்பெற ஆனந்தம் பாடும் பெற்றி ஒன்றையே இங்கு பெற்றமை உணர்த்துதல் காண்க.

இதுவும் 'ஆனந்தம் பாடுதும்' என்றலின் ஆனந்தக் களிப் பாயிற்று.

178 வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்
டூன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவி னொளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 4

இ-ள்: அம்மானாய்! விண்ணவர்களும் மால் பிரமன் இந்திரன் முதலியவர்களும் காட்டில் நெடுங்காலம் நின்று உடல் முதலியன உலர்ந்தும், மேனிமுழுதும் புற்று மூடப் பெற்றும், காண்டற்கரிய பொருளாகிய தான் வலிய வந்து, நாயை ஒத்த இழிந்த என்னையும் தாயைப்போலப் பேரன்பு செய்து, என் உடம்பினுள் எழுந்தருளி, உரோமத் துளைகள் தோறும் உள்ளே உயிர்ப்பையூட்டுகின்ற தேனாக ஊறி, தேவாமுதத்தின் தெளிவாக ஒளிமிகுந்த, பெருமையோடு கூடிய நீண்ட திருவடிகளைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், அமரர்கள் அரிய யோகம் செய்தும் காண்பரிய கடவுள் தம்மைத் தாய்போல் தலையளித்த தயாவை வியந்து அவர்கழலைப் பாடுதும் என்கின்றாள் தலைவி என்றுரைக்கின்றார்.

வான் வந்த தேவர்கள் - வானின்கண் வந்து பொருந்திய தேவர்கள். தேவர்களுக்கும் போகம் உண்டாயினும் அதன் விளைவாகிய புதல்வர்ப்பேறின்மையின், பசுபுண்ணிய மேலீட்டால் உயிர்கள் தேவசரீரம் பெற்று வானுலகம் செல்லுதலே மரபாதலின் 'வான் வந்த தேவர்' என்றார். இங்ஙனமே வான் வந்த மால் அயனோடு இந்திரனும் எனவும் கூட்டுக.

போகபூமியுள் யோகம் முதலிய கன்மங்கள் செய்ய இயலாமையின் பூமிக்கண் காட்டில் வந்து, பொறியடக்கி உணவு ஒடுக்கி நீண்ட காலம் நோற்கின்றனர் என்பார் 'கான் நின்று வற்றியும் புற்றெழுந்தும்' என்றார். கால் நின்று எனப் பிரித்துப் பிராணுயாமம் செய்து எனலுமாம்.

தாய் தன் பிள்ளையின் இழிவு தோன்றாது தலையளிப்பாள் ஆதலின் நாய் போன்ற என்னையும் தாய்போலக் காத்தான் என்பார் 'நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு' என்றார். தான் வந்து என்றபோது, உயிருள் எழுந்தருளிய இறைவன் கருணையை உணர்த்திய அடிகள், 'ஊன் வந்து' என்பதால் உடலிடங்கொண்டான் என்பதையும் உணர்த்தினமைகாண்க.

இறைவன் தேனாய் மயிர்த்தொளைதோறும் கசிந்து இனிக்க அனுபவமாயினன் என்பதை 'உரோமங்கள் உள்ளே உயிர்ப் பெய்து தேன் வந்து' என்றார். மயிர்க்கால்தோறும் உயிர்த் தன்மையாகிய உணர்ச்சியாகி எய்தும் தேனாக வந்து என்க.

அமுதம் ஒரு பொருள். தெளிவு அதன் தன்மை. அதாவது இனிமை. அதன் ஒளி அதனை உண்டதால் விளையும் தேசு. அமுதத்தெளிவாகிய அதன்சுவை உண்டதால் விளையும் ஒளியாகிய ஞானத்தால் அறியப்பெற்ற கழல் என்க. வான் - பெருமை.

அம்மானாய் காண்பரிய தான் வந்து, தலையளித்திட்டு, ஊன் வந்து, உயிர்ப்பெய்து தேன் வந்து, ஒளி வந்த வார் கழல், வான் வந்த வார்கழல் பாடுதும் என இயைக்க.

கழல் ஆனந்த வடிவினது. அதனைப் பாடுதல் அதன் களிப்பாதலின் இது ஆனந்தக்களிப்பாயினமை காண்க.

**179** கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 5

இ - ள் : அம்மானாய்! வல்லாளனும் தென்னவனும் பெருந்துறையானுமாகிய சிவன், அவனருளைக்கல்லாத மனத்தினையுடைய நாயினும் கீழான என்னிடம் தன்னைப்பற்றிய

பித்தை மிகுவித்து, என் வலிய கல்மனத்தைப் பிசைந்து மென்மையான கனியாகச்செய்து, தனது கருணை வெள்ளத்திலே என்னை ஆழச்செய்து, என் வினைகளை ஓட்டிய அந்தணனும், திருத்தில்லை நகரின்கண் எழுந்தருளிச் சிற்றம்பலமாகிய ஞானாகாயத்திலே நிலைபெற்று விளங்குகின்ற, விரைந்துசெல் ஆந் தன்மைவாய்ந்த இடபத்தையுடையவனுமாகிய சிவனைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டிலும், அடிகளார், பசுபோதத்தை அகற்றிப் பதிபோதம் அளித்த உபகாரத்தைப் பாடுதும் என்கின்றார்.

பிறர் அரிதில் முயன்றும் முடித்தற்கரியசெயலை மிக எளிமையிற் புரிபவனை 'வல்லாளன்' எனல் உலகியல். சிவன் திருவருட் கலையைக் கல்லாத - பிறவியாலும் கீழ்ப்பட்ட என்னை, தன்னையே எண்ணச்செய்த வித்தை ஒன்றே அவன்வன்மைக்கு எடுத்துக் காட்டாகும் என்பதை உட்கொண்டு 'வல்லாளன்' என்றார்.

கல்லாமனம் - பரிபாகம் பெறாதமனம். கல்வி சிறிது அறிவு விளக்கம் தந்து, புண்ணிய பாவப் பாகுபாட்டினை உணர்த்தி, இறையுணர்ச்சியை எழுப்பித் திருவருள்பெற்று உய்யத் துணை செய்வது. அதனைக் கல்லாமையான் மக்கட்பண்பின் இழிந்து நாயானேன் என்பார் 'கல்லாமனத்துக் கடைப்பட்ட நாயேனை' என்றார். கல் ஆம் மனம் எனப்பிரித்து, கல்போல்வலியகசிவுறாத மனம் எனக் கோடலுமாம்.

பிச்சு ஏற்றுதல் - என்றும் அவனைப்பற்றியே பிதற்றச்செய்தலும், காண்பன யாவும் அவனாகக் காணச் செய்தலும் முதலிய செயல்கள் உயிரினிடமாக நிகழச்செய்தலாம்.

கல் எத்துணையாண்டு 'நீருட்கிடப்பினும் மெல்லென்றல் அரிதாகும்' அதுபோலச் சிவனடியாரோடும், சிவனோடும், சைவ நூல்களோடும் பழகினும் காதலாகிக் கசியாத்தன்மையுடையது மனம் என்பதாம். அதன் வன்மையை வாட்டி மென்மையாக்கியதே கல்லைப் பிசைந்தமையாம். சுவையும் மணமும் இல்லாத கல்லை மென்மையாக்கியதோடமையாது கனிபோலச் சுவையையும் மணத்தையும் கூட்டினான் என்பார் 'கல்லைப் பிசைந்து கனியாக்கி' என்றார்.

கனியாக்கப்பெற்ற நிலையில் வெளியில் வைத்திருந்தால் கனி உலர்ந்தும், சுருங்கியும், அழுகியும், நாறியும் போம். அங்ஙனம் கெடாதவாறு கனியைத் தேனில் ஆழ்த்திவைப்பதுபோல

என்னைப் புறச்சார்பு வந்து தாக்காதவாறு தன் கருணை வெள்ளத்திலே அழுத்திக் காப்பாற்றினன் என்பார் 'தன் கருணை வெள்ளத்து அழுத்தி வினைகடிந்த வேதியனை' என்றார். இது இறைவனுடைய திருவருள் வியாபகத்தினுள் தான் ஏகதேச வியாப்பியமாய்த் தன்முனைப்பு அற்று அடங்கிக்கிடந்தமையை உணர்த்தியவாறு.

அங்ஙனம் சிவனருள் வியாபகத்துள் அடங்கிக்கிடக்கும் போது உயிர்கள் மேல்வினைகளை நுகரா; செய்யா ஆதலானும், பிராரத்த கன்மமும் வெயிலின்முன் இருள்போலத் திருவருளில் அடங்கிக்கிடக்கும் உயிரைச் சென்று பற்றா ஆதலானும் 'வினை கடிந்த' என்றார்.

காட்டில் ஆடுகளை அழைக்கும் ஆடுமேய்ப்பான் ஆட்டு மயிர்க் கம்பலம்போர்த்து ஆடுபோல்கத்தி அழைப்பதுபோலச் சிவன் என்னைப்போல மானிடச்சட்டை தாங்கி, ஞானனுபவம் பெற்ற வேதியனாக வந்து, என்மொழியில் என்னை அழைத்து உபதேசித்த அருமையை 'வேதியனை' என்ற சொல்லால் குறிப்பித்தார். குருந்தடியிற் குருவாக எழுந்தருளிய அவன் என்னைத் தில்லைக்கு வருக எனப் பணித்து எனக்குமுன்னே அவன் தில்லைநகரில் புக்குச் சிற்றம்பலத்தில் எழுந்தருளினன் என்பார் 'தில்லைநகர்புக்குச் சிற்றம்பலமன்னும் விடையான்' என்றார். சிற்றம்பலம் - ஞான ஆகாயம். இதனைத் தகராகாசம், இதயத் தாமரை என்று உபநிடதம் கூறும். இங்கு இறைவன் என்றும் நிலைபெற்று ஞானிகளுக்கு ஞானநடம் புரிகின்றான் ஆதலின் 'சிற்றம்பலம் மன்னும் விடையான்' என்றார்.

ஒல்லை - விரைவு. அடியார்களைப் பாதுகாக்க அவனூர்தியாகிய விடையும் விரைந்து செல்லும் இயல்பினது என்பதனை 'ஒல்லை' என்பதால் உணரவைத்தவாறு.

'கருணை வெள்ளத்து அழுத்தி' என்றமையால் ஆனந்தக் களிப்பு என்னும் பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

180 கேட்டாரோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்கா ணம்மானாய்.

இ-ள் : அம்மானாய்! தோழி! ஒப்பற்றவன் என்னை மயக்கியதைக் கேட்டாயோ? அவன் இருக்கிறனே! தென்னன் பெருந்துறையான்; எனக்குக் காட்டாதன எல்லாவற்றையும் காட்டி, சிவமாகிய தன்னையும் காட்டி, திருவருளாகிய திருவடித் தாமரையையும் காட்டி, தன் கருணையாகிய சுவை மிக்க தேனையுங்காட்டி, உலகவர் நம்மை இவன் ஒருபித்தன் என்று நகைக்க, நாம் மேலாகிய வீட்டின்பத்தைமேவ நம்மை ஆளாக ஏற்று ஆட்கொண்டவாற்றைப் பாடுதும் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், சிவபெருமான் தமக்குச் சிவ ஞானத்தை ஊட்டிச் சிவபோகத்தழுத்தி ஆட்கொண்டருளிய அருமையைப் பாடுதும் என விண்ணப்பிக்கின்றார்.

நிகழ்தற்கேலாத செய்தியொன்று நிகழ்ந்தக்கால் மகளிர் கேட்டாயோ செய்தியை என்று சொல்வதை இன்றும் காண்கிறோம். அதுபோல அடிகள் கேட்டாயோ தோழி என்று தோழியின் கவனத்தைக் கவர்கின்றார்.

கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் புலன் வழிச் செல்கின்ற என்னை மயக்கித் தன்வயமாக்கினான் என்பார் 'ஒருவன் கிறிசெய்தவாறு' என்றார். கிறி - மாயம். ஒருவன் என்றது தனிமுதல்வன் என்னும் பொருளில் வந்தது.

தீட்டார் மதில்-சுதை தீட்டப்பட்டதும் பகைவர் கடத்தற்கு அரியதுமாகிய மதில். புடைசூழ் பெருந்துறை எனக்கூட்டுக.

மலமாயாகன்மங்களால் கட்டுண்டு பிறவிச்சூழலில் அகப்பட்டு வருந்துகின்ற சகலான்மாவாகிய எனக்கு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் வருவித்துத் தத்துவரூபம் முதல் சிவரூபம் வரையில் காட்டினான் என்பார் 'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவங்காட்டி' என்றார்.

இருளில் அழுந்திய ஒருவன் ஒளியை உற்றவிடத்து இருளின் தன்மையையும் இதுவரை தான் அதில் அழுந்தி அனுபவித்த துன்பங்களையும் அறிந்து அவற்றினின்றும் நீங்கி ஒளியிலேயே இருக்க விரும்புவதுபோல, மலத்துள் அழுந்தி வினையாற்கட்டுண்டு தனு கரண புவன போகங்களில் அழுந்தியிருந்த என்னை எடுத்துத் தத்துவ தாத்விகங்களை உணர்த்திச் சிவதரிசனம் வரையில் சித்திக்கச்செய்ததைக் குறிப்பித்தவாறு.

தாட்டாமரை காட்டி என்பது திருவடிமலரைப் பொருந்தச் செய்து என்பதாம். திருவடிமலர் கருணை வடிவானது. அதனைப்

பொருந்துதல் சிவயோகமாம். ஆதலால் சிவயோகத்து அமரச் செய்து என்பது இதன் கருத்தாம்.

திருவடிமலராகிய கருணையினின்று சுரக்கும் தேன் சிவ போகமாகிய பேரின்பநுகர்ச்சி. அதில் பிரியாது என்றும் நிலைக் கச்செய்த உபகாரத்தை 'தன்கருணைத் தேன்காட்டி' என்றதால் குறிப்பிடுகின்றார்.

சிவஞானம் கைவரப்பெறாத அவஞானிகளாகிய உலகவர் கள் திருவருள் அனுபவம் அறியாதவர்கள் ஆகையால் எள்ளி நகையாடினர் என்பார் 'நாட்டார் நகைசெய்ய' என்றார்.

'அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் மிகைமக்களான் மதிக்கற் பாலன' என்பதை உளத்திற்கொண்டு நாட்டார் நகைசெய்த லையும் பொருட்படுத்தாது சிவஞானியர் சென்றநெறியே யாம் ஒழுகினேமாக, எமக்கு வீடு எளிதாயிற்று என்பதனை 'நாம் மேலை வீடு எய்த' என்பதனால் உணரவைத்தார்.

இத்துணைப் பெரும்பேறு எமக்குக் கிடைத்தது தானே வலியவந்து எம்மை ஆட்கொண்டருளியதனாலேயே. அதனால் அதனையே பாடுவோம் என்றார் என்க.

இப்பாடலுக்குத் தலைமகள் தன் சிறுமையும் தலைமகனின் பெருமையும் புலப்படுத்தியதாக உரைகூறி, தலைமகனை இயற்பட மொழிந்தது என்பாரும் உளர்.

பழைய உரை காட்டாதன என்பதற்குத் தன்னை, வினையை, தலைவனைக் காட்டாத மூலமலவிருளை என்று பொருள் கூறும். 'நாட்டார் நகைசெய்ய' என்பதற்குச் சிவஞான நாட்டமுடைய அடியார்கள் இதுவோதரம் எனச் சிரிப்ப என்றும், 'தன் கரு ணைத்தேன் காட்டி' என்பதற்கு அவ்வுயிரின்பவழித்தான அபேத அத்துவித வாழ்வைக் காட்டி என்றும் பொருள் வகுக்கும்.

வீடெய்த ஆட்கொண்டு ஆண்டவா பாடுதும் என்றதால் ஆனந்தக் களிப்பாயிற்று.

*181* *ஓயாதே யுள்குவார் உள்ளிருக்கு முள்ளானைச்*
*சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்*
*மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை*
*நாயான நந்தம்மை யாட்கொண்ட நாயகனைத்*
*தாயான தத்துவனைத் தானே யுலகேழும்*
*ஆயானை யாள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய்.* 7

இ - ள் : அம்மானாய்! இடைவிடாது எண்ணுபவர்கள் மனத்துள் இருக்கும் உண்மைப்பொருளானவனை, அங்ஙனம் நினையாதார்க்குத் தூரத்திலிருப்பவனை, குதிரைச் சேவகனை, தென்னனாய்த் திருப்பெருந்துறையுள் எழுந்தருளியுள்ளவனை, அந்தணனை, உமாதேவி தங்கப்பெற்ற பாதி திருமேனியுடையவனை, நாய்போலும் இழிந்த நம்மையும் ஒரு பொருளாகக் கொண்டு ஆட்கொண்ட தலைவனை, எனக்குத் தாயைப்போலாகிய உண்மை வடிவானவனை, ஏழுலகங்களும் தானேயாய் இருக்கின்றவனை, அவற்றிலுள்ள அனைத்துயிர்களையும் ஆள்கின்றவனைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் தமக்குத் தாயான தனிப்பெருமையையும் எல்லாமாயிருக்கும் தன்மையையும் வியந்து பாடுதும் என்கின்றார்.

எல்லாமாய், எல்லார்க்கும் தலைவனுமாய், தாயுமாய் இருக்கின்ற சிவபரம்பொருளைப் பாடுவோம் என்பது கருத்து.

இறைவனை எண்ணுகிறமுறையில், நீர் சொட்டுவதுபோல இடையிட்டு எண்ணுதலும் எண்ணெயொழுக்கும் தேனொழுக்கும்போல இடைவிடாது எண்ணுதலும் என இருவகையுண்டு. அவற்றுள் இடைவிடாது நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் தியானிப்பவர்கள் உள்ளத்தில் என்றும் நீங்காமல் நித்தியப்பொருளாய் விளங்குகின்றான் என்பார் 'ஓயாதே உள்குவார் உள்ளிருக்கு முள்ளானை' என்றார். "நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்" "மனத்தகத்தான்" முதலிய அருமறைகளும் ஈண்டு இணைத்து எண்ணுதற்குரியன. உள்ளான் - நித்தியன்.

சேயானை - சேய்மைக்கண் உள்ளவனை. முன்னர் உள்குவார் உள்ளிருக்கும் என்றதனால் ஈண்டு உள்காதார்க்குச் சேயானை என இயைத்துப் பொருள்காண்க. முன்னர்ப் 'புறத்தார்க்குச் சேயோன்' என்றதும் இக்கருத்தினை நன்குவிளக்கும்.

சேவகன் - வீரன். இது முன்னர் 'மதுரைப் பெருநன் மாநக ரிருந்து குதிரைச் சேவக னாகிய கொள்கையும்' என்பதாலும் விளங்குதல் காண்க.

மேயான் - விரும்பி எழுந்தருளியிருப்பவன். இறைவன் நந்தம்மை ஆட்கொள்ள உமையொரு பாதியனாக விளங்குதலை 'மாதிருக்கும் பாதியனை' என்பதால் குறிப்பிக்கின்றார்.

ஆன்ம நாயகனின் தனித்தன்மை இழிந்த பொருளையும் ஆட்கொண்டு இழிதகைமையைப் போக்கி உயர்வற உயர் நலம் அருளுதலேயாதலின் நாயினும் இழிந்த என்னையும் ஒரு பொருளாகக்கொண்டு ஆட்கொண்டான் என்பார் 'நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனை' என்றார்.

தாய் பிள்ளையின் பொல்லாங்கு பொறுத்து அதன் வளர்ச்சியையும் ஆக்கத்தையுமே கருதுவதுபோல, இறைவன் பிழையெலாம் தவிரப் பணித்து வீடுபேறு அருளுகின்றான் என்பதனைத் 'தாயான தத்துவனை' என்பதால் உணரவைத்தார்.

விண்ணும் மண்ணும் கீழுமாக வகுக்கப்பெற்றுள்ள ஏழுலகங்களிலுமுள்ள இயங்குவ நிற்பனவாகிய எல்லாப் பொருளுமாய் அவற்றின் உள்ளும் புறமுமாய்க் கலந்துநிற்பவன் இறைவனே என்பார் 'உலகு ஏழும் தானே ஆயானை ஆள்வானை' என்றார்.

இவ்வண்ணம் பேருபகாரம்செய்த பெருமானைப் பாடுதலே நமக்குரிய ஆனந்தக்களிப்பாம் என்பதனை அறிவித்தவாறு.

**182** *பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்*
*கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு*
*புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய். 8*

இ - ள்: அம்மானாய்! இசையோடு கூடிய பாடற்குரிய பரிசினை ஆக்கித்தருகிற-உமாதேவியைச் சுமந்த ஒருபாகத்தையுடையவனும், பெருமானும், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனும், ஆகாயத்தால் தாங்கப்படுகிற புகழினையுடைய அகன்ற மண்டலங்களுக்குத் தலைவனும், நெற்றிக் கண்ணையுடைய கடவுளும் ஆகிய இறைவனது தழைக்கின்ற மதுரையிலே வந்தி என்னும் தவமூதாட்டிக்காக மண்சுமந்து, அதன் கூலியாகப் பிட்டை ஏற்று, உண்டு, அங்கு அரசனால் அடிக்கப்பெற்றுப் புண்ணைத்தாங்கிய பொன்போல் விளங்கும் திருமேனியைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாடலில், அடிகளார், இறைவனது அடியார்க்கு எளியனாந்தன்மையை வியந்து பாடுகின்றார்.

எல்லா அண்டங்களுக்கும் தலைவனாகிய சிவபெருமான் ஆளாகவந்து அடிவாங்கிப் புண்தாங்கிய மேனியோடு அடியார்க்கு எளியனாதலைக் காட்டிக்கொடுத்த அருளிப்பாட்டினை வியந்து பாடுவோம் என்பது கருத்து.

பருந்தும் நிழலும்போல் பாடலும் இசையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாதனவாதலின் பண்ணாகிய உயிரைத் தாங்கியிருக்கின்ற பாடலாகிய உடல் என்ற நயந்தோன்ற 'பண் சுமந்த பாடல்' என்றார்.

பரிசு - பாட்டிற்குரிய சன்மானம். தருமிக்குப் பாடலையே பரிசாக அளித்ததை எண்ணி 'பண்சுமந்த பாடலாகிய பரிசு' என்று பொருள் காண்பாருமுளர். செந்தமிழ் கேட்கும் விருப்பால் திருஞானசம்பந்தருக்கு ஆயிரம் பொன் பரிசளித்ததும், சுந்தரர்பெருமானுக்குப் பன்னீராயிரம் பொன் பரிசளித்ததும் எண்ணி, 'பாடல் பரிசு படைத்தருளும் பாகத்தன்' என்றார். பெண்ணைச் சுமந்த பாகத்தன் என இரண்டனுருபு விரிக்க.

எல்லா மண்டலங்களையும் தாங்கி அவை வாழ இடந்தந்து நிற்பது விண்ணாதலின் விண்ணாற் சுமக்கப்பெற்ற கீர்த்தியினையுடைய அகண்ட மண்டலத்திற்கு ஈசன் என்றார். இதற்கு விண்ணை அளாவிய புகழினையுடைய ஈசன் எனவும், வியன் மண்டலத்திற்கு ஈசன் எனவும் தனித்தனிக் கூட்டிப் பொருள் உரைப்பாருமுளர்.

கலி மதுரை: கலித்தல் - தழைத்தல். கண்சுமந்த நெற்றிக் கடவுள் என்றது இறைவனே சங்காரகாரணன் என்பதை உணர்த்தியவாறு.

இவ்வண்ணம் பாடலுக்குப் பரிசளிக்கும் வள்ளலாயும் பெண்ணைவிட்டுப் பிரியாத பெருமானாயும் உலக முதல்வனாயும் சங்கரிக்கும் ஆற்றலையுடையவனாயும் விளங்குகின்ற இறைவன் ஒரு தவமூதாட்டிக்காகக் கூலியாளாய் வந்து அடிபட்டுப் புண் சுமந்தான் என்று எளிமையை எல்லாருள்ளத்தும் இனிது புகட்டியவாறு. கோ என்றது ஈண்டு அரிமர்த்தனபாண்டியனை.

இங்ஙனம் இறைவனது எளிவந்த கருணையை எண்ணுதலால் ஆனந்தக்களிப்பு விளைய, அதனைப் பாடுதும் என்பதால் பதிகக்கருத்துப் புலப்படுதல் காண்க.

183 துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்
அண்டமுத லாயினான் அந்தமிலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய். 9

இ - ள் : அம்மானாய்! திருமுடியில் பிறைத்துண்டத்தை யுடையவனும், வேத வடிவினனும், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவனும், திருமார்பில் மேற்கொண்ட முப் புரிநூலையுடையவனும், அழகிய குதிரையை ஊர்தியாகக் கொண்டவனும், கரிய கண்டத்தையும் சிவந்த மேனியையும் வெண்ணீற்றையும் உடையவனும், அண்டங்களுக்கெல்லாம் முதலாக விளங்குபவனுமாகிய சிவபெருமான் பழைமையான முறைமைப்படி பழைய அடியார்கட்கு எல்லையில்லாத ஆனந் தத்தைக் கொடுத்தருளுவன்; எல்லா அண்டத்திலுள்ளாரும் வியக்க அக்கொடைத்திறத்தை வியந்து யாம் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகள் பழவடியார்க்கு அந்தமில்லா ஆனந்தத்தை இறைவன் தந்தருளுகின்றான்; அந்தப் புகழை அண்டமெல்லாம் வியக்க யாம் பாடுதும் என்கின்றார்.

உயிர்கள் செய்த பிழையெலாம் பொறுத்து அவ்வவற்றின் தன்மைக்கேற்பத் தலையளிசெய்யும் பெருமான் பழவடியார்க்கு எல்லையில் இன்பத்தை ஈந்தான்; அதனை அண்டமெல்லாம் வியக்க யாம் பாடுவோம் என்பது கருத்து.

துண்டப்பிறை என்பதனை மொழிமாற்றிப் பிறைத்துண்டம் எனக்கொள்க. பிறைத்துண்டம் - கீற்றாகிய ஒருகலைப் பிறை. மாற்றமில்லாத மறையோனைச் சார்ந்திருத்தலால் அப்பிறை வளர்ச்சியும் தேய்வுமின்றி என்றும் ஒருபடித்தாய் விளங்குகின் றது என்பதனைத் 'துண்டப் பிறையான்' என்ற சொற்றொடர் விளக்குகின்றது.

மறையான் - வேதங்களை அருளிச்செய்தவன்; மறையே வடிவானவன். தனது பேரருட்டிறத்தால் எதனையும் மறை யாமல் விளக்குபவன் எனினும் ஆம். கொண்ட என்பதற்கு ஏற்ப அணிந்துகொண்ட என்னும் ஒரு சொல் வருவித்துக் கொள்க. கோலம் ஆ ஊர்தியான் எனப் பிரித்து அழகிய இட பத்தை வாகனமாகக் கொண்டவன் எனலும் ஆம். கரியான்

செம்மேனியான் வெண்ணீற்றன் என்பன சொல்முரண். கண்டங்கரியான் என்பது இறைவனது காத்தல் தன்மையையும் செம்மேனியான் என்பது இறைவனது அழித்தல் வன்மையையும், வெண்ணீற்றன் என்பது அழியாத்தன்மையையும் விளக்கி நின்றன.

அண்டங்கள் மாயையினின்றும் தோன்றத் தான் நிமித்த காரணன் ஆயினன் என்பார் 'அண்டம் முதல் ஆயினன்' என்றார். முதல் - வினைமுதல் அல்லது கருத்தா.

பழவடியார்க்கு அந்தமிலா ஆனந்தம் ஈந்தருளும் பண்டைப் பரிசே எனக்கூட்டிப் பொருள்கொள்க. சிவானந்தம் ஓர் எல்லையுள் அடங்காத ஆநந்தமாயிருத்தலின் அந்தமிலா ஆனந்தமாயிற்று. இத்தகைய ஆனந்தம் எம்மால் இன்றே இக்கணமே எய்தப்பெறுவது ஒன்று என்று எல்லா அண்டங்களில் உள்ளவர்களும் வியக்கும்படிப் பாடுவோம் என்றாள்.

இதில் அந்தமிலா ஆனந்தம் ஈந்தருளும் பரிசைப்பாடுதும் என்பதால் பதிகப்பொருள் தோன்றுதல் காண்க.

184 விண்ணாளுந் தேவர்க்கு மேலான வேதியனை
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 10

இ - ள்: அம்மானாய்! விண்ணுலகத்தை ஆளுகின்ற இந்திரன் முதலாய தேவர்களுக்கு மேலாக விளங்குகின்ற ஞானவடிவானவனை, மண்ணுலகை ஆளுகின்ற மன்னவர்களுக்கும் மாட்சிமை உதவும் பொருளாக விளங்குபவனை, குளிர்ந்த தமிழைக் கொடுத்துதவுகின்ற குளிர்ந்த பாண்டிநாட்டிற்கு உரியவனை, உமாதேவியை வைத்து ஆளுகின்ற ஒரு பாகத்தை உடையவனை, எல்லாராலும் பேணப்படுகின்ற பெருந்துறைக் கண் யாரும் தியானித்தற்குரிய திருவடியைக்காட்டி நாயேனை ஆட்கொண்ட அண்ணாமலையானைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், திருப்பெருந்துறையில் தனக்குத் திருவடிசூட்டி ஆட்கொண்ட அருமையினை வியந்துபாடுகின்றார்.

இறைவன் மேலானவர்க்கெல்லாம் மேலாயும் கீழானவர்களை உயர்த்தும் உயர்பொருளாயும் விளங்குகின்றான்; அவன் தென்பாண்டிநாட்டில் திருப்பெருந்துறையில் குருமணியாய் வந்து திருவடியைக் காட்டி ஆட்கொண்டான்; அவனைப் பாடுதும் என்றாள் என்பது கருத்து.

விண்ணாளும் மண்ணாளும் என்பனவற்றுள் தத்தம் அறிவின் சிறுமைக்கேற்பத் தேவர்களும் மன்னவர்களும் தத்தம் ஆட்சிக்கேற்பட்ட விண்ணையும் மண்ணையுமே பெரிது எனக் கருதி ஆளுகின்றனர். அவற்றிற்கும் மேலான பதவியும் அவரினும் மேலாகத் தானும் விளங்குவதை உணர்த்தி உய்யக்கொள்கின்றான் என்ற நயந்தோன்ற 'விண்ணாளும்...நின்றானை' என்றார்.

விண்ணாளும் தேவர்கள் போகமே பெரிதெனக் கருதியிருந்து ஞானம் கைவரப் பெறுதவர்களாதலின் இறைவன் அவர்களுக்கு ஞானமேயாய் விளங்குகிறான் என்பார் 'மேலான வேதியனை' என்றார். மன்னவர்கள் கன்மபூமியில் இன்பதுன்பங்களுக்கு உட்பட்டு வாழ்கின்றாராதலின் அவர்களுக்கு ஏற்ப மாண்புதரும் பொருளாக விளங்குகிறான் என்பார் 'மாண்பாகி நின்றானை' என்றார்.

தண்ணார் தமிழ் - தண்மைநிறைந்த தமிழ். தண்மையாவது கேட்டற்கு இனிமையாதலும் சொல்லுதற்கு இனிமையாதலும் ஆழ்ந்து நுகர்தற்கு உரித்தாதலும் ஆம். அதனை அளித்தலாவது தமிழில் இனிமையாகத் தான் கலந்திருந்து இருமைப் பயனையும் உதவுதல். இதனை நாட்டுக்கு அடைமொழியாக்கி, 'தமிழளிக்கும் தண்பாண்டி நாடு' என்று உரைத்தலும் ஆம். நாட்டுக்கேற்றுதலைக்காட்டிலும் முற்கூறியாங்கு இறைவனுக்கு ஏற்றியுரைத்தலே நயம் சிறந்துநிற்றல் காண்க. பெண்ணாளும் பாகன் என்பதற்குப் பெண்ணை ஆளும் பாகன் எனவும், பெண்ணானவள் ஆளும் பாகன் எனவும் இருவகையானும் பொருள் விரித்து இருநயமும் காண்க.

பேணு பெருந்துறை - சிவபுரமாய் எல்லாரையும் பாதுகாக்கும் பெருந்துறை. கண் ஆர் கழல் - தியானிக்கப்படுகின்ற திருவடி. கண்ணுதல் - எண்ணுதல். ஆர்தல் - பொருந்துதல்; நிறைதல். திருமாலின் கண்ணைப் பொருந்திய திருவடி என்பாரும் உளர். அவ்வரலாற்றுக் குறிப்பு ஈண்டுச் சிறவாமை தெளிக.

அண்ணாமலையானை என்ற குறிப்பு, இப்பதிகம் திருவண்ணாமலையில் அருளிச்செய்யப் பெற்றமைக்கு அரண்செய்தலறிக.

இத்திருப்பாடல், கழல்காட்டி ஆட்கொண்ட அண்ணாமலையானைப் பாடுதும் என்பதால் ஆட்கொண்ட ஆனந்தத்தால் விளையும் களிப்பை அறிவித்தவாறு.

185 செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக ஒப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். 11

இ - ள்: அம்மானாய்! செப்பினையொத்த முலையினையுடைய உமாதேவியை ஒருபக்கத்திலுடையவனும், தென்னனும், திருப்பெருந்துறையை இடமாகக் கொண்டவனும், சிறிதும் தவறாமல் திருவடி அடைந்த அன்பர்களின் நெஞ்சத்தை உருக்கும் தன்மையனும், அழகிய பாண்டிநாட்டைச் சிவலோகமாக்கிய கங்கைதங்கிய சடையையுடைய தலைவனுமாகிய சிவபெருமானது ஆனந்தமயமான திருவடிகளுக்குத் தம்மை அடகாகக்கொடுத்த மனத்தினையுடைய அடியார்களின் உள்ளத்துள் எழுந்தருளியிருக்கும், அப்பாற்பட்டவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவனைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடியார்கள் திருவடிகளுக்கே தம்மை அர்ப்பணித்த அடியார்கள் உள்ளத்துள் இருப்பவனை எல்லாவற்றிற்கும் அப்பாலுக்கு அப்பாலாய் உள்ளவனைப் பாடுதும் என்கின்றார்.

அடியடைந்தார் அகத்தை உருக்கும் தன்மையனும் உமாதேவியை ஒருபாகத்து உடையவனும் அப்பார் சடையப்பனுமாகிய இறைவன் திருவடிகளுக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அடியார்களின் உள்ளத்துள் இருக்கும் தலைவனைப் பாடுதும் என்கின்றாள் என்பது கருத்து.

செப்பார்முலை என்பது உவமத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய் உமாதேவியை உணர்த்திற்று.

வினைப்போகத்திற்குரிய காலம் கழியுமளவும் உடலோடு நிற்கும் பரிபாகமுற்ற உயிர் வாசனாமலம் தாக்க மதி மயங்கி வழிதடுமாறித் திருவருட்சார்பை விடுத்து மருளுலகச் சார்பைப் பெற்று மயங்கவுங்கூடுமாதலின் அங்ஙனம் மயங்காது, என்றும் திருவடிச் சார்பிலேயே இருப்பார் நெஞ்சத்தினைக் கசிவிக்கும்

கருணையாளன் இறைவன் என்பார் 'தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினன்' என்றார்.

அப்பாண்டி நாடு என்பது நெஞ்சறிகட்டு அழகிய திருப் பாண்டி நாடு எனலுமாம். பாண்டி நாட்டைச் சிவலோகமாகச் செய்தலாவது அண்டங்கடந்த துவாதசாந்தப் பெருவெளியில் வாழும் ஆனந்தவாழ்வை அங்கேயே அளித்துக் களிப்பில் ஆழ்த்தினமை.

அவனது திருவடி ஆனந்தமே வடிவானது ஆதலின் அதன் வியாபகத்துள் தன் தலைமையற்ற உயிர் தாடலையோல் மடங்கிக்கிடக்க அதன் உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டு எல்லாவற்றையும் கடந்துநிற்கும் சிவபரம்பொருள் விளங்கும் என்பார் 'ஆனந்த...அப்பாலைக்கு அப்பாலை' என்றார்.

இதில் 'ஆனந்த வார்கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத் தார்' என்றதால் ஆனந்தமும் 'அப்பாலைக்கு அப்பாலைப் பாடுதும்' என்றதால் அதனல் விளைந்த களிப்பும் தோன்ற நிற்றல் காண்க.

186 மைப்பொலியுங் கண்ணிகேள் மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி யாட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கட் டோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளா நஞ்சிவனைப் பாடுதுங்காண் அம்மானாய்.

இ - ள்: மையெழுதி விளங்குகின்ற கண்களையுடைய தோழியே! கேட்பாயாக. திருமாலும் பிரமனும் இந்திரனும் தாமான பிறவியிலும் பன்றியும் அன்னமும் மயிலுமான வேறு பிறவிகளிலும் தேடி அலைய, என்னைக் கைமாறு வேண்டாத தன்னுடைய கருணையால் இப்பிறவியிலேயே ஆட்கொண்டு, இனிப் பிறவாமலேயே காப்பாற்றி, அழியாப் பொருளாகிய ஆன்மாவினிடத்து அறிவாக வெளிப்பட்டு, அவ்வறிவையே பற்றுக்கோடாகக்கொண்டு நிலைபெற்று, எல்லாப் பொருள் களும் நிலைபெறுவதற்குத் தாமே ஆதாரமாய் எல்லாவற்றிற் கும் வீடுபேறுமாக விளங்குகின்ற அகார வாச்சியனாகிய நம் சிவனைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், விண்ணோர்க்கு அரியனும் எமக்கு எளியனுய்வந்து ஆட்கொண்ட இறைவனை, எல்லாமாய்

அல்லதுமாய் இன்பவீடாய் விளங்கும் சிவனைப் பாடுதும் என்கின்றார்.

இறைவன் ஆட்கொண்ட உயிர்களின் இடமாக உணர்வே உயிராய் எல்லாவற்றிற்கும் முதலாய் இன்பவீடாய் விளங்குகின்றான்; அவனைப் பாடுதும் என்றாள் என்பது கருத்து.

மேலைத்திருப்பாட்டில் அப்பாலைக்கு அப்பாலைப் பாடுதும் என்றதைக்கேட்டு வியப்பால் கண்விரிய விழித்து நின்றாளாக, அதனை உட்கொண்டு இத்திருப்பாட்டில் தலைவி 'மைப்பொலியும் கண்ணி கேள்' என்றாள்.

திருமால் திருமாலான தெய்வத்திருவுருவோடு இருந்தும் சிவபரம்பொருளின் சிறப்பியல்பு அறியாது தம்முள் ஒருவனாக வைத்து மயங்கி அரக்கர்களால் துன்பம் நேர்ந்த காலத்துத் துணையாகச் சிவனைத் தேடி அலைந்தான்.

அயன் சத்தியலோகப் பிரமனாய் இருந்தகாலத்தும் வேதங்களை எல்லாம் முற்றக்கற்றும் நம்பன் அருளாமையால் அறிவு இழந்து கயிலைக்கண் சென்று தேடி அலைந்தான்.

இந்திரன் மூவுலக வேந்தனாக இருந்தும் சூரனால் துன்புறுத்தப்பட்ட காலத்துத் தன்னுள் வைத்துத் தொழத்தக்க நாதனைக் கயிலைக்குத் தேடிச்சென்றான். இம்மட்டோ?

திருமால் பன்றியாயும் அயன் அன்னமாயும் இந்திரன் மயிலாயும் இறைவனை இப்பூமிக்கண்வந்து வழிபட்டுத் தேடி அலைந்தனர். அங்ஙனம் அவர்கள் பல பிறவிகள் எடுத்துத் தேடி அலைய, எடுத்த பிறவியிலேயே என்னையும் இன்னருளால் ஆட்கொண்டு இனிப்பிறவாமல் காத்தானென்றுபோற்றுகிறார்.

என்றும் அழியாத நித்தியப்பொருள்கள் இறையும் உயிரும் தளையுமாகிய மூன்று பொருள்களுமாம். அவற்றுள் உணர்வே வடிவானது இறை. உணர்த்த உணரும் தன்மையது உயிர். உணர்வேயில்லாத சடம் உடல். இவற்றுள் ஞானமேவடிவான இறை, உணர்த்த உணரும் உயிரினிடமாக மணியின்கண் ஒளிபோலவும் பாலின்கண் சுவைபோலவும் வெளிப்படுகின்றது என்பார் 'மெய்ப்பொருட்கண் தோற்றமாய்' என்றார்.

அங்ஙனம் தோன்றிய மெய்ப்பொருளாகிய சிவம் அந்த உண்மைத் தன்மையையே நிலைக்களமாகக்கொண்டு நிற்கின்றது என்பார் 'மெய்யே நிலைபேறாய்' என்றார்.

எப்பொருட்கும் என்றது சித்தும் சடமுமாகிய எல்லாப் பொருள்களுக்கும் என்பதாம். அவ்வெல்லாப்பொருள்களும் தோன்றுதற்கும் நிலைபெறுதற்கும் ஒடுங்குதற்கும் தானே காரணமாயுள்ளான் இறைவன் என்பதனை 'எப்பொருட்கும் தானேயாய்' என்ற சொற்றொடரால் குறிப்பித்தார்.

நோய் தீருமளவும் மருத்துவமனையிலிருக்கும் பிணியாளனைப்போலப் பிராரத்தம் தொலையுமளவும் உலகில் உடம்பில் இருந்து உழலும் உயிர்களனைத்திற்கும் பரிபாககாலத்து வீடு பேறாய் இருந்து இறைவன் இன்புறுத்துகின்றான் என்பதனை 'யாவைக்கும் வீடாகும் சிவன்' என்பதனால் உணரவைத்தார்.

அப்பொருளாம் நம் சிவனை - "யாரும் அறிவர் அகாரம் சிவனென்று" என்றதுபோல அகர எழுத்திற்குப் பொருளாக வுள்ள சிவனை. அன்றி, வீடாகும் அப்பொருளாம் நம் சிவன் என்று ஒருதொடராக்கி வீடுபேறாகிய அப்பொருளாம் நமது சிவனை எனச் சுட்டுப்பொருள் கொள்வாருமுளர்.

இதில் பிறவாமற் காத்து யாவைக்கும் வீடாகச் சிவன் விளங்குதலை அனுபவித்து உணர்த்துதலின் ஆனந்தக்களிப் பாயிற்று.

*187* *கையார் வளைசிலம்பக் காதார் குழையாட*
*மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்*
*செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்*
*கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு*
*மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை*
*ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய்.* 13

இ - ள் : சிவந்த திருமேனியுடையவனும், வெண்ணீற்றை அணிந்தவனும், குவிந்தறியாத கையையுடையவனும், எவ்விடத்தும் செறிந்திருப்பவனும், மெய்யன்பர்க்கு உண்மைப் பொருளாய் விளங்குபவனும், மெய்யரல்லாத பொய்யர்க்கு மெய்ப்பொருளாகவன்றி விளங்குபவனும், திருவையாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய இறைவனை, கைகளிலே பொருந்திய வளைகள் ஒலிப்ப காதுகளிலுள்ள காதணிகள் அசைந்தாட, கருமையான கூந்தல் அவிழ்ந்து புரள, கூந்தலிலிருக்கும் பூக்களிலிருந்து தேன்சொரிய, வண்டுகள் ஒலிப்பப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், தான் தலைவனுதலன்றித் தனக்கு ஓர் தலைவனில்லாத தனிப்பெருமுதல்வனைப் பாடுதும் என்கின்றார்.

அம்மானாய்! மெய்யர்க்கு மெய்யனாகியும் பொய்யர்க்கு அல்லாதவனாகியும் விளங்குகின்ற தனிப்பெரும் தலைவனாகிய சிவனை வளையொலிக்க, குழை ஆட, குழல் புரள, தேன் பாய, வண்டு ஒலிப்பப் பாடுதும் என்பது கருத்து.

செய்யானை வெண்ணீறணிந்தானை என்பதற்கு முன்னர் உரைத்தாங்கு நயங்கொள்க.

சேர்ந்தறியாக் கையான் - யாரையும் குவித்து வணங்கியறியாத கைகளையுடையவன். சிவபெருமானைக் கண்டவுடன் கையைக்குவித்து அஞ்சலிசெய்வார் பலருளரேயன்றிச் சிவன் யாரையும் அஞ்சலிசெய்தறியான் என்பார் அவன் தன்மையைக் கைமேல் ஏற்றிச் 'சேர்ந்தறியாக் கையானை' என்றார். மற்றோரிடத்தும் 'ஏற்றறியாக் கையானை' என சிவன் வள்ளன்மை தோன்ற உரைக்கப்படுதலும் காண்க.

ஆகாயத்தின்கண் செறிந்திருக்கும் ஒளிபோல எங்கும் சிவன் நீக்கமற நிறைந்துளன் என்பார் 'எங்கும் செறிந்தானை' என்றார்.

அன்பர்கள் எவ்விடத்தும் இறையுண்மையை அறிந்து எல்லாப்பொருள்களினிடத்தும் அவன் வியாபித்திருப்பதைப் பல்லாற்றானும் உணர்பவர்கள் ஆதலின் அவர்களுக்கே அவனிருப்பு புலப்படும் என்பார் 'அன்பர்க்கு மெய்யானை' என்றார்.

அல்லாதார் - பொய்யன்பர். அவர்கள் இறையுண்மையைத் தமது அறியாமையால் உணர்கின்றிலர் ஆதலின் அவர்களுக்கு வெளிப்பட்டு அருளான் என்பது 'அல்லாதார்க்கு அல்லாத வேதியனை' என்பதால் உணர்த்தப்பெறுகிறது. இருளுக்கு ஒளி அறியப்படாததுபோல அறியாமைக்கு அறியப்படாத அறிவு வடிவினன் இறைவன் என்பார் 'வேதியன்' என்றார். வேதம் - ஞானம். வேதியன் - ஞானமே திருமேனியாக உடையவன். அங்ஙனம் அவன் ஞானமேயாக இருப்பினும், சகலான்மாக்கள் தரிசித்து உய்யத் திருமேனிதாங்கி ஐயாற்றிலும் உள்ளான் என்பார் 'ஐயாறு அமர்ந்தானை' என்றார்.

பாடுகின்றபோது கைவளை சிலம்புதலும், குழை ஆடுதலும் முதலிய நிகழாவாயினும் பாடி அம்மானை ஆடுகின்றபொழுது

நிகழும் ஆதலின், பாடுதும் எனக் கூறினும் பாடி ஆடுதும் எனக் கோடலே இயைபெனல் இத்திருப்பாட்டால் உணர்க.

இத்திருப்பாட்டில், ஐயாறமர்ந்தானைச் சிலம்ப, ஆட, புரளப் பாடுதும் என்பதால் ஆனந்தக் களிப்பால் விளைந்த செயல் உணர்த்தப்பெறுதல் காண்க.

188 ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை
ஊனையும் நின்றுருக்கி யென்வினையை யோட்டுகந்து
தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்தினிய [டருளும்
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற் கொண்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 14

இ-ள்: அம்மானாய்! யானை புழு மனிதர் தேவர் முதலிய மற்றைய பல பிறவிகளிலும் பிறந்து இறந்து இளைத்த என்னை ஊனையும் உருக்கி, என் பழவினைகளை ஓட்டுவதில் உகந்தருளி, தேன் பால் கருப்பஞ்சாறு இவற்றைப்போல இனிமையான தலைவனாக எழுந்தருளித் தன் அடியார் கூட்டத்து ஒருவனாக அடிமை கொண்டருளிய தேவதேவனுடைய பொலிவாகிய திருவடிகளையே பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், பலபிறவிகளிற் பிறந்து இளைத்த என்னை ஆளாகக்கொண்டு உய்வித்த இறைவனைப் பாடுதும் என்கின்றார்.

பல பிறவிகளில் பிறந்தும் இறந்தும் இளைத்த என்னை, அதற்குக் காரணமான வினைகளை நீக்கி, மிக இனிய தலைவனாக வந்து ஆட்கொண்டான்; அவன் திருவடிகளை நாம் பாடுதும் என்றாள் என்பது கருத்து.

யானை முதல் புழு ஈறான பிறவிகள் என்றது பெருமைக்கும் சிறுமைக்கும் எல்லையாகவும், மக்களாய்த் தேவராய் என்றது தன்மையாற் பெருமை சிறுமைகட்கு எல்லையாகவும் கூறியது. ஏனைப்பிறவாய் என்றது இவற்றிடைப்பட்ட எல்லாப்பிறவிகளையும் உணர்த்திற்று. இருவினைகளுக்கு ஈடாக எல்லாவகையான பிறவிகளிலும் எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதங்களிலும் பிறந்து இளைத்தேன் என்றார்.

ஊன் ஆகுபெயராக உடலையுணர்த்திற்று. உடல் உயிருக்குச் சார்பிடனாக இருந்து உயிரின் அறிவையும் ஆற்றலையும் மறைத்துத் தன்னையே பேணச் செய்வதாகலின் அதன்வலியை

ஒடுக்கி, தவத்திற்கும் நற்சார்பிற்கும் துணையாம் வண்ணம் அன்பினைத் தந்தாய்; உன்னையே நினைந்து நினைந்து உருகச் செய்தாய் அதனால் என்னுடல் இளைத்தது என்பார் 'ஊனையும் நின்று உருக்கி' என்றார்.

கறங்கும் சகடமும்போலப் பிறந்து இறந்து இளைப்பதற்கு வினையே காரணமாதலைத் திருவுளத்தடைத்து, நோய்முதல் நாடித் தீர்க்கும் மருத்துவன்போல என்வினைகளைத் தம்பெருங் கருணையால் துடைத்து ஆண்டாய் என்பார் 'என் வினையை ஒட்டுகந்து' என்றார்.

பித்தம் குறைந்தவிடத்துப் பொருள்களின் சுவை நன்கு அறியப்படுமாறுபோலப் பேரின்ப நுகர்ச்சிக்குத் தடையாய் இருந்த வினைகளும், ஆணவமலவலிமையும் குறைந்து அகன்ற விடத்து இறைவன் தேனைப் பாலைக் கன்னலை ஒத்து இனிய தலைவனாயிருப்பது விளங்கிற்று என்பார் 'தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து இனிய கோனவன்போல் வந்து' என்றார்.

சுற்றித்திரியும் மாணவனுக்கு வீட்டுவேலை கொடுத்துப் படிப்பிலேயே பதியவைக்கும் ஆசிரியன்போல எனக்கு அடிமையைத்தந்து என்மனம் புறஞ்செல்லாது பாதுகாத்தான் என்பதனை 'என்னைத் தன் தொழும்பிற் கொண்டருளும் வானவன்' என்பதால் உணர்த்தினார். இத்தகைய பேருபகாரியின் திருவடியே எனக்குப் பொலிவான துணையாவன; அதனால் அவற்றையே பாடுவோம் என்றவாறு.

தேன் பலநிறமும் பலகுணமும் பலமணமும் உடைய பல பூக்களில் வியாபித்துநின்ற இனிமையின்சேர்க்கை. அதுபோல இறைவன் புரிபாகத்தால் வேறுபட்ட பல உயிர்களிடத்தும் அவரவர்கள் தகுதிக்கேற்பக் கலந்திருந்தும், அதனை உணர்கின்ற சிவஞானியாகிய வண்டால் முழுதும் இனிமையான ஒருபொருளாகவே உணரப்படும் தன்மையனாதலின் 'தேனை ஒத்தினிய கோன்' என்றது.

பால் தன் இனிமையால் உடலை வளர்ப்பதுபோல இறைவன் சிவபோகத்திற்கு உரியதாக உயிரை வளர்த்தலின் பால் ஒத்து இனியகோன் என்றது.

கன்னல் - கருப்பஞ்சாறு காய்ச்சிய கட்டி. இது நாவாகிய பொறிவழியே புகுந்து இனிமை தருவதுபோல இறைவனும் காட்சி முதலிய பொறியுணர்விற்கும் இனியனாய்ச் சுவையைத் தருதலின் கூறியதாம்.

இத்திருப்பாடல், இறைவன் இனிமையாய் இருத்தலை உணர்ந்து பாடுதும் என உரைத்தாளாகக் கூறுதலின் ஆனந்தக்களிப்பாதல் காண்க.

189 சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினில்
இந்திரனைத் தோணெரித்திட் டெச்சன் தலையரிந்
தந்தரமே செல்லும் அலர்கதிரோன் பற்றகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டுகந்த [யான்
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறை
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். 15

இ-ள்: அம்மானாய்! தக்கன்செய்த யாகத்தில் சந்திரனைக் காலால் தேய்த்தும், இந்திரன் தோளை நெரித்து ஒடித்தும், யாக புருஷனாகிய தக்கனது தலையை அரிந்தும், வானத்திலேயே செல்லுகின்ற விரிந்த கிரணங்களையுடைய சூரியனது பல்லையுடைத்தும், திசைகள்தோறும் தேவர்கள் சிதறி ஓடச் செய்த சிவந்த மாலையை அணிந்த பொழில்கள் சூழ்ந்துள்ள தென்னன் பொருந்துறையானது மந்தாரமாலையையே பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், இறைவன் மறக்கருணை காட்டிப் பலரை ஆட்கொண்ட சிறப்புக்களை வியந்து அவன் அணிந்த மாலையைப் பாடுதும் என்கின்றார்.

சிவநிந்தைசெய்த தக்கன் யாகத்தில், சிவத்துரோகமாகிய வேள்வியின் அவியை உண்டு உவந்த அக்குற்றத்திற்காகச் சந்திரன் இந்திரன் முதலியோர் தண்டிக்கப்பெற்று அந்தப் பாவங்கள் நீங்கி உய்ந்தனர். இங்ஙனம் மறக்கருணை காட்டி ஆட்கொண்ட பரமகருணாநிதியாகிய இறைவனது மந்தார மாலையைப் பாடுவோம் என்றாள் என்பது கருத்து.

'அந்தரமே செல்லும் அலர்கதிரோன்' என்றது அவன் பூமியிலே நடக்காதவனாக இருந்தும் இத்தவறினைச் செய்தான் என்னும் இகழ்ச்சி தோன்ற நின்றது.

190 ஊனாய் உயிராய் உணர்வாயென் னுட்கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய். 16

இ - ள்: அம்மானாய்! உடலாயும் உயிராயும் உணர்வாயும் என்னுள் ஒன்றாகக் கலந்திருந்து, தேனும் அமுதும் கருப்புக் கட்டியாகிய வெல்லமுமாக இனித்து, தேவர்களாலும் அறியப்பெறாத பேரின்பவழியாகிய சிவஞானத்தை எமக்கு உதவுகின்ற, தேன் நிறைந்த கொன்றைமலர் மாலையை அணிந்த வீரனாகிய சிவபெருமான், அடியேனுக்குச் சிறப்பான தேசு வழங்கும், அளவில் அமையாத ஞானமேயாயும், கணக்கற்ற பல உயிர்களுக்கும் தலைவனாகியும் நின்ற முறைமையைக் கூறுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், இறைவன் ஒன்றாய்க் கலந்திருந்து உபகரிப்பதையும் அவனே பலருக்கும் தலைவனாதலையும் உணர்த்தி இன்புறுகின்றார்.

ஊன் சடமாதலின் அதன் தன்மைக்கு ஏற்ப அதிற்கலந்திருந்தும், உயிரும் உணர்வும் மலமறைப்பினை உடையதும் அஃதற்றதுமாக இருத்தலின் அவற்றின் நிலைக்கேற்ப அவற்றுட் கலந்தும் இறைவன் எனக்கு இனிக்கின்றான் என்பதனை 'ஊனாய்......கட்டியுமாய்' என்பதால் விளக்கியருளினர்.

வானோர் போகபூமியிற் போகதனுவினாற் பொருந்தியவர்களாதலின் சிவஞானம் கைவரப்பெறாதவர்கள். ஆதலால் அவர்களறியாத வீட்டின்ப வாயிலாகிய சிவஞானத்தை எனக்கு உதவினான் என்பார் 'வானோர் அறியா வழி எமக்குத் தந்தருளுஞ் சேவகனார்' என்றார்.

கொன்றை சிவபெருமானுக்கு அடையாளமலர். கொன்றை மஞ்சள் நிறமலர். மஞ்சள் நிறம் செம்மையும் பசுமையும் தம்முள் அளவொத்துக்கலந்த கலப்புநிறம். செம்மை சிவன் நிறம், பசுமை அம்மையின் நிறம். இவ்விரண்டுங்கலந்த பொன்மை நிறம் சிவசத்திகளின் பொது நிறம். கொன்றையின் கேசரங்கள் பிரணவ வடிவானது. பிரணவமும் அகாரமாகிய சிவமும், உகாரமாகிய சத்தியும், மகாரமாகிய மாயையும் கலந்துண்டான ஒருவடிவு. இவ்விரு காரணத்தானும் கொன்றை சிவபெருமானுக்குரிய மலராயிற்று.

சேவகனார் அறிவாய், கோனாகி நின்றவா கூறுதும் என முடிக்க. சீர் ஒளி - புகழான் விளைந்த தேசுடன் குறைவிலா அறிவாகி விளங்குகிறான் இறைவன் என்பதாம். 'கற்பனவும் இனியமையும்' என எல்லைக்குட்பட்டவை உலகியல் அறிவுகள். ஞானவடிவான இறையோ அறிந்து உணர உணரப் பேரின்பம் விளைப்பவன் ஆதலின் 'ஆனா அறிவாய்' என்றார்.

உயிர்களோ எல்லையில்லாதன. அவற்றிற்குச் சிவனே தலைவனாவன் ஆதலின் 'அளவிறந்த பல்லுயிர்க்கும் கோனாகி நின்றவா கூறுதும்' என்றார்.

'வானோரறியா வழி எமக்குத் தந்தருளும்' என ஆனந்தக் களிப்பை வெளிப்படுத்துதல் காண்க.

191 சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரடோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடி சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய். 17

இ - ள் : கொன்றைமலர் மாலையைச் சூடுவேன்; அதனைச் சூடிக்கொண்டு, சிவபெருமானுடைய திரண்ட தோள்களைக் கூடுவேன்; அங்ஙனம் கூடிப்புணர்ந்து, புணர்ச்சியால் தன்னறிவு இழந்து நின்று, அவனொடு ஊடலுறுவேன்; அவனுடைய சிவந்த வாயைப்பெறுதற்கு மனமுருகி நிற்பேன்; மனமுருகி அவனையே தேடுவேன்; தேடி அவனைப்பெறமுடியாமையாலே சிவன் திருவடிகளைச் சிந்திப்பேன்; சிந்தனையைவிட்டுத் திருவடி மறைய அப்பிரிவு தாங்காது வாடுவேன்; மீட்டும் தியானித்துப்பெற்று மனம் மலர்வேன்; ஆதலால், திருக்கரத்தில் தீயேந்தி ஆடுகின்றவனுடைய சேவடியைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், காதன்மை முற்றிய தலைவியின் நிலைபெற்று அவனையடையின் எங்ஙனம் முயங்கி மயங்குவேன் என்பதை உட்கொண்டு உரைக்கின்றார்.

சிவபோகத்தில் திளைக்க விரையும் உள்ளத்துடன் சூடுவேன் கூடுவேன் ஊடுவேன் எனத் தன்மையொருமையிற் கூறிவந்த தலைவி, 'அம்மானாய்' எனத் தோழியையும் அழைத்து, சேவடியே பாடுதும் என்றாள் என்பது கருத்து.

காதன்மை மிக்க தலைவி, தலைவன் தீண்டிய பொருள்களைத் தீண்டியேனும், சூடிக்கழித்தமலரைச் சூடியேனும் தன்னுற்றுமை தணியப்பெறுவள்; அதுபோலச் சிவன்சூடிய கொன்றைமலர் மாலையைச் சூடுவேன் என்றாள். சூடியபின்னர் நான் அவனுடைமையாயினமையால் அவன் தோளைக்கூடுவேன் என்கின்றாள். தோளழகில் ஈடுபட்ட அவள் 'திரள்தோள்' என்கின்றாள்.

கூடும்பொருளாய நானும், கூடப்படும் பொருளாய சிவனும் ஆகிய இரண்டற்று நான் இவராம்பகுதியில் அநந்நியமாகப் புணர்வேன். புணர்ச்சியில் விதும்பித் தன்வசம் அழிவேன்; பிறகு தெளிவுறுவேன்; புணர்ச்சியின்பம் மிகுவதற்காகவும், கடந்த அப்புணர்ச்சியின்பத்தை நினைவுகூரவும், மேலும் கூடி முயங்கலுறின் இன்பம் மீதூரவும் வேண்டி ஊடுவேன்; அவ் வூடல்தணிக்கத் தலைவன் காலந்தாழ்க்க, அக்காலப்பொழுதும் என்னால் ஆற்றமாட்டாமையான், அவருடைய அதரபானத்தை விரும்பி அது கிடைக்கப் பெறாமையினால் அதனை நோக்கி நெடிது நின்று மனமுருகுவேன்; பார்க்கும் அதுவும் என் மனக்கண்ணை விட்டு மறைய உள்ளம் உருகுவேன்; அதன் இன்றியமையாமை மிகுதலால் அவரைத் தேடிச் செல்வேன்; தேடிச் சிவனாகிய என்தலைவன் திருவடியையே இடையறாது தியானிப்பேன்; அது கிடைக்கப்பெறாமையால், என்னே என் பிறவி என்று வாடுவேன்; பின்னர்க் கிடைக்கப்பெறின் மலர்ச்சி யடைவேன் என முறையான ஆனந்தாநுபவங்கூறுதல்காண்க.

அவன் விரைந்து வருதற்காக அவனுடைய சேவடியைப் பாடுவோம் என்றாள்.

இங்ஙனம் அநுபவமுதிர்ச்சியை அறிவித்தலின் ஆனந்தக் களிப்பாயிற்று.

192 கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி யெண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். 18

இ - ள்: அம்மானாய்! கிளிமொழிபோலும் மெல்லிய மொழியினையுடைய உமாதேவியாரின் நிறம் விளங்கித் தோன்றும் பாதிமேனியையுடையவனும், வெளியில் தேடுதற் காக வந்த திருமாலும் பிரமனும் காணுதற்கரிய வித்தகனும், தெளிந்த தேன் போல்வானும், புகழ்நிறைந்த திருப்பெருந் துறையில் எளிமையாக வந்து, எழுந்தருளியிருந்து, எம்மீது இரங்கி, எல்லையில்லாத கருணையால் விளக்கம்பெற்ற என் உள்ளத்தினுள்ளே சிவஞானம் நிலைபெற்று நின்று ஒளிவிட, தண்ணளி தந்த அந்தணனும் ஆகிய சிவபெருமானைப் பாடு வோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், சிவஞானம்பெற்ற உள்ளத்தில் சோதியாய்ச் சிவன் எழுந்தருளிய உபகாரத்தைக் கூறிப் பாடுவோம் என்கின்றார்.

கிளிவந்த என்பதில் வந்த உவமவுருபு. கிளி மொழிக்கு உவமமாகாமையின் கிளிமொழி போன்ற மென்மொழி எனப் பொருள் கொள்க. இறைவன் திருமேனியின் இடப்பக்கத்தில் உமையம்மையின் பசுமை நிறம் கிளர்ந்து தோன்றுகின்றது என்பார் 'மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை' என்றார்.

இறைவனைத் தேடவேண்டிய இடம் சித்தமாதலின் உள்ளம் பெருங்கோயிலாகிய அங்கே தேடவேண்டியவர்கள் அஃதறியாது விண்ணிலும் மண்ணிலும் தேடத் தொடங்கினார்களாதலின், இழிவு தோன்ற 'வெளி வந்த மாலயனும்' என்றார். எங்கும் பரந்து நிறைந்த பொருளாயிருந்தும் அவர்கள் காணுதற்கு அரியனாய் ஒளித்திருக்கும் திறமையைப் பாராட்டி 'காண்பரிய வித்தகனை' என்றருளினார்.

சிவானுபவகாலத்தில் சிவபெருமான் தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திப்பானதலின் அவ்வனுபவமே சிறந்து தோன்ற இறைவனைத் தெளிந்த தேனாகவே காண்கின்றவர் 'தெளிவந்த தேறலை' என்றார். உலகத்துப் பூந்தேனாய் உள்ளவை மிக்கு உண்ணப்படின் மயக்கமும் செய்யும்: சிவத்தேன் தெளிவைத் தந்தது என்பார் 'தெளிவந்த தேறலை' என்றார் எனினுமாம்.

இங்ஙனம் உமையொருபாதியனாய்க் கயிலையிலும் மாலயனுக்கு அரியனாய் அண்ணாமலையிலும் தெளிவந்த தேறலாய்ச் சிவனடியார் சிந்தையிலும் உருவாயும் அருவுருவாயும் அருவாயும் வீற்றிருக்கும் நிலையினின்று இரங்கித் திருப்பெருந்துறையில் என்மீதுவைத்த எளிவந்த கருணையால் குருமேனி தாங்கிக் குருந்தமரத்தடியில் குடிகொண்டிருந்தான் என்பார் 'சீரார் பெருந்துறையில் எளிவந்து இரங்கி' என்றார்.

அங்ஙனம் அவனிருந்தும் அடியேன் அவனால் உய்தி பெருமையைத் திருவுள்ளத்துக்கொண்டு என்மீது திருவருள் நோக்கம் பாலித்தான். அதனால் என் உள்ளத்துள் சிறிது ஞானவொளி வீசியது. அதனையே வாயிலாகக்கொண்டு அவன் என் உள்ளத்தினுள்ளே புகுந்து சிவச்சோதி என்றும் திகழக் கருணை பாலித்தான் என்பதனை 'எண்ணரிய இன்னருளால்... அந்தணனை' என்ற பகுதியால் உணர்த்துகின்றார்.

யான் திருவருளை அடையவேண்டுமென எண்ணினும் அவ்வருள் அடைய முடியாததொன்று என்பார் 'எண்ணரிய இன்னருள்' என்று அறிவிக்கின்றார். அளவிடற்கரிய இனிய அருளால் எனினும் ஆம்.

ஒளிவந்த என்னுள்ளத்தின் என்ற பெயரெச்ச ஈறு விகாரத்தால் தொக்கது. அளி - கருணை. அந்தணனை என்றது அந்தணனுவதும் காட்டிவந்து ஆண்ட நிலையை அறிவிப்பது.

இத்திருப்பாடலில், ஒளிவந்த உள்ளத்து ஒளி திகழச் செய்த களிப்பினைத் தெரிவித்தலால் பதிகக் கருத்துத் தோன்றுதல் காண்க.

*193* *முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும்*
*பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்*
*மன்னானை வானவனை மாதியனும் பாதியனைத்*
*தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை*
*என்னானை யென்னப்பன் என்பார்கட் கின்னமுதை*
*அன்னானை யம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய்.* **19**

இ - ள்: அம்மானாய்! அயன் அரி அரன் என்ற மூவர்க்கும் முற்பட்ட முதல்வனும், யாவற்றிற்கும் முடிந்த பொருளானவனும், எல்லாவற்றிற்கும் பின்னுள்ளவனும், பிஞ்ஞகனும், போற்றப்படுகின்ற திருப்பெருந்துறையிலுள்ள மன்னனும், ஞானகாயத்தில் விளங்குபவனும் உமையொரு பாதியனும், அழகிய திருவானைக்கா என்னும் தலத்திலிருப்பவனும் தென் பாண்டிநாட்டானும், எனக்கு ஆனை ஒப்பவன் தந்தை என்னும் மெய்யடியார்களுக்கு இனிய அமுதத்தை ஒத்தவனும், அம்மானும் ஆகிய சிவனைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார் ஆன்மாக்கள் உய்திபெறும் பொருட்டுத் திருவுளங்கொண்ட இறைவன் அவரவர் தகுதிக்கேற்பக் குருமேனிதாங்கியும் உணர்வாய்க் கலந்தும் உதவும் தன்மையை உரைக்கின்றார்.

இறைவன் அருளால் படைத்தல் முதலான முத்தொழில்களைச்செய்து பதவியிலிருக்கும் பிரமன் திருமால் உருத்திரன் என்ற அம்மூவர்க்கும் முற்பட்டவனை என்றது அவர்களைப் படைப்பதும் பதவியில் நிறுத்திப் பாதுகாப்பதும் செய்பவன் இறைவனே என்பதை உணர்த்தியவாறு. விஞ்ஞானகலருள்

பக்குவமலராகிய அணுசதாசிவ அஷ்டவித்தியேசுரர்களுக்கும் பக்குவாபக்குவ மலர்களாகிய சப்தகோடி மகாமந்திரர்களுக்கும் அபக்குவமலர்களுக்கும் முன்னே விளங்குபவன் என்று உரைத்தலும் ஆம்.

முற்றுக்கும்-முழுவதற்கும். முற்றுமாய்-இறுதியாய். எல்லா அண்டங்களுக்கும் உலகங்களுக்கும் ஒடுங்குமிடமாய் விளங்குகின்றான் இறைவன் என்பதனை 'முற்றுக்கும் முற்றுமாய்' என்பதனாற் குறிப்பிடுகின்றார்.

பேரூழிக்காலத்து எல்லாம் இவ்வண்ணம் ஒடுங்க எஞ்சி நிற்பவன் இறைவன் ஒருவனே என்பார் முற்றுக்கும் பின்னானை என்றார். முற்றுக்கும் என்பதனை இடைநிலைத் தீபகமாகக் கொண்டு முற்றுக்கும் முற்றுமாய், முற்றுக்கும் பின்னானை எனக் கூட்டுக.

பிஞ்ஞகன் - தலைக்கோலம் அணிந்தவன். பேணு பெருந்துறை-அனைவராலும் இதுவே முத்தித்தலம் சிவலோகம் என்று பேணப்படுகின்ற திருப்பெருந்துறை. மன்னனை என்பது மன்னானை என எதுகைநோக்கி நீண்டது.

வானவன் - வானத்தையுடையவன். வானம் - ஞான ஆகாசம்.

இறைவன் திருவுள்ளத்து ஆற்றலாக அடங்கியிருந்த சத்தி அவன் விருப்பின்படி அவனது மேனியின் இடப்பகுதியில் பெண்ணுருவில் இயலுகின்றது என்பார் மாதியலும்பாதியனை என்றார். இயலும் என்ற சொல்லாற்றலால் பேரூழிக்காலத்து இயலாது அதனையும் தன்னுள் அடக்கும் வல்லமையுடையவன் என்பது தொனித்தல் காண்க.

அடியார்கள் எளிதாக வழிபடத் திருப்பெருந்துறையிலே எழுந்தருளியிருப்பதுபோல, திருவானைக்காவிலும் எழுந்தருளியிருப்பதை 'தென்னானைக்காவானை' என்றும், பாண்டியநாடே அவர்க்குப் பழம்பதியாதலின் 'தென்பாண்டி நாட்டானை' என்றும் தெரிவித்தார்.

என் ஆனை-எனக்கு ஆனைபோன்றவன். ஆனையுடையான் பகைக்கு அஞ்சாதவாறுபோல இறைவன் என்றும் எனக்கு அரணாவான் என்னும் குறிப்பால் 'என்னானை' என்றார். ஆனை - யானை என்பதன் மரூஉ. யானை தன் அடி அடைந்த பாகனைத் தன் தலையில் ஏற்றி வைத்துக்கொள்ளுவதுபோலத் தன் அடி

அடைந்த அடியார்களைச் சிரத்தானத்துச் சேர்த்தலின் இறைவனை 'ஆனை' என்றார். ஆனை, பாகன் தன்னைக் கட்ட விலங்கையும் தானே தூக்கிக்கொண்டுவந்து தந்து கட்டுத்தறியையும் அணைந்துநிற்பதுபோல உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும் தறியைச் சார்ந்து அன்பெனும் சங்கிலியால் தன்னைக் கட்டிக்கொள்ள அருளுதலால் ஆனை என்றார் எனலும் ஆம்.

தீநெறிக்கண் செல்லும் பிள்ளையை ஒறுத்துத் திருத்தும் தந்தையைப்போல மறக்கருணை காட்டி ஆட்கொள்ளுதலின் இறைவனை 'என் அப்பன்' என்றார். இங்ஙனம் என்னானை என்றும் என் அப்பன் என்றும் சொல்லுகின்றவர்களுக்கு இறைவன் இன்னமுதை ஒத்தான் என்றவாறும். என்னானை என்பதற்கு இடையிலுள்ள ஆன் என்பதைச் சாரியையாகக் கொண்டு என் தலைவன் எனப் பொருள் கூறுவாருமுளர்.

அம்மான் - அப்பெரியோன். மாமன் எனினும் ஆம். இப்பாட்டில் இறைவனை இன்னமுதமாக அனுபவித்தலைக் கூறுதலின் இது ஆனந்தக்களிப்பாயிற்று.

*194* *பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்*
*கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்*
*குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்*
*சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே*
*பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்*
*பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.* **20**

திருச்சிற்றம்பலம்

இ - ள்: *அம்மானாய்!* பொதுவும் சிறப்புமாகிய தன் தன்மைகள் பிறரால் அறியப்படாத பெருமானும், பெருந்துறையானும், வெற்றிபொருந்திய குதிரையின்மேல் எழுந்தருளிவந்து, தன் அடியார்கள் செய்த பாவ கருமங்களைப் போக்கிக் குணத்தை எடுத்துப்பாராட்டி அவர்களை இன்ப நெறிக்கண் செல்லவிடாது தகைத்துச் சுற்றியுள்ள சுற்றங்களின் தொடர்பை அறுப்பவனும், அவனுடைய பழமையான புகழையே இறுகப்பிடித்து உலகபாசமாகிய இதனில் பற்று நீங்கும்படி நாம் பற்றுவதற்காகத், தாம்பற்றியுள்ள பேரானந்தத்தைப் பாடுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், உயிர்கள் பாசப்பற்று அற்றுத் தன்னைப்பற்ற உதவிய பேரானந்தத்தைப் பாடுவோம் என்கின்றார்கள்.

தன் தன்மை பிறரால் அறியப்படாத பெருமானாகிய சிவன், அடியார்கள் செய்த குற்றத்தினை நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி, உலகியல் பாசத்தை ஒழித்து ஆனந்தம் வழங்கினான்; அவ்வானந்தத்தை யாம் பாடுதும் என்றாள் என்பது கருத்து.

பெற்றி - தன்மை. இறைவனது தன்மைகள் பொதுவும் சிறப்புமென இருவகைத்து. அது தடத்தம் சொரூபம் எனப் பெயர் பெறும். அவனது கலந்த நிலையை உணர்த்துவது பொதுவியல்பு. கடந்த நிலையை உணர்த்துவது சிறப்பியல்பு. இவ்வியல்புகள் அவனருளையே கண்ணாகக் காணும் அடியார் பெருமக்களுக்கல்லது பதமுத்தியில் நிற்கும் மால் அயன் முதலானோர்க்கும் ஏனையோர்க்கும் அறியவொண்ணாதன என்பார் 'பெற்றி பிறர்க்கரிய பெம்மான்' என்றார்.

இறைவன் ஏறி நடத்தும் குதிரை அறிவே வடிவான வேதக் குதிரை. அது அஞ்ஞானப் படைகளைத் துறந்து, அறிவொளி வீசி, இன்ப உலகில் இனிது அமர்த்தும் வெற்றியை வழங்குவதாதலின் அதனைக் 'கொற்றக் குதிரை' என்றார்.

அடியார்கள் தம்மைச் சிவனடியாரடியார் என்று உணர்ந்து செய்யும் குற்றங்கள் வருவினைக்கு வாய்ப்பாகா. அவை இறைவனால் குணமாகவே கொள்ளப்படும். இறைவன் குற்றமே செயினும் குணமெனக் கருதும் கொள்கை உடையவன்; பிழையெலாம் பொறுப்பவன்; பிழையெலாந்தவிரப் பணிப்பவன் ஆதலின் 'குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி' என்றார். சீராட்டு, பாராட்டு என்பனபோலக் கோதாட்டு என்பது ஒருசொல்லாய்ப் பாராட்டு என்னும் பொருள் தந்தது. கோது ஆட்டு எனப் பிரித்துக் குற்றங்களை நீக்கி என்று உரைப்பாருமுளர். மேல் குற்றங்கள் நீக்கி என வந்தமையின் அவ்வுரை பொருந்தாமை அறிக.

சுற்றிய சுற்றத் தொடர்வு - அப்பன் என்றும் அம்மை என்றும் மகன் என்றும் மனைவி என்றும் மாமன் என்றும் மாமி என்றும் நம்மை விடாது சுற்றியுள்ள சுற்றத்தாரின் தொடர்ச்சி. சுற்றமுள்ளவரையில் உலகபாசம் ஒழியாமையின் சிவானந்தம் பெறுதற்கரிதாமே என்றெண்ணி இறைவனே அப்பாசத்தை அறுத்தான் என்பார் 'சுற்றிய சுற்றத் தொடர்வு அறுப்பான்' என்றார்.

இறைவன்புகழ் தோற்றக் கேடுகளின்றி எங்கும் நிலேத்த தாதலின் தொல்புகழ் எனப்பட்டது. அதனைப்பற்றி அவனிடம் ஒன்றுகின்றபோது அகப்பற்றும் புறப்பற்றுமாகிய பாசங்கள் ஒழிய நாம் அவனையே பற்றி நிற்பதற்காக, ஆண்டவன் ஆனந்த வடிவினன் ஆயினுன் என்பார் 'தொல்புகழே பற்றி இப்பாசத்தைப் பற்று அற நாம் பற்றுவான் பற்றிய பேரானந் தம் பாடுதும்' என்ருர். "பற்றுக பற்றற்ருன் பற்றினை அப் பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு" என்ருற்போல ஈண்டு இப் பாசத்தைப் பற்றற நாம் பற்றுவான் தொல்புகழே பற்றி... பற்றிய பேரானந்தம் என விளக்கினுர்.

பற்றுவான் என்பது வினையெச்சம். நாம் பற்றுவதற்காக இறைவன் பற்றிய பேரானந்தம் என்க. இறைவன் ஆனந்த வடிவினன் என்பதைத் தமிழ்மறையும் உபநிடதமும் உரைக்கும்.

இத்திருப்பாட்டு, பேரானந்தம் பாடுதும் என்றமையால் ஆனந்தக்களிப்பாயிற்று.



பொலிதரு புலியூர்ப் பொன்செய் மன்று

# 9. திருப்பொற்சுண்ணம்

[ஆனந்தமனோலயம்]

கீர்த்தித் திருவகவல் முதலிய மூன்று திரு அகவல் களையும் அருளிச்செய்து அடிகளார் தில்லையில் எழுந்தருளி இருக்குங்காலத்து, ஒருநாள் மகளிர் சுண்ணம் இடிக்கும் காட்சி இவர் கண்ணிற்பட்டது. அம்மகளிர்கள் தில்லைக் கூத்தனது எல்லையில் புகழை உலக்கைப்பாட்டாகப் பாடிக் கொண்டு இடித்தார்கள். அதனைக்கேட்ட அடிகளாரும் தில்லைக்கூத்தன் பொருளையே புகழாகக்கொண்டு தெய்வத் திரு நிரம்ப, திருப்பொற்சுண்ணமாக இப்பதிகத்தை ஆக்கி அருளினார்.

பொற்சுண்ணமாவது, தலைமகன் திருமஞ்சனம் கொள்வதற் காகப் பொன்னோடு எண்வகை விரைப்பொருளையும் கூட்டி உரலி விட்டு இடிக்கப்படுவது. பொன்னிறமாயிருக்கும் பொடியாதலின் பொற்சுண்ணம் எனப்பட்டது.

சுண்ணம் இடிக்கும்போது, தலைவன் அரசன் தன்னையர் தந்தையர் இவர்களில் ஒருவர் புகழை உலக்கைப்பாட்டாகப் பாடிக் கொண்டு இடிப்பது வழக்கம். ஒரு தொழிலை இயற்றும்போது பாட்டுப் பாடப்படுமானால் தொழிலால் விளையும் வருத்தம் தோன் றாது; மனமும் தலைவனிடத்திலேயே ஒன்றி நிற்கும்; இன்பமும் விளையும்.

இதன் கருத்து ஆனந்த மனோலயம் என்று பழைய குறிப்புக் கூறுகின்றது. குறிப்பிற்குக் குறிப்பு எழுதப்புகுந்த அருணகிரியார் 'தானன்றி நிற்றல்' என்பர். சிவானந்தத்தால் தான்கெட்டு மனோ லயம் ஆனபிறகு தோன்றுவது சிவமன்றி ஒன்றுமின்மையின் தானன்றி நிற்றல் என்பது ஆனந்த மனோலயத்திற்கு ஏற்ற உரை யாயிற்று.

பழையவுரை "மோனந்தமாக மொழிதிருச் சுண்ணம், ஆனந்த மனோலயம் ஆமென மதிப்பர்" என்ற சூத்திரத்தை எடுத்துக்காட்டிச் சுண்ணமிடித்தலும், இடித்தற்கான சாதனங்களும், இடிக்கின்றவர் களும், இடமும், சுண்ணமிடித்தலால் பெறும் பேறும் ஆனந்த விளைவு ஆதலால் அதனைச்சொல்லும்போது, அதற்கேற்ற தெய்விக உபசாரத்துடன் இடிப்பதை அறிவிக்கிறபாட்டு என்று உரைகூறும்.

இதற்கு முற்கூறிய நவசத்திகள் தனு கரண புவன போகங்களாகிய கூட்டுப்பொருள்களை இட்டு இறைவனுக்குச் சுண்ணமிடிப்போம்; தோழிகளே வாருங்கள் என அழைப்பது என்று பழைய புராணம் கூறும்.

"சத்தி களாற்றனு கரண புவன போகங் கடமை
அத்த னுக்குச் சுண்ண மவையா மிடிக்கக் கூவுதலே
ஒத்த திருச்சுண்ணம்"

என்பது அப்பகுதி. சிந்தாமணியில் சுண்ணம் இடித்தற்கு உரிய பொருளும் இடிக்கும் வகையும் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது.

சுண்ணம் இடிக்கும்போது பாடுகின்ற பாட்டு வள்ளைப்பாட்டு, உரற்பாட்டு, உலக்கைப்பாட்டு, அம்மனைவள்ளை என்றெல்லாம் பிரபந்த இலக்கணத்துள் பேசப்படுகின்றது. அடியார்க்குநல்லார் இத்தகைய பாட்டுக்களையும் அவற்றின் இயல்புகளையும் பல்வரிக் கூத்துள் அடக்குவர்.

## அறுசீர்விருத்தம்

### திருச்சிற்றம்பலம்

**195** *முத்துநற் றாமம்பூ மாலை தூக்கி*
*முளைக்குடந் தூபநற் றீபம்வைம்மின்*
*சத்தியுஞ் சோமியும் பார்மகளும்*
*நாமக ளோடுபல் லாண்டிசைமின்*
*சித்தியுங் கௌரியும் பார்ப்பதியும்*
*கங்கையும் வந்து கவரிகொண்மின்*
*அத்தனை யாறனம் மானைப்பாடி*
*யாடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.* 1

இ-ள்: தோழியர்களே! முத்துக்கள் கோக்கப்பெற்ற நல்ல மாலைகளையும் பூமாலைகளையும் தொங்கவேண்டிய இடங்களில் தொங்கவிட்டு, முளைக்குடம் தூபம் தீபம் இவைகளையும் உரிய இடங்களில் வையுங்கள்; சத்தி சோமி பார்மகள் ஆகிய மூவரும் நாமகளோடு சேர்ந்து பல்லாண்டு பாடுங்கள்; சித்தி கௌரி பார்ப்பதி கங்கை ஆகிய நீங்கள் வந்து கவரி இரட்டுங்கள்; நாம் எங்கள் தலைவனும் திருவையாறனுமாகிய இறைவனைப்பாடி அவன் ஆடுவதற்காகப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

முதல் திருப்பாட்டாகிய இது, தலைவி தன் தோழிகளைப் பார்த்துத் தலைவனை வரவேற்கத் தக்க அட்ட மங்கலங்களை

அமையுங்கள்; பல்லாண்டு கூறுங்கள்; கவரி இரட்டுங்கள்; நாம் இறைவனைப்பாடி நீராடப் பொற்சுண்ணம் இடிப்போம் என்று கூறுவதாக அமைந்துள்ளது.

சுண்ணமிடித்தல் மகளிர்க்குரிய மங்கலத்தொழிலாதலின், நாங்கள் அதனைச் செய்கின்றோம்; தோழிகளாகிய நீங்கள் அவனை வரவேற்க மண்டபங்களை அணிசெய்யுங்கள்; உபசாரப் பொருள்களை வையுங்கள்; கவரி இரட்டுங்கள் என்று தலைவி வேண்டிக்கொண்டாளாம். முளைக் குடம் - பாலிகைக் குடம். சோமி - திருமகள். சத்தி முதலியன தோழியின் பெயர்களாம். அன்றிச், சிவசத்திகளாகவே உரைப்பாருமுளர். அடிகளார் தலைவி ஏனைய தோழிமார்களைப் பார்த்துப் பாடுவதாக இயற்றி இருத்தலின் சத்திகளையே ஏவினள் என்பதால் சிறப்பின்மை அறிக.

இதில் பரபரப்போடு தோழியரை ஏவுதலாலும் சுண்ணம் இடிப்போமென விரைதலாலும், ஆனந்தத்தில் மனம் இலயித்தலால் விளைந்த மெய்ப்பாட்டினை உணர்த்துகின்றார்.

*196* *பூவியல் வார்சடை யெம்பிராற்குப்*
*பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும்*
*மாவின் வடுவகி ரன்னகண்ணீர்*
*வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்*
*கூவுமின் தொண்டர் புறநிலாமே*
*குனிமின் தொழுமினெங் கோனெங் கூத்தன்*
*தேவியுந் தானும்வந் தெம்மையாளச்*
*செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே.* 2

இ - ள்: மாவின் வடுவின் பிளவை ஒத்த கண்களையுடைய பெண்ணே! நாம், பூக்களோடு கூடிய நீண்ட சடையினை யுடைய எம்பிரான் திருமஞ்சனம் கொள்ளப் பொன்னிற மான திருச்சுண்ணம் இடித்தல்வேண்டும் வாருங்கள்; வந்து உடனே பாடுங்கள்; தொண்டர்களை வெளியில் நில்லாமே அழையுங்கள்; ஆனந்தத்தால் ஆடுங்கள்; வணங்குங்கள்; எம் தலைவனாகிய கூத்தப்பெருமான் சிவகாமித் தேவியாரும் தானுமாக வந்து எங்களை ஆட்கொள்ள, செம்பொன் சேர்த்துச் செய்யப்பெற்ற சுண்ணத்தை இடிப்போம் என்றவாறு.

இப்பாடல், எம்மை ஆட்கொள்ளக் கூத்தப்பெருமான் தேவியும் தானுமாக வருகின்றான்; அவன் ஆட நாம் பொற்சுண்ணம் இடிப்போம் என்று தோழியர்களை அழைப்பதாக அமைந்துள்ளது.

தோழிகளே! சிவபெருமான் திருமஞ்சனம் கொள்ளச் சுண்ணம் இடிக்கவேண்டும்; வாருங்கள்; தொண்டர்கள் யாரேனும் வெளியில் தங்கிவிடப்போகிறார்கள்; அவர்களையும் அழையுங்கள்; ஆனந்தக்கூத்தாடுங்கள்; வணங்குங்கள்; தேவியும் தானுமாகக் கூத்தப்பெருமான் வரப்போகிறார்; எம்மை ஆட்கொள்ளப்போகிறார்; அவர் ஆடத் திருப்பொற்சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

தலைவி 'சுண்ணம் இடிக்கவேண்டும்' எனப் பெண்களாகிய தம் கடமையை வற்புறுத்துகிறாள் முதலடியில்.

இறைவனுக்காகத் திருப்பணி செய்யும்பொழுது வீண் பேச்சும் வம்புப் பேச்சும் பேசுதல் கூடாது ஆதலின் அவன் புகழையே பாடுமின் என்றாள். அங்ஙனம் பாடும்போது அவன் புகழ் உள்ளம் உருக்கத் தன்வசமற்று ஆனந்தாதிசயத்தால் ஆட வரும் ஆதலால் ஆடுங்கள் என்றாள் அடுத்து. இத்தனையும் செய்வதால் விளையும் பயன், தானும் தேவியும் வந்து இறைவன் எம்மை ஆட்கொள்ளுதலே என்கின்றாள்.

பாடுமின் கூவுமின் எனச் சொல்லும், தொழுமின் இடிமின் எனச் செயலும் சிவன் பணியாகவே, சிந்தையும் அவனிடமே லயமாயினமை பெறப்படுதலின் இச்செய்யுள் ஆனந்தமனோலயமாயினமை காண்க.

197 சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோனயன் றன்பெருமான்
ஆழியா னாதனல் வேலன்றாதை
எந்தர மாளுமை யாள்கொழுநற்
கேய்ந்தபொற் சுண்ணம் இடித்துநாமே. 3

இ - ள்: தோழியர்களே! அழகான திருநீற்றை நீங்கள் அணிந்து, சுண்ணம் இடித்தற்குரிய இடத்தை மெழுகி, தூய்மையான பசும்பொன்னை அவ்விடத்தில் சிதறி, மணி முதலிய நிதிகளைப்பரப்பி, இந்திரனுக்குச்சொந்தமான கற்பக மரத்தைக் கொணர்ந்து அங்கு நாட்டி, எங்கும் அழகாகக் கொழுந்துவிட்டு எரிகின்ற தீபங்களை நிரைத்து, இடபக் கொடியைக் கட்டுங்கள்; தேவர்கட்குத் தலைவனும், பிரமனுக்குப் பெருமானும், சக்கரப்படையுடைய திருமாலுக்குத்

தலைவனும், நல்ல வேற்படையைத் திருக்கரத்தில் ஏந்திய முருகனுக்குத் தந்தையும், எம்முடைய பரிபாக நிலைக்கேற்ப எம்மை ஆளுகின்ற உமாதேவியின் கணவனும் ஆகிய சிவனுக்குத் தகுந்ததான பொற்சுண்ணத்தை நாம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தோழியர்களே! இடத்தைத் தூய்மை செய்து அணி செய்யுங்கள்; நாம் சுண்ணம் இடிப்போம் என்கின்றாள்.

சிவபெருமானை எழுந்தருளச் செய்யவும் சுண்ணமிடிக்கவுமாக முதற்கண் உங்களைத் தூய்மை செய்து, நெற்றியில் திருநீறு பூசுங்கள்; பின்னர், இடத்தைத் தூய்மைப்படுத்தி அணி செய்யுங்கள்; பின், யாம் சுண்ணம் இடிப்போம் என்றாள்.

சுந்தர நீறு - அழகு தருவதாய திருநீறு. ஞானசம்பந்தப் பெருமானும் "சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு" என ஓதியமை காண்க. நீறணிதல் தம் நெற்றியில் ஆதலின் 'சுந்தர நீறு அணிந்தும்' என உம்மை கொடுத்துப் பிரித்து ஓதினார்.

இறைவன் எழுந்தருளுகின்ற இடத்தைச் சாணி கொண்டு மெழுகுதல் வேண்டும். ஈனுக் கன்று, ஈன்றணிமையையுடைய பசு, நோயுற்ற பசு, காளைக்காகக் கத்தும் பசு, காளை, கிழப் பசு இவற்றின் சாணத்தைக்கொண்டு மெழுகலாகாது ஆகலின் கறவைப் பசுவின் சாணத்தைக்கொண்டு மெழுகி என்க.

பொன் சிந்துதலும், மணி நெல் முதலியன பரப்புதலும் அணிசெய்யும் முறைகள்.

வாழை மாந்தளிர் இவைகொண்டு அணிசெய்வதுபோல இந்திரனுக்குரிய கற்பகமரத்தைநட்டு அணிசெய்யுங்கள் என்றுளாம். கொடி - இடபக்கொடி.

கோன், பெருமான், நாதன் என்பன ஒருபொருளவேனும், சொற்பொருட்காரணத்தான் வேறுபட்டனவே. கோ - தலைமை. கோன் - தலைவன். அமரர்களுக்கு அரசன். இந்திரனையும் பணி கொள்வோனுதலின் உண்மையில் தேவர்கள் அனைவர்க்கும் சிவனே அரசனுதல் தெளிவு ஆதலால் அந்தரர்கோன் என்றூர்.

பெருமான் - பெருமையையுடையவன். அயன் வேதமுதலியவற்றை ஓதி, சிருட்டியாகிய தொழிலுக்கு வேண்டிய அளவு

ஞானத்தைப் பெற்றவன். ஆயினும் அந்த அறிவுப்பெருமை அரன் தர வந்தது என்பதை அறியாஞய்ச் சிருட்டிக்கின்ரேம் எனத் தருக்கி நிற்பவன் ஆதலின் அவனையும் உய்ய ஆட் கொண்டருள இறைவன் அவனுக்குப் பெருமைதந்த பெருமா ஞக விளங்குகின்ருர் என்பார் 'அயன்தன் பெருமான்' என்ருர்.

நாதன் - காதலன். திருமால் புருஷாகாரமான சத்தியாத லின், "அரியலால் தேவியில்லை" என்பது திருமறையாதலின் அவற்குக் காதலன் என்பது போன்ற 'ஆழியான் நாதன்' என்ருர்.

முருகக்கடவுளைத் தம் நெற்றிக் கண்ணினின்று தோற்று வித்தமையின் 'வேலன் தாதை' என்ருர்.

உயிர்கள், மலச்சேர்க்கை வினைப்பாகுபாடு இவற்றின் பரிபாகத்தால் பலதரப்பட்டன ஆதலால் இறைவன் உடற்கூறு தெரிந்து மருந்துகொடுத்துப் பிணிபோக்கும் மருத்துவன் போல, பரிபாக வேறுபாடு தெரிந்து கடைக்கண்ணேக்கருளிப் பிறவிப்பிணிபோக்குவன் என்பார் 'எம் தரம் ஆள் உமையாள் கொழுநன்' என்ருர். ஆட்கொள்ளுகின்ற காலத்து அம்மை யப்பராகவே எழுந்தருளும் அவன் தன்மையை 'உமையாள் கொழுநன்' என்பதால் உணர்த்துகிருர்.

இறைவன் மாயாதீதனுய், ஞானமே வடிவானவனுதலின் அவன் திருமேனியைத் தீண்ட மாயாகாரியமான பொன்னும் பொருளும் கூட்டி இடிக்கப்பெற்ற இச்சுண்ணம் இயையாது ஆதலின், அன்பும் அறிவும் அருளும் கூட்டி இடிக்கப்பெறும் அமலமான அருள்ஞானச் சுண்ணமே வேண்டும் என்பாள் 'ஏய்ந்த பொற்சுண்ணம்' என்ருள்.

பல்லாண்டுக்காலம் பிரிந்ததலைவன் வருகிருன் என்பதைத் தெரிந்த கற்புடைக் காதலி அவனை வரவேற்க அன்று எங்ஙனம் பரபரப்பாளோ, எங்ஙனம் இடத்தை அணி செய்வாளோ, எங்ஙனம் தன்னை ஒப்பனை செய்வாளோ அங்ஙனம் அமைக்கச் சொல்லுதலின் இத்திருப்பாடல் ஆனந்தமனேலயம் ஆயிற்று.

198 காசணி மின்க ளுலக்கையெல்லாம்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்றுவாழ்த்தித்

*தேசமெல் லாம்புகழ்ந் தாடும்கச்சித்*
*திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்*
*பாச வினையைப் பறித்துநின்று*
*பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே.* 4

இ - ள்: தோழியர்களே! நம் உலக்கைகளுக்கெல்லாம் பொன்னும் மணியுமாகிய வடங்களை அணியுங்கள்; கறையாகிய உரலைப் பட்டாடைசுற்றி அணிசெய்யுங்கள்; அன்புடைய அடியார்கள் என்றும் நிலைபெற்று விளங்குக என்று வாழ்த்தி, உலகம் யாவும் புகழ்ந்து கொண்டாடும் காஞ்சிபுரத்திலுள்ள திருவேகம்பநாதரது செம்பொன் மயமான கோயிலைப் பாடி, நம்முடைய பாசங்களையும் வினைகளையும் வேரொடும் பறித்து நின்று, இறைவனைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், சுண்ணமிடித்தற்கு உரிய உரல் உலக்கைகளை அணிசெய்யுமுறைமை உணர்த்துகிறார்.

பொற்சுண்ணமிடித்தற்குரிய உரல் உலக்கைகளை அழகு செய்யுங்கள்; ஏகம்பநாதரைப் புகழ்ந்து ‘உண்மையடியார்கள் வாழ்க’ என வாழ்த்தி, எம் பாச வினைகளைப் பறித்து நிற்க இறைவனைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றார் என்க.

காசு - பொன்; மணியுமாம். காசு அணிமின்கள் என்றது, தலைவனுக்குச் சுண்ணமிடிக்கும் உலக்கையை அழகுசெய்யுங்களென்பதாம். உலக்கையை அழகு செய்தலாற்போந்த நயம் இறைவன்மாட்டுள்ள அன்பேயன்றி வேறன்று என்க.

காம்பு - பட்டாடை. உரலின் அரையில் ஆடை சுற்றுதல் மரபு. காம்பு-பூங்காம்பு இலைக்காம்பு எனப் பொருள்கொண்டு பூவும் இலையும் காம்புமாகச் செய்யப்பட்ட ஆடை என்பாரும் உளர். கறை உரல்: ஒருபொருட் பன்மொழி. குருதிக் கறையெனப் பொருள்கொண்டு, குருதிபோலச் சிவந்த உரல் என்பாரும் உளர். காவிப்பட்டை தீட்டப்பெற்ற உரல். நேசம் - நேயம் என்பதன் போலி. நேயம் - தைலதாரைபோன்ற இடையீடுபடாத அன்பு. ‘அடியார்கள் நீடு வாழ்க’ என வாழ்த்திப் பாடி இடித்தும் என்றார் என்க. அடியார்கள் நீடு வாழ்வார்களாயின் அவர்கள் சார்பினால் பல கோடி உயிர்கள் இறையருள் சார்ந்து உய்திபெறுமாதலின் அவர்களை வாழ்த்தியது என்க. ஞானசம்பந்தப் பெருமானால் எண்ணாயிரம் அடியார்கள் வீடுபெற்றதுபோல என்பதாம்.

தேசம் - மொழியாலும், நாகரிகத்தாலும் வேறுபட்ட பல தேசங்களும். ஆடும் - கொண்டாடும். வாதவூரடிகள்காலத்து. காஞ்சிபுரம் மிகச் சிறந்து விளங்கியதெனலாம். 'கச்சி' என்பது தலப் பெயர். ஏகம்பம் என்பது கோயிற்பெயர். ஏகாம்ரம் என்பதன் திரிபு. ஒற்றை மாமரம் என்பது பொருள். காஞ்சி புரத்தில் இறைவன் ஒப்பற்ற ஒற்றைமாவினடியிலே எழுந் தருளியிருக்கின்றானதலின் அக்கோயில் 'ஏகம்பம்' என்றும், இறைவன் ஏகம்பநாதன் என்றும் வழங்கப்பெற்றார்.

செம்பொன் கோயில் - செம்பொன்னாலாய கோயில். பொன் நிறமான கோயில் என்றுமாம்.

பாச வினை - பற்றுக்காரணமாக விளையும் இருவினை. யான் எனது என்னும் பற்றே வினைவினை வித்தாகலின் இங்ஙனம் கூறினார். பாசமும் வினையும் எனலும் ஆம். 'பறித்து' என்ற வினைச்சொல்லின் நயத்தால் பாசவினை ஒரு முட்கொடி அல்லது முள்மரம்போன்றது என்பதும், அதனை மீளவும் முளைக்காத வாறு வேரொடும் பறித்து என்பதும் அறியக்கிடத்தல் காண்க.

பாசவினைகளே இறப்பிற்கும் பிறப்பிற்கும் காரணமாதலின் அதனையறுக்கவே உயிர்களுக்கு இறைவன் அருளொளியில் என்றும் நிலைபெற்று நிற்கும் பேறு கிடைத்தலின் 'நின்று' என்றார்.

முன் 'செம்பொற்கோயில் பாடி' என்ற அடிகள், ஈண்டு 'வினையைப் பறித்து நின்று பாடி' எனச் செயப்படுபொருள் தோன்றக் கூறவில்லையாயினும் செம்பொற்கோயிலுள் இருக்கும் ஏகம்பநாதனைப்பாடி என வருவித்து உரைக்க.

சுண்ணமிடித்தல் மெய்த்தொழிலாகவே, பாடுதல் என்ற வாயின்தொழிலும் கூறி,இவற்றிற்கு அடியான மனத்தின் தொழி லாகிய நினைவும் தோன்றக் கூறினார்.

பாடுதலும் ஆடுதலும் பணிபுரிதலும் சிவானந்தப்பேற்றால் விளைந்த ஒருமைப்பாடு ஆதலின் இச்செய்யுள் பதிகக் கருத் திற்கு இயைபுடைத்தாயிற்று.

**199** *அறுகெடுப் பாரய னும்மரியும்*
*அன்றிமற் றிந்திர னோடமரர்*
*நறுமுறு தேவர்க ணங்களெல்லாம்*
*நம்மிற்பின் பல்லதெ டுக்கவொட்டோம்*

செறிவுடை மும்மதி லெய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 5

இ - ள்: புன்முறுவல் பொருந்திய சிவந்த வாயினை யுடைய பெண்களே! இறைவனுடைய திருமுடியில் சூட்ட அறுகு எடுப்பவர்களாகிய பிரமனும், திருமாலும் அல்லாமல் மற்றுமுள்ள இந்திரனோடுகூடிய தேவர்களும் நறுமுறுக்கின்ற மற்ற தேவர்கள் கூட்டங்கள் எல்லாம் நமக்குப் பின்பல்லது முதற்கண் எடுக்கவிடோம்; உறுதியுடைய முப்புரங்களையும் ஓரம்பால் எய்த வில்லாளனாகிய ஏகம்பனின் செம்பொன்னா லாகிய கோயிலைப்பாடி மூன்று கண்களையுடைய நம் தந்தை போல்வானாகிய சிவனுக்குத் திருமஞ்சனம் கொண்டருளுவ தற்காகப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், தேவகணங்கள் நமக்குப் பின்பு அறுகு எடுக்கும்படி நாமே எடுப்போம்; முதலில் முக்க ணப்பன் ஆடப் பொற்சுண்ணம் இடிப்போம்; வாரீர் எனத் தலைவி கூறியதாகச் சொல்கின்றார்.

தேவர்கள்கூட்டத்திற்கு முன்பே நாம் அறுகு எடுத்தல் வேண்டும் ஆதலால் பொற்சுண்ணத்தை முதலில் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

இறைவனுக்குப் பொற்சுண்ணம் இடிக்கும் பணியைச் செய்கின்ற காலத்தில், இப்பேறு எமக்குக் கிடைத்ததே என்ற பெருமகிழ்ச்சியோடு இடிக்கவேண்டும் என்பாள் தோழியர் களைப்பார்த்துப் பணியில் ஈடுபடுமுகத்தான் உயர்த்த 'முறுவற் செவ்வாயினீர்' என்றாள்.

இறைபணி புரிகின்றகாலத்துப் பேசுதலும் வாய் எச்சில் தெறிக்கக் கூவுதலும் பெருநகை செய்தலும் கூடாது ஆதலின் 'முறுவற் செவ்வாயினீர்' என்றாள். மேலும் முறுவலென்ற சொல் நற்குலத்துப் பிறந்த கற்புடைமங்கையர் வாய்விட்டு உரக்கச் சிரித்தலாகாது என்ற மரபையும் விளக்கி நின்றது.

தேவர்களில் அயனும் அரியும் அறிவாலும் ஆற்றலாலும் சிறந்தவர்கள். அவர்கள் இறைவன் திருமஞ்சனம் கொண்டரு ளுவதற்கு முன்பு இறைவன் சிரத்தில் அறுகு எடுத்துச் சாத் துவர். அவர்களேயன்றி இந்திரன் முதலிய திக்குப்பாலர்கள்

எண்மரும் சாத்த முற்படுபவர். அதுகண்டு மாலும் அயனும் இந்திரனும் என்ன உயர்வு? அவர்கள் ஏன் முதலில் அறுகு எடுக்கவேண்டும்? என்று தமக்குள் நறுமுறுக்கின்ற தேவர்கள் அறுகு எடுக்க முற்படுவார்கள். நாம் அவர்களை முந்தவிடக் கூடாது; அவர்களுக்கு முன்பாக நாமே அதைச் சாத்திவிட வேண்டும்; அந்தச் சிறப்பு நமக்கே உரியது என்பாள் 'அறுகு எடுப்பார் அயனும் அரியும் அன்றி மற்று இந்திரனோடு அமரர் நறுமுறு தேவர்கணங்கள் எல்லாம் நம்மிற் பின்பு அல்லது எடுக்க ஒட்டோம்' என்றாள்.

மங்கலநீராட்டுவார், ஆடற்குரியார் சென்னியில் அறுகம் புல்லை நெய்யிலேனும் பாலிலேனும் தோய்த்துவைத்தல் மரபு. சீவகசிந்தாமணியுள் ஆய்ச்சியர்கள் கோவிந்தை என்பாளுக்கு நெய்யாட்டிய நிகழ்ச்சியை அறிவிக்கும்பொழுது ஒரு படியுள் இருந்த நெய்யில் ஈனுக்கன்றுதின்று ஒழிந்த புல்லை எடுத்துத் தோய்த்து 'ஒருழிக்காலம் ஆவும் தொழுவும்போல நீடுவாழ்க' என்று வாழ்த்தி அறுகு சூட்டினார்கள் என்ற செய்தி கூறப் பெற்றுள்ளது.

"நாழியுள் இழுது நாகுஆன் கன்றுதின்று ஒழிந்த புல்தோய்த்து
ஊழிதொறு ஆவும் தோழும் போன்று உடன் மூக்க என்று
தாழிருங் குழலி னாளை நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொள் ஆய்ச்சியர் ஆட்டி னாரே"

என்பது அப்பாடல்.

இவ்வறுகெடுக்கும் வழக்கத்தில் முதன்முதலில் தக்கோரும் பின்னர் ஏனையோரும் முறைவழுவாமல் எடுப்பது வழக்கம். மாறி எடுத்தால் மனம் வேறுபட்டுப் பகைவிளைதலும் உண்டு. அயன் முதலோர் முறையே அறுகெடுக்க முற்படத் தேவர்கள் நறுமுறுத்தார்கள் என்பது அவர்கட்குள்ள தகுதி ஒருவாற்றான் தமக்குண்மையும் தமக்குள்ள இழிவும் அவர்க்கு உண்மையும் கருதி என்க. தேவர்களை முதலில் அறுகெடுக்க வொட்டோம் என்று தலைவி கூறியதன் நோக்கம், இறைவனுக்கு வழிவழி அடிமை பூண்டு சரியையாதி பதிபுண்ணியங்களையே செய்து பரிபாகமுற்ற தமக்குமுன்பு சூட்டப், பதவிகளில் சிக்கி அறிவு திரிந்து ஆணவம் மேலிட்டிருக்கும் அவர்கட்குத் தகுதியில்லை என்பதைக் கருதியே ஆம்.

கலிங்கத்துப் பரணியிலும் விசயதரனுக்கு முடிசூட்டுவிழா முற்றிய பின்பு, மன்னர்கள் அனைவரும் அறுகிட்டு வணங்கினர் என்ற செய்தி கூறப்பெற்றுள்ளது.

"அறைகழல் அரசர் அப்பொழுது அடிமிசை அறுகு எடுத்திட
மறையவர் முடி எடுத்தனர் மனுநெறி தலையெடுக்கவே"

என்ற பாடல் அதனை அறிவிக்கும்.

அயனாதியர் அறுகெடுத்து வணங்கினர் என்று உரை கோடலும் ஆம். இங்ஙனம் கொள்ளாது அயனும் அரியும் அறுகெடுப்பார், இந்திரனோடு அமரர் அன்றி நறுமுறு தேவர் கணங்கள் எல்லாம் நம்மில் பின்பு அல்லது எடுக்கவொட்டோம் எனக் கூட்டிப் பொருள் காண்பாருமுளர். அங்ஙனம் கொள்ளின், ஈண்டுப் பெண்களாகக் கூறப்படும் பரிபாகமுற்ற ஆன்மாக்களைக் காட்டிலும் அயனும் அரியும் உயர்ந்தவர்களாகக் கருதப்படுதலின் அவ்வுரை பொருந்தாது என்க.

இப்பகுதிக்கு 'தேவர்கள் அறுகும் அட்சதையுங்கொண்டு விதிப்படி லயாங்க போகாங்கமாகச் சிரம் முதல் பஞ்சப்பிரம சடங்க பஞ்சாக்கர நாமத்தால் பூசிக்க, ஏனைய தேவர்கள் முன் பின் பிறழ்ந்து ஏனையோரைத் தடுத்துத் தாமே முன்னோடிப் பூசிப்பார்கள்' என்று பழைய உரை கூறும்.

செறிவு - திண்மை. செறிவுடை மும்மதில் - அனைத்துலகையும் அழிக்கவல்ல ஆற்றல்கொண்ட திரிபுரங்கள். எய்த வில்லி - அவற்றை ஓரம்பினால் எய்து அழித்த மேருமலையாகிய வில்லை உடையவன்.

இறைவற்கு முச்சுடரும் முக்கண்கள் ஆதலின் அவற்றால் ஒளியும் திறலும் உள்ளீடும் வளர்ச்சியும் உலகிற்கு உளதாம் என்பதனை உட்கொண்டு இறைவனை அம்மை அப்பன் எனப் பாராட்டினார். தீக்குத் தெறலும், மதிக்கு நெல் முதலிய தானியங்களுக்கு உள்ளீடு உதவுதலும், ஞாயிற்றுக்குப் பயிர்களை வளரச் செய்தலும், மூன்றற்கும் ஒளியுடைமையும் குணங்களாகக் கொள்க.

'இப்பணியில் பங்கு பற்றவும் பார்க்கவுமாகப் பல அடியார்கள் வந்து கூடினார்களாதலின் நாம் மகிழ்ந்து சுண்ணம் இடிப்போம்' என்று தலைவி கூறியதாக அறிவிக்கின்றார்.

சிவனருள் பெற்ற களிப்பால் மனம் ஒன்றி, 'நாமே முதற்கண் அறுகெடுப்போம்; சுண்ணம் இடிப்போம்' எனக் கூறுதலின் இப்பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாதல் தெளிக.

200 உலக்கை பலவோச்சு வார்பெரியர்
 உலகமெ லாமுரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்துநின்றார்
 காணவு லகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை யாண்டுகொண்டு
 நாண்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
 மகிழ்ந்துபொற் சுண்ணம் இடித்துநாமே. 6

இ - ள்: நங்கையர்களே! பெரியவர்கள் இப்புவனமெல்லாம் உரலாக இருந்தாலும் காணாது என்று சொல்லும்படிப் பல உலக்கைகளைக்கொண்டு ஓங்கிக் குத்துவார்கள்; இதில் கலந்துகொள்ள மெய்யடியார்கள் பலர் உலகம் இடம்போதாதென்னும்படிக் காணவந்து நின்றார்கள்; அடியேங்களை நலமுற, ஆண்டுகொண்டு, அன்றலர்ந்த செந்தாமரை போன்ற திருவடிகளை நாங்கள் சூடி மகிழக் கொடுத்து உதவிய இமயமலையின் மருகனாகிய சிவனைப் பல்காலும் பாடி மகிழ்ந்து பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இப்பணியில் பங்குபற்றவும் பார்க்கவுமாகப் பல அடியார்கள் வந்து கூடினார்கள் ஆதலின் நாம் மகிழ்ந்து சுண்ணம் இடிப்போம் என்று தலைவி கூறியதாக அறிவிக்கின்றார்.

உலகமுழுதும் ஒரே உரலாக இருப்பினும் காணாது என்னும்படிப் பெரியோர் அனைவரும் உலக்கை பிடித்தனர்; மெய்யடியார்கள் இப்பணியைக்கண்டு மகிழ உலகமுழுதும் இடமில்லையாம்படி வந்து குழுமினர்; ஆதலால் நாம் அனைவரும் கலக்க ஆட்கொண்ட மலையான் மருகனைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

பெரியர் - செயற்கரிய செய்வாராகிய சிவனடியார்கள். இப்பணியே செயற்கரிய பணியாம் என்க. எல்லோரும் சேர்ந்து ஒருங்கு இடிப்பதானல் உலகமே உரலாக இருப்பினும் இடம் போதாது என்றதாம்.

கலக்க என்பதற்கு அடியார்கள் தம்முட்கலக்க, இறைவன் திருவடியிற் கலக்க என்றெல்லாம் பொருள் காண்க. வந்து நின்றார் என்பது தமக்கு இடமின்மையால் காத்து நின்றார் என நயம் தோன்ற நிற்றல் காண்க.

நலக்க - நன்மைமிக. உயிர்களாகிய எங்கட்குள்ள மல மாயா கன்ம சம்பந்தமான தீமைகள் யாவும் அகன்று சிவஞா னப்பேருகிய நன்மை மிக என்பதாம்.

அன்று அப்பொழுதலர்ந்த செந்தாமரைபோல இறைவன் திருவடி, நிறமும் அழகும் மணமும் பயனும் பெற்றதென்பார் 'நாண்மலர்ப் பாதங்கள்' என்றார். அன்றலர்ந்த பூவிலுள்ள புதுத்தேனையுண்ண வண்டுகள் வந்து விழுதல்போலப் பலரும் வந்து மொய்க்கின்றனர்; எங்களுக்கோ அம்மலரைச் சூடிக் கொள்ளும் பேறு கிடைத்தது என்பார் 'சூடத்தந்த மலைக்கு மருகன்' என்றார். பாடிப்பாடி என்ற வினையெச்ச அடுக்கு தம் ஆர்வமிகுதியைக் காட்டியது.

பழையவுரை பெரியோர் என்பதற்கு வைந்தவ சரீரிகளாகிய கர்த்தாக்கள் என்றும், மாயாபுவனமே உரல் என்றும், ஞானமே உலக்கை என்றும் கூறும். இதன்கருத்தாக அநுபூதி பெற்ற அபேத அத்துவித அன்பு இன்பு அடிமைபெற்றவர்கள் இவ் வுலகமே உருவமென நிட்டையுற்றார்கள் என்று கூறும்.

பாதங்கள் சூடத்தந்த மலைமருகனைப் பாடிப்பாடி மகிழ்ந்து இடிப்போம் என்றது ஆனந்த மேலையத்தால் வினைந்தமை கொண்டு பதிகக் கருத்தின் இயைபு எளிதில் விளங்குதல் காண்க.

**201** சூடகம் தோள்வளை யார்ப்பவார்ப்பத்
தொண்டர்கு ழாமெழுந் தார்ப்பவார்ப்ப
நாடவர் நந்தம்மை யார்ப்பவார்ப்ப
நாமும் அவர்தம்மை யார்ப்பவார்ப்பப்
பாடக மெல்லடி யார்க்குமங்கை
பங்கின னெங்கள் பராபரனுக்
காடக மாமலை யன்னகோவுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 7

இ - ள்: கைவளையும் தோள்வளையும் பலகாலும் ஒலிக்க, அடியார் கூட்டங்கள் எழுந்து ஆரவாரிக்க, நாட்டுமக்கள் நம்மை நகைத்து ஆரவாரஞ்செய்ய, அவர்களை நகைத்து நாமும் ஆரவாரிக்க, மெல்லிய திருவடியின்கண்ணே பாடகம் என்னும் அணியானது கிடந்து ஒலிக்கும் உமாதேவியாரை இடப்பாகத்தில் உடையவனும் எங்கள் பராபரனும் மேரு மலையை ஒத்த தலைவனுமாகிய இறைவன் திருமஞ்சனம் கொள்ளப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், கைவளை தோள்வளை முதலியன ஒலிக்க, பொற்சுண்ணம் இடிப்போம் என்று தலைவி கூறியதாக அறிவிக்கின்றார்.

'ஆர்ப்ப ஆர்ப்ப' என்ற அடுக்குகள் களிப்பால் விளைந்த எக்களிப்பைக் காட்டிநிற்கின்றன.

உலக்கையை ஓச்சுவதால் சூடகமும் தோள்வளையும் ஒலிக்கின்றன. அடியார் கூட்டங்கள் பெருமானைத் திருமஞ்சனம் செய்விக்கும் பேற்றையும், காணும் பேற்றையும் பெற்றேமே என்று ஆனந்தத்தால் ஆரவாரிக்கின்றார்கள்.

மல மாயையில் கட்டுண்டு, பொறி இன்பமே பெரிதென்று எண்ணும் பாமரர்களாகிய நாட்டவர்கள் 'இவன் என்ன சிவப் பித்தன்' என்று நம்மை நகையாடி, கைகொட்டி எக்களித்து ஆரவாரிக்கின்றார்கள்; நாம், சிவானுபவப்பேறு இவர்கள் பெற்றிலரே! இவர்தம் அறியாமை பெற்றிருந்தது என்னே! என்று ஆரவாரிக்கின்றோம்; இங்ஙனம் எல்லாரும் ஆரவாரிக்க இறைவன் ஆட, சுண்ணம் இடிப்போம் என்றாள்.

இறைவனே உமையொரு பாதியன்; மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன்; பொன்மலை ஒத்தவன். கோவுக்கு ஆட என்றாராயினும் கோ ஆடுவதற்கு எனப் பொருள் காண்க.

உலகவர் பழிக்கினும் நமது கடமையைச் செய்வோம் என்கின்றமையின் ஆனந்தமேலையமாயிற்று. ஆனந்தத்தில் லயப்பட்ட மனம், உலகவர் ஏச்சுக்கும் பேச்சுக்கும் செவி சாய்க்காது, சிவமயமாகவே விளங்கும் எனத் தெளிக.

**202** *வாட்டடங் கண்மட மங்கைநல்லீர்*
*வரிவளை யார்ப்பவண் கொங்கைபொங்கத்*
*தோட்டிரு முண்டந் துதைந்திலங்கச்*
*சோத்தெம்பி ரானென்று சொல்லிச்சொல்லி*
*நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி*
*நாயிற்க டைப்பட்ட நம்மையிம்மை*
*ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி*
*ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.* *8*

இ - ள் : ஒளிபொருந்திய அகன்ற கண்களையும், இளமையையுங்கொண்ட நல்ல மங்கையர்களே! கையிலுள்ள கீற்றுக்களோடு கூடிய நல்ல வளையல்கள் ஒலிக்க, வளவிய கொங்கைகள் சிறந்துதோன்ற, தோள்கள் இரண்டும் அழகிய தலையைச்

சேர்ந்து, எம்பெருமானே! தோத்திரம் என்று சொல்லிச் சொல்லி அன்றலர்ந்த தாமரைமலர் போன்ற பாதங்களைக் காட்டி, நாயினும் கடைப்பட்ட நம்மை இப்பிறவியிலேயே ஆளாகக்கொண்ட முறைமைகளைப் பாடிப்பாடி, அவன் ஆடுவதற்காகச் சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தோழியர்களே! எம் பெருமானுக்குத் தோத்திரம் சொல்லி, நம்மை இம்மையிலேயே ஆட்கொண்ட முறைகளைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்று தலைவி கூறியதை அறிவிக்கின்றார்.

எமது பெருமானுக்குத் தோத்திரங்கள் சொல்லி, அவன் நம்மை ஆட்கொண்ட முறைமைகளைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

தோழியர்களுக்குச் சுண்ணம் இடிப்பதிலுள்ள ஆனந்தம் கண்களின்வழியாக வெளிப்பட்டது என்பார் 'வாள் தடங்கண் மடமங்கை நல்லீர்!' எனப் பாராட்டினாள். மங்கையர் கண்களுக்கு ஒளியும் அகலமும் இருப்பினும், அறிந்தும் அறியாதாள் போல இருக்கும் மடப்பமும், மங்கையருள் நல்லவராதற்கு உரிய இலக்கணமென்பார் இங்ஙனம் கூறினாள். வாள்போன்ற அகன்ற கண் எனலுமாம். ஈண்டு ஒருநங்கை மற்ற மங்கையர்களைப் பார்த்து விளிக்கின்றாராதலானும் காமக் குறிப்பிற்காக அன்றிக் கடவுட்பணிக்காக அழைக்கின்ற காலமாதலானும் வாள்போலும் என உவமத்தொகை கொள்ளுதல் ஏலாது.

வரி - கீற்று. அது வளையலுக்கு அடையாய் வந்தது. வண்கொங்கை என்பதன் பொருளை "உண்மதர்த்துக் கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து ஈர்க்கிடைபோகா இளமுலை" என்பதாலுணர்க. இருகைகளாலும் உலக்கையைப்பற்றி உயர்த்தித் தாழ்த்தும் போது தோள்கள் இருமருங்கும் தலைக்கு நேராக உயர்தலும் கொங்கைகள் எடுப்பாகத் தோன்றலும் வளை ஆர்த்தலும் இயல்பாதலின் இங்ஙனம் கூறினார். இதற்கு, தோள்களிலே தீட்டிய திருநீறு படிந்து விளங்கவும் என உரைப்பர் சிலர். திருநீறு எனற்கேற்ற சொல் இல்லாமையும் அப்பொருளுக்கு ஈண்டு ஒரியையின்மையும் உணர்க. சோத்து - தோத்திரம் என்பதன் திரிபு.

நான்மலர் - அன்றலர்ந்த மலர். நாட்கொண்ட நாண் மலர் - பலநாள் அரும்பாய், போதாய், மலராய், படிப்படியே

வளர்ந்து வந்து உரியகாலத்து மலர்ந்த மலர். நாண்மலர்ப் பாதம் என்பதற்கு முன்னர் உரைத்தாங்கு உரைக்க.

பருவமல்லாத காலத்திலும் மலர்கள் பூத்தலும் உண்டு. ஆயினும் உரியகாலத்து மலர்ந்தவைபோல மணமும் நிறமும் உடையன ஆகா ஆதலின் நாட்கொண்ட நாண்மலர் என்றார். 'நாள் அல்லா நாள் பூத்த நன்மலர்' என்பதும் இக்கருத்தை விளக்கும்.

நாயிற்கடைப்பட்ட நம்மை என்றது வினையாலும் எடுத்த உடலாலு கீழ்ப்பட்டிருந்தும் தலைவனிடம் நன்றி மறவாத குணமுடைய நாயைப் போலாது, புண்ணிய பாவங்களையும் சுவர்க்க நரகங்களையும் பகுத்து அறியும் உயர்ந்த பிறவியைப் பெற்றும் அதன் பயன் கொள்ளாது, தலைவனை அறியாது தீவினைகளையே செய்து ஒழுகலின் இங்ஙனம் கூறினார்.

இவ்வுயிர், தாழ்வு பல உடைமையால் மறுமையில் இன்னும் இழிநிலைமை எய்திவிடுமோ என்ற கைமாறு வேண்டாத கருணையால் இப்பிறப்பிலேயே குருவாக வந்தும், நரிபரியாக்கியும், பரிநரியாக்கியும் ஆட்கொண்டார்; அவர் ஆட்கொண்ட வண்ணங்களைப் புகழ்ந்து புகழ்ந்து பாடிப்பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள்.

காற்றில் ஒலிக்கலவையும் சுண்ணத்தின் மணமும் கலக்கும் இயல்பின ஆகலின், பாடி நாம் இடித்தும் எனச் சொல்லினள் தலைவி என்பதாம்.

இத்திருப்பாட்டில் 'சோத்து சொல்லிச் சொல்லி, வண்ணங்கள் பாடிப் பாடி' என்பன ஆனந்தமேலையத்தை அறிவித்தன ஆதலான் பதிக நுதலிய பொருளினையபு காண்க.

**203** வையக மெல்லாம் உரலதாக
மாமேரு வென்னும் உலக்கைநாட்டி
மெய்யெனு மஞ்சள் நிறையவட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐயன் அணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 9

இ - ள்: உலகம் யாவையும் உரலாகவும் உலகிற்கு மைய ஆணியாகிய மேருவை உலக்கையாகவும் நாட்டி, உண்மை

அன்பு என்னும் மஞ்சளை நிறைய இட்டு, மேன்மை சிறந்த தென்னனும் பெருந்துறையானுமாகிய சிவனுடைய திருவடியைப் பாடிப்பாடி, செம்பொன் மேருவாகிய உலக்கையை வலக்கையால் இறுகப்பற்றி, குருவாகிய தில்லைவாணனுக்கு ஆடப் பொற்சுண்ணம் இடிப்போம் நாம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், உலகமே உரலாகவும், மேருவே உலக்கையாகவும் கொண்டு உண்மை என்னும் மஞ்சளை நிறைய இட்டு, சிவன் புகழைப் பாடிச் சுண்ணமிடிப்போம் எனத் தலைவி கூற்றாகக் கூறுகின்றார்கள்.

இப்பாடல் சுண்ணமும், அதற்காம் சாதனங்களும், உலகமும் மேருவும் உண்மையன்புமேயென அவற்றின் தத்துவம் உணர நின்றமை காண்க. எல்லா உலகமும் மாயாகாரியமாதலின், அனைத்தும் ஒருரலாகக் கொண்டார். மேருமலையையும் செம்பொன் உலக்கையாக உணரவைத்தார். இடிக்க இடும் பொருள் மஞ்சள். அது உண்மையன்பு என்றார். தெய்வப்பணி ஆதலின் வலக்கைபற்றி இடித்துமென்றார்.

இது 'பாடிப் பாடி இடித்தும்' என ஆனந்தாதிசயத்தால் பலமுறை கூறி இன்புறுதலின் ஆனந்த மனோலயமாயினமை காண்க.

**204** முத்தணி கொங்கைக ளாடவாட
மொய்குழல் வண்டின மாடவாடச்
சித்தஞ் சிவனொடு மாடவாடச்
செங்கயற் கண்பனி யாடவாடப்
பித்தெம்பி ரானொடு மாடவாடப்
பிறவி பிறரொடு மாடவாட
அத்தன் கருணையொ டாடவாட
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 10

இ - ள்: முத்துவடங்களையணிந்த கொங்கைகள் அசைய அசைய, அடர்ந்த கூந்தலில் வண்டுகள் பலகாலும் எழுந்து ஒலிக்க, நம் மனம் அதில் கோயில்கொண்டுள்ள சிவனொடும் ஆடஆட, சிவந்த கயல்மீன்போன்ற கண்களினின்று ஆனந்தக் கண்ணீர் ததும்பி ஆடஆட, நாம் இறைவன்மீது கொண்ட பித்து அவனோடும் பலகால் ஆட, உலகிலுள்ள ஏனையோருக்கும் பிறவி அசைவுகாண, தலைவனாகிய சிவன் தன் கருணையாகிய சத்தியோடும் ஆட ஆட, அவன் திருமஞ்சனம் கொள்வதற்காகப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இறைவன் ஆட, எல்லாம் ஆட, நாம் சுண்ணமிடிப்போம் என்கின்றாள்.

உலக்கைபற்றி இடிக்கும் விரைவில் இவைகள் யாவும் ஆடுகின்றன என்பதாம். இறைவனுக்குத் திருமஞ்சனம் ஆடப் பொற்சுண்ணம் இடித்துக் கொடுக்கின்ற அச்சிவப்பணியால் பெண்மையினம் மிகமிக விரும்புகின்ற அழகு மிகுவதோடு, மறுமைக்கு வேண்டிய சிவனருளும் சித்திக்கும் என்றலுமாம்.

சித்தம் ஆடும்போது அதனைக் குடிலாகக்கொண்ட சிவனும் ஆடுவன் என்பார் 'சித்தம் சிவனொடும் ஆட ஆட' என்றார். பித்து எம்பிரான் • பித்தனாகிய எம்பிரான். நமது சித்தத்தில் உள்ள பித்து அதற்குக் காரணமான பெருமானோடு ஆட எனலுமாம்.

பிறவி பிறரொடும் ஆட ஆட - பிறவியாகிற நோய் இறைபணி செய்யாத பிறரொடும் ஆட என்பாரும் உளர். நாம் சுண்ணம் இடித்துப் பாடுவதைக் கேட்ட பிறருடைய பிறவி அவர்களோடும் அசைய என்றும். நயமுள்ளன கொள்க.

சித்தமும் சிவமும், பித்தும் பெருமானும், அத்தன் கருணையும் ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் என்றதால் ஆனந்த மேலையம் அறியப்பெறுதல் காண்க.

*205* மாடு நகைவாள் நிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை யாண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. *11*

இ - ள் : இறைவன் நம்மை ஆட்கொண்டமுறையையும், நம்மைப் பணிகொண்ட வகையையும்பற்றி, பல்லின் வெள்ளொளி பக்கங்களிலே பரவ வாய் திறந்து, அழகிய பவளம் போன்ற உதடுகள் துடிப்பப் பாடுங்கள்; பாடிப்பாடி இறைவனைத் தேடுங்கள்; தேடி மனம் மகிழ அதனால் திகைப்புற்று, பிறகு தெளிவடைந்து ஆடுங்கள்; நாம் திருவம்பலத்துத் திருநடம்புரியும் பெருமான் திருமஞ்சனம் கொள்ளுவதற்காகப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், சூழ இருக்கும் தோழியர்களைப் பார்த்து, தோழியர்களே! சிவன் நம்மை ஆட்கொண்டவாற்றையும், பணிகொண்டவாற்றையும் பாடுங்கள்; பாடித் தேடுங்கள்; ஆனந்தத்தால் ஆடுங்கள்; நாம் பொற்சுண்ணம் இடிப்போம் என்று தலைவி கூற்றாக உரைக்கின்றார்.

இறைவன் நமக்குச் செய்த உபகாரத்தை எண்ணும்போது நமது மனம் அவனிடம் மிக ஈடுபடுமாதலின் நம்தம்மைக் குருவாக வந்து கோலங்காட்டி ஆட்கொண்ட வண்ணங்களையும், பல வகையில் பணிகொண்ட வண்ணங்களையும் பற்றி முதலில் பாடுங்கள் என்றாள்.

பாடின், மனோலயம் ஏற்பட்டு அத்தகைய உதவியாளனைத் தேட எண்ணமுண்டாம் ஆதலின் அடுத்து 'எம்பெருமானைத் தேடுமின்' என்றாள். தேடி, அப்பொருள் கைக்கு எட்டுமாயின் மன மகிழ்ச்சியால் ஆனந்தக்கூத்துத் தானே வரும் ஆதலின் 'தேடிச் சித்தங்களிப்பத் திகைத்துத் தேறி ஆடுமின்' என்றாள்.

நகை வாள் நிலா மாடு எறிப்ப, வாய் திறந்து, அம் பவளம் துடிப்பப் பாடுமின் எனக் கூட்டுக. நகை - பல்: தொழிலாகுபெயர். வாள் நிலா - நிலாப்போலும் வெள்ளொளி. அம் பவளம் - அழகிய பவளம்போலும் உதடு: உவம ஆகு பெயர். பாடும்போது மகிழ்ச்சியால் நகையும், அன்பால் இதழ்த் துடிப்பும் உண்டாகப் பாடுங்கள் என்கின்றாள்.

இவ்வண்ணம் நீங்கள் அனைவரும் ஆனந்தத்தில் கடந்த நிலையிற்கலந்தபோது, நாமனைவரும் ஒருங்குகூடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பதால், இத்திருப்பாடல் ஆனந்த மனோலயத்தின் பயனாக அமைதல் காண்க.

*206* மையமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்றன்னை
ஐயனை யையர்பி ரானைநம்மை
யகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோட்
பையர வல்குன் மடந்தைநல்லீர்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. *12*

இ - ள்: பூப்போலும் செவ்வரிபரந்த இருகண்களையும், பொன்னாலாகிய வளையலை அணிந்த தோள்களையும், பாம்பின்

தங்கப்பெற்ற கழுத்தினையுடையவனும், தேவர்கட்கு அமுதம் போல்பவனும், மாணிக்கம் போலும் கூத்தினைச் செய்பவனும், தலைவனும், தலைவர்கள் எல்லாருக்கும் தலைவனும், நம்மைத் தம்மருளில் சிக்கவைத்து ஆளாக ஏற்றுத் தம்மருமையை நாமுணர்ந்துய்ய உணர்த்தும் பொய்யர்க்குப் பொய்யனும், மெய்யடியார்களுக்கு மெய்ம்மையானவனும் ஆகிய சிவனைப்பாடி நாம் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், தலைவன் இயல்புகளைப் பாடிச் சுண்ணமிடிப்போம் என்று தலைவி கூறுவதாகக் கூறியருளுகின்றார்கள்.

தோழியர்களே! விடமுண்டும் அமுதமீந்தும் தேவர்களைக் காத்தும், எம்மைத் திருவருளாற் பிணித்து அடிமைகொண்ட மெய்ப்பொருளைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

பெண்களுக்குப் பொதுவாகத் தமது அழகை யாராவது புகழின் அவர்கள்பால் பெரு விருப்பு நிகழும். அவர்களிட்ட பணிகளைச்செய்யப் பின்னிடார்கள். அதுவும் தன்னைப்போன்ற அழகியொருத்தியே புகழ்ந்தால் தானிட்ட கட்டளையைத் தட்டிக் கழியார்கள் என எண்ணிய தலைவி பெண்மைக்குத் தலைசிறந்த கண், தோள், அல்குல் என்ற உறுப்புக்களைப் புகழ்கின்றாள்.

கண்டாரை வசப்படுத்திக் கருத்தை வளர்ப்பது மலர். அதுபோலக் கண்ணும் செய்தலின் 'போது அரி கண் இணை' என்றார். கண்கள், அகன்று செல்வாரை வலிய இழுத்து வசப்படுத்தியபின் அவர்கள் கண்களும் கருத்தும் தாக்கணங்கனையவர் தனத்தில் தைத்து நிற்குமாதலின் அடுத்து, 'பொற்றொடித்தோள்' என்றாள். தொடி - தோள்வளை. தோள் என்றது "பிறர்க்குரியார் தோள் தோயாதார்" என்புழிப்போல இடக்கரடக்கலாகப் பெண்ணின் சிறப்புறுப்பை உணர்த்தியது. அங்ஙனம் தோள்தோய்ந்து பிரியாது உழலும் கருத்துடையாரையே அல்குலரவம் தீண்டும் ஆதலின் 'பையரவு அல்குல் மடந்தை' என்றார்.

மை - கருமை: பண்பாகு பெயராக நஞ்சினை உணர்த்திற்று. முதற்கண் கொல்லும் நஞ்சுண்டு, தேவர்கட்கு அமுதமீந்த வள்ளற்றன்மையை 'மையமர் கண்டனை வானநாடர் மருந்தினை' என்பதால் குறிப்பித்தார்.

மாணிக்கக்கூத்தன் என்பதற்குத் திருக்கோவையாருரையில் பேராசிரியர் மாணிக்கம்போலும் கூத்தனை எனப் பொருள் கூறுவர். இதனால் இறைவன் செய்யும் கூத்து, உயிர்களால் மாணிக்கம்போல் போற்றத்தக்கதும், அறிந்துய்யத் தக்கதுமாம் என்ற நயந்தோன்ற நிற்றல்காண்க.

ஐயன் - தலைவன். ஐயர் - ஆசாரியர். ஐயர்பிரான் - குரு நாதன். தலைவர் தலைவனை எனலுமாம்.

நம்மை அகப்படுத்து என்பதாலே இறைவன் எந்தெந்த வகையில் உபகரிப்பினும் நாம் அவனுண்மையை அறியாது அவனைவிட்டு அகலச் செல்லலானோம். தாய்ப்பசுவை விட்டுப் பிரிந்து சேய்மைக்கண் செல்லும் சேங்கன்றை அம்மா என அழைத்துத் தன்னருகிலேயே வைத்துக்கொள்ளும் தாய்ப்பசு போல இறைவன் அகலச்செல்லும் நம்மைத் தம்மருளில் சிக்க வைத்து ஆட்கொண்டான் என்றார்.

அமுதின் அருமை அறியாதார்க்கு அதனருமை அறிவித்து அதனை உண்ணச் செய்வதுபோல, சிவானுபவத்தின் அருமை தெரியாத நமக்கு அருமையைக் காட்டினான் என்பார் 'அருமை காட்டும் பொய்யர்தம் பொய்யனை' என்றார். பொய்யர் - பொய் யான (நிலையற்ற) உலகம் உடம்பு போகம் இவற்றில் ஈடுபட் டுப் பொய்வாழ்வு வாழ்வார். அவர்களுக்கு இறைவனைப்பற்றிய உறுதி இன்மையால் இறைவன் அவர்களுக்குப் பொய்யனாக இருக்கின்றான் என்பதாம்.

இறைவன் நித்தியப்பொருள்; அவனருள்வழி நாம் நடக் கிறோம்; நம்முடைய நலந்தீங்குகள் யாவும் அவன்தர வருவன என்ற உண்மைஞானம் கைவரப்பெற்றவர்கள் மெய்யர். அவர் களுக்கு இறைவன் உண்மைப்பொருளாகவே உதவுகின்றான் என்பார் 'மெய்யர் மெய்யை' என்றார்.

இறைவனுடைய குணநலங்களைக் கூறி ஆனந்தமடைந்து, அவனைப் பாடுகின்ற வகையில் மனோலயம் பிறந்து, சுண்ண மிடித்தலின் இது ஆனந்த மனோலயமாயிற்று.

*207 மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்*
*வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்*
*என்னுடை யாரமு தெங்களப்பன்*
*எம்பெரு மானிம வான்மகட்குத்*

*தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன்*
*தமையனெம் மையன் தாள்கள்பாடிப்*
*பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்*
*பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே.* 13

இ - ள்: மின்னலை ஒத்துத் தோன்றி மறையும் இடையினையும், சிவந்த பவழம்போலும் வாயினையும், கரிய கண்ணினையும், வெண்மையான பற்களையும், பண்ணையொத்த மென்மையான மொழியினையுமுடைய பெண்களே! பொன்னாலாகிய பூண்களை அணிந்த முலையினையுடையவர்களே! மங்கை நல்லீர்! என்னுடைய கிடைத்தற்கரிய அமுதுபோல்பவனும், எங்களுக்குத் தந்தையும், எங்கட்குத் தலைவனும், இமயமலையரசன் மகளாகிய பார்வதிக்குக் கணவன் மகன் தகப்பன் தமையன் என்ற பலவேறு முறைகளையுடையவனும், எம் குருநாதனும் ஆகிய சிவபெருமானுடைய திருவடிகளைப் புகழ்ந்து பாடி, பொன்கூட்டிச் செய்யப்பெற்ற திருச்சுண்ணத்தை நாம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், அடிகளார், தோழியர்களே! நமக்கு அமுதமும் அப்பனும் பெருமானுமாகிய இறைவன் புகழைப் பாடிச் சுண்ணமிடிப்போம் எனத் தலைவி கூறுவதாக விண்ணப்பிக்கின்றார்.

மென்மொழியீர்! மங்கை நல்லீர்! எமக்கு எல்லா உறவுமாக இருப்பவன் புகழைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

'மின்னிடை...மென்மொழியீர்!' 'பொன்னுடைப் பூண்முலை மங்கை நல்லீர்' என்பன இரண்டும் காரியங்கொள்வாள் மகளிரைப் பாராட்டிய பாராட்டுரைகளாம். பாராட்டியதன் குறிப்பு நீங்கள் நுந்தலைவற்குவப்பாம் சுண்ணமிடித்தலில் கைதேர்ந்தவர்கள்; நும் கணவனைவிட எல்லாம் தரவல்ல பேரின்பமூர்த்திக்குச் சுண்ணம் இடிக்கத் தலைப்படுங்கள் என்ற வேண்டுகோளாம்.

அமுது உண்டார்க்கன்றி, பக்கம் நிற்பார்க்கு இனிக்காது; சாவாமையும் தராது ஆதலின், பின்னர் எங்கள் அப்பன் எம் பெருமான் எனத் தன்மைப்பன்மையால் கூறுகின்றவள் ஈண்டு 'என்னுடை ஆரமுது' எனத் தன் ஒருத்திக்கே உரிமையாக்கிக் கூறுகின்றாள். ஏனையோரும் சிவனை நுகரத் தொடங்கின் அவரவர் அனுபவம் அவரவரது ஆகலின் ஒவ்வொருவரும் 'என்னுடை ஆரமுது' என்றே கூறுவர் என்க.

நம் எல்லாரையும் தனு கரணங்களோடு கூட்டித் தோற்று வித்தலின் 'எங்கள் அப்பன்' என்றார்.

சிவன் அரசனாகிய பெருமானாகவும் இருந்து, எடுத்தும் தடுத்தும் கொடுத்தும் காக்கின்றான் என்பார் 'எம்பெருமான்' என்றார்.

உலகத்தைப் படைத்தற்காக இறைவன் சிவமும் சத்தியு மானபோது சிவம், இமவான்மகட்குக் கேள்வனாகிறார்; சத்தியி னின்று சதாசிவ தத்துவமாகத் தோன்றும்போது மகனாகிறார்; சிவத்தினின்றே சத்தி பிரிந்து தோன்றலால் சத்திக்குத் தகப்ப னாகிறார்; சுத்த மாயையிலிருந்து இறைவனது ஞானசத்தி அதிட்டிக்கச் சிவதத்துவமும், கிரியாசத்தி அதிட்டிக்கச் சத்தி தத்துவமும் தோன்றுதலின் சத்திக்குத் தமையன் ஆகிறார். இதனையே 'இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்' என்று அருளுகிறார் அடிகள்.

> "வாயு மனமுங் கடந்த மனோன்மணி
> பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
> ஆயும் அறிவுங் கடந்த அரனுக்குத்
> தாயும் மகளும்நல் தாரமும் ஆமே"

என வருகின்றமையும், குமரகுருபரசுவாமிகள்,

> "கனக மார்தரு கவின்செய் மன்றுள்
> அனக நாடகற் கெம்மன்னை
> மனைவி தாய் தங்கை மகள்"

என்று கூறுதலும் காண்க.

இறைவன் திருவடிகளே முடிவான முத்திநிலமாதலின் இன்பமயமான அதனைப்பாடிச் சுண்ணமிடிப்போம் என்றாள்.

இங்ஙனம் இறைவனைப் பலவேறு முறையில் அனுபவித்த ஆனந்தத்தால் மன ஒருமைப்பாடுற்றுச் சுண்ணமிடித்தலால் இது ஆனந்தமனோலயம் ஆயினமை தெளிக.

*208* *சங்க மரற்றச் சிலம்பொலிப்பத்*
*தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்*
*செங்கனி வாயித ழுந்துடிப்பச்*
*சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்*
*கங்கையி ரைப்பஅ ராவிரைக்கும்*
*கற்றைச் சடைமுடி யான்கழற்கே*
*பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்*
*பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே.* **14**

இ - ள்: சிவந்த அணிகளையுடைய பெண்களே! சங்கு வளையல்கள் ஒலிக்கவும், காலிலணிந்துள்ள சிலம்பு ஒலிக்கவும், தாழ்ந்த கூந்தலைச் சுற்றியுள்ள மாலை ஆடவும், சிவந்த கொவ்வைக்கனிபோலும் உதடு துடிக்கவும், இறைவனுடைய சிவலோகத்தைப் புகழ்ந்து பாடி, தலையிலணிந்துள்ள கங்கையாறு ஒலிக்க அதைக்கண்டு திருமுடியில் பாம்பு சீறியொலிக்கும் சடைக்கற்றையாலாகிய முடியையுடைய சிவபெருமான் திருவடிக்கண் மிகுந்த அன்பினால் கொங்கைகள் எடுப்பாகத் தோன்ற, பொன்னிறமான திருச்சுண்ணத்தை நாம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார் அணிகள் ஒலிக்க, திருவடிக்கண் காதல் மிக இறைவற்குச் சுண்ணமிடிப்போம் என்றுளாகக் கூறுகின்றார்.

தோழியர்களே! ஒலிக்கும் அணிகளோடு ஒலிக்காத அணிகளையும் உடைய நாம், காதல்பொங்க அதனால் இதழ்துடிப்பும், கொங்கை விம்முதலும், குழல் சோர்வும் பொருந்தச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

'சேயிழையீர்' என்றது மாணிக்கத்தாலானதும் ஒளியாதது மான காதணி மூக்கணி கழுத்தணி இவைகளையுடைய பெண்களே என விளித்தாள்.

சங்கம் ஒலிக்கச் சிலம்பரற்ற என்று கூறுதலே இலக்கிய மரபாக இருக்கவும் ஈண்டு விரைவாலும் காதன் மிகுதியாலும் 'சங்கம் அரற்றச் சிலம்பு ஒலிக்க' என்றாள். குழல் வீழ்தல் இதழ் துடித்தல் முதலியன காதற்குறிப்புணர்த்தும் நிகழ்ச்சிகள். இதனைத் தொல்காப்பியத்து அவத்தைகள் கூறுமிடத்துக் காண்க.

இறைவன் திருமுடி ஞானபூமியாய் இருந்தும், அங்கேயே என்றும் தங்கும் புண்ணியத்தைக் கங்கையும் அரவும் பெற்றிருந்தும், கங்கை வேகங்கெடாது இரைகின்றாள்; அரவு அதனை வெள்ளத்து ஓசை என்று அறியாது தம்மினம் சீறுவதாக எண்ணிச் சீறுகிறது; இந்நிகழ்ச்சியைக் 'கங்கை இரைப்ப அரா இரைக்கும் கற்றைச் சடை முடியான்' என்று குறிப்பிடுகின்றார்.

பொங்கிய காதல் - ஒருகாலைக்கொருகால் மிகுகின்ற காதல். அதனால் கொங்கை விம்மும். கொங்கை விம்முதலும் காதற்குறிப்புள் ஒன்றுமாறு அறிக.

முறுகிய பேரன்பால் விளைகிற ஆனந்த அனுபவத்தையும் அதனால் விளைகிற மன ஒருமைப்பாட்டையும் உணர்த்துதலின் ஆனந்தமனோலயம் ஆயினமை அறிக.

209 ஞானக் கரும்பின் தெளியைப்பாகை
நாடற் கரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்து தித்திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானற் றடங்கண் மங்கைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 15

இ - ள்: நீலப்பூப் போலும் அகன்ற கண்களையுடைய மடந்தையர்களே! ஞானமேவடிவான கரும்பினின்று எடுக்கப் பெற்ற சாற்றின் தெளிவு போல்பவனும், அதிலிருந்து காய்ச் சப்பெற்ற பாகுபோல்பவனும், தேடுதற்கரிய இன்பமானவ னும், சுவை குன்றாத தேன்போல்பவனும், பழங்களின் சுவை யானவனும், எனது மனத்துள் தானே வந்து புகுந்து இனிக்க வல்ல இறைவனும், அடியேனது பிறவியை அறுத்து ஆட் கொண்டவனும் ஆகிய சிவபெருமானை நாவில் தழும்பு மிகு மாறு வாழ்த்திப் பாடி நாம் பொற்சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இனிய பொருளாயும் அவற்றைவிடச் சிறந்தும் இனியனான இறைவனைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போம் என்றாள் எனக் கூறுகின்றார்.

தேனைப் பாலைப் பாகைக் கனியின் சுவையை ஒத்த சித்தத் துள் தித்திக்கின்ற இறைவனைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

மணவாளனாகிய சந்திரனைக் கண்டு மலர்ந்த கருங்குவளை தேன்சுரப்பதுபோலத் தலைவனைக் காண எண்ணி ஆனந்தக் கண்ணீர் சுரத்தலின் 'பானல் தடங்கண்' என்றார். மடந்தை - இளமை நலம் குன்றாதவள். பருவம் குறிக்கும் பெயராகும்.

இறைவன் திருமேனி ஞானமே ஆதலால் ஞானக்கரும்பு என்றார். தெளி - சாற்றின் தெளிவு. பாகு - முறுகாமலும் பதம் குன்றாமலும் காய்ச்சப்பெற்ற குழம்பு. நலம் - இன்பம். இன்பம் என்பன யாவும் அரிதில் முயன்று தேடி அடையப்பெறுவன.

சிவபோகமாகிய இவ்வின்பம் இளநீருள் நீர் நிறைந்தாற் போல, தானேவந்து பொருந்தப்பெறின் அல்லது செயற்கை யின் எய்தும் இயற்கைத்தன்று ஆதலின் 'நாடற்கரிய நலத்தை' என்றார்.

தேன் நாட்படின் புளித்தலும் இறுகுதலும் கற்கண்டாதலு மாகிய கேட்டினை உடையது. இறைவனாகிய தேனுக்கு அஃது ஒன்றும் இல்லையென்பார் 'நந்தாத் தேனை' என்றார்.

மக்கள் வாழை மா பலா முதலிய பழங்களை விரும்புவது அதன் சுவை கருதியே. பழங்களில் தோலும் நாரும் கொட்டை யும் உண்மையின் அவற்றை நீக்கிச் சுவையை மட்டும் மக்கள் விரும்புவதால் இறைவன் பழமாகாது பழச்சுவை ஆயினான் என்றார்.

'அது பழச்சுவையென அமுதென' (372) என்பதும் இக் கருத்திற்குத் துணைசெய்யும்.

உலகிலுள்ள கரும்பு, பாகு, பழம் முதலியவற்றை நாமே தேடியலைந்து பெற்று உண்டாலும் சுவை தொண்டைக்குமேற் செல்வதில்லை; அக்கணமே மாறியும் விடுகிறது. இறைவனாகிய தெளி, பாகு, பழச்சுவை நமது கருவி கரணங்களைக் கடந்து தானே வலியவந்து கருத்தினுட் புகுந்து என்றும் தித்தித்துக் கொண்டிருக்கின்றது என்பார் 'சித்தம் புகுந்து தித்திக்கவல்ல கோனை' என்றார்.

இவ்வனுபவம் சிவஞானசித்தியாரில் பதினோராம் சூத்திர இறுதியில் "கரும்பைத்தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியை ஒத்திருப்பன்" எனக் கூறப்பெறுதல் காண்க.

எரிவதை இழுக்கக் கொதித்தல் நிற்குமாறுபோல, பிறவிக் கேதுவாகிய மலமாயை கன்மங்களின் வலியை ஒடுக்கிக் கெடுக் கப் பிறவி அறுவதாகவும் 'பிறப்பு அறுத்து' என்றது காரண காரியங்களுக்கு உள்ள ஒற்றுமை நயம்பற்றி என்க. துணிவு பற்றி எனலும் ஆம்.

ஆண்டுகொண்ட - அடிமையாக ஆண்டு உடைமையாகக் கொண்ட என்க. கூத்தன் - ஞானகாயத்தில் ஐந்தொழில் அரு நடனம் புரிகுவான். என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு அசபாநடனம் புரிவோன் எனலும் ஆம். வில் எற்றிக் கையில் தழும்பேறுதலும் நடந்து காலில் தழும்பேறுதலும் போல இறைவன் புகழைச்சொல்லிச் சொல்லி நாவிலும் தழும் பேறிய நிலைமையை 'நாத்தழும்பேற வாழ்த்தி' என்றார்.

இத்திருப்பாட்டு 'தித்திக்க வல்லகோன்' என்றது வரை ஆனந்த நுகர்ச்சியையும், 'நாத்தழும்பேற வாழ்த்தி' என்பது அதனால் விளைந்த டிநிலையத்தையும் உணர்த்துதல் காண்க.

210 ஆவகை நாமும்வந் தன்பர்தம்மோ
டாட்செயும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர்க ளுவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவக மேந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரஞ் செற்றகொற்றச்
சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 16

இ - ள் : ஒன்றற்கும் பற்றாத நாமும் உய்யும்வகை வந்து அருள்செய்து, மெய்யன்பர்களோடு நாமும் கலந்து திருவடிக்கு ஏவல் செய்யும்படிப் பணித்த முறைகளைப் பாடி, விண்ணுலகில் வசிக்கின்ற தேவர்கள் கனவிலும் கண்டறியாத செந்தாமரை மலர்போலும் திருவடித் தாமரைகளை நாம் கண்டு உய்யும்படிக் காட்டுகின்ற திருவருட் செல்வத்தையுடைய இடபத்தைத் தன்னகத்தே தாங்கிய வெற்றிக்கொடியுடையவனாகிய சிவபெருமான் புரங்களை அழித்த வெற்றி வீரன் என அவன் பெயர்களைப் பாடிப்பாடிச் செம்பொன்னாலாகிய சுண்ணத்தை நாம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவர்கள் கனவிலுங் கண்டறியாத திருவடிகளை நமக்குக் காட்டிய உபகாரத்தினைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றதாகக் கூறுகின்றார்.

அடியேன் பசுபோதம்நீங்கிப் பதிபோதம்மிகுந்து மெய்யடியார் கூட்டத்துள்கலந்து அடிமைசெய்ய என்னை ஆட்கொண்டு, திருவடிமலரைக் காட்டிய சிவபெருமானது திருநாமங்களைப் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

ஆவகை : ஆகும் வகை என்ற செய்யுமெனெச்சத்தொடர் தொக்கு ஆவகை என்றாயிற்று. மல மாயை கன்மங்களோடு கூடிப் பசு என்னும்பெயரோடு கட்டுண்டு, பிறவிச்சூழலில் கறங்கும் கொள்ளிவட்டமும் போல ஓயாது சுழலுகின்ற நாமும் சிவஞானியர் ஆகும்வகை ஆண்டான் என்பதாம். சாந்த பீசமயமான சிவமயச் சீவனாகும்வகை என்று பழைய உரை கூறுகின்றது. ஆன்மாக்களாகிய நாம் சிவஞானியராக வேண்டும் என்ற சித்தத்தால் அவன்வந்து நாம் உய்யும்வகைத் திருவருள்

பாலிக்க வேண்டும்; மெய்யடியார்களோடு கூட்டவேண்டும் என்பார் 'நாமும் ஆவகை வந்து அன்பர்தம்மோடு ஆட்செய் யும் வண்ணங்கள் பாடி' என்றார்.

கனா, இடைவிடாது பயிலுகின்ற தியானபாவனையால் விளை வதும், பின்வரும் துன்ப இன்பங்களைக் குறிக்கும் உற்பாத மாய் உண்டாவதும், பண்டைய வினைகளில் மெல்வினையாய் நனவில் பயன்தர வல்லன அல்லவாய்க் கனவிலே பயன் தந்து கழிவதும் என முத்திறப்படும். அவற்றுள் விண்மேல் தேவர்கள் இறைவன் திருவடியை எண்ணி அறியாது என்றும் போகியாய் இருப்பவர்கள் ஆதலின் 'விண்மேல் தேவர்கள் கனவிலும் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்கள்' என்றார். விண்மேல் தேவர்கள் அறியார்கள் எனவே மண்மேல் வந்து ஆண்டவனை அருச்சித்து நேர்முகக்காட்சியான் அனுபவிக்கப் பெறும் பேறு உடையர் என்பதும் குறிப்பாற்கொள்ள நிற்றல் காண்க. விண்ணவர் மண்மேல்வந்து அருச்சித்தலை, சிவஞான சித்தியார் "வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச் சிப்பர் ஊனெடுத் துழலுமூமர் ஒன்றையும் உணரார் அந்தோ" எனக் கூறுதல்கொண்டும் காண்க.

காட்டும் வெல்கொடியான் எனக் கூட்டுக. காட்டும் செல்வ வெல்கொடியான் என இயைப்பினும் ஆம்.

சே அகம் ஏந்திய வெல் கொடி - இடபத்தைத் தன்ன கத்தே தாங்கிய வெல்கொடி. இக்கொடி புறப்பகைகளையும் வெல்லும் ஆற்றலது ஆதலின் 'வெல்கொடி' என்றார்.

புரம் செற்ற கொற்றச்சேவகன் - முப்புரங்களையும் அழித்த வெற்றியோடு கூடிய சேவகன். முப்புரம் என்பது மும்மல காரிய மாதலின் வெல்கொடியான் என்றமைக்கு ஏற்பப் 'புரஞ்செற்ற சேவகன்' என்றமையும் காண்க.

பேயர்கள் பலவாதலின் 'நாமங்கள் பாடிப்பாடி' என்றார். பாடுதல் மனோலயம் பெறுவதற்காதலின் அது உண்டாம்வரை பலகாலும் பாடுக என்பார் 'பாடிப்பாடி' என்றார்.

தேவர்கள் என்றும் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்கள் எனப் பாடம்கொண்டு, தேவர்கள் கண்டறியாத செம்மலர் தோன்றானை எனது போதச்சிரசில் சூட்டும் செல்வ என்று பழைய உரை கூறும்.

பாதங்கள் காட்டும் செல்வக்கொடியான் என்றதால் தாம் பாதங்கண்ட ஆனந்தமும், நாமங்கள் பாடிப்பாடி என்பதால்

மனேலயமும் அறியக்கிடத்தலின் இத்திருப்பாட்டு, பதிகக் கருத்திற்கு இயைபுடைமை அறிக.

*211 தேனக மாமலர்க் கொன்றைபாடிச்*
*சிவபுரம் பாடித் திருச்சடைமேல்*
*வானக மாமதிப் பிள்ளைபாடி*
*மால்விடை பாடி வலக்கையேந்தும்*
*ஊனக மாமழுச் சூலம்பாடி*
*உம்பரும் இம்பரும் உய்யவன்று*
*போனக மாகநஞ் சுண்டல்பாடிப்*
*பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 17*

இ - ள்: தேன் நிரம்பிய பெரிய கொன்றைமலர் மாலையைப் பாடியும், அவன் இடைவிடாது எழுந்தருளியிருக்கும் தலமாகிய சிவபுரத்தைப் பாடியும், அவனுடைய திருச்சடைமேல் விளங்கும் வானகத்தேவழங்கிய பிறைமதியைப் பாடியும், அவன் ஏறுகின்ற திருமாலாகிய இடபத்தைப்பாடியும், வலக்கையில் ஏந்தியிருக்கின்ற தசையையுடைய பெரிய மழு பெரிய சூலம் இவற்றைப் பாடியும், தேவர்களும் இவ்வுலக மக்களும் உயிர் பிழைப்பதற்காக அன்றைக்கு நஞ்சினை உணவாக உண்டருளியதைப் பாடியும் பொற்சுண்ணத்தை நாம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், இறைவனது மாலையையும் நகரையும் அணி ஊர்தி படை இவைகளையும் வள்ளன்மையையும் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்ருளாக அறிவிக்கின்ருர்.

இறைவனது மாலே முதலான சிறப்பியல்புகளையும் அளவிலாற்றலேயும் பாடிச் சுண்ணம் இடிப்போம் என்ருள் என்பது கருத்து.

தேன் நகு அம் மா மலர்க் கொன்றை - தேன் துளிக்கின்ற அழகிய பெரிய மலராகிய கொன்றை. தேன் அகம் மா மலர் எனப் பிரித்து, தேனை உள்ளே உடைய பெரிய மலர் எனலும் ஆம். கொன்றை பாடி என்பது அவனது அடையாள மலரைக் குறித்தது.

சிவபுரம் - திருக்கைலாசம்; திருப்பெருந்துறை எனலுமாம். புரம் என்பதற்குச் சரீரம் எனப் பொருள்கொண்டு சிவபுரம் என்பதற்கு உண்மை அடியார்களின் காயமே கோயிலான சிவபுரத்தை எனப் பழைய உரை கூறுகிறது.

இறைவன் திருச்சடை ஞானவெளி. வானகம் மாயா காரியமாகிய ஊனவெளி. ஊனவெளியில் பெருமதியாய் உலாவிவந்த சந்திரன் ஞானவெளியில் மதிப்பிள்ளையாய் வீற் றிருக்கிறான் என்பார் 'திருச்சடைமேல் வானகமாமதிப்பிள்ளை' என்றார். ஊனவெளியில் ஊனசம்பந்தத்தோடு உலாவுகின்ற உயிர், ஞானவெளியில் ஊனினைச் சுருக்கி உள்ளொளிபெருக இருத்தலும் இயல்பாதலை இந்தப் பகுதி விளக்குதல் காண்க.

மால் விடை - பெரிய விடை. திருமாலாகிய விடை எனினும் ஆம். அடியார்களின் துன்பம் துடைத்தற்கும் அருள் வழங்கு தற்கும் விரையும் விடை ஆதலின் 'மால் விடை' என்றார். இறைவன் கரத்துள்ள மழுவும் சூலமும் யாரையும் கொன்றது இல்லையாதலானும் சிரித்தும் நகைத்தும் உதைத்தும் பகையை அழித்தமையானும் படை என்னும் பொதுமைபற்றி 'ஊனக மா மழுச் சூலம்' என்று ஓதப்பெற்றது.

வலக்கை ஏந்தும் ஊனக மான் மழுச்சூலம் என்று பாடங் கொண்டு வலத்திருக்கையில் ஏந்தும் அறம் பொருள் இன்ப வீடான நாற்பாத மானையும் எம்மை இரட்சிப்பதே சத்தியம் என்ற மழுவையும் மூவகைச் சத்திசொருப சூலாயுதத்தையும் பாடி என்று உரை வகுக்கும் -பழைய உரை. இதில் வலக்கை ஏந்தும் என்னும் பெயரெச்சத்திற்கு மழுவும் சூலமும் இயையு மன்றி, மான் இயையாமை அறிக. அன்றியும், ஊனக மான் என்பதற்கு நாற்பாதங்களையுடைய மான் என்பது எங்ஙனம் பொருளாகும்? அதனாலேயே தொல்லாசிரியர்கள் பலரும் 'மா மழு' எனப் பாடங்கொண்டனர்போலும்.

உம்பர் - தேவர்கள். இம்பர் - மக்கள். இறைவன் நஞ்சு உண்ணாவிடின் அன்று அயன் மாலுள்ளிட்ட மேலாய தேவர்க ளெல்லாம் வீடுவராதலின் அவ்வுதவியைப் பாடி என்பாள் என்பார் 'உம்பரும் இம்பரும் உய்ய அன்று போனகமாக நஞ்சு உண்டல் பாடி' என்றார். இதில் இம்பர் உய்ந்தவாறு என்னையோவெனின், மாலும் அயனுமாய தேவர்கள் உய்யா விடின் காத்தலும் படைத்தலுமாகிய தொழில்கள் இவ்வுலகத்தில் இயங்கா; அன்றியும், நஞ்சுண்டதைப் பாராட்டிப் பிரதோஷ விரதமாக அனுட்டித்து, மக்கள் சிவகருணையைப் பெற உதவிய தும் அச்செயலே ஆதலால் என்க.

இது தலைவனுடைய ஊர், மலர், ஊர்தி, அணி, படை முதலியவற்றைப் பாடும் தகுதி, ஆனந்தத்தே போய் அண்மி மனோலயம் பெற்ற ஆன்மாவிற்கே ஆகும் என அறிவித்தலின் பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

212 அயன்றலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்க னெயிறு பறித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலா லுதைத்தல்பாடி
இயைந்தன முப்புர மெய்தல்பாடி
ஏழை யடியோமை யாண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடியாடி
நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே. 18

இ - ள்: பிரமனது தலையைக் கையில்கொண்டு பூச்செண்டு போலத் திரித்து ஆடிய வீரத்தையும், சூரியனது பல்லைப் பறித்த வீரத்தையும், யானையைக்கொன்று அதன் தோலைப் போர்த்தியதையும், காலனைக் காலால் உதைத்ததையும், ஒன்றோடு ஒன்று பொருந்தியனவாகிய திரிபுரங்களை எய்ததையும், அறிவற்ற அடியேங்களையும் ஒருபொருளாக எண்ணி ஆட்கொண்ட கருணை மேன்மையையும் பாடி நின்று ஆடி ஆடி எங்கள் தலைவனுக்கு நாம் சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், இறைவனுடைய வீரச்செயல்களைப் பாடி எங்களையும் ஆட்கொண்ட நன்மையையும் பாடி ஆடிச் சுண்ணம் இடிப்போம் என்றுளாகக் கூறுகின்றார்.

வழிபட்டாரைத் திருவருள் அணைப்பில் வாழவைத்தும், எதிர்த்தாரை முரணீக்கி மறக்கருணை காட்டித் திரித்து வாழ வைத்தும், எங்களுடைய அறியாமையைக் கண்டு இரங்கி இனிமையோடு எங்களை ஆட்கொண்டும் அருளிய மேன்மையைப் பாடி ஆடிச் சுண்ணம் இடிப்போம் என்றாள் என்பது கருத்து.

செண்டு - பூச்செண்டு. 'யாமும் ஐந்தலை உடையோம்; அரன் போல்வோம்' என்று அகங்கரித்த பிரமன் தலையைக் கொழுந்தினைக் கிள்வார்போலக் கைநகத்தால் கிள்ளிச் செண்டு போலக் கையில்கொண்டு ஆடிய வீரச்செய்தியே இப்பகுதியில் விளக்கப்பெறுகிறது.

அருக்கன் - பகன் என்னும் சூரியன். தக்கன் யாகத்தில் கலந்து சிவநிந்தைக்கு உடந்தையாக இருந்த குற்றத்தால் சிவபெருமான் வீரபத்திரக் கடவுளாகி அவன் பல்லைப் பிடுங்கினார் என்ற வரலாறு 'அருக்கன் எயிறு பறித்தல் பாடி' என்பதால் குறிக்கப்பெறுகிறது.

கயம் - யானை. உரி - தோல். தாருகாவனத்து முனிவர்கள் வெள்வித் தீயினின்றும் எழுப்பிய யானையைத் தன் கை விரல் நுனியால் கீறி, அதன் தோலைப் போர்வையாகப் போர்த்தினர் என்ற வீரச்செய்தி இந்தப் பகுதியில் விளக்கப்பெறுகின்றது. தக்கயாகப்பரணி உரையில் 'எத்தேவர் தேவரும் யானையின் தோலைப் போர்த்தி இறந்துபோக நீ அத்தோலை எப்பொழுதும் போர்த்திக்கொண்டிருந்தும் நீ அழிந்திலாய்! இது தேவரீருடைய அளவிலாற்றலை அறிவிப்பதாம்' என்று கூறுவதும் இணைத்து எண்ணத்தக்கது.

காலன் - அவ்வவ்வுயிர்களுக்கு வினைவயத்தால் வகுக்கப் பெற்ற காலவரையறையை நன்கறிந்து ஊன் உயிர் வேறு செய்பவன். அவன் இறைவனையே பூசித்து ஆனந்தவாழ்வு வாழ்ந்த மார்க்கண்டேயனைக் கொல்ல வந்தபோது சிவபூசை முடித்து அமுதகடேசரைத் தழுவிக்கொண்டு கிடந்த மார்க்கண்டேயரைப் பிடிப்பதற்காகக் காலபாசத்தை வீசிக் கடவுளையும் சேர்த்து இழுத்தான். அப்போது அம்மார்க்கண்டேயனைக் காப்பாற்றுவதற்காக இறைவன் காலனைக் காலால் உதைத்த செய்தி இப்பகுதியால் அறிவிக்கப்பெறுகிறது.

திருமாலின் புத்தாவதாரத்தில் அவன் உரைத்த ஆகமங்களைக் கேட்டுப் புத்த தருமங்களைச் சார்ந்திருந்த திரிபுராதிகளை அம்பெய்து அழித்தார் என்பது 'முப்புரம் எய்தல் பாடி' என்பதால் அறிவிக்கப்பெறுவது.

ஏழை - அறிவிலி. இவன் முதல்வன், இவனை வலியச் சென்று அடைவோமாயின் அவன் 'காட்டாதனவெல்லாம் காட்டுவான்; நந்தம்மையாட்கொள்வான்' என்ற அறிவுமற்ற என்னை அவனுக்கே இயல்பாகவுள்ள பெருங்கருணையால் ஆட்கொண்டான்; அது அவனுக்குப்பெருமையும் ஆயிற்று என்பார் 'ஏழை அடியோமை ஆண்டுகொண்ட' என்றார்.

அடியோமை ஆண்டுகொண்ட நயந்தனை என்பதால் ஆனந்தமும், பாடி நின்று ஆடி ஆடி என்பதால் மனோலயமும் தெரிதல் காண்க.

*213* *வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி*
*மத்தமும் பாடி மதியும்பாடிச்*
*சிட்டர்கள் வாழுந்தென் றில்லைபாடிச்*
*சிற்றம்ப லத்தெங்கள் செல்வம்பாடிக்*

கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் றாடும் அரவம்பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்து நாமே. 19

இ-ள்: பிரணவ வட்டமான கொன்றைமலராலாகிய மாலையைப் பாடி, அவரணிந்துள்ள ஊமத்தம்பூவைப் பாடி, மதியைப்பாடி, மேலோர் வாழ்கின்ற அழகிய தில்லையையும் பாடி, திருச்சிற்றம்பலத்து எழுந்தருளியுள்ள எமது பெருஞ் செல்வமாகிய சிவனைப்பாடி, அவன் அரையிற் கட்டியுள்ள பாம்புக்கச்சையைப் பாடி, அவனது பாம்புக் கங்கணத்தையும்பாடி, கவிந்துள்ள கையின்மேல் அணியப்பெற்று நின்றாடுகின்ற பாம்பைப்பாடி, எம்மையுடையானாகிய சிவனுக்கு நாம் சுண்ணம் இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் மாலை முதலியவற்றைப் பாடிச் சுண்ணமிடிப்போம் என்றாள் எனச் சொல்கின்றார்.

ஆனந்தக்கூத்தப்பெருமானது அவயவச் சிறப்பும் அணிச் சிறப்பும் நடனச் சிறப்பும் பாடிச் சுண்ணமிடிப்போம் என்றாள் என்பது கருத்து.

மலரின் உருவம் பிரணவம்போல வட்டமாக இருத்தலின் 'வட்ட மலர்க்கொன்றை' என்றார். மாலைக்கு அடைமொழியாக்கி வட்டமான மாலை எனலுமாம். இறைவனுக்குகந்த பூக்களில் கொன்றைமலர் போலச் சிறந்தது ஊமத்த மலரும் ஆதலின் 'மத்தமும் பாடி' என்றாள். சிவசகத்திர நாமத்தில் 'உன்மத்த சேகரன்' என்னும் ஒருபெயர் வழங்கப்பெறுதல் காண்க.

மதி - பிறை. சென்ற திருப்பாட்டில் 'வானக மா மதிப் பிள்ளை பாடி' என்றதற்கு உரைத்ததையே ஈண்டும் நினைவு கூர்க. சிட்டர் - சிஷ்டர் என்பதன் திரிபு. வேத ஆகமங்களில் கற்பிக்கப்பட்டபடி (சிக்ஷிக்கப்பட்டபடி) ஒழுகுபவர்கள். 'சிட்டர் வாழ் தில்லைச்சிற்றம்பலம் மேய' என்ற திருமுறையும் எண்ணுக. சிற்றம்பலம் - ஞானசபை. அங்கு வாழும் கூத்தப்பெருமானைச் 'செல்வம்' என்றார் அன்புமீதூர்ச்சியால். அப்பர்சுவாமிகளும் 'திருவே என்செல்வமே' என்றல் காண்க. செல்வம் வாழ்வில் இன்பத்தை மிகுவிப்பதுபோலச் சிவபெருமானும் இம்மையிலும் இன்பமிகுதி அளித்தலின் 'செல்வம்' என்றார். கச்சை - அரையில் கட்டப்பெறுவது. கங்கணம் - மணிக்கட்டில் அணியப்பெறுவது. கைமேல் இட்டுநின்றாடும் அரவம் - கையின் மேல் ஊரவிட்டதால் தன் விருப்பம்போல் நின்றாடும் பாம்பு.

இவ்வண்ணம் கூத்தப்பெருமானுடைய ஒவ்வோருறுப்பாக எண்ணி மகிழ்தலும் பாடுதலும் ஆனந்தமனோலயத்தின் விளைவாதல் காண்க.

214 வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாயிரு ளாயினார்க்குத்
துன்பமு மாயின்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்
காதியும் அந்தமும் ஆயினாருக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 20

திருச்சிற்றம்பலம்

இ - ள்: வேதங்களும் அவைகளிலே விதிக்கப்பெற்ற வேள்விகளும் ஆனவரும், உண்மையும் பொய்யுமாக விளங்குபவரும், ஒளியும் இருளும் ஆனவரும், துன்பமும் இன்பமும் ஆனவரும், பாதியும் முழுதுமானவரும், கட்டும் மோட்சமும் ஆனவரும், முதலும் ஈறும் ஆனவரும் ஆகிய இறைவற்கு ஆடப் பொற்சுண்ணத்தை இடிப்போம் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், ஒன்றோடொன்று மாறுபட்ட நிலையில் இருந்து எல்லாமாய் அறியத்தக்க முறையில் இறைவன் விளங்குதலைப் பாடிச் சுண்ணம் இடிப்பதாகத் தெரிவிக்கின்றார்.

வேதம் அறிவு வடிவானது. வேதமே இறைவன் வடிவம். ஆதலால், இறைவன் வேதபுருஷன் எனப்படுகிறார். அந்த வேதங்கள் பரிபாகம் இல்லாத கன்மத்தார்க்கு வேள்விகளை உணர்த்துகிறது. அவ்வேள்விகளும் இறைவன் வடிவேயாம். இதனாலே 'யஞ்ஞ புருஷன்' எனவும் இறைவன் அழைக்கப் பெறுகின்றார். வாசகமும் வாச்சியமும் ஆக விளங்குபவன் இறைவனே எனத் தெளிவித்தவாறு. வேதமாக இருக்கின்றான் எனின், இறைவனது கடந்த நிலைக்கு ஒவ்வாதாம் ஆதலின் வேதமாகவும், அதனால் உணர்த்தப்படும் வேள்வியாகவும், அவ்வேள்விக்குப் பயன் கொடுக்கும் முதல்வனாகவும் இருக்கின்றான் என இறைவனது சிறப்பியல்பு தெரிவித்தவாறு காண்க. இக்கருத்தெண்ணாதே சிலர் வேதம் வேள்விக்கு இன்றியமையாததுபோல ஏனையவும் ஒன்றற்கொன்று இன்றியமையாதனவாதலின் உடன்பாடும் எதிர்மறையும்பற்றிப் பொருள்கொள்ளாது இன்றியமையாமைபற்றியே உரைவகுத்துக்கொள்க என்பர்.

வேதம் வேள்விக்குரிய மந்திரங்களைக் கூறுகின்றதேயன்றி செய்முறையாகிய வேள்வியின் இலக்கணம் கூறவில்லை. அவற்றைக் கூறுவன கற்பசூத்திரங்களாம். ஆகவே, வேள்விகட்கு வேதம் மந்திரமாகத் தேவர்களை அழைக்கப் பயன்படுவன என்றுமட்டும் கொள்க. ஒளியும் இருளும், பொய்யும் மெய்யும், துன்பமும் இன்பமும் ஒன்றற்கொன்று இன்றியமையாமையை உணருமாறில்லை. அங்ஙனம் கூறுவாரும் உணர்த்தமாட்டாமையின் வாளா மறுத்தொழிந்தார் ஆதலின் ஒன்றோடு ஒன்று மாறுபட்ட பொருள்களாயுமிருந்து தன் அளவிலாற்றலை நாம் உணர்ந்துய்ய வைத்தார் இறைவன் என்றே கொள்ளுதும். அதன் நயங்களைப் பின்வரும் சிறப்புரைகளால் தெரிக.

மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்கு: மெய், என்றும் நிலைத்த பொருள். உயிரும் இறையும் தளையும் ஆவன. பொய், தோன்றி நின்று தத்தங்கால எல்லையில் அழிவனவும், என்றும் இல்லாதனவும், ஒன்றினொன்றில்லாதனவுமான அழி பொருள்கள். ஈண்டு அவற்றைக் கூறாது மெய்ம்மை பொய்ம்மை என அவற்றின் தன்மை கூறினார். மெய்ம்மை - பொருளும் பொருட்டன்மையும் அழியாதது. பொய்ம்மை - பொருளழியவும் பொருட்டன்மை அழியாதது. ஆதலாலேயே நிலைத்த பொருளாகியசிவம் தன்மை இரண்டுமாயிற்று. மெய்ம்மையின் சிறப்பு உணர பொய்ம்மையுதவுதலின் இறைவன் இரண்டினுங்கலந்து நின்று இரண்டையும் இயக்குகின்றார். ஆதலால், பொய்ம்மையும் மெய்ம்மையுமாகிய இரண்டுமே இன்றியமையாதன எனல் கருத்தாமெனின், இருள் ஒளியை உணர்த்தியதுபோலவும் விளக்கு ஞாயிற்றைக் காட்டியதுபோலவும் நகைக்கிடமாம் என்க. இங்ஙனமே பின்வருவனவற்றிற்கும் கொள்க.

சிவஞானியர்க்குச் சோதியுமாய், அவஞானியர்க்கு இருளுமாய் இருப்பன். "புறச்சமயத்தவர்க்கிருளாய் அகச்சமயத்து ஒளியாய்" என்ற சிவப்பிரகாசத்திருவிருத்தமும், 'சோதியனே துன்னிருளே' என்ற சிவபுராணக் குறிப்பும் ஈண்டு எண்ணத்தக்கன. 'இருளும் ஆயினார்க்கு' என்ற உம்மை விகாரத்தால் தொக்கது.

துன்பம் - தீவினையின்பயன். இன்பம் - நல்வினையின்பயன். இவ்விரண்டும் உயிர்கள் செய்த செய்த வினையின் காரணமாக விளைவனவே ஆயினும் வினைகள் சடமாதலின் தாமாகவே பரிபாகப்பட்டுத் துன்பமும் இன்பமும் ஆகமாட்டா: ஆதலின் அவற்றைக் கூட்டுகின்ற இறைவனைத் துன்பமும் ஆய் இன்பமுமாயினான் என்றார்.

பாதி ஆதலாவது, தம் திருமேனியிலே பாதி அம்மையும் பாதி சிவமும் ஆதல். முற்றும் ஆதலாவது, சத்தியையும் தன் னுள் அடக்கிச் சிவமேயாக விளங்குதல். 'பாதியும் ஆய் முற்றும் ஆயினர்க்கு' என்றதால் இக்கருத்து விளங்குதல் காண்க.

அன்றித் திருவருளேக்கம் முழுதும் தோய்ந்த சிவஞானி யர்க்குச் சிவம் பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்தருளும் பரிபூரண ஆனந்தபோதமாகக் காட்சியளித்தலின் 'முற்றும் ஆயினர்' என்றும், ஆற்றில் ஒருகாலும் சேற்றில் ஒருகாலும் வைத்தாற்போலப் பாச ஞானத்திலும் ஈச ஞானத்திலுமாக ஒன்றுவிட்டு ஒன்று பற்றும் சாதகர்க்குப் பாசப்பற்று அகன்று ஈசப்பற்று உண்டானபோதுமட்டும் வெளிப்படுதலின் 'பாதியு மாய்' என்றும் கூறினர் எனலுமாம்.

பந்தம் - மலமாயை கன்மங்களால் விளையும் கட்டு. பந்தம், பாசம், கட்டு என்பன ஒருபொருட்சொற்கள். அக்கட்டினின் றும் உயிர்களை விடுவிக்க இறைவன் உயிர்களுடன் கலந்து நின்று திரோதானசத்தியால் மறைப்பித்துப் பாசத்திலழுந்தச் செய்தலின் 'பந்தமுமாய்' என்றும், திருவருட்சத்தியால் சிவ ஞானம் உதவி, உயிர்கள் பாசங்களின் நீங்கிப் பரிபாகமுற்றுப் பேரின்பநுகர்ச்சிக்கு உரியனவாகச் செய்தலின் 'வீடுமாயினன்' என்றும் கூறினர்.

ஆதி - முதல். எவையெவை முதலாக எண்ணப்படுகின்ற னவோ அவை யாவும் காரியமாய்ச் சிவனொருவரையே முதலா கக் கொண்டிருத்தல் அளவைகளானும் அனுபவத்தானும் அறியப்படுதலின் 'ஆதியும் ஆயினன்' என்றார்.

அந்தம் - இறுதி. காணப்படுகின்ற உலகெல்லாம் தத்தம் பூதங்களில் ஒடுங்க, பூதமும் தன்மாத்திரையில் ஒடுங்க, அவை களும் மாயையுள் ஒடுங்க, மாயையும் சத்தியுள் ஒடுங்க, சத்தி யும் தம்முள் ஒடுங்கத் தாமே முடிவாக இருத்தலின் 'அந்தமு மாயினன்' என்றார்.

இத்திருப்பாடல், விதியும் செயலும் மெய்ம்மையும் பொய்ம் மையும் துன்பமும் இன்பமும் ஆதியும் அந்தமும் முதலாக இறைவன் இருக்கும் இயல்புகளை அறிந்து அனுபவிக்கச்செய்த லின் ஆனந்தமளேலயமாதற்கு இயைபானமை காண்க.

# 10. திருக்கோத்தும்பி

[சிவனோடு ஐக்கியம்]

அடிகளார் திருத்தில்லையில் எழுந்தருளியிருந்தபோது அருளியது. தண்பொழிலில் மலர்களில் மொய்க்கின்ற வண்டுகளில் அரசவண்டைப்பார்த்து, 'நீ இறைவன் திருவடிக்கண் சென்று ஊதுக' என்று அதனைத் தூதனுப்பு முறையில் கூறுகின்றார்.

தும்பி என்பது வண்டு. சுரும்பு, தேன், ஞிமிறு என்ற நான்குவகையான தேனீக்களில் ஒன்று. நான்குவகையுள் வண்டும் தேனும் நறுநாற்றத்தில் செல்வன; ஏனைய இரண்டும் எல்லா நாற்றத்திலும் செல்வன. ஆதலின் ஈண்டு கோத்தும்பி என்பது நறுநாற்றத்தில் செல்லும் வண்டினை என்க. அவற்றுள் சிறந்தது அரசவண்டாகிய கோத்தும்பி.

பிரிவாற்றாத தலைவி தலைவனிடம் சென்று தன் நிலையைக் கூறிவரும்வண்ணம் வண்டைத் தூதனுப்பும் குறிப்புத்தோன்றப் பாடப்படுவது. இப்பதிகம் முழுவதும் கோத்தும்பி என்று முடிதலின் 'திருக்கோத்தும்பி' என வழங்குவதாயிற்று.

மணிவாசகப் பெருந்தகை, ஆன்மநாயகனும் குருந்தினடியில் குருநாதனுமான தலைவனை விட்டுப் பிரிந்த நாள்முதல் ஒவ்வொரு கணமும் பிரிவுத்துன்பம் பெரிதாகத்தோன்ற அதனால் குருந்தமரத் தடியில் தீண்டியும் பேசியும் காட்டியும் அருளிய பேரின்ப நிலையாகிய ஆனந்தத்தில் மனோலயப்பட்டு, மனனுணர்வால் (அறிவுக் காட்சியால்) அவனோடு ஐக்கியமாய்ப் புறத்தாலும் பொருந்தவேண்டிய இன்றியமையாமையை எண்ணி, வண்டினைத் தூது அனுப்புகின்றார். இதனாலேயே இதுனுட்கிடை சிவனோடு ஐக்கியம் எனப் பழைய குறிப்பொன்று தெரிவிக்கிறது. சிவனுடன் இடையறாது நிற்றல் என இதற்கு உரைகாண்பர் முன்னையோர்.

'உயர்போதம் ஒரு வண்டாகச் சித்தவிகாரத் தூது செப்பிவிடல் கோத்தும்பி' என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணப்பகுதி. இதனால் சிவபோதத்தை ஒரு வண்டாகவும் தமக்குத் தோன்றும் சித்த விகாரத்தை அது தூதுசென்று சொல்லும் செய்தியாகவும் கருதச்செய்தல் காண்க.

திருவாதவூரர் புராணத்து, பூஞ்சோலையில் பூங்கொத்துக்களின் பக்கத்தே ஊதுகின்ற வண்டைப் பார்த்து, 'ஏ வண்டே! நீ என் நாயகன் திருவடித்தாமரைகளில் சென்று ஊதுக' என்று வேண்டிக் கொண்டதாக 'ஞாங்கரின் முரலுந்தும்பி தன்னையும் நயந்து நாதன், பூங்கழல் வழுத்துக என்று புனித கோத்தும்பி சொன்னார்' என்ற பகுதி தெரிவிக்கின்றது.

பழைய உரை, வண்டு பறப்பதுபோல மங்கையர் பறந்து சென்று விளையாடுகின்ற ஒருவகை ஆனந்த விளையாட்டு தும்பி யாடுதல்; அதிலே பாடப்படுகின்ற பாட்டு கோத்தும்பி என்று கூறும். இதனைச் "சட சித்து எங்கணும் தாமே நிறைந்த சிவானு பவ சுவானுபூதிகம் விளைந்த அடியார்கள் 'அவ்விளக்கம் எனக்குக் கிடைத்தது உனக்குக் கிடைத்தது' என்று ஒருவர்க்கொருவர் மடி பிடித்துக்கொண்டு வண்டு சுழலுகிறதுபோலச் சுழலும் ஆனந்த விளையாட்டில் சொல்லுகிற பாடல்" என்றும் விளக்கந்தரும்.

இப்பகுதியில் திருவடிப் பெருமையும், அது உயிர்களால் முற்றும் உணர்தற்கருமையும், மனமொழி மெய்களுக்கு இனிதாத லும், அகப்பற்று புறப்பற்று நீங்கிய அனுபவமும், அது இது என ஐயப்படாத பெருமையும், மனவிகாரம் அகற்றியுயர்தலும், 'நினைக்க அரிதாதல், ஒன்றாயிருந்து எங்கும் வியாபித்திருத்தல், தாய்போற் கருணைசெய்தல், திருவருளும் தானுமாகவே காட்சியளித்தல்' முதலியனவும் கூறப்பெறுதல் காண்க.

வைணவப் பிரபந்தங்களில் திருமங்கை ஆழ்வார் அருளிய பெரிய திருமொழியில், 8-ஆம் பத்து 4-ஆம் திருமொழி முழுதும் 'கோற்றும்பி' என முடிகிறது. கோற்றும்பி என்பது கோற்றேன் என்புழிப்போல, பூங்கொம்புகளில் வசிக்கும் தேன் எனப் பொருள் படும். கோற்றும்பியை நோக்கி ஆழ்வார் திருமாலின் அவயவங் களில் சென்று ஊதுமாறு பணிக்கின்றமை காண்க. ஆனால் தேனைக் கோத்தும்பி என அதன் உரைகாரர் பொருள் காண்பர்.

## தரவுகொச்சகக்கலிப்பா

### திருச்சிற்றம்பலம்

*215* *பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த*
*நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்*
*மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்*
*சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.* **1**

*இ - ள் :* *அரசவண்டே!* செந்தாமரை மலரின்மீது ஏறி யிருக்கும் தலைவனாகிய பிரமனும் இந்திரனும் அழகமைந்த

பிரமன் நாவில் ஏறியுள்ள செல்வியாகிய நாமகளும் திருமாலும் நான்கு கூறுபட்ட வேதங்களும் பெரிய ஏற்றினையுடைய ஒளிவடிவான உருத்திரனும் ஏனைய தேவர்களும் ஆகிய யாருமறியாத இடபத்தை வாகனமாகக்கொண்டு செலுத்துகின்ற திருவடிக்கண் சென்று ஊதுவாயாக என்றவாறு.

இம்முதற்பாட்டில் சேவடிப்பெருமையைத் தெரிவிக்கின்ருர்.

பிரமன் முதலிய தேவர்களாலும் அறியப்படாத பெருமை வாய்ந்த சேவடிக்கண் சென்று ஊதுக என்பது கருத்து.

பூ ஏறு கோன் - பூவின்கண் ஏறி இருக்கின்ற பிரமன். புரந்தரன் - உலகத்தைத் தரிப்பவன் என்னும் காரணப்பொருளதாய் இந்திரனை உணர்த்திற்று. பொற்பு - அழகு; பொலிவும் ஆம். நா ஏறு செல்வி - நாமகள். நாரணன் - கடலைப் படுக்கையாக உடையவன். மா ஏறு சோதி - அக்கினி; ஈண்டு அக்கினி வடிவான உருத்திரனை உணர்த்திற்று. சே - இடபம்.

தேவர்களில் வேதங்களை முறையே ஓதி, நூலறிவால் சிறந்தவன் பிரமன் ஆதலின் அவனை முற்கூறினர். அவனுல் அறியப்படாத சேவடி என்றது இறைவன் திருவடி பாசஞானத்தால் அறியப்படாதது என்பதனை உணர்த்தியவாறு.

புரந்தரன்-போகமே பெரிதென்னும் போகியாய், அரவகல் அல்குலார்பால் ஆசைநீத்தவர்க்கே அமைவதாகிய திருவடியை அறியாதவன் என்பதைப் 'புரந்தரனும் அறியாச் சேவடி' என்ருர்.

நாமகள் எல்லாக் கலைகட்கும் இறைவியாய்க் கலையறிவை உதவுபவளாதலின்அவளாலும் அறியப்படாத திருவடி என்றது திருவருட்சத்தியின் கோடிநூருயிரம் கூற்றினுள் ஒருகூருதலின் அவளால் திருவருட் சத்தியாகிய திருவடி அறியப்படாத தாயிற்று.

நாரணன், ஒரொருகால் இறைவன் அருளால் வந்த காத்தற்ருெழிலை மேற்கொண்டிருந்தும் தாமே முதல் எனத் தருக்கித் திரிகின்றவன் ஆதலின் அவனுலும் அறியப்படாத அடி என்பார் 'நாரணன் அறியாச் சேவடி' என்ருர்.

வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனுதலின் இறைவன் இயல்பை ஓரளவு உரைப்பன ஆயினும் அவன் இயல்புகள் அனைத்தும் அவற்றுள் அடங்காமையின்

ஊழிக்காலம் ஓலமிட்டும் அறியாதது அடி என்பார் 'நான் மறையும் அறியாச் சேவடி' என்ருர்.

மா, விலங்கின் பொதுப்பெயர். ஈண்டு ஆட்டை உணர்த் திற்று. மா ஏறு சோதி - ஆட்டை ஊர்தியாகக்கொண்ட அக்கினி. அக்கினியாலும் அறியப்படாத திருவடி என்றது, வைதீக வேள்வியிலும் சிவ வேள்வியிலும் அங்கியே சிவமாகப் பாவிக்கப்படுவதாயினும் இறைவனுக்குக் கொடுக்கப்படுகின்ற அவி முதலியவற்றை ஏற்பதாயினும் சிவபெருமானுடைய அட்டமூர்த்தியுள் ஒன்ருய் விளங்கும் சோதி அவனடியை அறியாது என்றவாரும். இதற்கு இடபவாகனத்தை உடைய ருத்திரனுகிய சோதி எனப் பொருள்கொண்டு இந்நயங்காண் டலும் ஒன்று.

சிலர், மா ஏறு சோதி என்பதற்குத் திருமகள் ஏறி அமரும் செங்கதிர்ச் சோதி என்றும், குதிரை வடிவாகிய திருமகள் என்றும், சூரியன் சந்திரன் அக்கினி என்ற மும்மண்டலச்சோதி என்றும் உரை காண்பர். சிலர் சேவேறு சேவடி எனப் பின் வருதலின் மாவேறு சோதி என்றதற்கு இடபத்தை வாகனமாகக் கொண்ட உருத்திரன் என்றல் ஆகாதெனக் கூறுவர். உருத் திரர் உருத்திரலோகத்துத் தலைமை பூண்டு சிவசாருபம் பெற்ற ஆன்மாக்களுள் ஒருவராதலின் அவரால் அறியப்படாததும் அவர் இடபமேறி இருத்தலும் பொருந்துவதே ஆம். உருத் திரனையும் லய போக அதிகார சிவமாகிய மகாருத்திரனையும் ஒன்ருக எண்ணி மயங்குவார் கூற்றிற்கு யாம் என்செய்வோம் என ஒழிக.

வானவர் - அட்ட வசுக்கள், மருத்துவர், வாயு முதலிய ஏனைய தேவர்கள். தேவர் தலைவராகிய இந்திரன் முதலியோ ராலும் அறியப்படாதது அடி எனவே வானவரால் அறியப் படாமைக்குக் காரணம் கூறவேண்டா என விடுக்க.

சே ஏறு சேவடி: சே - இடபம். அறவடிவாகிய இடபத்தில் ஏறி வீற்றிருக்கும் சேவடி என்றமையால், சேவடி எஞ்ஞான்றும் விளங்குமிடம் அறமே என்பதும், இந்திரன் முதலாயினேர் அறியாமைவயப்பட்டு வேற்றிடங்களிற்றேடி அறியாது உழன் ருர் என்பதும் பெறப்படுதல் காண்க.

வண்டே! நீ அங்ஙனம் செல்லாது அறவிடை இருக்கும் இடம் சென்று திருவடியைச் சார்ந்து ஊதுக என்றும் பணித் தாளாம்.

சேவடியைச் சென்றடையச் சொன்னதால்
ஐக்கியமாயிற்று.

216 நானார்என் னுள்ளமார் ஞானங்களார் என்னையாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேல் மதிமயங்கி
ஊனா ருடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. 2

இ - ள்: கோத்தும்பீ! தேவர்கட்குத் தலைவனாகிய சிவ பெருமான் என்னை வலியவந்து ஆட்கொண்டிலனாயின், நான் யார்? என்னுடைய மனம் யார்? என்னையும் தன்னையும் உணர்த்திய ஞானங்கள் யார்? இவ்வுலகத்து என்னை யார் அறிவார்கள்? மதிமயங்கியாகிய பிரமனின் ஊன் நிரம்பிய கபாலத்தில் உண்ணுதற்குரிய பிச்சையைத் தேர்ந்து உண்ட சிற்றம்பலநாதனுடைய தேன் நிறைந்த திருவடித்தாமரையில் சென்று ஊதுவாயாக என்றவாறு.

இத்திருப்பாடல் இறைவன் தன்னை ஆண்டதால் தனக்கு உண்டாகிய பெருமையை அறிவிக்கின்றது.

தேவர்களுக்குத் தலைவனாகிய சிவன் எனக்கும் தலைவனானான்; ஆனால், சிவன் என்னை அடிமையாக ஏற்றான்; அதனால் எனக்கும் அவனுக்கும் என்றும் இடையறாத ஆண்டான் அடிமைத்திறம் நின்று நிலவுகிறது; இதுவே தேவர்களைக் காட்டிலும் எனக்கு வாய்த்த வாய்ப்பு என்ற பொருள்பட 'வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்' என்றார்.

நான் உயிர்; என்னுடைய அறிவு உணர்த்த உணரும் தன்மையது; உணர்த்திய அளவினதாக உணர்வது; முற்றும் ஒருசேர உணரும் ஆற்றல் இல்லாதது என்ற இயல்புகளை அவன் ஆண்டமையால் உணர்ந்தேன் என்பார் எதிர்மறை வாய்பாட்டில் வைத்து 'ஆண்டிலனேல் நான் யார்' என்றார். நான் யார் என்றது, நான் ஒரு பொருளாகேன் என்னும் குறிப்பில் நின்றது. ஆகவே அவன் ஆண்டது ஆன்மரூபம ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி இவற்றிற்குக் கீழுள்ள தததுவ ரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி என்பவற்றைத் தந்து என்னை எனக்கு அறிவித்தது என்றவாறும்.

உள்ளம் - மனம். இது அந்தக்கரணங்களில் ஒன்று. எம்பிரான் என்னை ஆண்டமையால் 'யான் அவன் அடிமை' என்பதை அறிந்தேன். என்னுடைய உள்ளம் அவனுடைமை என்பதையும் உணர்ந்தேன். உணர்ந்த அக்கணமுதல் என்

உள்ளம் உயர்ந்தது. ஒரு பொருளாகவைத்தும் போற்றப் படுவதாயிற்று என்பதனை எதிர்மறை வாய்பாட்டால் 'ஆண் டிலனேல் உள்ளம் யார்' என்றார்.

உள்ளம் என்ற அஃறிணையை யார் என்ற உயர்திணை வினை வினைக் குறிப்புமுற்றினைக்கொண்டு முடிய வைத்தது வழுவா யினும் இறைவன் ஆட்கொண்ட உள்ளம் உயர்வுடைத்தாதல் கருதியதாதலின் அமையும் என்க.

ஞானம், உலகியலறிவும் இறையறிவும் என இருவகை. இறைவனைச் சார்ந்து பிரியாத இறையறிவே சிறந்ததாதலையும், 'ஆண்டிலனேல் ஞானங்கள் ஆர்' என்று சாராதகாலத்து அறி வுக்குளதாகும் இழிவையும் புலப்படுத்தினர். யான் இறைவன் அடிமை, சிவப்பேறு அடையத்தக்க சித்துப்பொருள் என்ப தனை யானும் அறியமுடியாமல் மந்திரி முதலிய பதவிகளிற் சிக்கி என்வாழ்வு வீணே கழிந்திருக்கும் என்று இரங்குவார் 'என்னை ஆண்டிலனேல் என்னை யார் அறிவார்' என்றார். இவ்விரண்டு அடிகளாலும் சிவபரம்பொருள் தம்மை ஆண்ட மையால் தாம் அடைந்த நலன்களைப் புலப்படுத்துகிறார்.

மதிமயங்கி - அறிவு திரிந்தவனாகிய பிரமன். படைப்புத் தொழில் தனக்கே உரியது என்றும் சுதந்தரமாகத் தானே இயற்றவல்லமையுடையன் என்றும் தருக்கியமையால் அவனை மதிமயங்கி என்றார். இதனை,

"அயன்தனை ஆதி யாக அரனுரு என்ப தென்னை
பயந்திடும் சத்தி யாதி பதிநலாற் படைப்பு மூலம்
முயன்றனர் இவரே ஆயின் முன்னவன் என்னை முற்றும்
நயந்திடும் அவனி வர்க்கு நண்ணுவது ஒரோவொன் றுமே"

என்று சிவஞானசித்தியார் தெரிவித்தவண்ணம் அயன் படைப் பானாக என்று திருவருட்சத்தியை ஒருசிறிது பதிக்க அதனால் நாம் படைக்கிறோம் என்பதனை மதிமயங்கிய அவன் மறந்தான் என்றார்.

'படைப்பது நினைவொடு பதுமநன்மலர் மேவிய பரனாகிய' இறைவன் பிரமனுக்குப் படைப்புத்தொழில் அருளியதைத் திருஞானசம்பந்தரும் சிவபுரத்தேவாரத்தில் கூறியது காண்க.

"ஒடுங்கி மலத்துளதாம்" (சிவஞானபோதம்) என்ற விடத்து ஒடுங்கி என்பதுபோல மயங்கி என்பது பெயராய் நின்றது. மயங்கியினுடைய தலை எனக் கூட்டுக.

ஊன் ஆர் உடை தலையில் - ஊன் நிறைந்த உடைந்த தலையாகிய கபாலத்தில். பிரமகபாலம் கிள்ளப்பட்ட அணிமையையுடைத்தாதலின் அதில் ஊன் நிறைவதாயிற்று. அதனையே பிச்சைஏற்கும் பாத்திரமாக இறைவன் கொண்டார் என்பதனைத் 'தலையில் உண்பலிதேர் அம்பலவன்' என்றார். பிரமன் ஐந்து தலைகளையுடையனாய், படைப்புத்தொழில் கைவரப்பெற்ற கர்வத்தால் தாமே முதல்வன் எனத் தருக்கி நின்றான்; இறைவன் அவன் தருக்கையடக்கத் திருவுளங்கொண்டு அவனது உச்சித் தலையைப் பூக்கொய்வதுபோலத் தன் நகத்தால் கொய்து, பிறரும் இதனை அறிந்து உய்யும் அடையாளமாக அதனையே கொண்டார் என்பது திருக்கண்டியூர்த் தலவரலாறு.

பழைய உரையும் 'மதிமயக்கத்தால் படைப்புத்தொழில் தனது சுதந்தரம் என்று நினைத்த அயன் தலையைக் கிள்ளி' எனக்கூறுதல் காண்க. இஃதறியாதார் 'வானோர் பிரான் மதி மயங்கி என்னை ஆண்டிலனேல்' எனக்கூட்டி ஒன்றற்கும் பற்றாத என்னை இறைவன் மதிமயங்கி ஆட்கொண்டிலனேல் என்பர். இறைவனுக்கு மயக்கம் எங்கும் என்றும் இல்லாமை கொண்டு இவ்வுரை போலியாமென மறுக்க. சிலர் மதிமயங்கி நானார் எனக் கூட்டி, இன்னே மயக்கமுற்றேனாகிய யான் எத்தகையனாவேன் என்று பொருள் காண்பர். ஆன்மாவுக்குள்ள மயக்கம் நீங்குதலும், ஆட்கொள்ள இறைவன் திருவுள்ளம் பற்றுதலும், சூரியன் எழ இருள் மாய்வதைப்போல ஒருங்கு நிகழ்வன ஆதலின் மதிமயக்கம் பரிபாகமுறும் ஆன்மாவிற்கு அப்போது இல்லையாமெனத் தெளிக.

இதுவும் என்னைத் தனக்குத் தந்த தலைவன்தாளையடைந்து ஊதுவாயாக எனப் பணித்தலின் சிவனோடு ஐக்கியம் உணர்த்தியவாறு.

217 நினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன் உண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 3

இ - ள்: கோத்தும்பீ! தினையளவு தேனுள்ள பூக்களில் தேனையுண்டு நீ வருந்தாதே; நினைக்குந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும் ஏன்? எப்போதும் எலும்புகளனைத்தும் உள்ளே நெக்குருக, ஆனந்தமாகிய தேனைச் சொரிந்து கொண்டேயிருக்கும் கூத்தினையுடைய பெருமானிடம்சென்று ஊதுவாயாக என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் திருநடனத்தின் இனிமையை யுணர்த்துகிறது.

பூக்களிலுள்ள தேன் அணு அணுவாக மிகக் குறைவாக இருக்கும். நீ ஆசைதீர உண்ணவும், திரட்டவும் பலபூக்களிற் சென்று அலையவேண்டியிருக்கும். அதனால் தேனின் சுவையும் மணமும் பூக்களுக்குத்தக மாறுபட்டிருக்கும். அதனால் நீ நல்ல தையே உண்ண முடியாது. அன்றியும், போதாமிருக்கும் போது தேன் சுரக்கும், மலராயின் வற்றும். யான் அறிவிக்கும் பூவோ நீ நினைக்கும்போதெல்லாம் ஊறும்; காணும்போ தெல்லாம் ஊறும்; அப்பூவைப்பற்றிப் பேசும்போதெல்லாம் தேனூறும்; எப்போதும் ஊறிக்கொண்டேயிருக்கும்; அதனை உண்ணுதலால் அடையும் பயனோ மிகப்பெரிது; வளையாத இளகாத எலும்புகள் அனைத்தும் உள்ளே இளக்கங்கண்டு நெகும்; அதனை உண்பதற்காகக் கூத்தப்பெருமானிடம் நீ சென்று ஊதுக என்றார்.

முன்னைத் திருப்பாடல்களில் 'சேவடிக்கே சென்றூதாய்' 'தேனார் கமலமே சென்றூதாய்' என்றவர் இப்பாடலில் 'குனிப் புடையானுக்கே சென்று ஊதாய்' என்றமை மிக நயந்தருவ தொன்றும். திருவடியே தேன்சுரக்கும் மலராகக்கண்ட அடிக ளாரின் அநுபவமுதிர்ச்சி இறைவனையே தேனடையாக அநுப விக்கச்செய்கிறது என்பதாம்.

பூவுலகில் காணப்பெறும் இன்பங்கள் யாவும் சிற்றின்பம்; அவற்றையுண்டு வீணே காலங்கழிக்காதே! மனம் மொழி மெய் களால் நுகரத்தக்கதும் நுகர்ந்தாரது ஊனினையுருக்கி உள் ளொளி பெருக்க வல்லதும் ஆன ஆனந்தத்தேனைச் சொரியும் தேனடை ஒன்றுண்டு; அதுதான் ஆனந்தக்கூத்தன் திருவுரு; நீ அங்கேசென்று பண்ணொன்றப் பலபாடல்களை ஓது என வண்டைப் பார்த்துச் சிவபோகம் துய்க்குநெறியை உணர்த் தினர் என உயர்பொருளும் கொள்ளக்கிடத்தல் காண்க.

சிவஞானியர்கள் மகளிர் விளையாட்டிலும், மக்கள் விளை யாட்டிலுங்கூட மகேசன் சிந்தனையை மறக்கமாட்டார்கள்; அவற்றை அடிப்படையாகக்கொண்டு உலகிற்கு மிக உயர்ந்த அநுபவத்தை அள்ளி வழங்குவார்கள் என்பதை மனங் கொண்டுய்க.

'குனிப்புடையானுக்கே சென்று ஊதுக' எனப் பணித்த வின் சிவனோடு ஐக்கியமாதல் காண்க.

218 கண்ணப்ப னொப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய்கோத்தும்பீ. 4

இ-ள்: கோத்தும்பீ! கண்ணப்பரைப் போன்றதோர் அன்பு அடியேனிடம் இல்லாமையைக் கண்டறிந்தபிறகும், என் தந்தையாகிய இறைவன் எனக்கு இருவினை ஒப்பு வரப் பண்ணி, என்னையும் அடிமையாக ஏற்று, அழகாகப் பணி கொண்டு, என்னைத் 'தில்லைக்கு வருக' என ஆணைவழங்கிய, பொடியான அழகிய திருநீற்றினையணிந்த சிவபெருமானிடம் சென்று ஊதுவாயாக என்றவாறு.

இத்திருப்பாடல், பரிபாகமில்லாத தம்மை ஆட்கொண்டு திருவருளனுபவத்திற்கு ஆளாக்கியமை தெரிவிக்கிறது.

என் தகுதியில்லாமையை அறிந்து தகுதி வரப்பண்ணி ஆட்கொண்ட பெருமான்பக்கல் வண்டே! நீ சென்று ஊதுக என்பது கருத்து.

நாளாறினில் கண்ணிடந்தப்பவல்ல முறுகிய அன்பு கண் ணப்பருடையது. தனக்குப் பசிக்க இறைவற்கும் பசிக்குமே! தனக்குச் சுவையுள்ளதொன்று இறைவற்கும் உகந்ததாமே! இறைவன் இக்காட்டில் மலை உச்சியில் தனித்திருக்கின்றாரே! இறைவன் கண்ணில் குருதியொழுகத் தன் கண் அதற்கு மருந் தாமே! என்ற அன்பின் எல்லைக்கு அளவு ஏது? ஆகையால் கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு தம்மாட்டின்மையை இறை வன் அறிந்திருந்தும் என்றார். கண்டபின்னும் என்றிருக்க வேண்டிய உம்மை விகாரத்தால் தொக்கது.

சேயின் குணம் அறிந்து அவனை எவ்வகையினும் உயர்த் தவே எண்ணுகின்ற தந்தைபோல, இறைவன் என் அன்பற்ற தன்மையை அறிந்திருந்தும் அணைத்தும், அடித்தும், கொடுத் தும், கூறியும் திருத்தி உய்யக்கொண்டான் என்பார் 'என் அப்பன்' என்றார்.

என் ஒப்பில் - எனது இருவினைகளும் ஒத்தகாலத்தில். இறைவன் உயிர்களை உய்யக் கொள்ளுகின்ற காலம் இருவினை யொப்பும் மலபரிபாகமும் வந்த பின்னராதலின் 'என் ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி' என்றார். 'என்னையும் என் ஒப்பில் ஆட்கொண்டருளி' எனக்கூட்டுக. இருவினை ஒப்பா வது, ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதல் இன்றிப்

புண்ணிய பாவமிரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து, விடுவோனது அறிவின்கண் அவ்விரு வினையும் அவ்வாறு ஒப்ப நிகழ்தலாம் என மாதவச் சிவஞான சுவாமிகள் மாபாடியத்துக் கூறுதல்கொண்டு தெளிக.

இங்ஙனம் அன்றி 'என் ஒப்பில் என்னையும்' எனக்கூட்டி தீமையில் எனக்கு ஒப்பாவார் என்னையன்றிப் பிறர் ஒருவருமில்லாத என்னையும் எனக் கூறுவாரும் உளர். இதனால் போந்த பயனின்மை காண்க. என்னையும் என்றதில் உம்மை இழிவு சிறப்பு. பழையவுரை எனக்குள்ள அன்புக்கு வேறொருவரும் ஈடு இல்லையான என்னையும் என்று கூறும்.

வண்ணப் பணித்து - அழகாகக் கட்டளையிட்டு. பணி கொள்ளுவதிலும் பணியாள் வெறுக்காமல் விரும்பிச் செய்யும் படி நயமொழியாலும் பயன் பல தந்தும் பணிகொள்ளுதலே அழகாகப் பணிகோடலாம். 'என்னைத் தில்லைக்கு வருக' என்றது தேவர் முதல்ானோரும் ஏனைச் சிவனடியாரும், இத் தகைய இறைவன் வாய்மொழி எமக்கும் கிடைக்காதா? என்று ஏமாந்திருப்ப, தன்னைமட்டும் அழைத்த அருமைதோன்ற 'வா என்ற வான்கருணை' என்றார். பழையவுரை 'குணமுடையவனாக என்னை மதித்து' என்று கூறும்.

பொன் நீறு - அழகான திருநீறு. சுண்ணப் பொன்னீறு - பொடியான அழகிய திருநீறு. "சுந்தரமாவது நீறு" என்றதும் காண்க.

நீற்றற்குச் சென்று ஊதாய் என்றது, மணற்கு ஈன்ற முனை என்பதுபோல நான்கனுருபு ஏழன்பொருளில் வந்த உருபுமயக்கம்.

'என்னை வாவென்ற வான்கருணை' 'நீற்றற்கே சென்றூது' என்பன ஐக்கியநிலையை அறிவிக்கின்றன.

219 அத்தேவர் தேவர் அவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேது மில்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 5

இ - ள்: அரசவண்டே! அத்தேவரே தேவர்; அவரே அனைவர்க்கும் தேவர் ஆவார்; என்று இவ்வாறு பொய்யான தேவர்களைப்பற்றிப் புகழ்ந்து பேசிப் புலம்புகின்ற பூமியில், ஒருவகைப்பற்றுமின்றி என்பற்றுக்களினின்றும் நீங்கியுய்ய,

அடியேன் பற்றி நின்ற உண்மைக் கடவுளரின் கடவுளாகிய சிவபெருமானிடத்தே சென்று ஊதுவாயாக என்றவாறு.

இத்திருப்பாடல், பொய்த்தேவர்களை மெய்க்கடவுள் எனப் புகழ்கின்ற பூதலத்தில், நீ உண்மைக்கடவுளை அறிந்து ஊதுக என வண்டினைப் பார்த்து ஆணை தந்தது.

வண்டே! தேவரல்லாதாரைத் தேவர் எனச் சாதித்து மயங்கும் பூமியில் நீ உண்மைத்தெய்வத்தை அடுத்து ஊதுக என்பது கருத்து.

உயிர்கள், தமது சிற்றறிவால் சுட்டியறியப்படும் பொருளாயும், வீரம் சோகம் காமம் முதலிய குணங்களான் விருப்பு வெறுப்பு உடையனவாயும் உள்ள சிறுதெய்வங்களைப் பெரிதாக எண்ணிப் போர்நீக்கம் பகைவெற்றி பொருளாதிகளை அடைந்து, அவர்களே எல்லாத் தேவரினும் சிறந்தார் எனச் சாதிக்கும் பூதலத்தே என் உலகவருடைய அறியாமையை உணர்த்துவார் 'பொய்த்தேவு அத்தேவர்தேவர்; அவர்தேவர்; என்று இங்ஙன் பேசிப் புலம்புகின்ற பூதலத்தே' என்றார்.

பூதலம், ஆகுபெயராக உயிர்களையுணர்த்திற்று. அறியாமை வயப்பட்டு அரற்றுகின்றார்கள்; அதனால் அவர்கள் காண்பன சிற்றின்பமேயன்றி வேறன்று என்பார் 'புலம்புகின்ற' என்றார்.

பத்து - பற்று; எதுகைநோக்கித் திரிந்து நின்றது. ஏதும்- ஒரு சிறிதும். 'எனது' என்னும் புறப்பற்றுக்கள் சிறிதுமின்றி, முற்றும் வறண்ட ஆற்றுவெள்ளம் நீரோடிய சுவடுமின்றிக் கெட்டதுபோலக் கெட்டு நீங்க என்பார் 'பத்தேதும் இல்லாது என் பற்று அற' என்றார்.

மனம் ஒன்றனைப் பற்றியே நிற்கும் இயல்பினது. ஒன்றின் பற்றறவேண்டுமாயின் வேறொன்றனைப் பற்றிநிற்கவேண்டும். இத்தகைய மனத்தை எங்ஙனம் பற்று ஏதுமில்லாமல் பற்றறச் செய்ய இயலும் எனின், உண்மையறிவானந்த உருவினராகிய மெய்த்தேவனைப் பற்றி நின்று இப்பொய்ப்பற்றை அகற்ற வேண்டும் அங்ஙனம் அகற்றினேன் என்பார் 'நான் பற்றி நின்ற மெய்த்தேவர்' என்றும், அவரே தேவதேவர் என்பார் 'மெய்த்தேவர்க்கே' என்றும் கூறினார்.

இந்தப் பாடலுக்குப் பொய்த்தேவு பேசி உலகினையாதல், உண்மைத் தெய்வத்தையாதல் பற்றிக்கொள்ளாது தனித்து வருந்துகிற இவ்வுலகிலே, யான் உலகப்பற்று ஒழியப் பற்றிய

உண்மைத்தேவனைச் சார்ந்து ஊதுக எனப் பணிப்பதாக உரை கூறுவாரும் உளர்.

பழையவுரை அத்தேவர் தேவரோ? அன்றி அவர்தேவரோ? எனச் சந்தேகமுற்றுப் பொய்வழியே புலம்புவதான பூவுலகம் எனவும், 'நான் பற்றி நின்ற' என்பதற்குத் திருவடிஞானமே பொருளாகப் பற்றுவித்த எனப் பிறவினைவாய்பாடு தொக்க தாகவும் பொருள் கூறும்.

'பொய்த்தேவு பற்றுது மெய்த்தேவனைச் சார்க' என்றமை யால் இது சிவனேடைக்கியம் கூறுவதாகின்றது.

*220 வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலம் கல்வியென்னும்*
*பித்த வுலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்*
*சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த*
*வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 6*

இ-ள்: கோத்தும்பீ! தேடிக் குவித்துவைத்த செல்வம், பெண்டிர், மக்கள், குலப்பிறப்பு, கல்வி என்னும் இவற்றில் வைத்த பற்றின்முதிர்ச்சியால் பித்தங்கொண்டு தடுமாறும் உலகிலே, பிறப்பு இறப்பு என்னும் மனவிகாரக்கலக்கத்தைத் தெளிவித்த மெய்ஞ்ஞான வடிவாகிய சிவபெருமானிடம் சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், பெண், பொருள், குலம், கல்வி இவை காரணமாக விளையும் கலக்கத்தைப் போக்கிய கடவுள் திருவடியில் ஊதுக எனப் பணிக்கின்றார்.

தேனைத் தொகுத்துவைத்து இழக்கும் வண்டுபோல, உண்ணுதும், உடாதும், தம்முடம்பு செற்றும், கெடாத நல்லறமும் செய்யாது சேர்த்துவைத்து இழந்துபோம் செல்வம் என்பார் 'வைத்த நிதி' என்றார். அதில் விளையும் பித்தமாவது ஈட்டும் போதும், கூட்டும்போதும், பகிர்ந்துண்ணும்போதும், இழக்கும்போதும் உண்டாகும் மயக்கமும், யாம் இத்துணைச் செல்வத்தை உடையோம் என்று செருக்கி அதனால் முந்திரிமேற் காணி மிகுமேல் தன்னை இந்திரனாக எண்ணிவிடுகின்ற மயக்கமும், அதனாற் பிறரை மதியாது செய்யும் கேடுகளும் பிறவுமாம்.

பெண்டிர் என்றது வாழ்க்கைத் துணையாக - அறத்துணையாக - தவத்துணையாகக் கருதாது காமக்கலனாகக் கருதும் பெண்டிரை என்க. இவர்களை அடைதற்கும், அடைந்தபின் அவர்கள் மனங்கோணுது நடத்தற்கும், அதன்பின் காத்தற்குமாக விளைகின்ற பித்தம்.

மக்கள் - பிள்ளைகள். பெறுங்காலும், வளர்க்குங்காலும், அவர்களால் குலத்திற்கும் தனக்கும் உண்டாகும் புகழ் இகழ்க ளாலும் விளைகின்ற மயக்கம்.

குலம் - குடிப்பிறப்பு. இது தொழிலானும், வாழ்கின்ற இடச் சூழலானும், உணவு உடைமுதலிய பழக்கங்களானும் விளைந்து அதனுள்ளும் தன்னலம் தலைதூக்கத் தமக்கும் தம்மைச் சார்ந்தார்களுக்குமே நலம் பெருக்கிக்கொள்ளும் கருவியாகப் பிற்காலத்தார் கொள்ளினும், குணமும், கொள்கையும் அடிப் படையாகக்கொண்டு, அறிவு, பண்பாடு, ஒழுக்கம் இவற்றை அறிந்துகொள்ளத் துணைசெய்வது. இதனால் விளையும் மயக்க மாவது முன் கூறியாங்கு குலப்பிறப்பு ஒன்றுமே போதும்; அதுவே உயர்வானது என்று கருதும் அறிவின் திரிபு.

கல்வி - ஞானநூற்படிப்பன்று; கருவிநூற்படிப்பாகிய பாச ஞானம். இதன் விளைவு யாம் பெரியர்; எம்மொப்பார் பிறர் இலர் என்று தருக்கச்செய்தலின் கலக்கமாயிற்று. இதுபோன்ற கலக்கங்களால் விளைந்த பித்தினையுடையது உலகம்.

இயற்கையே பித்தேறிய குரங்கு; கள்ளையும் குடித்தால் அது என்ன தீமை செய்யுமோ அதுபோல இயற்கையாகவே நிதி, பெண்டிர் முதலியவற்றால் பித்தேறிய உலகு, அதனோடு பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியும் சேருமானால் விளையுந்தீமை எவ்வளவு? என்று கருணைத் திருவுள்ளம்கொண்டு அக்கலக் கத்தைத் தெளிவித்த ஞான உருவினன் என்பார் ‘கலக்கம் தெளிவித்த வித்தகத் தேவர்க்கு’ என்றார்.

இதுவும் மனமயக்கம் நீங்கித் திருவடிச்சார்பு பெற்றமை யுணர்த்தலின் சிவனோடு ஐக்கியம் என்ற தலைப்பிற்கேற்றமை காண்க.

221 *சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்*
*கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை*
*ஒட்டாத பாவித் தொழும்பரை நாம் உருவறியோம்*
*சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ.* 7

இ - ள்: கோத்தும்பீ! எல்லாவகையினும் அறிவினைப் பொருந்தாத, திருவடித் தாமரையை ஒட்டிவாழாத பாவிக ளாகிய அடிமையே செய்வாரின் உருவத்தையும் நாம் அறி யோம்; விரைந்து நினைக்க மனத்தின்கண் அமுதம்போல் ஊறுகிற சங்கரனை, கெட்டறிந்தவனாகிய யான் மறப்பேனோ?

ஆதலால் அறிவுடைய பொருளாகிய பெரியோன்பாற்சென்று ஊதுக என்றவாறு.

இது, நினைக்கநினைக்க அமுதமாய் இனிக்கின்ற இறைவனை ஒருபோதும் நான் மறவேன்; அவன் திருவடியைச் சாராத பாவிகளை நாம் என்றும் அறியோம்; ஆதலால், பெரியோனாகிய அவன்பாற்சென்று ஊதுக எனப் பணிக்கின்றது.

கேடுபடாத் திருவடி - மாயேயமாகிய பொருள்களைப்போல ஆதலும் அழிதலுமில்லாது என்றும் நிலைத்த பேரின்பவடிவின தாதலின் இங்ஙனம் கூறினர். திருவடியைச் சார்ந்தவர்கள் கேட்டினை அடையார்களாதலின் அவர்கள்தன்மையைத் திருவடிக்கு ஏற்றி, கேட்டினை அடியார்கள் சாரவைக்காத திருவடி எனலும் ஆம். இதனால் இறைவனுடைய ஈறிலாத்தன்மையும் எல்லையிலா ஆனந்தமுடைமையும் உணர்த்தப்பெற்றன.

திருவடியை ஒட்டாத பாவத்தொழும்பர் - திருவருட்சார்பு இன்றி உலகச்சார்பே தலையாயது எனக்கொண்டு அதனைத் துய்த்தற்குப் பாவங்களையே செய்து உழலும் பாவிகளாகிய அடிமைகள். சிவநெறியில் தலைப்பட்டாருக்குத் தீயநெறியில் சார்தலும், தீயன எண்ணுதலும் கூடா ஆகலின் அத்தகைய பாவிகளின் உருவத்தையும் நாம் அறியோம் என்றார். யான் பாவியைக் கண்ணாலும் காணேன் என்பதுபோல 'உருவறியோம்' என்பதும் ஒரு வழக்கு. உருவறியோம் என வண்டையும் தம்மகப்படுத்திக் கூறினர்; வண்டும் தீயனவற்றிற்செல்லாத தகுதிநோக்கி.

சட்டோ - விரைவாக. ஓகாரத்தை அசையாக்கி, சற்று நினைக்க எனலுமாம். ஈண்டு எதுகை நோக்கிச் சற்று என்பது சட்டெனத் திரிந்தது. இறைவன் உயிர்கள் சிறிது விரைந்து நினைக்க அவர்கள் மனத்தில் அமுதமாக என்றும் ஊறி இன்பஞ்செய்வான் என்பதனைச் 'சட்டோ நினைக்க மனத்து அமுதாஞ் சங்கரனை' என்றார். ஆன்மமுயற்சி சிறிதும் இறைவன் கருணை பெரிதுமாக விளங்குதல் தெரிவிக்கப்பட்டது.

கெட்டேன் - கெட்டழிந்தவனாகிய யான். ஒருமுறை திருவடியைச் சார்ந்து ஆனந்தத்தேனை அருந்திப் பேரின்பத்தில் திளைத்த நான், குருவடிவாய் இருந்த நீ மறைய, நின் பிரிவால் விளைந்த துன்பத்தை அறிந்து ஆற்றேனாயினேன்; அத்தகைய யான் இஞ்ஞான்று ஒருக்காலும் மறக்கமாட்டேன் என்பார் 'கெட்டேன் மறப்பேனோ' என்கிறார்.

பழைய உரை, சட்டோ நினைக்க என்பதற்கு விரைவான அற்பகாலம் அவனருளால் நினைக்க என்றும், கெட்டேன் என்பதற்குத் துன்பத்தால் அழுந்துவேனுயினும் மறவேன் என்றும், சிட்டாய சிட்டர்க்கு என்பதற்குப் பெரியோர்க்கும் பெரியோனுகிய மகாதேவனிடம் என்றும் பொருள் உரைக்கும்.

இதில் சங்கரனை மறப்பேனே என்றும், திருவடிச்சார்பு இல்லாதாரின் உருவத்தையும் அறியோம் என்றுங்கூறி மனத்து அமுதாய் இனிக்கவல்ல இறைவன்பால் ஊதுக என ஐக்கியப் படுத்துதலின் சிவனேடு ஐக்கியமாதல் தெளிக.

222 ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்ருக வைத்தென்னை நாய்சிவிகை யேற்றுவித்த
என்ருதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்ருத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 8

இ - ள்: கோத்தும்பீ! முதன்முதலில் சிவமாகிய ஒரு பொருளாய்த் தோன்றி, அதிலிருந்து எத்தனையோ கிளைகளை விட்டுப் பணைத்து, 'நாயைப் பல்லக்கில் ஏற்றியதுபோல' என்னை நன்ருகவைத்த என்னுடைய தாதைக்கும் தாதையின் தாதைக்கும் தாய்க்கும் தலைவனுகிய குறையாத செல்வன் பாற்சென்று ஊதுவாயாக என்றவாறு.

இது, இறைவன் ஒன்ருயும் பலவாயுமிருந்து ஆன்மாக்களை உய்யக்கொள்பவன் ஆதலால் நீ அவனிடம் சென்று ஊதுக எனப் பணிக்கின்றது.

"நிலவும் அருவுருவின்றிக் குணங்குறிகளின்றி நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி உயிர்க்குணர்வாகி" இருப்பது சிவமாதலின் 'ஒன்ருய் முளைத்து' என்ருர். இதனையே முன்னர் 'ஏகன்' என்றதும். திருமூலதேவர் "ஒன்றவன்ருனே" என்றதும் காண்க. சூரியன் தோன்றிற்று என்பதுபோலச் சிவம் ஞானியர் அறிவிற்குப் புலனுதலையே 'முளைத்து' என்றது. உள்ளதன் விளக்கமே முளைத்தலாதல் தெளிக.

எழுந்து - ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்டு ஆற்றலாய் வெளிப்பட்டு. இது சிவத்தினின்று சத்தி வெளிப் பட்டும், வேறற்று நினைவுமாத்திரமாய் நிகழும் நிலையினை உணர்த்திற்று.

எத்தனையோ கவடுவிட்டு - குடிலை முதல் மண் ஈருகவுள்ள கிளைகளையும் வளாறுகளையும் விட்டுத் தழைத்து என்றவாறு.

இதனால் சிவபரம்பொருள் வித்தாகவும் மண் ஈறான தத்துவ தாத்துவிகங்களனைத்தும் அவ்வித்திலிருந்து தோன்றிய கிளை கொம்பு இலைகளாகவும் கருதவைத்தமை அறிக.

தற்காப்புக்காகக் கொடுத்த படைக்கலத்தைத் தன்னைக கொல்லப் பயன்படுத்திக்கொண்டவனைப்போல, மலச்சேற்றி னின்று நீங்கி உய்வதற்காக இறைவன் உதவிய தனு கரணங் களை நெறியல்லா நெறிக்கண் பயன்படுத்திய அடியேனும் கடைத்தேற ஆட்கொண்டான் என்பார் 'என்னை நன்றாக வைத்து' என்றார்.

இந்த நிலையில் யான் நாய்போல இழிந்தவன்; அவன் எனக்கு உதவிய அருள், அதனைப் பல்லக்கில் தூக்கிவைத்தது போன்ற பெரிய உபகாரம் என்று, தன்னிழிவும் இறைவனது கருணையின் உயர்வும் தோன்றக் கூறினார்.

நம்பியாரூரர் "எம் தாதை தாதைக்கும் எம்மனைக்கும் தம்பிரான் ஏழேழ்படிமெமை ஆளுங்கொண்ட நாயாடியார்க்கு இடமாகிய தம்பிரான்" என்று அறிவித்ததுபோல, தந்தைக்கும், தந்தையின் தந்தைக்கும், தாய்க்கும் தலைவன் என வழிவழி அடிமையாதலை விளக்கியவாறு காண்க.

குன்றுதல் - குறைதலும் அழிதலும். வீட்டின்பமாகிய செல் வம், இவையிரண்டும் இல்லாதது ஆதலின் குன்றாததாயிற்று. இது திருமுறைகளில் 'வாராத செல்வம்' என்றும், 'சென்றடை யாத திரு' என்றும், 'ஏரி நிறைந்தனைய செல்வம்' என்றும் கூறப்பெறுதல் காண்க.

யாம் வழிவழியடிமையாதலின் அவனையன்றி வேறு யாரிட மும் சென்று விண்ணப்பிக்காமலிருப்பது நமது கடமையே ஆயினும், அவனிடம் வேண்டின் சிவஞானச் செல்வத்தையும் பெறலாமென இவ்வடிகளால் குறிப்பித்தார்.

இதில் இறைவனுடைய எல்லாமாய் இருக்கும் தன்மையை யும் அவனோடு நமக்குள்ள அநாதி நித்தியமான உறவையும் கூறி, அவனிடம் சென்று ஊதுக எனப் பணித்தலின் பதிகக் கருத்தோடு இயைபுடைத்தாதல் அறிக.

**223** *கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்*
*சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு*
*மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த*
*கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.* 9

இ - ள் : கோத்தும்பீ ! கருவிகள் எல்லாவற்றையும் கடந்து விளங்கும் நீலகண்டனாகிய இறைவன் திருவடிகளே நமக்கு அடைக்கலமாவது என்று நான் சென்றடைதலும், அடியேனுக்குப் பிறப்பும் இறப்புமாகிய இவ்வ இரண்டால் விளையும் மயக்கத்தைப் போக்கிய கருணைக்கடலாகிய இறைவன் பக்கம் சென்று ஊதுவாயாக என்றவாறு.

இது, யான் திருவடியைச் சென்று சார்தலும் பிறப்பு இறப்புக்களாலாகிய மயக்கங்களை அறுக்( கடலைச் சென்று ஊதுக எனப் பணிக்கின்றது.

ஆன்மபோதத்தை வளர்ப்பனவாகிய கருவி கரணங்களைக் கடந்துநின்ற இறைவன்திருவடிகளே சரணமென்று அடைந்த அக்கணமே பிறப்பு இறப்பு என்னும் மயக்கங்களை நீக்கிய கருணைக்கடல் என்று சிவனைக்கூறியதால், இறைவனது கடந்த தன்மையும் கைம்மாறு வேண்டாத தன்மையும் உணர்த்தப் பெற்றன.

கரணங்கள் - மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய புறக் கரணங்களும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய உட் கரணங்களும் ஆம். இக்கரணங்கள் அந்தந்த உயிர்களின் பரிபாகநிலைக்கேற்பக் காண்பித்த அளவிலன்றி, பெருக்கியும் சுருக்கியும் உணரும் தன்மையவல்ல ஆதலின் எஞ்ஞான்றும் ஒருபடித்தாகிய ஆன்ம அறிவைக் கலந்துநிற்கின்ற இறைவனை யும் அறியமாட்டா என்பார் 'கரணங்களெல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்' என்றார். கறை மிடறு - நீலகண்டம்.

கறை மிடறு அணியலும் அணிந்தன்று எனச் செம்பவளத் திருமேனியில் நீலப்புள்ளியாக விளங்கியும் காணுங்கண் அவ் வழகில் ஈடுபட்டுக் கண்டிலது என்பதனைக் 'கடந்து நின்ற கறை மிடற்றன்' என்பதால் குறிப்பித்தார்.

தேவர்கள் நஞ்சால் விளையும் சாக்காட்டிற்கு அஞ்சியே சரணம் புக்கனர். அடியேனோ சரணங்களைச் சார்தலே நாம் எய்தலாகும் இறுதிப் பயன் எனச் சார்ந்தேன். தேவர்களுக்கு அப்போது நேர இருந்த மரணம் தவிர்ந்தது. எனக்கோ பிறப்பு இறப்பிற்குக் காரணமான அறியாமையாகிய மயக்கம் அகன்றது. ஓலமிட்ட தேவர்களுக்கு உறுபயனை உதவி, ஒன் றையும் குறியாதே அடைந்த எனக்குப் பேரின்பம் அருளியது அவனுடைய அள்வற்ற கருணைத்திறமே என்பார் 'கருணைக் கடலுக்கே' என்றார்.

பழைய உரை 'கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறை மிடற்றன்' என்பதற்குத் துணைக்கருவி கரணங்கள் இல்லாமல் சுயேச்சையாய் வடிவுகொண்ட நஞ்சணி கண்டன் என உரைக்கும். மயக்கு என்பதற்குக் கலப்பு என உரைப்பாரு முளர்.

'பிறப்பு இறப்பு' என்னுது 'மரணம் பிறப்பு' என்றது பிறப்பிற்கு இறப்பே முதல்நிகழ்வாதலானும், இறப்பின்றேல் பிறப்பு இல்லையாதலானும் சிறப்பு நோக்கி முதலிற்கூறினுர். கருணைக்கடல் - கருணையாகிய கடல், கருணைக்குக் கடல் என்றெல்லாம் உரைக்க.

இவ்வண்ணம் திருவடிச்சார்புபெற்றதும் உளதாம் பயனை உரைத்து வண்டினை வழிப்படுத்துதலின் சிவனேடு ஐக்கியம் கூறுவது ஆயிற்று இச்செய்யுள்.

224 நோயுற்று மூத்துநான் நுந்துகன்று யிங்கிருந்து
நாயுற்ற செல்வ நயந்தறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை யாண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 10

இ - ள்: கோத்தும்பீ! நான் பலவகையான நோய்களை யுற்று வயதால் மூத்து, தள்ளப்பட்ட கன்றைப்போல இங்கே யிருந்து, நாய்பெற்ற செல்வமாய் என்னை யாரும் விரும்பி அறியாதவண்ணம் கண்டு, என்னைத் தாய்போல் வந்தடைந்து ஆளாக ஏற்றுக்கொண்ட கருணையாகிய ஒளி பொருந்திய இறைவன்பாற்சென்று ஊதுவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், எனது அறியாமையை அறிந்தும் தாயாய் வந்து ஆண்ட பெருமானிடம் சென்று ஊதுக எனப் பணிக்கின்றுர்.

மூப்பு ஆண்டின் முதிர்வால் வருவது இயற்கை. நோயால விளைவது செயற்கை. ஆண்டின் முதிர்வால் வந்த மூப்பில் உண்டு, உடுத்து, உற்று, உவர்ப்பு மிகுதலால் கருவி கரணங் கள் செயலற்றுப்போம். அந்நிலையில் 'நான் எல்லாவற்றையும் ஆண்டு அனுபவித்தவன்' என்ற மனநிறைவு நேருமேயன்றி, குறையுள்ளம் தோன்றுது. நோயால் வலியவந்த மூப்பிலோ ஐயோ! உண்ண முடியவில்லையே! உடுக்க முடியவில்லையே! என்ற குறையுள்ளம் தோன்றும். ஆதலால், பிணியால் வந்த மூப்பையே நோயுற்ற மூப்பு என்கின்றுர்.

நுந்து கன்று - இளைத்துப் பின்பக்கம் தள்ளிக்கொண்டிருக்கின்ற கன்று. இன்றும் இளைத்துக் காலிடறிப் பின்பக்கம் தள்ளிக்கொண்டிருக்கின்ற கன்றை நொந்து கன்று என்பது உழவர் வழக்கு. உழவரால் உழவிற்கு ஆகாது என ஒதுக்கப் பட்ட கன்று என்று உரைப்பாரும் உளர். நுந்து கன்றால் பயனில்லாதவாறுபோல யானும் பயனற்று இவ்வுலகில் வாழ்கின்றேன் என்பார் ' நுந்து கன்றாய் இங்கிருந்து ' என்றார்.

நுந்து கன்றாக இருப்பதை நாய் தனக்குக் கிடைத்த பொருளாகத் தின்ன நாள்பார்த்துக்கொண்டிருக்கும். அதனை யாரும் எதற்கும் விரும்பமாட்டார்கள். அதுபோல நான் காளையாயிருக்கும்போது 'கண்ணாளா! பொன்னாளா!' என்று போற்றியவர்கள் இன்று விரும்பியும் அறியாவகையில் இருக்கின்றார்கள் என்பார் ' நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாம் ' என்றார்.

நாயுற்றசெல்வம் என்பதற்கு, செல்வத்தை நாய் உற்றாலும் தானும் துய்க்காது பிறரையும் துய்க்கவிடாதது போல உன்னை விரும்பி அறியாத தன்மைகளாக என்னிடமுள்ளவை அனைத்தையும் கண்டு என்பாரும் உளர்.

மகன் தொழுநோயினால் மெலியினும் அதனைப் பொருட்படுத்தாது மகன் என்ற அன்பு ஒன்றையே மதித்து, அவனைக் காப்பாற்றும் தாய்போல, என் இழிவை நோக்காது இறைவன் என்னை ஆண்டுகொண்டான் என்பார் ' தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட செல்வன் ' என்றார்.

தேயு - ஒளி. தேயு உற்ற - தேயுற்ற எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. கருணையானது ஒளியாக இறைவனுடல் எங்கும் அமைந்திருப்பது ஒன்றுதலின் ' இறைவனைக் கருணைத் தேயுற்ற செல்வன் என்றார்.

இதில், சிவகருணையான தேயுவில் ஒன்றும்படி ஊதுக என்பதால் சிவனோடு ஐக்கியமாதல் தெளிக.

*225* *வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே*
*கன்னெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட*
*அன்னந் தினைக்கும் அணிதில்லை அம்பலவன்*
*பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.* *11*

இ - ள் : கோத்தும்பீ ! யான் வலிய நெஞ்சையுடைய கள்வன் மனவலியுடையவன் என்று கருதாமல், கல்போலும்

வலியநெஞ்சினை இளகப்பண்ணி, திருவருளால் ஆட்கொண்ட, அன்னப்பறவைகள் கூடிக்களிக்கின்ற அழகிய தில்லை நகரத்தி லுள்ள சிற்றம்பலநாதனது பொன்போலும் அழகிய திருவடி யிற் சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், என் இழிவைக்கண்டு ஒதுக்காது, ஆட் கொண்ட அம்பலவன் கழற்கே சென்று ஊதுக எனப் பணிக் கின்றார்.

கள்ளம், உள்ளதை வெளிப்படுத்தாத உறுதிப்பாடு ஒன் ருலே விளைவது. ஆதலின் மனவுறுதியால் கள்வனுனேன்; பின்னர்க் கள்ளத்தால் மனம் இன்னும் வலிதாயிற்று என்பார் 'வன் நெஞ்சக் கள்வன் மனவலியன்' என்றார். கள்ளத்தை மறைக்க ஒருபொய் சொல்ல மனவுறுதி வேண்டும். பின்னர்ப் பொய் கூறியும் களவு பல செய்தும்வர அதனால் மனம் மேலும் வலிதாம் என்பது கருத்து.

திளைத்தல் - கலத்தல். பொன் அம் கழல் - பொன்னாலாகிய அழகிய திருவடி. இறைவன் காற்சிலம்பு பொன்னாற் செய்யப் படாததாய் ஒலி வடிவானதாயினும் சிலம்பென்ற பொதுமை பற்றிக் கூறியதாம்.

கன்னெஞ்சுருக்கி ஆட்கொள்ளும் அம்பலவன் என்றதால் தரம் வருவித்துச் சிவன் ஆட்கொள்ளும்முறை உணர்த்தலின் சிவத்தோடு ஐக்கியமாதற்குரிய வாய்ப்புக்கூறியதாம்.

226 நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 12

இ - ள்: கோத்தும்பீ! நாயை ஒத்த இழிதகையேனாகிய என்னைத் தன் திருவடிகளைப்பற்றியே பாடச்செய்த தலைவ னும், பேயை ஒத்த குணமுள்ள எனது பிழைகள் அனைத்தை யும் பொறுத்தருள்கின்ற பெருந்தன்மையுடையவனும், யான் செய்த தொண்டுகளைச் சீயென்னும் வெறுப்புணர்ச்சி சிறிது மின்றித் திருவுளத்து ஏற்றருளிய தாயான தலைவனும் ஆகிய சிவன்பாற்சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில் பலவாற்றானும் தம்மையாட்கொண்டமை யைக் கூறி, அவன்பாற்சென்று ஊதுக எனப் பணிக்கின்றார்.

'பாடுவித்த' என்றதால் தானாகவே பாடும் சுதந்தரமும் ஞானவிளக்கமும் அடியேற்கு இல்லையென, ஆன்மாவின் சிற்றறிவுத் திறத்தைத் தெரிவித்தார்.

பேயேன் - பேய்போலக் கொண்டதைப்பற்றிநிற்கும் கொடுமையும் நல்லாரை நலியுந்தன்மையும் உடையேன் என்பதாம். உள்ளப் பிழை மனத்தின்கண் நிகழுகின்ற குற்றங்களாகிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்என்பன. குற்றம் செய்தல் உயிர்களின் இயல்பென எண்ணி, அவைகளை நீக்குதற்கு உரிய உபாயங்களைக் காட்டித்தந்து பொறுத்தல் இறைவனுடைய பெருமைக்கு இயல்பாதலின் 'பிழை பொறுக்கும் பெருமையனை' என்றார்.

சீ என்பது வெறுப்பினை உணர்த்தும் குறிப்புச் சொல். சீயேதுமில்லாத என் செய்பணிகள் எனப் பிரித்து வெறுப்புத் தராத தொண்டுகள் எனலுமாம்.

தாயான ஈசன்: தாய்மையும் தலைமையுமாகிய இருவகைக் குணமும் ஒருசேர உடையனாய் அணைத்தும் அடித்தும் திருத்துபவன் என்பதாம்.

இதில் தாயான ஈசன் எனச் சிவத்தினையறிந்து அதனோடு சென்று இயைந்து ஊதுக என்றலின் பதிகக்கருத்து அமைந்திருத்தல் காண்க.

227 நான்றனக் கன்பின்மை நானுந்தா னும்மறிவோம்
தானென்னை யாட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆன கருணையும் அங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 13

இ - ள்: கோத்தும்பீ! நான், இறைவனுகிய தன்னிடத்து அன்பில்லாதிருத்தலை நானும் அவருமே அறிவோம்; அவர் என்னை ஆட்கொண்டதை உலகிலுள்ளோர் அனைவருமே அறிவர்; அத்தகைய கருணையும் அவ்விடத்ததே; ஆதலால் அவனே என் தலைவன்; அவன் வந்து என்னைக்கூடி இன்புறுத்தும் வண்ணம் அவன்பாற்சென்று குளிர்மையாக ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், சிவனே என் தலைவன்; அவன் வந்து என்னைக் கூடும்வண்ணம் அவனருகிற்சென்று ஊதுக எனப் பணிக்கின்றார்.

அன்பு உயிர்க்குணமாய், மனத்தின்கண் தோன்றுவது ஆதலின் அஃது இல்லாமையை அன்பு செய்பவனுகிய நான் அறிவேன்; அன்பு செய்யப்படும் பொருளாக என்மனத்தையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவன் அறிவார் வேறு யாரும் நான் அன்பில்லாதவன் என்பதை அறிய மாட்டார்கள் என்பதாம். திருநீலகண்டரின் மனைவிபோல அயலறியாமை வாழ்தல் எம்போலும் கற்பின் மங்கையர்க்கு இயல்பு என்று குறித்ததாம்.

தான் - சிவமாகியதான். எல்லாரும் - உடனிருந்த சிவனடியார்களும் உலகமும்.

ஆன கருணை - அத்தகைய ஆக்கத்திற்கு ஏதுவாகிய திருவருள். அங்குற்றதே என்பதன் மரூஉ அங்குற்றே என்பது. இப்போது சைவ நிலையங்களில் இச்சொல் அங்குத்தே, அங்குத்தி என வழங்குகிறது. தான் அவனே என்பதில் தான் அசை.

குளிர்ந்து ஊதாய் என வேண்டியது அவன் மனமிரங்கித் தானே வரும்வண்ணம் விருப்புண்டாக நீ ஊதுக என்பது.

இதில் 'ஆன கருணை அங்குற்றே' எனவும், 'என்னைக் கூடக் குளிர்ந்து ஊதுக' எனவும் வேண்டுதலின் சிவத்தோடு ஐக்கியத்தை விரும்பியவாரும்.

**228** *கருவாய் உலகினுக் கப்புறமா யிப்புறத்தே*
*மருவார் மலர்க்குழன் மாதினெடும் வந்தருளி*
*அருவாய் மறைபயில் அந்தணனுய் ஆண்டுகொண்ட*
*திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ.* **14**

இ - ள்: கோத்தும்பீ! உலகிற்கே மூலமாய், உலகினைக் கடந்து அப்புறமாய், உலகினுள் மணம் நிறைந்த மலர்களைச் சூடிய உமாதேவியோடு எழுந்தருளி உருவாய், ஞானமேயான நிலையில் அருவாய், ஆசாரியனாக எழுந்தருளும்போது வேதங்களை ஓதுகின்ற அந்தணனாய் வந்து எம்மை ஆண்டுகொண்ட ஞானச்செல்வமான தேவன்பால்சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவனுடைய மூவகை நிலைகளையும் உணர்த்துதல் வாயிலாக அவன் சிறப்பியல்புகளைத் தெரிவித்து அவன்பால் சென்று ஊதுக என வண்டைப் பணிக்கின்றார்.

உலகினுக்குக் கருவாய், உலகினுக்கு அப்புறமாய் என இரண்டிடத்தும் கூட்டுக. பேரூழிக்காலத்து இயங்குவ நிற்ப வான எல்லாவற்றையும் தன்னகத்து அடக்கி நிற்றலானும், புனருற்பவம் தொடங்குகின்ற காலத்து மீளவும் அவை விரிய மூலமாயிருத்தலானும் உலகினுக்குக் கருவாய் என்றது.

அங்ஙனம் கருவாய் உலகில் கலந்திருப்பினும், அதனைக் கடந்து இயக்கும் முதல்வனாகவும் இருத்தலின் 'உலகினுக்கு அப்புறமாய்' என்றார்.

இவ்வுலகத்துள் உயிர்களை ஆட்கொள்ளவேண்டி, தானும் தையலுமாக எழுந்தருளிப் போகவடிவம் கொண்டருளினன் என்பார் 'இப்புறத்தே மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி' என்றார்.

அந்தந்த உயிர்களின் பரிபாகத்திற்கு ஏற்ப நீக்கமற நிறைந்து ஞானமாக விளங்கும் இயல்பை 'அருவாய்' என்பதால் உணர்த்தினார்.

அங்ஙனம் உருவாய் அருவாய் அருவுருவாய் இருக்கும் இறைவன் அடியேனுக்காக ஆசாரியனாக எழுந்தருளினான் என்பார் 'மறை பயில் அந்தணனாய்' என்றார். மறை - திருவைந்தெழுத்தாகிய மந்திரமும், சிவோகம்பாவனையில் இருந்து காட்டியதாகிய உபதேசமும். திருவான தேவன் - சிவஞானச் செல்வமான தேவன்.

தேவன்பாற் சென்று ஊதுக என வண்டை வேண்டியது ஐக்கியமாகக் கலத்தலை விரும்பியாதலின் இது பதிகக்கருத்திற்கு இயைபுடைத்தாயிற்று.

*229* *நானுமென் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்*
*தானுந் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்*
*வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்*
*தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.* *15*

இ - ள் : கோத்தும்பீ ! தாழ்ந்து தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமான் தானும் உமாதேவியாருமாக எழுந்தருளிவந்து என்னை ஆண்டிலனாயின், நானும் என் மனமும் தலைவனாகிய அவனுக்கு எவ்வளவு தூரத்தில் இருப்போம்; ஆதலால், அவன் மீளவும் ஆட்கொண்டு அருள்வழங்க, ஆகாயமும் திசைகளும் பெரிய கடலுமாக விளங்குகின்ற பெருமானுடைய தேன்சொரிகின்ற திருவடித்தாமரைக்கண் சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், எல்லாம் ஆகிய இறைவன் திருவடிக்கண் சென்று ஊதுக எனப் பணிக்கின்றார்.

சடை, வணங்கிய சந்திரன் போன்றவர்களுக்கு அரணும், கங்கையின் செருக்கடக்கி ஆண்ட அருள்நிலையமாயும் விளங் குவதாகலின் அதனைச் சுட்டி, நலிந்த தன்னை அறியாமை போக்கி ஆட்கொண்டான் என்ற நயம்தோன்றத் 'தாழ்சடை யோன்' என்ற பெயரால் விளிக்கின்றார்.

அடியார்களை ஆட்கொள்ள இறைவன் உமையொருபாக னாக எழுந்தருளுதலே இயல்பு என்பதனை "மாதொரு பாகனார் தாம் வருவார்" என்பன போன்ற விதி நூல்களும் விளக்கும். தையல் - அழகு; பண்பாகுபெயராக உமாதேவியாரை உணர்த் திற்று. 'ஆண்டிலனேல் எவ்விடத்தோம்' எனத் தமது பழைய நிலையையும், இன்றுள்ள சிவஞானப்பேற்றால் விளைந்த பெரு மையையும் எண்ணிக் கூறுகின்றார்.

நான் என்றது ஆன்மாவை. ஆன்மாவோடு இடைவிடாது உறைந்து மெய்காப்பாளனாக விளங்குதலின் சிந்தையைத் தன்னின்வேறுபோல 'என்சிந்தையும் எவ்விடத்தோம்' என்றார். ஆண்டிலனாயின் அவனைப்பற்றி எண்ணவும், பணி செய்யவும், அணுக்கத்திலிருந்து இன்புறவும் முடியாதபடித் துன்பக்கடலில் தொலைதூரத்தில் ஒதுங்கிக் கிடப்போம் என்று அஞ்சி எண் ணியவாறும்.

வான், எங்கும் பரவி, எல்லாவற்றையும் தன்னகத்தடக்கி யிருப்பது. இதுவே இறைவனுக்குத் திருமேனியாக மறை கூறும். பத்துத் திசைகளும் இறைவனுக்குத் திருக்கரங்கள்; மா கடல் அவன் கரத்தேந்திய உடுக்கை. இங்ஙனம் அண்ட வடிவான தன்மை உணர்த்தப்பெறுகின்றது.

வண்டினை ஊதுக எனப் பணிக்கின்றாராதலின் அதற்கு ஏற்பத் தேன் உந்து சேவடி என்றார். தேனுந்து என்ற அடை மொழியால் சேவடியைத் தாமரைப்பூவாகக் கொள்க. கன்று முட்டக் காலி பால் சுரப்பதுபோல வண்டூதத் தாமரை தேன் சுரக்குமாதலின் தேனுந்து திருவடிக்கே ஊதுக என்கின்றார். இதனால் தாதுரைக்கும் வண்டிற்கு அங்கே பெருவிருந்து கிடைக்கும் என்றவாறும்.

இதில் ஆண்டிலனேல் எவ்விடத்தோம் என்று ஆண்டமை யால் விளைந்த சிவானந்தத்தை அறிவித்தலின் சிவனோடைக்கிய மாதல் அறிக.

230 உள்ளப் படாத திருவுருவை யுள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரானெம்பி ரானென்னை வேறேயாட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 16

இ-ள்: கோத்தும்பீ! அவனருளைத் துணையாகப்பெறாத உள்ளத்தால் நினைக்கவும் இயலாத ஞானமேயான அவன் திருமேனியை அவனருட்டுணைகொண்டு நினைத்தலும், மயக்கத்தைத்தரும் கள்ளினால் விளையாத களிப்புண்டாக, அதனால் வந்த பெரிய கருணை வெள்ளத்தையுடைய தலைவனும், எம்பிரானும் அடியேனைச் சிறப்பாக வேறே ஆட்கொண்ட தலைவனுமாகிய அவன்பக்கம் சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், தானடைந்த இன்பப்பேற்றை அறிவித்து வண்டே நீயும் சென்று ஊதுக எனப் பணிக்கின்றார்.

உள்ளுதற்குக் கருவி உள்ளம். அது உட்கருவிகளுள் ஒன்றாய், உயிர்த்தலைவனுக்கு உற்ற துணையாய், பொறிவாயிலாகச் சென்று புலன்களைப் பொருந்தி, அதன்பயனை உயிர்க்கு உதவுவது; மாயா காரியமானது; சடமானது; உணர்த்தினாலன்றித் தாமாக உணராத இயல்பினது. அத்தகைய உள்ளத்தால் உள்ளப்படாத பெருமையுடையது இறைவனது ஞானமேயான திருமேனி என்பதனை 'உள்ளப்படாத திருவுருவை' என்பதால் உணர்த்தினார். உள்ளுதலும் என்பதற்கு, அவனருள் துணையிருக்க நினைத்தலும் என்க.

களி - மகிழ்ச்சி; முதனிலைத் தொழிற்பெயர். இது கள்ளுண்பதாலும், புலனுணர்ச்சியாலும், கடவுளருளாலும் விளைவது. இவற்றுள் இறைவன்கருணை கள்ளால் விளையாத களிப்பால் வந்தது என்பார் 'கள்ளப்படாத களிவந்த வான் கருணை' என்றார். கள்ளப்படாத - மறைக்கப்படாத என்பாரும் உளர். கருணைவெள்ளப்பிரான் எனக் கூட்டுக. பிரான் - வள்ளன்மையுடையவன்; தலைவன்.

வேறே ஆட்கொண்டமையாவது அடியார் கூட்டத்தோடு சிவச்சோதியிற் கலக்க ஆணைதராமல் 'தில்லைக்கு வா' என அழைத்து அங்கே சிவானந்த அனுபவந்தந்து ஆட்கொண்டது. இங்ஙனம் என்னைச் சிறப்பாக ஆட்கொண்டமையால், என்னால் அனுப்பப்பெறும் உனக்கும் அப்பேறு உண்டாம்; சென்று ஊதுக என்றதாம்.

'கள்ளப்படாத களிவந்த வான் கருணை வெள்ளம்' என இறைவனை அநுபவிக்கின்ற நிலை சிவனோடு ஐக்கியமானவர்க்கன்றி விளையாதாகலின் இச்செய்யுள் சிவனோடு ஐக்கியமாதல் அறிக.

**231** பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை யாட்கொண்ட
ஐயாவென் னாருயிரே அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 17

இ-ள்: கோத்தும்பீ! நிலையில்லாத செல்வத்தில் புகுந்து ஆழ்ந்து நாடோறும் அதனையே மெய்ப்பொருளாகக் கருதிக் கிடக்கின்ற என்னை ஆட்கொண்டருளிய ஐயா! என் அரிய உயிரானவனே! அம்பலவா! என்று பாராட்டி அவனுடைய செம்மைநிறம் பொருந்திய மலர்போலும் திருவடியிற்சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகக் கருதிக்கிடந்த தன்னை ஆட்கொண்ட அருமையை அறிவித்து அவனடிக்கே சென்று ஊதுக என வண்டைப் பணிக்கின்றார்.

மணியும் பொன்னும் மாடும் வீடும் தோன்றி அழியும் தன்மையவாகலின் பொய்யாய செல்வங்கள் என்றார். அச்செல்வங்கள் புதைசேறுபோல அகப்பட்டாரை அழுத்தும் தன்மையனவாதலின் 'செல்வத்தே புக்கு அழுந்தி' என்றார்.

பரத்தை விழியாலும் மொழியாலும் நடையாலும் உடையாலும் அணியாலும் நலத்தைப் புதிதாகத் தோற்றுவித்துக் காமுகன் தன்னைவிட்டுப் பிரியாமல் தன்னிடமே தரித்திருக்கச் செய்வதுபோல, பொய்யாய செல்வமும் புதிய புதிய புலனின்பங்களை விளைவித்து மெய்யென்று நினைக்கச்செய்து மயக்க அதனுள் அறிவு திரிந்து கிடந்தமையை 'நாடோறும் மெய்யாகக் கருதிக்கிடந்தேன்' என்று குறிப்பிடுகின்றார்.

செல்வச் சேற்றுள் அழுந்தி அறிவற்றுக்கிடந்த நிலையிலும் என்னை ஆட்கொண்ட பெருமை மிகமிகப் பாராட்டத் தக்கது என்பார் 'கிடந்தேனை ஆட்கொண்ட ஐயா' என்றார்.

உயிரிற் சிறந்த பொருளில்லை. எப்பொருளை இழந்தாலும் மீண்டும் பெறலாம். உயிரைப்பெற இயலாது. அத்தகைய உயிருக்கும் உயிராக ஒன்றியிருந்து உணர்ச்சியூட்டுபவன் அவனே என்பார் 'என் ஆருயிரே' என்றார்.

தலைவனும் உயிருக்கு உயிராய் அருவாயும் இருக்கின்ற இறைவன் எல்லாரையும் ஆட்கொள்ள அம்பலத்தில் ஐந் தொழில் அருள் நடனத்தைச் செய்துகொண்டு, என்றுவந்தாய்? ஒன்றியிருந்து நினைமின்கள் உன்றமக்கு ஊனமில்லை என்ற குறிப்போடு அணிமையில் எளிமையில் வீற்றிருக்கின்றான் என்பதை விளக்க 'அம்பலவா' என்று அழைக்கின்றார்.

இவ்வாறு வண்டினைத் திருவடிக்கண் சென்று ஊதச் சொல் வதன் திருவுளக் குறிப்பு, வண்டு தான் அனுப்பிய தூது என்பதனைத் தானும் அவனுமே அறிந்த சில குறிப்புக்களைக் கொண்டு தெரிவித்துக்கொண்டதாம். இராமகாதையுள் சீதை நினைவுறுத்தியதுபோல என்க.

இறைவன் திருவடி, செம்மையாய்க் கண்ணிற்கும், மணமாய் மூக்கிற்கும், மென்மையாய் மெய்க்கும் இன்பம் விளைவிப்பதாக இருந்தது என்பதனை வண்டிற்கு உணர்த்துவார் 'செய்யார் மலரடிக்கே சென்று ஊது' என்கின்றார்.

இது 'ஆட்கொண்ட ஐயா' என்று அவனடிக்கே சென்று ஊது எனப் பணித்தலின் சிவனோடு ஐக்கியத்தை எதிர்நோக்கி நிற்றல் காண்க.

232 *தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமுந் தொக்க வளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.* **18**

இ - ள்: கோத்தும்பீ! ஒருபால் புலித்தோலும், ஒரு பால் பட்டாடையும், ஒருபாற் சங்ககுண்டலமும், ஒருபாற் சுருண்டதோடும், ஒருபால் பால்போலும் திருநீற்றுப்பூச்சும், ஒருபால் பசிய சந்தனமும், ஒருபால் பச்சைக்கிளியும், ஒரு பால் சூலமும், ஒருபால் கூட்டமான வளையல்களையுமுடைய பழமையான உமையொரு பாதியனாகிய கோலத்தைக் கண்டு குளிர்மையாக ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், உமையொருபாதியனாகத் திகழும் திரு மேனி அழகை நோக்கி ஊதுக என வண்டைநோக்கிப் பணிக் கின்றார்.

தோல் குழை நீறு சாந்து சூலம் இவை பெருமானுடைய வலப்பாகத்து அடையாளங்கள். துகில், தோடு, சாந்து, கிளி, வளை இவை அம்மையின் இடப்பாகத்து அடையாளங்கள்.

உமையொருபாதியனுக விளங்கும் திருமேனியே படைப்புக் கெல்லாம் காரணமாதலின் அதனைத் 'தொன்மைக் கோலமே' என்ருர். நீ சொல்வதை விரும்பிச் செவிமடுக்க ஊதுக என்பார் 'குளிர்ந்து ஊதாய்' என்ருர். நோக்கியூதாய் என்றதன் குறிப்பு அம்மையின் பாகமான இடப்பாகத்து ஊதாதே; இறைவன் பாகமான வலப்பக்கத்தே பார்த்து ஊதுகஎன் றதாம்.

இது, 'கோலமே நோக்கி ஊதாய்' என்றமையின் பதிகக் கருத்திற்கு இயைபுடைத்தாதல் அறிக.

*233 கள்வன் கடியன் கலதியிவன் என்னுதே*
*வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே*
*உள்ளத் துறுதுயர் ஒன்றொழியா வண்ணமெல்லாம்*
*தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 19*

இ-ள்: கோத்தும்பீ! வள்ளலாகிய சிவபெருமான் 'இவன் கள்வன், கொடியன், கீழ்மகன்' என்று எண்ணுமல் மெல்ல மெல்ல வந்து என் மனத்தையே கோயிலாகக்கொண்டு தங்கினுன்; என் மனத்தின்கண்ணே உள்ள மிக்க துன்பங்கள் ஒன்றையும் தப்பவிடாமல் எல்லாவற்றையுமே தெள்ளத் துடைக்கும் அவனுடைய திருவடிகளில் சென்று நீ ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் என் குறைகளைக் கண்டு நீக்கிவிடாது ஆட்கொண்டான்; துன்பந்துடைத்தான்; அவன் திருவடிக்கண் சென்று ஊதுக எனப் பணிக்கின்ருர்.

வள்ளலாவார் 'இவன் பெரியன், சிறியன்' என்று வாங்கு கின்றவர்களின் தகுதி நோக்காது தனது பெருமை நோக்கி எதனையும் வரையாது வழங்குவர். இறைவனும் கிடைத்தற்கு அரிய திருவருட்செல்வத்தைக் 'கள்வன் கடியன் கலதி' என்று எண்ணுது தனக்கு வழங்குகின்ருனுதலின் அவனை 'வள்ளல்' என்று குறிப்பிடுகின்ருர்.

கள்வன் - உடையவன் அறியாமல் உடைமையைத் திருடு பவன். எல்லாவற்றையும் தமக்கே உடைமையாகக்கொண்ட வன் இறைவன். வினைக்கு ஈடாக அவன் அளந்து கொடுத்த அளவைக் காட்டிலும் மிகுதியாக நுகர விரும்புதலின் தன்னைக் 'கள்வன்' என்ருர்.

கடியன் - கொடியன். நெஞ்சில் நிறைந்துள்ள கொடுமை யால் செய்யத்தகாதவற்றைச் செய்தலும் தலைவனுக்கு விருப்பம்

இல்லாதவற்றை இயற்றுதலும் உடையவன் ஆதலின் அக்குண முடைய தன்னையும் 'கடியன்' எனக் கூறிக்கொண்டார். உயர் குடிப்பிறந்தாரிடம் இவைபோன்ற தீயகுணங்களுண்டாகா. ஆதலின் அத்தீய குணங்கள் எல்லாவற்றையும் உள்ளடக்கி, அவற்றையுடைய தன்னைக் 'கலதி' என்றார்.

கள்ளம் கொடுமை முதலான தீயகுணங்கள், என் மனப் புலத்தில் அடர்ந்து அவன் எளிமையிற் புகமுடியாதவாறு தடைசெய்தன; கருணையாளனாகிய இறைவன் மெல்ல மெல்ல அவற்றை அகற்றி நன்புலமாக்கிக் குடியேறினான் என்ற நயம் தோன்ற நிற்றல் காண்க.

புண் சிறிது ஆறாமலிருந்தாலும் புரையோடிப் பெருந்தீங்கு விளைக்கும். அதுபோல என் மனத்தே துன்பம் சிறிது எஞ்சி யிருந்தாலும் முளைத்துக் கிளைத்துப் படர்ந்துவிடும் எனத் திருவுள்ளங்கொண்டு ஒன்றொழியாவண்ணம் தெள்ளினான் என்று கூறாமல் 'ஒன்றொழியா வண்ணம் எல்லாம் தெள்ளினான்' என்றது காண்க.

துன்பங்கள் தம் ஆற்றலைக் காட்டுமிடம் உள்ளமாதலின் 'உள்ளத்து உறுதுயர்' என்றார்.

அரிசி முதலியவற்றை முறத்திலிட்டுத் தெள்ளும்போது நெல்லும் கல்லும் உமியும் ஒதுக்கி அரிசியைக்கொள்வதுபோல இறைவன் திருவடியும் துன்பங்களை எல்லாம் ஒதுக்கித் தள்ளி விட்டுத் தூய இன்பமே தந்தது என்ற சிறந்த கருத்தைத் 'தெள்ளும்' என்ற சொல்லாற்றலால் காண்க.

இது, வள்ளல் என்மனத்தே மெல்லமெல்ல வந்து தங்கி னான் என்றலின் சிவனோடு ஐக்கியமாயிற்று.

234 பூமே லயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேற் றவிசிட்டு நன்றாப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 20

திருச்சிற்றம்பலம்

இ-ள்: கோத்தும்பீ! தாமரைப்பூவில் எழுந்தருளி யுள்ள பிரமனும் திருமாலும் 'நாம் அடையமுடியாதது' என்று ஏமாறி நிற்கவும், அடியேன் அவர்களாலும் அடைய

முடியாத பேற்றினை அடையப்பெற்றேன் என்று இறுமாந்து நிற்கவும், நாய்மேல் அம்பாரி வைத்ததுபோல நான் நன்மை எய்த என்னையும் ஒரு பொருளாகக்கொண்டு ஆண்ட தீப் போலும் ஒளிமயமான திருமேனியையுடைய இறைவன்பாற் சென்று ஊதுக என்றவாறு.

இத்திருப்பாட்டில், வண்டே! பிரமன் முதலாய தேவர்களும் ஏமாறிநிற்க, என்னை ஆட்கொண்ட திருமேனியான் பக்கம் சென்று ஊதுக எனப் பணிக்கின்றார்.

செல்வர்வீட்டுக் குழந்தை தின்பண்டம் தின்னக்கண்ட ஏழைவீட்டுக் குழந்தைபோல என்னைப்பார்த்து இறைவன்பாற் செல்லுதற்கு உரிய தவம் தமக்கில்லையே என்று பிரமனும் திருமாலும் ஏமாந்து நிற்க என்பதாம்.

உயிர்க்குணம் மற்றவர்க்கு இல்லாத பெருமையும் வாய்ப்பும் தனக்கு உண்டாகும்போது இறுமாத்தலாதலின் அவ்வுயிரியல்பிற்குத் தான் புறம்பானவன் அல்லேன் என்பார் 'அடியேன் இறுமாக்க' என்றார்.

தேவரீர் பெருங்கருணையால் என்னை ஆட்கொண்டாலும், என்னிலை நாய்போல இழிந்தது. என்னை ஆட்கொண்டமை யானைமேல் இடவேண்டிய தவிசினை நாயின்மேல் இட்டது போலாம். அங்ஙனம் இருந்தும் அடியேன் நன்றாகவேண்டும் என்ற திருவருட்குறிப்பால், என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு ஆட்கொண்டீர் என வியந்து வண்டிற்கு அறிவுறுத்துவார் 'நாய்மேல் தவிசிட்டு நன்று ஆ(க)ப் பொருட் படுத்த' என்றருளினார்.

இறைவனை ஈண்டுத் தீமேனியான் என்றது, விளக்கில் விழுந்த விட்டில்போல அவன்பாற் சென்று ஊதுவாயாயின் நீயும் அவனோடு ஐக்கியமாவாய் என்பதை உணர்த்தியதாம். இதனால் பதிகக் கருத்தும் விளங்குதல் காண்க.



பரிசதீட்சை



நயனதீட்சையும் உபதேசமும்



பூவார் அடிச்சுவடு பொறித்தல்

# 11. திருத்தெள்ளேணம்

[சிவனோடடைவு]

அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்குங்காலத்து ஒருநாள் சோலையுட்புகுந்தார். அங்கே காதற்சிறுமியர் பலர் பொய்தல் விளையாடினர். அவர்கள் வாயிலிருந்து வெற்றுரைப்பாடல்கள் வெளிவந்தன. அதனைக்கண்ட திருவாதவூரடிகள் தாமும் அவர்கள் நிலையை அடைந்து அவர்கள் பாடுவதுபோல அம்பலவாணன் புகழை அமைத்து இப்பகுதியை இயற்றினர்.

நோன்பு நோற்றல், அம்மானையாடுதல், சுண்ணம் இடித்தல், தும்பிபறத்தல் முதலான மகளிர் விளையாட்டினுள் ஒன்ருகத் திருத்தெள்ளேணமும் கருதுதற்குரியது. 'தெள்ளேணம் கொட்டாமோ' என இருபது பாடலும் முடிதலின் கொட்டுதல் என்னும் சொல்லைக் கொண்டு 'தெள்ளேணம்' என்பது ஒருவகைப் பறையைக் குறிக்குமென ஊகிக்கப்பெறுகிறது. மகளிர் பலர் ஒருங்கு கூடித் தமக்கு விருப்பமான பாடலைப் பாடிக்கொண்டு சிறுபறைகொட்டி விளையாடுதலை நாம் இன்றும் பார்க்கிறேம். அதனுல் தெள்ளேணம் என்பது அதுவாகவோ அல்லது அதனைப்போன்றதொரு வேறு விளையாட்டாகவோ இருக்கலாம்.

பழைய உரைகாரர் முச்சில் புடைத்து விளையாடுதல் என்பர். முச்சில் என்பது சிறிய முறம். அதனுல் மணலைப் புடைத்துத் தெள்ளிச் சிற்றிலில் சிறுசோறு அடுதல் மகளிர் வழக்கம். முன்னே கோத்தும்பியில் துயரமெல்லாம் தெள்ளுங்கழல் என வருவதும் இக்கருத்திற்கு ஒருவகையான் துணையாகுமோ என்று எண்ணலாம்.

பின்வந்த உரைகாரரில் ஒருவர் தென்-தெளிந்த ஓசை, ஏணம்-மான், மானை உணர்த்தும் ஏணம் என்னும் பெயர் அதன் தோல் போர்க்கப்பெற்ற படகம் என்னும் தோற்கருவியை உணர்த்திற்று. ஆகவே மகளிர் இறைவன் புகழைப்பாடி, படகங்கொட்டி விளையாடுதலே திருத்தெள்ளேணம் என்பர் என்று உரைப்பர். இதுபற்றிய விளக்கமான குறிப்பு ஒன்றும் கிடைக்கப்பெருததால் கைகொட்டி ஆடுகின்ற கும்மிக்கொட்டையோ அல்லது பறைக்கொட்டையோ குறிப்பதாகலாம் என்று எண்ணக்கிடக்கின்றது.

திருவாசக உள்ளக்கிடக்கையாகிய அகத்தியச் சூத்திரம் இதன் உட்கிடையான பொருள் 'சிவனோடு அடையச் செலவு' என்கின்றது. அஃதாவது சிவனோடு எல்லாரும் செல்லுதல் எனப் பொருள்படும். அடைய - முற்றும். மற்றொரு பிரதி 'சிவனோடு அடைவு' என்கின்றது. அஃதாவது சிவனுடன் இடையறாது நிற்றல் என்பதாம்.

பழைய திருப்பெருந்துறைப் புராணம் "பொன்னார் மெய்யண்ணலரும் போத வின்பமே மிகுந்து தென்னா தென்னா எனவே தெள்ளேணம் கொட்டியதாம்" என்று கூறுகிறது. இவற்றைக் கொண்டு எண்ணின் பாடுதலும் பாடற்சீருக்கேற்ற தாள அமைதியுடன் பறை அல்லது கையைக் கொட்டுதலும் இதன் இயல்பு என்பது துணியப்பெறும்.

இப்பகுதி இருபது திருப்பாடல்களையுடையது. இவை அனைத்தும் இறைவன் சிறப்புக்களையும் பலவேறு இயல்புகளையும் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்னும்பொருளே நிரம்பப்பெற்றது.

**235** *திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை*
*உருநா மறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்*
*ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரம்*
*திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ.* 1

இ - ள்: திருமால் பன்றிவடிவெடுத்துத் தேடியும் அறியப்படாத திருவடியின் உருவை நாம் அறிந்துய்ய ஒப்பற்ற ஆசிரியப் பெருந்தகையாக எழுந்தருளி ஆண்டுகொண்டவனும், ஒரு பெயரும் ஒருருவமும் உடைமையாக ஒரு பொருளும் இல்லாதவனும் ஆகிய சிவபெருமானுக்கு ஆயிரம் பெயர்களைப் புகழ்ந்து பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றவாறு.

இத்திருப்பாடலில், சிவபெருமானுடைய ஆயிரம் நாமங்களைச் சொல்லித் தெள்ளேணங்கொட்டுவோம் என்கின்றார்.

திருமாலும் என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து, திருமால் பன்றியாய்ச் சென்றும் எனக் கூட்டிப் பொருள் கொள்க. தேவனான நிலையில் திருமால் தருக்க அதனால் பன்றியாய விலங்குருத் தாங்கியும் அறியமுடியாத திருவடியை என்றது. தெய்வமாகிய நிலையில் சிவபோதமடங்கிச் சிவபோதம் விஞ்சி அடையவேண்டிய திருமால் ஆணவமலமறைப்பால் அறிவு மழுங்கிப் பன்றியாயினன்; தோண்டினன்; அப்படியும் அறிந்திலன் என்க.

உரு - சிறப்பியல்புகள். திருவடியை உரு அறிய என்பதைத் திருவடியினது உருவை நாமறிய என ஆருவதன் உருபு விரித்துக் கொள்க.

'ஓர் அந்தணனாய்' என்றது குருந்தடியில் குருமூர்த்தியாக எழுந்தருளிய வரலாற்றைக் குறிப்பது. ஆண்டுகொண்டான்- என் மலமறைப்பை அகற்றிச் சிவஞானம் உதவி, திருவடியாகிய திருவருளின் உண்மை இயல்புகளை உணர்த்தியருளினன் என்பதாம்.

நாமம்- பெயர். பொருளுக்குப் பெயர்கள் அடையாளத்திற்காக இடப்படும்; இடுகுறியானும், காரணத்தானும் அமையும். இறைவனுக்கு அடையாளத்திற்காகப் பெயரிடுவார் யாரும் இன்மையானும், காரணக்குறியாகவும் ஒருபெயர் அமைதற்கு ஆதாரமான உருவின்மையானும் 'ஒரு நாமம் ஓருருவம் இல்லாற்கு' என்றார்.

ஒன்று என்பது எண்ணுக்குபெயராகப் பொருளை உணர்த்திற்று. இறைவற்கு உடைமையெனக் கூறுவதற்குரிய தனித்த பொருள் ஒன்றும் இல்லை என்பதை 'ஒன்றுமில்லாற்கு' என்பதால் உணர்த்தினார்.

ஆயிரம் திருநாமம் -]ஆயிரம் பெயர். இவை சகத்திர நாமங்கள் என வழங்கப்பெறுவன. வீடில்லாதவனுக்கு ஊரெல்லாம் வீடு என்பதுபோல ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் பேரும், ஆயிரம் ஊரும், எல்லாப்பொருள்களும் உடைமையாம். அந்த ஆயிர நாமங்களும் ஊரடியாகவும் உடைமை காரணமாகவும் பிறந்தனவும் ஆம். அவற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

இறைவன் பெயரைப் பாடுதலும் கொட்டுதலும் சிவனோடு அடைந்தார் செயல்களாதலின் இத்திருப்பாடல் 'சிவனோடு அடைவு' என்னும் திருப்பதிகக் கருத்தினதாதல் அறிக.

236 திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவே ரறுத்தபின் யாவரையுங் கண்ட தில்லை
அருவாய் உருவமு மாயபிரான் அவன்மருவுந்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 2

இ - ள்: திருப்பெருந்துறையில் விரும்பி எழுந்தருளிய சிவபெருமான், என்னை ஆட்கொண்டு எனது பிறவியின் மூலத்தை அறுத்தபிறகு, யான் எம்மவர் என்று யாரையுமே

கண்டது இல்லை; அருவும் உருவும் ஆய தலைவன் எழுந்தருளி யுள்ள திருவாரூரைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றவாறு.

இத்திருப்பாடலில், இறைவன் என்னை ஆட்கொண்டபின் எம்மவர் யாரையும் யான் காணேன்; ஆதலால் அவன் எழுந் தருளியிருக்கும் ஆரூரைப்பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றார்.

திருப்பெருந்துறை என்பதைத் 'திரு ஆர் பெருந்துறை' எனச் சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தியால் விரித்து உணர்த்தினர். மேய - விரும்பி எழுந்தருளியுள்ள. பிறவிக்கரு - பிறவிக்குக் கருவான ஆகாமிய சஞ்சித வினைகள். அதன் வேராவது வினைகள் விளைதற்கு வாயிலான கன்மமூலங்களும், அவற்றைக் காரியப்படுத்தும் அறியாமையும், அதன் காரண மான ஆணவமலமுமாம். இவற்றை யறுக்கவே ஆகாமிய சஞ்சி தங்கள் ஆன்மாவைச் சாரா. அவை சாராது ஒழியவே பிறவி இல்லையாம். இங்ஙனம் நோய் முதல்நாடி, பிறவிக்கு வைத்திய நாதன் அடியேனை ஆட்கொண்டான் என்பார் 'பிரான் என் பிறவிக் கரு வேரறுத்தபின்' என்றார்.

பிறவிவேரறவே வேர் பற்றிநிற்கும் ஆசாபாச நிலைக்கள மாகிய தந்தை தாய் மனைவி மக்கள் என்ற அன்பும் அகலும். ஆதலால் இறைவனைத் தவிர ஏனையோர் காணப்படுவாரல்லர். அவர்களைக் காணுகின்றபோதும் அவர்களும் இறைவனாகவே காணப்படுவார்கள். அம்மையே அப்பா! ஒப்பிலா மணியே! அன்பினில்விளைந்த ஆரமுதே! என்றும், அப்பன் நீ அம்மை நீ அன்புடைய மாமனும் மாமியும்நீ என்றும் காணப்பெறுதல் காண்க.

அநுபவத்தில் அருவாயும், பரிபாகமுறுத்த ஆட்கொள்கிற போது உருவாயும் இறைவன் எழுந்தருளுதலின் 'அருவாய் உருவமும் ஆயபிரான்' என்றார்.

"ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ...திருவினாள் சேர் வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே" எனத் திருமுறைகளில் கூறப்படும் தொன்மையால் 'அவன் மருவும் திருவாரூர் பாடி' என்றார்.

யாவரையும் காணமல் எல்லாரும் எல்லாமும் சிவனாகவே கண்டமை கூறுதலின் இது 'சிவனோடடைவு' ஆனமை காண்க.

237 அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட் டுலகமெல்லாம்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 3

இ-ள்: திருமால் பிரமன் ஏனைய தேவர்கள் இவர்களுக்கும் தெரிவிக்க ஒண்ணாத சிவபரம்பொருள், தாமே எழுந்தருளிவந்து, நம்மை உருக்கும் பணிகளை ஏற்கும் என்று நாம் சொல்வதைக் கேட்டு உலகமனைத்தும் சிரிக்கும் தன்மையைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தேவர்களுக்கும் உணர்த்த இயலாத சிவம் நம்மை உருக்கிப் பணிகொண்டதை உலகம் கண்டு நகைக்கின்றது; அதைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றார்.

ஈண்டு அரி பிரமன் என்னப்பட்டார் சிவபெருமானுடைய நவந்தரு பேதங்களுள் ஒருவராய அரியும் பிரமனும் அல்லர்; அவனாணையைத் தாங்கிப் பதவிகளிலிருந்து படைத்தலாதி தொழில் புரியும் சகலான்மாக்களாம் என்க. அல்லாத தேவர் - அரி பிரமனல்லாத இந்திரன் முதலிய திசைகாப்பாரும் ஏனை முப்பத்துமுக்கோடி தேவர்களும். இவர்கள் மும்மலக்கட்டுடையராய்ப் பதவிகளில் பற்றுடையராய்ச் சிவபுண்ணியமின்மையால் பரிபாகமிலராய், இறைவன் நேரே எழுந்தருளி உபதேசித்தாலும் சிவஞானத்தை அறியும் ஆற்றலிலர் ஆதலின் 'அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும் தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவம்' என்றருளினார்.

அத்தகைய சிவபரம்பொருள் தாமே வலியவந்து நம்முடைய மலச்சார்பைக் கெடுத்து நம்மைக் கனிவிக்கும் நம்மைப் பணிகொள்ளும் என்று நாங்கள் சொல்வதைக்கேட்டு, அளவிலாற்றலும் பெருமையுமுடைய சிவம் எங்கே? இவர்கள் எங்கே? இவர்களை அதுவே வந்து பணிகொள்ளப்போகிறதாம் என்று எள்ளி நகையாடும் உலகம். இறைவனைச் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையோமாகிய நாம் வரவேண்டுமென்றோ கனிவிக்க வேண்டுமென்றோ பணிகொள்ள வேண்டுமென்றோ வேண்டிக் கொள்ளும் தகுதி உடையோம் அல்லோம் அவனே வந்து ஆட்கொள்வான் எனப் பணிந்த உள்ளத்தால் விண்ணப்பித்தேமாக அதனை அறியாது தலைமையும் சிறப்பும் இன்றியமையாமையும் நோக்கி உலகம் எள்ளி நகையாடியது. ஆயினும் அதனையும் இறைவன் எமக்கு அருளிய திறமாகக்கொண்டு

தெள்ளேணம் கொட்டுவோம் என்றார். உருக்கும், பணிகொள்ளும் என்பன செய்யும் என்னும் வினைமுற்றுக்கள்.

238 *அவமாய தேவர் அவகதியி லழுந்தாமே*
*பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி*
*நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாமொழிந்து*
*சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.* 4

இ - ள்: வீணான தேவர்களது கீழான நெறியிற்சென்று அழுந்தாதபடி, பிறப்பாலுண்டாய வஞ்சனையினின்று அடியேனைக் காப்பாற்றி ஆண்ட மேலான ஒளிவடிவாகிய பெருமான் புதிதாய சிவஞானத்தை அருளுதலும், நாம் என்னும் முனைப்பு நீங்கிச் சிவமான தன்மையைப் புகழ்ந்து பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் திருவருளைப் பெற்றதும் சீவபோதம் கெட்டுச் சிவபோதம் விளைந்தமையைத் தெரிவிக்கின்றார்.

தேவர்கள் தன்முனைப்பு அடங்கித் திருக்கயிலைக்குச்சென்று சிவபெருமானை வழிபட்டு உய்யும் வாய்ப்பைப் பிறவியால் பெற்றிருந்தும், அதனைப் பயன்படுத்திகொள்ளாமல் அமுதம் அருந்தியும் அரம்பையர்களைத் துய்த்தும் ஐம்புலன்கள்வாய் மயங்கியும் தம்பிறவியைப் பயனின்றிக் கழித்தலின் அவர்களை 'அவமாய தேவர்கள்' என்றார்.

அவர்கள் பிறவியும் ஞானவாயிலாகாது போகத்தழுந்திப் புந்தியைக் கெடுத்தலின் அவகதியாயிற்று. அவகதி - கீழான பிறப்பு. மலைமேல் ஏறியவனுக்குத் தரை பள்ளமாகத் தோன்றுதல் போல மனிதப்பிறவியில் துன்ப இன்பங்கள் கலந்த சூழ்நிலையில் உழன்றபோது, உயர்ந்ததாகவும் இன்பமாகவும் தோன்றிய தேவப்பிறப்பு, அதைவிட உயர்ந்த சிவபோகத்தை அனுபவிக்கின்றகாலத்து இழிந்ததாகவும் பயனற்றதாகவும் தோன்றலின், அதனை வெறுத்து இறைவன் என்னை அதில் அழுந்தாமல் பாதுகாத்து ஆண்டுகொண்டருளினன் என்று பாராட்டுகின்றார்.

பவ மாயம் - பிறவிக்கு ஏதுவாய வஞ்சனை. பிறவியும் அதற்கு ஏதுவாய வஞ்சனையும் என உம்மைத்தொகையாகக் கோடலும் ஆம்.

அறியாமையால் யானெடுத்த இப்பிறப்பை இன்பப்பிறப்பு என்று மயங்குதற்குக் காரணம் மாயமாதலின் அதினின்று

காத்தது ஒளியனைத்திலும் சிறந்த ஒளிப்பிழம்பாகிய சிவமே என்பார் 'பவமாயம் காத்து என்னை ஆண்டுகொண்ட பரஞ் சோதி' என்றார்.

நவமாய செஞ்சுடர் - சிவஞானம். இதுவரை கருவி கரணங்களை வாயிலாகக்கொண்டு பெற்ற பசுஞான பாசஞானங்களையே பெரிது என்று கருதியிருந்த எனக்கு, புதிதாகிய சிவ ஞானத்தைச் சிவபெருமான் உதவினார்; அதனால் யான் பெற்ற முதற்பயன் ஆணவமல காரியமாய 'நாம்' என்னும் செருக்கு ஒழிந்தது; அதன்பின் சிவமானதன்மை சித்தித்தது; இவ்வண்ணம் மலநீக்கமும் சிவப்பேறும் ஆகிய அனுபவங்களைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றமை காண்க.

'சிவமானவா பாடி' என்பதால் இது சிவனோடு அடைவு ஆயிற்று.

239 அருமந்த தேவர் அயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் னுளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 5

இ - ள்: அருமருந்தை ஒத்த தேவர்களுக்கும் பிரமன் திருமால் முதலியவர்களுக்கும் அறிதற்கும் அரிய பரசிவம், திருமேனிதாங்கி எழுந்தருளிவந்து, பூமியிலுள்ள மக்கள் மகிழ எம்மை அடிமையாக ஏற்றுக்கொண்டருளி, எமது பிறவிக்கு ஏதுவான கரு வெதும்பி வீழும்வண்ணம் திருவருள் நோக்கம் பாலித்து, என் மனத்தில் புகுந்து சிவஞானச் செல்வமாகத் திகழ்வதைப் புகழ்ந்து பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டிலும், ஆட்கொண்ட அருமையை வியந்து, சிவஞானத்திரு உதவிய சிறப்பைப் பாராட்டுகின்றார்.

உயர்ந்த தேவர்கட்கும் மால் பிரமன் முதலிய பதவிகளில் இருப்பார்க்கும் அறிந்து அனுபவித்தற்கரிய பரசிவம், குரு மேனி தாங்கிவந்து குவலயத்தோர் களிப்பெய்த பிறவியை அறுத்து எனது மனத்தே என்றும் நீங்காது அறிவேயுருவாய் அமர்ந்திருந்தது என்பது கருத்து.

அருமந்த தேவர்: அருமருந்தன்ன தேவர் என்பதன் மருஉ மொழி. அருமருந்து - கிடைத்தற்கரிய தேவாமுதம். அருமந்த பிள்ளை என்பதுபோல அருமந்த தேவர் என்றது உயர்வான

குண நலங்களைப்பெற்ற தேவர்கள என்றபடி. இதனைக் குறிப்பு மொழியாகக்கொண்டு இழித்துரைத்ததாகக் கோடலுமாம்.

'அருவந்த தேவர்' எனப் பாடங்கொண்டு, அருமையாக எய்திவ்ரப்பெற்ற பிறவிகளையுடைய வானவர் எனப் பொருள் கொள்வர் சிலர். இப்பாடம் எதுகையால் அவர்கள் ஊகித்துக் கொண்ட பாடமாகக் கருதப்பெறுதலானும் வேறு பதிப்புக்களி னும் கிடைத்த பிரதிகளிலும் இல்லாமையானும் பொருட்சிறப்பு இல்லாமையானும் பொருந்தாது என்க.

உருவந்து - உருவுடன் வந்து அல்லது உருவாக வந்து; அதாவது குருமேனிதாங்கி எழுந்தருளியதை நினைவூட்டிச் சொன்னது.

தேவர்கட்கும் கிடைக்காதபேறு எமக்குக் கிடைத்ததேயென மக்கள் மகிழ என்பது 'பூதலத்தோர் உகப்பு எய்த' என்பதால் உணர்த்தப்பெற்றது.

கொண்டருளி என்பதற்கு எம்மை ஆட்கொண்டருளி என ஒருசொல் வருவித்துரைக்க. இறைவன் ஆட்கொண்டவுடன் உயிர்கள், மேல் வினைகளைச் செய்யாமையானும் செய்வன யாவும் அருட்செயலேயாக முடிதலானும் பிறவிக்கு ஏதுவின்றி ஒழிதலின் 'கருவெந்துவீழ' என்றார். வறுத்தவித்து முளையாத வாறுபோல வெந்த கரு விளையாதவண்ணம் திருக்கடைக்கண் நோக்கம் பாலித்தார் என்பது.

சிவஞானத்தைத் திரு என்றார். அப்பர்சுவாமிகள் "திருவே என் செல்வமே" என்றதும் காண்க. வந்தவாறு என்பது வந்தவா என நின்றது.

'கருவெந்து வீழக் கடைக்கணித்து என் உளம்புகுந்த திரு' என்றது சிவனேடைவை உணர்த்துகிறது.

**240** *அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்*
*வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்*
*உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க்கண்களினீர்த்*
*திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.* **6**

இ-ள்: ஆடுகின்ற பாம்பைத் திருவரையின்கண்ணே கட்டிய பெருமான், இமயமலையரசன் மகிழ்ந்து கொண்டாடும் மங்கையாகிய உமாதேவியை இடப்பாகத்திற்கொண்டு இப்பூமியில் வந்து, எம்மை ஆட்கொண்டதன்மையை, உரை தடுமாறவும் உள்ளொளி மிகவும் ஒள்ளிய பெரிய மலரை

ஒத்த கண்களில் ஆனந்தக்கண்ணீர் திரையிட்டாற்போல மூடித் ததும்பவுமாகப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் உமாதேவியாரோடும் எழுந்தருளிவந்து நம்மை ஆட்கொண்டவிதத்தை உரை தடுமாற, அறிவு மயங்க, கண்கள் நீர் சொரியப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றது.

உமையொருபாதியனுக இப்பூமியில் எழுந்தருளிவந்து, நம்மை ஆட்கொண்டதை மெய்ப்பாடுவிளேயப் பாடி ஆடுவோமென்ருள் என்பது கருத்து.

ஆடு நாகம் : சாதியினியல்பு. எப்போதும் படமெடுத்து ஆடுகின்ற பாம்பை அசையாதவண்ணம் திருவரையில் அரைஞாணுகக் கட்டியுள்ளார் என்பதை 'ஆடு நாகம் அரை அசைத்த பிரான்' என்பதால் குறிப்பித்தார்.

உயிர்கள் இவ்வுலகில் விளேக்கீடாக ஓயாமல் பிறந்திறந்து உழலுவதைக் கண்டு கருணே கூர்ந்து, அவரவர் பரிபாகநிலேக்கேற்ப ஆட்கொள்ளத் திருவுளங்கொண்டு உமையம்மையாரை ஒருபாகமாகக் கொண்ட பெண் பாதியனுக எழுந்தருளினுன் என்பார் 'வரையாடு மங்கைதன் பங்கொடும் வந்து ஆண்ட திறம் பாடி' என்ருர்.

இறைவன் தமக்குச் செய்த பேருபகாரத்தைப் பாராட்டிப் பாடும்போது உரை தடுமாறும், உள்ளொளி மிகும், கண்களில் ஆனந்தநீர் ததும்பும் என்பார் 'உரையாட, உள்ளொளியாட, ஒண் மாமலர்க் கண்கள் நீர்த்திரையாட' என்ருர். ஒளியாட என்பதற்கு ஒளி மிக என்பது பொருள். ஒளி - ஞானம். அனுபவ உணர்ச்சி மிகுதியால் அறிவு தடுமாற எனலுமாம்.

பழையவுரை, நம்மை ஆண்ட திறமானது உரைக்கண் விளங்கவும், உள்ளத்தில் அறிவுருவாகச் சதாசிவ அட்டமூர்த்தங்களும் அதிட்டித்து விளங்கவும், கண்களிலே ஆனந்த பாஷ்பம் திரைபோல் அலேயவும் எனப் பொருள்கூறும். இதில் ஆட என்பதற்கு விளங்க எனவும் அசைய எனவும் பொருள் கொள்ளப்பெற்றமை காண்க. இவ்வுரையும் மெய்யன்பரது சிவாநுபவ நிலேக்கு முரணுகாமை தெளிக.

உரையும், உள்ளொளியும், கண்ணீர்த் திரையும் நுகருமாறு கொட்டுவோம் எனவும், சொல்லுமாறு கொட்டுவோம்

எனவும் சிலர் பொருள்கண்டு இடர்ப்படுவர். இவர், ஆட என்பதற்கு, நுகர எனவும் சொல்ல எனவும் பொருள் கொண்டனர். இவ்வுரை மெய்ப்பாட்டினை அறிவியாமையும் அதற்கு ஏற்ற சொல்லமைதியின்மையும் நோக்கிப் பொருந்தாமையறிக.

இத்திருப்பாடல், ஆனந்த பரவசநிலையை அறிவித்தலின் சிவனுடைவினை உணர்த்துதல் காண்க.

*241* ஆவா அரியயனிந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாவென் றென்னையும் பூதலத்தேவலிந் தாண்டுகொண்
பூவா ரடிச்சுவ டென்றலைமேற் பொறித்தலுமே [டான்
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 7

இ - ள் : ஆ ஆ! மால் பிரமன் இந்திரன்முதலான தேவர்களுக்கும் அறிதற்கரிய சிவபெருமான் பூமியில்வந்து, ஒன்றற்கும் பற்றாத என்னையும் வா வா எனப் பன்முறை அழைத்து வற்புறுத்தி அடிமையாக ஆண்டுகொண்டான்; அவ்வண்ணம் ஆட்கொண்ட பெருமான், தாமரைமலர்போலும் திருவடியை என் தலைமேற்சூட்டி, அதன் அடையாளத்தைப் பொறித்தவுடன், நான் தெய்வத்தன்மை பெற்றவிதத்தைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடலில், இறைவன் ஆட்கொண்டு திருவடி சூட்டிய பெருமை உணர்த்தப்பெறுகின்றது.

ஆட்கொண்ட இறைவன் திருவடிதீட்சை செய்தருளினன். அங்ஙனம் செய்தமைக்கு அடையாளமாக அடிச்சுவட்டையும் என் தலையின்மேற் பொறித்தான்; அதனால் என் பசுத்தன்மை பறந்தது; சிவபோதமிகுந்து நான் தெய்வமானேன்; அதனைப் பாடிக் கொட்டுவோம் என்றான் என்பது கருத்து.

ஆ ஆ : வியப்பிடைச்சொல். யார்க்கும் கிடைத்தற்கு அரிய பேறு தமக்குக் கிடைத்தவுடன், அது கிடைத்தவிதமும், அதனால் தான் அடையும் இன்பவுணர்வும் சொல்ல எண்ணினும் சொல் வராது; ஆ ஆ என்று வியப்பாற் கூவத்தான் தோன்றும். அங்ஙனமே இவனும் கூறினான் என்க.

இங்ஙனம் வாய்விட்டுக்கூவியபின் வியப்பு ஓரளவு உணர்ச்சியைச் சொல்லும் அளவாகக் குறைய, அதனால் இத்தகைய பேரின்பத்தையுதவிய பெரியவன்தினையே முற்பட்டுத்தோன்ற 'அரி அயன் இந்திரன் வானோர்க்கும் அரிய சிவன்' என்று ஆட்கொண்ட முதல்வனை முன் அறிவிக்கின்றான்.

பின் தன்னிலையை எண்ணுகிறாள்; அவனை நோக்கத் தன்னிலை எவ்வளவோ இழிந்திருப்பதைக் கருதுகிறாள்; மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடாக உணருகிறாள்; தன் இழிவு முழுவதையும் சொல்லச் சொல் அகப்படவில்லை; ஆதலால் 'என்னையும்' என்று இழிவுசிறப்பும்மை ஒன்றாலேயே தனது எண்ணக்குவியலைக் கொட்டுகிறாள்.

வா வா என்ற அடுக்கு, பரிவின் மிகுதியை விளக்குவது. மணவினைக்கு வருபவர்களை வாருங்கள் வாருங்கள் என்று பரிந்து அழைப்பது போல அழைத்தார் இறைவன் என்பது. பிற்காலப்பெரியார் ஒருவர், "வா வா என்று நின் முலைத்தாயர் வருந்தி அழைத்தால் வாராதிருக்க வகையுண்டோ" எனக் கூறுதலும் காண்க.

சிவபுரத்திலுள்ள சிவன் எனக்காக நான் வாழுமிடமாகிய பூமிக்கண் வந்து அழைத்தான் என்பார் 'பூதலத்தே' வந்து என்றார். இது இறைவனுடைய பெருங்கருணையையும் எளிமை யையும் காட்டுதல் காண்க.

பசியிருந்தும் பாலுண்ண மறுக்கும் குழந்தைபோல நான் அவனழைத்தும் பொருட்படுத்தாதிருப்பதை யறிந்து என்னறி யாமைக்கு இரங்கி வற்புறுத்தினன் என்பார் 'வலிந்து' என்றார். இறைவன்திருவடி தீண்டுதற்கு மெல்லிதாய், ஊறுணர்ச்சியை மிகுவிப்பதாய், தெய்வமணம் கமழுவதாய் இருந்தது என்று தம்மனுபவம் கூறுவாள் 'பூவார் அடி' என்றாள்.

சுவடு - அடையாளம். பொறுத்தல் - எழுதுதல். அப்பர் சுவாமிகளும் "நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" என்று தம் அனுபவம் கூறுதல் காண்க. பரிசவேதி பட்டவுடனே இரும்பு பொன்னா னாற்போல, திருவடி பட்டவுடன் என் சீவபோதம் கழன்றது; சத்தும் சித்தும் ஆனந்தமுமான தெய்வத்தன்மை விளைந்தது என்பாள் 'பொறித்தலுமே தேவானவா பாடி' என்றார்.

சிவமான தன்மையைப் பாடி என்றமையால் இது சிவனே டைவாதல் காண்க.

242 கற்கோலை போல்வதோர் காயப்பிறப்போ,டிறப்பென்னும்
அறம்பாவ மென்றிரண் டச்சந்தவிர்த்தென்னை யாண்டு
[கொண்டான்
மறந்தேயுந் தன்கழலுன் மறவாவண்ண நல்கியவத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 8

இ - ள்: காற்றாடியின் ஓலையைப் போல்வதாகிய உடலிற்கு உளவாகிய பிறப்பு இறப்பு என்கின்ற அச்சத்தையும், அப்பிறவிக்குக் காரணமான புண்ணியம் பாவம் என்கின்ற அச்சத்தையும்போக்கி, இறைவன் என்னை ஆட்கொண்டான்; தன் திருவடியை நான் மறந்தும், மறவாதவண்ணம் உபகரித்த அத்தன்மையைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், அச்சந்தவிர்த்து ஆட்கொண்டருளிய இறைவன், தன்கழலை நான் மறவாவண்ணமும் அருளியதைப் பாடிக் கொட்டுவோம் என்கின்றது.

பிறப்பு இறப்பு, அறம் பாவம் என்னும் இருவகை அச்சங்களையும் நீக்கி ஆட்கொண்ட இறைவன்தாளை அடியேன் மலவாதனை தாக்க மறந்தேனுயினும், அங்ஙனம் மறவாவண்ணம் அருளிய அத்தன்மையைப் பாடிக் கொட்டுவோம் என்றுளாம்.

கறங்கு - காற்றாடி. ஓலைக்காற்றாடி காற்றில் வேகமாகச் சுழலும்போது அதனது இதழ்கள் ஒன்றும் தோன்றாமல் ஒரே வட்டமாகத் தோன்றுவதுபோல உயிர் பிறந்தும் இறந்தும் சுழன்று என்றும் உடம்போடு கூடியதுபோலக் காணப்படுகிறது என்பார் 'கறங்கோலை போல்வதோர் காயம்' என்றார்.

உயிர் உடம்போடுகூடுதல் பிறத்தல். பிரிதலே இறத்தல். இவ்விரண்டுமே உயிர்க்குத் துன்பம். ஆதலால் உயிர் பிறப்பு இறப்புகளுக்கு அஞ்சுவதாயிற்று; அதனை நீக்கினான் இறைவன் என்பதை 'பிறப்போடு இறப்பென்னும் அச்சம் தவிர்த்து என்பதால் குறிப்பித்தார்.

பிறப்பிறப்புக்களுக்குக் காரணம் முன்முன் பிறவிகளிற் செய்த புண்ணிய பாவங்களாதலின் அவற்றை நீக்கினாலல்லது பிறவி அறாது ஆகவே காரணமாய அவற்றைத் தவிர்த்தார் என்பார் அறம் பாவம் என்ற இரண்டு அச்சம் தவிர்த்து' என்றார். காரணம் அழியவே அதனால் விளையும் அச்சமும் தவிருமாதலின் இரண்டு தவிர்த்தென்றது 'இரண்டு அச்சம் தவிர்த்து' என்ற நயம் உணர்க. அறம் பாவம் என்ற இவ்விரண்டுமே பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலப் பிறவிக்கு ஏதுவாகலின் அவ்விரண்டுமே அச்சந்தருவன என்பதை "இருள்சேர் இருவினையும் சேரா" என்ற திருக்குறளும், அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையும் நன்கு விளக்கும். இதனை மனங்கொள்ளாத சிலர் இப்பகுதிக்கு மறம் செய்தலும், அறம்

செய்யாமையும் கேடு விளைக்குமாதலால் அவ்விரண்டானும் அச்சமுளவாயின என நயமுரைப்பர். இது சைவமரபு பற்றி வந்த கருத்தன்மை தெளிக.

நான் மறந்தேயும் மறவாவண்ணம்: இறைவன் நமக்குச் செய்த உபகாரத்தை என்றும் எக்காரணங்கொண்டும் மறத்தல் இயலாது. ஆயினும், சில சமயத்து அறிவொடு படாத செயலாகவே 'நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' என்றாற்போல மறதியாகவே மறக்கநேரினும், அவ்வாறு மறவா வண்ணம் என்பதாம். இங்ஙனம் அன்றி, மறதிக் குணம் உடையான் ஒருவனுக்கு ஏதாவது ஒரு சிறந்த பொருளைக் கையில் கொடுத்து, என்னை மறந்துவிடாதே என்று நண்பன் சொல்வதுபோல, நான் மறந்தும் சிவனை மறக்காதவண்ணம் திருவடியைத் தந்தான் என்லும் ஆம். அத்திறம்பாடல் - அத் தகைய கருணையின் பெருமை அமைந்த பாடல். நான் மறந் தேயும் அவன் மறவாமல் கழல்நல்கிய திறம் என்பாரும் உளர்.

இது, 'மறவாவண்ணம் தன் கழல் நல்கினன்' என்றலின் சிவனோடடைவாதல் தெளிக.

243 கன்னா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினால்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ.

இ - ள்: மின்னற்கொடியை ஒத்துத் துவள்கின்ற இடையினையும், சிவந்த பவழம்போலும் வாயினையும், வெண்மையான பற்களையும் உடைய பெண்களே! கல்லில் நாருரித்தாற் போல வலிய மனம்படைத்த என்னையும் தன் கருணையால் பொன்னை ஒத்துப் போற்றத்தக்க திருவடியைத்தந்து ஆண்ட தலைவனது புகழைப்பாடித் தென்னா தென்னா என்று தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், திருவடியைத்தந்து ஆண்டுகொண்ட இறைவனது புகழ்பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றது.

நான் கசியாத மனத்துக் கடைப்பட்ட நாயேன். கல்லாம் மனத்துக் கீழானவன். அங்ஙனமிருந்தும் கல்லில் நாருரிப்பது போல; இறைவன் தன் கழற்கு அன்பனாக்கி, ஆட்கொண்டான் எனத் தன்னிழிபும் பெருமானது கருணையும் தோன்ற 'கன்னார் உரித்தென்ன......ஆண்ட பிரான்' என்றருளினர்.

புகழினைத் தென்னு தென்னு என்று பாடித் தெள்ளேணம் கொட்டாமோ எனக் கூட்டுக.

இதுவும் 'கழல் பணித்தாண்டமை' கூறியதால் சிவனோடு அடைவாதல் காண்க.

244 கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
புனவே யனைவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே யெனைப்பிடித் தாட்கொண்டவா நயந்துநெஞ்சம்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ.

இ - ள்: தேவர்கள் கனவிலும் காணுதற்கு அரிய ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த பெருமான், புனத்தில் வளர்ந்த மூங்கிலை ஒத்த தோள்களையுடைய பெருமாட்டியோடும் எழுந்தருளிவந்து, என்னுடைய விழிப்பு நிலையிலேயே, என்னைப் பிடித்து ஆட்கொண்டவாற்றை மனத்தால் நயந்து, சிறிய வேல்போலும் கண்களில் மகிழ்ச்சிக்கண்ணீர் நிறையத் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டு, தேவர்களுக்குக் கனவிலும் காண்பரிய பெருமான் என்னை நனவிலேயே வந்து ஆட்கொண்டமையான் அன்புகூர்ந்து ஆனந்தக்கண்ணீர் மல்கப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றது.

குருநாதனாக எழுந்தருளி நனவிலே எல்லாருங்காண ஆட்கொண்ட பெருமையை எண்ணி மனமார விரும்பி ஆனந்தக் கண்ணீர் அரும்பக் கொட்டுவோமாக என்கின்றான்.

தேவர்கள் கனவிலும் பெருமானைக் காண முடியாமைக்கு உரிய காரணங்கள் முன்னர்த் தெரிவிக்கப்பட்டன. ஆயினும், ஈண்டு, 'காண்பரிய கனைகழலோன்' என்றது, அவன் கழல் வேதக் கழல், நாதமாகிய ஞானத்தைத் தரும் கழல். அதன் ஒலி செவிவழியாகப் புகுந்து அறியாமையைப் போக்க அதனாலாவது பெருமானைக் கண்டு வணங்கவேண்டிய அவர்கள் அதுவும் செய்திலர் என அவர்களுடைய பரிபாகமின்மையைத் தெரிவிக்கின்றது.

வேய் - மூங்கில். பச்சைமூங்கிலை அதன் பசுமை, தண்மை, வழுவழுப்பான மென்மை முதலிய காரணங்களால் மாதரின் தோளுக்கு உவமையாக்குதல் இலக்கிய மரபு; ஈண்டு மாதர்களுக்குத் தலைவியாகிய பெருமாட்டியின் தோளுக்கு உவமித்தார். புனவேய் என்றது, காட்டில் வளர்ந்த மூங்கில் தன்னியற்கையில் நன்குவளர்ந்து பேரழகுடையதாயிருக்கும் என்பதால்,

வளைத்தோளி - தோள்வளையலை அணிந்த தோள்களையுடையவள். உமாதேவியொடும் வந்து என்றது அநுக்கிரகமூர்த்தியாக எழுந்தருளி என்றவாறு.

'எனைப்பிடித்து' என்ற சொல்லமைதி, சிவபெருமானுக்கு நான் ஆட்பட அஞ்சி ஒதுங்கி ஓடினேன்; இருந்தும் அவன் என்னைப் புன்மாய வஞ்சப்புவனத்தே போகத்தில் புக்கழுந்தாவாறு இறுகப்பிடித்து ஆட்கொண்டான் என இறைவனுடைய கைம்மாறு வேண்டாத கருணைத்திறத்தைக் காட்டுகிறது.

நனவு - எல்லாக் கருவி கரணங்களோடும் கூடிய உயிர்த்தலைவன் புருவமத்தியாகிய அரசபீடத்திலிருந்து உலககாரியங்களையும், தன்போகத்தையும் விரும்பிச் செய்கின்ற விழிப்புநிலை. ஆட்கொண்டவாற்றினை நயந்து என்பது 'ஆட்கொண்டவா நயந்து' என நின்றது. நெஞ்சம் நயந்து - மனமார விரும்பி.

சின வேல்: சின்ன வேல் என்பதன் தொகுத்தல்விகாரம். கோபத்தையுடைய வேல்போன்ற கண் என்று பொருள் கொண்டு, சிவந்த கண் என நயங்கூறுவாரும் உளர். அன்பு நெறிப்பட்ட மாதர்களின் கண்ணுதலின், அங்ஙனம் எண்ண முடியாமையைக் கருதுக.

தேவர்கட்குக் கனவிலும் அறியப்படாதவன் என்னை நனவிலே தானும் தையலுமாக வந்து ஆட்கொண்டான் என்பது சிவனுடைமை உணர்த்துதல் காண்க.

245 கயன்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக் கலந்தாண்டலுமே
அயன்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல்
மயன்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய
செயன்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 11

இ - ள்: கயல்மீனையொத்த கண்களை உடைய உமாதேவியை ஒருபாகத்துக்கொண்ட இறைவன், அடியேன் மனத்திலே புகுந்து என்னோடு ஒன்றிக்கலந்து ஆண்டவுடன் புறச்சார்பு நீங்கி, போக்குதற்கரிய வினைகளால் விளைந்த உறவும் கெட்டு, பூமியின்மேலுள்ள மயக்கமும் கெட்டு, மற்றுள்ள பேச்சுக்களும் கெட்டு, என்னுடைய சிவத்தொழிலும் கெட்ட முறைமையினைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாட்டு, தன் செயலற்றதன்மைகளைத் தெரிவித்து, தெள்ளேணம் கொட்டுதலைத் தெரிவிக்கின்றது.

இறைவன் ஆட்கொண்டமையால் விளைந்த அனுபவத் திறங்கள் பலவும் படிமுறையில் உணர்த்தப்பெறுதல் காண்க.

கயல்மீன் தன் நோக்கத்தாலேயே முட்டைகளைப் பொரித்துக் குஞ்சாக்கி வளர்ப்பதுபோல, பெருமாட்டி தன் திருவருணோக்கினாலேயே உயிர்களின் அறியாமையைப் போக்கி ஞான வளர்ச்சி நல்கிச் சிவபோகத்தில் அழுத்துதலின் 'கயல் மாண்ட கண்ணி' என்றார்.

என்னைக் கலந்து - மல மாயை கன்மங்களோடு கலந்து கிடக்கின்ற என்னை அவற்றின் வலி ஒடுக்கிப் போக்கிவிட்டுத் தான் வலிய வந்து புகுந்து, அவை திரும்பவும் பொருந்தா வண்ணம் தானே என் உயிரினிடமாக வியாபித்து நின்று.

ஆண்டலும் - என்னை ஒருடைமையாக்கித் தன் விருப்பம் போலத் தன் பணியாகிய சிவப்பணியே செய்ய ஆண்டவுடன்.

என் வீடு, என் மாடு, என் பொருள், என் புலம் என்ற புறச்சார்பு கெட்டது; நாமே சிவனுடைமையானபோது நமக்கு ஓர் உடைமை தனியாக ஏது? என்ற எண்ணம் உண்டாயிற்று என்பார் 'அயல் மாண்டு' என்றார்.

சுற்றம் - மனைவி, மக்கள், தாய், தந்தை என்ற உறவின் முறையார். இவர்கள் நம்மைச் சுற்றியிருந்துகொண்டு நமக்கு நலந் தீங்குகளை விளைப்பது நம்வினைகளுக்கீடாகவேயாதலின் அவர்களைக் குறிக்கும்போது 'அருவினைச் சுற்றமும்' என்றார். இறைவன் ஆண்டவுடன் வினையறவே, அதனைப் பற்றுக்கோடாகக்கொண்டு நம்மைச் சூழ்ந்துள்ள சுற்றத்தார்களும் மறைந்தனர் என்பார் 'சுற்றமும் மாண்டு' என்றார்.

மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை என்ற விருப்பம் மூவகையுள் நிலவிருப்பம் மிகப்பொல்லாதது; அது அறிவையே பற்றிநின்று பிறர் நலந்தீங்குகளைக் கவனிக்காதவாறு செய்து நிலபதியாகத் தன்னை உயர்த்திக் கொள்ளுதலிலேயே விருப்பத்தை விளைக்கும்; அந்த மயக்கமும் மாண்டது என்பதனை 'அவனியின்மேல் மயல் மாண்டு' என்றார்.

தூற்றுதலும் போற்றுதலுமாகப் பிறர்வாயிலிருந்துதோன்றி விருப்பு வெறுப்புக்களை விளைவிக்கின்ற சொற்களும் என்னிலையில் பயனற்றுப் போயின. நாடவர் நந்தம்மை ஆர்ப்ப நாமும் அவர்தம்மை ஆர்ப்ப, அவற்றை மதியாது இருக்கின்றநிலை வந்தமையை 'மற்றுள்ள வாசகம் மாண்டு' என்பதாற் குறித்தார்.

சிவாநுபவம் முதிர்ந்தமையால் பேச்சும் அற்றது; பேசாப்பெரு நிலை எய்தியது எனலுமாம்.

என்னுடைய செயல் - சிவச்செயல். உயிர்கள் தற்போத முனைப்பால் வினைவயப்பட்டுச் செய்யும் புண்ணிய பாவங்கள். அவை மாறுதலாவது சிவச்செயல்களாகிய சரியை கிரியை யோகம் ஞானங்களையே செய்து, நாம் செய்வன யாவும் அவ னருள் துணையிருந்து இயக்கச் செய்வன; இவற்றால் வினையும் இன்பத் துன்பங்கள் நம்மைச் சார்வன அல்ல; சிவனே செய் பவன்; சிவனே கொடுப்பவன்; சிவனே நுகர்பவன் என்று உணர்தல். இவ்வண்ணம் தற்போதமும் தற்செயலும் மாண்டு, சிவபோதமும் சிவச்செயலுமானபடியைப் பாடுதலின் இத்திருப் பாடல் சிவனோடடைவாதல் காண்க.

246 முத்திக் குழன்று முனிவர்குழா நனிவாட
அத்திக் கருளி யடியேனை யாண்டுகொண்டு
பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 12

இ - ள்: முனிவர் கூட்டங்கள் முத்தியின்பத்தை அடை தற்காக வருந்தி மிக வாட, அந்த முத்தித்திசையையே அடி யேற்கு அருளிச்செய்து அடியேனை ஆண்டுகொண்டு, அன்பா கிற பெரிய கடலுள் என்னை என்றும் பெயராது பதியச்செய்த மேலான சோதிவடிவான சிவபெருமானைத் தித்திக்கப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், முத்தியை விரும்பி எத்தனையோ முனிவர் கள் வருந்த, எனக்குப் பத்தியை அருளி ஆண்டுகொண்ட பரஞ்சோதியைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்கின்றது.

முத்தி - என்றும் மாறாத ஆனந்தமயமான இறைவனோடு ஒன்றியிருக்கும் நிலை. அந்நிலையைப் பெறுதற்காக முனிவர் கூட்டங்கள் காயிலை தின்றும், கானில் உழன்றும், தீயிடை நின்றும் வருந்துகின்றன. அவர்களுக்குக் கிடைக்காத அந்த முத்தியை யான் எளிமையில் அடைய இறைவன் வலியவந்து ஆண்டுகொண்டான்; அன்புக்கடலில் ஆழ்த்தினான். ஆதலால் முத்திப்பேரின்பம் எனக்கு மிக எளிமையாயிற்று. இத்தகைய உபகாரத்தை உன்னி அவனைத் தித்திக்கப்பாடுவோம், தெள் ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

அ திக்கு அருளி - அந்த முத்தித்திசையை அருளி. அகரச் சுட்டு அம்முனிவர்களுக்குக் கிடைக்காத என்னும் அருமையைச் சுட்டிநின்றது. அத்திக்கு அருளி எனக்கொண்டு துருவாசமுனிவரின் சாபத்தை ஏற்று மதுரையில் காட்டானையாகத் திரிந்து, சொக்கலிங்கப்பெருமானைப் பூசித்த யானைக்கு மீண்டும் வெள்ளானையாம்வண்ணம் அருள்செய்து எனலுமாம். ஈண்டு இவ்வரலாற்றை அடியாகக்கொண்ட இவ்வுரை இயைபுடையதாகிச் சிறப்புத்தருவதாமா என்பதைத் தேர்ந்து துணிக.

தவம் யோகம் முதலியவற்றைக்காட்டிலும் முத்திக்கு உரிய நெறி பத்தியே என்பதும், அதனை இறைவன் தமக்கருளினன் என்பதும், அதனாலே எனக்கு அவன் அருட்சோதிப் பெருமானாக விளங்கினன் என்பதும், ஆதலால அவனைத் தித்திக்கப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதும் கூறப்பெறுதலின் சிவனோடடைவு அறியப்பெறுமாறு உணர்க.

*247* *பார்பாடும் பாதாளர் பாடும்விண்ணோர் தம்பாடும்*
*ஆர்பாடுஞ் சாரா வகையருளி யாண்டுகொண்ட*
*நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்*
*சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ.* **13**

இ - ள்: மண்ணுலகத்தார் பக்கமும், பாதாளத்திலுள்ளார் பக்கமும், விண்ணவர் பக்கமும், மற்றுமுள்ள எவர் பக்கமும் சார்ந்து கெடாதவகையை அடியேற்கு அருளிச்செய்து, என்னை ஆண்டுகொண்ட நிகழ்ச்சிகளை அறிவிக்கும் பாடல்களைப்பாடி, நினைத்தற்கரிய ஒப்பற்ற பெரியோனாகிய சிவபெருமானுடைய புகழமைந்த பாடல்களைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், அடியேனை உலகச்சார்பினை விட்டுய்யத் திருவுளம்பாலித்த இறைவனைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கிறது.

ஆணவமலச் சேர்க்கையால் அறியாமைவயப்பட்டு இருவினைக்கீடாகப் பிறந்திறந்துழலும் எவர்வசமும் சாராது சிவன் எம்மை ஆண்டுகொண்ட எம்மனுபவங்கள் அமைந்த பாடலைப் பாடி, அவனுடைய சிறப்பியல்புகளாகிய புகழமைந்த சீர்பாடல் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

பாடு - பக்கம். நேர் பாடல் - நேருக்குநேர் எம்மிடத்து உண்டான அனுபவங்கள் நிறைந்த பாடல். அவை குருவாக வந்ததும், உபதேசித்ததும், குதிரைகொணர்ந்ததும், கோயில்

கட்டியதும், பிட்டுக்கு மண்சுமந்ததும், பிரம்படி பட்டதும், ஆரும்பெறாத இன்பம் அருளியதும் முதலான அனுபவங்கள். *சீர்* - இறைவனுடைய மெய்ம்மையான புகழ்.

நேர் பாடல் பாடுதலால் சிவனோடு அடைவும், சீர் பாடுதலாலும் அடைதலாலும் வினையும் பயனும் உணர்த்தப்பெறுதலின் இது சிவனோடடைவாயிற்று என்க.

*248 மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே*
*நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்*
*பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்*
*சேலேர்கண் ணீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ.14*

இ-ள்: திருமாலும், பிரமனும், ஏனைய தேவர்களும், வேதமுதலான நூல்களும் முயன்றும் அறியமுடியாத பரசிவம் மிக நுண்ணியனாய் அடியேன்பால் வந்து, என் உள்ளத்திற் புகுந்து கருணைசெய்து, என்னையுருக்குகின்ற தியானமுதிர்ச்சியால் சேல்மீனை ஒத்த கண்களில் ஆனந்தக்கண்ணீர் ததும்பத் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல் பாசஞானத்தினாலும் பசுஞானத்தினாலும் அறியப்பெறாத இறைவன் அடியேன்பால் வந்து திருவருளைப் புகுத்தி ஆண்ட உதவியைப் பாவனைசெய்து, அதன் முற்றிய தன்மையாகிய பாவகத்தால் ஆனந்தக்கண்ணீர் பெருகத் தெள்ளேணம் கொட்டுவோம் என்று அறிவிக்கின்றது.

அரியபொருள் எளிமையாக வந்து ஆட்கொண்டமையையும், பாவகப் பொருளாக அநுபவத்திற்குக் கிடைத்தமையையும் வியந்து பாடிக் கொட்டுவோம் என்பது கருத்து.

மாலே என்பது முதலியவற்றிலுள்ள ஏகாரங்கள் எண்ணுப் பொருள. மாலும்...தேவர்களும் பசுக்கள். அவர்கள் அறிவு உணர்த்த உணரும் சிற்றறிவாகிய பசுஞானம். நூல் - வேத முதலியன. அவற்றால் அறியும் அறிவு பாசஞானம். இவ்விரண்டும் வரையறைக்குட்பட்ட ஞானங்கள். இவற்றால் கடந்த ஞானவடிவினனாகிய இறைவன் அறியப்பெறான் என்பதனையே 'தேவர்களே நூலே நுழைவரியான்' என்பது விளக்கிற்று. நுழைவு - புகுந்தறிதல்.

நுண்ணியனாய் வருதலாவது இளநீருள் நீர் நிறைந்தாற் போலவும், பூவில் மணம்பொருந்தினாற் போலவும் ஏற்பானாகிய அடியேனும் அறியமுடியாதபடி வருதல்.

பாவனை - தியானம். பாவகம் -அதன் முதிர்ச்சியால் தன்னையும், அறியும் பொருள்களனைத்தையும் தியானப்பொருளாகவே காண்டல். இறைவன் மனம் புகுந்து பரிந்து உருக்கியதைப் பாவித்துப் பாவித்து அப்பாவனை முற்றிச் சிவமாகவே தன்னைக் காண்டல். பணப்பித்துக்கொண்டான் ஒருவன் ஓட்டையும் பணமாகக் காணுதல்போல எல்லாம் சிவமயமாகக் காணுதல். இத்தகைய அனுபவம் முதிருமானால், ஆனந்தக்கண்ணீர் எப்போதும் பொழியுமாதலின் 'சேல் ஏர் கண் நீர்மல்க' என்றார்.

இவ்வண்ணம் பாவகத்தைப் பாடும்வண்ணம் அறிவித்தலால் இப்பாடல் சிவனோடடைவாதல் காண்க.

*249* உருகிப் பெருகி யுளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவி நாம் தெள்ளேணங் கொட்டாமோ. 15

இ - ள் : மனம் உருகியும், உடல் பூரித்தும், மனங்குளிர, இரு கைகளாலும் முகந்து குடித்தற்கினிமையான மேலான கருணைக்கடலான இறைவனைத் தழுவி, விளங்குகின்ற பாண்டியனாகிய பெருந்துறையானது ஒலிக்கிற வீரக்கழலையணிந்த திருவடியையே நினைந்து, இவ்வண்ணமெல்லாம் செய்யக் கிடைத்த அடியேங்களின் புண்ணியப் பேற்றைப் புகழ்ந்து நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், எல்லாப் பொறிகளும் பேரின்பமெய்த மனம் குளிரத் தழுவியும் குடித்தும் நினைந்தும் பரவியும் தெள்ளேணம் கொட்டுவோம் என்ற இன்பமயமான நிலையை உணர்த்துகிறது.

மனமொழிமெய்களால் இறைவனை நுகர்ந்து, இவ்வளவுக்கும் வாய்த்த எங்கள் அதிர்ஷ்டத்தையும் பரவித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

தன்னால் விரும்பப்பட்டதொரு பொருள் அணுகுதற்கு அரிதாக இருப்பினும், மிக மிக உயர்ந்ததாக இருப்பினும் அதனையே எண்ணியெண்ணி மனம் உருகுமாதலின் அந்நிலையாகிய முறுகிய காதலை 'உருகி' எனக் குறிப்பித்தார்.

அவ்வண்ணம் மனமுருகி எண்ணிய பொருள், கனவிலும் காட்சியிலும் அடிக்கடி பாவகமாக வெளிப்படும்போது உடல் பூரிக்கும்; இதனையே 'பெருகி' என்று கூறினர்.

அன்பால் மனம் உருகி, இன்பால் உடல் பூரித்தகாலத்து மன்ங்குளிரக் கருணைக்கடல் போல்வானைத் தழுவிக் கலந்த நிலைமையை 'உளங்குளிர மருவி' என்பதால் உணர்த்தினுர். மருவத்தகும் பொருளோ 'மேலான கருணையாகிற பெரிய கடல்' என இறைவனைக் கருணைக்கடலாக அநுபவிக்கின்ருள் என்கின்ருர்.

கடல் விரிந்து பரந்து கிடப்பினும் உண்ணும் நீராகாது; இக்கருணைக் கடலோ இருகைகளாலும் அள்ளிப் பருகுதற்கு இனிமையானது என்பாள் 'முகந்துகொண்டு பருகற்கு இனிய பரங்கருணைத் தடங்கடல்' என்ருள் என்பர். அப்பர்சுவாமிகளும் "பருகலாம் பரமாயதோ ரானந்தம்" என்றது காண்க.

மருவி - கலந்து. தலைவன் தலைவியை மருவினுன் என்பது போல நானிவளாம்பகுதிப் பொற்பாரறிவார்' என்ற நிலையில் கலத்தல்.

ஒருகாலைக்கொருகால் விளங்கித் தோன்றுகின்ற தென்னனுகிய சொக்கலிங்கப்பெருமானது கழல்களைத் தியானித்து, அடியோம் ஞானச்செல்வமாகிய சிவத்தை வணங்கித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றலின் இது சிவனேடடைவாயிற்று.

*250 புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்*
*பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த*
*அத்தன் அணிதில்லை யம்பலவன் அருட்கழல்கள்*
*சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. 16*

இ - ள்: ஞானமே வடிவானவனும், பிரமன் திருமால் இந்திரன் முதலான தேவர்களும் போற்றி போற்றி என வணங்கும் பித்தனும், திருப்பெருந்துறையில் விரும்பியெழுந்தருளிய பிரானும், அடியேனுடைய பிறவியறுத்த தலைவனும் ஆகிய அழகிய தில்லையம்பலவனுடைய திருவருளே வடிவான திருவடிகள் எனது மனத்தில் புகுந்தவாற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் திருவடிகள் சித்தத்தில் புகுந்தவாற்றை எண்ணித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கிறது.

தேவர்களனைவருக்கும் அரியனுயினும் ஆன்மாக்களுக்கு எளியனுய் அவர்கள் எளிமையாக வந்து தரிசித்துய்யத் திருப்பெருந்துறையிலும், தில்லையம்பலத்தும் உள்ளான்; அவன் திருவடிகள் என்னுடைய மனத்தில் புகுந்தவாற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்ருள் என்பது கருத்து.

புத்தன் - அறிவே வடிவானவன்; புதுமையை உடையவன் எனலுமாம். புரந்தரன் - இந்திரன். ஆதியர் - முதலானவர்கள்; என்றது ஏனைய தேவர்களை. இவர்கள் தமக்கு அசுரர்களால் இடுக்கண் வந்தகாலத்தெல்லாம் வணங்குகின்றார்கள். பரிபாக முற்ற ஆன்மாக்கள் மெய்யன்போடு வீட்டின்பத்தை விரும்பி வணங்க, தேவர்கள் பகைநீக்கமும் அமுதவுண்டியும் பெறுதலாகிய காமியத்தைக் கருதித் தொழுகின்றார்களே என்று திருவுள்ளத்து எண்ணாமல் அவர்களுக்கும் அவர்கள் விரும்பிய வெற்றியையும் போகத்தையும் அளித்தலின் 'பித்தன்' என்றார்.

அவர்கட்கு விண்ணுலகில் இருந்து அருள்வதுபோலவே, எமக்கு அருளச் சிவபுரமாகிய பெருந்துறையில் விரும்பி எழுந்தருளினான் என்பார் 'பெருந்துறைமேய பிரான்' என்றார்.

சிவன் எமக்குச் செய்த பேருதவி பிறப்பறுத்தமை என்பார் 'பிறப்பறுத்த அத்தன்' என்றார். அத்தன் - தந்தை. தந்தையாவார் தன்பால் கருவிருந்த உயிருக்குத் தாய்வாயிலாகப் பிறவியைக் கொடுப்பவர்கள்; இவரோ பிறப்பறுத்தானாதலின் அவரினும் சிறந்தான்; எம்மைத் திருத்துதலின் தந்தையை ஒப்பான் என்பார் 'பிறப்பு அறுத்த அத்தன்' என்றார்.

உலகிற்கே அழகுசெய்வதாகலின் 'அணிதில்லை' என்றும், அம்பலவன் ஞானமேயான விண்ணை இடமாகக்கொண்டு ஐந்தொழிலாற்றுகின்றான் ஆதலின் 'அணிதில்லை அம்பலவன்' என்றும் கூறினார்.

கழல் - திருவடி; தானியாகுபெயர். அவன் திருவடிகள் திருவருளேயாதலின் 'அருட்கழல்கள்' எனப்பட்டது. திருவடியை ஆன்மா தானாகச் சென்றடையும் பரிபாகமும், சுதந்தரமும் என்றுமில்லாதது ஆதலின் திருவடியாக வந்து என்மனம் புகுந்தது; அஃதோர்வியப்பு; அதனைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்று அறிவிக்கின்றார்.

'அம்பலவன் அருட்கழல்கள் சித்தம் புகுந்தவா தெள்ளேணம் கொட்டாமோ' என்றது சிவனுடைடைவினை உணர்த்துகிறது.

251 உலகைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சலகைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கலகைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 17

இ - ள் : பொய்யான சமயங்களும், ஒன்றோடொன்று ஒவ்வாத சாத்திரங்களுமாகிற செறிவற்ற கடலிலே உள்ளவனுய்ச் செயலற்றுக் கரையேறமாட்டாது கிடந்து தடுமாறுகின்ற கவலையைப் போக்கி, திருவடியிரண்டையும் உய்யும் உபகாரமாகத் தந்தருளும் திருவருளுபகாரச் செய்கையைப் பரவி நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், சாத்திரங்களும் சமயங்களும் ஆகிய செறிவற்ற கடலிற்கிடந்து தடுமாறிக்கொண்டிருந்த என்னைக் கழலிணைகளைச் சாரவைத்த பெருமையைப்பாடிக் கொட்டுவோமென்கின்ருர் என்றறிவிக்கின்றது.

சமயங்களும் சாத்திரங்களுமாகிய கடலில் விழுந்து கரை காண முடியாமல் தவிக்கின்ற என்னை, கழலிணைகளாகிய தெப்பத்தைத் தந்து கவலையைத் தொலைத்த செய்கையைப் போற்றிக் கொட்டுவோம் என்ருள் என்பது கருத்து.

உவலை - பொய், பயன் வற்றியது என்பர் சிலர். சவலை - வளர்ச்சியும் திட்பமும் இல்லாதது. சவலைப் பிள்ளை என்ற வழக்குண்மை காண்க. சஞ்சலமென்பர் பழைய உரைகாரர்.

சமயங்களையும் சாத்திரங்களையும் கடலாகவும், அதனுள் அகப்பட்டுத் தவிப்பவனுகத் தன்னையும் கூறியதற்கு ஏற்ப, கழலிணைகளைத் தெப்பமாகச் சொல்லாவிட்டாலும், ஏகதேச அணியின் அமைதிகொண்டு பொருள் விரித்துக்கொள்க.

கவலை - துன்பத்தை. கவல் - துன்பம். கவலையென ஐகார ஈற்றுப் பெயர்ச்சொல்லாகக்கொள்ளின் இரண்டாம் வேற்றுமைத்தொகையில் வல்லினமிகாது கவலை கெடுத்து என வருதல் வேண்டும். அங்ஙனம் வாராமையின் கவல்+ஐ+கெடுத்து எனக் கொள்க. பிளவுபட்ட எண்ணம் என்பாரும் உளர். பரவுதல் - மனம் மொழி மெய்களான் வணங்கிப் புகழ்தல்.

இப்பாடல், கவலைகெடுத்துக் கழலிணைகள் தந்தருளியதைத் தெரிவித்தலின் சிவனுடைவாதல் காண்க.

252 வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டெ ஞுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 18

இ - ள் : ஆகாயமும் அழிந்து, அதில் உலவும் காற்றும் அழிந்து, அதனைச் சார்ந்துளதாகிய தீயும் அதனைச்சார்ந்த

நீரும் அதனைச்சார்ந்த மண்ணும் கெடினும், தான்மட்டும் கெடுதலின்றி அசைவற்றிருக்கும் தன்மையனாகிய சிவபெருமானுக்கு, உடலும் அழிந்து, உயிரும் கெட்டு, உணர்வும் கெட்டு, உள்ளமும் மடிந்து, நான் என்னும் தற்போதமும் கெட்டவாற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், பூத பௌதிகங்கள் அழியினும் தான் நித்தியனாக இருந்து சலிக்காத தன்மையையுடைய ஈசனுக்குத் தற்போதம் அழிந்தமையைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றது.

சங்காரமுறையில் மண், நீர், தீ, காற்று, விண் எனவே முறையாயினும் 'வான் கெட்டு மாருதம் மாய்ந்து அழல் நீர் மண் கெடினும்' என்றது, எரிவதை இழுத்தால் கொதிப்பது நிற்பதுபோல, பரமேசுவரன் சங்காரகிருத்தியத்தைத் தொடங்கும்போது எல்லாவற்றிற்கும் அடியான சித்சத்தியைத் தன்னுள் அடக்கிக்கொள்வன்; அப்போது சத்தியை நிமித்தமாகக் கொண்டு காரியப்பட்ட மாயை அவனுள் ஒடுங்கும்; மாயை ஒடுங்கவே மாயேயங்கள் மாயையுள் ஒடுங்கும்; பூதங்கள் நுண்பூதங்களில் ஒடுங்கும்; நுண்பூதங்கள் தன்மாத்திரைகளில் ஒடுங்கும் ஆதலின் என்க.

கெடல் என்பது எதுகைநோக்கி விரிந்து நின்றது. கெட்டலின்றி - நித்தியனாகி. சலிப்பு - அசைவு. தான் புடைபெயர்ச்சியின்றி, மாற்றமின்றி, விருப்பு வெறுப்பின்றி இருப்பவனுக்கு.

ஊன் - உடல்: ஆகுபெயர். ஊன் கெடலாவது இறத்தல் அன்று. புன்புலால் யாக்கையாகச் சீவதேகமாக வினைநுகர்ச்சிக்கு வாயிலாக இருந்த உடம்பு சிவதேகமாகச் சிவப்பணிக்கே உரியதாதல். அப்பர்சுவாமிகளுக்குச் சீவதேகமாயிருந்தவரை சூடர்நோயும் பிறவும் வருத்தியது. சிவதேகமாதலை யனுபவித்தபிறகு அவை நீங்கிப் பேரானந்தவாழ்வு தொடங்கியமை அறிக. நித்தியபூசை செய்யும்போது நிருவாணதீட்சை பெற்றவன் தன் தேகத்தைச் சிவதேகமாகவும் கரணங்களைச் சிவகரணங்களாகவும் பாவித்து அப்பாவனை நிலைத்த பிறகே சிவபூசை செய்யத் தொடங்குதல்வேண்டும் என்ற சைவநூல் விதியையும் சிந்திக்க.

உயிருக்கு அழிவின்று; நித்தியமானது; ஆயினும் கெட்டு என்பதற்கு 'ஊன்கெட்டு' என்பதற்குரைத்தாங்குச் சிவோகம் பாவனை செய்தலாகக்கொள்க.

உணர்வு - சீவபோதமாகிய அறியாமைவயப்பட்டு உணரும் சிற்றறிவு. அது கெடுதலாவது எப்போதும் சிவமயமாக விளங்குதல்.

உள்ளம், உணர்வுக்கு வாயிலாகப் பொறிகளைக் கருவிகளாகக்கொண்டு விடயங்களை அறிவதும் அநுபவிப்பதும் செய்வது. அது கெடுதலாவது இதுவரை மாலை, மாதர், போகம், மண், பொன் என்றிருந்த விடயங்களைவிட்டுச் சிவபோகத்தில் அமர்தல்.

நான் - நான் என்னும் தன்முனைப்பு. நான் கெடுதலாவது ஆன்மபோதமற்றுச் சிவபோதம் மிகுந்து காண்பனவும் கேட்பனவும் நுகர்வனவும் எல்லாம் சிவமேயாகக் கண்டிருத்தல்.

இத்தகைய அனுபவத்தைப்பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

இது பசுகரணங்களும் செயல்களும் அறிவும், சிவகரணங்களும் சிவச்செயல்களும் சிவபோதமாகக் கண்டிருத்தலைக் கூறலின் சிவனுடைடைவாயினமை காண்க.

*253 விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து*
*மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோம்*
*கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்*
*தென்னாதென்னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. 19*

இ - ள் : தேவர்களுக்கு முழுமுதற்கடவுளும், பாதலத்தி லுள்ளவர்கட்கு வித்தானவரும், மண்ணுலகத்தவரான மக்களுக்கு தேவாமுதம் போல்பவரும், பிரமன் திருமால் இவர்களுக்குச் சேமநிதிபோன்றவரும் ஆன சிவபெருமான், அடியோங்கள் கண்ணுக்குநேரே தாமே வந்துநின்றான்; அவனுடைய திருவருளேவடிவான திருவடியைத் தென்னா தென்னா எனப்பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இப்பாடல், விண்ணும் மண்ணும் பாதலமுமாகிய மூவுலகத்தார்க்கும் இன்றியமையாத பொருளாக விளங்கும் பெருமான் எம் கண்ணாரக் காட்சி வழங்கினான்; அவன் கழலைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்கின்றது.

தேவர்கட்கு இனிய பெருமான் எம்மை ஆட்கொள்ள எம் கண்முன்னே காட்சி வழங்கினான்; அவன் கழலைத் தென்னா தென்னா எனப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்பது கருத்து.

விண்ணோர்கள் பதவிமோகத்தில் மயங்கித் தாமே முதற் கடவுள் என்று தமக்குள் வீறுபேசிக் கலகம் விளைத்துக்கொள் பவர்கள். சிவம் அவர்களுக்குத் தானே முழுமுதற்கடவுள் எனப் பல்லாற்றானும் தோன்றச் செய்தலின் 'விண்ணோர் முழு முதல்' என்றார்.

பாதாளத்தார் தாமே அனைத்தினுக்கும் அடியாயிருந்து தாங்குகிறோம் என இறுமாத்தலின் அவர்களுக்கும், அவர்கள் வாழும் உலகத்திற்கும் தான் வித்தாயிருந்து, வித்தின்றேல் முளையேது மரமேது என்று உணர்த்தி நிற்பன் சிவனாதலின் 'பாதாளத்தார் வித்து' என்றார்.

மக்கள் என்றும் துன்ப இன்ப நோயுட்பட்டு வருந்துகின் றவர்கள். மரணம் பிறப்பு என்னும் சுழியுட்பட்டவர்கள்; அவர்களை உய்விக்க இறைவன் மருந்தாயினான் ஆதலின் 'மண் ணோர் மருந்து' என்றார். மருந்து - அமுதம்; மருந்துமாம்.

அயனும் மாலும் தாம் தேடிய புண்ணியப்பயனை அகங்கரித் தலால் போக்கிவிட்டு, அசுரர்களும் அரக்கர்களும் வருத்தும் காலத்துத் தற்காப்பளவில்கூடப் புண்ணியமின்றித் தவிப்பவர் கள்; அவர்களுக்குச் சேமநிதியாகச் சிவபெருமான் பயன்படு மாற்றால் 'அயன் மாலுடைய வைப்பு' என்றார்.

அத்தகைய பெருநிலையுடைய பிரான், எம்பொருட்டு எம் ஊனக்கண் காணக் குருவாக வந்து எம்முடன் குருந்தடியிலும் வையைக்கோட்டிலும் குதிரைலாயத்திலும் நின்றான் என்பதனை 'அடியோம் கண்ணார வந்து நின்றான்' என்றார்.

தேவர்கட்குப் பெருநிலையிலுள்ள பெருமான் எமக்கு இங் ஙனம் வந்து நிற்கக் காரணம், நாங்கள் அவன் ஆண்டான் யாம் அடியோம் என்று உணர்கிறோம். அதனால் சிவம் முற்படு கிறது. சீவன் பிற்பட்டு அடங்குகிறது. அதனால் அவன் எம் கண்ணாரக் காட்சிதருகிறான். அவர்கள் யாம் மால், யாம் அயன் என்று இறுமாந்தவர்கள். அவர்களுக்குத் தக்கசமயத்து உதவி மறைகின்றான் என்பவற்றை எல்லாம் நாம் எண்ணி நைய 'அடியோம்' என்றார்.

அவன் அங்ஙனம் வந்து நிற்கப் பெருந்துணையானது அவன் கழல். ஆதலான், அதனைத் தென்னா தென்னா எனப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.

இத்திருப்பாடல், 'கண்ணார வந்து நின்றான்' என்றலின் சிவனோடடைவு குறித்தது.

254 குலம்பாடிக் கொக்கிறகும் பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாடோறும்
அலம்பார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 20

திருச்சிற்றம்பலம்

இ - ள்: இறைவனுடைய குலத்தைப்பாடி, அவனணிந் திருக்கிற கொக்கிறகம்பூவையும் பாடி, ஒருபாகமாக இருக் கின்ற திரண்டவளையலையுடைய உமாதேவியின் நலங்களையும் பாடி, இறைவன் தேவர்களைக் காக்கப் பொல்லாத நஞ்சை உணவாக உட்கொண்ட திருவருட்செயலையும் பாடி, அசை கின்ற நிறைந்த நீர் சூழ்ந்த தில்லையிலே சிற்றம்பலத்திலே இடைவிடாது ஐந்தொழிலாடல் புரிகின்ற எழுகின்ற சிலம் பாடலையும் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவனது குலம் நலம் ஆடல் பாடல் முதலிய செயல்களைப் புகழ்ந்து தெள்ளேணம் கொட்டுவோம் என்கின்றது.

இறைவனுக்குக் குலம் இல்லை. அவன்குலமே தொண்டர் கட்கு வழங்குவது. சிவகுலம், சிவகோத்திரம் எனத் தொண்டர் கள் வழங்கப்பெறுவர். அங்ஙனமாக அவன்குலத்தைப் பாடுத லாவது குலமிலி, நலமிலி என்று இன்மையைச் சொல்லித் தோத்தரித்தல். குலம் - கூட்டம். அடியார்கள் கூட்டத்தை வியந்துபாடி எனலும் ஆம்.

கொக்கிறகு - ஒருவகைப்பூ. குரண்டாசுரனைக் கொன்று அவனிறகைச் சூடினர் என்ற வரலாற்றைக்கொண்டு கொக்கின் சிறகை எனலுமாம். இது அவனுக்கு உகப்பானமலரை வியந்து கூறியதாம்.

கோல் - திரட்சி. உமாதேவி என்றும் இடம் பிரியாது எழுந் தருளியிருந்து அருள் சுரக்கின்றாளாதலின் அவள் அடியார் கட்குச் சுரக்கும் அருளாகிய நலத்தைப் பாடி என்றார். நலம் - அழகு எனலுமாம்.

நஞ்சு உண்டது தேவர்களும் பிறரும் உய்வதற்காகவே ஆதலின் அந்தப் பெருங்கருணையை வியந்து என்பதாம்.

கூத்தப்பெருமான் ஆட்டம்நின்றால் உலகமே நின்றுவிடும். இதயத்துடிப்பு இருக்கின்றவரையில் மனிதன் துடிக்கின்றான்;

துள்ளுகின்றான். அது நிற்க மனிதன் மரமாகிறான். அது போலத்தான் கூத்தப்பெருமான் நாடோறும் இடைவிடாது ஆடிக்கொண்டேயிருக்க உலகம் காரியப்படுகிறது. அணுமுதல் அண்டம்வரை எல்லாம் சுழல்கின்றன; இயங்குகின்றன; ஆதலால் நாடோறும் ஆடுகின்ற நலம்பாடி என்றதாம்.

சிலம்பு பரநாதவடிவானது என்பதை அடிகள் பலவிடங்களில் விளக்கியுள்ளார்கள். அதனால் ஒலியே லயத்தானம்; பேரின்ப நிலைக்களம். ஆதலால் அதன் ஆடலைப்பாடி என்க.

இவ்வண்ணம் சிலம்பாடலாகிய நாதத்திற்சென்று லயமாதலை உணர்த்துதலின் இத்திருப்பாடல் சிவனோடடைவாதல் தெளிக.

# 12. திருச்சாழல்

[சிவனுடைய காருணியம்]

ஈழநாட்டுப் புத்தர்கள், தில்லைப்பதியின் அளவற்ற பெருமைகளையும் தில்லைவாழந்தணர் சிறப்பையும் கேள்வி யுற்றுப் பொறாமைகொண்டு, அரசனையும் அவனுடைய ஊமைப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு சிதம்பரத் துக்கு வந்தனர்; தில்லைவாழந்தணரை வாதுக்கு அழைத் தனர். அந்தணர்கள் அஞ்சி அம்பலவாணன் அடிக்கமலம் இறைஞ்சி 'யாது செய்வோம்; அடியேங்களைக் காத்தருள்க' என வேண்டிக்கொண்டார்கள். தில்லையம்பலவாணரும், 'வாதவூரடிகளைச் சென்று அழைத்துவாருங்கள்; அவர் வாதில்வென்று சைவத்தின் தனிப்பெரு மாட்சியினை உல கறியச்செய்வார்' என்று அசரீரியாக ஆணை வழங்கினர்.

தில்லைவாழந்தணர் அவ்வாறே சென்று தில்லையின் எல்லையிலுள்ள வில்வவனத்திலே சிவயோக சமாதிகூடி யிருக்கும் வாதவூரடிகள் முன்பு சென்று, வாதவூரடிகளே! மணிவாசகப்பெருந்தகையே!! எமது இறைவன் ஆணை யிருந்தவாறு இது என்று விண்ணப்பித்துக்கொண்டனர். திருவாதவூரடிகள் சிவயோக சமாதியில் இருந்தமையினால் இவர்கள் அழைத்ததும் சொன்னதும் அவருக்கு ஒன்றும் தெரியவில்லை. நெடுநேரம் காத்திருந்தும் பயனின்மை யால் மனம் நொந்து கனகசபைக்கு வந்து நிகழ்ந்ததைத் தெரிவித்துக்கொண்டனர். தொண்டரை விளக்கங்காணும் ஆனந்தக் கூத்தப்பெருமான் 'நீங்கள் அவனைப் பித்த னென்று ஏசியமையால் அதனையே அவன் பெயராகக் கொண்டு அழையுங்கள்; விழிப்பான்; நம் ஆணையின் வண்ணம் வருவான்; வெற்றி கிட்டும்' என்று ஆணை வழங்கினர். தில்லைவாழந்தணர்கள் அங்ஙனமே சென்று பித்தா! பித்தா! என்றழைத்தனர். வாதவூரடிகள் சமாதி கலைந்து கண்விழித்துப் பார்த்தனர்; தில்லைவாழந்தணர்க ளனைவரும் சிவகணங்களாகக் காட்சி வழங்கக் கண்டு

களித்து, பெருமான் ஆணையை உணர்ந்து அவர்களுடன் தில்லையை அடைந்தார்.

அந்தணர்கள் அடிகளாரை அழைத்துச்சென்று புத்த நந்தியின் முன்பு விடுத்தனர். அடிகள் அவர்கள் கேட்ட குதர்க்கவினாக்களுக்கு விடையளித்தும் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. மறக்கருணைகாட்டி ஆட்கொள்ளக் கருதி மந்திர வலிமையுள்ள அப்புத்தர்கள் அத்தனைபேரையும் ஊமைகளாக்கினர். அதனைக் கண்டு வியந்த அரசன், அடிகளின் திருமுன்பு வந்து, அடிகளே! பேசவல்லார் பலரையும் ஊமையாக்கியது ஒரு பெருமையன்று; சமய வெற்றியுமன்று; ஊமையாயுள்ளவரைப் பேசவைப்பதே பெருமையாம்; என் மகள் பிறவிமுதல் ஊமை; அவளைப் பேசவைக்க என்று வேண்டிக்கொண்டான். அடிகளார் அப்பெண்மணியை அங்கு வரவழைத்து, புத்தர் கேட்ட வினாக்களைக் கேட்டு, அவளை விடையளிக்கப் பணித்தார். அப்பெண்மணியும் புலவர்கள் வியக்க, மன்னன் மகிழ, புத்தர் மயங்க விடையளித்தாள். அவ்வினாவையும் விடையையும் அமைத்துத் திருச்சாழல் என்னும் விளையாட்டுப் பாட்டாக அடிகளார் அருளிச்செய்தனர்.

சாழல் - மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு. சிலப்பதி காரத்து அடியார்க்கு நல்லாருரையில் "நல்லார்தம் தோள்வீச்சு நற்சாழல்" என்று கூறப்பெற்றுள்ளது. ஆகவே ஒருத்தி பாட்டுடைத்தலைவன் புகழையும் அழகையும் அணியையும்பற்றி வினவ, மற்றொருத்தி, தோள்வீசிநின்று விடையளிப்பதான விளையாட்டு என்று துணியலாம். இதனைப் பல்வரிக்கூத்துள் ஒன்று எனக் கூறுவாருமுளர் என்பர் அடியார்க்குநல்லார் (சிலப் - அரங்-12-25). ஆதலால் இது கூத்துவகைகளுள் ஒன்றாகக் கருதப்பெற்றது என்பது உறுதி. இறைவன் புகழைப்பற்றிய வினாவும் விடையுமாக அமைந்துள்ளதால் இது திருச்சாழல் என வழங்குவதாயிற்று.

இதன் உள்ளக்கிடக்கை 'சிவனுடைய காருணியம்' என்பது. "அவம்று திருச்சாழல், சிவனுடைய காருணியம்" என்பது அகத்தியச் சூத்திரம். இதன் உரைவிளக்கம் காணவந்த பின்னூல் 'சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு' என்றது. ஆகவே இறைவனுடைய அருட்சத்தி விளையாட்டே, அவன் பூசுவதுமுதல் அறம்

நால்வர்க்கு உரைத்ததுவரையுள்ள அனைத்துச் செய்திகளும் என்று உணர்த்தி நம்மையுய்வித்தலின் இக்கருத்துத் தெளிவாதல் காண்க.

" முன்நூற் கலையும் உணரா மூகையா மேடி, தன்னுற் பதி முதன்மை சாற்றியதாம் திருச்சாழல் " என்னும் பழைய திருப் பெருந்துறைப்புராணப் பகுதியால், சிவபரத்துவம் கூறுவதே திருச் சாழலின் குறிக்கோளாதல் காண்க.

சாழல் என்பதற்குப் பிற்காலத்துக் குறிப்புரையாசிரியர் சிலர், விளையாட்டாகக் கைகொட்டிச் சிரித்துப்பேசும் விளையாட்டு என்றும், தோழியர் பேச்சு என்றும் கூறுவர்.

வேறொருவர், 'ஸ்யாலன்' என்ற வடசொல் மைத்துனன் முதலியோரை உணர்த்தும்; அதுவே சாழலன் சாழலி எனத் தமிழில் வழங்குவதாயிற்று என்று ஊகிக்கலாம் என்பர்.

இப்பாடல்களில் ஏடி என்றும் சாழலோ என்றும் வரும் சொல் லமைதிகளைக்கொண்டு தோழியருள் ஒருத்தி உரிமையுடன் வினவு வதுபோலவும், இது என்ன அரிய பெரிய யாரும் விடையிறுக்க முடியாத வினவா? என்று இலேசாக அவள் விடையிறுப்பது போலவும், அங்ஙனம் விடையிறுக்கும்போது இலாகவமாகத் தோள் களை வீசுவதுபோலவும் அமைந்திருத்தல் கொண்டு பழைய மரபை யொட்டிச் சாழல் தோள்வீசியாடுங்கூத்து எனப் பொருள்கோடலே சிறந்ததாதல் காண்க. இதனைச் சியாளன் என்னும் சொல்லின் திரிபு என்பார் கூற்று மிகமிக ஞானநூலாகிய இதில் எண்ணக் கூடாத ஒன்றாம். 'சியாளன்' என்பது கடைகழிமகளிரின் உடன் பிறந்தானைக் குறிக்கும் சொல்லாகவே வடமொழி நாடக நூல்களி லும் நாடக இலக்கண நூல்களிலும் வழங்குதலின் அம்மரபுடையார் கூற்றாக இந்நூற்கண் எண்ணச் சித்தம் இடந்தராமைமட்டுமன்றி, அச்சொல் சாழலன் சாழலி என வழங்கும் மரபும் ஏனைய இலக்கி யங்களில் இல்லாமையும் உணர்க.

## தரவுகொச்சகக்கலிப்பா

*திருச்சிற்றம்பலம்*

255 *பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்*
*பேசுவதுந் திருவாயான் மறைபோலுங் காணேடி*
*பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை*
*ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.* 1

இ - ள் : என் தோழியே! இறைவன் திருமேனியிற் பூசுவதும் வெண்மையான திருநீறு; பூண்களாகப் பூண்பதும் சீறுகின்ற பாம்புகள்; அழகிய வாயாற் பேசுவதும் வேதங்கள்; இதனைக் காண் என்றாளாக;

மற்றவள், அவர் பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டதால் பயன் என்னை? எல்லாவற்றையும் உடைமையாகக் கொண்ட ஈசனாகிய அவன் எல்லாவுயிர்கட்கும் இயல்பாகவே ஆயினான் சாழலோ என்றவாறு.

இத்திருப்பாடல், ஈசன் எல்லா உயிர்கட்கும் இயல்பாகவே விளங்குபவன்; ஆதலால், பூசுவதாலும் பேசுவதாலும் பூண்பதாலும் அவற்கு விளையுமோர் பயனுமில்லை என்கின்றது.

பூசுவது முதலியன தன்னை எல்லாவற்றினும் வேறுபடுத்திக் காட்டவே உலகம் மேற்கொள்கிறது. ஆயினும், அவற்றால் இறைவனுக்கு ஒருபயனுமில்லை. அநாதியே எல்லாவற்றையும் உடைமையாகக்கொண்டவன் ஈசன். ஆதலால், உயிர்களிடத்து இயல்பாகவே உயிர்க்குயிராக, அறிவுக்கு அறிவாக விளங்கிக் கொண்டிருக்கிறான் என்பது கருத்து.

இதனால் சிவன் அநாதியே ஆன்மாக்களிடம் கலந்து சிறந்து விளங்குபவன் என்பது உணர்த்தப்பெறுகின்றது.

ஈசன் - உடைமைகளை உடையவன்.

வெண்ணீறு எல்லாவற்றையும் தன்னகத்தடக்கிய சர்வ சங்காரத்தெழுந்த சாம்பர். இது இறைவனது முழுமுதற்றன்மையையும், எல்லாவற்றிற்கும் ஈறாக இருக்குந்தன்மையையும் விளக்குவது.

இறைவனுக்கு மந்திரமே திருமேனியாகலானும், மந்திரப் பொருளாவான் அவனே ஆகலானும், பிறர் செய்யும் மந்திரங்கள் யாகங்கள் முதலியன அவனிடமே சென்று லயத்தை அடைகின்றன. மந்திரங்கட்கு ஆற்றல் அளிப்பவன் அவனாதலின் மந்திரங்கள் அவனிடம் ஆற்றலொடுங்குகின்றன என்பதை விளக்கும் நிகழ்ச்சியே தாருகாவனத்து முனிவர்கள் யாகஞ் செய்ததும், மந்திர ஆற்றலால் புலி, ஆனை, அரவு, மான் முதலியவற்றை எழுப்பியதும், அவை இறைவன் முன்னிலையில் வலியொடுங்கியடங்கியதும் முதலான நிகழ்ச்சிகள். அவற்றுள், ஒன்றே அரவம். அவை இறைவனை நோக்கிவரும்போது சீறி வந்தன; பின், அணிகளாயின. இவ்வரலாறே 'பூண்பதுவும் பொங்கரவம்' என்பதால் குறிக்கப்பெறுவது.

வேதங்கள் பிரணவத்தை முதலாகக்கொண்டு தோன்றியன; நாதவடிவாகத் தகராகாசத்திலிருந்து தோன்றியனவாக உபநிடதங்கள் உரைக்கும். தகராகாசம் சிதம்பரமாகிய கூத்தன் திருமேனி. அதிலுண்டான நாதமே துடிவழியாக வைகரிவாக்காயிற்று. எழுத்துக்களின் கூட்டமே வேதம். ஆதலால், அவன் வாயால் சொல்வன யாவும் சிவஞானம் பயக்கும் செஞ்சொற்களாதலால் 'திருவாயால் பேசுவதும் மறைபோலும்' என்றார். போலும் : ஒப்பில்போலி.

ஏடீ என்பது தோழியை அழைக்கும் சொல். ஏடீ காண் என முடிக்க. இவ்வண்ணம் பூசுவதெல்லாம் வெண்ணீறோ? பூண்பன யாவும் அரவமோ? பேசுவன யாவும் மறையோ? என்று வினவியவளுக்கு, இறைவன் எல்லவுயிர்க்கும் ஈசனாய் அநாதியே முதல்வனாயமைந்தவன் என்பதை இதனால் விளக்குகின்றாள். பூசுவதும் பூணுவதும் பேசுவதும் என் என ஒரு சொல் வருவித்து இயல்பானான் என்பதனோடு இயைத்துப் பொருள் கொள்க. ஈசன், எல்லாவற்றையும் உடையவன்; அங்ஙனம் அவன் உடைமையாக்கொண்டது செயற்கையான் அமைந்ததன்று; அநாதியே அமைந்ததாம் என்பாள் 'இயல்பானான்' என்றாள். பூசுவதால் இயல்பானமையாவது திருநீறு சர்வசங்காரகாலத்து விளைந்ததாதலின் அதனை அணிந்தவன் இறைவன் என்பது, எவ்வுயிர்க்கும் இறைவனாய் அநாதியே இருக்குந்தன்மையை அறிவிப்பது. பேசுவனவாகிய வேதங்கள் என்றும் அழியாதன. குடமழியினும் குடத்தன்மை அழியாதவாறுபோல, சொற்கள் அழியினும் அவை தாங்கி நிற்கும் கருத்து நித்தியமாதலின் அவன் பேசுவது எல்லாவுயிர்க்கும் இயல்பாயிற்று.

பூண்பனவும் அங்ஙனமே தானே மந்திரமாதலையும், மந்திரப் பொருளாதலையும் உணர்த்துதலின், பசுபோன்ற பயன்படும் விலங்குகளுக்கும் அரவுபோன்ற நச்சு உயிர்களுக்கும் ஒப்ப அருள்வழங்கும் இயல்பினை விளக்குதல் காண்க.

இங்ஙனம் பூசுவது, பேசுவது, பூண்பது இம்மூன்றனும் இறைவன் எல்லா உயிர்களுக்கும் இயல்பானமை அறிவித்தருளப்பெற்றது.

இத்திருப்பாடலால் இறைவன் எல்லா உயிர்களுக்கும் ஒப்ப இயல்பாய் வீற்றிருக்கும் தன்மை உணர்த்தப்படுதலின் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

256 என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. 2

இ-ள்: என் தந்தையும் எம் தலைவனும் எல்லார்க்கும் ஈசனுமாயிருக்கும் எம்பெருமான் தைக்கப்பெற்ற துணியைக் கோவணமாகக் கொண்டது ஏன்? என்றுளாக;

மற்றவள், நிலைபேறுடைய கலைகளையே பெரிய அரை ஞாண்கயிறுகவும் பொருள் பொதிந்த நான்கு வேதங்களையும் கோவணமாகவும் சாத்தினன்; இதனை நீ அறிந்துகொள்க என்றுள் என்றவாறு.

இத்திருப்பாடல், எல்லார்க்கும் தலைவனுக இருப்பவன் கோவணம் மட்டும் உடுத்துவது ஏன்? என்று ஒருத்தி கேட்க, மற்றவள் அவன் உடுத்தும் கோவணம் துணியன்று வேதமே என்றதாக உணர்த்துகிறது.

ஈசன் பட்டும் பட்டாடையும் உடுத்தாது தைத்த கோவணத்தைக் கட்டியது ஏன்? என்றுளுக்கு அது பஞ்சுநூல் கோவணமல்ல; ஞானநூலாகிய வேதமே கோவணம்; கலைகளையே அரைஞாணுகக்கொண்டு அதில் இதைக் கட்டியிருக்கின்றுன் என்பதை அறிவித்தாள் என்பது கருத்து.

அப்பன் - தந்தை. என் அப்பன் என்றுள், ஒரு கணவன் கையில் தான் ஒப்படைக்கப்படுகின்றவரையில் பாதுகாப்பாக நின்று கற்பொழுக்கங்களைக் கற்பித்துத் தருகின்றுன் ஆதலால். எம்பிரான் என்றுள், அடியேன் வேண்டுவன எல்லாம் கொடுக்கின்ற வள்ளலாய் உயிர்க்காதலனுயும் விளங்குகின்ற உண்மை பற்றி. கற்புடைய நங்கை தன் கணவன் கொடுக்கிற பொருளை அன்றி, வேறு எதனையும் எவர்மூலமும் பெற்று நுகர்தல் கூடாதாகலின் கொடைத்தன்மையும் தலைமையும் உடையவன் சிவனே என்பாள் 'எம்பிரான்' என்று இன்புறுகின்றுள். பிரான் என்பதற்கும் இவ்விருபொருளுண்மையும் உணர்க. என் அப்பன் என்று ஒருமை வாய்பாட்டால் உரிமை பாராட்டியவள், எம்பிரான் என்று பன்மை வாய்பாட்டால் தனக்கும் தலைவனுந் தன்மையைத் தெரிவித்துக்கொள்கின்றுள்.

பேதைப் பெண்ணுெருத்தி காதன்மையின் குறிப்பு ஒரு சிறிதும் அறியப்படாதகாலத்தே அவர்களைத் தந்தைபோலப் பாவித்தலும், பெதும்பைப் பருவம் வந்துற்றகாலத்தே காதல்

என்னும் கள்ளம் சிறிது கலக்க முதியாரை அப்பன் என்றும், இளையாரை மாமன் அல்லது அத்தான் என்றும் வழங்குதல் போல ஆன்மாக்கள் சிவனருளால் சிறிது விளக்கமுற்றபோது என் அப்பன் என்றும், அருள்விளக்கம் முற்றிச் சிவபோகத்தை விரும்புங்காலத்துப் பிராணுகவும் காணுதல் இயல்பென்பதை உய்த்துணர வைத்தவாறு. இதில் 'எம்பிரான்' என்று பன்மையால் கூறியது தம்போலப் பரிபாகமுற்ற ஆன்மாக்களாகக் காதல் மிக்க கன்னியர் பலருள்ளாராகக் கண்டு என்க.

எம்போல் மகளிர்க்கன்றி ஆடவர் அனைவர்க்கும் தலைவன் என்பாள் எல்லார்க்கும் ஈசன்' என்றுள். எல்லார்க்கும் எனச் சிறப்புடை உயர்திணைமேல் வைத்துக் கூறினுரேனும் எல்லாவற்றிற்கும் ஈசன் என அஃறிணைக்கண் உரைக்க என எண்ண நேரலாம். இறைவனை ஈசன் என்று உணர்ந்து பணிசெய்து பயன் கொள்பவர் மக்களும் தேவரும் நரகருமாகிய உயர்திணையே ஆதலின் எல்லார்க்கும் ஈசனென்பது இனம் விலக்க வந்த சொற்றெடரே அன்றி இனத்தைத் தழுவி நிற்கும் சொற்றெடரன்று.

துன்னம் - தையல். இது தொழிலாகுபெயராகத் தைக்கப் பெற்ற துணியைக் காட்டிற்று. பெய் கோவணமாகத் துன்னம் கொள்ளுமது என்னேடீ. பெய் கோவணம் - அரையின்கண் அணியப்பெற்ற கோவணம். பெய்தல் - அணிதல். துணிக் கோவணம் உடுத்தியது ஏன் என்றுளுக்கு, உடுத்தியிருப்பது துணியன்று; வேதங்கள் என விடையிறுத்தாளாம். விடை இறுக்கும்போது அதுபற்றிய ஐயம் மேலெழாதவாறு 'மன்னு கலை தன்னையே வான் சரடா' என அரைஞாணையும் உடன் அறிவிக்கின்றுள். மன்னு கலை - என்றும் அழியாது நிலைபெற்ற கலைஞானங்கள். வான் சரடு - பெரிய அரைஞாண். கலையாகிய அரைஞாணில் கோத்து அணிந்திருப்பது வேதமாகிய கோவணம் என்க. அவ்வேதங்கள் பொருள் பொதிந்தன என்பாள் 'துன்னு பொருள் மறை நான்கு' என்றுள். கலையே வான் சரடா மறை நான்கே கோவணமா என முறைநிரல்நிறைப் பொருள்கொள்க. 'துன்னுபொருள் மறைநான்கே மன்னுகலை வான்சரடாத் தன்னையே கோவணமாச் சாத்தினன்' என்றும் பாடம் கொள்வாருமுளர். அங்ஙனம் கொள்ளின் எதிர்நிரல் நிறை ஆம். மோனை நயமின்மையின் இப்பாடம் சிறவாது என்க.

என்னேடீ என்பதுதான் இற்றைஞான்று என்னடி என வழங்குகிறது.

இதற்குப் பழையவுரை பர அபர ஞானங்களாகிற கலையே கலையாக, அத்துவிதமே தையலாக, மறை சரடாக, இன்பக் கருணை வடிவமான தன்னையே திருக்கோவணமாக அனுபூதி அடியார் பெறத் தரித்தலின் என்று கூறும். இதனுள் தன்னையே என்பது சிவபரம்பொருளான் தன்னையே கோவணமாக உடுத்தான் என உணர்த்தப்பெறுதல் காண்க. பரஞானமும் அபரஞானமும் ஆகிய இரு துணிகளை வேதமாகிய கயிறு கொண்டு தைக்க உருவான கோவணம் தானாக விளங்கினன் என்ற கருத்து. சாத்துவோனே சாத்தப்படும் பொருளாயின் சாத்துவோன் யார்? என்று கூறுமை, குன்றக்கூறலாமாதலின் இவ்வுரை ஏலாமை அறிக. ஆதலால் தன்னையே சாத்தினன் என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு தனக்குச் சாத்தினன் என்றுமினுங்கொள்க.

இதுவும் ஞானமேவடிவான வேதங்களையும் கலைகளையுமே கோவணமும் கயிறுமாகக் கொண்டான் என்பது அவனது கருணைத்திறத்தை விளக்குதலின் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

**257** *கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை*
*தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ*
*தாயுமிலி தந்தையிலி தான்றனிய னாயிடினும்*
*காயி லுலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ.* 3

இ-ள்: ஏடி! இறைவனுக்குக் கோயிலோ சுடுகாடு; நல்ல ஆடையோ கொல்லும் தன்மைவாய்ந்த புலியினது தோல்; இறைவனோ தாயுமில்லாதவன்; தந்தையுமில்லாதவன்; தான் மட்டும் தனியானவன்; இதனைக் காண் என்றாளாக;

மற்றவள், அவன் தாய் தந்தையில்லாமல் தனியனாயிருப் பினும் அவன் கோபிப்பானாயின், உலகமெல்லாம் கற்றூளாகி விடும்; இதனைக் காண் என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் தன்னுடைய பெருமைக்குத் தகாத இடமும் உடையும் உடையவன்; குல நலம் இல்லோன் என்று வினவியவளுக்கு, அவன் எப்படி இருந்தாலும் அவன் சினந்தால் அகிலமும் அழியும் என்று அவனுடைய உண்மை இயல்பு உரைக்கின்றாள்.

சர்வ சங்காரகாலத்து எல்லாம் ஒடுங்கியபின் இருக்கும் சூனியமாகிய சுடுகாடே இறைவனுக்குக் கோயில் ஆதலின் 'கோயில் சுடுகாடு' என்றார்.

எல்லா அண்டங்களுக்கும் தலைவனாகிய இறைவனுக்குப் பட்டும் பீதாம்பரமுமாகிய நல்ல ஆடைகளாக விளங்குவன அவனாலேயே கொல்லப்பட்ட புலியின் தோலாம். கொல்புலி என்பதனைக் கொல்லுகின்ற புலி எனப்பொருள்கொண்டு சாதி அடை ஆக்குவாருமுளர்.

எல்லாரும் இவனால் பெறப்பட்டவர்களாதலின் இவனைப் பெற்றவர்கள் யாரும் இல்லையாதலின் 'தாயுமிலி தந்தையிலி' என்றார்.

உறவெனப்படுவது தாய்வழி தந்தைவழி என இரண்டால் ஆவது; அவ்விரண்டும் இறைவனுக்கு இல்லையாகவே உறவினரும் இலராதலின் 'தனியன் என்றார்.'

இதற்கு விடையிறுக்கும் பெண், இறைவன் தாய் தந்தை இல்லாதவனாய்த் தனியனாயினும் அவனாற்றல் பெரிது என்பாள் 'காயில் உலகனைத்தும் கற்பொடிகாண்' என்றாள்.

தங்குதற்கு வீடும் ஆடையும் தாயும் தந்தையுமில்லாத தனியன் என இகழ்ந்துரைத்தாளுக்கு, வீடும் வாசலும் ஆடையும் அணியும் தாயும் தந்தையுமாய அனைத்தும் உலகிலுள்ள பொருளாதலின் அவன் சினந்தால் உலகம் முழுவதுமே கற்பொடியாய்ப்போமென்று ஆற்றலைக்கூறி, அவையில்லாமைக்கு ஏதுவிளக்குகிறாள்.

இதுவும் காருணிய மூர்த்தியாகிய இறைவன் தனது ஆற்றலை உள்ளடக்கித் தனியனாய் விளங்குகின்றான் என்றமையான் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

258 *அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை*
*வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ*
*நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்*
*சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ.* 4

இ - ள்: ஏடி! பிரமனையும் மன்மதனையும் எமனையும் சந்திரனையும் அடையாளங்கள் மாயாதபடி வடுப்படுத்தினான் காண் என்றாளாக;

மற்றவள், மூன்று கண்களையுடைய முதல்வனே தண்டித்தால், தேவர்களுக்கு அதனால் விளையும் பயன் வெற்றியே அன்றோ? என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் மறக்கருணை காட்டி, தேவர்களை ஆட்கொண்டமையை அறிவிக்கின்றது.

அயன் முதலாயினேரைத் தண்டித்ததும், அவர்களுடைய பொல்லாக் குணங்களைப் போக்கித் தன்னடிக்குத் தொண்டு பூணச்செய்த அருளேயாம் என்க.

அந்தகன் - எமன். வயனங்கள் - வகைகள் என்பாருமுளர். மாயா வடு என்றது சிரம் அறுபட்டமையும், உடல் வெந்தமையும் உதையுண்டமையும் தேய்ந்துபோனமையும் ஆகிய இவைகள். ஆருது மெய்க்கண் கிடப்பதனை வடு என்பது மரபு. "நாவினல் சுட்ட வடு" என்ற குறட்பகுதிக்கு உரையாசிரியர் உரைத்தமையை ஈண்டு எண்ணுக.

நயனங்கள் மூன்றுடைய நாயகன் என்றது சங்காரகிருத்தியத்தைச் செய்யும் நெற்றிக்கண்ணைத் திருவுளத்து எண்ணி என்க. தண்டித்தல் - ஒறுத்தல். ஒறுத்தலில் உயிர் நீங்க ஒறுத்தலும், குற்றந்தீர ஒறுத்தலும் என இருவகை உண்டு. அவற்றுள், இறைவன் குற்றந்தீரவே தேவர்களை ஒறுக்கின்ருனென்பதை 'வானவர்க்குச் சயமன்றே' என்றதால் அறிக.

இறைவன் தண்டிப்பதும் தேவர்களுக்கு வெற்றியை அளிப்பதால் இது சிவனுடைய காருணியமாதல் தெளிக.

259 தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத்தொலைத்ததுதானென்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி
[யருள்கொடுத்தங்
கெச்சனுக்குமிகைத்தலைமற்றருளினன்காண்சாழலோ. 5

இ - ள்: ஏடி! தக்கனையும், யாகபுருடனையும் தலையை அறுத்தும், தேவர்கூட்டம் தொகுதியாக வந்தவர்தம்மைத் தொலைத்தும் செய்த கொடுமைகள் என்ன காரணத்தாலோ? என்ருட்கு;

மற்றவள், அங்ஙனம் வந்த தேவர்களைத்தொலைத்து அவர்களுக்கு அருள்செய்து அங்கு யாக புருஷனுக்கு அவன்செய்த மிகைக்காக வேறு தலையாகிய ஆட்டுத்தலையை அருளினன் காண்பாயாக என்ருள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், மிகைசெய்த தக்கன் முதலாயினேரைத் தண்டித்து அருள் வழங்கிய, அடித்துத்திருத்தும் மறக்கருணை அறிவிக்கப்பெறுகின்றது.

யாகத்திலே கலந்துகொண்ட அனைவர்க்கும் தண்டனை கொடுத்து அவர்கள் தீமையைப் போக்கி அருள் செய்தான்.

யாகத்தலைவர்களாகிய தக்கன் எச்சன் இருவருக்கும் அவர்கள் செய்த மிகைக்காக மாற்றுத்தலையைத்தந்து அருள்செய்தான். ஆதலால் இறைவன் செய்தது கொடுமை அன்று; அருளே என்றுளாம்.

சிவநிந்தை செய்த தக்கனைப் பெருமான் வீரபத்திரராகத் தோன்றி அவன் தலையை அறுத்து ஆட்டுத்தலையைத் தந்தும், யாகபுருடன் தலையை அறுத்து அவன் செய்த குற்றத்திற்காக அவனுக்கு மான்தலை அருளியும் அருள்செய்தார். யாகபுருஷன் யாகத்தில் மானுருவம்கொண்டு ஓடி மறையத்தொடங்கினன்; வீரபத்திரக்கடவுள் அவன் தலையையறுத்துப் பின்னர் மான் தலையைமட்டும் அவனுக்குப்பொருத்தி உயிர்ப்பித்தார் என்பது வரலாறு.

தக்கனுக்குத் தலையீந்த வரலாறு பலவிடத்தும் கூறப்பட்டிருத்தலின் எச்சனுக்கு மான்தலை ஈந்த நிகழ்ச்சியைமட்டும் ஈண்டுச் சுட்டிக்காட்டி ஏனையவற்றையும் கொள்ளவைத்தார். மிகை மற்றுத்தலை அருளினன் எனக்கூட்டி மிகைக்காக (குற்றத்திற்காக) வேற்றுத்தலையாகிய மான்தலையை அருளினன் என்க.

தொக்கன கணம் வந்தவர் தேவர் தம்மை எனக் கூட்டி, கூடியனவாகிய கூட்டமாக வந்தவர்களாகிய தேவர்கள் எனப் பொருள் கொள்க. வேறு வகையாகக் கொள்ளின் அஃறிணை வினைமுற்று அல்லது வினையாலணையும்பெயர் பலர்பால் வினையாலணையும் பெயரோடு இயைந்து வழுவாதல் பெறப்படும்.

இதிலும் சிவனுடைய காருணியமே காட்டப்பெற்றிருத்தல் காண்க.

260 அலரவனும் மாலவனும் அறியாமே யழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதா னென்னேடீ
நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ. 6

இ - ள்: ஏடி! பிரமனும் திருமாலும் அறியமுடியாத வண்ணம் செந்தீயின் உருவாக நிலமுதலாகக் கீழண்டங்களைக் கடந்து நின்றது என்னவோ? என்றுளாக;

மற்றவள், இவ்வாறு இறைவன் நின்றிலனேல், இருவரும் கோபத்தால் விளைந்த ஆங்காரம் தவிரார்களாய் அழிவர்; அவர்களைக் காக்கவே இறைவன் அழலுருவானார் அறிவாயாக என்றவாறு.

இத்திருப்பாட்டில், அயன் திருமால் இவ்விருவருடைய ஆங்காரம் அகற்றவே அண்ணுமலையாய் இறைவன் இருந்தார் என்ற உண்மை உரைக்கப்படுகின்றது.

இறைவன் அழலுருவானது இருவருடைய செருக்கைப் போக்கவேயாம் என்பது கருத்து.

அறியாமே என்பதற்கேற்ப அடியையும் முடியையும் எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க.

நிலமுதற்கீழ் அண்டமுற என்றுரேனும் பிரமன் அறியா வண்ணம் நிலமுதல் மேலண்டமுற என்றும் கொள்க.

சலம் - கோபம். இது ஆணவத்தின் காரியமாய், ஆங்கா ரத்தின் காரணமாய் இருப்பதொரு குணம். சலமுகத்தால் - கோபமாகிய காரணத்தால். ஆங்காரம் - அகங்காரம், செருக்கு. அவ்விருவரும் ஆங்காரம் தவிராது போர்செய்ய உலகம் பாழ் படும். ஆகவே அவர்களையும் காத்து, உலகினையும் காத்தார் என்பதாம்.

இதுவும் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

*261* *மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி*
*சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடீ*
*சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற் றரணி*
*[யெல்லாம்*
*பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ. 7*

இ - ள்: ஏடி! இமயமலையரசன் மகளாகிய உமாதேவி யாரைத் தம்திருமேனியில் இடப்பாகத்தேவைத்துக்கொள்ளு தலும், மற்றொருத்தியாகிய கங்காதேவி நீர்வடிவில் சிவ பெருமான் சடையில் பாயும் அச்செயல் என்னே? என்றுட்கு;

மற்றவள், அவன் அங்ஙனம் பாய்ந்திலளேல் இந்தப் பூமி அனைத்தும் பாதாளத்தில் பாய்ந்து பெரிய அழிவு விளைந் திருக்கும் காண் என்றுள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், கங்கையைச் சிவன் சிரத்தில் சூடியதும் அவள் வேகத்தைக் கெடுத்து அவனியைக் காக்கவேண்டியே என்பது உணர்த்தப்பெறுகின்றது.

கங்கை நீர்வடிவாகச் சடையில் பாயவில்லையாயின் பூமியே அழிந்திருக்கும்; அதனைக் காக்கும் அருட்செயலே கங்கையைத் தரித்தது என்பது கருத்து.

இருமனைவி படைத்த ஒருவன்போல, ஒருத்தியை இடப் பாகத்தில் வைத்தலும், மற்றொருத்தி கோபத்தால் தலைமேலே பாய்ந்தாளே இது என்னடி என்று ஒருத்தி குறை கூறினள். மற்றவள் அதுவா; பூமியைக் காப்பாற்றத்தானென்று விடையளித்து உண்மையை விளக்கினள்.

இது பூமியைக் காத்த சிவன் காருணியம் அறிவித்தது.

262 கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த
ஆலால முண்டான் அவன்சதுர்தா னென்னேடீ
ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. 8

இ - ள்: கோலாகலமாய் ஒலிக்கின்ற பாற்கடலிலிருந்து அன்று உண்டான ஆலகால விடத்தை உண்டானே; அவன் சாமர்த்தியந்தான் என்னேடி என்றாட்கு;

மற்றவள், அவன் அங்ஙனம் உண்டிலனாயின் பாற்கடல் கடைந்த அன்றைக்கே பிரமனும் திருமாலும் உள்ளிட்ட மேலான தேவர்கள் யாவரும் அழிவர்; இந்த உண்மையை அறிவாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாட்டில் ஆலாலமுண்டதன்விளைவு அறிவிக்கப் பெறுகின்றது.

சிவன் ஆலாலம் உண்டது அறியாமையாலும் தற்கொலை நிமித்தமுமன்று; அமரர்கள் உயிரைக் காக்கும் அருட்செயலே என்பது கருத்து.

கோலாகலம் - ஆடம்பரமான ஆரவாரம். அது எதுகை நோக்கிக் கோலாலமென மரீஇயிற்று. ஆலகாலம் என்பதும் ஆலாலம் ஆயிற்று. குரை கடல் - ஒலிக்கும் கடல். சதுர் - சாமர்த்தியம். வீடுவர் - அழிவர்.

இதுவும், அயன் மாலாதியான தேவர்களைக் காத்தமை கூறலின் சிவனுடைய காருணியத்தைக் கூறியதாதல் தெளிக.

263 தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. 9

இ-ள்: ஏடி! தென்றிசைநோக்கி மனமகிழ்ந்து ஆனந்தத் தாண்டவம் செய்யும் தில்லைச்சிற்றம்பலவன் பெண்ணை ஒரு பாகத்து மகிழ்ந்துவைத்தான்; அதனால் அவன் பெரும்பித்தன் காண் என்றாட்கு ;

மற்றவள், அறிவில்லாப் பெண்ணே ! அவன் அங்ஙனம் மகிழ்ந்து வைத்திலனாயின், விண்ணும் மண்ணுமாகிய இரண்டு நிலத்திலும் உள்ளோர் அனைவரும் யோகிகளாய்ச் சுவர்க்கம் அடைந்து ஒய்வடைவர் ; இதனை அறிக என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் உமாதேவியை ஒரு பாகம் கொண்டிருப்பது பெண்ணாசையாலன்று ; உலகம் படைப்புத் தொழிலில் ஈடுபட்டுப் போகம்துய்க்கவே என்பது உணர்த்தப் பெறுகின்றது.

கூத்தாடியாகிய சிற்றம்பலவன் பெரும்பித்தனோ? எந்நேரமும் தேவியைக் கூடவே வைத்திருக்கின்றானே என்றவளைப் பார்த்து, அவன் அப்படி வைத்திருக்கவில்லையானால் விண்ணவர் மண்ணவர் யாவரும் யோகிகளாய்ச் சுவர்க்கமடைந்து ஒய்வடைவர் என்றாளாம்.

யோகெய்தி விண்பாற்செல்லுதல் அழிதலாகுமா எனின், கன்மபூமியிற் பிறந்த இவர்கள் போகியாயிருந்து போகம் துய்த்து வினைக்கழிவும் மலபரிபாகமும் வந்த பிறகு இறையருளால் சிவஞானம் பெற்று வீடு அடையவேண்டியவர்கள், வீணே விண்ணெய்திப் போகமும் அடைய முடியாமல் ஒய்ந்து போவர் என்பதாம். வீடுவர் - ஒழிவடைவர்; அழிவர் என்க.

இறைவன் தென்முகக்கடவுளாக இருந்து நால்வர்க்கு அறமருளிச்செய்தபோது, பிணைவிழச் சடங்கியற்றியும் இணைவிழைச்சு இயற்கைகூடாது ஆடவர் தனியே கூடியிருந்தாற் போலவும், பெண்கள் தனியேகூடியிருந்தாற்போலவும் மக்கள் இருந்தனர். உலகம் படைப்புக்குட்படவில்லை. இந்திரன் முதலிய தேவர்கள் மன்மதனையனுப்பி இறைவனைப் போகியாக்க முயன்றும் முடியாதாயிற்று. இறைவனே தேவர்களின் வினைக்கழிவு நேர்ந்தகாலத்துப் பார்வதியை மணந்து போகியாயிருந்தார்; உலகம் ஐந்தொழிற்கண் அகப்பட்டது என்னும் கந்தபுராணம் பார்வதியம்மையார் திருமணப்படலத்தின் வரலாறு காண்க.

சிவஞானசித்தியாரிலும் " போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்'' என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

இதனால் இறைவனுடைய முழுமுதற்றன்மையும், அவன் போகியாயிருத்தல் உலகில் உயிர்கள் போகந்துய்த்தற்காகவே என்ற காருணியமும் அறிவிக்கப்பெறுதலின், பதிகக்கருத்து விளங்குதல் காண்க.

*264 தானந்த மில்லான் தனையடைந்த நாயேனை*
*ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ*
*ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்*
*வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ.*

இ - ள் : ஏடி! தனக்கு இறுதியில்லாதவனாகிய சிபரமேசுரன் தன்னையடைந்த நாயை ஒத்த தமியேனை, சிவானந்தமாகிய கடலில் அழுந்தும்படிச்செய்தானே; இஃது என்ன; காண்; என்றாளாக;

மற்றவள், உன்னை இவ்வண்ணம் ஆனந்தவெள்ளத்து அழுந்தச்செய்த திருவடிகள் வானின்கண் வாழ்கின்ற தேவர்களுக்கு ஒப்பற்ற பெரியபொருளாம்; இதனை அறிக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாட்டில் அடிகளார், இறைவன் தமக்கு அருளிய சிறப்பைத் தெரிவிக்கின்றார்.

எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும் முடிந்தமுடிபான பரசிவம் தன்னையே அடைக்கலமாக அடைந்த அடியேனை ஆனந்த வெள்ளத்திலே அழுத்துவித்தது என்ன அதிசயமோ என்று வினவியவளைப் பார்த்து, மற்றவள், அவ்வண்ணம் உன்னையழுத்துவித்தவை அவனுடைய திருவடிகள்; அவை தேவர்கட்கு எட்டாத பெரும்பொருளாம்; அதன் பெருமை அறிந்துகொள் என்று விளக்கினாளாம்.

அந்தமில்லான் எனவே ஆதியில்லான் என்பதும் பெறப்படுதல் காண்க.

நாய் தன் எசமானன் அடித்தாலும், நன்றாக ஒறுத்தாலும் அவனடியையே சுற்றிவருதல் போலவும், அவனைச் சினவாது நன்றியறிதலையே காட்டி அவன் விருப்பத்தைச் சம்பாதித்துக் கொள்வதுபோலவும், நான் அவனடியைச் சார்ந்து விடாமல் பற்றுவேனாயினேன் என்பாள் 'தனை அடைந்த நாயேனை' என்றாள்.

ஆனந்த வெள்ளம் - சிவபோகத்து அழுந்தலால் விளைந்த இன்பவெள்ளம். வெள்ளம் - கடல். கடலில் ஆழ்ந்த தோணி

போல, யான் அதனுள் ஏகதேசம் ஆயினேன்; அது என்னை முழுதும் வியாபித்தது என்பாள் 'ஆனந்தவெள்ளத் தழுத்து வித்த திருவடிகள்' என்றாள்.

வினவியவள் இறைவன் அழுத்துவித்தான் அஃதென்ன என்று வினவ, இவள், அழுத்துவித்தவை அவன் திருவடிகள் எனத் திருவருட்பொலிவை விளக்கினாள். இது அவளுடைய பரிபாகச் சிறப்பைப் பகர்வது.

உந்து - வாழ்கின்ற வான் உந்து தேவர்கட்கு - வானில் உள்ள சிறந்த தேவர்கட்கு எனலுமாம்.

வான் பொருள் - சிறந்த பொருள். அவர்கட்கும் எட்டாத பொருள் என அதன் அருமையும் பெருமையும் தோன்ற விளக்கினாள்.

இதுவும் ஆனந்த வெள்ளத்து அழுத்துவித்த சிவகாருணியத்தை விளக்கியமை காண்க.

265 *நங்காயி தென்னதவம் நரம்போ டெலும்பணிந்து*
*கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ*
*கங்காள மாமாகேள் காலாந்த ரத்திருவர்*
*தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ.* 11

இ - ள் : ஏடி! நங்காய்! இது என்னடி தவம்; நரம்போடு எலும்புகளையும் அணிந்து முழு எலும்புக்கூட்டைத் தோள் மேலே தாங்க விரும்பினானே; இதைப்பாரடி என்று வினவ :

மற்றவள், முழு எலும்பு ஆனவிதத்தைக் கேட்பாயாக; நெடுநாளைக்குமுன் அயனும் மாலுமாகிய இருவர்களுடைய காலத்தை விளக்கத் தரித்தனன்; இதனை நீ அறிவாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், இறைவன் கங்காளம் அணிந்ததன் காரணத்தை உணர்த்துகின்றார்.

இறைவன் கங்காளம் தாங்கியது அயன் திருமால் இருவருடைய காலத்தையும் வரையறை செய்யவேயாம் என்பது கருத்து.

பிரம விட்டுணுக்களது முழு எலும்புக்கூட்டைத் தண்டாயுதம்போலத் தோளின்மேல் சார்த்தி வடுகநாதராக விளங்குகின்றான் இறைவன் என்பது வரலாறு. அதனைக் குறிப்பித்தார்.

கங்காளம் - முழு எலும்பு. நங்காய் இது என்ன தவம் என்று நகையாடினுள். அவளுக்கு அதனுடைய தத்துவத்தை உணர்த்த முற்படுகின்ருள் மற்றவள். கங்காளம் என்பது என்ன என்பது உனக்குத் தெரியுமா? அதனைக் கேள்; பிரம விட்டுணுக்களது இறுதிவந்த எல்லைக்கண் அவர்கள் இருவருக்கும் இவ்வளவுதான் வினைப்போகங்களைத் துய்க்கும் காலம் என்று வரையறை செய்யவே தாங்கினனும் என்ருள். இதனல் இறைவன் காலாதீதன் என்பதும், பிரமன் திருமால் முதலாயினோர் வினைக்கீடாக வடிவுகொண்டு வினைக்கழிவில் இறப்பர்; அங்ஙனம் இறந்தவர்களின் எலும்புகளை நரம்பில் கோத்துக் கட்டி மாலையாக அணிந்தும் முழு எலும்புகளைத் தண்டமாக ஏந்தியும் 'ஈறிலாதவன் யான் ஒருவனே' என்பதைத் தெரிவித் தருளுகின்ருர்.

இதுவும் இருவர் செருக்கடக்கி உண்மைஞானம் ஊட்டு வதை அறிவித்தலின் சிவனுடைய காருணியமாதல் அறிக.

266 கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி
ஆன லவனுக்கிங் காட்படுவா ராரேடீ
ஆனலுங் கேளாய் அயனுந் திருமாலும்
வானடர் கோவும் வழியடியார் சாழலோ. 12

இ - ள்: ஏடி! காட்டில் வசிக்கின்ற புலித்தோலாகிய உடையையும், இறந்தவர் மண்டையோட்டில் உணவையும், சுடுகாடாகிய நகரத்தையும் உடையவனுனல் அவ்விறைவனுகிய அச்சிவனுக்கு இவ்வுலகத்தில் யாரடி அடிமையாவார் என்ருட்கு;

மற்றவள், ஆனலுங்கேட்பாயாக; அயனும் திருமாலும் தேவர்கள் அரசனுகிய இந்திரனும் அவனுக்கு வழிவழியான அடியார்கள் ஆவார் என்ருள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், தோலுடை மண்டையோடு முதலியன வற்றைத் தாங்கியதன் தத்துவம் உணர்த்தப்பெறுகின்றது.

இதில் தோலுடை முதலியன உடைமையால் இப்பூமியில் அவனுக்கு யார்தாம் ஆட்படுவார்கள் என்று வினவியவளுக்கு, மற்றவள், அறியாமையினுல் மண்ணவர்கள் ஆட்படாமற் போனல் போகட்டுமே; விண்ணவர் தலைவனுகிய அயனும் மாலும் இந்திரனும் அவனுக்கு வழிவழி அடிமைகள் ஆவர் என்று விடைதந்தாளாம்.

கானார் புலித்தோல் - காட்டின்கண் வசிக்கும் புலித்தோல். யாகத்தீயினின்று எழுந்த புலியைக் கானார் புலி என்றது சாதி அடை. தலை ஊண் - தலையோட்டில் உணவு. காடு - சுடுகாடு. ஆட்படுவார் - ஆளாக அடைபவர்கள். வழி அடியார் - வழி வழி அடிமையான அடியவர்கள்.

இதுவும், சிவன் காருணியத்தாலே இவற்றை உடையாக அணியாகத் தாங்கினான் என்பதை உணர்த்துதலின் சிவன் காருணியமாயிற்று.

267 *மலையரையன் பொற்பாவை வாணுதலாள்பெண்டிருவை*
*உலகறியத் தீவேட்டான் என்னுமது வென்னேடீ*
*உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்*
*கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண்*
[சாழலோ. 13

இ - ள் : ஏடி! மலைகளுக்கெல்லாம் அரசனாகிய இமவான் பெற்ற பொன்னாலாகிய பாவையை ஒத்தவளும் ஒளிபொருந்திய நெற்றியையுடையவளும் பெண்களுள் ஞானச்செல்வியுமாகிய உமாதேவியாரை உலகமெல்லாம் அறியச் செந்தீயின் முன்னர்த் திருமணம் செய்துகொண்டான்; அந்தச் செயல் என்னையோ? என்றாட்கு;

மற்றவள், அவன் அங்ஙனம் மணவானாயின் உலகங்கள் அனைத்தும் அவற்றிலுள்ள கலைநிறைந்த பொருள்கள் அனைத்தும் கலங்கிப்போகும்; இந்த உண்மையைக் காண்பாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல் இறைவன் உமாதேவியாரைத் திருமணம் செய்ததன் காரணத்தைத் தெரிவிக்கின்றது.

உலகமே தாமான இறைவன் உலகமெல்லாம் அறிய உமையை மணந்தது ஏன் என்பது வினா? உலக இறைவன் உலகமுழுதையும் ஒழுக்கத்தில் நிலைபெறச்செய்யும் இறைவன் உமையம்மையாரைக் கரணச்சடங்குகளை இயற்றிக் கடிமணம் புரியவில்லையானால் உலகில் பொய்யும் பிசியும் புகுந்து ஒழுக்கம் குன்றும்; உலகிலுள்ள பொருள்களும் நிலைகலங்குமென விடை தந்தாள்.

வேளாது - மணவாது: எதிர்மறை வினையெச்சம். கலை நவின்ற பொருள் - கலை மிகுந்த சிற்பமும் சித்திரமும் ஓவியமும் காவியமும் ஆகிய பொருள்கள்.

இதுவும், உலகம் நிலைகுலையாமைப்பொருட்டே பெருமான் உமையவளை வேட்டானென்பது உணர்த்துதலின் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

268 தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது வென்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ. 14

இ - ள்: ஏடி! தேன்வந்து பாய்ந்திருக்கின்ற குளிர்ந்த வயல் சூழ்ந்த தில்லைச்சிற்றம்பலவன், நடனத்தைத் தானே விரும்பி இடைவிடாமல் பயிலுவதற்குக் காரணம் என்ன? என்றாளாக;

மற்றவள், அவன் அங்ஙனம் நடனம் செய்திலனாயின் பூமியெல்லாம் ஊன் தங்கியிருக்கின்ற வேலையுடைய காளிக்கூட்டங்களுக்கு உணவாக ஒழியும்; இதனை அறிந்துகொள்க என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல் இறைவன் திருநடனம் புரிவதற்கு உரிய உண்மையை உணர்த்துகின்றது.

உலகமெல்லாம் இறந்துபட உலகம் யாவும் அவளுக்கு உணவாகிவிடும் என்பது கருத்து.

நீலம் தாமரை முதலிய பூக்கள் இடைவிடாது பூத்துத் தேன் சொரிய, தேன் ஆறாக ஓடி வந்து வயலில் பாய்கின்றது என்பார் 'தேன்புக்க தண்பணை' என்றார்.

புக்கு - விரும்பி. ஊன் புக்கவேல் - பொருது இறந்த பகைவர்களின் தசை ஒட்டிக்கொண்டிருக்கும் வேல்.

இதுவும், உலகம் அழியாமற்பாதுகாக்கும் அருட்சிறப்பை அறிவித்தலின் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

269 கடகரியும் பரிமாவும் தேருமுகந் தேறாதே
இடபமுகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. 15

இ - ள்: ஏடி! மதம் ஒழுகும் யானையையும் விரைந்து ஓடும் குதிரையையும் தேரையும் விரும்பி ஏறாமல் இடபத்தை விரும்பி ஏறியதன் காரணத்தை எனக்குத் தெரியச்சொல்லடி என்றாளாக;

மற்றவள், பரந்த மதில்களாகிய மூன்றையும் தழலாக எரித்த அக்காலத்துத் திருமால் இடபமாய்த் தாங்கினன்; அதனால் என்று அறிவாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் இடபத்தை வாகனமாகக் கொண்டதன் தத்துவத்தைக் கூறுகிறது.

திரிபுரசங்காரகாலத்திலே திருமால் இடபமாகத் தாங்குதலின் இடபவாகனத்தில் இறைவனுக்கு விருப்பு விளைந்தது என்பது கருத்து.

கடகரி-மதம் ஒழுகும் யானை; என்றது அதன் இளமையையும் வீரத்தையும் உணர்த்திற்று. பரி மா - விரைந்த செலவினையுடைய குதிரை. இருபெயரொட்டாக்கிக் குதிரை என்பாரும் உளர். தடமதில்கள் - திரிபுரங்கள். இறைவன் திரிபுரங்களை எரித்தகாலத்துப் பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களை உருளையாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், மேருவை வில்லாகவும், அக்கினியை அம்பின் நுனியாகவும் கொண்டு போருக்குப் புறப்பட்டதும் அவைகள் செருக்குக்கொண்டன; இறைவன் சிறிது சீற்றமுற்றார்; அதனைக் குறிப்பாலுணர்ந்த திருமால் இடபமாய்த் தாங்கினன் என்பது வரலாறு.

இதுவும், திரிபுரம் எரித்து உலகை விளக்கும் காருணியத்தை விளக்குதலின் சிவனுடைய காருணியமாயிற்று.

*270* *நன்றாக நால்வர்க்கும் நான்மறையி னுட்பொருளை*
*அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ*
*அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தா னாயிடினும்*
*கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ.16*

இ-ள்: நன்மை விளக்கும்படிச் சனகாதியர் நால்வருக்கும் நான்கு வேதங்களின் உட்பொருளை அன்று கல்லால்நிழற்கீழ் இருந்து ஞானோபதேசம் செய்தான்; ஏடி! பார்த்தாயோ? என்று வினவியவட்கு;

மற்றவள், அங்ஙனம் அருளுபதேசம் செய்தானாயினும் புரங்களையும் கூட்டோடே கொன்றான்; அதனை நீ ஆராய்ந்து பார்ப்பாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாட்டில், சனகாதியர்களுக்கு ஞானோபதேசஞ் செய்ததும் திரிபுரம் அட்டதுமாகிய அறவாற்றலும் மறவாற்றலும் அறிவிக்கப்படுகின்றன.

சனகாதியர், வேத வேதாங்கங்களை நன்கு ஓதியிருந்தும் அதன் உட்பொருளை அறியாததால் மனவமைதிபெருது தவித்தனர்; இறைவன் தென்முகக்கடவுளாய்த் தவத்திருக்கோலம் தாங்கியிருந்தகாலத்து அவரிடத்தே சென்று விண்ணப்பித்தனர். இறைவனும் அவர்களுக்கு இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி உபதேசித்தார். ஊமைத்தசும்புள் நீர்நிறைந்தாற்போலச் சனகாதியர் நால்வருக்கும் ஞானம் நிறைய, மன அமைதி பெற்றனர் என்பது வரலாறு.

இங்ஙனம் அறமுரைத்தமை அறக்கருணையாயினும் முப்புரங்களையும் எரித்த மறக்கருணையையுமுடையான் என்பாள் 'புரம் மூன்றும் கூட்டோடே கொன்றான்' என்றாள். கூட்டோடே கொன்றான் - உடல் அழிய வருத்தினன். ஒருசேர அழித்தான் எனலுமாம்.

இதுவும், இறைவனது இருவகைக் கருணையையும், விளக்கலின் சிவனுடைய காருணியமாயிற்று.

271 அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது வென்னேடீ
நம்பனையு மாமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தினகாண் சாழலோ. 17

இ - ள் : ஏடி! திருச்சிற்றம்பலத்தில் திருநடனம்செய்து, உண்பதற்காகப் பிச்சையேற்கத் திரிகின்ற சிவனையும் ஒரு தேவனாக எண்ணி அடைவது என்னே என்று வினவினளாக;

மற்றவள், சிவன் அவ்வாறு ஆனவகையைக் கேட்பாயாக; நான்கு வேதங்களும் தமக்குத் தெரியாமலே அவனை எம்பெருமான் என்றும் ஈசா என்றும் துதித்தன; இதனை நீ அறிக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாட்டு, சிவனுடைய முழுமுதற்றன்மையை மொழிகின்றது.

வேதங்களே அவனை ஈசன் என்று துதித்தமையால் நீ இவ்வாறு வினவுதல் ஆகாது என்று அறிவித்தாளாம்.

ஆடி, செய, திரியும் நம்பனையும் தேவன் என்று நண்ணுமதும் என்னேடீ! எனக் கூட்டுக. ஆமா - ஆகுமாறு.

இதுவும், வேதங்களே தோத்தரிக்கும் விண்ணவர் பெருமான் உயிர்களின்மேல் வைத்த கருணையால் தானே தேவன்

என்று வந்து தடுத்தாண்டுகொண்டமையைத் தெரிவித்தலின் சிவனுடைய காருணியத்தை உணர்த்தியதாதல் காண்க.

272 *சலமுடைய சலந்தரன்றன் உடல்தடிந்த நல்லாழி*
*நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ*
*நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்*
*அலராக இடவாழி யருளினன்காண் சாழலோ.* **18**

**இ-ள்:** வஞ்சனையோடு கூடிய சலந்தரனுடைய உடலைக் கொன்ற நல்ல சக்கரப்படையை, நன்மை அமைந்த நாராயணனுக்கு அன்று கொடுத்தருளியது என்னையோ? என்று வினவியவளுக்கு;

மற்றவள், நாராயணன் தன் கண்ணைத் தோண்டிச் சிவபெருமான் திருவடியின்கீழே தாமரைமலராகப் பாவித்துச் சாத்துதலால் இறைவன் திருவாழியை அருளிச்செய்தனன்; இதனை நீ அறிவாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல், திருமாலுக்குச் சக்கரம் அருளிச்செய்த காரணத்தை அறிவிக்கிறது.

திருவிற்குடியில் சலந்தரன் என்னும் அசுரன் இறைவனை வெல்வதற்காக வர, இறைவன் அந்தணவடிவுகொண்டு அவன் முன்னே வந்து 'நீ எங்கே செல்கின்றாய்' என வினவினர்; அவன் இறைவனை வெல்வதற்காகச் செல்கின்றேன் என்று சொல்ல, நீ அவனை வெல்வது அப்புறம் இருக்கட்டும்; பூமியில் நான் காலால் கீறும் இச்சக்கரத்தைத் தூக்கித் தலையின்மீது வைத்துக்கொள்வாயானால், அவனை நீ வெல்ல வல்லவனாவாய் என்றனர். அவன் மிக அலட்சியமாக எண்ணி, அவர் காலால் கீறிய அச்சக்கரத்தைப் பெயர்த்து எடுத்தான். அது எடுக்க இலேசாக இருந்தது. தோளுக்குமேல் தூக்கித் தலையருகே கொண்டுபோனதும் சுழலத் தொடங்கியது; அவன் தலையை அறுத்தது. இஃதிங்ஙனமாக, இறைவன் திருவீழிமிழலையில் நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர்களைக்கொண்டு அருச்சிப்பதாக விரதம்பூண்ட திருமால், ஒருநாள் ஒருபூக்குறைய, செந்தாமரைபோன்ற தன் கண்களில் ஒன்றையே பறித்துச் சாத்தினார்; மகிழ்ந்த இறைவன் அவருக்குச் சக்கரத்தை அருளினார் என்பது வரலாறு.

சலந்தரன் வஞ்சகமுடையனாதலின் 'சலமுடைய சலந்தரன்' என்றார். அவனுடலைத் தடிந்த ஆழியை 'நல் ஆழி' என்றது

வஞ்சகனைக் கொன்று வாழவைத்தமைபற்றி. சிவபூசை செய்யும் நலம் உடைமையான் நாராயணன் 'நலமுடைய நாரணன்' எனப்பட்டார்.

இதுவும், நாரணனுக்கு ஆழி வழங்கிய அருட்டிறத்தைக் கூறுதலின் சிவனுடைய காருணியமாதல் தெளிக.

273 அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமா னுண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ
எம்பெருமா னேதுடுத்தங் கேதமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ. 19

இ-ள்: ஏடி! புள்ளிகளையுடைய புலித்தோல் அவருக்கு ஆடையாம்; நஞ்சை அரிய அமுதமாக எமது பெருமான் உண்டதிறத்தை எனக்கு அறியச் சொல்லுக என்றாளாக;

மற்றவள், எம்பெருமான் எதனை உடுத்து எதனை உண்டாலும் தன் பெருமை தானறியாத தன்மையை உடையவன் காண்பாயாக என்றாள் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் நஞ்சம் அருந்தியதன் உண்மையை விளக்குகின்றது.

புலித்தோலை உடுத்தியதும் நஞ்சு அருந்தியதும் தன் பெருமையை வெளிப்படுக்க அன்று; ஆன்மாக்கள்மீது வைத்த கைம்மாறு கருதாத கருணையால் என்பதை விளக்க இங்ஙனம் கூறினர்.

அம்பரம் - ஆடை. புள்ளித்தோல் - புள்ளிகளையுடைய புலியின் தோல். சதுர் - சாமர்த்தியம்.

வினவியவள் விஷமுண்டது எதற்கென வினவ, இவள் இறுத்தபதில் அதற்கு ஏற்புடைத்தாதலை விளக்க முயன்ற சிலர் தன் பெருமையைத் தான் அறியாத தன்மைபோல யானும் அதன் காரணத்தை உணர்ந்திலேன் என்று உரைப்பர்.

விஷம் உண்டும் தான் இறவாது பிறரை மரணத்தினின்றும் காப்பாற்றத் தான் மேற்கொண்டசெயலின் பெருமையைத் தான் அறியான்; அதனை அறிந்து அனுபவிக்கின்றவர்கள் அடியார்களாகிய நாமே என்ற நயந்தோன்றநிற்றல் காண்க. அதனால் முற்கூறிய உரை பொருந்தாமை அறிக.

விடமுண்டு தேவர்களைப் பாதுகாத்த காருணியத்தைக் கூறுதலின் இது பதிகக் கருத்தோடு இயைபுடைத்தாதலறிக.

274 அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ
அருந்தவருக் கறமுதனூன் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ. 20

திருச்சிற்றம்பலம்

இ - ள்: ஏடி! செய்தற்கரிய தவத்தினையுடைய சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் கல்லாலின் நிழலிலிருந்து அறம் முதலான நான்கு பொருள்களையும் அருளிச்செய்த அதனைப் பற்றி எனக்கு அறியச் சொல்லுக என்று வினவினளாக;

மற்றவள், முனிவர்களுக்கு அறம் முதல் நான்கனையும் அன்று அவர் அருளிச்செய்யாவிடில் திருந்த விரும்பும் அவர்களுக்கு உலகத்தின் இயற்கையே தெரியாமற்போகும் காண் என்றுள் என்றவாறு.

இத்திருப்பாடல், முனிவர்களுக்கு அறம் முதலான நான்கினையும் அறிவித்ததன் பயனை உணர்த்துகின்றது.

அறம் முதல் நான்கையும் அரன் அருளிச்செய்யாவிடின், உலகினுக்கு உண்மையே தெரியாது ஒழியும் என்பது கருத்து. அருந்தவர்க்கு இருந்தவர்க்கு என்பன இரண்டும் சனகாதியரையே குறித்தன. இரண்டனையும் இணைத்து அரிய பெரிய தவத்தினை உடையார்க்கு எனப் பொருள் கொள்க. நால்வர் சனகர், சனந்தநர், சனாதநர், சனற்குமாரர் என்போர்.

அறம் முதல் நான்காவன, சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. அறம் பொருள் இன்பம் வீடு என்பாருமுளர். சனகாதியர் பசு புண்ணியங்களாகிய அறத்தையும் அதன் பயனாகிய பாச இன்பத்தையும் விரும்பித் தவஞ்செய்தவர்கள் அல்லர்; சிவநெறி ஒன்றையே கருதி மன அமைதி ஒன்றையே நாடித் தவஞ்செய்தவர்களாதலின், அவர்கள் செய்தவை சரியையாதிகளே. இதுவே சைவமரபுமாம்.

அறம் - இறைவனுக்காக இயற்றப்படும் நந்தவனப் பணி, ஆலயப்பணி முதலிய சரியைத் தொண்டுகளும் சிவபூசையாகிய கிரியைத் தொண்டும், சிவயோகம் செய்தலாகிய யோகத் தொண்டும், சிவபோகத்து அழுந்துதலாகிய ஞானமுமாம். திருந்தவர் - திருந்த அவர் என்பது திருந்தவராயிற்று. உலகியற்கை - தோன்றி அழிவதும் தனக்கென்று ஒரு தலைவனை உடைமையும் ஆகிய இயற்கைகள். இது, அருந்தவருக்கு அறமுதல் நான்கனையும் அருளிச்செய்ததை உணர்த்துதலின் சிவனுடைய காருணியமாயிற்று.



திருவாதவூரர் திருப்பணி செய்விக்கின்றார். பணிகள் விரைவாக நடக்கின்றன.

# 13. திருப்பூவல்லி

*[மாயாவிசயம் நீக்குதல்]*

அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்குங்காலத்து மகளிர் பூம்பொழிலில் பூக்கொய்வதைக் கண்டு, அவர்கள் தன்மையைத் தாம் ஏறட்டுக்கொண்டு, அவர்கள் கூறுவது போல இதனை அருளிச்செய்கின்றார்கள்.

பூ வல்லி - பூவோடுகூடிய கொடி. வல்லியிலிருந்து பூக்கொய்வாம் என இவ்விருபது திருப்பாடல்களும் முடிதலின் திருப்பூவல்லி எனப் பெயர்பெற்றது.

பூ + அல்லி எனப்பிரித்து பூத்த அல்லிப்பூ என்பாரும் உளர். பூக்கொய்தலும் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. மகளிர் பலர் கூடிப் பாட்டுப் பாடிக்கொண்டு பூஞ்சோலைகளிற் பூப்பறித்தலும், அவற்றைத் தம் தலையிலும் குழமகன் தலையிலும் சூட்டி மகிழ்தலும் மரபு. அங்ஙனம் மகளிர் பூப்பறிக்கும்போது சிவபெருமான் புகழைப் பாடிக்கொண்டு பூப்பறிப்பதாக அமைந்தது இப்பகுதி.

இதன் கருத்து 'மாயாவிசயம் நீக்குதல்' என்பர். அதாவது மாயையின் பலத்தை மறுத்தல் என்பது பழையகுறிப்பு. மணமும் நிறமும் மென்மையும் அழகும் வாய்க்கப்பெற்று உயிர்களை மயக்குகின்ற மாயாகாரியமான மலர்களைப் பறித்தலும், சிந்தை புறம் போகாதவண்ணம் இறைவன் புகழைப் பாடுதலும் மாயையின் வெற்றியை விலக்கும் செயல்களாதலின் இங்ஙனம் கூறப்பட்டது போலும். இதற்கு அயன் அரி தக்கன் முதலானோரும் பாண்டியனும் மயங்கியிருந்த நிலையை இறைவன் போக்கினர் என்ற புராண வரலாறுகளும் பெருந்துணைசெய்யும். பழையவுரையில் அகத்தியச் சூத்திரம் 'செடமாயா விசையம்' என்கிறது. அறியாமையாகிற மாயையை வெல்லுதல் என்பது இதன் பொருளாம். ஆகவே மாயையின் வெற்றியை விலக்கும் வெற்றியாதல்பற்றி இப்பெயர் இதற்கு அமைந்தது என்பதே பொருத்தமாதல் அறிக.

பழையபுராணம் " தேவரறியாத சிவன்தேடியே யாண்டநலம், ஆவலொடுஞ் சொல்லி யடியா ரொடுங்கூடி, பூவிருந்து கொய்தல் திருப்பூ வல்லியாம்" என்று விளக்கம் தரும்.

பழையவுரை "முதற்பதிகத்திற் கதையை அழித்துப் பொருள் சொன்ன சத்துக்கள் மேற் செய்யுமுறைமை வினவில், சிவார்ச்சனை யன்றி வேறில்லை நிட்டை எனக்கருதிப் பூக்கொய்தலைக் காரண காரியமாக உபசரித்தலான அநுபூதி" எனக் கருத்து விளக்கும். இதில் முன்னுள்ள திருச்சாழலில் சிவபெருமான் செய்த அருள் விளையாடல்களாகிய வரலாறுகளை எல்லாம் வினவி, தனி வரலாறு மட்டும் அன்று; தத்துவமும் அமைந்து என்று எடுத்துக்காட்டிய சத்துக்களாகிய அதாவது உயர்ந்த அநுபூதிமான்களாகிய மகளிர் மேலே நாங்கள் செய்யக்கூடிய காரியம் சிவனைப் பூசைசெய்தலே என்றெண்ணிப் பூ எடுக்கும் நிகழ்ச்சியை இயைபுபட எடுத்துரைக்கிருர்கள் என்ற விளக்கம் உதவப்படுகின்றது.

இப்பதிகமும் இருபது திருப்பாடல்களைக் கொண்டது. இருபது பாடல்களிலும் முறையே, திருவடிப்பேற்ருல் புறப்பற்று அற்றது அதனுல் அத்திருவடியைத் துதித்தல் முறையாம் என்பதும், பொறியின்பம் பெற்ருற்போலப் பேரின்பமும் வாய்த்தது என்பதும், ஆட்கொண்ட முறைமையும், பேரின்பம்பெற்றும் அதை மறந்தவர்களைத் தலைவன் ஒறுத்துணர்த்துதலும், சிவதரிசனம் அறிவுக்காட்சியே யாம் என்றலும், திரிபுரசங்காரத் தத்துவமும், தேகாதி பிரபஞ்சங்கள் பேரின்பப் பேற்றிற்காகவே இறைவனுல் விலக்கப்பெற்றமையும், சிவனடியாரினத்திற்கே சிவானந்தப்பேறு உண்டென்றும், ஞான விளக்கத்தை நல்குவதெல்லாம் திருவருள் வடிவான திருவடியே என்பதும், அதனைப் பெற்றவுடன் ஆசையும் பாசமும் அகலும் என்பதும், இறைவன் திருமேனி பேரின்பமே என்பதும், துன்பம் போலத் தோன்றினும் அது இன்பமேயாம் என்னும் அநுபவமுறையும், ஆதலால் சிவத்தை விதிப்படிப்பூசித்தல் இன்றியமையாதது என்பதும், பிறவும் நன்கு விளக்கப்பெறுகின்றன.

## தரவுகொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

*275* *இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே*
*துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்*
*அணையார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற*
*புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ.* 1

இ-ள்: ஒன்ருேடொன்று இணைந்த திருவடிகளை அடியேனுடைய சிரத்தின்மேல் சூட்டுதலும், எனக்கு இம்மாயா காரியமாகிய உலகில் துணையாவார்கள் என்று எண்ணிக் கொண்டிருந்த சுற்றத்தார் அவ்வளவுபேரையும் துறந்து,

அவர்கள் சார்பு சிறிதுமின்றி ஒழிந்தேன்; ஆதலால் அணைகளோடு கூடிய நீர்சூழ்ந்த தில்லைநகரின்கண் விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தில் ஆனந்த நடனம் புரிகின்ற, எனக்குப் புணைபோல்பவனுகிய சிவபெருமானுடைய புகழ்களைப்பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், திருவடி சூட்டியதால் விளைந்த பயனை விளக்குகின்றது.

திருவடிதீட்சையானவுடனே என் அகப்பற்று புறப்பற்றுக்கள் அகன்றன; இனிச் செய்யக்கடவதாகிய வினை சிவபூசை ஒன்றே; அதற்காகத் தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டு பூக்கொய்வேனுக என்ருள் என்பது கருத்து.

இணையார் திருவடி - இரண்டான திருவடி. இவ்விரண்டு திருவடிகளும் சத்தி சிவ சொரூபங்களானவை என்றும், பர அபரஞானங்கள் என்றும் பழையவுரை விளக்கந்தரும். ஒத்த இரண்டடிகள் எனலுமாம்.

ஆசான் மாணவனைப் பாசவிமோசனம் பண்ண, தாளைத் தலைமேல் சூட்டும். அதனுல் மாணவன் ஆணவமலம் குன்றிச் சிவஞான ஒளி பெறுவன். அங்ஙனமே சிவகுருநாதன் திருவடி சூட்டினுன். குளிகைபட்டவுடன் இரும்பு ஒளிபெற்றுப் பொன் னுனற்போல அவன் அடிவைத்தலும், ஆசைக்கு அரணுன சுற்றத்தாரை அகற்றினேன் என்பார் 'திருவடி என் தலைமேல் வைத்தலுமே துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்' என்ருர். இதில், சுற்றத்தார் தாமாக அகலாமையும் இவர் துறந்தொழிந்தமையும் ஊன்றியறிக.

அணையார் புனற்றில்லை - 'சிறைவான் புனற்றில்லை' என்ருற்போல வரம்புட்பட்ட வெள்ளம் சூழ்ந்த தில்லை என்க.

அம்பலம் - மன்றம். அது ஞானமயமானது. புணையாளன் - தெப்பம் போன்றவன். பிறவிக்கடற்குத் தெப்பமாதலின் புணையாளன் என்ருர். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்ற குறட்கருத்து அமையப் பிறவிக் கடற்குத் தெப்பமாகிய திருவடியை ஆள்பவன் எனலுமாம்.

பூசைக்குப் பூ எடுக்கும்போது இறைவன் புகழைப் பாடியாவது, திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டேயாவது எடுத்தல் வேண்டுமாதலின் 'சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ' என்ருன்.

மாயாவிசயம் சுற்றங்கள் வடிவாகச் சுற்றியிருந்தனவற்றைத் துறந்தொழிந்தேன் எனக்கூறுதலின், இப்பாடல் மாயா விசய நீக்கமாதல் காண்க.

276 எந்தையெந் தாய்சுற்ற மற்றுமெல்லாம் என்னுடைய
பந்தமறுத் தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. 2

இ-ள்: எந்தை, எமது தாய், மற்றுமுள்ள சுற்றத்தார் ஆகிய என் பாசங்கள் அனைத்தையும் அகற்றி என்னைத் தன் அடிமையாக ஏற்றுக்கொண்ட பாண்டிப்பெருமானும், அத் திருவிடைமருதூரிலே சிவானந்தமாகிய தேன் இருக்கின்ற பொந்துமாகிய பெருமானைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவனை ஆனந்த நிலையமாக அநுபவித்தமை அறிவிக்கின்றது.

என்னுடைய பாசக்கட்டு எம் தந்தை, தாய், சுற்றம் என்ற வடிவிற் சூழ இருந்தன. அவற்றையெல்லாம் அறுத்து ஆளாக ஏற்றான் பாண்டிப்பிரான்; அவனே இடைமருதூரில் ஆனந்தத் தேனிருந்த பொந்து; அவனைப் பரவி, பூக்கொய்வோமாக.

மனம் ஒன்றைப்பற்றியல்லது மற்றொன்றை விடாத இயல்பினது: ஆதலால், எந்தையும் தாயும் சுற்றமும் மற்றும் எல்லாமாக நீயிருந்து, புறத்தேயுள்ள அவைகளை ஒழித்து ஆண்டு கொண்ட பாண்டிப்பிரான் எனலுமாம்.

இடைமருதுறை எந்தைபிரானை ஆனந்தத்தேன் இருந்த பொந்தாக அநுபவித்து அறிவிக்கின்றார். தேன் அடை மரப் பொந்தில் வண்டுகளால் அமைக்கப்பெறும். ஈண்டுச் சிவானந்தமே தேன்; அது இருக்கும் பொந்து இடைமருதுறை பிரான் என்பது. பரவுதல் - தோத்தரித்தல். பரவிக் கொய்வாம் என்க. 'பந்தமறுத்து' என்றதால், மாயாவிசயம் நீக்குதலாதல் காண்க.

277 நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ. 3

இ - ள் : நாயினும் கீழ்ப்பட்ட நம்மையும் ஒரு பொருளாகச் செய்து, தாயினும் மிக்க கருணை செய்யும் நம்பெருமான் என்து மாயத்தால் விளையும் பிறவியை நீக்கி ஆட்கொண்டான்; ஆதலால் எனது வலிய வினைகளின் வாயிலே புழுதியை அள்ளியிட்டு, பூக்கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் பிறவியறுத்து ஆட்கொண்ட பேருதவியைப் பரவி விண்ணப்பிக்கின்றது.

நாய் பிறவியான் இழிந்தது; குணத்தான் உயர்ந்தது. அதனிற்கீழ்ப்பட்டவன் நான் என்றது, இறைவன் தநு கரணம் முதலியவற்றை உதவியருளிய நன்றியையும் மறந்தேனாகலின், நாயைப்போலப் பிறப்பான்மட்டுமன்றிக் குணத்தானும் இழிந்தேன் என்பதை நினைத்துக் கூறியதாம்.

நம்மையும் என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு. ஓர் பொருட்படுத்து - மதிக்கத்தக்கனவும் உயர்த்தத்தக்கனவுமாகிய பொருள்களில் ஒன்றாக அகப்படுத்து.

தாய் பால் முதலியன ஊட்டி உடலை வளர்ப்பவள். பின்னர் நம்மாற் பேணப்படும் கடமை நோக்குடையவள். இறைவன் திருவருளை ஊட்டிச் சிவஞானத்தை நல்கி உயிரை வளர்த்து நம்மிடம் எத்தகைய கைம்மாறுகளையும் வேண்டாது இருமைக்கும் உதவுபவன் ஆதலால் இறைவனைத் 'தாயிற்பெரிதும் தயாவுடைய தம் பெருமான்' என்றார். "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்" என்றதுபோல அவள்வெறுக்குங்குற்றம் நம்பால் உளதாயின் வெறுக்கவும் செய்வாள்; விலகுவாள். இறைவன் யாம் என்ன செய்யினும் விலகாது வெறுக்காது மறைக்காது நின்று பெருங்கருணையைச் செய்தலின் 'தாயிற்பெரிதும் தயாவுடைய தம்பெருமான்' என்றார் எனலுமாம்.

மாயப் பிறப்பு - மாயையால் வரும் பிறப்பு. வஞ்சனையைச் செய்யும் பிறப்பு எனலுமாம். அறுத்தல் - தொடர்ந்து வராத வண்ணம் இடையீடுசெய்தல். ஆண்டு பிறப்பறுத்தான் எனற்பாலது பிறப்பு அறுத்து ஆண்டான் எனக் காரணம் முந்துறு காரியமாக நின்றது. பிறப்பறுக்க ஆண்டான் எனச் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரித்தலுமாம்.

வல்வினையின் வாயில் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ: வலிய வினைகளின் வாயில் மண்ணைப்போட்டு, பூக்கொய்வோம் என்றாளாம். பூக்கொய்தல் பதிபுண்ணியம். பூமாலை புனைந்தேத்துதல் நிலைபெறுமாறு செய்யும் உபாயமாகிய சரியையும்

கிரியையும். ஆதலால் இனி வரக்கடவ வினைகளான ஆகாமிய சஞ்சிதங்கள் ஏறாமலும், பரிபாகம் பெற்று வருபிறவிக்கு உதவி யாகாமலும் கெடும் ஆதலின் அவற்றைக் கெடுத்து என்பார் 'வாயிலே மண்ணை அள்ளிப்போடு' என்ற உலகியல் முது மொழியை ஒட்டி அங்ஙனம் சுவைபட உரைத்தார்.

வினைகள் வரும் வழியிலே மண்ணை அள்ளியிட்டு வழியை அடைத்து எனலுமாம். "வாழ்நாள் வழி அடைக்கும் கல்'' என்பதுபோலக் கருத்துக்கொள்க.

சிலர், சிவன் ஆட்கொண்டான் ஆதலால் இருவினைகளின் வாயில் மண்ணிட்டு நாம் கொய்வோம் எனின், தருக்கிக் கூறுத லாகின்றது என்று எண்ணி, 'பெருமான், வல்வினையில் வாயிற் பொடியட்டிப் பிறப்பறுத்து ஆண்டான்' என முடிப்பர். அப்பர் சுவாமிகள், சங்கவெண் குழையோர் காதிற் கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சேவடியிணையே குறுகி னோம்; ஆதலால் நாம் ஆர்க்கும் குடியல்லோம் என்றருளியது போல, இவர்களும் பெருமான் ஆண்டான் ஆதலின்,வினையின் வாயில் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ என்கின்றமை யால் தருக்கிற்கும் தன்முனைப்பிற்கும் சிறிதும் இடமாகாமை தெளிக.

இறைவன் மாயப் பிறப்பறுத்து ஆண்டமையால் வினை களைத் தாம் வென்றமை தெரிவித்தலான் இத்திருப்பாடல் மாயாவிசயம் நீக்கல் ஆயிற்று.

*278* பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கனெச்சன் இந்துவனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரராற்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ.

இ-ள்: இசை பொருந்திய தில்லைப்பதிக்கு அரசாகிய அம்பலவாணசுவாமியைப் பரவித்தொழாமல், எண்ணத்தா லழிந்த தக்கன், எச்சன், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய இவர்கள், விண்ணையளாவிய பூதப்படையினையுடைய வீரபத் திரக்கடவுளால் புண்ணடைந்த வகையைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், வீட்டுக்கடங்காத பிள்ளையை ஒறுத்தடக் கும் தந்தைபோல ஆளாக இருந்தும் ஆளல்ல என்று எண் ணிய தேவர்களைத் திருத்தி ஆட்கொண்டமையை அறிவிப்பது.

இறைவனைப்போற்றாத தக்கன் முதலியோர் புண்பட்டதைச் சொல்லி இறைவனைப் புகழ்ந்து பூவல்லி கொய்வோம் என்றாள் என்பது கருத்து.

பண்பட்ட தில்லை - புலவர்களால் பண்ணமைந்த பாடல் பொருந்திய தில்லை எனலுமாம். பண் - இசை, புகழ். அதனோடு கூடிய தில்லை. பண் - நீர்நிலை எனப் பொருள்கொண்டு நீர் நிலைகள் பொருந்திய தில்லை என்பாருமுளர். பண்பட்ட அரசு எனக் கூட்டிச் சாமவேதம் முதலிய பண்களாற் புகழப்பட்ட இறைவன் எனலுமாம். பண் பாடலை உணர்த்தும்போது ஆகு பெயர். பண்பட்ட தில்லை - வளமுறுத்தப்பெற்ற தில்லைநகரம் எனலுமாம்.

பரவுதல் - புகழ்தல். எண் பட்ட - எண்ணத்தால் அழிந்த. எண் - எண்ணம். அஃதாவது சிவன் நம் மருமகன்தானே, நம்மில் ஒருவன்தானே, நம்போலும் ஒருவன்தானே என்ற எண்ணம். இவ்வெண்ணத்தாலேயே தக்கன் முதலானோர் தலை யிழந்தும் பல்லிழந்தும் மிதியுண்டும் துவையுண்டும் வருந் தினர். அதனையே 'பட்ட' என்பதால் உணர்த்தினர். இந்நயம் உணராதார் சிலர் தேவர்களில் சிறந்தவர்களாக எண்ணப் பட்ட என்றும், எண்ணி உடலம் வடுப்பட்ட என்றும் வேண் டியவாறு சொல்லழித்துப் பொருள்கொள்வர். அன்றியும், கலி விருத்தம் ஒருசீர்மிக்கு வருவதாக எண்ணி 'எண்பட்ட தக்கன் அருக்க னிந்துவனல்' எனப் பாடமும் திரிப்பர்.

இத்திருப்பாடல் ஒவ்வோரடியிலும் உள்ள மூன்றும் சீர் பதிக்கரசை, அருக்கனெச்சன், படைவீர, பூவல்லி எனக் காய்ச் சீராதலையும் கவனித்திலர். அருள்நூல்களில் தம் விருப்பம் போற் பாடம் திரித்தலும், நெடுநாள் பழகிய பாடத்தைவிட்டுப் புதுப்பாடம் கொள்ளுதலும் தவறுடைய செயலாதல் தெளிக.

எச்சன் - யாகபுருடன். விண் பட்ட பூதப்படை வானை யளாவிய பூதப்படைகள். வானில் தோன்றிய பூதங்கள் என் பாருமுளர்.

புண்பட்டமனம் எனல்போல வருத்தியவாற்றை எனப் பொருள்காண்க. மாற்றுத்தலை பெற்றும், பல் மூக்கு நாக்கு கண் இழந்தும் தாம் உள்ளளவும் வருந்துகின்றார்களாதலின் 'புண்பட்டவாபாடி' என்றார். வள்ளுவர் "நாவினாற்சுட்டவடு" என்றாற்போல அவர்கள் உறுப்பழிவு உள்ளளவும் புண் படுத்தியமை காண்க.

இதுவும் மாயாவிசயத்தால் தக்கன் முதலான தேவர்கள் புண்பட்டவாற்றைப் பாடுவதால், தாம் மாயாவிசயத்தை நீக்கியதைப் புலப்படுத்துதலின் பதிகக்கருத்திற்கு இயைபுடைத்தாதல் தெளிக.

279 தேனுடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனுடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே
நானுடி யாடிநின் றேலமிட நடம்பயிலும்
வானுடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ. 5

இ - ள்: வண்டுகள் விரும்புகின்ற கொன்றைமலர் மாலையைச் சடையிலணிந்த சிவபெருமான், என் உடலையே தேடித் தேடி வந்து என்னுள்ளத்தில் புகுந்தான்; நான் அஃதறியாது அவனைத் தேடிக் காணாமையால் அன்புமீதூர ஆடி நின்று ஓலமிட, உலகவர் முன்னே திருநடனம் புரிகின்ற விண்ணுட்டவர்க்குத் தலைவனாகிய அம்பலவாணப் பெருமானுக்காகப் பூக்கொய்வோம் என்றவாறு.

இப்பாடல், இறைவன் என்னகத்திருக்கவும் வெளியே தேடினேன்; அவன் உலகவர்க்காக வெளியிலும் உள்ளான் என்பது உணர்த்துகிறது.

இறைவன் என் உள்ளத்துப் புக்கு வீற்றிருந்தான்; நான் அவனை நாடி ஆடினேன்; அவன் உலகவர் முன்னே கனக மன்றுள் நடம்புரிகின்றான்; அத்தகைய விண்ணவர்தலைவற்காகப் பூக்கொய்வோம் என்றாள் என்பது கருத்து.

தேன் - வண்டின சாதி நான்கனுள் ஒன்று. விண்ணுக்கு மட்டும் உரிய வினைவயத்தால் பிறவியெடுத்த தேவர்களுக்கு உரிய பூவிலும், அவர்கள் அணிந்த மாலையிலும் வண்டுகள் மொய்யா. இறைவன் சித்தும் சடமுமாய எல்லாப் பொருள்களுக்கும் அருள்செய்பவனாகலின் அவனது கொன்றையிலும், திருமுடியிலுள்ள பூக்களிலும் வண்டுகள் மொய்ப்பவாயின. சடைக்கு அணிந்த - சடையிலணிந்த : வேற்றுமை மயக்கம்.

ஊன் - உடல்: ஆகுபெயர். நாடி நாடி வந்து - தேடித் தேடி வந்து. நான் வினைக்கீடாக எடுத்த உடல் பலவாதலின் அப்பலவுடல்கள்தோறும் தேடித்தேடி வந்து என்னும் நயம் உணர அடுக்கிவந்தது. உள் - மனம். "உடலிடங்கொண்டாய்" "என் உளம் புகுந்து மன்னிய மன்னே" "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்பவாகலின் இங்ஙனம் அருளியவாறும்.

என் உள்ளிருந்தும் நான் அறியாமையால் என ஏது வருவித்து, நான் நாடி ஆடிநின்று ஓலமிட என்க. அங்கிருப்புரோ? இங்கிருப்பரோ? மலைமீதிருப்பரோ? அலைமீதிருப் பரோ? என்று புறம்பெல்லாம் தேடியலைந்து காணாமையால் கையறவு மிக ஆடிநின்று ஓலமிட என்க.

பரமகருணாநிதியாகிய சிவன், உலகவர்களாகிய பாச பசு ஞானிகட்கும் எளியனாகத் தில்லைமன்றுள் நடம்பயிலுகின்றான்; அந்நிலையில் அவனைக் காண்கின்றேன் ஆதலால் அவனுக்குப் பூக்கொய்வோம் என்றாளாம். இதனை விளக்குவது ' நான் நாடி ஆடிநின்று ஓலமிட, உலகர் முன்னே நடம் பயிலும் வானூடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ ' என்பது.

சிலர் உலகர் முன்னே என்பதற்கு அவையத்தார் முன்னே ஓலமிட்டு வழக்குரைக்க என்றும் உரை காண்பர். காமம் கைம் மிகினும், கணவன் புறத்தொழுக்கம் உடையனாய்த் தன்னை அறவே மறப்பினும், தலைவன் தீமையைத் தோழி கூறவும் பொறாது மறுத்துரைத்துத் தலைவன்பெருமையைக் காக்கும் கற்புக்கடம்பூண்ட தமிழ்நாட்டு மகளிர், கணவன் மறந்தான் என்று மன்றேறி வழக்காடுதல் என்றும் மரபாகாமையின் இப் பொருள் மரபுவழு என்க.

சிவபெருமான் உள்புகுந்தான் என்பதால் மாயா விசயம் அகன்றமை உணர்த்தியவாறு காண்க.

280 எரிமூன்று தேவர்க் கிரங்கியருள் செய்தருளிச்
சிரமூன் றறத்தன் திருப்புருவ நெரித்தருளி
உருமூன்று மாகி யுணர்வரிதாம் ஒருவனுமே
புரமூன் றெரித்தவா பூவல்லி கொய்யாமோ. 6

இ - ள்: தேவர்களுக்காக இரங்கி மூன்று வகையான அக்கினிகளை அருள்செய்தும், மூவருடைய சிரங்கள் அற்று விழத் தன் புருவத்தைச் சிறிதுநெரித்து, மூவகை உருவுமாகி, யாராலும் அறிதற்கரிதாகிய பரசிவம் திரிபுரங்களை எரித்து அழித்தவாற்றைப் புகழ்ந்து பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், உருவும் அருவும் அருவுருவுமாகிப் பர சிவம் மறக்கருணை காட்டித் தேவர்களையும் அசுரர்களையும் ஆட்கொண்டமையை அறிவிக்கின்றது.

இரங்கத்தக்கவர்களுக்கு இரங்கியும், கொல்லத்தக்கவர் களைக் கொன்றும், ஒடுக்கத்தக்கவர்களை ஒடுக்கியும் உருவாய் அருவாய் அருவுருவாய் இருக்கும் சிவத்தைப் புகழ்ந்து பூக் கொய்வோம் என்கின்றாள்.

தேவர்க்கிரங்கி எரி மூன்று அருள்செய்தருளி என மாறிக் கூட்டுக. தேவர்கள் அக்கினியை வாயாகவுடையவர்களென்று வேதம் சொல்லும். அவர்கள் உண்ணும் அவியுணவு அக்கினி வழியாக அன்றி, அவர்களை நேராகச் சாரா ஆதலால், அவர் களுக்கு இரங்கி ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்ற மூன்று நெருப்புக்களை அவர்களுக்கு ஏவலராக அருள் செய்து என்றவாறு.

இங்ஙனமன்றி, தக்கயாகத்தில் கலந்துகொண்ட அக்கினி முதலான மூன்று தேவர்களுக்கு அருள்செய்து எனலும் ஆம். அக்கினியின் கையை வெட்டியும், பிரமனை விழச்செய்தும், திருமாலை மார்பிலே அடித்தும் ஒறுத்துப் பின்னர் இரங்கி இழந்த அவயவம் திரும்பப் பெறச்செய்து இன்பமும் அருளி னன் என்பது வரலாறு. மற்றும், எரிகின்ற மூன்று தேவர்கள் எனக்கொண்டு சூரியன் சந்திரன் அக்கினி என்ற மூவரையும் பல்லுடைத்தும், காலால் தேய்த்தும், கையை வெட்டியும் ஒறுத்து அருள்செய்து எனலும் ஆம்.

பழைய உரை, இதற்கு மூவகையான அக்கினி காரியம் கொள்ளும் தேவர்கள் என்று கூறும். வேறு சிலர், அந்தணர் வேள்வித்தீயாக மூன்றினையும் தேவர்பொருட்டு அவர்கள்மீது இரக்கங்கொண்டு முனிவர்களுக்கு அருளிச்செய்து என்பர்.

மூன்று சிரம் அற - தக்கன், எச்சன், பிரமன் ஆகிய மூவர் சிரங்களும் அறும்படியாக. புருவத்தைச் சிறிது நெரித்துப் பிரமன்சிரம் கொய்த வரலாறு முன் கூறப்பட்டது. எச்சன் தக்கன் தலையிழந்தது தக்கனது யாகத்தில் நிகழ்ந்த செய்தி. புருவம் நெரித்தல் சினத்தின் அறிகுறி. புருவம் நெரித்தவுடன் சிரம் அற்றது என்பது சிறிய முயற்சியால் பெரிய பயனை எளிதில் விளைவித்த இறைமையை உணர்த்தியவாறு.

தக்கன் எச்சன் வியாத்திரன் என்பார் தலையறச் சினந்தார் என்பாரும் உளர். அப்பர் பொதுத் திருத்தாண்டகத்தில், "எச்சன் நிணத் தலைகொண்டார் ... மெச்சன் வியாத்திரன் தலையும் வேறாகக் கொண்டார்" என வருவதும் 'வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை துஞ்சினவாபாடி' (303) எனவரும் திருவுந்தியாரும் வியாத்திரன் தலையை அறுத்து மானின்தலை

வைக்கப்பெற்ற வரலாற்றைக்குறிக்கும். வியாத்திரன் என்பான் வேள்வியில் ஆக்னேயத்ரன் என்னும் ஆட்டைக்கொல்வோன். இவை பிற்கூறிய கருத்தை அரண்செய்வன.

லயசிவம், போகசிவம், அதிகார சிவமாகி ஆன்மாக்களின் பரிபாக நிலைக்கேற்ப அருள்வழங்குவன் இறைவன். லயசிவமான நிலையில் அருவமாயும், போகசிவமாகிய சதாசிவமான நிலையில் அருவுருவமாயும், அதிகார சிவமாகிய மாகேச்சுரமான நிலையில் உருவமும் ஆவர். லயசிவமாய் ஞானமேயான நிலை நமக்குப் பயன்படுகின்றபோது குருவாக எழுந்தருளும். போகசிவம் லிங்கமாகக் காட்சியளிக்கும். அதிகாரசிவம் மூர்த்தி பேதங்களாகவும் . சங்கமங்களாகவும் காட்சி வழங்கும். இவ்வண்ணம் மூன்று வடிவத்தைத் தாங்கியும், உணர்த்திலன்றி உணராத உயிர்களுக்கு உணர்வரிதாய் இங்ஙனம் நிலையால் மூன்றுமினும் ஒருவனேயாய் விளங்குவது இறைவன் சிறப்பியல்பு. இதனை அறிவிக்கும் பகுதி 'உருமூன்றுமாகி உணர்வரிதாம் ஒருவனுமே' என்பது.

இதில் தேவர்களுக்கு அருள்செய்து எனப் போகமூர்த்தியாயும், புருவம் நெரித்தருளிப் புரம்மூன்றும் எரித்தவர் எனக் கோரமூர்த்தியாயும், உணர்வரிதாம் ஒருவனுமே என யோக மூர்த்தியாயும் இறைவன் விளங்குதலை அறிவித்தவாறு காண்க.

மாயாவிசேடத்தால் மயங்கிய தக்கன் திரிபுராதிகளைத் தண்டித்தமையைப் பாடுதலால் இப்பாடல் மாயாவிசய நீக்கம் ஆயினமை புலப்படுதல் காண்க.

281 வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 7

இ-ள்: எமக்குத் தம் திருவடியை வணங்கத் தலையும் உதவி, வாழ்த்த வாயும் உதவி, கலந்து களிக்கத் தன் சீரடியார் கூட்டத்தையும் உதவி, எம்பெருமான் உமாதேவியாரோடு அழகிய தில்லையம்பலமாகிற சிற்சபையில் திருநடனம் செய்கின்ற குணத்தை மிகப் பாடி நாம் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இப்பாடல் நமக்குத் தீச்சார்பை விலக்கிச் சிவச்சார்பையே கொண்டொழுகச்செய்த பேருதவியைப் பாடிப் பூக்கொய்வோம் என்று அறிவிக்கின்றது.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை" எனவரும் அப்பர்சுவாமிகள் வாக்கு ஈண்டு நினைக்கத்தக்கது.

நம்முடைய உறுப்புக்களுள் தலையே ஐந்தறிவும் பொருந்தியது. ஆதலின் உத்தம அங்கமாகிய தலையை இறைவன் நமக்குக் கொடுத்தது அவரை அறிந்து வணங்குதற்கேயாம் என்பதை 'வணங்கத் தலைவைத்து' என்ற பகுதியால் அறிவிக்கின்றார்.

வார் கழல் - நீண்ட கழல்: அது தானியாகுபெயராய்த் திருவடியை உணர்த்திற்று. வார்கழல் வாழ்த்த வாய் வைத்து எனக்கூட்டுக.

இறைவன் நமக்கு வாயை உதவியது சுவையோடு உண்டு ஊனுடலை வளர்த்து, காதலும் மோதலும் ஆகிய பேச்சுக்களைப் பேசிக் களிப்பதற்காக மட்டுமன்று; இறைவனுடைய பொருள்சேர் புகழைப் பலகாலும் போற்றுதற்காகவே என்பது இப்பகுதியால் உணரக்கிடக்கின்றது.

உயிர்கள் என்றும் சார்ந்ததன்வண்ணம் ஆதலின் உலகியலைப்பற்றிப் பாழாகாமல் என்றும் சிவச்சார்பிலே இருந்து சிவமாந்தன்மையை அடைவிக்கச் சீரடியார் கூட்டம் தந்தான் ஆதலின் 'இணங்கத்தன் சீரடியார்கூட்டமும் வைத்து' என்றார்.

அணிதில்லை அம்பலத்தே எம்பெருமான் அணங்கொடு ஆடுகின்ற குணங்கூரப் பாடி எனக் கொண்டுகூட்டுக. உலகிற்கே அணியாகிய தில்லைச்சிற்றம்பலத்தில் எம்பெருமானாகிய ஆனந்தக் கூத்தன் சிவகாமித் தாயாரோடு திருநடனம் செய்கின்ற தன்மையை மிகப் பாடி என்க.

அம்பலத்தே ஆடுகின்ற குணமாவது திருநடனத்தின் உண்மைக்கருத்து. அதனை,

" ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம் — கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார் "

சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் — பார்க்கிலிறைக்(கு)
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்.

"தோற்றந் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்ற உண்மைவிளக்கச் செய்யுள்களால் அறிக.

இவ்வண்ணம் நடனதத்துவத்தை அறிந்து பாடுதலாலும், அடியார்கூட்டமும் ஆலயவழிபாடும் புரிந்ததை அறிவிப்பதாலும் இது மாயாவிசய நீக்கம் ஆன்மை அறிக.

282 நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை யாண்டபிரான் குணம்பரவி
முறிசெய்து நம்மை முழுதுடற்றும் பழவினையைக்
கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 8

இ - ள்: நாம் உய்தற்குரிய நால்வகையான நெறிகளையும் நமக்கு வகுத்துக்கொடுத்து, தன் மெய்யடியாருடைய பொன்போன்ற திருவடிகளுக்கென்றே அடையாளம் இட்டு என்னை அடிமையாகக்கொண்டு ஆண்ட பெருமானுடைய குணங்களைப் புகழ்ந்து நம்மிடம் அடிமையோலை எழுதி வாங்கிக்கொண்டு நம்மை முழுவதும் வருத்துகின்ற பழவினைகளை இல்லையாம்படிச் செய்த முறைமையைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், மெய்யடியாரின் கூட்டத்தைச் சார்தலே பழவினையைப் பாற்றும் உபாயம் என இறைவன் அருளியதை அறிவிக்கின்றது.

ஊதியத்திற்கு உரிய பொருளையும் கொடுத்து வேலையும் வாங்கும் தலைவன்போல இறைவன் நாம் கடைத்தேறுதற்குரிய நால்வகை உபாயங்களையும் உதவித் தம் அடியார்களின் திருவடிக்கென்றே நம்மை ஆட்கொண்டான்; அவன் குணங்களைப் பரவியும் நம்முடைய பழவினைகள் பாறும் வண்ணம் செய்ததைப் பாடியும் பூக்கொய்வோம் என்கின்றாள்.

நெறி - இறைவனை அடைவதற்கு உரிய வழிகள். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. அவற்றை இறைவன் நமக்காகவே அருளிச்செய்தான் என்பதை 'நெறி செய்தருளி' என்பதால் உணர்த்துகின்றார். சரியையாதி நான்கும் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நெறி என்ற பெயராலே அழைக்கப்படுதல் காண்க.

அடிக்கே கொண்டு என்னை ஆண்ட பிரான். குறிசெய்து ஆண்ட பிரான் என இயைக்க. அடியார்க்கு அடியனாக அடையாளமிட்டு என்னை ஆட்கொள்ளவே ஆண்டான் என்பார் 'என்னை அடியார் பொன்னடிக்கே கொண்டு குறிசெய்து ஆண்ட பிரான்' என்றார்.

குறி செய்து - காட்டில் மாடுமேய விடுவார் இது இன்னாருடையது என்பதை அறியச் சூடு இட்டு விடுதல்போலவும், சேமநிதியை இன்ன ஆண்டிற்கு எனக்குறியிட்டு அரசாங்கப் பொற்பண்டாரங்களில் அடைக்கலம் வைப்பது போலவும் என்னை இன்ன அடியாருடைய திருவடிக்கு அடிமை என்று அடையாளம்செய்து. கொண்டு - அடிமையாகக்கொண்டு.

பொன் எதைச்சாரினும் தன் தன்மை மாறாதவாறுபோல மெய்யடியார்கள் திருவடியும் மாற்றம் இல்லாதது; பொன் போல் போற்றத்தக்கது; ஒளி குன்றாதது; தன்னருளைச் சாரவைத்துத் தலைவன்பால் சேரவைப்பது என்ற குறிக்கோள் பலவும் தோன்ற 'அடியார் பொன்னடிக்கே என்னைக்கொண்டு குறிசெய்து ஆண்டபிரான்' என்று குறிக்கின்றார். ஈண்டும் குணம் என்பது பொதுவும் சிறப்புமாகிய இறையியல்புகளை உணர்த்திற்று.

நாம் பற்பல பிறவிகளில் ஈட்டிய பழவினைகள் ஆகாமிய சஞ்சிதங்களாக உருவெடுத்து நம்மை எதிர்நோக்கிக் குவிந்து கிடக்கின்றன. அவைகள் நம்மிடம் அடிமைச் சீட்டு எழுதி வாங்கிக்கொண்டு மிகமிக வருத்துகின்றன. அவை நம்மைப் படுத்துங்கொடுமையைக் கண்டு இறைவன் ஒழித்துக்கட்டிவிட்டான். அந்த அருமையைப் பூக்கொய்யும்போது பாடுவோம் என்கின்றாள்.

முறிசெய்து - அடிமைச்சீட்டு எழுதிவாங்கி. முழுதுடற்றும் - முழுவதும் வருத்தும். கிறிசெய்தவா - பொய்யாக்கியவிதத்தை.

பழவினைகள் நம்மை வந்து வருத்துவது மாயாவிசயம். இறைவன் அவற்றைப் பொய்யாக்குதலைப் பாடுவது அதனை நீக்குதல். ஆகவே இப்பாடல் பதிகக்கருத்து முழுவதையும் தாங்கிநிற்றல் அறிக.

283 பண்ணாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்னாகந் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கன்னா ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 9

இ - ள் : தன்னைப் பலநாட்கள் பரவவும் தனக்குப் பணி செய்யவுமாகத் திருவடித் தாமரைகளை எனது நெஞ்சில் பொருந்தவைத்த பெரியோனாகிய சிவபெருமான் அழகிய சோதியாய், கல்லில் நாருரித்தாற்போல என்னையும் ஆண்டு கொண்டான்; அவனுடைய இரண்டு திருவடிகளும் பொன் போல் போற்றத் தக்கனவாதலைப் புகழ்ந்து பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், தன்னை ஆட்கொண்ட இறைவன் திரு வடிகள் இன்று பொன்போல் போற்றத்தக்கன என அதன் அருமையைப் புலப்படுத்துகின்றது. பழைய உரை, சடசித்து இரண்டினுந்தோன்றும் விளக்கம் திருவருள் இன்ப விளக்கமே அல்லாமல் வேறில்லை என்ற தியான அனுபூதியை அறிவிப்ப தாகச் சொல்லுகிறது.

இறைவன் தன்னைப் பரவவும் பணிசெய்யவுமே என் மனத் தில் திருவடியை வைத்தான். ஞானவொளியாய் விளங்கினான். என்னை அவன் ஆண்டது கல்லிலே நார் உரித்ததுபோன்று மிக அருமையானதோர் செயல். அவன் திருவடித்தாமரைகள் பொன்போற் போற்றத்தக்கவை. தோழியர்களே! அவற்றின் அருமையைப் பாடி வழிபாட்டிற்குப் பூக்கொய்வோம் என்று கூறுகின்றாள்.

இடைவிடாது வணங்குதலும் சிவப்பணிகளைச் செய்தலும், மனம் பொறி புலன்களிற் சென்று இருவினைகளைச் செய்து மீளவும் பிறவாதவாறு உய்யும் உபாயமாதலின் அதனை அடி யேன் அறிந்து உய்யச்செய்தான் என்பார் 'பன்னாட் பரவிப் பணிசெய்ய' என்றார்.

ஆகம் - நெஞ்சம். என் நெஞ்சு கல்போல் வலியதாயினும் மலர்போல மெல்லிய பாதங்களை அதில் பொருந்தவைத்து அதிலுமோர் இன்பத்தை விளைவித்தான். அது அவனலன்றிப் பிறரால் ஆகாத ஒரு அருமையான செயல் என்று இன்ப உணர்ச்சியைக் கூறுவார் 'பாதமலர் என் ஆகம் துன்னவைத்த பெரியோன்' என்றார்.

அடியேன் அவன் ஆட்கொண்ட அருமையை எண்ணாது எளிமை யென்று எண்ணினேனாக, என் மனத்துள் ஞான சோதியாய்க் காட்சி தந்தான்; அதனையும் அனுபவிக்க இயலா மற்போகவே புறத்தே குளத்துட் சோதியாயெழுந்து என்னை யொழிய ஏனையோரை ஆட்கொண்டு தன் அருமையைப் புலப் படுத்தினான்; அச்செயல் கல்லில் நார் உரித்தாற்போல்வதோர்

அருமையானது; ஆதலால் அவன் திருவடிகள் பொன்போல் அரியவை என்று அறிகின்றேன் என்ற வரலாற்றுத்தொடர் புடைய நயம் பின்னிரண்டடிகளிலும் தோன்றுதல் காண்க.

திருவடித் தாமரைகளைப் போற்றிப் பரவிப் பணிசெய்து மாயையின் வெற்றி தன்னிடத்துச் செல்லாமை அறிவிக்கின்ற மையின் மாயா விசய நீக்கமாதல் அறிக.

*284 பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்*
*சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்*
*காரார் கடல்நஞ்சை யுண்டுகந்த காபாலி*
*போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 10*

இ - ள் : பேராசையால் விளையும் இவ்வுடலானது நீங்கத் திருப்பெருந்துறையிலுள்ள சிவபெருமான் சிறப்பு மிக்க திருவடிகளை என் தலைமேல் சூட்டிய பிரானுவன்; கருமை நிறம் பொருந்திய கடலிலிருந்து எழுந்த நஞ்சை உண்டு மகிழ்ந்த காபாலியும் ஆவன்; அவனது வீரம் விளங்கும் முப்புரங்களையும் பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவனது அறககருணைகள் மறக் கருணைகளை விளக்கித் திரிபுரம் எரித்த வீரத்தைப் போற்றிப் பூக்கொய்வோம் என்கின்றது.

பெருந்துறையான் பிண்டமறத் திருவடி தலைமேல் வைத்த பிரானுவான் என முடிக்க. "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து" என்ற திருவள்ளுவர் கருத்து, 'பேராசையாம் இந்தப் பிண்டம்' என்பதால் குறிக்கப்பெறுகிறது. பிண்டம் - உடல். இவ்வுடல் வினைகட்கு ஏதுவாக நம்மை வந்து பொருந்துவன. வினைகள் அவாவால் விளைவன. ஆதலால், காரண ஒற்றுமை நயம்பற்றிப் 'பேராசையாம் இந்தப் பிண்டம்' என உடலையே ஆசையாக உரைத்தார். இறைவன் திருவடிசூட்டியது திருப்பெருந்துறையிலாதலின், அவ்வனுபவம் தம் சிந்தையைவிட்டு நீங்காமையின் 'பெருந்துறையான், திருவடி என் தலைமேல் வைத்த பிரான்' எனப் பாராட்டுகிறார்.

கார் ஆர் - கருமை நிறம் பொருந்திய. பாற்கடலிலிருந்து எழுந்த கார் ஆர் நஞ்சு எனக் கூட்டுக. பிற தேவர்கள் நஞ்சு எழுந்தவுடன் மேனி கருகியும் அறிவிழந்தும் வருந்தினராக, அதனை உண்டு உலகத்தைக் காத்தோம் என்று இறைவன்

மகிழ்ந்தாராதலின் 'நஞ்சை உண்டு உகந்த காபாலி' என்றார். காபாலி - கையில் பிரமகபாலத்தை ஏந்தியவன்.

இறைவன் திரிபுரமெரித்த போர்த்திறமையைப் பாடிப் பூவல்லி கொய்வோம் எனச்சொல்ல வந்தவள், திரிபுரத்தைப் பாடுவோம் என்கின்றாள். இறைவனுடைய போர்த்திறம் விளங்கத் திரிபுரந்தானே காரணமாயிற்று என்ற நன்றியறிதல் விளங்குகிறது.

இது, ஆசைப்பிண்டமறத் திருவடி சூட்டியதைச் சொல்லு வதால் மாயாவிசய நீக்கமாயிற்று.

285 பாலும் அமுதமும் தேனுடனும் பராபரமாய்க்
கோலங் குளிர்ந்துள்ளங் கொண்டபிரான் குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியா மந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 11

இ - ள்: பாலும் அமுதமும் தேனோடு கலந்து விளைகின்ற மேலானவற்றிற்கெல்லாம் மிக மேலான இன்பமாய்த் தன்னுடைய வடிவைக் குளிரவைத்து என் உள்ளத்தைத் தமக்கு இடமாகக்கொண்ட இறைவனது ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடிகளே இவ்வுலகத்து வணங்குவார் எவர்க்கும் நன்னெறியாவன; அந்நெறியின் புகழையே பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், பேரின்பமேயான திருமேனிகொண்டு ஆட்கொண்ட பெருமானின் அடித்தாமரைகளைப் புகழ்தலை அறிவிக்கின்றது.

போலும்: அசை. வணங்குவார்க்குத் திருவடியே நல்ல நெறி; அந்நெறியின் புகழைப் பாடுதலே பூசைக்குப் பூவெடுப்பார் செய்யும் கடமையாம் என்பது கருத்து.

இறைவன் நுகர்ச்சிக்கண் தேனாய் இன்னமுதமாய்த் தீம் பாலுமாய் இனித்தும், எல்லாவற்றையும் கடந்த பரம்பொருளாய் அறிய உதவியும், வெப்பமாகிய என் மனத்தின் தன்மையை மாற்றக் கோலத்தால் குளிர்ந்தும் விளங்குகின்றான் என்று தம் அனுபவம் அறிவிக்கின்றார்.

குரை கழல்கள் என்றது சிவானுபவம் உடையார்க்கு எப்போதும் சிந்தையில் சிலம்பொலி அனுபவம் நிகழவேண்டுதலின் என்க. சேரமான்பெருமானுக்கு இவ்வனுபவம் நிகழ்ந்தமையை வரலாற்றுநூல்களிலிருந்து தெளிக.

உலகத்தில் மக்கள் தத்தம் பரிபாகத்திற்கேற்ப, பரமனைப் பரவும் நெறியும் பரவா நெறியுமென இருவகை நெறிகளைப் பின்பற்றுகின்றனர். அவற்றுள் பரவும்நெறியே நன்னெறியா மென அறிவித்தது.

திருவடியை வணங்குதலே நன்னெறி எனத் தேறியமை யின் மாயையின் வெற்றியை விளக்கியதாயிற்று. அதனால் இது மாயாவிசய நீக்கமாதல் காண்க.

286 வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவனாய் நின்று கூடலிலாக் குணக்குறியோன்
ஆன நெடுங்கடல் ஆலால மமுதுசெய்யப்
போனக மானவா பூவல்லி கொய்யாமோ. 12

இ - ள் : இந்திரனும் திருமாலும் பிரமனும் மற்றுமுள்ள தேவர்களும் ஆகிய அனைவர்க்கும் அரசனாய்நின்றும் குணமும் குறியும் கூடாத பெரியோனாகிய சிவபெருமான் பெரிய கடலின்கண் விளைந்த ஆலகாலத்தைத் திருவமுதுசெய்ய அது உணவானதன்மையை வியந்து பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் தேவர்கோனாய் அவர்களைக் காக்க ஆலாலம் உண்ட அருமையை விளக்குகின்றது.

குடிகள், தம்மை ஆளும் அரசனுடைய குணம் குறிகளை அறிந்து அதற்கேற்ப ஒழுகுவர். தேவர்கள் அனைவர்க்கும் அரசனாகிய இறைவன் குணங்குறி இல்லானாகி அவர்கள் அறிவால் அளவிட்டு அறியப்படானாக விளங்குகின்றான் என்பார் 'கோனவனாய் நின்றும் கூடலிலாக் குணக்குறியோன்' என்றார். நின்றும் என உம்மை வருவித்துரைக்க.

நெடுங்கடலான ஆலாலம் எனக்கூட்டுக. உணவு உடலை இன்புறுத்துவதுபோல, சிவபெருமான் அமுதுசெய்த நஞ்சு அவனைக் கொல்லாது ஆக்கம் அளித்து மேலும் அழகுமாயிற்று என்பது 'அமுது செய்யப் போனகம் ஆனவா' என்பதாற் குறிப்பிடப்படுகின்றது.

நஞ்சு நாதனுக்கு உணவானவாற்றைப் பாடுவதால், மாயையே உன் விசயம் எம்மிடம் பலியாது எனக் குறிப்பித் தலின் இது பதிகக்கருத்தோடு இயைபுடைத்தாயிற்று.

287 அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாடோறும்
நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்றாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 13

இ - ள் : யோகியாயிருந்த அன்று கல்லாலநீழலில் அறிதற்கரிய மந்திரப் பொருள்களைத் தானே முனிவர்களுக்கு அருளிச்செய்தவரும், வானவர்களும் முனிவர்களும் தாம் நன்றாக நாடோறும் சந்நிதியில் நின்று மிகத் துதிக்கும் நிறைந்த வீரக்கழலை அணிந்தவருமான பெருமான் அணிந்த கொன்றைமலரின் பொன்னிறமான மகரந்தத்தைப் பாடி நாம் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் அடையாளப்பூவின் பொன் தாதினைப் புகழ்ந்து பூவல்லி கொய்வோம் என்கின்றது.

அருளி என்பது முன்னர்வந்த 'மதிமயங்கி' (216) என்பது போலப் பெயராய் நின்றது; அருளியவன் என்பது பொருள். அருளியும் நிறைகழலோனும் ஆகிய சிவன் புனை கொன்றை எனக்கூட்டுக.

சிவபெருமானது அடையாள மலரைப் பாடிப் பூவல்லி கொய்வாம் என்பாள் அதன் பொன்தாது பாடிக் கொய்வோம் என்கின்றாள்; அவள் அறிவு பூவாகிய தூலத்தைவிட்டு மகரந்த மாகிய சூக்குமத்தில் ஈடுபட்டதால் என்க.

வானவர் நன்றாக ஏத்தியதன் நோக்கம் தமக்கு என்றும் அமுதமும் இந்திரபோகமுமே இடையூறின்றிப் பெருகவும், நித்தலும் எம்பிரான்றன் கோயில்புக்கு என்றதுபோல முனிவர் நாடோறும் ஏத்திய நோக்கம் வாசனைமலம் தாக்காதவாறும் எனவும் கொள்க.

சிவன்சேவடிகள் எங்குமாய் நிற்பன; அவற்றைச் சூழ்ந்து கிடக்கும் கழல் எங்கும் நிறைந்த பரநாத ஒலியினையுடையது ஆதலின் 'நிறை கழல்' என்றார். திருவடிக்கண் நிறைந்து, நோக்குவார் கண்ணிறைந்து விளங்கும் கழல் எனலுமாம்.

மாமுனிவர் ஏத்தும்கழலோன் என்றறிவித்து, கொன்றைத் தாது பாடிப் பூவல்லி கொய்வோம் என்றது முனிவர்போலத் தாமும் மாயையின் வெற்றியை நீக்கி ஞானவெற்றி நாடுதலால் பதிகக்கருத்துத் தோன்றுதல் காண்க.

288 *படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்*
*கிடமாகக் கொண்டிருந் தேகம்ப மேயபிரான்*
*தடமார் மதிற்றில்லை யம்பலமே தானிடமா*
*நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ.* 14

இ - ள்: அடியேன் மனத்தில் தன் திருவடித் தாமரை மலர்களிரண்டையும் சித்திரம்போலப் பதியவைத்து அந்த மனத்தையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளியிருந்த திரு ஏகம்பநாதன், விசாலமான மதில்கள் சூழ்ந்த தில்லைக்கண் விளங்கும் சிற்றம்பலமே இடமாக நடனம்செய்தவாற்றைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், என் உள்ளத்திலெழுந்தருளிய இறைவன் பொன்னம்பலத்தும் நடமாடுவதைப் புகழ்கிறது.

போது என்றது இணைப்போது என்றது பூவிரட்டை போலப் பிரியாத்தன்மையைக் காட்டிநின்றது. மனமாகிற படத்தில் திருவடியைச் சித்திரம்போல எழுதி என்பார் 'இணைப் போது படமாக அளித்து' என்றார். அவை: பகுதிப்பொருள் விகுதி. இங்கு - கன்மபூமியாகிய இவ்வுலகத்து; என் மனத்து என்றுமாம். மேய - விரும்பி எழுந்தருளிய. தடம் - விசாலம். சிற்றம்பலமே ஆனந்தக்கூத்திற்கு அமைந்த இடமென்று திருவுள்ளங்கொண்டு அங்கே நடம் செய்ததைப் புகழ்ந்து பூக் கொய்வோம் என்றாள்.

மனத்தில் திருவடித் தாமரையைப் பதியவைத்தமை உணர்த்தியதால் இது பதிகக் கருத்தோடு இயைபுடைத்தாயிற்று.

289 *அங்கி யருக்கன் இராவணனந் தகன்கூற்றன்*
*செங்க ணரியயன் இந்திரனும் சந்திரனும்*
*பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்*
*பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.* 15

இ - ள்: அக்கினியும், சூரியனும், இராவணனும், அந்தகாசுரனும், எமனும், சிவந்த கண்களையுடைய திருமாலும், பிரமனும், இந்திரனும், சந்திரனும், வெட்கமில்லாத தக்கனும், எச்சனும் தம் தன்மைகெடச் சினந்த பெருமான் கீர்த்தியைப்பாடி நாம் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவனது மறக்கருணையைப் புகழ்கின்றது.

இராவணனும் அந்தகனும் கூற்றுவனும் ஒழிய ஏனையோர் தக்க யாகத்தில் தண்டிக்கப்பெற்றவர்.

இராவணன் கைலையைப் பெயர்க்க, இறைவன் தனது வலதுகாற் பெருவிரலின் நுனியைச் சிறிது மலையில் ஊன்றினர். இராவணன் மலையின்கீழ் அழுந்தி வருந்திச் சாமகீதம் பாடி உய்ந்தான். அதனல் அவன் ஒருதலை இழந்தான்.

அந்தகன் என்பான் திருக்கோவலூரில் இறைவனை எதிர்த்துப் போராடிச் சூலத்தால் கொல்லப்பட்டவன். அந்தகன் எமன் எனலும் ஆம். கூற்றன் அவன் தூதன் என்பாருமுளர். "தருமராசற்காய்வந்த கூற்றினைக் குமைப்பர்போலும் குறுக்கை வீரட்டனரே" என்னும் தேவாரமும் இருவரும் அழிந்தமையை எடுத்துக் காட்டும்.

பங்கமில் தக்கன், பங்கமில் எச்சன் எனத் தனித்தனிக் கூட்டுக. தக்கன் தன் தலை இழந்து ஆட்டுத்தலை பெற்றும், எச்சன் மான்தலை பெற்றும் வெட்கமின்றித் தருக்கித் திரியும் அறியாமையை உடையர் என்பார் இவ்விருவர்க்கும் 'பங்கமில்' என அடைமொழி கொடுத்தார்.

பரிசு அழிதலாவது, உறுபபுக்கள் அழிந்தும் மாற்றுத்தலை பெற்று உயிரழிந்தும் உதையுண்டும் தன் தன்மை கெடுதல். பொங்கிய சீர் - சினத்தால் விளைந்த புகழ்.

இறைவன் மாயையால் வீறழிந்த இந்தப் பதினொருவரைச் சினந்தமையால் மாயையின் விசயத்தை வென்று நீக்கியவாறு அறிக.

290 திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 16

இ - ள்: வலியச் சண்டையிடுகின்ற இடபவாகனத்தை உடையவனும் சிவபுரமாகிய திருப்பெருந்துறையிலுள்ளார்களுக்குப் போரில் சிங்கம் போன்றவனுமாகிய இறைவன் மண்பாலுள்ள மதுரையம்பதியில் வந்து உதிர்ந்த பிட்டை உணவாகக்கொண்டு பிரம்பால் பாண்டிய மன்னன் தன்னை வேலைகொண்ட புண்ணினைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், பெருந்தகையாளன் எளிமையால் அடியார்களை ஆட்கொண்ட பெருமையை உணர்த்துகின்றது

இறைவன் ஏறும் இடபம் அறவடிவினது ஆதலின் எப்போதும் மறத்தோடு பொரும் இயல்பினது என்பார் 'திண் போர் விடை' என்றார்.

போர் ஏறு - பொருகின்ற ஆண் சிங்கம். சிவபுரத்தாருள ஆண் சிங்கம் போன்றவன் என்று இறைவன் பேராற்றலை விளக்கியவாறு.

பரநாதவெளியில் ஓசை ஒலியெலாம் ஆகி உலாவிவரும் இறைவன் மண்பாலுள்ள மதுரையில் உதிர்ந்த பிட்டை உணவாக ஏற்றுண்டான்; அம்மட்டோ! பாண்டியன் பிரம்பாலடித்துப் புண்படுத்திப் பணிகொண்டான்; அத்தகைய இறைவன் புண்பட்ட தன்மையைப்பாடிப் பூவல்லி கொய்வோம் என்பது கருத்து.

புண் பாடல் - புண்பட்ட தன்மை. புண்ணினைப்பற்றிய பாடல் எனினும் ஆம். பாண்டியன் தன்னைத் தண்டாலே பணிகொண்ட புண்பாடல் எனக்கூட்டிப் பாண்டியமன்னனை அவன் கையிலுள்ள பிரம்பால் ஏவல்கொண்ட புண்பாடலை யாம் பாடி எனலும் ஆம்.

பெருமான் எளியனாய் வந்து எல்லாரையும் ஆட்கொண்டதை உணர்த்துதலின் இது மாயாவிசய நீக்கமாயிற்று.

291 முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்
பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே
என்னாகம் முன்புகுந் தாண்டுகொண்டா னிலங்கணியாம்
பன்னாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 17

இ - ள்: எல்லாத் தேவர்களிலும் முதன்மையான திருமாலும் பிரமனும் அரக்கர்களும் தேவரீரின் பொன்போன்ற திருவடிகளைத் தாம் அறியமாட்டார்கள்; அங்ஙனமிருந்தும் அவர்கள் திருவடியைப் போற்றுவது தகுதியாமோ? என் நெஞ்சத்தை எல்லார்க்கும் முன்பாக ஆட்கொண்டான்; அவனுடைய விளங்குகின்ற அணியாகிய பல நாகங்களைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவன் அணியை வியந்து கூறுகிறது

முன்னுய மால் அயன் - எல்லாத் தேவர்களுக்கும் முன்னே படைக்கப்பட்டவனுய திருமாலும் அயனும்.

போற்றுதல் என்பது, பொருளின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை ஓரளவேனும் உணர்ந்தவர்கள் செய்யவேண்டிய வேலை. இறைவனது பொன்னை ஒத்த திருவடிகளை இவர்கள் ஒருசிறிதும் அறியாதவர்கள். அங்ஙனமிருந்தும் போற்றமுடியுமோ என்பார் எதிர்மறை ஏகாரம் புணர்த்துப் 'போற்றுவதே' என்றூர்.

ஆகம் - மனம். என்னுடைய மனத்தில் காமம் முதலான பாம்புகள் புகுவதற்கு முன்பு புகுந்து ஆண்டுகொண்டவன் என்பார் 'என் ஆகம் உள்புகுந்து ஆண்டுகொண்டான்' என்றூர்.

இலங்கு அணியாம் பல்நாகம் எனச் சொற்பிரித்து விளங்குகின்ற ஆபரணங்களாகிய பல நாகங்கள் எனப் பொருள் கொள்க.

தலைவன் தயவை நாடுவார் அவன்வீட்டில் காவலர்களையும் வீட்டையும் மாட்டையும் புகழ்வதுபோல, இறைவனது அணியாகிய நாகத்தையும் பாடி அருளை வேண்டுகின்ருள்.

நாகத்தைப் பாடுவதன் நோக்கம், மூர்க்கப்பாம்பே வலி ஒடுங்கி அவன் மேனிக்கு அழகாய் அமைந்துள்ளன ஆதலால் 'மாயையே! உன்னுடைய வெற்றி என்னிடம் சாயாது; விலகு' என்பதைக் குறிப்பித்தலின் இப்பாடல் மாயாவிசய நீக்கமாதல் காண்க.

*292 சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே*
*ஆராத வாசையதா யடியே னகமகிழத்*
*தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்*
*பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 18*

இ - ள் : அடியேன் புகழ் நிறைந்த திருவடிக்கண்ணதாகிய திண்ணிய சிலம்புகள் சிலம்புகின்ற ஒலிக்கு, அமையாத ஆசையாய் அடியேன் மனம் மகிழும்படித் திருநடனம் செய்கின்ற பேரானந்தத்தைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்றவாறு.

இத்திருப்பாட்டு இறைவனது பேரானந்தம் பாடுதலை உணர்த்துகிறது.

சிலம்பு ஒலிக்கு - சிலம்புகின்ற ஒலிக்கு: வினைத்தொகை. அடியேற்குச் சிலம்பொலிகேட்கப் பெருவிருப்பம். அதனைத் திருவுள்ளங்கொண்ட இறைவன் என் மனமகிழத் திருநடனம் செய்து சிலம்பொலியைக் கேட்பித்தான். அதனால் யாரும் கண்டறியாத பேரானந்தம் பிறந்தது; அதனைப் பாடிப் பூவல்லி கொய்வோம் என்கின்றாள் என்றவாறு.

இதில் 'பேரானந்தம் பாடி' என்ற குறிப் மாயையின் வெற்றி நீக்கத்தை விளக்குவது.

293 *அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்*
*பித்த வடிவுகொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்*
*முத்தி முழுமுதலுத் தரகோச மங்கைவள்ளல்*
*புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ.* 19

இ - ள்: யானையை உரித்து அதன்தோலைப் போர்வையாகப் போர்த்தருளும் எம்பெருமான் பித்தரைப்போல வடிவம்கொண்டு இவ்வுலகத்திலேயே சிறு குழந்தையும் ஆவன்; பேரின்பமயமான வீட்டுலகிற்குத் தலைவன்; உத்தரகோசமங்கையில் எழுந்தருளியுள்ள வள்ளல்; அத்தகைய பெருமான் என் புத்தியை இடமாகக்கொண்டு புகுந்தவாற்றைக்கூறிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல், பித்தனைப் பெரியனைப் உள்ள உத்தர கோசமங்கை வள்ளல் புத்தியில் புகுந்தவாற்றைப் புகலுவோம் என்கின்றது.

அரசன் ஊர்ப்புறம்பே ஒதுக்கிலுள்ள ஓட்டைக் குடிலை விரும்பினாற்போல, பெரிய பெருமான் என் புத்தியை மதித்து அதனுள் புகுந்தார்; அஃது ஓர் இணையற்ற பெருங்கருணை என்ற நயந்தோன்றப் 'புத்தி புகுந்தவா' என்றாள்.

சமணர் முதலிய புறச்சமயத்தார்களும் முத்திப்பேருலகை இறைவனுக்கே உடைமையாக உரைப்பர் ஆதலால் 'முத்தி முழு முதல்' என்றார்.

இது, யானையைக் கீண்டு அதன் பச்சைத்தோலைப்போர்த்த திருப்பெருந்துறைநாதன் புத்தியில் புகுந்தமையை அறிவித்தலின் மாயையின்விசயம் தோற்றது; அடியார்கள் வென்றார்கள் என்பதை அறிவித்தலின் மாயாவிசயமாதல் தெளிக.

*மாவார ஏறி மதுரை நகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. 20

திருச்சிற்றம்பலம்

இ - ள்: திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமான், குதிரைமேல் பொருந்த ஏறியிருந்து, மதுரைமாநகரில் புகுந்தருளி, தெய்வத்தன்மை நிறைந்த திருவுருவம் விளங்க, அரசனாகிவந்து, அடியேமைக் குற்றேவல்கொண்டு அருள்செய்தவன் ஆதலால் அவனுடைய செந்தாமரை மலர் போலும் திருவடிகளை நாம் பரவிப் பூவல்லி கொய்வோமாக என்றவாறு.

இத்திருப்பாடல் திருப்பெருந்துறைப் பெருமானது பூவார் கழல் பரவுதலை அறிவிக்கின்றது.

பெருந்துறையான் ஏறி, புகுந்தருளி, ஆகி வந்து, கொண்டருளும் ஆதலால் அவனுடைய பூவார்கழல் பரவிக் கொய்வோமெனச் சில சொற்கள் வருவித்துக்கூட்டிப் பொருள்கொள்க.

ஆர - பொருந்த. அருளும் என்பது செய்யும் என்ற வாய்பாட்டு வினைமுற்று. பெருந்துறையான் கொண்டருளும் என இயையும்.

இத்திருப்பாடல், அடிகளாரை ஆட்கொண்ட அருமையை விளக்குதல் காண்க.

பதித்தொண்டிற்கு எம்மைத் திருவடியாளாக்கியது எனக் கூறியதால் மாயாவிசயம் நீங்கியதாதல் காண்க.

* இப்பாடல் சில பிரதிகளில் மட்டும் காணப்படினும், திருவாசகத் திருப்பதிகத் தொகை குறிக்கும் செய்யுள் பூவல்லிப்பாடல் இருபதென்றே குறிப்பதால் இங்குத்தரப்பட்டுள்ளது

# 14. திருவுந்தியார்

[ஞானவெற்றி]

திருவாதவூரடிகள் தில்லைப்பதியில் எழுந்தருளியிருந்த காலத்து மகளிர் உந்தி பறந்து விளையாடுதலைக் கண்ட போது அவர்கள் கூற்றாகக் கூறியது.

இப்பகுதி இருபது பாடல்களும் உந்தீபற எனமுடிவதால் திருவுந்தியார் எனப்பெயர்பெற்றது. உந்திபறத்தல் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. கைகளிரண்டனையும் மேலேதூக்கி இருமருங்கும் நீட்டி வானிற்பறப்பதுபோல இருகால்களைச் சேர்த்துப் பெருவிரல் நுனியில் நின்றுகொண்டு பாடி ஆடும் ஓர் ஆட்டவகை.

பெரியாழ்வார் திருமொழியில் ( 3 - 9 ) உந்திபறத்தலாவது தனது தலைவன் வெற்றியை வாயாரப் புகழ்ந்துகொண்டு உயர எழுந்து குதித்தல் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இது இரு மாதர்கள் விளையாடும்போது ஒருத்தி இறைவன் புகழைப் பாட, மற்றொருத்தி அப்புகழான் விளைத்த பயனைக் கூறுவதாகச் செல்லுகின்றது.

உந்தியென்பது பல்வரிக்கூத்துக்களுள் ஒன்றாக அரங்கேற்று காதையுரையுள் அடியார்க்குநல்லார் காட்டிய "சிந்துப்பிழுக்கை" என்னும் மேற்கோட்சூத்திரத்தானும், மகளிராடுங்கூத்து என்பது பிங்கலந்தையானும், "நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறந்த ஒள்ளிழையார் சொல்" என்னும் திருப்பாசுரத்தானும் மகளிர் ஆடும் கூத்துவகையுள் ஒன்றாகவும், அக்கூத்தும் விளையாட்டாக மேற்கொள்ளப்படுவதொன்று என்றும் உணரலாம்.

உந்துதல் - தள்ளுதல். இருகால்களையும் பூமியில் உதைத்துக் கொண்டு உந்தியெழுந்து ஆடும் கூத்து என்பர் சிலர்.

இதன்கருத்து ஞானவெற்றி; என்பது அருட்சத்தியின் சாமர்த்தியம் என்பது பழைய குறிப்பு. மும்மலகாரியமாகிய முப்புரங்களும் இறைவனது அருட்சத்தியினால் அழிந்தமையும், தக்கன் யாகம் கெட்டமையும், அதனோடு தொடர்புடைய சூரியன் இந்திரன் முதலான தேவர்களின் அகங்காரம் ஒடுங்கியமையும் அறிவிக்கப் பெறுதலின் ஞானவெற்றியாயிற்று என்னலாம்.

"அரன்சீர், பாவமுறு தீமையறப் பாடல் திருவுந்தியதே" என்பது பழைய புராணத்திலுள்ள திருவாசகச்சிறப்பு.

" ஊனம் ஒழிக்கும் உயர்திரு வுந்தியார்
ஞான வெற்றி யெனநவின் றனரே "

என்பது பழைய உரையிற் காணப்பெறும் அகத்தியச்சூத்திரம். இதுவும் முற்கருத்தையே விளக்குதல் காண்க.

பரமசிவன் சுத்த பஞ்ச கிருத்தியப்பெருக்கால் வெற்றிபெற்ற சிவானந்த யோக விளைவைத் திருவருள் மொழியாகத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பெருங்கருணையை இன்பாதீதமாகக்கொண்டு விளையாடிய விளையாட்டு என்று பழைய உரை கூறுவதும் விளையாட்டு என்பதை வலியுறுத்தல் காண்க.

இதில் முதல் நான்கு பாடல்களால் திரிபுரமெரித்த வரலாறும், ஐந்துமுதல் பன்னிரண்டு பாடல்களால் தக்கன் வேள்வி தகர்த்த செய்தியும், பதினெட்டாவது திருப்பாட்டால் பிரமன்சிரம் கொய்ததும், அடுத்த திருப்பாட்டால் இராவணனை அடக்கியாண்டதும், இருபதாவது திருப்பாட்டால் வாலகில்யர் முதலிய முனிவர்களை இறைவன் பாதுகாத்து வருவதுமாகிய செயல்கள் தெரிவிக்கப்பெறுகின்றன.

## கலித்தாழிசை

திருச்சிற்றம்பலம்

294 வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற. 1

இ - ள்: மேருவாகிய வில் வளைந்தது; போர் மூண்டது; திரிபுரங்களும் வளைந்தன என்று பாடி, தோழி உந்திபறப்பாயாக என்றுகூற, (மற்றவள்) முப்புரங்களும் ஒருசேர வெந்தமையைப் பாடி உந்தீபற என்றுள் என்றவாறு.

இத்திருப்பாடல் திரிபுரம் எரித்தமை தெரிவிக்கிறது.

இங்ஙனமே இப்பகுதியிலுள்ள எல்லாப் பாடல்களுக்கும் பொருள்மைதி காண்க.

வில்லு என்பதில் உகரம் சாரியை. வளைந்தது வில்லு; ஆனாலும், அம்பெய்து தொழிற்பட்டிலது; அதற்கு முன்பே வெற்றி விளைந்தது என்றவாறும்.

இறைவன் போருக்கென்று புறப்பட்ட இடங்களில் எல்லா வற்றிலுமே சடமாகிய படைகளும், உணர்த்த உணரும் சித்தாகிய பூதங்களும் பயன்படுத்தப்படுமுன்னே, இறைவன் சினம் சிரிப்பாக விழிப்பாக வெளிப்பட்டு வெற்றியைத்தேடித்தந்தமை காண்க.

இது, முப்புரம் என்பது மும்மலகாரியமாதலின் அதனைப் புறத்தேயுள்ள வில் முதலிய படைகளைக்கொண்டு அழிக்க முடியாமையும், ஞானம் ஒன்றே அழிக்கும் ஆற்றலுடையதென்பதும், அதுவே அழித்தமையும் உணர்த்தப்பெறுதலின் இச் செய்யுள் ஞானவெற்றியாயினமை காண்க.

295 ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை யுந்தீபற. 2

இ-ள்: ஏகம்பநாதர் திருக்கரத்திலே இரண்டு அம்புகளை யாம் ஒருபோதும் கண்டதில்லை; ஒரு அம்பினாலேயே மூன்று புரங்களும் அழிந்தன என்று தோழி உந்தீபற; அவ்வொன்றும் கூடப் பெருமிகையாம் உந்தீபற என்றவாறு.

இத்திருப்பாடல், இறைவனுக்குப் படைக்கலம் வேண்டாம் என்பதை உணர்த்துகின்றது.

முப்புரங்களை எரிக்க மூன்று அம்பாவது வேண்டாமோ? போகட்டும் இரண்டம்பாவது வேண்டாமோ? ஓரம்புதானிருந்தது; அதனையும் இறைவன் எய்யவே இல்லை; சிரித்தார் எரிந்தன; ஆதலால் அந்த ஒருஅம்புங்கூட அதிகம் என்பது.

ஓரம்பு: திருமால் இறைவன் திருக்கரத்தில் ஓரம்பாகத் திரிபுரசங்காரகாலத்தில் விளங்கினர் என்பது வரலாறு.

பெருமிகை - மிக அதிகம். ஒன்று என்பது எண்ணுகுபெயராக அம்பை உணர்த்தியது.

296 தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற. 3

இ-ள்: தேரினைத் தைத்துத் தன்முன் ஓடவிடுத்தலும் அதில் தாம் அடிவைத்தலும் அச்சு முறிந்தது, அதனைப்பாடி உந்தீபற; ஆனாலும் முப்புரங்களும் அழிந்தன உந்தீபற என்றவாறு.

இத்திருப்பாடல், முப்புரப்போருக்குத் தேர் முதலியன பயன்படாமையை அறிவிக்கின்றது.

பூமியைத் தேர்த்தட்டாகவும், சூரிய சந்திரர்களைத் தேர்ச் சக்கரமாகவும், கலைகளைக் காலாகவும், மேருவை வில்லாகவும், அங்கியை அம்பின் அடியாகவும், சந்திரனை அதனிடையாகவும், திருமாலை அதன் நுனியாகவும், வாயுவை அம்பின் சிரசாகவும் அமைத்தனர். இறைவன் தேரின்மீது அடிவைத்ததும் அதன் அச்சு முறிந்தது. ஆனாலும், இறைவன் தமது ஆற்றலால் முப்புரங்களை அழித்தார் என்ற வரலாறு இதனுள் உணர்த்தப் படுகின்றது.

தச்சு: தைத்து என்பதன் போலி. விடுத்தலும் இட்டலும் என்ற உம்மைகள் இழிவுசிறப்பும்மை. தேருக்கு இறைவனைத் தாங்குதற்குரிய ஆற்றலின்மையை உணர்த்தியது.

தச்சிருந்த கட்டுக்கள் நீங்குதலும் அதாவது மலம் பரிபாக முறுதலும், தாம் அடியிட்டலும் - திருவடிப்பதிவு உண்டாதலும், அச்சு முறிந்தது - ஆன்மா தற்போதம் கெட்டது. ஆனாலும் மும்மலகாரியமாகிய உடல் தம் வலி தொலைந்தன என்ற தத்து வப்பொருள் அமைந்திருத்தல் காண்க.

இவ்வுரையைச் சைவமரபில் வாராதார் சிலர், தமக்குத் திருமுறைகளில் ஈடுபாடின்மையான் இதனை வற்புறுத்தலுரை என்பர். சிவஞானியர் உலகியலறிவர்க்கும் சிவஞானியர்க்கும் பொருந்த, அவரவர் பரிபாகங்கட்கேற்ப உரை வகுத்தலே இயல்பென்பதை அவர்கள் அறியார். திருமூலதேவர் அருளிய முப்புரம் என்பது மும்மலகாரியம் என்ற குறிப்பைக்கொண்டே இவ்வுரை எழுந்திருத்தல்வேண்டும். அன்றியும், நமது பரம சிவன் எழுந்தருள எல்லாத் தத்துவ அதிபதிகளும் விதிப்படி பணிமுற்றி நிற்ப, அவ்வோய்விலே நாதன் திருவடி சூட்ட ஆணவமாகிய அச்சு முறிந்ததைக்கண்டு உந்தீபற என்றதாகப் பழைய உரை தத்துவக் கருத்தையே சிறப்பாக எடுத்துக் கூறல் தெளிக. ஆக, இதில் திரிபுரம் எரித்த வரலாறு வெளிப்படை யாகவும், மும்மலகாரியத்தைவென்ற வரலாறு அதன் உட்கிடை யாகவும் யாம் உணர்ந்துய்ய இருபொருளுணர்த்திய உண்மை ஞானியாகிய வாதவூரடிகள் வாக்கு இருமைக்கும் இன்பம் பயப்பதை எண்ணி இன்புறுக.

சாதனங்கள் பயனற்றுப் போகவும் ஞானங்களே வெற்றி அளித்தலின் இது ஞானவெற்றியாயிற்று.

297 உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே யுந்தீபற
இளமுலை பங்கனென் றுந்தீபற. 4

இ - ள்: திரிபுரம் எரித்த காலத்தில் அதில் பிழைக்கத் தக்கவர்களாகிய மூவரையும் தமக்குக் காவலாகக்கொண்டு முப்புரம் அழியும்வண்ணம் அம்பு எய்யவல்ல பெருமானுக்கே உந்தீபற; அவன் இளமை பொருந்திய முலையினையுடைய உமாதேவியை ஒருபாகத்தே உடையவன் என்று உந்தீபற என்றவாறு.

அழிக்கவேண்டியவற்றை அழித்துக் காப்பவர்களைக் காத்த இறைவனது ஆற்றல் இதில் எடுத்துரைக்கப்படுகின்றது.

உய்ய வல்லார் - அழிவிலிருந்து உய்ய வல்லவராகிய தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி என்ற மூவரும். இவர்கள் மூவரும் சிவபத்தியும் இடையறாது சிவபூசை செய்யும் சிந்தையும் உடையவர்கள். சிவபெருமானிடமே அழியா வரத்தையும் பறக்கும் கோட்டையையும் பெற்றவர்கள். பெறலரும் திருப்பெற்றபின் சிந்தனை பிறிதாதல் உயிர்கட்கு இயற்கையாதலின் வரம் பெற்றதும் நகரங்கள் பலவற்றை அழித்து வந்தனர். தேவர்களும் முனிவர்களும் இறைவனிடம் முறையிட்டும் அவர்கள் சிவனடியார்களாக விளங்குதலின் எவராலும் அவர்களை அழிக்க முடியவில்லை. அந்நிலையில் திருமால் புத்தாவதாரம் எடுத்து அவர்கள்பால் சென்று அரனடிக்கு அன்பு செய்யும் செயலை மாற்றினர். பின்னர், சிவபெருமான் அவர்களைமட்டும் உய்யக்கொண்டு முப்புரங்களை எரித்தனர். முப்புரத்தைச் சிரித்துக்கொண்டே அம்பெய்து அழித்ததாகத் திருமுறைகளில் பல இடங்களில் காணப்படுகின்றன. "மூவாத்தானை எல்லார்க்கும் முன்னேதோன்றி" என்னும் திருத்தாண்டகத்து "வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்து" என வருதல் காண்க. "உய்யக் கொண்ட மூவரை நின்கோவில் காவல் கொண்டாய்" எனவும் கூறப்பெறுதல் காண்க. இவற்றால் இறைவன் திருவுள்ளக் கிடக்கை அவர்களைக்காத்தலேயாதலின், காத்தபின் காத்தாரா? எரித்தபின் காத்தாரா? என்ற ஐயத்திற்கே இடம் இன்று.

அன்றியும் "எய்யாமையே அறியாமையே" என்பதனால் எய்யாமை அறியாமை என்னும் எதிர்மறைப் பொருளதாதல் போன்று அறிவுடைமைப் பொருளில் எய்மை என்பதொரு சொல்லும் உளதாம் என்பது பெற்றாம். ஆதலால், எய்ய வல்லான் என்பதற்கு அறியவல்லானுக்கே என்று பொருள்

கொள்வர் அவர். எய்யாமை என்ற உரிச்சொல் எதிர்மறை யாகவே அறியாமைப் பொருளில் வருவதன்றி உடன்பாட்டுப் பொருளில் வருவது இன்று என்பதை எமது "சங்க இலக்கியச் சொல்லடைவில்" கண்டு தெளிக. இத்தாழிசைக்கு அவர் கூறும் உரை வருமாறு.

'இறைவன்மேல் வைத்த மெய்யன்பினையே தமக்குக் கவச மாகக் கொண்டு ஈடேறவல்லவராகிய ஒப்பற்ற மூவரையும் அறிய வல்லவராகிய திரிபுராதியர்க்கும் உந்தீபற; அங்ஙனம் பறக்கும்போது இளமைகொண்ட மூலையுடையாளாகிய உமைப் பிராட்டியைத் தனது இடப்பாகமாகக் கொண்டவன் என்று பாடி உந்தீபற' என்பது. இதில் காவல் என்பதற்குக் கவசம் அல்லது திருநீறு என்றும், எய்யவல்லான் என்பதற்கு அறிய வல்லானென்றும் பொருள்கொண்டுள்ளார். ஏனைய திருமுறை களிலும் காவல்கொண்டு என்பதற்குக் காவலாக ஏற்று என்ற பொருளை அமைத்திருத்தலாலும் அதனைத் திருவுள்ளத்தே அடைத்து அவர்கள் ஒழிந்து உய்யத் திரிபுரத்தைமட்டுமே எரித்தனர்.

முப்புரம் என்பது மும்மல காரியமாதலின் மலகாரியமாய்ச் சடமாயுள்ள உடம்பு அழியுமேயன்றி, உயிர் அநாதி நித்திய மாதலின் அழியாதென்பது அறிவுநூல் முடிபு. அதனைத் தெரி விக்கவே 'முப்புரங்களிலும் மூவர் உய்ந்தனர்; முப்புரங்கள் அழிந்தன' என்று அருளியது. சிவபூசையாகிய கிரியை நெறியில் நின்று பரிபாகமுற்ற ஆன்மாவைச் சாமீபமுத்தியில் இருத்துதல் மரபாதலின் தமக்கு அணுக்கத் தொண்டராக அமைத்துக்கொண்டார் என்ற சைவாகமத்துணிவு விளக்கப் பெறுகின்றது.

இது மும்மலமாகிய கோட்டையை அழித்து, உணர்த்த உணரும் ஆன்மாவை உய்யக்கொண்டதை அறிவித்தலின் ஞானவெற்றியாயிற்று.

**298** *சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்*
*ஓடிய வாபாடி யுந்தீபற*
*உருத்திர நாதனுக் குந்தீபற.* 5

இ - ள்: வீரபத்திரர் தாக்கிய வேள்வியானது அழியத் தேவர்கள் அஞ்சி ஓடியவாற்றினைப் பாடி உந்தீபற; உருத் திரர்கட்கெல்லாம் தலைவனாகிய சிவபெருமானுக்கு உந்தீபற என்றவாறு.

இது, தக்க யாகத்தில் தேவர்கள் உருத்திரநாதனுக்கு அஞ்சி ஓடியதை உணர்த்துகிறது.

உருத்திரநாதனாகிய மகாருத்திரனாலேயே வேள்வி அழிந்தது; தேவர்கள் ஓடினார்கள்; ஆதலால், அவன் யாகத்தைத் தகர்த்த வீரத்தைப் பாடி உந்தீபற என்றார்கள்.

சாடிய - தகர்த்த. சரிந்திட - சிறிது சிறிதாக அழிய. உருத்திரன் - அச்சத்தை விளைவிப்பவன். உருத்திரநாதன் - மகாருத்திரனாகிய சிவன்.

இது, அஞ்ஞானகாரணமான ஆணவமிகுதியால் தக்கன் செய்த வேள்வியை அழித்தமை கூறியதால் ஞானவெற்றியானமை காண்க.

**299** ஆவா திருமால் அவிப்பாகங் கொண்டன்று
சாவா திருந்தானென் றுந்தீபற
சதுர்முகன் தாதையென் றுந்தீபற. 6

இ - ள்: அவிப்பாகத்தைக் கொண்டும் அன்று திருமால் ஆ! ஆ!! இறக்காதிருந்தானே என்று உந்தீபற; அவன் பிரமனுக்குத் தந்தை என்று உந்தீபற என்றவாறு.

இது அவ்வேள்வியில் அவியுண்டும் திருமால் அழியாது இருந்தான்; அதற்குக் காரணம் அவன் பிரமன் தாதையாதலால் என்று உணர்த்துகிறது.

சிவநிந்தகனாகிய தக்கன்வேள்வியில் அவிப்பாகம் தின்றும் அவன் சாவாதிருந்தது படைத்தற்றொழிலையுடைய பிரமனின் தந்தையாதலால் என்றது திருமால் காப்பதும், பிரமன் படைப்பதும் தம் ஆற்றலால் விளையுந்தொழில்கள் அன்று; பரமன் தர வந்தவை என்று உணராராயினர் என்று எள்ளல் தோன்ற உரைத்ததாம்.

அன்றியும், தக்கன் வேள்வியில் தேவர்கள் தண்டிக்கப் பட்டார்களேயன்றி ஒருவரும் இறந்திலர்; அது தேவர்களைத் திருத்த இறைவன் காட்டிய கருணைச்செயலே ஆதலானென்க.

வேள்வியைச் செற்ற செய்தியை அறிவித்தலின் முற்கூறியாங்கு இதுவும் ஞானவெற்றியாதல் தெளிக.

**300** வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் றுந்தீபற
கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 7

இ - ள் : மிகக் கொடியவனாகிய அக்கினிதேவன் அவியை விழுங்குவதற்காக அதனை உருட்டிய கையை வெட்டினான் இறைவன் என்று உந்தீபற; யாகமே கலங்கியது என்று உந்தீ பற என்றவாறு.

இது அக்கினியின் கையைத் தறித்தமை உணர்த்துகிறது.

வேள்வியுள் தீயே தலைவன். அக்கினியையே வாயாக உடையவர்கள் தேவர்கள் என்று வேதம் கூறும். ஆதலால் அவன் கையை அறுக்கவே யாகமே கலங்கிற்று என்றார்.

வெய்யவன் வெப்பத்தையுடையவன் என்றுமாம். விழுங்க என்பதற்கேற்ப அவியை எனச் செயப்படுபொருள் வருவிக்க.

ஆற்றல்மிக்க அக்கினியின் கை வெட்டுண்டது என்றதால் இது ஞானவெற்றியாயிற்று.

**301** *பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்*
*பார்ப்பதென் னேயேடி யுந்தீபற*
*பணைமுலை பாகனுக் குந்தீபற.* 8

இ - ள் : பார்வதிதேவியாரையே பகையென்று சொன்ன தக்கனைப் பார்ப்பது என்னே; தோழி உந்தீபற; அவன் இடக் கிழான்! பணைத்த முலையினையுடைய உமாதேவியை ஒருபாகங் கொண்ட சிவபெருமானுக்கு நீ உந்தீபற என்றவாறு.

இது, பெண்மைக்குலத்தின் தலைவியையே பகைத்த அத் தக்கனைப் பார்ப்பது ஏன் என்கின்றது.

தாக்ஷாயணி என்னும் நாமத்தோடு இருந்த உமாதேவி, தக்கன் தன்னையும் தலைவனையும் பகைத்தமையால் அவன்சார் பில் வந்த தேகத்தையே உதறிப் பெயரையும் அழித்துப் பர்வத ராசனுக்கு மகளாகி பார்வதியானாள் என்ற செய்தியை உடம் பொடு புணர்த்தலாகப் 'பார்ப்பதியைப் பகை சாற்றிய தக்கன்' என்றார். சிவநிந்தகனைப் பார்ப்பதும் பாவமாதலின் அவனைப் பார்ப்பது என்னே என்றாள். 'உந்தீபற' எனப் பணிப்பாள் ஒரு பெண். தக்கன் பெண்குலத் தலைவியான பராசத்தியையே அவமதித்தவன்; அவனோடு நமக்கென்ன உறவு; அவனைப் பார்ப்பது ஏன்? என்றாள்.

நம் தலைவியை ஒருபாகத்துக் கொண்டு பெண்மையின் உயர்வை உலகினர்க்கு உணர்த்தும் உமாகாந்தனைப் பாடி உந்தீ பறக்கும்வண்ணம் பணிப்பது சிறந்த நயமாதல்காண்க

இது திருவருளாகிய சத்தியைப் பகைத்த அஞ்ஞானியை ஞானம் அழித்தமை கூறலின் ஞானவெற்றியாயிற்று.

302 புரந்தர னாரொரு பூங்குயி லாகி
மரந்தனி லேறினார் உந்தீபற
வானவர் கோனென்றே யுந்தீபற. 9

இ - ள்: இந்திரனார் ஒரு பூங்குயிலாகி மரத்தில் ஏறி ஒளிந்து தப்பினார்; அதனைப்பாடி உந்தீபற; அவர் யார் தெரியுமோ? தேவர்கட்கெல்லாம் அரசன் என்று உந்தீபற என்றவாறு.

இது இந்திரன் குயிலுருவம்கொண்டு மரத்தில் மறைந்தமையினை உணர்த்துகிறது. இழிவுபற்றிய எள்ளல் தோன்ற 'வானவர்கோன்' என்றார்.

இந்திரனாகிய தேவர்தலைவனே நம் வேள்விக்கு வந்தான்; எமக்கு என்ன குறை என்று நம்பியிருந்த தக்கனை நடுவில் ஏமாற்றினான் என்பதை அவன் குயிலானசெய்தி விளக்குகிறது. குயில் பறக்கும்வரையில் வேற்றுக் கூட்டில் வேற்றுப் பறவையின் பாதுகாப்பில் வளர்ந்து, பருவம் வந்ததும் பறந்து போய்விடும். அதுபோல இந்திரனும் அவிதின்னும் வரையில் அவனுடன் உறவாடிக் களித்து, உற்றான்போல் நடித்து, வீரபத்திரர் வந்ததும் வேற்றுருக்கொண்டு ஓடினான் என்ற நயமும் ஓர்க.

இதுவும், ஆணவம் ஞானத்தின்முன் வேற்றுருக்கொண்டு மறைந்து வாய்ப்புக் கிட்டியபொழுது வெளிப்படும் ஆதலால், ஞானம் என்றும் உயிருடன் கூடஇருந்து, ஆணவம் காரியப் படாதவாறு அடக்கியே வைத்திருக்கும் என்பதைக் குறிப்பித்தலின் ஞானவெற்றியாயிற்று.

303 வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சின வாபாடி யுந்தீபற
தொடர்ந்த பிறப்பற வுந்தீபற. 10

இ - ள்: ஏடி! கொடிய கோபத்தோடு இயற்றப்பட்ட யாகத்திலே வியாத்திரனார் தலை அழிந்தமையைப் பாடி உந்தீபற; வெள்ளம்போலத் தொடர்ந்து வருகின்ற மறுபிறப்பும் அற்றது என்று உந்தீபற என்றவாறு.

இது, தக்க யாகத்தில் வியாத்திரன் என்பவன் தலையை அறுத்து, அவனுக்கு மான்தலைதந்த வரலாறு உணர்த்துவது.

தக்கன் சிவபெருமான்மீது சினங்கொண்டு யாகத்தைச் செய்தான் ஆதலின் அவன் தன்மையை அவன் செய்த யாகத்திற்கு ஏற்றி 'வெஞ்சின வேள்வி' என்றார்.

வியாத்திரன்-யாகப்பசுவைக் கொல்வோன். அவன் தலையை அறுத்து, மான்தலையைப் பொருத்தினர் என்று ஒரு வரலாறு சிலர்வாய்க் கேட்கின்றேம். இவ்வியாத்திரனர் பெயரையட்டும் இந்த வேள்வியோடு தொடர்புபடுத்தி அப்பர்சுவாமிகளும் சொல்லுகிறார்கள் :-

"எச்சனிணைத் தலைகொண்டார் பகன்கண் கொண்டார்
இரவிகளி லொருவன்பல் லிறுத்துக் கொண்டார்
மெச்சன்வியாத் திரன்தலையும் வேறுக் கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்து
உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை யுதைத்தார்
உணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்
அச்சமெழ அழித்துக்கொண் டருளுஞ் செய்தார்
அடியேனை யாட்கொண்ட அமலர் தாமே."

இத்திருத்தாண்டகத்தில் தக்கயாகத்தில் உறுப்பழிவுற்றுக் குற்றம் நீங்கி உய்யக்கொண்டார் அனைவரையும் குறித்திருத்தல் காண்க. யாரும் வேள்வியில் கொல்லப்படாமையும் அறிக. வருத்தப்பட்டார்களேயன்றிக் கொல்லப்பட்டார் எவரும் இலர். இம்மரபறியாதார் சிலர் சில வானவர்கள் மாண்டனர் என்பர். அது பொருந்தாமை தெளிக.

வியாத்திரன் - வேள்வியில் தொழில் புரிவானாகிய "பிரமா" என்னும் பட்டம்புனைந்த சர்வசாதகன். வேள்வியில் ஹோதா, அத்வர்யு, பிரமா, இருத்விக் முதலாகப் பல பதவிகளுண்மை அறிக. அவருள் சகல காரியங்களையும் கண்காணிப்பவன் பிரமா ஆவான் என்க. மரபு பற்றுது ஏ என்னும் பகுதியடியாகப் பிறந்த வ்யாத்ர: எனக் கொண்டு வேள்வியில் எல்லாவற்றையும் தாங்குவோன் என்பர் சிலர். சிலர் வியாப்திரு என்ற ஆரியச்சொல் வியாத்திரனாயிற்று எனக்கொண்டு யாகநாயகன் என்பர். பல கூறுது மரபறிந்தார்வழிக் கேட்டு எழுதுதலே முறையெனத்தெளிக.

வியாத்திரனார் துஞ்சினார் என்றது 'தலைதுஞ்சினவா பாடி' என்பதால் மாற்றுத்தலைபெற்றான் என்ற வரலாறு உண்டாயது போலும்.

அவன் தலையறுத்ததுமட்டும் அன்று. அதனைப் பாடுவதால் நம் பிறவியும் அறுந்தது என்றுளாம்.

இதுவும் பிறவி அறுதலையும், அஞ்ஞானம் பொருந்திய வியாத்திரன் தலையறுதலையும் உணர்த்துகின்றமையின் ஞான வெற்றியாதல் காண்க.

304 ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி யுந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற. 11

இ-ள்: ஏடி! பிரமர்களில் ஒருவனாகிய தக்கனுக்கு, தலையாக விளங்கும்படி ஆட்டுத்தலையைச் சேர்த்தவாற்றினைப் பாடி உந்தீபற; கொங்கைகள் உந்தீபறத்தலாற் குலுங்கும்படி உந்தீபற என்றவாறு.

இது, தக்கனுக்கு ஆட்டுத்தலையைப் பொருத்தியதை உணர்த்துகிறது.

தக்கன் பிரசாபதியாகிய பிரமர்களுள் ஒருவன் ஆதலின் அவனை விதி என்றே குறித்தார். எல்லாருக்கும் விதிக்கும் விதியாகிய அவனுக்கு ஒருவர் ஆட்டுத் தலையை விதித்தாரே என்ற நகை நயந்தோன்ற நிற்றல்காண்க.

இவ்வண்ணம் நகைதோனறச் சிரிக்கும்போதும் பறக்கும் போதும் மார்பகம் விம்மிக் குலுங்குமாதலின் 'கொங்கை குலுங்க நின்று' என்றது.

அறியாமையின் வடிவமான தக்கனை வென்றமை ஞான வெற்றி ஆதலால் பதிகக்கருத்து இயையுமாற்றினைத் தெளிக.

305 உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலாம் உந்தீபற. 12

இ-ள்: யாகத்தில் அவியையுண்ணவந்த பகன் என்னும் சூரியன் ஒளித்து ஓடாதவண்ணம், அவன் கண்ணைப் பிடுங்கிய வாற்றினைப்பாடி உந்தீபற; அங்ஙனம் பெருமான் செய்தது அடியோமெல்லாம் வருந்தும் பிறவிக்கு ஏதுவாகிய கருவானது அழிய என்று உந்தீபற என்றவாறு.

இது, பகன் என்னும் சூரியன் கண்ணைப் பிடுங்கியதைத் தெரிவிக்கின்றது.

பகன் உணவு விருப்பாற் சென்றானென்ற இழிவும், அதன் பயன் கண்போயிற்று என்பதுமாம். பகன் தன் கிரணங்களை

அடக்கிக்கொண்டு தப்பியோட முயன்றான்; அங்ஙனம் தப்பி ஓடிப் போகாமல் வீரபத்திரக்கடவுள் கண்ணைப் பிடுங்கினார் என்றதை 'ஒளித்து ஓடாமே கண்ணைப் பறித்தவா' என்றார்.

அவனை அங்ஙனம் செய்தது, நாமும் சிவநிந்தகர் சிவத் துரோகிகளைச்சார்ந்து தீவினைசெய்து ஓயாமல் பிறந்திறந்து உழலாமைக்கேதுவாயிற்று என்பாள் இங்ஙனம் கூறினாளாம்.

இதுவும் நம் கருக்கெடப் பகன்கண்ணைப் பிடுங்கினார் என்றலின் ஞானவெற்றியாயிற்று.

**306** *நாமகள் நாசி சிரப்பிர மன்படச்*
*சோமன் முகனெரித் துந்தீபற*
*தொல்லை வினைகெட உந்தீபற.* **13**

இ - ள் : கலைமகள் மூக்கும், பிரமன் சிரமும் அழியவும், சோமனது முகம் நெரியவும் ஒறுத்ததைச் சொல்லி உந்தீபற; அங்ஙனம் செய்வதால் நமது பழைமையான வினைகெடுவதாக என்று உந்தீபற என்றவாறு.

இது, நாமகள் முதலியோர் ஒறுக்கப்பட்டமை உணர்த்து கின்றது.

நாசி – மூக்கு. தக்கயாகத்தில் பிரமனுக்குச் சிரமும், நாமக ளாகிய அவன் மனைவிக்கு மூக்கும் அறுபட்டன. சோமன் - சந்திரன். காலால் தேய்க்கப்பட்டபொழுது அவன் முகம் நெரி யுண்டான். இவ்வரலாற்றைத் திருமுறைகளில் பல இடத்தும் காணலாம். பிராமணி, காயத்திரி, சாவித்திரி மூவரும் நகிலும் மூக்கும் அறுபட்டனர் எனச் சிவரகசியம் கூறும்.

பிரமன் சிரம் அறுபட்டது திருக்கண்டியூராதலால் தக்க யாகத்தில் இல்லையே என ஐயுற்றுப் பிரமன் - விதி - அது சிறு விதியாகிய தக்கனை உணர்த்திற்று என்பாருமுளர். நாமகளைச் சொல்லிப் பின் பிரமனைக் கூறுதலால் பிரமன் பெருவிதியாகிய பிரமனேயாம் என்பது தெளிவு. பட என்பதற்கு வருந்த எனப் பொருள்கொண்டு வீரபத்திரக்கடவுள் சூலத்தால் தலையில் அடிக்க அதனால் பிரமன் வருந்தினான் என்றதாகவும் கொள்ள லாம். பட - அழிய, வருந்த.

பட நெரித்து உந்தீபற என முடிக்க. நெரித்து என்பது நெரித்தது என்னும் வினையாலணையும் பெயரின் திரிபு. பட நெரித்ததைப் பாடி உந்தீபற என்க.

அவ்வீரச் செயலைப் பாடுவதால் நமக்கு விளையும் பயன் தொல்லை வினைகள் கெடும் என்றுளாம். இறைவன் செயல்கள் அவரவர்களுடைய முனைப்பை அடக்கி ஞானத்தை நல்கிய செயலாதலின் அவற்றைப் பாட நமக்கும் வினைகெடும்; பிறவியில்லையாம்; பேரின்பம் எய்தலாம் என்பது கருதிக் கூறுகின்றுளாம். அதனல் இது ஞானவெற்றியாயிற்று.

307 *நான்மறை யோனு மகத்திய மான்படப்*
*போம்வழி தேடுமா றுந்தீபற*
*புரந்தரன் வேள்வியில் உந்தீபற.* 14

இ-ள்: வேள்வித்தலைவனுகிய தக்கன் அழிய, பிரமன் தப்பிப்போவதற்கு உரிய வழியைத் தேடிய திறனைச் சொல்லி உந்தீபற; அந்த யாகத்தில் இந்திரனும் தப்பியோட முயன்றதைப்பாடி உந்தீபற என்றவாறு.

இது, தக்கன் தலையிழந்தமையும் இந்திரன் பிரமன் முதலியோர் தப்பியோட முயன்றமையும் அறிவிக்கிறது.

தக்கன் அழிந்தமையைக் கண்டவுடன் அந்த யாகத்தில் இருத்துவிக்காயிருந்து வேள்வியை இயற்றும் பிரமனும் தப்பியோட முயன்ற வகையைப்பாடி உந்தீபற என்று கூறியவளுக்கு மற்றவள், இந்திரனும் குயிலுருவாகித் தப்பிப்போனதை உட்கொண்டு வேள்வியில் புரந்தரன் உந்தீபற என்கின்றுள்.

சில ஏடுகளில் நான்மறையோனும் மகத்து இயமான் எனப் பாடம் காணப்படுகிறது. இதற்குச் சிறு விதியாகிய தக்கன் எனப் பொருள்கொள்க.

சிலர் புரந்தரனை ஏற்போனுகக்கொண்ட வேள்வியிலே, வேள்வித்தலைவனுகிய தக்கன் இறக்க நான்முகன் தான் உய்ந்து போகும் வழியைத் தேடி அலையும் திறனைப் பாடி உந்தீபற என்றுள் என்று உரைப்பர்.

மேலும் அவர்கள் தக்கன் பட்ட பின்னர் இந்திரன் தப்பி ஒடும் வழியை நாடினுன் எனல் புராண நிகழ்ச்சித் தேராது கூறியதாம். வரலாற்று முறைமையை நோக்கின் பிரமனும் காயத்திரி முதலான தேவர்களும் தண்டனை ஏற்றபின் திசைமுகன் உய்யப்போம் வழிதேடி, வீரபத்திரருக்குத் தேர்ப்பாகன் ஆயினுன் என்று சிவரகசிய கண்டம் கூறுகிறது. புரந்தரன் குயில் உருக்கொண்டு மரம்புக்கபோது இறைவன் அவனது தலையைக் கொய்தார். ஆதலால் போம்வழி தேடுதல் அவற்கு

இயலாமையானும், தக்கன் இறந்த பின்னர் அவன் அங்ஙனம் ஆராய்ந்தான் என்பது முறையில் கூற்றுகையானும், பட என்ப தற்குக் குட்டப்படுதல் எனவும் கொய்யப்படுதல் எனவும் இரு பொருளும் ஈண்டுக் கொள்ளவேண்டியிருத்தலானும், நான் மறையோனும் என உம்மைகொடுத்து ஓதிய ஆசிரியர் மகத்து இயமான் என உம்மை தொகுத்துக்கூறுதல் செய்யுள் இயல்பு அறியார் செயலாகி அடிகட்கு இழுக்கு எய்தச்செய்தலாம் ஆத லானும், புரந்தரன்வேள்வி என்பதற்கும் போம்வழி தேடுமாறு என்பதற்கும் தனித்தனியே வந்த உந்தீபற என்பதனை ஒருங்கு கூட்டி உந்தீபற என்ற ஒன்றனோடு முடித்துப் பிறிதொரு உந்தீ பற என்பதனை வாளாவிடுக்க நேரிடுதலானும் பிறர் கூறும் உரை பொருந்தாது என வன்மையாக மறுப்பர்.

இப்பகுதி தோத்திரமாதலால் சொல்லியவே சொல்லுதலும் மனநெகிழ்ச்சி ஒன்றையே கருதி நிகழ்ச்சிகளை முறை நோக் காது மாற்றிக் கூறுதலும் திருமுறைகளில் மிகுதியாகக் காணப் படுதலானும், உரையாடல்போல நான்மறையோனும் போம் வழிதேட வேள்வியில் புரந்தரனும் அவ்வாறே தேடினன் என் பதனை உட்கொண்டு வேள்வியில் புரந்தரனும் என இசை எச்ச மாகக் கொள்ளவைத்தார் ஆதலானும், நான்முகனும் என்பதி லுள்ள உம்மை உயர்வு சிறப்பாதலானும், இயமான் என்பத னோடு உம்மை வரவேண்டிய இன்றியமையாமை இன்மையா னும், மகத்து இயமான் பட நான்மறையோனும் போம் வழி தேடுமாறு உந்தீபற வேள்வியில் புரந்தரன் உந்தீபற என முடிக்கின் இவ் ஐயங்கள் ஒன்றற்கும் இடமின்மையானும் பண்டைய உரையாசிரியர்களை வன்மையாக மறுத்தல் வேண் டாமை அறிக.

குயிலாகச் சென்ற புரந்தரனுடைய தலையைக் கொய்தார் என்ற இவ்வரலாறு திருமுறைகளில் எடுத்தாளப்பெறுமையும் இனிது தெளிக.

யாகத்தில் இந்திரனுக்கே எல்லா வகையிலும் முதன்மை யாதலின், யாகத்தலைவன் இறந்தவுடன் இந்திரனும் தப்பி ஓட முயன்றான்; அதைச் சொல்லி உந்தீபற என்று எள்ளல்பற்றிய நகை தோன்றக் கூறினளாம்.

இது, ஆணவ வடிவாகிய தக்கன் அழிவும், இந்திரன் இய மானன் இவர்களுக்கு ஆணவச்சார்பால் விளைந்த அறியாமை யான் அழிவும் தோன்றக் கூறியமையின் ஞானவெற்றியாயிற்று.

308 சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 15

இ - ள்: தக்கயாகத்தில் பூஷன் என்னும் சூரியனுடைய ஆதொண்டைக் கனிபோலும் சிவந்த வாயிலுள்ள பற்களைப் பெயர்த்து நொறுக்கிய தன்மையைப்பாடி உந்தீபற; அதனால் வேள்வி நிலைகுலைந்தது' என்று உந்தீபற என்றவாறு.

இது, பூஷன் என்னும் சூரியனுடைய பற்களை உடைத்தமையை உணர்த்துகிறது.

தக்கன் வேள்வியில் வீரபத்திரக்கடவுள் பூஷன் என்னும் சூரியனுடைய கன்னத்தில் அடித்து, அவன் பற்களை இடம் பெயரச்செய்தார் என்ற வரலாற்றினை அறிக.

வாருதல் - பெயர்த்தெடுத்தல். நெரித்தல் - உடைத்துத் தூள் செய்தல். மயங்கிற்று - கலங்கிற்று.

இது சூரியனை மறக்கருணைகாட்டி ஆண்டமை அறிவித்தலின் ஞானவெற்றியாயிற்று.

309 தக்கனா ரன்றே தலையிழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின் றுந்தீபற
மடிந்தது வேள்வியென் றுந்தீபற. 16

இ - ள்: தக்கன், தன்மக்கள் சூழநின்றும், அப்பொழுதே தன் தலையை இழந்தான் என்று உந்தீபற; அதனால் அந்த வேள்வி அழிந்தது என்று உந்தீபற என்றவாறு.

இது, தக்கன் தன் மக்கள் காணத் தலையிழந்தமையை உணர்த்துகிறது.

நரியார்வந்தார், நாயார்போனார் என்புழிப்போல, தக்கனார் தலையிழந்தாரென இழிவு தோன்றக் கூறியது காண்க. தக்கனார் மக்களைச் சூழநின்று என்பது, சந்திரன் மனைவியராகிய இருபத்தேழு பெண்களையும், இவன் படைப்பிற்கு உட்பட்ட தேவர் முதல் எல்லா உயிர்களையும் என்க. மக்கள் எனச் சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறியதனால் அனைத்துயிர்களையும் கொள்க. இத்தனைபேர் சூழவிருந்தும் தந்தையின் தலையைக் காப்பாற்றும் வன்மையிலர் என்று குறித்தவாறு. தக்கன்மக்களை என்பது, தம்மக்களை என்ற அளவில் நின்றது. வேள்வி மடிந்தது என்றது யாகம் அழிந்தது என்னும் பொருளதாம்.

மடிந்தது என்பதற்கேற்ப வேள்வி என்பதற்கு ஆகுபெயராய் எச்சன் எனப் பொருள் கூறுவாருமுளர்.

'தக்கனூர் என்றே' எனப் பாடங்கொண்டு தக்கனூர் தலையிழந்தார் எனப்பொருள்கொள்வர். பாடம் திருத்தும்போது பாடங்கிடைத்த ஏட்டின் வரலாற்றை எழுதியே திருத்துதல் மரபு. தன் விருப்பம்போலத் திருவருள் நூல்களைத் திருத்தலாகாது என்பதும் தெளிக.

இது, மக்களிருந்தும் தக்கனுக்குப் பயன்பட்டிலர் எனப் பாசவெற்றி கூறுதலின் ஞானவெற்றியாயிற்று.

*310* *பாலகனூர்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட*
*கோலச் சடையற்கே உந்தீபற*
*குமரன்றன் தாதைக்கே உந்தீபற.* *17*

இ - ள்: உபமன்யு முனிவருக்குப் பாற்கடலைக் கொடுத்தருளிய அழகிய சடையினையுடைய சிவபெருமானுக்கு உந்தீபற; குமாரப்பெருமான் தந்தைக்கே உந்தீபற என்றவாறு.

இது, உபமன்னியுமுனிவருக்குப் பாற்கடலீந்த வரலாறு உணர்த்துகிறது.

பாலகனூர்க்கு என்பதில் 'ஆர்' விகுதி உயர்த்தற்பொருளில் வந்தது. உபமன்னியு முனிவர் குழந்தையாக இருக்கும்போது பால்வேண்டி அழ, புலிக்கால்முனிவர் வேண்டுகோளின்வண்ணம் உபமன்னியுமுனிவருக்குப் பாற்கடலை அழைத்து உண்ணக்கொடுத்தார் என்பது வரலாறு. இதனை, "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்" எனத் திருமுறையும் தெரிவிக்கும்.

சமயாசாரியர்கள் சிவபெருமானைத் தவிர வேறு யாரையும் வந்தியார்களாதலின் குமரன் தாதைக்கெனச் சிவபெருமானைக் குறித்தார்.

அடியார்குழந்தை பசியால் அழுதவுடன் அதன் தேவையை முடிக்கும் கருணையுள்ளம் ஒரு குழந்தையின் தந்தைக்கே விளைவதியல்பாதல் தோன்ற 'குமரன் தாதை' என்றார்.

இதுவும், ஞானியாகிய உபமன்னியுமுனிவருக்கு அதிகார மலம் அகலாத திருமாலிடமாகிய பாற்கடலை வாங்கி உதவி செய்தமையை உணர்த்துவதால் ஞானவெற்றியாயிற்று.

311 நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற. 18

இ-ள்: நல்ல தாமரை மலரின்மேல் எழுந்தருளியிருக்கும் பிரமனது தலையை விரைவில் கிள்ளியவாற்றினைப் பாடி உந்தீபற; அவர் தம் நகத்தால் அரிந்தது என்று உந்தீபற என்றவாறு.

இது, வேள்விக்கு முன்னரே பிரமன் தலையைக் கிள்ளிய வரலாற்றை உணர்த்துகிறது.

தலையை உகிரால் அரிந்தது என்றது, பூக்கொய்தல்போல எளிதாயிருந்தமையை உணர்த்தியவாறு.

இது நான்முகன்செருக்கை அழித்தமையை அறிவித்தலின் ஞானவெற்றியாயிற்று.

312 தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா றுந்தீபற
இருபதும் இற்றதென் றுந்தீபற. 19

இ-ள்: புட்பகம் என்னும் தேரை நிறுத்திக் கயிலை மலையைப் பெயர்த்த இராவணனுடைய பத்துச் சிரங்களும் இற்றவாற்றினைச் சொல்லி உந்தீபற; இருபது தோள்களும் ஒடிந்தன என்று உந்தீபற என்றவாறு.

இது, இராவணனைவென்ற வரலாற்றை உணர்த்துகிறது.

இராவணன் புட்பகவிமானத்தில் ஏறி வடக்குநோக்கிச் சென்றானாக, கயிலைமீது தன் விமானம் பறக்காமையின் அந்த மலையைப் பெயர்ப்போம் என்ற எண்ணத்தால் கயிலையைப் பெயர்க்க, சிவபெருமான் கால்விரல் நுனியை ஊன்றி அடர்த்திட்டு அவனுடைய சிரமும் தோளும் நெரியச்செய்தார் என்பது வரலாறு.

முன்னவள் தலை பத்தும் இற்றதென்றாளாக, பின்னவள் தலை பத்து என்ன? தோள் இருபதும் இற்றன என்று எள்ளி நகையாடினளாம்.

இது, இராவணனது ஆணவத்தை அடக்கியவாற்றை உணர்த்துதலின் ஞானவெற்றியாயிற்று.

* ஏகாச மிட்ட விருடிகள் போகாமல்
ஆகாசங் காவலென் றுந்தீபற
அதற்கப்பா லுங்காவலென் றுந்தீபற. 20

இ - ள்: மேலே ஆடையை இட்ட இருடியாகிய வால கில்லியர்கள் அழியாதவாறு இறைவன் ஆகாசத்திற்கே காவலானான் என்று உந்தீபற; அதற்கு அப்பாலும் அவனே காவல் என்று சொல்லி உந்தீபற என்றவாறு.

இது, கால் உணவாகச் சுடரொடுசுற்றும் வாலகில்லியரைக் காத்தமை உணர்த்துவது.

முனிவர்கள் மேலாடையை யோகவேட்டியாக அணியும் உரிமையுடையவர்கள் ஆதலின் 'ஏகாசம் இட்ட இருடிகள்' என்றார். ஏகாசம் - மேலாடை. போகாமல் - அழியாமல். ஆகாசம் காவல் - ஆகாசத்திற்கு இறைவனே காவல். அதற்கு மேலுள்ள எல்லாப்புவனங்களுக்கும் இறைவனே காவலாவான் ஆதலின் 'அதற்கு அப்பாலும் காவல்' என்றார்.

இது, முனிவர்களுக்கு இடர் புகுதாது காத்தமையைக் கூறுதலின் ஞானவெற்றியாயிற்று.

* இப்பாடல் சிலபிரதிகளில் காணப்பட்டிலது.

# 15. திருத்தோணோக்கம்

[பிரபஞ்சசுத்தி]

அடிகளார் திருத்தில்லையில் வசிக்கின்ற காலத்தில் மகளிர் சிலர் தோளை நோக்கி ஆடும் விளையாட்டைப் புரிந்தனர். அவ்விளையாட்டில் இம்மைக்கோ மறுமைக்கோ பயன்படாத வெற்றுரையான பாடல்களைப்பாடி விளையாடினர். அதனைக்கண்ட அடிகளார் குழந்தையுள்ளம் படைத்த பெரிய ஞானச்செல்வராதலின், அவர்களோடு தாமும் கலந்து அவர்களைப்போலவே பெண்மையினின்று, இறைவன் திருமேனிதாங்கி எழுந்தருளுவதன் திருவருணோக்கங்களும் அடியார்களை உய்யக்கொண்ட திறமும் ஆகிய இவற்றையே பொருளாகக்கொண்ட இப்பாடல்களைப்பாடி விளையாடப்பணித்தார்; அதுவே திருத்தோணோக்கம் என்னும் இது.

நோக்கு என்பது அடியார்க்குநல்லார் கூறுகின்ற விநோதக் கூத்தின் பகுதிகளில் ஒன்று.

" பரவிய சாந்தி யன்றியும் பரதம்
விரவிய விநோதம் விரிக்கும் காலை,
குரவை கலிநடங் குடக்கூத்து ஒன்றிய
கரணம் நோக்குத் தோற்பாவைக் கூத்து
என்றிவை யாறும் நகைத்திறச் சுவையும்
வென்றியும் விநோதக் கூத்தென இசைப்ப. "

இது அவர்காட்டும் மேற்கோட்சூத்திரம். இதில் நோக்கு என்பது வந்திருத்தல் காண்க.

நோக்கு என்னுங்கூத்தானது பாரமும் நுண்மையும் மாயமும் உடையது என்பர் அடியார்க்குநல்லார். இம்மூன்றும் உடையது கூத்தெனக் கூத்தின் உடைமையாகக் கூறுதலால் நோக்கத்தாலே தம்மனக்கருத்தை வெளிப்படுப்பதாய், நுட்பமாயுணரப்படுவதாய், சிலவஞ்சனைகளையும் உடையதாய் இருப்பதென உணரப்படுகிறது. பாரம் என்பது சுமை; சுமையாவது எல்லாரும் மிக எளிதாக ஆட முடியாத அருமைப்பாட்டினையுடைமை. நுண்மையாவது நடிப்பின்

நுணுக்கத்தாலேயே ஆழமான நகைச்சுவையைக் குறிப்பின் உணர வைப்பது. மாயம் என்பது நேரே கருத்தை வெளிப்படுக்காமல் ஆழ்ந்து சுற்றியறியும் தன்மை. இம்மூன்றையும் ஒருங்குடைய கூத்து நோக்கு என்பது. தோள் நோக்கு - தோள்நோக்குதல்.

மகளிர் ஒருத்திதோளை ஒருத்தி நோக்குதலா? பாட்டுடைத் தலைவன் தோளை நோக்குதலா? என்பது ஈண்டுச்சிந்திக்கவேண்டிய இன்றியமையாத சிந்தனை. கூத்தோ திருஷ்டியைச் சிறப்பாகக் கொண்டது. பாடப்படுகின்ற பொருளோ தலைவனுடைய வீரம், மேனியழகு, கொடை முதலியன. அப்போது எதனை நோக்குவாள்? தன் தோளையா? அன்று; பாட்டுடைத்தலைவன் தோளையே நோக்கு வாள் என்க.

அங்ஙனம் ஆயின் தோணோக்கம் என்றிருத்தல் அமையுமே தோணோக்கம் ஆடாமோ என்கின்றூர்களே எனின், 'சேவடி கூடும் வண்ணம் தோணோக்கம்' (313), 'பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்' (319) எனவும் இடைக்கிடை வருதலான் தோளை நோக்கி, 'திருஷ்டி' என்னும் பார்வையைத் தனக்குச் சிறப்பங்க மாகக் கொண்ட கூத்தை ஆடுகின்றுள் என்பதே இப்பகுதிக்குக் கருத்தாதல் தெளிக.

ஆகவே இக்கூத்து, தலைவன் முன்னின்று, அவன் புகழ்களைப் பாடிக்கொண்டு ஒருத்தி ஒருத்தியாக முன்வந்து அவன் தோளைப் பார்த்தலாம் என்பது. அக்கூத்தின் பெயர் அக்கூத்திற்குரிய பாட்டை ஈண்டு உணர்த்திற்று. பாட்டுடைத் தலைவன் தில்லைக் கூத்தனுதலின் அப்பாட்டுத் திருத்தோணோக்கம் என அடைமொழி புணர்த்துக் கூறப்பெற்றது.

தம் தோளை நோக்கி ஆடுதல் எனவும், தம் தோளைத் தட்டி ஆடுதல் எனவும், தம் தோளைத்தொட்டுக் கைகொட்டி ஆடுதல் எனவும் பலவகையான் உரைப்பர். அடிகள் முதற்பாட்டில் 'கூத்தா உன் சேவடி கூடும்வண்ணம் தோணோக்கம்' எனவும், ஒன்பதாம் பாட்டில் 'மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்' எனவும் கூறுவதால் தோளே எமது நோக்கம் அதாவது இலட்சியம் என்ற பொருளிலே அவ்விளையாட்டு அமைந்துள்ளதாகவும் எண்ண லாம். இது விளையாட்டா? அல்லது சிலப்பதிகார உரையாசிரியர் கூறியாங்கு நோக்கு என்னும் விநோதக் கூத்துவகையுள் ஒன்று? என்று துணியக்கூடாமையானும், விநோதக்கூத்தாயின் அது இழி மகளிர் ஆடுவதென இலக்கணம் கூறப்படுதலின் இத்தோணோக்கம் இழிமகளிர்செயல் என்று எண்ணக்கூடாமையானும் இங்ஙனம் பல வேறு கருத்தும் விளக்கமும் இதனைப்பற்றி எழுவவாயின.

பழைய திருப்பெருந்துறைப் புராணம்,

" சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்
அத்தன் செயுங்கருணைக்கு ஆராமை யுண்மிகுந்து
பொத்தியகை கொட்டிப் புகழ்தல் தோணோக்கம் "

என்கின்றது. இதனால் தலைவனுடைய புகழைப்பாடிக் கைகொட்டி ஆடுதல் தோணோக்கம் எனக் கருதுகிறார் என்பது பெறப்படுதலின் கைவீசி ஆடுதலோ, தொட்டு ஆடுதலோ அன்று என்பது அவர் கருத்து.

பழையவுரை 'தோள் கொட்டி ஆடுவோம்' எனக் கூறுவதால் தோளைக்கொட்டி ஆடும் கூத்து என்று எண்ணத் தோன்றுகிறது. முதற்பதிகத்தில் ஞானவெற்றிபெற்ற ஞானியர் இத்தகைய சிவானந்தப் பேற்றிற்கு இத்தேகம் உதவியாயிற்றே என்று தேகத்தை நோக்கிக் கொண்டாடி, பசுகரணங்களைப் பதிகரணமாக்கிச் சிவானந்தமே தானாய்நின்ற முறைமை திருவருளாற் கிடைத்தது என்று அதனைப் பாடுவது என்றும் கூறும்.

இப்பதிகம் 'பிரபஞ்சசுத்தி' எனவும், அதன் கருத்து 'ஆன்மாக்களைச் சுத்திகரித்தல்' எனவும் அகத்தியச் சூத்திரமும், பழைய குறிப்பும் தெரிவிக்கின்றன.

இவ்வுலக வாழ்வைச் சதம் என்று எண்ணிக் கானல் நீரைக் கைநிறைய அள்ளிக்குடிக்க முயலும் அறிவிலிபோலாது, என்றும் பிறந்திறந்து மயங்காமல் சித்தம் சிவமாக்கிச் செய்தன யாவற்றையும் தவமாக்கும் அத்தன் கருணையினால் நாம் தோள்நோக்கம் ஆடுவோம் என்ற பகுதிகள் ஆன்மாக்களின் மலத்தை அகற்றிச் சிவஞானத்தைச் சேர்ப்பிக்கின்ற மறைமொழிகள் ஆதலின் இது பிரபஞ்ச சுத்தியாயிற்று எனலாம்.

இது பதினான்கு திருப்பாடல்களை உடையது. முதற்கண் தோணோக்கம் ஆடுவதன் குறிக்கோள் கூறுகிறது. அடுத்துத் திருவடிப்பேற்றிற்கு இன்றியமையாத சிவகுணங்களைத் தோத்தரித்தலைக் கூறுகிறது. இவ்வாறே கண்ணப்பநாயனாரை எடுத்துக் காட்டி அதுபோலத் தம்மை ஆட்கொண்டமையையும் ஒருருவே பலவுருவாய் நின்று சீவச்செயல்கள் அனைத்தையும் சிவச்செயல்களாக்கிப் பாதகமே புண்ணியமாகச் செய்து ஆனந்தமாக்கிப் பதவியிலிருக்கும் அமரர்கள் யாவரும் அழிந்துபோகத் திருமால் முதலிய தேவர்களுக்குச் சக்கரம் முதலியவற்றை அருளிச்செய்து, தீச்சார்புகளினால் கெட்ட தேவர்கள் முதலானோரை ஆட்கொண்டு, பிரமன் ஆதியோரைச் செருக்கடக்கிப் பிறவியைக் கெடுத்து இந்திரியச்

சேட்டைநீங்க ஆட்கொண்டருளிய அருமைப்பாட்டினையும் பாடித் தோணேக்கம் ஆடுவோமென்று ஒருபெண் ஏனைய மகளிரையும் உளப்படுத்தி உரைப்பதாக அமைந்திருக்கிறது.

இதில் முதற்கண் இறைவன் இயல்பைக்கூறும் பெண் இறைவனை இடைவிடாது சிந்தித்துத் தெளிந்து சிவஞானம் கைவரப் பெற்ற பக்குவான்மா ஆவள். அந்நிலையில் அடிகளார் இருக்கின்றார். முன்நிற்கும் பெண்கள் அவளைக்காட்டிலும் பக்குவத்தில் குறைந்த நிலையிலுள்ள ஆன்மாக்கள். அவர்களுக்கு இறைவனியல்பையும், அவன் ஆட்கொள்ளும் திறத்தையும், அருள் வழங்கும் எளிமையையும் எடுத்துக் கூறிச் சிவனருளுக்கு வழிப்படுத்துதலின் அனைவரையும் தூய்மையாக்கும் மகா தீட்சையாகிற பிரபஞ்ச சுத்தியாகிறது இப்பகுதி.

## தரவுகொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

313 *பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்*
*பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே*
*தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்*
*கூத்தாவுன் சேவடி கூடும்வண்ணந் தோணேக்கம்.* 1

*இ - ள்:* கானல் நீரை, பூத்துநிறைந்த பொய்கைக்கண் உள்ள தண்ணீர் இதுவேயாமென எண்ணி மொள்ளுகின்ற அறியாமைக்குணம் அடியேற்குப் பொருந்தாமல் நீக்கி ஆட்கொண்டவனே! விளங்குகின்ற தில்லைச்சிற்றம்பலத்தில் ஞான நடனம்செய்யும் நாதா! உனது சிவந்த திருவடியைக் கூடும் வண்ணம் தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, தோணேக்கம் ஆடுவதன் குறிக்கோள் இதுவென உணர்த்துகின்றது.

முற்கூறியவாறு இது இறைவனையே எண்ணி அவனை மனக்கோயிலில் இருத்திப் பயின்ற தீவிரதரப் பரிபாகமுற்ற தலைவி தன்னோடு ஒத்து, . ஏனைய மகளிரும் இச்சிவஞானப்பேற்றில் பங்கு பற்றுமாறு வேண்டிக்கொள்ளுதல் காண்க.

சிலர், தோழி தலைமகள் முதலியோரைப் பார்த்துக் கூறியதாகப் பொருள் காண்பர். அது பொருந்தாமையை இவற்றையே ஏதுவாகக்கொண்டு தெளிக.

பேதை - பொய்த் தோற்றத்தையே மெய்யாகவும் இல்லாதனவற்றை இருப்பனவாகவும் எண்ணும் இருவகை இயல்பு

உடையவன். வேனிற்காலத்துச் சுடுவெயிலில் மணற்பரப்பில் பொய்யாய்த் தோன்றும் கானல்நீரைப் புனலென்று மெய்யாகக் கருதியதும், புனலிலுள்ள கமலம், குவளை, அல்லி, நெய்தல் முதலான பூக்களைக் கானல்நீரினும் இருப்பதாகக் கற்பித்துக் கொண்டதும் பேதையின் குணமாம். உள்ளதை உள்ளவாறு உணர்தல் ஞானியின் செய்கையாம். ஆதலால், பேதைகுணம் ஆகாமையைத் தீர்த்துத் திருவருளைச் சார்தற்குரிய சிவஞானி யாக்கினாய் என்பது கருத்து.

தில்லை எக்காலத்தும் விளங்குவது ஆதலின் முக்கால வினை கொடுத்துத் 'திகழ் தில்லை' என்றார். சிற்றம்பலத்தில் அம்பலவாணன் செய்யும் அருள்நடனம் ஞானநடனமாமென் றறிக.

பூத்து ஆரும் பொய்கை எனப் பிரிக்க. பேய்த்தேர்-கானல் நீர். முகக்க உறுமெனப் பிரித்து எச்சஈறு விகாரப்பட்டதாகக் கொண்டு, உண்ண வந்தடைந்த என்று உரைப்பாருமுளர். தீர்த்தாய் என்பது விளிவேற்றுமை ஏற்றுநின்ற வினையாலணை யும் பெயர். 'பேதை குணம் ஆகாமே தீர்த்தாய்' என்பதால் மலபரிபாகம் வருவித்தமையும், 'சேவடி கூடும் வண்ணம் தோணோக்கம்' என்பதால் சிவஞானப்பேறும்முறையே அறிவிக் கப்பெறுதல் காண்க.

கானல்நீர் என்றது உலகியல் இன்பங்களாகிய தனு கரண புவன போகங்களை. சிலர் புறச்சமயக் கருத்துக்களை என்பர். பழைய உரைகாரரும் தேகாதிகரணங்களையே என்றல் காண்க. ஆரும் என்பதற்கு உண்ணத்தகும் என்று உரைப்பாருமுளர்.

தீர்த்தாய்! கூத்தா! எனப் பாடித் தோணோக்கம் ஆடுவோ மென்று சில சொல் வருவித்து முடிப்பர் சிலர். யாம் 'தீர்த்தாய் கூத்தா சேவடி கூடும்வண்ணம் தோணோக்கம் ஆடுவோம்' என விண்ணப்பமாக உரைத்தாம். இவ்விரண்டிற்குமுள்ள மரபுநலங்களை மதித்து உணர்க.

உலகத்தைச் சார்ந்து உலகமயமாய் இருக்கும் எங்களை அதனினின்று பிரித்தது மட்டும் திருவருளுக்கு ஏற்றதாக ஆகாது, திருவடியில் சேர்த்தலும் வேண்டும்; அதற்காகவே நாங்கள் தோணோக்கம் ஆடுகிறோம் என்று மலமாயைகளின் கழிவை உணர்த்தி, சேவடி சேர்தற்குரிய தகுதி பெற்றமையை அறிவித்தலின் இது பிரபஞ்சசுத்தியாதல் தெளிக.

314 என்றும் பிறந்திறந் தாழாமே யாண்டுகொண்டான்
கன்ருல் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்ருத சீர்த்தில்லை யம்பலவன் குணம்பரவித்
துன்ருர் குழலினீர் தோணேக்கம் ஆடாமோ. 2

இ-ள்: நெருங்கி அடர்ந்த கூந்தலையுடைய பெண்களே! எல்லையின்றிப் பிறந்தும் இறந்தும் ஆழ்ந்துபோகாவண்ணம் நம்மை ஆண்டுகொண்டவனும், பசுக்கன்ருல் விளாமரத்தை அடித்தவனுகிய திருமால் பிரமன் இவர்களால் காணுதற்கு அரிய குறையாத புகழ்மிக்கவனுமாகிய தில்லையம்பலவனின் குணங்களைப்பரவித் தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, தில்லையம்பலவன் திருவருட்குணத்தைப் பரவித் தோணேக்கம் ஆடுவோம் என்கின்றது.

இறைவன் அருட்செயல்களைச் சொல்லித் திருமந்திர உபதேசஞ்செய்து திருவடிக்கு ஆட்படுத்தும் குருநாதன்போலத் தலைவி தமக்கு இறைவன் செய்த உபகாரங்களையும், அதிகார மலத்தில் ஆழ்ந்திருப்பாருக்கு அறியலாகா அருமையையும், எல்லையற்ற அருட்குணங்களையும் பாடியாடுவோமெனக் கூறுவதாக உபதேசித்துத் திருவடிக்கு ஆட்படுத்துகின்ருர்.

திருவருட்சிந்தனையில்லாத பிறப்பு இறப்புக்கள் ஆகாமிய சஞ்சிதங்களாகிற வினைக்கடலில் ஆழச் செய்வன ஆதலின் அங்ஙனம் ஆழ்ந்து, நாம் அழியாதபடி குருலிங்கசங்கமபத்திகளைக் கொடுத்துச் சிவஞானம் வரச்செய்து ஆட்கொண்டான் என்கிருர். என்றும் என்பதை ஆட்கொண்டான் என்பதனேடு இயைக்க.

கன்ருல் விள எறிந்தான் திருமால். கண்ணனுகத் தோன்றி ஆயர்பாடியில் பசுக்களை மேய்த்தகாலத்தில் கபித்தாசுரன் என்பவன் கண்ணனைக் கொல்லுவதற்காக வழியில் கனிந்து குலுங்கும் விளாமரமாகத் தோன்றியிருந்தான். இம்மாயத்தை உணர்ந்த மாயவன் தம் ஆனிரையுள் வத்சாசுரன் என்பவன் கன்ருக மறைந்திருப்பதை அறிந்து, அவன் பின்கால் இரண்டையும்பிடித்து விளவின்மேல் வீசினர். கபித்தாசுரனும் வத்சாசுரனும் அசுரவடிவோடு வீழ்ந்திறந்தனர் என்பது வரலாறு.

திருமாலும் பிரமனும் காண்பரிய அம்பலவன் எனக் கூட்டுக. காண்பு - காணுதல்: தொழிற்பெயர். இறைவன் புகழ் எல்லையற்றது ஆதலின் 'குன்ருத சீர்' எனக்குறித்தார்.

இது 'ஆழாமே-ஆண்டுகொண்டான்' என்று மலநாசம் செய்ததை அறிவித்து, 'குணம் பரவி ஆடாமோ' என்று மேல் வினை ஏருமையைக் குறித்தலின் பிரபஞ்ச சுத்தியாயிற்று.

315 பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 3

இ - ள்: கண்ணப்பர், சாதனங்களைக்கொண்டு ஆகம விதியின்படி இயற்றப்படுகின்ற பூசையைப்போல் விளங்க, செருப்பை அணிந்த சிறந்த அடியை நிருமாலியம் கழிக்கும் கையாகவும், வாயைத் திருமஞ்சனமாட்டும் கலசமாகவும், தீயில் வெதுப்பிய ஊனை நிவேதிக்கும் திருவமுதாகவும் விரும்பிப் படைத்துத் தம்மன்பின் பெருமையை யாவரும் அறிய உடல்குளிர்ந்து அவ்விடத்துத் திருவருளையடைந்து இறைவன் பக்கலிலேயே நின்றவாற்றினைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, கண்ணப்பர் அன்பை இறைவன் வெளிப்படுத்திய அருமையைக் கூறித் தோணோக்கம் ஆடுவோம் என்கின்றது.

கண்ணப்பர் திருக்காளத்தியாராகிய குடுமித்தேவர்க்குப் பூசைசெய்ய வாயில் திருமஞ்சன நீரும், தலையில் பூவுங்கொண்டு வந்து சந்நிதியை அடைந்து, காளத்தியார் திருமுடியிலுள்ள பூவைத் தமது செருப்புக்காலால் மாற்றி, வாய்நீரை உமிழ்ந்து திருமஞ்சனமாட்டி, ஊனமுதைத் திருமுன்னர் வைத்து, தலைப் பூவை எடுத்துத் திருமுடியில் சூட்டி வழிபட்டார் என்பது வரலாறு. ஆதலால், 'செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம் விருப்புற்று' என்றார். விருப்புற்று என்றது விரும்பிப் படைத்து என்றவரை பொருள் உணர்த்தியது. வாயைக் கலசமாகவும், ஊனை அமுதமாகவும் உருவகித்த அடிகளார் சீரடியை நிர்மாலியங்கழிக்கும் கையாக உருவகிக்க வைத்தமையின் ஏகதேச உருவகம்.

சேடு - பெருமை; அழகுமாம். பெருமையை உலகமெலாம் அறிய. திருவடி இன்பத்தைப்பெற்றவுடன் உடல் குளிருமாதலால் 'மெய் குளிர்ந்து' என்றார். சிவானந்தமீதூரப் பெறுதலான் சிவபோகத்தழுந்தி அயல் அம்பைக் கண்ணிலூன்றிய கையோடும் நின்ற பேரன்பைப் பாடி ஆடுவோம் என்றுளாம். 'பொருள்பற்றி' 'அருள்பெற்று' என்பனவற்றில் இரண்டாம்

வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் திரியாது இயல்பாகவர வேண்டிய ளகரம் எதுகைநோக்கித் திரிந்தது.

பொருள்பற்றிச் செய்கின்ற பூசனை - அர்க்கிய பாத்திரங்களையும் பத்திர புஷ்பங்களையும் தேடி, ஐவகைச் சுத்திகளும் அமைத்துச் செய்யப்படும் ஆகமவிதி வழுவாத பூசை. அன்பு நெறிப் பூசையாகிய இதுவும் ஆகமநெறிப் பூசையாகிய சிவ கோசரியார் பூசைபோன்று இறைவற்கு உவப்பாக என்பதாம். பழைய உரை வேதாகம விதிப்படி மந்திர கிரியா பாவனைகள் வழுவாது செய்யப்படுகின்ற பூசனைபோல் விளங்க என்னும். கண்ணப்பர் பூசைக்கு உகந்த பெருமான் சிறுமியர்களாகிய நாம் ஆடுந்தோணேக்கத்திற்கும் விரும்பித் திருவடியளிப்பான் என்பது குறிப்பித்தாளாம்.

வேடனூர், விளங்க, விருப்புற்று, மெய் குளிர்ந்து, அருள் பெற்று நின்றவா தோணேக்கமாடாமோ என இயைக்க.

செருப்புற்ற சீரடி என்பதற்குத் திருக்கோயிலுள் சென்ற அடி மிகுசீரினை உடைய செருப்பு அணிந்த அடியாகவும் என உரைப்பர் சிலர். கருத்துச் சிறவாமையும், வரலாற்றேடு இயைபின்மையும் நோக்கி அதனை விடுக்க.

பழைய உரை விதிப்பூசைபோல் விளங்க, வேடனூர் சீரடி, வாய்க்கலசம் ஊனமுதம் விருப்புற்றுச் சேடத்தை ஊட்ட, இறைவன் மெய்குளிர்ந்து திருவருளைக்காட்டி நின்றவாற்றைப் பாடித் திருத்தோள் கொட்டிப் பாடுவீர்களாக என்று பொருள் விரிக்கும். இதில், சேடு - சேடம் என்ற சொல்லின் அம்கெட்டு வந்ததாகக்கொண்டு எச்சில் எனவும், அருள்பெற்று - திருவருளை வெளிப்படுத்தி எனவும் உரை காணப்பெற்றுள்ளமை தெளிக.

கண்ணப்பர் செய்த அன்புநெறி அருளைப் பெறுதற்கு உபாயமாயிற்று என, பிரபஞ்சத்திற்கு உபாயசுத்தி உணர்த்துதலின் இப்பதிகக் கருத்து விளங்குதல் காண்க.

**316** *கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்*
*நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி*
*நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்கன்*
*சொற்பால தானவா தோணேக்கம் ஆடாமோ.* **4**

இ - ள்: கண்டவர்களுடைய கல்லை ஒத்த வலிய மனம் கசிந்து உருகச் சிவகருணையினாலே காளத்திநாதரின் வலப் பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்பரை ஆட்கொண்டதுபோல,

அடியேன் மனத்தினுள் தாமே வலிய எழுந்தருளி, என்னை நல்லருளின்வழியே ஒழுகச்செய்து, உலகமெலாம் அறியப் புகழ்ந்துபேசுந் தன்மையான வகையைக்கூறித் தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் கண்ணப்பரை ஆட்கொண்டதுபோலவே என்னையும் ஆட்கொண்டு நாடறியப் புகழ்ந்துபேசுந்தன்மை அளித்தமையைப் பாடித் தோள்கொட்டி ஆடுவோம் என்றாள் என்கின்றது.

சிவகருணையால் பக்கத்தில்நிற்கும் கண்ணப்பரைக் கண்டவுடன், கண்டவர்மனம் கல்போல் வலிதாயினும் நீரா்யுருகும் என்பது உணர்த்தப்பெறுகின்றது. அத்தகைய கண்ணப்பர் நெஞ்சிற்புகுந்து ஆண்டதுபோல, என் நெஞ்சிலும் புகுந்து ஆண்டான்; நல்லவழியிலே ஒழுகப்பண்ணினான்; நாடு அறிய அனைவரும் புகழ்ந்துபேசும்வண்ணம் செய்தான் என முறையே இறைவன் செய்த உபகாரங்களை எண்ணிப் பாடி ஆடுவோம் என்கிறாள். உபகாரிசெய்த உபகாரங்களின் பெருமையையும் அருமையையும் என்னும்போது தம்மையும் மறந்து பாடவும் ஆடவும் தோன்றுமாதலின் சொற்பாலதானவாற்றைப் பாடி ஆடுவோம் என்றாள்.

இது, பிரபஞ்சவாசனை அற்று ஆன்மாவாகிய தாம் சுத்தியடைந்ததை அறிவித்தலின் பிரபஞ்சசுத்தி ஆயிற்று.

**317** *நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்*
*புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்*
*உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே [ளன்*
*பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.* 5

இ-ள்: நிலமும், நீரும், நெருப்பும், காற்றும், இவை அனைத்தையும் தம்மகப்படுத்தி நிற்கும் நீண்ட வானும், நிலவாகிய சந்திரனும், பகலைச் செய்வானாகிய சூரியனும், அறிவுடையவனாகிய எஜமானனும் ஆகிய அட்டமூர்த்தி வடிவினனாய்க் கூடி நிற்பவனாகிய தானொருவனே உலகங்கள் ஏழாகவும், திசைகள் பத்தாகவும் பலவகையில் நின்றவாற்றினை வியந்து தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் ஒருவனே பலவாகி நிற்கும் தன்மையை உணர்த்துகின்றது.

இறைவன் ஒருவனே அட்டமூர்த்தியாயும், ஏழுலகங்களாயும் பத்துத் திசையாயும் கலந்தும் விரிந்தும் நிற்பதைப்பாடி ஆடுவோம் என்கின்ருள்.

உயிர் என்றது காற்றினை: முதனிலைத் தொழிலாகுபெயர். ஏனையபூதங்கள் விரிந்து தோன்றி வைக இடந்தந்துநிற்றலின் வானை 'நீள்விசும்பு' என்ருர்.

புலனுய மைந்தன் - அறிவு வடிவான சீவன். யசமானன் என்பர் இதனை. நிலவோன் பகலோன் என்றதன் தொகை நிலாப்பகலோன் என்ருயிற்று. பகல் - ஒளி. புணர்ந்து நின்ருன் - காணப்படும் பருப்பூதங்களாயும், அவற்றின் நுண்பூதங்களாயும், அவற்றின் உணர்வாயும், அது அதுவேயாயும் கலந்தும் நிற்பவன். நின்றவனுகிய தாஞெருவனுமே என்க. பலவாகி நின்றவா - அவையேயாகியும், அவற்றுள் தானுகியும் நின்றவாற்றினை. உலகு ஏழு, திசை பத்து முன்னர்க் கூறப் பெற்றன.

பிரபஞ்சமுழுதும் சிவமயமாகக் காண்டலின் பிரபஞ்சசுத்தி ஆயிற்று.

318 புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினுல் தோணேக்கம் ஆடாமோ. 6

இ-ள்: புத்தசமயம் முதலான இழிந்த அறிவினையுடைய பல சமயங்கள் தத்தம் கொள்கைகளில் நின்று தடுமாற்றம் அடைந்துநிற்க, அடியேங்களுடைய சித்தத்தைச் சிவமயம் ஆக்கி, யாம் செய்த யாவற்றையும் தவமாகச் செய்கின்ற இறைவனுடைய எல்லையற்ற கருணையினுலே தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, நாம் தோணேக்கமாடுதல் நம்செயலன்று சிவகருணை என்பது உணர்த்துகின்றது. பழையவுரை சைவசமயமன்றி மற்றுள்ள சமயம் புல்லறிவு என்பது உணர்த்துகின்றது என்னும்.

புத்தமதம் முதலான சிவபோதத்தால் விளைந்த சமயங்கள் அமைதி காணுது தடுமாற்றமுற்று நிற்க, அடியேங்களை ஆட்கொண்டு பேரின்பம் உதவிய கருணையினுலே தோணேக்கம் ஆடுவோம் என்கின்ருளாம்.

புத்தம் முதலாய சமயம் என்றது புத்தன் முதலாய சமயம் என்றது, சைவம்போல் முழுமுதற்கடவுளான் அன்றிப் புத்தனுகிய ஆசிரியனுற் பெயர்பெற்றதாகலின் என்க.

புத்தம் ஐந்து கந்தங்களும் வழிவழியாகக் கெடுகையும், துன்பமும் பற்றும் அழிதலுமே முத்தி என்னும். கந்தங்கெடுகை முத்தியானுல் முத்தியை அடைபவன் யார்? அடைபவனில்லையானுல் முத்தி யாருக்கு? பஞ்சகந்தங்களுக்கே முத்தி எனின், பஞ்சகந்தங்கள் கெடுகையே முத்தியென்ற உன் கொள்கை அழிந்ததே; கந்தம் கெடாதபோது முத்தியும் இல்லையாகுமே என்று இவ்வண்ணம் துணிவு காணமுடியாத தடுமாற்றம் உடையது. இவ்வண்ணமே ஏனைய ஆருகதம் முதலான மதங்களும். இவற்றை "ஐந்து கந்தமும் சந்தானத்தழிதல்" முதலாகவுள்ள பரபக்கப்பாடல்களால் தெளிக.

மதங்கள் - கொள்கைகள். தட்டுளுப்பு - தடுமாற்றம். நிற்க- உண்மை கண்டுய்யமாட்டாவாய் நிற்க.

சீவனுக்கு அந்தக்கரணங்களில் ஒன்றுயிருந்து புலன்களை அறிதற்குபகாரப்பட்டசித்தம், புறமான புலனுகர்ச்சிகளைவிட்டு, உண்ணுஞ்சோறும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் இறைவனுக நிலைத்துநின்று அனுபவிக்கும்பேறு பெற்றதால் பாவனை முற்றிப் பாவகப்பயனை எய்திற்று என்பார் 'சித்தம் சிவமாக்கி' என்றருளினுர்கள். இஃதறியாதார்சிலர் சீவன் சிவனே ஆயிற்று எனக் கேவலாத்துவிதம் கூறுவாரும், சிவனேடு ஒக்கச் செயல் புரியும் தன்மைபெற்றது எனச் சமவாதம் கூறுவாரும் ஆயினர். பாவனை முற்றியதால் பாவகமாயிற்றன்று; பாவகப்பயனை எய்திற்று என்றலே கருத்து.

சீவபோதங்கழன்று, சிவபோதமிக்கநிலையில் செய்யப்படும் செயல்கள் சிவச்செயல்களே ஆதலின் 'செய்தனவே தவமாக்கும்' என்றருளினுர். தவத்தான் விளையும் பயன் சிவஞானம். சிவச்செயல்களால் விளைவதும் அதுவேயாகலின் இங்ஙனம் அருளியதாம்.

அத்தன்-தலைவன்; தந்தையுமாம். கருணையினுல் ஆடுவோமென்றுள். இத்திருப்பாடல்வரை இறைவன் உபகாரத்தையும் இயல்பையும் பாடி ஆடுவோம் என்றவள், ஆட்டம் தற்செயல் அன்று, இறைவன் கருணை இயக்குகின்றது, தோற்பாவைக் கூத்தென நாம் ஆடுகின்றேம் என்ற உண்மையுணர்ந்தாள் ஆதலின் இங்ஙனம் கூறினுளாம். திருமூலர்,

" சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே"

என அருளுவதாலும் சித்தம் சிவமாக்கும் திறனே அறிக.

சிலர் புத்தசமயி முதலானோர் திகைத்து நிற்க, அவர்மேல் இரங்கிய காரணத்தால், அவர் உள்ளத்தைச் சிவமயமாக்கி அதனால் அவர் செய்தனவெல்லாம் தவச்செயலாம்படிச் செய்யும் தலைவனுடைய திருவருளால் ஆடுவோம் என்று உரைப்பர். உண்மை உணரமாட்டாத புறச்சமயிகள் திருவருள் உள் நின்று உணர்த்தாமையான், என்றும் உணரார்களாதலின், அவர்கள் சித்தம் சிவமாதலும் செய்தன தவமாதலும் இல்லை. புறச்சமய நெறிநின்றும் அகத்தே புக்க புண்ணியனுர் புண்ணியத்தால் எய்தக்கடவதாகிய சிவஞானம் ஒன்றுமே ஆன்மா தன்தன்மைகெட்டுச் சிவமாந்தன்மை எய்தும். சலியாது சிவமாந்தன்மையினின்ற சீவன் செய்வனவே தவமாகும் என்பதறிந்து முற்குறித்தவுரை சிவஞானச்செய்தி சேராமையால் வந்த விளேவென்று எண்ணி விடுக்க.

இது, சிவபோதம் மிக்குச் சிவச்செயலே செய்விக்கும் சிவன் கருணையை உணர்ந்து உரைத்தலால் பிரபஞ்சசுத்தி ஆயிற்று.

319 தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதக மேசோறு பற்றினவா தோணேக்கம். 7

இ-ள்: குற்றமில்லாத பிரமசாரியாகிய விசாரசர்மர் சாதியால் வேதியனென்றும் தந்தையென்றும் பாராது, சிவச்செயல்களைச் சிதைத்தவனாகிய எச்சதத்தனுடைய கால்கள் இரண்டையும் வெட்ட, அந்தப் பாதகமானது இறைவன் திருவருளால் தேவர்கள் தொழத்தக்க சிவபுண்ணியமாகக் கொண்ட முறைமையைப்பாடித் தோணேக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, சண்டேசுரர் செய்த தீவினையையே சிவபுண்ணியமாக்கிய இறையருளை வியந்து உணர்த்துகிறது.

மாணி சிதைத்தானைத் தாதைதனைத் தாளிரண்டும் சேதிப்ப அப்பாதகமே திருவருளால் சோர்வு பற்றினவா தோணேக்கம் என்று கூட்டிப் பொருள்கொள்க.

மாணி - பிரமசாரி; ஈண்டு விசாரசர்மரை உணர்த்தியது. விசாரசர்மர் தந்தையின் ஆணையின்வண்ணம் பசுக்களை மேய்த்தலும், வேதம் ஓதுதலும், சிவபூசை செய்தலுமாகிய இவற்றையன்றி வேறு செயலிலராதலின் 'தீதில்லை மாணி' என்றார்.

தீதில் மாணி எனக்கொண்டு, ஐகாரத்தைச் சாரியையாக எண்ணுக. தீது இல் ஐ மாணி எனக்கொண்டு குற்றமற்ற தலைவனாகிய பிரமசாரி எனலுமாம்.

சிவகருமம் - சிவபுண்ணியச் செயல்கள். அவை சரியையும் கிரியையும், யோகமும், ஞானமுமாகிய நான்கனுள் முன்னின்ற இரண்டுமாம். இதனைத் "தாதமார்க்கம் சாற்றின்" "புத்திர மார்க்கம் புகலின்" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தங்களால் நன்குணரலாம். சிவகருமங்களும் காமியப் பயனைக் கருதிச் செய்யப்படுவனவாயின் அவை அத்துணைச் சிறந்தன அல்ல. சிவஞானப்பேற்றின் வாயிலாகத் திருவடிப்பேறு ஒன்றனையே கருதிச் செய்யப்படுவனவாயின் அதனால் வினைபயன் மிகுதல்போல அதனைச் சிதைத்தவருக்குத் தீமையும் மிகுதியாம் என்பது உணரத்தக்கது. ஆதலால் எச்சதத்தன் தன் மகன் செய்வது விளையாட்டாகிய அவகருமம் என்றெண்ணி அதற்காம் உபகரணங்களைக் காலாற்சிதைக்கக் கருதினான். சிவோகம் பாவனையிலிருந்து விசாரசர்மர் செய்வன யாவும் நிஷ்காமியமாகிய சிவகருமமானதால் அதனைச் சிதைப்புழிப் பாவம் மிகுதியாயிற்று என்பார் 'சிவகருமம் சிதைத்தானை' என்றார்.

சாதியும் வேதியன் - சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவுமுணர்ந்த அந்தணர்சாதியுள் தோன்றியிருந்தும் எச்சதத்தன் சிவகருமத்திற்கும் அவகருமத்திற்கும் வேற்றுமை அறியானாயினான் என்பார் 'சாதியும் வேதியன்' என உயர்வுசிறப்பும்மை கொடுத்தோதினார்.

வேதியனுக்கு ஊறுவிளைவிப்பதால் பிரமபாதகமும் தன் தந்தைக்குத் துன்பம் விளைவிப்பதால் பிதுர்கத்தியும் விசாரசர்மருக்கு விளையவேண்டியிருக்க, சிவகருமம் சிதைத்தலால் வரும் பாவத்தால் எச்சதத்தனுக்கு வேதியத்தன்மையும் தந்தையென்ற முறைமையும் தானே நழுவியதனாலும், சிவகருமம் செய்த பாவம் ஒன்றே விஞ்சியிருப்பதால் குதலைமை தந்தைகண் தோன்றின் அவன்பெற்ற புதல்வன் போக்கவேண்டிய இன்றியமையாமையும் கடமையும்பற்றி வெட்ட அச்செயல் உலகவர் நிலையில் பாதகம் என்று கருதப்படினும் சிவபுண்ணியமே ஆனவாறு பாடுவோம் என்றாள்.

இதனை,

" அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவ மாகும் "

என்ற சிவஞானசித்தியார் திருவாக்கால் உணர்க.

திருச்சேய்ஞலூரிலே அந்தணர் குலத்தில் எச்சதத்தன் என்பானுக்கு விசாரசர்மர் என்பார் மகனாகத்தோன்றிவளர்ந்து வந்தார். உபநயனமானவுடன் குலவழக்கத்தின்படி, பசுக்களை மேய்த்துவந்தார். மண்ணியாற்றங்கரையில் திருவாப்பாடி என்ற தலத்தில் பசுக்களை மேய்த்துவரும்போது, பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் தொண்டராம் புண்ணியம் விசாரசர்மர் மனத்திலே முகிழ்க்க, அவர் ஆத்திமரத்தின் நிழலில் மணலாற் சிவலிங்கம் அமைத்துப் பசுக்கள் கறந்த பாலைக்கொண்டு திருமஞ்சனம் செய்வித்து ஆகமவிதிப்படிப் பூசித்துவந்தார். பசு பால் குறைதலைக்கண்ட அந்தணர்கள் தந்தைக்கு அறிவிக்கத் தந்தை எச்சதத்தன், மறைந்திருந்து கண்டு இவன் செயல் விளையாட்டென்று மதித்தான். திருமஞ்சனத்திற்காக வைத்திருந்த பாலைக் காலால் இடறினன். விசாரசர்மர் மாடோச்சும் கொம்பைக் கையில் தூக்க அது வாளாயிற்று. தந்தையின் காலைத் தடிந்தார். இறைவன் வெளிப்பட்டுத் தான் சாத்திய மாலையும், உண்ட திருவமுதும் உனக்கே ஆவன; சண்டேசுவரனும் பதம் தந்தோம் என்று அருளித் தந்தைக்கும் கருணை செய்தார் என்பது வரலாறு. இதனை,

" பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும் — சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டீசர் தஞ்செயலால் தான் "

என்ற திருக்களிற்றுப்படியார் வெண்பா இனிது விளக்கும்.

சோறு - நுகரத்தக்க உணவு; அது சிவபுண்ணியம். பாதகம் - நுகர்தற்கு ஆகாத நஞ்சு. நஞ்சுபோல்வதாகிய பாதகமே சோறுபோல்வதாகிய தன்மையை அடைந்தது என முன்னதற்கு உவமமும் பின்னதற்குப் பொருளும் கூட்டிப் பொருள் காண்க.

இது பிரபஞ்சப்பற்றிலிருந்து விடுபட்ட ஆன்மாக்களின் இயல்பை அறிவித்தலின் பிரபஞ்சசுத்தியாயிற்று.

320 *மான மழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்*
*வானந் தொழுந்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்*
*ஆனந்தக் கூத்தன் அருள்பெறினும் அவ்வணமே*
*ஆனந்த மாகிநின் றுடாமோ தோணோக்கம்.* 8

இ - ள்: நல்ல பெண்களே! பெருமை கெட்டோம்; சீவ போதத்தை மறந்தோம்; அந்நிலையில் அடியோம் விண்ணவர் தொழும் தென்னவனாகிய இறைவனுடைய பெரிய திருவடிகளை நினைந்து நினைந்து ஆனந்தக்கூத்தனாகிய அவனருளையும் பெறுவோமாயின், நாமும் ஆனந்தவடிவாகி அவன்வண்ணமாகவே நின்று தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, தற்போதமழிந்த நாங்கள் தலைவனருளையும் பெறுவோமாயின் ஆனந்தவடிவம் ஆவோம்; ஆடுவோம் என்று உணர்த்துகிறது.

இறைவன் திருவருளைச்சார்ந்து அவனருள்வண்ணமாய் நின்று ஆடுவோம் என்றாள் என்க.

மங்கையர் ஆவார் தலைவனைச் சார்ந்து இன்பந்துய்க்கும் திறமுடையார். அவர்கள் தம் பெண்மையின் சிறப்பையும் தலைவனின் காதன்மையுமுணர்ந்து, தலைவனுக்கு யாம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல விருந்தாயிருக்கின்றோம்; எம்மை அன்றி அவனது வாழ்வு சிறவாது என்று இருக்கும் மானமும், நுகர்ச்சியை அறிந்து அனுபவிக்கும் மதியும் உடையார். அவருள் 'மங்கை நல்லீர்' என அழைக்கப்படும் இவர்கள் 'யாம் என்றும் தலைவன் உடைமை' எனத் தன்மதிப்பாகிய மானத்தை இழந்தவர்கள், தற்போதம் கழலப் பெற்றவர்கள் என்று அறிவிப்பார் 'மங்கை நல்லீர்! மானம் அழிந்தோம், மதி மறந்தோம்' என்று தம் பரிபாகவிசேடத்தை விண்ணப்பிக்கின்றார். மேலும் தாம் மேற்கொள்ள வேண்டிய கடமையாக இறைவன் திருவடியைத் தியானித்தலும், அதனால் விளையும் திருவருட்பேறும், அதனால் விளையும் ஆனந்த அனுபவமும், அதனால் விளையும் தோணோக்கம் ஆடுதலும் ஆகிய இவற்றை முறையாக உணர்த்துகின்றாள்.

வானம்: இடவாகுபெயராகச் சொர்க்கம் முதல் சத்திய லோகமீறான மேல் மூன்று லோகங்களிலுமுள்ள தேவர்களை உணர்த்திநின்றது.

தென்னன் - பாண்டியன். இறைவன் மண்ணுலகமாகிய செந்தமிழ்நாட்டிலிருந்து தேவர்கள்வந்து வணங்கும் பெருஞ்

சிறப்பினனாய், எம்மவர்க்கு எளியனாக விளங்குகிறான் என்பார் 'வானம் தொழும் தென்னன்' என்றார்.

கழல் - வீர இலச்சினையாகக் காலில் அணியப்படும் அணி. வார் கழல் - புகழால் நீண்ட அணி. இது தானியாகுபெயராய்த் திருவடியை உணர்த்திற்று. அன்றியும் தலைவியின் கொங்கை இடையுண்மையை அறிவிப்பது போல, அருவானதும் திருவருள் வடிவானதும் அறிந்து அனுபவிப்பதற்கு மட்டும் உரியதுமான திருவடியைக் கழலாகிய பருப்பொருளைக்கொண்டு தூலாருந்ததி நியாயமாகக் காட்டினார் எனலுமாம்.

நினைந்து - இடைவிடாது தியானித்து. ஆனந்தக்கூத்தன் - இயற்கையேயான ஆனந்தத்தால் விளைந்த கூத்தினையுடையவன். அருள்பெறின் என்பது செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய்த் துணிவைக் காட்டிநின்றது. அவ்வணமே என்ற சுட்டு அவனது ஆனந்தமேயான நிலையைக் குறித்தது.

இது, சுக துக்க ரூபமான பிரபஞ்சத்தை அங்ஙனம் அனுபவியாமல் எல்லாம் சிவமயமாகக்கண்டு அனுபவிப்பதை அறிவித்தலின் பிரபஞ்சசுத்தியாயிற்று.

**321** *எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்*
*கண்ணுத லெந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்*
*எண்ணிலி யிந்திரர் எத்தனையோ பிரமர்களும்*
*மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்.* 9

இ - ள் : பெண்ணே! பெரிய பெருமானுடைய கருணைக்குரிய தாரகன் தாரகாட்சன் வித்யுன்மாலி என்ற இராக்கதர் மூவரும் அழலிற்குத்தப்பி நெற்றியிற் கண்ணையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானுடைய முதல்வாயிலிலே காவலராகப் பணியேற்று நின்றதன் பின்னே இவ்வுலகில் கணக்கற்ற இந்திரர்களும், எத்தனையோ பிரமர்களும், திருமால் பலரும் அழிந்தனர்; இதனைக்காண்பாயாக; கண்டு இறைவனுடைய அநாதிநித்தியத் தன்மையைப்பாடித் தோணோக்கமாடுவோம் என்றவாறு.

இது, இறைவன் திருவருளுக்கு இலக்கான இராக்கதர்களும் அழியாத்தன்மை எய்த, பிரமன் முதலான தேவர்கள் திருவருள் பெருமையால் அழிந்துபட்டனர் எனத் திருவருட்பேற்றின் சிறப்புணர்த்துகிறது.

இறைவன் திருவருள் அழியத்தக்க பொருளையும் அழியாது காக்கும் பேராற்றல் உடையது; அழியத்தக்க ஆற்றலதாகிய அக்கினி முதலியனவும் அற்றல் மடங்கிச் செயலற்றுப்போம். ஆதலால், இறைவன் கருணைக்கு இலக்கான மூவரையும் 'எண்ணுடை மூவர்' என்றார். எண் - இறைவன் எண்ணமாகிய கருணை. அதனையுடைய மூவர் என்க. எண் - தியானம் எனக்கொண்டு, இறைவன்பால் தியானமுடைய மூவர் எனலுமாம். திரிபுராரிகள் அரக்கராயினும் சிவபூசை இடையீடின்றிச் செய்பவர்களாதலானும், பௌத்தாவதாரம் எடுத்த திருமால் உபதேசங்களால் மனந்திரிந்தும் சிவத்தியானத்தை விடாதவர்களாதலானும் இங்ஙனம் கூறினார் என வரலாற்றைத் துணைக் கொண்டு கூறியதாம்.

சிவனருளைச் சிறிதேபெற்ற முனிவர்கள் இட்ட சாபத்தீயிலிருந்து சிவகருணையிருந்தால் தப்பலாம். சிவபெருமானே ஏவிய தீயிலிருந்து தப்பவேண்டுமாயின் அவன் கருணையொன்றே துணையாவது; வேறின்று என்பார் 'எண்ணுடை மூவர் எரி பிழைத்து' என்றார். பிழைத்தல் - தப்பியுய்தல்.

கண்ணுதல் என்றது இறைவனுக்கு உரிய சிறப்பான அடையாளம் கூறி உணர்த்தியது. நுதற்கண் என்பது சொல் நிலைமாறியது; நுதலில் கண்ணுடையான் என்னும் பொருளது: சினையாகுபெயர்.

நஞ்சிற்கு நஞ்சே மருந்தாவதுபோல எரியிலிருந்து அடியாரை உய்யக்கொள்ள, எரிக்கண்ணையே உடையன் என்பார் 'கண்ணுதல்' என்று விதந்தனர். தீமைகண்ட மன்மதனை எரித்ததுபோல மறக்கருணை காட்டுவாறுயினும் அருள்வழங்கு நிலையில் எம் தந்தையாவான் என்பார் அடுத்து 'தந்தை' என்றார்.

கடைத்தலை - முன்வாயில். தீயிலிருந்து தப்பிய மூவரும் இறைவன் திருக்கோயிலின் முன்வாயிலில் காவலாக நின்றனர் என்ற வரலாறு 'கடைத்தலைமுன் நின்றதன்பின்' என்பதால் குறிக்கப்பெறுகின்றது. கடைத்தலையில் காவலராக நிறுத்திய முதன்மை இறைவனுடையதாகவும் 'நின்றதன் பின்' என இராக்கதர் வினையாகக் கூறியது, இறைவனருள் பெற்றபிறகு ஆன்மாக்களுக்கு உண்டாகும் பதிபோத எழுச்சியாகிய அதிகாரத்தான் என்க. நின்றதன்பின் எனப் பின் என்னும் காலப் பெயர்ச்சொல்லைச் சார்த்திக் கூறியது, சார்த்தியன்றி அளக்க முடியாததாய் எல்லையின்றி இருக்கும் காலத்திற்கு அரக்கர்கள்

காவற்பதவியை ஏற்ற பிறகு தலைத்தேவர் பலர் அழிந்தனர்; அதற்குமுன் எத்துணைப்பேரோ என உய்த்துணரவைத்த வாறும்.

மண்மிசை இந்திரர், பிரமர், மால் எனக் கூட்டுக. நமக்கும் காணற்குரியது பிருதிவி அண்டங்களாதலின் அதிலுள்ளவர் களின் அழிவைக் கூறவே ஏனைய அண்டங்களிலும், ஏனைய மாயா புவனங்களிலும் அதிகாரத்திலிருக்கும் அரி பிரமர்களைப் பற்றிக் கூறுவானேன் என்று உய்த்துணரவைத்தவாறு. இத் திருப்பாடல்,

" நூறு கோடி பிரமர்கள் நுங்கினர்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே "

என்ற தமிழ்வேதக்கருத்தை ஒத்துநிற்றல் காண்க.

கருணைக்கு இலக்கானோர் அழியாப்பேறு பெற்று, என்றும் சிவதரிசன ஆனந்தப்பேறு பெற்றதும், அதற்கு விலக்கானோர் பிறவிச்சூழலில் அகப்பட்டுக் கறங்கும் சகடமும்போல மேலும் கீழுமாகப் பிறந்திறப்பதும் கூறி, பிரபஞ்சம் இவ்வண்ணம் சிவகருணைக்கிலக்காகிச் சுத்தமெய்துகிறதென அறிவித்தலின் இத்திருப்பாடல் பிரபஞ்சசுத்தியாயிற்று.

322 *பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்*
*தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே*
*சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவா*
*றெங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ.* **10**

இ-ள் : ஆயிரம் தாமரைப்பூக்களில் ஒருபூக் குறைய, தம் தாமரைபோன்ற கண்ணையேதோண்டிச் சிவபெருமானுடைய சிவந்த திருவடியின்மேலே சாத்துதலும், சங்கரனும் எம் தலைவனுமாகிய பெருமான் திருமாலுக்குச் சக்கரப்படையை அருளிய பேரருளை எங்கும் என்றும் நாம் புகழ்ந்து பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, திருமாலுக்குச் சங்கரன் சக்கரமருளிய பேரருளைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்கின்றது.

திருமால் ஒருநாள் விகடக்கூத்து ஆடினார். அப்போது பெருமான் அணிந்திருந்த பிரமகபாலம் சிரித்தது. திருமாலின்

சக்கராயுதத்தை விழுங்கியது. திருமால் சக்கராயுதமின்றித் தவித்தார். அச்சக்கரத்தை மீட்டும்பெற வேண்டினர். திருவீழி மிழலையில் ஆகம விதிப்படி ஒவ்வொருநாளும் ஆயிரந்தாமரை மலர்கொண்டு இறைவனை வழிபட்டு வந்தார். இறைவன் ஒரு நாள் திருமாலுடைய சிவபக்திச்சிறப்பை உலகறியச்செய்வதற்காக ஒரு தாமரைப்பூ குறையச் செய்தார். திருமால் வருந்தித் தம்மைப் புண்டரீகாட்சன் என உலகம் அழைப்பதை அறிந்து, தமது கண்களில் ஒன்றைப் பறித்து இறைவன் திருவடியில் சாத்திப் பூசையை நிறைவேற்றினர். திருமாலின் அன்பிற்கு உகந்த பெருமான் அவருக்குச் சக்கரப்படையை மீட்டுக்கொடுத்தருளினர் என்பது வரலாறு. இதனல் திருவீழிமிழலை இறைவனுக்கு நேத்திரார்ப்பணேஸ்வரர், சக்கரப்பிரதர் என்ற திருநாமங்கள் விளைந்தன. இவ்வரலாறு முதலிரண்டடிகளிலும் குறிக்கப்பெறுகின்றது.

பங்கயம் - பங்கஜம் என்பதன் திரிபு. சேற்றில் முளைத்தது என்னும் காரணத்தால் விளைந்த பெயர். இடந்து - தோண்டி.

சங்கரன் - சுகத்தைச் செய்பவன். சிவபெருமான் பூசைக்கு உகந்த பெருமானுகச் சக்கரம் அருளிச்செய்து திருமாலுக்குச் சுகத்தைச் செய்தலின் சங்கரன் என்ருர். பிரான் - தலைவன். எம் பிரான் - எமக்கெல்லாம் தலைவன். பிரான் - வள்ளன்மையுடையவன் என்று உரைவகுக்கும் வைணவநூல்கள்.

எங்கும் பரவி என்ருர்; இச்செய்தி இறைவனுடைய முழுமுதற்றன்மைக்கும் வள்ளன்மைக்கும் கருணைக்கும் எடுத்துக்காட்டாக இருந்து எம்மனத்தைக் கனியவைக்கும் அருட்செயலாதலின் என்க. எங்கும் என்பது இடப்பன்மையின் வந்தது. உபலக்கணத்தால் என்றும் எனக் காலப்பன்மையுங்கொள்க.

இத்திருப்பாடல் இறைவன் புகழைப்பாடித் தோளை வீசி நின்ருடுதல் தோணேக்கமாம் என அதனிலக்கணம் தோன்ற நிற்றல் காண்க.

திருமால் ஐவகைச் சுத்தியும் அமைத்துப் பூசித்தமையைக் கூறுதலின் பிரபஞ்ச சுத்தி அறிவிக்கின்றமை காண்க.

**323** *காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்*
*நாமகள் நாசிசிரம் பிரமன் கரமெரியைச்*
*சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்*
*தூய்மைகள் செய்தவா தோணேக்கம் ஆடாமோ.* **11**

இ - ள் : மன்மதன் உடலையும், காலனுடைய உயிரையும், கொளுத்துகின்ற சூரியனுடைய பல்லையும், சரஸ்வதியின் மூக்கையும், பிரமனுடைய சிரத்தையும், தீயின் கைகளையும், சந்திரனுடைய கலைகளையும், தக்கன் எச்சன் என்னும் இருவருடைய தலைகளையும் அகற்றி அவரவர்கள் செய்த பாவ கன்மங்களைப் போக்கித் தூய்மையுறுத்தியவாறறைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, சிவத்துரோகிகள் சிலருக்குத் தண்டனை அளித்து அவர்கள் பாவத்தைப் போக்கி இறைவன் ஆட்கொண்டமை யைக் கூறுகிறது.

திருக்கைலைமலையின் தென்பாலுள்ள வடவாலின் கீழே இறைவன் குருநாதராக எழுந்தருளியிருந்து பலகாலம் சனகர் முதலியோர்க்குச் சிவஞானோபதேசம் செய்தனர். இந்நிலையில் சூரபன்மனுடைய தொல்லையைத் தாங்கலாற்ருத தேவர்கள் பார்வதிதேவியாரை இறைவன் மணக்கச் செய்து அவர்கள் வாயிலாகச் சேனுபதியான முருகப்பெருமானையடைய விரைந்து சிவபெருமான் தவத்தைக்கலைக்க மன்மதனை ஏவினர். மன்மதன் அவ்வாறே சென்று நெற்றிக்கண்ணால் எரிந்து சாம்பலாயினன் என்பது வரலாறு. இதுவே காமன் உடலம் தூய்மைசெய்த வரலாறு.

மார்க்கண்டேயர் என்னும் முனிகுமாரர் திருக்கடவூரில் அமுதகடேசரை விதிப்படி வழிபட்டு வந்தார். அவருக்குரிய பதினறு வயது நிரம்பியது. காலன் அவர் உயிரைக் கவர வந்தான். மார்க்கண்டேயர் சிவபூசை செய்துகொண்டிருந்தார். காலன் சிவலிங்கப்பெருமானையும் சேர்த்துக் காலபாசம் வீசி மார்க்கண்டேயரின் உயிரைக் கவர முயன்றான். இறைவன் சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு அக்காலனை உதைத்துக் கொன்ருரென்பது வரலாறு. இதுவே காலன் உயிர்த் தூய்மை செய்த செய்தி.

சிவநிந்தகனை தக்கன்யாகத்தில் பங்குகொண்டமையால் இறைவன் வீரபத்திரராக எழுந்தருளித் தக்கன் தலையையும் எச்சன் என்னும் யாகபுருஷன் தலையையும் அறுத்து வீழ்த்தினர்; பர்க்கன் என்னும் சூரியனுடைய பல்லைப் பிடுங்கினர்; கலைமகளை மூக்கையறுத்தார்; அக்கினிதேவன் கையை வெட்டினர்; சந்திரனைக் காலின்கீழிட்டுத் தேய்த்து அவன் கலைகளை நீக்கினர்; இவ்வண்ணம் சிவநிந்தகன்செயலில் பங்குகொண்ட பாவங்களைப் போக்கி அவர்களைத் தூய்மையுறுத்தினர் என்பது வரலாறு.

பிரமன், யாமும் சிவபெருமான்போல ஐந்து சிரம் உடையேம்; படைத்தல்தொழில்புரிவோம் என்று தருக்க, இறைவன் அவன் சிரங்களில் ஒன்றினைக் கைவிரல் நகத்தால் கிள்ளி அவன் தருக்கை ஒழித்து ஆட்கொண்டார் என்பது வரலாறு.

இவ்வண்ணம் இத்திருப்பாடல் முழுதும் பிரமனாதியர்களைத் தூய்மைசெய்தமை அறிவித்தலின் பிரபஞ்சசுத்தியாயிற்று.

*324 பிரம னரியென் றிருவருந்தம் பேதைமையால்*
*பரம மியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க*
*அரனார் அழலுருவா யங்கே யளவிறந்து*
*பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.* 12

இ-ள்: பிரமனும் திருமாலும் என்ற இருவரும் தம் அறியாமையால் யாமே பரம்பொருள் யாமே பரம்பொருள் என்று வாதிட, அவர்களுடைய தன்முனைப்பையொடுக்கச் சிவபெருமான் செந்தீயுருவாக எழுந்தருளி அவர்களுடைய முயற்சியின் அளவையும், அறிவின் அளவையும், பொறி புலன்களின் அளவையும் கடந்து பரம்பொருளாகி நின்ற வாற்றைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, பிரமனும் திருமாலும் யாமே பரம்பொருள் என்ற அகந்தையைப் போக்கி ஆட்கொண்டவாற்றை உணர்த்துகிறது.

அரியும் பிரமனும் தாம் செய்யுந்தொழில்கள் சிவபெருமான் அருளால் - ஏவலால் கிடைத்தவை; யாம் என்றும் அவருடைய மீளா அடிமை என்பதை மறந்து, ஆணவத்தின் காரியமாகிய அறியாமையான் மிக்கு, யாமே பரமம் யாமே பரமம் என்று தமக்குள் சண்டையிட்டு உலகு அதிர்ந்து கெடப் பொருதனர். இறைவன் அவர்களிருவரும் அறியாமை நீங்கி உய்ய, அழல் மலையாக அவர்கள் நடுவில் தோன்றினார். அவ்விருவரும் தம்முள் இம்மலையின் அடியையும் முடியையும் அறிந்து வருபவரே பெரியர் என்ற முடிவிற்கு வந்து, திருமால் பன்றியாய் அருண கிரியின் அடியைத் தேடினார். பிரமன் அன்னப்பறவையாகி, அம்மலையின் முடியைத் தேடிப் பறந்தான். இருவரும் தம்மால் அறிய முடியாமையைத் தாமே உணர்ந்து நாமிருவரும் முதல் அல்லர்; இறைவனே நம் அனைவருக்கும் முதல்வன் என்று உணர்ந்து தெளிந்தனர். இவ்வண்ணம், பிரம விஷ்ணுக்களாகிய சகலான்மாக்களின் ஆணவத்தை வாட்டி அறியாமையைப் போக்கி ஆட்கொண்டமையை இத்திருப்பாடல் உணர்த்துகிறது.

மூவகை ஆருயிர்வர்க்கங்களின் அறிவின் எல்லையைக் கடந்து நிற்கும் இறைவனது இயல்பை 'அளவிறந்து பரமாகி நின்றவா' எனக் குறிப்பிடுகின்றார். இறைவன் அளவிறந்து நிற்பதை உரையிற்காண்க. இதனால் மால் அயன் முதலியோர் பரம் எல்லைக்குட்பட்டது என்பதும், இறைவனுடைய பரத் தன்மை எல்லை கடந்தது என்பதும் உணர்த்தப்பெற்றன.

இத்திருப்பாடல், உயிர்களின் மலவாதனை போக்கி ஆட் கொண்டமை உணர்த்துதலின் பிரபஞ்சசுத்தியாதல் காண்க.

325 ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்கம் ஆடாமோ. 13

இ - ள்: அறிவற்ற அடியனாகிய யான், பரம்பரனாகிய சிவபெருமானைப் பணியாமல், எவ்வளவோ காலம் உண்பதும் உடுப்பதும் உறங்குவதும் ஆகிய உலகியலில் தலைப்பட்டுப் பயனின்றிக் கழித்தேன்; இதனைக்கண்டு இரங்கிப் பேரூழிக் கெல்லாம் முதல்வனும், அழியாத நல்ல மாணிக்கமணிபோல் பவனுமான குருநாதன் தானே எழுந்தருளிவந்து எனது பிறவியாகிய பயிரின் வேரைப் பறித்தவாற்றைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவனைப் பணியாமல் வீணாள் கழிந்ததற்கிரங்க, இறைவன் எளிவந்த பெருங்கருணையால் எழுந்தருளிவந்து பிறவி அறுத்தான் எனத் தோணோக்கமாடுவோம் என்கின்றது.

உலகில் உள்ள அடிமைகளில் ஆண்டானுக்கு உவப்பான செயல் எது என்பதைக் குறிப்பான் அறிந்து அதைச்செய்து அவன் கருணைக்கு இலக்காவார் அறிவுடையவர்கள். அறி வில்லா அடிமைகள் ஆண்டான் கூறியவற்றுள் மறதியாலும் அறிவிலாத் தன்மையாலும் பாதியைவிட்டும், செய்யவேண்டா ததைச் செய்தும், செய்ததையே செய்தும் பொழுது கழிப்பர். அதுபோல யானும் காலத்தைப் பயனின்றிப் போக்கினேன் என்பார் 'ஏழைத்தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம் பாழுக்கு இறைத்தேன்' என்றார். ஏழை - அறிவிலி. தொழும்பு - அடிமை. அடிமையின் அலுவல் ஆண்டானைத் தொழுது பணி செய்துகிடப்பதாக இருக்க, யான் அங்ஙனஞ்செய்யாது காலங் கழித்தேன் என்றார். ஒன்று ஆயிரமாக விளையும் நல்ல வயலில் நீர் இறைத்துப் பெரும்பயன் எய்தவேண்டிய நான் பாழான உவர்நிலத்தில் நீரிறைத்துப் பயனை அடையாதவனாயினேன்

என்பார் 'பாழுக்கு இறைத்து' என்றார். பாழ்: பண்பாகுபெயர்; பாழ் நிலத்தை உணர்த்திற்று. இறைத்தேன் என்ற வினைச் சொற்கியைய நீரை என்ற செயப்படுபொருள் வருவித்துரைக்க.

ஊழி - பிரமகற்பம் முதலான பிரளயகாலங்கள். எல்லாரும் எல்லாமும் தத்தம் ஊழியிறுதியில் தத்தங்காரணத்தில் ஒடுங்க, எல்லாரும் தம்மிடம் ஒடுங்கத் தானொருவனே புனருற்பவத்திற்கு வித்தாக விளங்குதலின் 'ஊழிமுதல்' என்றார். காலாதீதன் என்று கூறும் பழையவுரை.

சிந்துதல் - அழிதல். சிந்தாத நல் மணி - என்றும் அழியாத நல்ல மாணிக்கமணி போல்வானாகிய சிவன். ஊழி முதலும் நன்மணியும் ஆகிய இறைவன் என்க.

பிறவித்தாழ் - பிறவியாகிய பயிரின் தாள்; அதாவது வேர் என்று பழையவுரை கூறும். தாள் என்பது தாழ் என எதுகை நோக்கித் திரிந்தது. பிறவித்தாழ் என்பதற்குப் பிறவியாகிய தாழ்ப்பாள் என்பாரும் உளர்.

'பறித்தவா தோணோக்கம் ஆடாமோ' என்பதற்கு, பறித்தவாற்றைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் எனப் பொருள் கொள்க. பிறவியை அறுத்தலாவது பிறவிக்கேதுவாகிய இருவினைகளையும், வினைகள் பற்றிநிற்கும் மாயையையும் அகற்றி, அந்த இரண்டற்கும் நிலைக்களனாகிய ஆணவமலத்தின் வலியையும் ஒடுக்குதல். இவ்வண்ணம் இறைவன் குருமணியாக எழுந்தருளிவந்து, உயிர்களைச் சுத்தம் செய்தமை உணர்த்துதலின் இப்பாடல் பிரபஞ்சசுத்தியுள் அமைந்தது.

326 உரைமாண்ட வுள்ளொளி யுத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணோக்கம் ஆடாமோ. 14

திருச்சிற்றம்பலம்

இ - ள்: வாக்கு மனாதீதமான ஞானமே வடிவான இறைவன் தாமே வலியவந்து என் உள்ளத்திற் புகுந்து கலந்து வீற்றிருந்தபின், கரையற்ற பேராசைப்பெருங்கடலை யாம் கடந்தேம்; கடந்தவுடன், இரை அகப்படாது மாண்டமையால் ஐம்பொறிகளாகிய பறவைகள் கெட்டோட, நமது மனமாகிய இடம் சிறந்தவாற்றைப் பாடித் தோணோக்கம் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் உள்ளத்தைக் கோயிலாக்கொண்டதால் விளைந்த தூய்மையை உணர்த்துகிறது.

உரை மாண்ட உத்தமன், உள்ளொளி உத்தமன் எனக் கூட்டுக.

உரை மனங்கடந்துநின்ற ஒருவனென ஞானசாத்திரங்கள் கூறுதலை 'உரைமாண்ட உத்தமன்' என்றதால் குறிப்பித்தார். வாக்கு, மனத்தால் கற்பித்தவற்றைத் தாமறிந்த மொழிகளால் தொகுத்துக் கூறும். இறைவனியல்பு ஆன்மாக்களின் மனனுணர்வையும், அதன்வழி நிற்கும் மாயாகாரியமான பாசஞான எல்லையையும் கடந்ததாகலின் 'உரை மாண்ட உத்தமன்' என்றார். உத்தமன் - சிறந்தவற்றிற்கெல்லாம் சிறந்தவன்.

உடலுக்கு உணர்வூட்டுவது அதனுள்ளிருக்கும் உயிர். உயிர்க்கு உணர்வாக விளங்குவது உயிருக்குயிராக இருக்கும் ஞானமே வடிவான சிவம். அஃதில்லையாயின் உயிர் எத்தகைய விளக்கத்தையும் சிறிதும் எய்தாது ஆதலின் அந்தச் சிவத்தை 'உள்ளொளி' என்றார். பின்னரும் 'உள்ளொளி பெருக்கி' (542) எனல் காண்க.

தெங்கிளநீருள் நீர் நிறைந்ததுபோல உயிருக்குள் உள்ளொளி தானே நிறைந்தமையானும், சுதந்தரமற்ற ஆன்மாக்கள் என்றும் உபாயங்களால் உள்ளொளியைப் புகுத்திக்கொள்ளும் வாய்ப்பற்றன ஆதலானும் உள்ளொளி தானே வலிய உளம் புகுந்தது என்பார் 'உள்ளொளி உத்தமன் வந்து உளம் புகலும்' என்றார்.

கதிர்த்தோற்றமும் இருணீக்கமும் ஒருங்கு நிகழ்தல்போல உத்தமன் உளம் புகலும், காமக்கடலைக் கடத்தலும், இந்திரியப் பறவைகள் இரை கிடையாமையால் இரிதலும், அதனால் உளம் தூய்மையாதலும் ஒருசேர நிகழ்வனவாகக்கொள்க.

காமம் - பொருள்களின்மேற்றோன்றும் பற்றுள்ளம்; அஃதாவது ஆசை. அதற்கு ஓரெல்லையின்று ஆதலின் அதனைக் 'கரைமாண்ட காமம்' என்றார். அளவிடற்கரிய பரப்பும் ஆழமும் உடைய கடலை அத்தகைய காமத்தோடு உருவகித்தார் 'காமப் பெருங்கடல்' என்று. உத்தமன் வந்து உளம் புகுதலும், ஆசைக்கடலுக்கு மனம் இடமாகாமையின் 'புகலும் காமப் பெருங்கடலைக் கடத்தலும்' என்றார்.

இந்திரியப் பறவை - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதலாகிய இரைகளை உண்கின்ற கண் காது நாக்கு

மூக்கு மெய் ஆகிய பறவைகள். பறவைகள் ஓயாமல் இரை தேடியலைவதைப்போல இந்திரியங்களும் விடயங்களைத் தேடி அலைதலின் அவற்றைப் பறவைகளாக்கினார். இருசிறகாலியங்கும் பறவைபோல இந்திரியங்கள் இருவினைகளாலியங்குவன ஆதலானும், இடமில்லாவிடத்து இருகால்களால் குறுகுறு நடந்து இரைதேடுதல்போலப் பொறிகள் வலிகுன்றியவிடத்தும் வாசனைதாக்கப் புலன்களை நுகர்தலானும் உருவகித்ததாக உண்மைப்பொருள் காண்க.

பல காக்கைக்கு ஒரு கல் போலவும், பழமுதிர்ந்த மரத்தை விட்டு வாவல் பறப்பது போலவும் ஒருசேரக்கெடும் என்பார் 'பறவை இரிந்தோட' என்றார்.

துறை என்பது எதுகைநோக்கித் துரையெனலாயிற்று. துரை - இடம். துரை மாண்டவா பாடி - இடம் சிறந்தவாற்றினைப் பாடி. புகவேண்டிய மனத்தில் புகத்தக்க புனிதன் புகுந்து இடங்கொள்ளுதலும், புகத்தகாத பேராசையும், இந்திரியங்களும் அகன்றன; அதனால் மனமாகிய இடம் மாட்சிமையுற்றது; அதனைப் பாடித் தோணோக்கமாடுவோம் என்றதாகக் கொள்க.

இத்திருப்பாடலில் 'காமப்பெருங்கடலைக் கடத்தலும்' 'இந்திரியம் இரிந்தோட' என்பனவற்றால் குற்றநீக்கமும், 'துரை மாண்டவா பாடி' என்பதால் நன்மையின் விளைவும் ஆகிய இரண்டு வகையான பிரபஞ்சசுத்தி உணர்த்துதல் காண்க.



ஏற்றறியாக் கையானும் ஏறுடையான் பரிமாவில், வீற்றிருந்தே வேந்தன் தரு பொன்னுடைப் பரிசிலேத்தன்,
தாற்றுக்கோ லாலேந்தித் தன்தலைமை தோற்றுவித்தான்.

# 16. திருப்பொன்னூசல்

[அருட்சுத்தி]

இதுவும், அடிகளார் தில்லையம்பதியில் எழுந்தருளி யிருக்குங்காலத்து அருளிச்செய்யப்பெற்றது. சிலமகளிர் தண்ணிழல் தவழும் பொழிலூடு இருந்து பொன்னூசல் ஆடுவதைக்கண்ட அடிகளார், அம்மகளிர் வாய்ச்சொல் லாக ஊஞ்சற்பாட்டாகிய இதனை அருளிச்செய்தார்கள்.

மகளிர் ஊஞ்சலிலிருந்து இறைவன் புகழைப் பாடிக்கொண்டு ஆடுவதாக அமைந்தது. வைணவநூல்களில் திருமாலையும் பெரிய பிராட்டியையும் ஊஞ்சலில் எழுந்தருளச்செய்து அவர்கள் புகழைப் பாடித் தோழியர்கள் ஆட்டுவதாக அமைந்துள்ளதும், சைவநூல் களில் இறைவன் புகழைப் பாடிக்கொண்டு மகளிர் ஆடுவதாக அமைந்திருப்பதும் ஊன்றியறியத்தக்கவை.

அருட்சுத்தி அல்லது அருளொடு கலத்தல் என்பது பழைய குறிப்பு. பழைய புராண ஆசிரியர் "அருட்சத்தி இருந்தாடத் தாலாட்டுதல்" என்று குறிப்பிடுகின்றார். இதனால் ஊசலில் அருட் சத்தி வீற்றிருக்க அதன் கண்ணோக்கத்தைப் பெறவிருக்கும் மகளிர் அருட்சத்தியின் தலைவனாகிய சத்தியுத்தன் புகழைச் சொல்லி ஆட்டு கின்றனர் என்பது பெறப்படும்.

பொன்னூசல் என்பதற்குத் தெய்வச் சிறப்பினையுடைய ஊசல் வரியைப் பொருளாக உடையது என்பாரும் உளர். சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் வரிப்பாட்டில் ஒன்றாகக் கூறப்பெறும் ஊசல் வரியின் பொருளமைதியும் பாடற்போக்கும் வேறாக இருத்தல் ஊன்றி நோக்குவார் எவர்க்கும் தெள்ளிதிற் புலனாம்.

அன்றியும், சிவபெருமானிடம் வைத்த முறுகிய அன்பால் மகளிர்நிலையைத் தாம் பொருந்தி, அடிகளார் அருளிய அன்பு நெறிப் பாக்களைக் காமம் நுதலிய இன்பநெறிப் பாடல்களாகக் கொண்டு, அகத்துறையாகிய ஐந்திணைக்காமம் பெருந்திணைக்காமம் முதலியவாகக்கொண்டு சிந்தித்தல் கருவிநூலறிவிற்குப் பொருந்து மேனும், திருமுறையாகிய தெய்வநூலநுபவத்திற்குப் பொருந் தாததொன்று என்று துணிக.

ஆதலால் மரபோடு ஒன்றி, மகளிர் தாம் திருவருளோடு கலந்து சுத்தியெய்துதற்பொருட்டு இறைவன் புகழையும் அவன்

தம்மையாண்ட சிறப்புக்களையும் பாடி ஊசலாடும்போது, அவ்விளையாட்டு வெறுவிளையாகாது, கிளர்ச்சியூட்டும் விளையாட்டுமாகாது சிவப்பணியாதல் காண்க. இதனாலேயே பழையகுறிப்பு அருட்சுத்தி என்றமை காண்க. இங்கே மகளிர் என்றுகுறித்தது பரிபாகமுற்ற ஆன்மாவை என்க.

பழைய வியாக்கியானமும், " திருப்பொன்னூசல் - திருவருட் சுத்தி" என்ற அகத்தியச் சூத்திரத்தை மேற்கோள் காட்டி, 'தன் வசமின்றி அருள்வசமாகுங்காலம் சகலத்தின் செய்தியும் சுத்தத் தின் செய்தியும் சமானமாய் ஒன்றுந்தன்மையாகிய அருளின்றிறம்' என அநுபூதியினின்று உரை கூறும்.

இதனாற்கிடைக்கும் சிந்தனை, விட்டமாகிய மேனிலையிலிருந்து கருணை வீழ்ச்சியாகிய சங்கிலிகளிற்றொங்கும் திருவருட்பலகையில் இருக்கும் மகளிர் பரிபாகமுற்ற ஆன்மா. அவர்கள் அதில் ஏறியிருந்த பிறகு சகலாவத்தையாகிய உலகப்பற்று அறவேயகல, உரையிலும் உள்ளத்திலும், செயலிலும் சிவத்தொடர்பாகிய சுத்தமே மிக, அவர்கள் தூய சிவாநுபவநிலையிலேயே இருந்து ஆடுகின்றனர் என்பதாம். அறிவாற் சிவனேயான அடிகளார் அம்மகளிர் நிலையி லிருந்து பாடுகின்ற அருட்பாடலுக்கு இவ்வண்ணம் அநுபூதியுரை கொள்க.

## தரவுகொச்சகக்கலிப்பா

### திருச்சிற்றம்பலம்

327 சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து
நாரா யணனறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா வமுதின் அருட்டா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ. 1

இ - ள்: ஒன்றோடொன்று பொருகின்றனவும் வேலைப் போன்றனவும் ஆகிய கண்களையுடைய பெண்களே! சிறப்புக் கள் நிறைந்த பவளமே கால்களாகவும், வெண்மையான முத்த மாலைகளையே கயிறாகவும் அழகுமிக்க பொன்னாலாகிய பலகை மீது ஏறி இனிமையுடன் இருந்து, திருமாலும் அறியமுடியாத அன்றலர்ந்த தாமரைமலரைப் போலும் திருவடியை நாய் போன்ற இழிந்த அடியேற்கு ஊராகத் தந்தருளிய திருவுத் தரகோசமங்கை என்னுந்தலத்தில் எழுந்தருளியுள்ள உண்டு

தெவிட்டாத அமுதத்தை ஒப்பானுடைய திருவருளே வடிவான திருவடியிணைகளைப் பாடிப் பொன்மயமான ஊசலில் இருந்து ஆடுவோம் என்றவாறு.

இத்திருப்பாடல் பிருதிவிமாயா புவனப்பற்றைப் போக்கித் திருவடிச்சார்பளித்த இறைவன் புகழைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்று உணர்த்துகிறது.

ஊசலுக்கு இன்றியமையாத சாதனங்கள் இருமருங்கும் ஊன்றப்படும் கால்களும், மேற்காலாகிய விட்டமும், சங்கிலிகளும், பலகையுமாம். அவற்றுள், ஊன்றும்கால் பவளம்; முத்து வடம் நாலு சங்கிலிகள்; பலகை பொன் என்று செல்வச்சிறப்புக் கூறியதாம். இப்பகுதி வெறுஞ்செல்வமிகுதி கூறியதுமட்டும் அன்று; இம்மை இன்பப் பெருக்கத்திற்கு வேண்டிய பொருள் மிகுதி இங்ஙனம் ஊசலுக்கு உறுப்பாம்வரை பல்கிக் கிடக்கின்றமையின் இம்மை இன்பத்திலும் அதற்கு ஏதுவாய பொருளிலும் உவர்ப்புண்மையைக் குறித்தவாறும் என்க.

முடக்கு, ஒடிவு, கருமை முதலிய குற்றங்கள் இல்லாத பவளம் என்பார் 'சீரார் பவளம்' என்றார். அதுவே காலமைத் தற்குரிய வாய்ப்புடைத்தாதலும் காண்க. முத்தம் - முத்தமாலை. ஏர் - அழகு. நீருள்தோன்றும் முத்தமும் பவளமும் மண்ணுள் தோன்றும் பொற்பலகையுடன் கூடி, ஊசலாய் விண்ணில் இயங்குகின்றமை உணர்த்துவதால் சகலாவத்தையின் நீங்கிச் சுத்தாவத்தையின் இயங்கும் ஆன்மாவே இறையனுபவத்திற்கு உரித்தாதல் உணர்த்தியமை காண்க.

உத்தரகோசமங்கை ஆரா அமுது, நாராயணன் அறியா நாள்மலர்த்தாளிணையை ஊராகத்தந்த உபகாரத்தை வியந்து கூறுதல் வாயிலாகத் திருவடியின் பெருமையும், அவற்றைத் தமக்குத் தந்த எளிமையும் விளக்கியவாறு.

நாராயணன் எனத் திருமாலை அவனது அஷ்டாக்ஷர மந்திரப் பெயரான சிறப்புத்திருநாமத்தால் குறிப்பித்து அவனும் அறிய ஒண்ணாத திருவடி என்று திருவடிப் பெருமை உணரவைத்தார். எல்லார்க்கும் தியானப்பொருளாக இருக்கின்ற அத்திருமாலுக்கும் தியானப்பொருளாய் அனுதினமும் தேடப்படும் பொருளாய் அறியவொண்ணாத அரியபொருளாய் இருப்பது திருவடி என்றவாறு.

அத்தகைய திருவடியை நாய்போலும் இழிதகைமையுடைய அடியேனுக்கு நித்தியவாசத்தானமாக அளித்தான் என்பார்

'நாயடியேற்கு ஊராகத் தந்தருளும் ஆரா அமுது' என்றார். திருவடி சிவாநுபவம் உடையார்க்கே ஓரோருகால் நெஞ்சில் தோன்றி இன்பந்தரும் அருமையுடையது. அதனை அடியேன், உண்டும் உறங்கியும், நடந்தும் திரிந்தும், அகழ்ந்தும் இகழ்ந்தும் வசித்தற்கு உரிய ஊராகத் தந்தான்; இது அவன் எளிமை என்பதாம்.

ஆரா அமுது - உண்டமையாத, மேன்மேலும் உண்ணும் விருப்பத்தை விளைவிக்கும் அமுதம். தேவாமுதங்கூட ஒருகை யுண்டார்க்குத் தெவிட்டுந் தன்மையது, இது அங்ஙனமன்று என அதனின் இது சிறந்தமை தெளியவைத்தவாறு.

அநுபவ ஞானிகளுக்கு அருளே தாளாகும் ஆதலால் 'அருட்டாளிணை பாடி' என்றார்.

போரார்கண், வேற்கண் என இயைத்து, ஒன்றோடொன்று பொருகின்ற கண், வேல்போலுங்கண் எனப்பொருள்கொள்க. வேலுக்கே அடையாக்கி உரைத்தலுமாம்.

ஊசலாடுவதில் இருவகை மரபுண்டு. ஒருத்தியே இருந்து பூமியை உந்தியாடுதலும், ஒருத்தி நடுவிலிருக்க இருவர் இரு பக்கத்திலும் ஊஞ்சல் வடத்தைப்பற்றிநின்று பலகையை உந்தி ஆடுதலும் என. எங்ஙனம் ஆடினும் இறைவன் புகழைப் பாடி ஆடுதல் மரபு என்க.

பழையவுரை, தகரவித்தியாபுர இரண்மயகோசமன்றுள்ளே பரநாதமே பவளக்காலாக, பரவிந்துவே முத்துச்சங்கிலியாக சுத்தமாயாபுவனமே பொற்பலகையாக, பிரேரகசிவமே எழுந்தருளியிருக்க, இறைவன் திருவடிகளைப்பாடி அசபை நிருத்தமாகிய ஊசலாடுவோம் என்று தத்துவப்பொருள் கூறுதல் மிக மிக ஆழ்ந்து அனுபவித்தற்கு உரியது.

இத்திருப்பாட்டில், திருவடியையே ஊராகத் தந்தான் என்றது அருளொடு கூட்டி ஆன்மாவைச் சுத்தஞ்செய்தமையை உணர்த்துவதால் அருட்சுத்தி என்னும் பதிகப்பொருள் தோன்றுதல் காண்க.

328 மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்றங்கு தேவர்களும் காணா மலரடிகள்
தேன்றங்கித் தித்தித் தமுதூறித் தான்றெளிந்தங்
கூன்றங்கி நின்றுருக்கும் உத்தர கோசமங்கைக்
கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூசல் ஆடாமோ. 2

இ - ள் : மரபு வழிவந்த மயில்போலும் சாயலையும், அன்னம்போன்ற நடையினையும் உடைய பெண்களே! விளங்குகின்ற மூன்று கண்களையுடையவனும், வானுலகத்தில் வாழ்கின்ற தேவர்களுங்காணாத மூவாத மலர்போலும் மெல்லிய திருவடிகள் என் உள்ளத்திற்றங்கி,தேனிறைந்து, தித்தித்து, அமுதம்போலும் இனிமையை மேன்மேலும் கூர்ந்து, தெளிவைப் பிறப்பித்து, ஊனினை உருக்கும் உத்தரகோசமங்கைக் கோனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவிடைமருதூரைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, சிவாநுபவத்திறம் தமக்கு வாய்க்கச்செய்த திருவிடைமருதூர்க் கோனைப்பாடி ஊசலாடுவோம் என்கின்றது. பழையவுரை சிவானுபவ இன்பளிப்பைக் கூறுகிறது என்னும்.

நயனத்தன் உத்தரகோசமங்கைக்கோன் தங்கும் இடைமருது பாடி எனவும், அடிகள் ஊன்தங்கி, தேன்தங்கி, தித்தித்து, அமுதூறி, தெளிந்து உருக்கும்கோன் எனவும் கூட்டுக.

குலமஞ்ஞை - மரபுவழி வந்த மயில்; கூட்டில் வாழ்கின்ற மயில் எனலுமாம். நற்குலத்து உதித்த மகளிர்போல மரபுவழி வந்த மயிலுக்குச் சாயல் மிகுதியும் உண்மையான் குலமஞ்ஞை போன்று என்றார். அங்கு: அசை. அன்ன நடையீர்-அன்னம் போலும் அசைவையும் நடையினையும் உடைய பெண்களே. பழையவுரை, சத்தியஞானமாகிய குலத்தில் தோன்றிய மயில் போலும் சாயலையும், ஹம்சமந்திரமாகிய அசபை நடையையும் உடைய ஞானப்பெண்களே என்னும்.

இலங்கும் மூன்று நயனத்தன் - விளங்குகின்ற சோம சூரிய அக்கினிகளாகிற மூன்று சுடர்களையும் கண்களாக உடைய பரமசிவன். இதிலும் அங்கு அசை. மூன்றாக அவ்விடத்து விளங்குகின்ற கண்களை உடையவன் எனலுமாம். காணுங் கண்ணுக்கு உபகாரப்படும் ஒளியான கண்களையுடையவனாக இருந்தும் அவன் திருவடிகளைத் தேவர்கள் அறியார்கள்; அதனால் குருடாவார் என்ற இழிவுகுறித்துக் கூறியவாறு.

மூவாத காணா மலரடிகள், தேவர்கள் காணாத திருவடிகள் எனக் கூட்டிப் பொருள் கொள்க. இறைவன் திருவடிகள் மணமும் அழகும் படைத்தன ஆகலான் மலரடிகள் எனப்பட்டன. இதனை வினைத்தொகையாகக் கொண்டு, எல்லாவுலகங்களும் மலர்தற்கு மூலமான திருவடிகள் எனலுமாம். "உலகெலாம் மலர் சேவடி" என்றதற்குச் சேக்கிழார் பிள்ளைத்தமிழில் எமது மகாவித்துவான் பிள்ளையவர்கள் உரைத்தாங்குக்கொள்க.

வான் - இன்ப பூமி, வினைப்போகம் துய்க்கும் போகபூமி. அதில் வாழ்வார்களுக்குப் போகநுகர்ச்சியன்றிச் சிவஞானம் கைவரப்பெருது ஆதலின் 'வான் தங்கு தேவர்களும் காணு மலரடிகள்' என்ருர்.

மூவாத மலரடிகள் - மூப்படையாத, என்றும் இளமைநலங் குன்ருத மலரடிகள் என்க. 'மூவாத' என்பதற்குப் பழையவுரை இறவாத்திருவுடையவன் என்று உரைகூறும். இவ்வுரை சரியாயின் பாடம் மூவாதான் என்று இருக்கவேண்டும். அல்லது உரையை ஏடுகளில் படித்தவர்கள் இறவாத்திருவுடையனவும் என்பதைத் திருவுடையவன் எனப் படித்திருக்க வேண்டும். இங்ஙனமன்றி மூவாத என்பதை முற்ருகக்கொண்டு இறவாத் திருவுடையவன் எனப் பொருள் கொள்ளலாகாமை தெளிக.

நல்ல சுவையான பொருளை விரைந்து விழுங்காது நாவில் தங்கவைத்துச் சுவைப்பதுபோல, மலரடிகள் உடலுள் உள்ளத்துள் தங்கியதால் தேன் தங்கப்பெற்றுத் தித்தித்தது. தேனுகத் தித்தித்த அது அமுதமாக ஊறிக்கொண்டேயிருந்தது. தேனும் அமுதமும் உண்டார்க்கு இயல்பில் உளதாகும் மயக்கமுண்டாகாமல் மலரடித்தேன் அமுதாய்ச் சுரந்து தெளிந்திருந்தது; ஊனினை உருக்கியது; உள்ளொளி பெருக்கியதென அனுபவ முதிர்ச்சியை முறையே அறிவிக்கிருர். அமுதம் - பால் என்பாருமுளர். அவர்கள், அமுதம் தேனெடுகலந்து தித்தித்து ஊறித் தெளிந்து, ஆங்கு என் ஊன்தங்கி நின்றுருக்கும் கோன் எனக் கூட்டிப் பொருள் கொள்வர். சிறந்தது கொள்க.

உத்தரகோசமங்கைக்கோன் தங்கும் இடைமருது என்றது 'நாள்மலர்த்தாள் நாயடியேற்கு ஊராகத் தந்தது' போன்று, இடைமருததனில் ஈண்ட இருந்து படிமப்பாதம் வைத்த பரிசையும் உட்கொண்டு இயைபுபடுத்திக் கூறியதாம்.

அடிகள் ஊன்தங்கி நின்றுருக்கியது திருவருட்சார்பால் ஆன்மா அடைந்த சுத்தியாதலின் அருட்சுத்தியாதல் காண்க.

329 முன்னீறு மாதியும் இல்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி யிமையோர்கள் தாநிற்பத்
தன்னீறெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 3

இ - ள்: மாற்று உயர்ந்த பொன்னாலாகிய அணிகளை அணிந்த முலையினையுடைய பெண்களே! முதலாவதாகிய முடிவும் முதலும் இல்லாத சிவபெருமான், முனிவர் கூட்டமும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் திருவருளை வேண்டி நிற்ப, தன் விபூதியை அடியேற்கு அளித்து, தன் கருணைப் பிரவாகத்துள்ளேகிடந்து ஊறும்வண்ணம் எழுந்தருளியுள்ள அழகிய உத்தரகோசமங்கையின் மின்னற்கொடிகள் மிக்க மாடங்களையும், அகன்ற மாளிகைகளையும் பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, தேவர்கள் பலர் ஏமாந்து நிற்ப எனக்கருளிய இறைவனது உத்தரகோசமங்கை நகரின் மாடமாளிகைகளைப் பாடி ஊசல் ஆடுவோம் என்கின்றது.

இல்லான், அருளி (தன் கருணைவெள்ளத்து மன்னூற) மன்னும் உத்தரகோசமங்கை எனக் கூட்டுக.

'அந்தம் ஆதி' என்பது மரபாதலின் ஈறே ஆதிக்கு முதலாவதாகலின் முன்னாகிய ஈறும் ஆதியும் இல்லாதவன் இறைவன் என இறைவியல்பு கூறியவாறு. முன்ஈறும் என்பதை வினைத்தொகையாகக்கொண்டு, 'எண்ணப்படுகின்ற முடிவும் முதலும் இல்லாதவன்' எனினும் அமையும்.

முனிவர் மனத்தை ஒருநிலைப்படுத்தி இறைவனையே மனனம் செய்பவர்கள். இமையோர்கள் - ஒளியான மேனியுடைய தேவர்கள். இமைத்தல் - ஒளிசெய்தல். தாம் நிற்ப என்றது இறைவன் கருணையைவேண்டி அதனைப் பெறமாட்டாமையால் ஏமாந்து நிற்ப என்பதாம்.

நீறு - விபூதி; அதாவது திருவருட்செல்வம். திருநீற்றினை அளித்து எனலுமாம்.

நீருட்கிடந்து ஊறிப் பதம்பெறும் மரம்போலக் கருணை வெள்ளத்துட்கிடந்து ஊறிப் பரிபாகம் பெறுவது ஆன்மா ஆகலின் 'தன் கருணைவெள்ளத்து மன்னும்' என்றார்.

தனக்கு உபகாரம் செய்தாரை எண்ணும்போது அவர் வாழும் ஊர், அவர் வசித்த மாட மாளிகை, தீண்டிய பழகிய பொருள்கள் எல்லாவற்றிலும் நினைவு செல்லுமாகலின் 'மாட மாளிகை பாடி' என்றார். மாடமாளிகைகளாகிற இடங்களைக் கண்டவுடன், இடத்திற்குரியவரும் அவர் செய்த உபகாரமுமே முற்பட்டுத் தோன்றும் என்க.

தன் கருணை வெள்ளத்து ஊறவைத்தமை அருட்சுத்தி யானமை காண்க.

330 *நஞ்சமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்*
*மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை*
*அஞ்சொலாள் தன்னோடுங் கூடி யடியவர்கள்*
*நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து*
*துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்*
*புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ.* 4

இ - ள்: திரட்சியாகிய வெண்மைநிறம் பொருந்திய வளையல்களை உடைய பெண்களே! நீலகண்டனும் வானத் தவர்கட்குத் தலைவனும் மேகங்கள் தோயப்பெற்ற மாடங்க ளால் அழகுபெற்ற உத்தரகோசமங்கையிலே அழகிய சொல்லை உடைய உமாதேவியோடும் கூடி, அடியார்கள் மனத்திலே நிலைத்து நின்று அமுதம்போல இனித்துக் கருணை செய்து அவர்கட்குச் சாதலையும் பிறத்தலையும் நீக்குபவனும் ஆகிய சிவபெருமானுடைய இயல்பாகவே தூய்தான புகழ்களைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் அடியார்கள் நெஞ்சுள் நின்று அவர்கள் பிறப்பிறப்புக்களை நீக்கி ஆண்டருளியமையைப் புகழ்கின்றது.

மணியோசைகொண்டு யானையின் வருகையை அறிந்து கொள்வதுபோல ஊசலாடும்போது பெண்களின் கைவளை களின் ஒலியும், அதனைச் செய்யும் வளைகளும் மனக் கற்பனையில் நிகழ, அவற்றைச் சிறப்பித்துப் 'புஞ்சமார் வெள்வளையீர்' என்றார். புஞ்சம் - திரட்சி அல்லது கூட்டம். வெள்வளை - சங்கு வளை.

ஆகாத நஞ்சையும் உட்கொண்டு, தமது கழுத்தில் என்று ஞான்றும் வைத்திருக்கும் காட்சி வெறுக்கத்தக்க தீமைகளையும் ஏற்று அடக்கியாளும் இறைவனது அருள்வள்ளன்மையை உணர்த்துதலின் 'நஞ்சமர் கண்டத்தன்' என்றார். நஞ்சமர் கண்டம் நெற்றியில் வைத்த கத்தூரிதிலதம்போல மேனிக்கு அழகு செய்தலின் அதிலீடுபட்டுக் கூறினார் எனலுமாம்.

தேவர்கள் எந்த நஞ்சைக்கண்டு அஞ்சி இறைவன்பாற் சென்று உயிர்ப்பிச்சைகேட்டு இரந்தார்களோ, அந்த நஞ்சை யுண்டு அவர்கள் அனைவர்க்கும் தாம் தலைவனாதலை அவர்களே அறிந்துய்யச் செய்தமையின் அடுத்து 'அண்டத்தவர் நாதன்' எனக் கூறியதாம்.

இவ்வண்ணம் விண்ணவர் தலைவனுகிய சிவபெருமான் எம்மவர்க்கு இரங்கி உத்தரகோசமங்கை என்னும் சிவஞான சித்தித் தலத்திலே திருவருள்வடிவாகிய உமாதேவியோடுகூடி இருத்தலோடன்றி, அடியார்நெஞ்சிலும் எழுந்தருளி அவர்கள் அனுபவத்திற்கு அமுதம்போலச் சுரந்து இனித்துப் பிறப்பு இறப்பாகிய நோயை அறுத்து ஆட்கொண்டான் என அவன் கருணை அறிவித்தவாறு. மஞ்சு - மேகம். துஞ்சல் - சாதல்.

தூய புகழ் - உரைப்பவர் உரையானன்றி உண்மையிலேயே பொருளில் பொருந்தியிருக்கும் புகழ். பிறரிடத்துள்ள புகழ் அனைத்தும் அளவில் சிறியதாய், உரைப்பவர் கற்பனையால் பெருகிப் புனைந்துரையாம். இறைவன் புகழ் அளவிலாற்றல் அளப்பரிய கருணை முதலியவற்ருல் அமைந்து உரைப்பார் உரையுள் அடங்காததாய் இருப்பது. "இறைமைக் குணமிலா தாரை உடையர் எனக் கருதிக் கூறும் புகழ்கள் பொருள்சேரா வாகலின் அவை முழுதும் உடைய இறைவன்புகழே பொருள் சேர் புகழ் எனப்பட்டது" என்ற பரிமேலழகர் உரையையும் ஈண்டு இணைத்து எண்ணுக.

'தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' என்பதும்,"நெஞ்சுளே நின்றமுதம் ஊறி" என்ற சிவானுபவத் தோடு ஒத்திருத்தல் கொண்டுணர்க.

'கருணை செய்து துஞ்சல் பிறப்பறுப்பான்' என்பது திருவருட்சுத்தியாதல் காண்க.

331 ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்
காணக் கடவுள் கருணையினல் தேவர்குழாம்
நாணமே யுய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக வுண்டருளும் உத்தர கோசமங்கைக்
கோனார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ. 5

இ - ள்: அணிகள் பலவும் நிறைந்த அழகிய முலையினை உடைய பெண்களே! பிரமவிஷ்ணுக்கள் ஆணோ பெண்ணோ அலியோ என்று அறியமுடியாத கடவுளும், தேவர்கூட்டம் நாணும்வண்ணம் அவர்கள் நாணாது உய்யக் கருணையால் ஆட் கொண்டருளி, நஞ்சினைத் திருவமுது செய்த உத்தரகோச மங்கையிலுள்ள, வளைந்த இளம்பிறையைத் திருமுடிக்கண் அணிந்த ஆனந்தக்கூத்தப்பெருமானது குணங்களைச் சொல் லித் தோத்தரித்துப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, தேவர்களும் அறியாவண்ணம் தம்மை ஆட்கொண்ட கூத்தன் குணம்பரவி ஊசலாடுவோம் என்கின்றது.

மங்கையர் இருகைகளையும் இருமருங்குமுள்ள ஊசல் வடத்தைப் பிடித்து உந்தியாடுதலால் அவர்களுடைய திருத்தகு அவயவங்களும், அவற்றின்மீது பல கழுத்தணி மதாணி முதலியவைகளும் திகழ்ந்து தோன்றுதலால் 'பூணார் வனமுலையீர்' என்றார்.

இருவர் என்ற தொகைப்பெயர் 'அறியா' என்ற குறிப்பால் திருமாலையும் பிரமனையும் உணர்த்திற்று. அவர்கள் தேவர்களாந் தந்தன்மையும் கெட்டுப் பன்றியாயும், அன்னமாயும் தேடினார்கள் ஆதலின் மக்கட்பாகுபாடு ஆகிய ஆண் பெண் அலி என்றதையும் உணரமாட்டாதாராயினர் என்க. இறைவன் ஞானமே உருவானவன்; பால் திணைப் பாகுபாட்டுட்படுவானல்லன்; "ஞானத்தால் உன்னைக் காண்பார்கள் ஞானிகள்" என்றாற்போலக் காணத்தக்கவன். அவனை உள்ளவாறுணரும் ஆற்றல் அவர்கட்கு உண்மையில் இல்லையாதலும் தெளிக. கடவுள் - உரை மனம் கடந்து நிற்பவன். 'காணாக்கடவுள்' என்றது சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி.

தேவர்குழாம், நஞ்சை வென்று உயிர் பிழைக்கும் உபாயம் பெற்றிலமே! நாமென்ன தேவர்கள்! என்று நாணி அழியாமல், அவர்கள் உய்ய அவர்களை ஆட்கொள்ளவும், அவர்கள் நஞ்சிற்கு அஞ்சிச் செத்தார்களாக, அவ்வச்சத்தையும் போக்கச் சிறிதும் வெறுப்பின்றிச் சிரமமின்றி உணவாக உண்ட கூத்தன் என இறைவனது ஆற்றலைத் 'தேவர்குழாம் நாணாமே உய்ய ஆட்கொண்டருளி நஞ்சுதனை ஊணாக உண்டருளும் கூத்தன்' என்றதால் அறிவித்தார்.

கோண் - வளைவு. கோணார் பிறையும் இறைவனுடைய குற்றநீக்கியாட்கொள்ளும் குணத்தைக் குறித்து நிற்பதென்க. குணம் - அவனது அளவிலாற்றல் முதலிய எண்குணங்கள்.

இறைவன் குணம் - திருவருள். அதனைப் பரவுதலாவது ஆன்மாக்களைச் சுத்திசெய்யும் தீட்சை. ஆகவே குணம்பரவி என்பது அருட்சுத்தியை அறிவிப்பது காண்க.

332 மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை யாட்கொண்டென் தொல்பிறவித்

*தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்*
*காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்*
*போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.* 6

இ - ள்: அலரும் பருவத்து அரும்புகளை வென்று விளங்குகின்ற அணிகளை அணிந்த முலைகளையுடையவர்களே! உமாதேவியார் எழுந்தருளியுள்ள இடப்பாகத்தை உடையவனும், உத்தரகோசமங்கையென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள, மகரந்தங்கள் நிறைந்த கொன்றைமலரையணிந்த சடையை உடையவனும், நாயையொத்த என்னைத் தம் அடியாருள் ஒருவனாகச் சீராட்டி ஆட்கொண்டு எனது பழைமையான பிறவியாலுளதாம் துன்பங்கள் தப்பியோடாவண்ணம் நீக்கி அடியேன் விளங்க, எனது பிறவியை வேரொடு அறுப்பவனும் ஆகிய சிவபெருமானுடைய திருக்காதிலிருந்து அசைகின்ற குண்டலங்களை அன்புடன் மனங்கசிந்து பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது. இறைவன் அன்பருள் ஒருவனாக அடியேனையும் ஆண்டு, பிறப்பறுப்பான் ஆதலின் அவன்காதில் ஆடுகின்ற குண்டலங்களைப் பாடிக் கசிந்து நாம் பொன்னூசலாடுவோம் என்கிறாள் என்றுரைக்கிறது.

மகளிர் தனத்திற்குச் 'சீதவனசத்தரும்பை'ச் செப்பலாம்; அவ்வரும்பு ஆதவனைக் கண்டால் அலருமாதலின், என்றும் அலராத அலரும் பருவத்து அரும்பின்நிலையிலேயே இருக்கும் போதினையும் வென்று விளங்குவது தனம் ஆதலின் 'போதாடு பூண்முலையீர்' என்றார்.

சிவமெனும் பொருள் ஆதிசத்தியொடு புணர்ந்தே அருளலாதி ஐந்தொழிலியற்றும் ஆற்றலது ஆதலின் உமாதேவியைத் தம் இடப்பாகத் திருமேனியாகக்கொண்டு அர்த்தநாரீசராக விளங்குகின்றான்; ஆதலால், நாம் அவனால் அருளப்பெறும் பேறுடையேமாயினேம் என்பார் 'மாதாடு பாகத்தன்' என்றார்.

கொன்றை அவன் அடையாளப்பூ ஆதலின் 'கொன்றைச் சடையான்' என்றார். தாது - மகரந்தம்.

தன்னிழிவும், நன்றி மறவாமையாகிய உயர்வும் தோன்றத் தன்னை 'நாயேனை' என்றும், இழிவு நோக்கித் தள்ளாது அடியாருள் ஒருவனாகக்கொண்ட பெருங்கருணையை 'அடியாருள் கோதாட்டி ஆட்கொண்டு' என்றும் கூறினார்.

பிறவிக்குத் தொன்மையும் இடையறுமையும் வினைகாரணமாகவே விளைவனவாகலின் வினையை நீக்கினால், எரிகின்றதை இழுத்தால் கொதிப்பது நிற்பதுபோலப் பிறவிகெடுமாகலான் 'தொல்பிறவித்தீது ஓடாவண்ணம்(நீக்கி)என்றார். நீக்கி என வினையெச்சம் வருவித்துரைக்க. அறுப்பான் என்ற வினையால் பிறவி ஒரு மரமாக உருவகிக்கப்பெற்றமை காண்க. பழையவுரை தொல்பிறவியாகிய தீது எனப் பிறவிக்கே இயைத்து உரைக்கும். மற்றும் ஓடாவண்ணம் என்பதற்குப் பிறவியால் கிலேசமுறுவண்ணம் என்னும்.

தம் பிறவிவேரறுத்த பரம உபகாரியின் திருமேனியையும் திருமேனியில் விளங்கும் அணிகளையும் நினைக்கும்போதும் உரைக்கும்போதும் பரவசமாகிக் கண்ணீரரும்ப மனங்கசியும் ஆதலின் 'அன்பால் கசிந்து பாடி' என்றார்.

இப்பாடல், அன்பின் விளைவும் மனக்கசிவும் அறிவிப்பதால் அருட்சுத்தியாயிற்று.

333. உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடு மணிமயில்போல்
என்னத்தன் என்னையுமாட் கொண்டான் எழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 7

இ - ள்: பொன்னிறத்தால் ஒத்து விளங்கும் பூண்களையணிந்த முலையினையுடைய பெண்களே! பாசபசுஞானிகளால் எண்ணுதற்கும் அரிய திருவுத்தரகோசமங்கை யென்னும் தலத்திலே நிலைபெற்று விளங்கியிருக்கின்ற அந்தணனாகிய சிவபெருமான், தன்புகழையே பலகாலும் சொல்லிப் பணிந்து கீழேவிழுந்து வணங்கும் அன்பர்களுடைய பாவங்களின் தொடர்பைநீக்குபவன்; அவனே எனக்குத் தந்தையுமாவன்; அடியேனையும் ஒருபொருளாக ஆட்கொண்டான்; அவன் அழகைப்பாடிப்-பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, உத்தரகோசமங்கை இறைவன், தன் புகழே பாடும் அன்பரையாட்கொண்டதுபோல என்னையும் ஆட்கொண்டான் ஆதலால் அவன் அழகினைப்பாடி ஊசல் ஆடுவோம் என்றான் என்பதுணர்த்துகிறது.

பூணும் முலையும் பொன்னிறத்தால் ஒத்து வேற்றுமையறியவொண்ணாது விளங்குதலின் 'பொன்ஒத்த பூண்முலையீர்'

என்றார். பொன்னொத்த முலைப்பூணீர் என விகுதி முதலியன பிரித்துக்கூட்டிப் பொன்னையொத்த முலைகளிலே அணியை யணிந்தவர்களே என்பாருமுளர். சிவத்தைச்சார்ந்த ஆன்மா தூய்மையுற்றுப் பெரும்பான்மையான் சிவமேயாக விளங்கும் மெய்ப்பொருட் கருத்தைக் குறிப்பிடும் இச்சொல்லாட்சியில் அவ்வுரை இலக்கிய நயமும் இன்றி இருத்தல் காண்க.

உன்னற்கரிய புகழ், உத்தரகோசமங்கை மன்னிப்பொலிந் திருந்த மாமறையோன்புகழ் என இயைத்துப்பொருள்கொள்க. மறையோன் - பிரமன். மா மறையோன் - சிவன். பன்னி - பலகாலும் சொல்லி. இது உரைவணக்கம். பணிந்து - மனத் தால் முனைப்பொடுங்கி. இது மனவணக்கம். இறைஞ்சி - கீழ் விழுந்து நமஸ்கரித்து. இது மெய்வணக்கம். பாவங்கள் மனமொழி மெய்களையே துணைக்கொண்டு விளைவனவாகலின் அவற்றைச் சிவனைப்பரவும் சாதனங்களாக்கவே பாவங்களின் தொடர்பு அறுவதாயிற்று. அதனால் 'பன்னிப் பணிந்து இறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்' என்றார்.

அடியேனுக்கு அவன் தந்தையுமானவன் ஆதலால் என் தவறு கண்டு ஒறுத்துத் தக்கனகண்டு பாராட்டி ஆட்கொள் பவன் என்பார் 'என் அத்தன்' என்றார்.

மலமாயை கன்மங்களோடு கூடிய பெத்தான்மாவாகிய என்னையும் பரிபாகங்கண்டு ஆட்கொண்டான். என்னையும்: உம்மை இழிவு சிறப்பு. அவன் அழகு நம் மனத்தகத்தடங்காத தாக - அளவிடற்கரியதாக - பாடப்பாடப் புதிய பேரின்பம் விளைப்பதாகலின் 'எழில்பாடி ஆடுவோம்' என்றாள் என்க.

முத்தச்சங்கிலியும், பவளக்காலும், பொற்பலகையுமுடைய ஊசல் அன்னப்பறவை; அதன்மேலிருக்கும் மகளிர் சாயலான் மயிலை ஒத்தவர்கள். ஆதலால் அன்னத்தின்மேல் ஏறியாடும் அணி மயில் போல் ஆடுவோம் என்றாள்.

இப்பாடல், பாவங்கள் பற்றறுதலையும் இறைவன் ஆட் கொண்டமையையும் உணர்த்துதலின் அருட்சுத்தியாயிற்று.

334 *கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்*
*சால அமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து*
*ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்*
*சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை*
*மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்*
*பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ.* 8

பிறவிக்குத் தொன்மையும் இடையறுமையும் வினைகாரண மாகவே விளைவனவாகலின் வினையை நீக்கினல், எரிகின்றதை இழுத்தால் கொதிப்பது நிற்பதுபோலப் பிறவிகெடுமாகலான் 'தொல்பிறவித்தீது ஓடாவண்ணம்(நீக்கி)என்றார். நீக்கி என வினையெச்சம் வருவித்துரைக்க. அறுப்பான் என்ற வினையால் பிறவி ஒரு மரமாக உருவகிக்கப்பெற்றமை காண்க. பழைய வுரை தொல்பிறவியாகிய தீது எனப் பிறவிக்கே இயைத்து உரைக்கும். மற்றும் ஓடாவண்ணம் என்பதற்குப் பிறவியால் கிலேசமுறுவண்ணம் என்னும்.

தம் பிறவிவேரறுத்த பரம உபகாரியின் திருமேனியையும் திருமேனியில் விளங்கும் அணிகளையும் நினைக்கும்போதும் உரைக்கும்போதும் பரவசமாகிக் கண்ணீரரும்ப மனங்கசியும் ஆதலின் 'அன்பால் கசிந்து பாடி' என்றார்.

இப்பாடல், அன்பின் விளைவும் மனக்கசிவும் அறிவிப்ப தால் அருட்சுத்தியாயிற்று.

333 உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடு மணிமயில்போல்
என்னத்தன் என்னையுமாட் கொண்டான் எழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.7

இ-ள்: பொன்னிறத்தால் ஒத்து விளங்கும் பூண்களை யணிந்த முலையினையுடைய பெண்களே! பாசபசுஞானிகளால் எண்ணுதற்கும் அரிய திருவுத்தரகோசமங்கை யென்னும் தலத்திலே நிலைபெற்று விளங்கியிருக்கின்ற அந்தணனாகிய சிவபெருமான், தன்புகழையே பலகாலும் சொல்லிப் பணிந்து கீழேவிழுந்து வணங்கும் அன்பர்களுடைய பாவங்களின் தொடர்பைநீக்குபவன்; அவனே எனக்குத் தந்தையுமாவன்; அடியேனையும் ஒருபொருளாக ஆட்கொண்டான்; அவன் அழகைப்பாடிப்-பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, உத்தரகோசமங்கை இறைவன், தன் புகழே பாடும் அன்பரையாட்கொண்டதுபோல என்னையும் ஆட்கொண்டான் ஆதலால் அவன் அழகினைப்பாடி ஊசல் ஆடுவோம் என்றாள் என்பதுணர்த்துகிறது.

பூணும் முலையும் பொன்னிறத்தால் ஒத்து வேற்றுமை யறியவொண்ணது விளங்குதலின் 'பொன்ஒத்த பூண்முலையீர்'

என்றார். பொன்னொத்த முலைப்பூணீர் என விகுதி முதலியன பிரித்துக்கூட்டிப் பொன்னையொத்த முலைகளிலே அணியை யணிந்தவர்களே என்பாருமுளர். சிவத்தைச்சார்ந்த ஆன்மா தூய்மையுற்றுப் பெரும்பான்மையான் சிவமேயாக விளங்கும் மெய்ப்பொருட் கருத்தைக் குறிப்பிடும் இச்சொல்லாட்சியில் அவ்வுரை இலக்கிய நயமும் இன்றி இருத்தல் காண்க.

உன்னற்கரிய புகழ், உத்தரகோசமங்கை மன்னிப்பொலிந் திருந்த மாமறையோன்புகழ் என இயைத்துப்பொருள்கொள்க. மறையோன் - பிரமன். மா மறையோன் - சிவன். பன்னி - பலகாலும் சொல்லி. இது உரைவணக்கம். பணிந்து - மனத் தால் முனைப்பொடுங்கி. இது மனவணக்கம். இறைஞ்சி - கீழ் விழுந்து நமஸ்கரித்து. இது மெய்வணக்கம். பாவங்கள் மனமொழி மெய்களையே துணைக்கொண்டு விளைவனவாகலின் அவற்றைச் சிவனைப்பரவும் சாதனங்களாக்கவே பாவங்களின் தொடர்பு அறுவதாயிற்று. அதனால் 'பன்னிப் பணிந்து இறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்' என்றார்.

அடியேனுக்கு அவன் தந்தையுமானவன் ஆதலால் என் தவறு கண்டு ஒறுத்துத் தக்கனகண்டு பாராட்டி ஆட்கொள் பவன் என்பார் 'என் அத்தன்' என்றார்.

மலமாயை கன்மங்களோடு கூடிய பெத்தான்மாவாகிய என்னையும் பரிபாகங்கண்டு ஆட்கொண்டான். என்னையும்: உம்மை இழிவு சிறப்பு. அவன் அழகு நம் மனத்தகத்தடங்காத தாக - அளவிடற்கரியதாக - பாடப்பாடப் புதிய பேரின்பம் விளைப்பதாகலின் 'எழில்பாடி ஆடுவோம்' என்றாள் என்க.

முத்தச்சங்கிலியும், பவளக்காலும், பொற்பலகையுமுடைய ஊசல் அன்னப்பறவை; அதன்மேலிருக்கும் மகளிர் சாயலான் மயிலை ஒத்தவர்கள். ஆதலால் அன்னத்தின்மேல் ஏறியாடும் அணி மயில் போல் ஆடுவோம் என்றாள்.

இப்பாடல், பாவங்கள் பற்றறுதலையும் இறைவன் ஆட் கொண்டமையையும் உணர்த்துதலின் அருட்சுத்தியாயிற்று.

334 *கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்*
*சால அமுதுண்டு தாழ்கடலில் மீதெழுந்து*
*ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்*
*சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை*
*மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்*
*பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ.* 8

இ - ள் : அழகிய கைலையாகிற மலையுச்சியில் எழுந்தருளி யிருப்பதுமன்றி, பூமிக்கண்வந்து வந்திதரும் பிட்டை அமுதாக உண்டருளியும், மிக ஆழமான கடலின்மீது-கட்டுமரத்திற் பரதவனாக எழுந்தருளியும், இவ்வுலகமானது ஈடேறி உயரக் குதிரைமேற்கொண்டு பரிமேலழகராக எழுந்தருளியும் நம்மை ஆட்கொண்ட பரமன் சௌலப்யத்தோடும் விளங்குகின்ற திருவுத்தரகோசமங்கையிலே திருமாலுக்கும் அறிந்து வழிபடற்கரிய அவனை நாம் வாய்நிரம்பப் பாடி, நம்மனமும் உடலும் பேரானந்தத்தால் நிறையும்படி மனம் கசிந்து பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் எம்மையெலாம் ஆட்கொள்ளவே பலவுருத் தாங்கினான்; அவனை மனமார வாயாரப் பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றாள் என்கின்றது.

பொன்மலைமீது கருப்பூரக்குவியல் போலவும், புண்ணியம் திரண்டனையது போலவும், திருந்து சாத்துவிகம் சீர்கொள உருத்தாங்கியதுபோலவும் அழகுசெய்தலின் கைலைமால்வரை 'கோலவரை' எனப்பட்டது. குடுமி - சிகரம். அருவமாய் அகளமாய் அகண்டமாய் செறிவொழியாது நிறைந்திருக்கும் சிவபரம்பொருள், சகலான்மாக்களாகிய நாம் வழிபட்டு ஈடேறுதல் ஒன்றே பயனாகக் கொண்டு, உருமேனி தாங்கி உமையம்மையாரோடு எழுந்தருளியிருத்தலின் 'கோலவரைக் குடுமி வந்து' என்றார். வந்து - உருத்தாங்கி எழுந்தருளி.

குவலயம் - பூமண்டலம். கு - பூமி. வலயம் - மண்டலம். இது பிரகிருதி மாயாபுவனத்துப் பிருதிவி மண்டலம். இங்கே துவாதசாந்தத் தலமாகிற மதுரையிலே வாழ்ந்தவள் வந்தியென்னும் பிட்டுவாணிச்சி. அவள் தரும் பிட்டும் பிரகிருதி மாயாகாரியம். அன்பு என்னும் சுத்தமாயாகாரியமான குண சர்க்கரை கூட்டப்பெற்றது. அதனைக் கூலியாளாகவந்த இறைவன் விரும்பி உண்டார். வந்திக்கு எல்லாரும் வந்திக்கும் பரமுத்தி நிலையை அளித்தார். இதனைக் 'குவலயத்துச் சால அமுது உண்டு' என்ற பகுதியால் அனுபவிக்க வைக்கின்றார் அடிகள்.

இதற்கு நிலவுலகில் ஐந்திணை இன்பமாகிய நிறைந்த அமுதம் உண்டு என்று தோன்றியவாறே உரைப்பர். ஐந்திணை ஒழுக்கமாகிய களவு கற்பில் நின்று அருணூல்முழுதையும் நோக்குவர் அவர். பல்லூழிக்காலம் பயின்றரனை அர்ச்சியாத பயனது என்று ஒழிக.

தாழ் கடல் - ஆழமான கடல். இறைவன் திருக்கயிலையில் உமையம்மையாருக்கு ஆகமங்களை உபதேசித்தருளியபோது அம்மை பராமுகமாக இருந்தாராக, சிவபெருமான் 'நீ ஞான சாத்திரங்களை அசட்டை செய்தமையின் பரதவர் மகளாகுக' எனச்சபித்தனர். உமையம்மையார் சாபவிடுதிவேண்ட, நாமே வலைஞனாக வந்து உன்னை மணப்பேம், சாபம் நீங்கும் என்று அருளினர். அங்ஙனமே வலைஞரிளங்காளையாக வந்து வலை வீசினர். இதனைத் 'தாழ்கடலின்மீது எழுந்து' என்பதனால் குறித்தார் என்க.

பசுபுண்ணியங்கள் செய்து, அவற்றின் பயனாகிய இன்பங்களையே துய்க்குமிடமாகிய சொர்க்கம் வைகுண்டம் முதலான உலகங்கட்கும் கிடைக்காத பேறாகிய, இறைவனே குதிரைச் சேவகனாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், சிவகணநாதர்கள் குதிரைப் பாகர்களாகவும் வரப்பெறும் புண்ணியத்தைத் தாம் என்றும் செய்யாமையால் ஏனைய உலகங்களைக்காட்டிலும் ஞாலமே மிக்கதாதலின் 'ஞாலம் மிக' என்றார்.

சீலம் - சௌலப்யமாகிய குணம்; அஃதாவது எளியனாந் தன்மை. இவ்வண்ணம் தேவர்கட்கு அரியனாகிய இறைவன் கன்மபூமியில் வாழ்வாராகிய எம்மனோர்க்கு எளியனாக உத்தரகோசமங்கையில் எழுந்தருளினமையைச் 'சீலந்திகழுந்திருவுத்தரகோசமங்கை மாலுக்கு அரியானை' என்றார். சீலம் - குணம். ஒழுக்கம் எனப் பொருள்கொண்டு இல்லற ஒழுக்கமென வலிந்திழுத்து உத்தரகோசமங்கையில் உமையம்மையாரோடு இருந்து ஆகமம் உபதேசித்தலை உணர்த்தியதாகக்கொள்வர் அவர். பழைய உரை சைவாகம ஆசார ஒழுக்கம் பிரகாசிக்கும் உத்தரகோசமங்கை எனத் தலத்திற்கு அடைமொழியாக்கும்.

வாயார-வாய்நிறைய. விரும்பிய பொருளைப்பற்றி விருப்ப மிகப் பாடும்போது வாயில் அவலிட்டதுபோல நிறைந்து தோன்றும் இன்ப அனுபவம்; அது தோன்ற என்பதாம்.

பூலித்து: பூரித்து என்பது ரகரலகரப்போலியாக எதுகை நோக்கி வந்தது. நிறைத்து என்பது பொருள். உள்ளம் பூரித்து, உடலம் பூரித்து என ஏற்ற வினைமுதல் வருவிக்க. இவை இரண்டும் பூரிக்கவே மனம் தானே குழையுமென்க.

அகம் குழைதலும், உள்ளமும் உடலும் பூரித்தலும், திருவருள் சேர்க்கையால் சுத்திபெற்ற ஆன்மாவின் செயலாதல் காண்க.

335 தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 9

திருச்சிற்றம்பலம்

இ - ள்: கிளர்ந்து விளங்குகின்ற அணிகளை அணிந்த முலையையுடைய பெண்களே! தென்னைகள் விளங்குகின்ற சோலைகள் சூழ்ந்த திருவுத்தரகோசமங்கையில் எழுந்தருளி விளங்குகிற பேரொளிப்பிழம்பான தானேயான வடிவம், எங்களை அநாதியேபற்றி வரும் பிறவிநோயை நீக்கி எந்த நிலையிலும் ஆட்கொள்வதற்காக, இடப்பாகத்து விளங்குகின்ற உமாதேவியாரும் தானுமாக எழுந்தருளிவந்து அடிமையாக ஏற்றுப் பணியுங்கொண்ட மணம்வீசும் கொன்றைமலர் மாலையை அணிந்த திருச்சடையையுடைய சிவபெருமானது குணங்களைப்பாடிப் பொன்னூசல் ஆடுவோம் என்றவாறு.

இது, இறைவன் குருவடிவாக எழுந்தருளி எம்மை ஆட்கொண்டமையைப் பரவிப் பொன்னூசல் ஆடுவோம் என்றாள் என்கின்றது.

பொங்கு உலவு பூண் முலையீர் - கிளர்ந்து அசைகின்ற அணிகளை அணிந்த முலையினையுடைய பெண்களே! பொங்குதலை முலைக்கும், உலவுதலைப் பூணுக்கும் கூட்டி முடிக்க. இது மகளிரின் இளமை முதிர்வும் செல்வவளமும் கூறியவாறு.

தெங்கு குலவு சோலை என்பது தெங்குலவுசோலை எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. தெங்கு தாம் கன்றாயிருந்த போது மனிதன் வார்த்த தண்ணீரைத் தான் உயிரோடுள்ள வரை இளநீராகத் தருவது. அத்தெங்கு சூழ்ந்த நகரம் உத்தரகோசமங்கை என்பதால், பலகாலம் ஈட்டிய சஞ்சித ஆகாமிய வினைகளின் பயனைத் தன்னிடம் வாழ்வார்க்கு உதவிக் காக்கும் சிவநகரம் என்று குறித்தவாறு.

அத்தலத்தில் உள்ள இறைவன் உருவமில்லாத சோதிப் பிழம்பு. இறைவன் சோதியாயிருக்கும் நிலையில் சத்தியையும் தன்னகத்தடக்கி, தனித்த அதாவது சிவமேயான உருவுடையனாதலின் 'சோதித் தனியுருவம்' என்றார்.

உருவம் கொன்றைச்சடையான் ஆட்கொள்வான், கோதையும் தானும் வந்தருளிப் பணிகொண்ட குணம் பரவி ஊசல் ஆடாமோ எனக் கூட்டுக.

ஆன்மாக்கள் மலபரிபாகத்தால் வேறுபடுவார்களாகலின் இறைவனும் அவரவர்கள் பரிபாகத்திற்கேற்ப ஆட்கொள்வர். இதனையே 'எந்தரமும் ஆட்கொள்வான்' என்றார். ஆட்கொள்வான்: வானீற்று வினையெச்சம். வினையாலணையும் பெயராக்கி, ஆட்கொள்பவனாகிய சிவன் என்பாரும் உளர். இறைவன் அருட்கோலங்கொள்ளுங்கால் அம்மையப்பராக எழுந்தருளுவராதலின் உமையம்மையும் தானுமாக வந்தருளி என்றார்.

கொங்கு - தேன்; மணமுமாம்.

'எந்தரமும் ஆட்கொள்வான்' என்பதற்கு எம்முடைய மந்ததர பரிபாகத்தையும் அதிதீவிர சத்திநிபாதமாக்கி அடிமை கொள்வோன் என்று பழைய உரை கூறும்.

இப்பாடல், இறைவன் ஆட்கொள்ளும் முறையும் அதனால் விளையும் பயனாகிய பிறப்பறுதலுமாகியவற்றைக் கூறுதலால் அருட்சத்தியாயிற்று.

# 17. அன்னைப்பத்து

[ஆத்தும பூரணம்]

அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்குங்காலத்து, ஒருநாள் தலைவி ஒருத்தி இறைவன் தன்மையாகத் தான் கண்டவற்றைக் கூற, அதனைக்கேட்டிருந்த தோழி தன் அன்னையிடம் தலைவியின்நிலை இவ்வாறிருந்தது என்று கூறுவதுபோல அருளிச்செய்யப்பெற்றது.

தலைவன் பிரிவால் வருந்திய தலைவி உடல் மெலிந்து உள்ளந் திரிந்து, செய்கை மறந்து, ஆயத்தோடு விளையாடாது, உணவும் வெறுத்து ஓரிடத்துத் தனித்தேயிருத்தலைக்கண்ட செவிலி, தன் மகளாகிய தோழியைப் பார்த்து 'இவட்கு இம்மாறுபாடு எதனால் ஆயது' என்ன, அறத்தொடுநிற்கமுற்பட்ட தோழியின் தன்மையை எய்தினர் அடிகள். அந்நிலையைச் சுவானுபூதியாகக் கொண்டு அன்னைப்பத்தாகிய இதனை அருளினர்.

பழைய குறிப்பு இதற்கு ஆத்துமபூரணம் என்றும், அதாவது ஆன்மா சிவனோடு நிறைதல் என்றும் பொருள்கூறும். ஆன்மா சிவத்தோடு ஒன்றித் தன்தன்மைகெட்டு எல்லாம் சிவமயமேயான உன்மத்தமே இன்று இவளுக்கு ஆயிற்று என்பதை இப்பத்துப் பாடல்களும் அறிவித்தலின் ஆத்துமபூரணம் ஆயிற்றுப்போலும்.

அகத்தியச் சூத்திரம் "அருட்டிரு அன்னைப்பத்து ஆன்ம சம்பூரணம்" என்பது. முற்பதிகத்துப் பொன்னூசல் ஆடியதால் விளைந்த அநுபவம் சொல்லப் புலப்படாத ஒன்று ஆதலால், தலைவியின் தன்மையைத் தோழிமூலமாகக் கேட்டு இன்புறுதலாம் என்க.

பழையவுரை ஒருவர்க்கொருவர் அளவளாவி வினாவிடையான சிவானந்தப்பெருக்கைத் தாயும் பெண்ணுமாகிய இருவர்க்கும் ஒரு மொழியான அநுபவம் என்று கருத்துக்கூறும்.

பழைய புராணமும் "தேய மிகுந்த நிலைகுலையக் கூடுதலை, யாய வருட்டாய்க்கு அங்கு அறைதல் அன்னைப்பத்தாகும்" எனத் தலைவி தன்னிலையை அருளோடு கூடிய தாய்க்குச் சொல்லியது அன்னைப்பத்தாகும் என்று உரைக்கும். திருவாதவூரர் புராணம்,

" ஆங்கொரு சிறுமி தன்சீர் அன்னையை நோக்கிக் கூறும்
தாங்கிசை மொழியே யாகத் தகுமிவை ஈரைந் தோதி "

என்னும். இவற்றைக்கொண்டு நோக்குங்கால் அன்னைப்பத்து மகள் தன் தாயை நோக்கிக் கூறிய பத்துப்பாடல்களாகும் என்பது பெறப்படும்.

கற்புக்காலத்துத் தலைவி இங்ஙனம் தாயிடம் கூறவேண்டிய இன்றியமையாமையின்று. களவுக்காலத்தோ தலைவி தாய்க்குநேரே அறத்தொடுநிற்றல் இலக்கணமரபு அன்று. அன்றியும் அன்னே என்னும் என்று பிறர் கொண்டுகூறுவதாகச் சொற்றொடர் அமைந் திருக்கிறது. தோழியும் நற்றாயோடு அறத்தொடுநிற்கும் முறை யுடையள் அல்லள். ஆதலால் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் முறையில் அமைந்தது எனவே ஏற்புடைத்தாதல் அறிக.

இக்கருத்தையே புதிய உரைகளும் வற்புறுத்துதல் காண்க. அன்னாய் என்று தோழியைத் தலைவி விளிக்கும் மரபை "அன்னை என்னை என்றலும் உளவே" என்னும் தொல்காப்பியப் பொருளியற் சூத்திரத்தான் அறிக.

### கலிவிருத்தம்

*திருச்சிற்றம்பலம்*

336 வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையினர் அன்னே யென்னும்
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கும்
நாதரிந் நாதனார் அன்னே யென்னும். 1

இ - ள்: அன்னே! எம் தலைவர் வேதங்களாகிற மொழி களை உடையவர்; வெண்மையான விபூதியை அணிந்தவர்; சிவந்த திருமேனியை உடையவர்; பரநாதமாகிய பறையினை உடையவர் என்று பேசுவாள். அன்னே! நாதப்பறையின ராகிய அவர் பிரமனுக்கும் திருமாலுக்கும் தலைவர் இத்தலை வரே என்பாள் என்றவாறு.

இது, இறைவன் அணியும் சாந்தும், மேனியின் நிறமும், மொழியும், பறையும், தலைமையும் உணர்த்துகின்றது.

சிவன் வாய்மொழி யாவும் வேதம். வேதம் மக்களுக்கு ஞானத்தை விளைவிப்பதாதல் விளங்க 'வேதமொழியர்' என்றார்.

வெண்ணீறு நின்மலமானது. அணிபவருக்குத் தூய்மை அளிப்பது. இறைவன் வெண்ணீற்றை அணிவது வெண் ணீற்றிற்குத் தூய்மையும், வன்மையும் உதவுதற்காக என்க.

திருவெண்ணீற்றின் பெருமையும், செய்யும்முறையும், அணியும் முறையும், உபதேச காண்டத்தும் பஸ்மஜாபாலம் முதலிய உபநிடதங்களிலும் விரிவாகக் கூறப்பெற்றுள. திருநீற்றுப் பதிக முழுதுமே நன்கு சிந்திக்கத்தக்கது.

நாதம்-சிவத்தினின்று தோன்றியதாய் ஒலிவடிவாயிருக்கும் தத்துவம். இதினின்று பிறந்த முதலொலி ஓம் என்பது. நாதம் பறையாகவே அதினின்று பிறந்த முதலொலி பிரணவநாத மாகும். நாதம் பரநாதம் அபரநாதம் என இருவகைப்படும். மாயாதீதரான பரசிவம் பரநாதவடிவினர். ஈண்டுக் கூறியது சுத்தமாயா காரியமான அபரநாதத்தையே என்க.

நாதர் இந்நாதனார் என்பதில், இறைவனுக்கு முதன்மை யும் தலைமையும், மாலுக்கும் நான்முகற்கும் தலைவரானமையால் அன்று, தலைமை அநாதிநித்தியமானது. அஃதறியாது அவர்க ளிருவரும் தாம் நாதர் எனத் தருக்கினர். அதனை உணரும் பரிபாகமில்லாத மக்களும் அவர்களை நாதரெனக்கொண்டனர். பின்னர், அவ்விருவருமே தாம் நாதரன்மையை உணர்ந்து சிவனொருவனே தியானிக்கத் தக்கவன் எனத் தெரிந்தனர். ஆனால், அவர்களை நாதரெனப் பிறழ உணர்ந்த ஆன்மாக்க ளாகிய நம்மவர் சிலர்மட்டும் இன்னும் தெளிந்திலர் என்க.

இத்திருப்பாடல், இறைவனை நாதப் பறையினர், வேத மொழியர், செம்மேனியர், வெண்ணீற்றர், நாதர் என அரு உரு ஆகிய நிலைகளில் வைத்து ஆன்மா அறிந்துய்ந்தமை கூறுத லின் அறியவேண்டுவனவற்றை அறிந்துகொண்ட ஞானபரி பூரணத்தை உணர்த்துதலின் ஆத்துமபூரணமாயிற்று.

337 கண்ணஞ் சனத்தர் கருணைக் கடலினர்
உண்ணின் றுருக்குவர் அன்னே யென்னும்
உண்ணின் றுருக்கி யுலப்பிலா வானந்தக்
கண்ணீர் தருவரால் அன்னே யென்னும். 2

இ - ள்: அன்னே! கண்களில் மைபூசியவர்; கருணைக்குக் கடல்போன்றவர்; எமது மனத்துள் ஞானவடிவாய் நின்று மனத்தை உருகச்செய்வர் என்று கூறுவள்; அன்னே! இன் னுங்கேள்; அங்ஙனம் உள்நின்று உருக்கி வற்றாத ஆனந்தக் கண்ணீரை அளிப்பர் என்பாள் என்றவாறு.

இது, இறைவன் தான் கருணையே வடிவாகநின்று அன்ப ருள்ளத்துள் எழுந்தருளி ஆனந்தம் பெருக்கிக் கண்ணீர் பெருகச்செய்வர் என்றுணர்த்துகின்றது.

இறைவனுக்கும் கண்ணிற்கு மை இன்றியமையாததோ? அழகுப்பொருளாவதோ? எனின், நம்போல அவர்க்கு ஓரழகுச் சாதனமன்று; திரோதானசத்தி வடிவானது; அருளுக்கு உபகாரப்படுவது என்க.

உள் நின்று உருக்குதலாவது உயிருக்குள் உயிராய் ஞான வடிவாய் எழுந்தருளியிருந்து ஆன்மாவின் ஆணவக்களிம்பு வெளிப்படாதவண்ணம் செய்து சிவானுபவமாகிய ஆனந்தமே விளையச் செய்து, அதனல் ஆன்மா தற்போதம்கெட்டுச் சிவ போதத்திலேயே திளைக்கச்செய்தல்.

சிவபோதத்தால் விளையும் ஆனந்தம் எல்லையற்றது; என்றும் குறையாதது. அன்பின் உண்மையை ஆர்வலர் புன்கணீர் பூசல் தருவதுபோல அவ்வானந்த அனுபவத்தை வெளிப்படையாகக் காட்டும் செயல் கண்ணீர் பெருக்கல் ஆதலின் அதனை 'உலப்பிலா ஆனந்தக்கண்ணீர் தருவர் என்னும்' என்றாள்.

இது ஆன்மாவில் ஆனந்தம் நிறைந்து ததும்பிக் கண்ணீராகப் பெருகுதலை உணர்த்துதலின் ஆத்துமபூரணமாயிற்று.

338 *நித்த மணாளர் நிரம்ப வழகியர்*
*சித்தத் திருப்பரால் அன்னே யென்னும்*
*சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை*
*அத்தரா னந்தரால் அன்னே யென்னும்.* 3

இ-ள்: அன்னே! அவர் நித்திய கல்யாண சுந்தரமூர்த்தி; மிகுந்த பேரழகர்; எம்மனத்துள் என்றும் வீற்றிருப்பவர் என்பாள்; இன்னமும் கேள் அன்னே! சித்தத்திலிருக்கும் சிவபெருமான் தென்பாண்டி நாட்டவன் காண்; திருப்பெருந்துறைத்தலைவன் காண்; ஆனந்தமே வடிவானவன்காண் என்பாள் என்றவாறு.

இது, அடியார்மனத்தில் அறிவுவடிவாயிருக்கும் அரனே எமக்கு எளிவந்து திருப்பெருந்துறையிலும் உள்ள அத்தரானென்று இறைவனுடைய தொன்மைநிலையும், ஆன்மாக்களை ஆட்கொள்ள மேற்கொண்ட எளிவந்த இன்பநிலையும் இவ்வாறு என்று உணர்த்துகிறது.

ஆன்மாக்கள் என்றும் போகந்துய்க்கவேண்டும் என்ற திருவருட்குறிப்பால் தாம் அநாதியே சத்தியோடு கூடியிருப்பினும் மணவாளப்பெருமானாக நாளும் காட்சிதரும் மாட்சியுடையன் என்பார் 'நித்த மணாளர்' என்றார்.

என்றும் மாருத அழகுடையர் என்பார் 'நிரம்ப அழகியர்' என்றும், அழகும் இளமையும் கூடியிருப்பதால் என் சித்தத்தில் என்றும் இருப்பவர் என்பார் 'சித்தத்து இருப்பர்' என்றும் கூறினர்.

இத்திருப்பாடல் இறைவன் சித்தத்திலிருந்து ஆனந்த வடிவினராதலை அறிவித்தலின் ஆத்தும பூரணமாயிற்று.

339 ஆடரவப் பூணுடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேடமி ருந்தவா றன்னே யென்னும்
வேடமி ருந்தவா கண்டுகண் டென்னுள்ளம்
வாடுமிது வென்னே அன்னே யென்னும். 4

இ-ள்: அன்னே! படம் எடுத்தாடுகின்ற பாம்பினை அணியாகவும், புலித்தோலை ஆடையாகவும், பூசுவன வெண்ணீருகவும் கொண்ட ஒருவேடம் இருந்தபடி என்னே என்பாள்; அவளே பின்னும், அன்னே! அவ்வேடத்தைக் கண்டு கண்டு என்மனம் வாடுகின்றதே இச்செயல் என்னே என்பாள் என்றவாறு.

இது. இறைவன் அணியும் உடையும் பூச்சும் முதலாயின எனக்கு முதலில், இது என்ன இப்படி ஒருவேடமா என்று எண்ணச் செய்தது; பின்னர் அவ்வேடம், கண்டு கண்டு உள்ளம் வாட்டும் நிலையினதாயிற்று என்று தலைவி கூறியதாக அறிவிக்கின்றது.

உள்ளம் ஒன்றைப் பற்றியகாலத்து அதனைப்பற்றிய அநுபவநுட்பம் அறிவதற்கு முன்பு தோன்றிய எண்ணத்தைக் கோடலும், பின்னர் அநுபவம் முதிரக் கருத்து வேறுபட்டு உண்மையில் நிலைத்தலும் இயல்பு. அங்ஙனமே தலைவனுடைய அணி முதலியவற்றைக் கண்ட தலைவி, இப்படி ஒருவேடமா? இது என்ன வேடம்? என்று நகைச்சுவைதோன்றக் கருதினள். அவளே பின்னர் ஒவ்வொன்றும் அவர் மேனியிற் கலந்திருக்கின்ற கலப்பு, அதனுல் விளைகின்ற பொலிவு, தனக்கு விளையும் பயன் ஆகிய இவற்றை அனுபவித்து உண்மை உணர்ந்து என் உள்ளம் வாடுகின்றதே எனக் கவல்கின்றுள். இவற்றுள் முன்னது அறியும் நிலை. பின்னது அநுபவ நிலை என்க.

ஆடரவம்: வினைத்தொகை. இறைவன் என்றும் ஆனந்த நடனம் புரிவதால் அவரணியும் ஆடுதலியல்பாயினும், அரவத்தின் இயல்பும் ஆடுதல் ஆதலின் முக்காலவினைத்தொகையாகக் கொள்க. அரவம் - பாம்பு. - இது மணிபந்தமாக - தோள்

வளையாக - அரைக்கச்சாக - மார்பணியாக - சடைக்கயிருக - காலணியாக விளங்குதலின் பூண் எனப் பொதுச்சொல்லாற் குறித்தவாறு. அரவம் பொறிவாயில் ஐந்தவித்தான் என்பதை உணர்த்தும் குறிப்பு.

உடை - அரையின்கண் ஆடையாக உடுத்தப்பெறுவதாக லின் புலித்தோலையே கொள்க. "புலித்தோலை அரைக்கசைத்து" முதலியன இதற்கு அரண். யானைத்தோல், கயமுகன்தோல், கலைமான்தோல் முதலியவை உடையாகாமை ஓர்க. உடை அளவிலாற்றலையும், ஆன்மாக்களின் ஆணவமலத்தை வாட்டி ஆட்கொள்ளும் தன்மையையும் அறிவிப்பன.

பொடி - சர்வசங்காரகாலத்து இறைவன் எல்லாவற்றையும் அழித்து நடனஞ்செய்தபோது திருமேனிக்கண் ஒட்டியசாம்பர். இது இறைவனுடைய அநாதி நித்யத்தன்மையை அறிவிப்பது. பூசிற்றுப்பொடி, தோல் உடை, ஆடரவம் பூண் என நிறுத்திக் கூட்டுக. இங்ஙனமாய வேடம் நகைக்கு இடந்தருவதாயிற்று முன்னர். அதனைத் திருவருள் உணர்த்த உணர்த்த நான் பல முறை கண்டேன்; கண்டுகொண்டேயிருக்கிறேன்; அவற்றுல் அவனுடைய சிறப்பியல்புகள் பல விளங்குகின்றன; அதனுல் இத்தலைவன் எம் தரத்திற்கு அரியன் என்ற உணர்வும் உண்டா யிற்று; அதனுல் உள்ளம் வாடும் என்ருளாம்.

ஈண்டும் பிறவிடத்தும் தலைவியின் நிலையில் ஆன்மாவை யும், தலைவன் நிலையில் சிவத்தையும், அன்னையின் நிலையில் திருவருட்சத்தியையும், தோழியின் நிலையில் தலைவனிடம்சேர்க்க உதவும் உபகாரமலமாகிற மாயையையும், செவிலியின் நிலையில் மாயையைக் காரியப்படுத்துகின்ற கிரியையையும் கொள்க. இத் திருப்பாடல், வேட்கங்கண்டு உள்ளம் வாடும் பூரணத் தன் மையை அறிவித்தலின் ஆத்துமபூரணமாதல் காண்க.

*340* *நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்*
*பாண்டிநன் னுடரால் அன்னே யென்னும்*
*பாண்டிநன் னுடர் பரந்தெழு சிந்தையை*
*ஆண்டன்பு செய்வரால் அன்னே யென்னும்* 5

இ - ள் : அன்னே! நீண்ட திருக்கரங்களையுடையவரும், நெறிந்துள்ள தலைமயிரையுடையவருமாகிய இவர் பாண்டி நாடராமே என்பாள்; மேலும், அன்னே! பாண்டிநாட்டவ ராகிய அவர் அடியேனது பலபொருளிற் பற்றிப் பரந்து கிளர்ந்தெழுகின்ற சிந்தையை அடக்கியாண்டு கருணை செய் வார் என்பாள் என்றவாறு.

இது, இறைவன் உயிர்களின் பரந்த சிந்தையைக் குவித்து ஆட்கொண்டமையை அறிவிப்பது.

சிறந்த மக்களுக்குக் கை முழந்தாள்வரை நீண்டிருத்தல் இலக்கணமாதலின் தேவதேவரான இவர் கரங்களும் நீண்டு உள்ளன என்பாள் 'நீண்ட கரத்தர்' என்று கையழகிலும் அமைப்பிலும் ஈடுபட்டாள்.

பின்னர், திருமுகச் செவ்வியும், அதனை மிகுதிப்படுத்தும் தலைமயிரும் சிந்தையைக் கவர்ந்தன. அவருடைய தலைமயிர் கருமணலின் ஒழுங்குபோலவும், கரிய வண்டுகளின் கூட்டம் போலவும் செறிந்து சுருண்டிருந்தன. அதனை, 'நெறிதரு குஞ்சியர்' என்றாள். குஞ்சி - ஆண்பால் தலைமயிர். "நெறிதரு குழலை அறல் என்பர்கள்" என்ற கோயில்நான்மணிமாலையும் காண்க.

இத்தகைய பேரழகனாகிய பெருந்தலைவன் எமக்கு எளியனோ? எம் வினை அவனைக் கூடச்செய்யுமோ? என்ற ஐயம் உள்ளத் தெழுந்து உறுத்தக் கவன்றதலைவி அவனுடைய ஊர் தெரிந்து சிறிது ஆறினாள். அந்த நிலையைப் 'பாண்டிநன் னாடரால் அன்னே என்னும்' என்ற பகுதியால் விளக்குகிறார். பழைய வுரைகாரர் இடைவிடாது கன்மமலத்தழுந்தி, மூனைத்தெழு கின்ற சிந்தை என்று உரை கூறுவர்.

அவரருமையை உணர்ந்தகாலத்து என் மனம் ஒன்றிலும் நிலைகொள்ளாது கவன்றது. இறைவன் யாம் அடியார்க்கு அடியன், வந்திக்கு ஆள், அன்பர்க்கு அன்பன், அல்லார்க்கு அல்லேன் என்றெல்லாம் காட்டி, நிலையாத என் மனத்தைத் தம்மிடமே நிலைக்கச்செய்து ஆண்டான்; கருணை செய்தான் என்பாள் 'பாண்டிநன்னாடர் பரந்தெழு சிந்தையை ஆண்டு அன்பு செய்வர் என்னும்' என்றாள். இங்ஙனமன்றி, அன்பு செய்வர் என்பதற்குத் தம் திருவடிஞான அன்பு உளதாய்ச் செய்வர் என உரை கூறும் பழைய உரை.

இப்பாடல் உள்ளம் ஒருக்கி ஆண்டருளியதை உணர்த்து தலின் ஆத்துமபூரணமாயிற்று.

**341** *உன்னற் கரியசீர் உத்தர மங்கையர்*
*மன்னுவ தென்னெஞ்சில் அன்னே யென்னும்*
*மன்னுவ தென்னெஞ்சில் மாலயன் காண்கிலார்*
*என்ன அதிசயம் அன்னே யென்னும்.* 6

இ-ள்: அன்னே! எவராலும் நினைத்தற்கும் அரிய புகழினையுடைய உத்தரகோசமங்கையிலுள்ள பேரரசன் என் நெஞ்சில் நிலைபெற்றான் என்பாள்; அவன் அங்ஙனம் என் நெஞ்சில் நிலைபெற்றுள்ளதைத் திருமாலும் பிரமனுங்கூட அறியார்கள்; இது என்ன அதிசயம் என்பாள் என்றவாறு.

இது பெரிய பெருமான் சிறிய உளத்தில் எழுந்தருளினர்; இதனை அரியும் பிரமனுங்கூட அறிந்திலர் என்கின்றது.

உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் மலக்கலப்பும் உடையன. ஆதலின் அவை இறைவனுடைய புகழனைத்தையும் ஒருசேர உணரும் தன்மையன அல்ல. ஆதலால் உன்னற்கும் அரியதாயிற்று. உன்னற்கும் என்பதில் சிறப்பும்மை செய்யுளாதலின் தொக்கது. இவன் தென்னன் இவன் சோழன் என்பன அவ்வந்நாட்டு மன்னரையே உணர்த்துவதுபோல உத்தர மங்கையர் என்பதற்கும் உத்தரகோசமங்கையிலுள்ளார்க்குப் பேரரசன் என்று பொருள்கொள்க.

'மன் நிலைபேருகும்' ஆதலின் மன்னுவது - நிலைபெறுவது எனப் -பொருள்படும். நிலைபேருவது கூலி கொடுத்துக் குடியிருப்பார்போலாது முழு உரிமையோடும் உயிரினிடமாக விளங்குதல்.

இவ்வண்ணம் இவன் வீற்றிருந்தும் அடிமுடிதேடியலைந்த மாலும் பிரமனும் என் மனத்து அவனை எளிதிற் கண்டிலர், இவ்வண்ணம் அவன் ஒளித்திருந்த அதிசயம் என்னே என்பாள்.

என்னே என்பது வியப்பிடைச்சொல், இரக்கக்குறிப்பாகக் கொண்டு அவர்கட்கு அறியாமையை மிகுவித்த ஆணவமலம் இருந்தபடி என்னே என்று இரங்கிக் கூறியதுமாம்.

'மன்னுவது என் நெஞ்சில்' என்றது ஆத்தும பூரணம் உணர்த்தியது.

342 வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே யென்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரி மேல்கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னே யென்னும். 7

இ-ள்: அன்னே! வெண்மையான ஆடையையணிந்தவர், வெண்திருநீறு பூசிய நெற்றியினையுடையவர், அறச்சாலைக்கு ஏற்ற சட்டையை உடையவர் என்பாள்; இன்னும் கேள்

அன்னே ! பள்ளிக் குப்பாயத்தராக, பாய்ந்துவரும் குதிரை மேற்கொண்டு என்னுடைய உள்ளத்தைக் கவர்வர் என்பாள் என்றவாறு.

இது, இறைவனியல்புகளில் அவனணிந்த ஆடை, சாந்து, சட்டை முதலிய அடையாளங்களைக் கூறித் தலைவி அறத்தொடு நின்றதாகத் தோழி செவிலிக்குக் கூறியது.

கலிங்கம் - ஆடை. கலிங்கநாட்டில் நெய்யப்பெறுவதாகிய ஒருவகை ஆடையை இடவாகுபெயரான் உணர்த்திப் பின் ஆடைக்கே பொதுவகையான் பெயராயிற்று; எண்ணெய் என்பதுபோல. கரையும் கறையும் இல்லாத தூய வெண்மையான ஆடையே இறைவற்கு உகந்தது என்பாள் 'வெள்ளைக் கலிங்கத்தர்' என்றாள்.

இறைவனுக்குக் கலைகளே ஆடை. பஞ்சானும் பட்டானும் அமைந்த பௌதிகமான ஆடையன்று. ஆதலால், பரிபாக முற்ற ஆன்மாக்கள் அறிந்து உய்யட்டும் என்ற கருணையுள்ளத்தால் தம்திருவுள்ளக் குறிப்பின்படித் தாங்கிய சிவஞானமே ஆடையென்ற அநுபூதியை அடியார்கள் பெற எல்லாவற்றையும் இருந்தநிலையில் ஒருசேர அறிதலான கலைஞானமே ஆடையாகக் கொண்டருளினர் என்று பழையவுரை கூறும். நயம் ஆழ்ந்து அறிதற்குரியது.

முண்டம் - நெற்றி. திருமுண்டம் - திருநெற்றி. வெண் திருமுண்டம் - நீறுபூசப்பெற்றமையால் வெண்மையான திருநெற்றி; அதனையுடையர் என்பதாம். திருநீறும், கண்டிகையும், முக்கண்ணும், திருச்சடையும், கொன்றை மாலையும், கங்கையும், பிறையும் இறைவற்குத் தனித்த சிறப்படையாளங்களாதலின் அதனுள்ளும் சிறந்தது கூறித் தெரிவித்தாளாம்.

திருமுண்டம் என்பதைத் திரிபுண்டரம் என்பதன் சிதைவாக எண்ணி, மூன்று கோடாக அணிந்த திருநீற்றுக்கோடு என உரை காண்பாருமுளர். புண்டரம் என்ற சொல் ஆரியச் சிதைவாகிய பிராகிருதத்தினும், வடமொழியாக்கத்தினும் முண்டம் எனத் திரியும் என்ற மரபும் விதியும் இஞ்ஞான்றுவரை காணப்பெறுமையானும் அங்ஙனங்கோடல் ஏலாது என்க. அன்றியும் திரு என்னும் உரிச்சொல்லையும் திரி என்னும் ஆரிய எண்ணுப்பெயரையும் ஒன்றாகக்கொண்டு மயங்கினர் அவர் என்க. பழையவுரை, முச்சத்தி முக்கர்த்தாக்களும் தமது உருவெனத் திருநீறுதரித்த நாதன் என உரைவகுக்கும்.

குப்பாயம் - சட்டை. பள்ளி - அறச்சாலை; அஃதாவது துறவிகளுறையும் மடம். அவர்கட்குரிய சட்டையாவது கணுக்கால்வரை தொங்கும் நிலையங்கி. இதுவும் பெருமான் பைரவத் திருக்கோலம் தாங்கிய காலத்து அணியப்பெறும் சிறப்புடை. ஆகவே ஏனைய தேவர்கட்கு இயையாத சிறந்த அணி ஆடை முதலியவற்றைக் கூறித் தலைவி தன் உள்ளத்தைக் கவர்ந்த தலைவனைக் குறிப்பிடுகின்றாள் என்க.

பழைய உரை பள்ளிக்குப்பாயம் என்பதற்குப் பள்ளி கொள்ளும் சட்டை எனப் பொருள்கொண்டு, பறவாக்குளவி முதலியன போல இது பள்ளிகொள்ளும் திருமாலின் அவதாரத்தில் ஒன்றாகிய நரசிங்கத்தின் தோலாலாகிய சட்டையை உடைய ஆபதுத்தாரணமூர்த்தி என்னும். மற்றும் வாமனவதாரமூர்த்தியின் தோலாலாகிய சட்டை அணிந்தவர் என்றும் கூறும்.

பிற்காலத்து உரையாசிரியர் சிலர், பள்ளிக்குப்பாயம் - பள்ளியறை என்பதைக் கேசரியாசனம் என்பதற்கு (தக்கயாகப் பரணி 196) எழுதிய உரையானும் துணிக என்பர். தக்கயாகப் பரணியில் "கேசரியாசனம்" திருப்பள்ளித் தவிசு முதலிய பகுதிகளை மேற்கோளாகக் காட்டுவர். மேலும், "வினைபடு பள்ளியிற் றோன்றும்" என்ற களவழிப் பகுதியைக் காட்டிப் பள்ளி என்பது வினைசெய்யிடம் என்றும், பள்ளிக்குப்பாயம் என்பது தொழிலுக்கேற்ற சட்டை என்றும் பொருள்கொள்வர். பள்ளி என்பது பொதுவாக இடம் என்னும் பொருளைத்தருமேயன்றி, தொழில்செய்யிடத்தை அடைமொழியின்றிக் காட்டாது என்பது தெளிக. ஆகவே, தொழிலுக்கேற்ற சட்டை என்ற பொருள் ஈண்டுச் சிறிதும் பொருத்தமின்மை அறிக. பள்ளி என்பது வினைசெய்யிடத்திற்குப் பெயராகாது ஒழியவே மேல் தொழிற்கேற்ற சட்டைக்குக் காட்டும் மேற்கோள்களும் பிறவும் பயனில்கூற்றாய்க்கழியும் என்க.

இவ்வண்ணம் அறச்சாலைக்கேற்ற அங்கியை அணிந்தும் அரசர்பெருமான்போலப் பாய்ந்து செல்லும் குதிரைமேல் வருவார்; வந்து என் உள்ளத்தைக் கவர்வார் என்பாள் 'பாய்பரி மேற்கொண்டு என் உள்ளம் கவர்வர்' என்கின்றாள். ஆகவே சிவபெருமானுக்கே உரிய சிறப்படையாளங்களைக் கூறி அவன் உள்ளங்கவர்தலையும் உரைத்தனளாம் எனக்கோடலே சிறந்த கருத்தாதல் தெளிக.

பாய் புரவி - தாவிச்செல்லும் குதிரை. இறைவன் குதிரை வேதக்குதிரை ஆதலின் எங்கும் பரவியுள்ள ஞானமயமான குதிரை எனக் கருதும்வண்ணம் போதப்புரவிமேல் எழுந்தருளினர் என்னும் பழையவுரை.

உள்ளம் கவர்தலாவது, உலகச் சார்பைப் பற்றிப் பொறியின்பத்தையே பெரிதாகக்கொண்டு மயங்கிய உயிரைச் சிவச் சார்பே சார்பாகக்கொண்டு ஒழுகச்செய்தல். சம்பந்தசுவாமிகள் 'என் உள்ளம்கவர் கள்வன்' என்றதும், உபநிடதம் 'தஸ்கரா ணாம்பதி' என்றதும் இக்கருத்தை நன்கு விளக்குதல் காண்க. பழையவுரை, யானிருந்தபடி இருப்ப என்னைச் சுத்தாவத்தைப் படுத்தி எனக் கூறுவதும் காண்க.

உள்ளங்கவர்ந்தமை ஆத்துமபூரணம் என்க.

*343* *தாளி யறுகினர் சந்தனச் சாந்தினர்*
*ஆளெம்மை யாள்வரால் அன்னே யென்னும்*
*ஆளெம்மை யாளும் அடிகளார் தங்கையில்*
*தாள மிருந்தவா றன்னே யென்னும்.* **8**

*இ-ள்: அன்னே! தாளிமலரையும் அறுகையும் அணிந்தவரும், சந்தனச்சாந்தைப் பூசியவருமாக எழுந்தருளி எம்மை ஆளாக ஏற்றருள்வர் என்பாள்; அன்னே! இன்னுங்கேள்! அவ்வண்ணம் எம்மை யாட்கொள்ளும் அடிகளார் திருக்கரத்திலே பிச்சையேற்கும் தாளம் இருந்தபடி என்னே! வியப்பு என்பாள் என்றவாறு.*

இதுவும், அங்ஙனம் கூறிக் கையில் தாளமிருந்தவாற்றை வினவி அறத்தொடுநிற்பதாக அறிவிப்பது.

தலைவன் தன்னை ஆட்கொண்டபோது அணிந்த பொருள்களை ஒவ்வொன்றாகச் சொல்லி இன்புறுகின்றவள் 'அறுகினர் சாந்தினர்' என்கின்றாள்.

தாளி அறுகு : உம்மைத்தொகை. தாளி - கூதாளி என்னும் ஒருவகை மலர். தாளியறுகு என்பது அறுகுவகையுள் ஒன்று என்பாரும் உளர்.

சந்தனத்தின் அரைத்த விழுதான நிலை சாந்து. ஆகவே அரைத்த சந்தனத்தை அணிந்தவர் என்பதாம்.

எம்மை ஆள் ஆள்வர் எனக் கூட்டுக.

எம்மை அவ்வண்ணம் ஆள்பவர் திருக்கோலம் அடிகளாக விளங்கிற்று; அதற்கேற்ப அவர் கையில் தாளமும் இருந்ததே இது என்ன வியப்பு என்றாளாம். அடிகள் - துறவி. தாளம் - உண்கலம். தாலம் என்பதன் லகர ளகர ஒப்பு.

பழையவுரை 'ஆள் எம்மை ஆளும் அடிகளார் தம் கையில் தாளம் இருந்தவா' என்பதற்கு எம்மை அடிமைகொண்டாலும், நம்மை எல்லாம் ஆட்கொள்ளும் அவனடியார்கள் கையில் திருத்தாளம் இருந்தபடி என்னே என்பாள் என்று கூறும். இவ்வுரைகாரர் சீகாழித்தாண்டவராயர் ஆதலின் சீகாழியில் சம்பந்தப்பெருமான் கையில் திருத்தாளம் இருப்பது இவர் சிந்தையைக் கவர இங்ஙனம் உரை வகுத்தனர் போலும். ஆயினும், ஏனைய பாடல்களின் அமைதியோடு இக்கருத்து ஒத்துவாராமையானும், சம்பந்தர் செய்தியை வெளிப்படையாகவேனும் குறிப்பாகவேனும் அடிகளார் யாண்டும் குறிக்காமையானும் இவ்வுரை பொருந்தாமை தெளிக.

தாளம் தாலம் என்பதன் திரிபு எனவும், உண்கலத்தை உணர்த்துவது எனவும் அறியாதார் இறைவன்கையில் தாளம் இருப்பதற்குரிய வரலாறு காணப்பெற்றிலேம் ஆதலின் சீரும் பாணியும் தூக்குமாகிய தாளங்களையிடும் உமையை ஒருபாதியாக உடைய அர்த்தநாரீசுரப் பெருமானைக் குறித்ததாகலாம் என்று உரை கூறி இடர்ப்படுவர். ஆண்டும் தாளம் கையை ஒற்றுதலாகிய தாளத்தையே குறிப்பது எனக் கலித்தொகை அறிவிக்கும். இவர்கள் எண்ணுவதுபோல அது கஞ்சக்கருவியன்மை அறிக.

இறைவனை அடிகளார் என்ற சொல்லாற் குறிப்பித்தது, பிட்சாடனத் திருக்கோலத்தில் ஆடை அணிகளையும் துறந்த துறவியாய்த் திருக்கரத்துப் பிச்சையேற்றுண்ணும் கலத்தை ஏந்திவந்து காரிகையார் உள்ளத்தைக் கவர்ந்து அடிமை கொண்டாராதலின் என்க.

எம்மை ஆட்கொள்பவர் முதல்வராக, ஒரு பேரரசராகத் தோன்ற வேண்டியவர் அடிகளாராகத் தாளம் ஏந்தித் தோன்றினரே! இஃது என்ன வியப்பு!! என்றாளாம்.

எம்மை ஆளாக ஆண்டார் என்றமையால் எம்மிடமுள்ள ஆன்மசுதந்தரத்தையும் அகற்றி அவனே தானான சிவபோதமாய் ஆன்மாவினிடம் நிறைந்துள்ளமை உணர்த்துதலின் இப்பாடல் ஆத்மபூரணம் ஆனமை காண்க.

344 தையலோர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரால் அன்னே யென்னும்
ஐயம் புகுந்தவர் போதலும் என்னுள்ளம்
நையும் இதுவென்னே அன்னே யென்னும். 9

இ-ள்: தாயே! நம் தலைவி, பேரழகியாகிய தையல் நாயகியைத் திருமேனியின் இடப்பாதியாக உடையவராயும், தவவேடத்தைத் தாங்கியவராயும் வந்து பிச்சை எடுக்கின்றாரே என்பாள்; அங்ஙனம் பெண்ணொருபாதியராய் - தாபதராய் வந்த அவர் பிச்சையேற்றுப் போனவுடன் என்மனம் வாடுகின்றதே இது என்னேடி என்பாள் என்றவாறு.

இதுவும் ஒன்றோடொன்று ஒவ்வாத அவரியல்பை அறிவிக்கின்றது.

தையல் - அழகு. இது பண்பாகுபெயராகப் பெண்களையுணர்த்தும். ஈண்டுப் பெண்களுக்கெல்லாம் தலைவியாகிய தையல்நாயகித்தாயை உணர்த்தியது. பங்கு - பக்கம்.

தாபத வேடம் - படர்சடை தாழச் சுடரோம்பி, திருநீறும் கண்டிகையும் அணிந்து தோன்றும் நிலை.

ஐயம் - பிச்சை. பிச்சையேற்றலைப் 'பிச்சை புகுதல்' என வழங்கும் மரபுண்மையைப் "பிச்சை புகினும் கற்கை நன்றே" என்பதால் அறிக. பிச்சைக்குச் செல்லுதல் ஒன்றே ஏற்பான் கடமையாக, இடுதல் ஈவானியல்பாக முடிதல் உறுதியாதலால், தொழிலையும் பயனையும் ஒன்றாக்கி 'ஐயம் புகுவர்' என்றார். ஏற்றகைக்கு மாற்றாதீதல் பழமையான தமிழ்மரபு.

அவர் ஐயம் புகுந்துபோதலும் எனப் பிரித்துப் பொருள் கொள்க. போதலும் - கண்ணெதிரிலிருந்து மறைதலும். அவர் அங்ஙனம் பிரிதலும் பிரிவாற்றாது அவருடைய பேரழகிலும் பெருங்குணங்களிலும் ஈடுபட்டு, என் மனம் கணந்தோறும் பதனழிந்துகொண்டே போகிறது; இது என்ன என்று தோழியிடம் ஆற்றாமையை உணர்த்தினளாகத் தோழி செவிலியிடம் அறத்தொடு நிற்கின்றாள் என்க.

உள்ளம் நைதல், தற்போதம் இழத்தலாதலின் ஆத்தும பூரணமானமை காண்க.

345 கொன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர் அன்னே யென்னும்
துன்றிய சென்னியின் மத்தம்உன் மத்தமே
இன்றெனக் கானவா றன்னே யென்னும். 10

திருச்சிற்றம்பலம்

இ - ள்: அன்னே! கொன்றை மலரும், பிறைமதியும், வில்வத்தளிரும், ஊமத்தம்பூவும் செறிந்துள்ள திருமுடியை உடையவர் என்பாள்; அன்னே! இன்னுங்கேள்! அந்த ஊமத்தமலர்தான் இன்று எனக்குப் பித்தாக ஆயிற்று என்பாள் என்றவாறு.

இது தலைவி தன்னைப் பித்தேற்றினன் எனக் கூறுகின்றது.

அவர்தலையில் இத்தனை பூக்கள் இருப்பினும், ஊமத்தம் பூவே இன்று எனக்குப் பித்தாயிற்று என்றாள். அதன் செவ்வியும் அதனை அணிந்திருக்கின்ற இறைவனது திருமுடியைத் தீண்டிய தெய்வத்தன்மையும் மனத்தைக் கவர, அம்மலரைப் பெற்று, காதலன் தீண்டியதைத் தீண்டியேனும் காமந்தணிக்கும் கருத்தினளாய தலைவி அது கிடைக்கப் பெறாமையாலே பித்தானேன் என்பாள், தன் குறையை மத்தமலரின் தன்மையாக்கி மத்தம் உன்மத்தம் ஆனவாறு என்றாள்.

இவ்வண்ணம் ஆன்மாவின் தன்மை முழுதும் கெட்டு உயிரினிடமாகச் சிவம் பிரகாசித்துப் பிச்சதான தன்மையை உணர்த்துதலின் இப்பாடல் ஆத்துமபூரணமாயிற்று.

இங்ஙனம் இப்பத்தாலும் அன்னே எனத் தன் தோழியை விளித்துத் தலைவி தன்தலைவனே தனித்தலைவன், வேறு யாரும் விரும்பியும் பெற இயலாத தன்மையை இயல்பாகவே படைத்தவன், அவன் மொழியெல்லாம் வேதம் எனக் கூறி, அவன் தன்னை ஆட்கொண்ட அற்புதத்தைக்கூறி, பொதுவும் சிறப்புமாய அடையாளங்களை அறிவித்து, அவனின்றி யான் உயிர் வாழேன் என்ற இன்றியமையாமையையும் எடுத்துக்காட்டி, அவனை அடைய அடியேற்கு எத்தனை இடையீடுகள் இருப்பினும் அவற்றால் தடைபடேன் என்று உறுதியை வெளிப்படுத்தி, உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை அவன் இன்பமாகிய அமுதம் பெருக, பூரணமாய் நிற்றலை அறிவித்தவாறு காண்க.

# 18 குயிற்பத்து

ஆத்தும இரக்கம்

அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருந்த காலத்து வசந்தகாலம் வந்தது. பொழில்கள் பூத்துக் குலுங்கின. தேமா தளிர்த்தன. மாங்குயில்கள் இனிமையாகப் பாடத் தொடங்கின. இத்தகைய இயற்கைச்சூழல் அடிகளார் திருவுள்ளத்தில் இறையுணர்ச்சியைப் பெருக்கிற்று. அதனால் தலைவனைப் பிரிந்த தலைவியானார். உயிர்த்தலைவன் பிரிகின்றகாலத்துக் குறித்த வசந்தகாலமும் வந்ததே, அவன் வரக்காணேமே என்ற பிரிவுத்துன்பம் பெருகுவதாயிற்று. அதனால் மதனன் எக்காளமாய், காமவிருப்பை விளைவிப்பதாய் உள்ள குயிலைக் கூவச்செய்தாவது தலைவனுக்குத் தன்னைப்பற்றிய எண்ணத்தை உண்டாக்கலாமே என்று எண்ணிக் 'குயிலே! அவன்வரக் கூவாய்' எனக் குயிற்பத்தாகிய இதனை அருளிச்செய்கின்றார்.

குயிலைத்தூதாக அனுப்ப எண்ணிய தலைவி தலைவன் இருக்குமிடம், அவன் இயல்புகள், அவனை அழைக்குந்திறம் இவற்றை அறிவித்து அனுப்புதலை அறிவிப்பது.

இதற்குக் கருத்து ஆத்தும இரக்கம் அல்லது சிவனைக்கண்டு இரங்குதல் எனப் பழையவுரைக்குறிப்பு கூறுகிறது. ஆத்மநாதப் பெருமானைக்கண்டு ஆன்மாவாகிய தலைவி தலைக்கூடப் பெருமையால் உண்டான துன்பமிகுதியால் இரங்கிக் குயிலிடம் கூறுதலைப் பொருளாக உடைமையின் இரங்குதலாயிற்று.

வைணவசம்பிரதாய வியாக்கியானத்து, நாச்சியார் திருமொழி முதலாயிரம் ஐந்தாந்திருமொழியில் 'முன்பு தானும் அவனுமாக இருந்தபோது வார்த்தை கேட்டால் பிரதிவசனம் பண்ணிப்போந்த வாசனையாலும், சைதன்யத்தில் உறைப்பாலுமாகக் குயில் பொருந்த விடவற்று என்று பார்த்துத் தன்னையும் அவனையும் நீ சேரவிடவல்லையோ என்று குயிலின் காலிலே விழுகின்றாள்; சொன்ன வார்த்தைக்குப் பிரதிவசனம்பண்ணும் என்னும் இதுவேயாய்த்து அதன்பக்கல் பற்றாசாக நினைக்கிறது' என்று எழுதுகிறார் வியாக்கியான ஆசிரியர். தானும் அவனுமாக இருக்கிறநிலையில் தன்னால்

வளர்க்கப்பெற்ற முல்லைக்கொடிமுதலிய தாவரங்களும் காணலாகாது என்று நாணுகின்ற தலைவி குயிலைப் பதில்சொல்லவைத்திருப்பது மரபன்மையின், இளவேனில் வருகையை அறிவிக்க இளவேனிற் கண்ணே இனிய கீதமிசைக்கும் குயிலைத் தூதாக அனுப்பியதாகத் திருப்பாடல்களை அருளிச்செய்கிறார் அடிகள். இதுவே அடிகளின் அனுபவச்சிறப்பு.

குயிற்பத்தாவன "இயற்றரு குயிற்பத்து, ஆன்ம இரக்கம்" என்பது அகத்தியச்சூத்திரம். அன்னைப்பத்தால் பேசாமற்பேசின அனுபவத்தை, தன் உள்ளமே குயில், அதன் கூவுதலே இன்பப் பரம்பொருள், அவ்வார்த்தையே இன்பம் என்றுணர்த்தும் அநுபூதியே இதன் உட்கிடையான கருத்து என்று பழையவுரை கூறும். பழைய திருப்பெருந்துறைப்புராணம்,

> " தூயவருட் குயிலே சோதியெனைக் கூடுதற்குன்
> வாயிறைற் கூவெனமுன் வாழ்த்தல்குயிற் பத்தாமே "

என்னும். திருவாதவூரர் புராணம்,

> " பொங்கரின் இடையே வாழும் பொற்பிளங் குயிலே! கூவி
> இங்கழை யெம்பிரானை என்பதும் "

என்று இப்பத்தின் இயல்பை அறிவிக்கிறது.

" இளவேனிற்காலத்து வந்து வரைந்துகொள்வேன் எனப் பருவங்குறித்துச் சென்ற தலைமகன் வாராதது குறித்துச் சோலையிடைத் தனியே சென்ற தலைமகள், தலைமகன் சிறைப்புறத்தானாக இருத்தலைக்கண்டு விரைந்து வரைந்து தலையளிசெய்யும்வண்ணம் தலைவனுடைய ஆற்றல் அருள் முதலியவற்றைக் குயிலுக்கு எடுத்துக்கூறி, அவன்வரக் கூவுமாறு பணித்து, தன்னோடு அதனையும் பயனடையச் செய்ததாம்" என்று புதியவுரை கூறும். கூவாய் என்பதன்றிச் செல்லாய் என்னாமையின் தலைமகன் சிறைப்புறத்தானென்பதுபெறுதும் என்பர் அவர்.

குயில் கண்ணுக்கினிமை பயவாமையின் செல் என்னாது கூவு, உன் குரலே அவருக்குக் காதல் விருப்பத்தைத் தூண்டும் என்று கருதினாள் தலைவி. ஆகையால் இது தலைவனியல்புகூறிக் குயிலைத் தூதாக அனுப்பியதே இப்பத்தின் நோக்கமாம் என்பது தெளிவு. தூது செல்லுதலின் பயன் அவன் வரச்சொல்லுதலே ஆதலின் செல் என்னாது சொல் என்ற நயம் சிந்தனைக்கு உரிய விருந்து. அன்றியும் தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்கக்கண்டும் காணாள் போலக் குயிலைப் பார்த்துக் கூறுதல் இயற்பழிக்கும் ஊடற்கண் அன்றி இயற்பழிச்சும் கூடல்விருப்பு விரைவின்கண் நிகழாதாம் என்க.

## அறுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

346 கீத மினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவிற் பாதாள மேழினுக் கப்பாற்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதி குணமொன்று மில்லான் அந்தமி லான்வரக் கூவாய். 1

இ-ள்: பாடுவதில் இனிமையான குயிலே! உன் தலைவன் யார் என்று கேட்பையாயின் அவன் எந்தலைவன்; திருவடிகள் எங்குள்ளன என்று வினவுவையாயின், அவை கீழுலகு ஏழற்கும் அப்பால் உள்ளது; ஒளிவிடுகின்ற மணிகள் இழைக்கப் பெற்ற முடி இருக்குமிடம் சொன்னுலோ, யாம் சொல்லும் சொல்லின் எல்லையையும் கடந்து நின்றன; அங்ஙனமாய திருவடி திருமுடிகளையுடைய இறைவனும் தமக்கெனச் சிறப்பான குணம் ஒன்றும் இல்லாதவன்; அங்ஙனமே ஒரு முடிவும் இல்லாதவன்; அவன் எழுந்தருளும்வண்ணம் கூவுவாயாக என்றவாறு.

இது, இறைவனது அடிமுடிகளின் அருமை பெருமைகளை அறிவிக்கின்றது.

குயிலே! கேட்டியேல் எங்கள் பெருமான்; பாதம் வினவில் பாதாளம் ஏழினுக்கும் அப்பால்; முடிசொல்லின் சொல்லிறந்து நின்ற தொன்மை; அத்தகைய ஆதி குணம் இல்லான்; அந்தமிலான்; அவன் வரக் கூவாய் எனக் கூட்டுக.

கேட்பதற்குமட்டும் மிக இனிமை பயப்பதாய்க் காண்டற்கு இன்னாததாய் இருத்தலின் 'கீதம் இனிய குயிலே' என்றாள். நீ பெருமான் முன்னிலையில் செல்ல வேண்டாம்; அவன் திருச் செவி கேட்கும் அண்மைக்கண் இருந்து கூவினுற்போதும்; நாம் சொன்ன வேனில் வந்தது; அதன் அறிகுறியாகக் குயில் கூவுகிறது; தலைவி நம்மையின்றி வாடுவாள்; நாம் விரைந்து செல்லவேண்டும் என்று திருவுள்ளங்கொள்வான் என்னும் உட்கருத்துடையளாய்க் கீதமினிய குயிலே என விளிக்கின்றாள். வினைகொள்வார் வினையாளைப் பாராட்டி அழைத்தல் இயல்பாகலின், ஏ கரிக்குயிலே! என இகழாது சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்துக் 'கீதம் இனிய' என்றாள்.

கேட்டியேல் - உன் கணவன் யார் என்று கேட்பாயாயின். தூதுவிடுகின்றவர் பெயரும் ஊரும் இயல்பும் அடையாளமும்

அறிவித்துத்தானே அனுப்பவேண்டும். ஆகவே என்காதலன் யார் எனக் கேட்பையாயின் என்றாள். அதற்குமேல் நாணம் தொண்டையை அடைத்தது. தமிழ்ப்பெண்களின் மரபு கணவனின் பெயரைச் சொல்லுதலாகாதே என்ற குலப்பெருமையால் நா எழவில்லை. அதனால் 'எங்கள் பெருமான்' என்ற அளவிலே விட்டாள். பின்னர், அவன் அடையாளங்கூறி அனுப்புவோமென்ற எண்ணம் வந்தது; அதனால் பாதங்களின் இருப்பிடம் கூறுகிறாள் ' பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்கும் அப்பால்' என்று.

இறைவன் பாதங்கள் திருவருளே வடிவானவை. அவை எல்லா உலகிற்கும் ஆதாரமாய்த் தாங்கி நிற்பன ஆதலின் கீழேழுலங்களுக்கும் கீழேயுள்ளன என்றாள். கீழ் உலகு ஏழு: பூமியும் அதன் கீழுள்ள அதல விதல சுதல தராதல மகாதல பாதாளம் என்பனவுமாம். இவ்வுலகங்கள் அனைத்தையும் கடந்து ஆதாரசத்திக்கும் ஆதாரமாய் விளங்குவன் என்பதாம். பாதங்களை வினவில் என அநுவதித்தாள், உன் காதலன் யார் எனக் குயில் வினவியதற்கு மறுமொழி தரமாட்டாமை உளங்கொண்டு.

முடி சொல்லின் என நீ கேட்ட அடியோடு இனம்பற்றி முடியினியல்பை நீ வினவக்கூடும் என உட்கொண்டு நானே சொல்லின் என்கின்றாள். முடி மணிகளால் இயன்றது அதன் ஒளியே உன் கண்ணைத் தன்னிடம் அழைத்துச் செல்லும் என்பாள் 'சோதிமணிமுடி சொல்லின்' என்றாள். சொலலின் என்ற செயின் என்னும் வினையெச்சம், முடி தானே விளங்குவது யான் அதனைப்பற்றிச் சொல்லவேண்டாம்; ஆயினும் என்னும் பொருள்பட நின்றது.

சொல் மனத்தினின்று கருத்தாக நுண்பொருளாய்த் தோன்றியது; சூக்குமைமுதலிய வாக்குகளில் வளர்ந்து வைகரியாகப் பிறர்செவிக்கும் கேட்கும் நிலையில் பொருளுணர்த்துவுதான மாயாகாரியம். இது மனத்தால் சிந்திக்கப்பட்டவற்றை அன்றி, சிவத்தின் மனம் கடந்துநின்ற மகிமைகளைக் கூறாது. நாழி முகவாது நானாழி. ஆதலால், அவன் மணிமுடி உரையளவைக்கு உரியவான மகாலோகத்தையும் தாண்டிச் சொலிறந்து நிற்பது; அதனோடு மிகமிகப் பழமையும் உடையது என்றாள். தொன்மை என்பதற்குத் தொன்மையையுடையது என ஒருசொல் வருவித்து முடிக்க.

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர், போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே' (164) எனவருவதும்

காண்க. இவ்வண்ணம் அளவிறந்து நிற்பவனே முதற்பொருளனைத்திற்கும் முதலாவான் என்பாள் 'ஆதி' என்றாள்.

அத்தகைய இறைவன் அருட்குணந்தவிரத் தனக்கென்று தனித்ததோர் குணம் இல்லான் என்பாள் 'குணம் ஒன்றும் இல்லான்' என்றாள். இதற்குரிய சிறப்புக்களைக் "குணங்குறியிலான்" என்ற பகுதிக்குச் சிவஞானசித்தியார் உரை கூறுவன கொள்க.

ஊரிலான் தனக்கோர் பேரிலான் குணங்குறியிலான் என இன்மையை இலக்கணமாகவுடைய இறைவற்கு ஒரு முதலும் முடிபும் இல்லையாதலின் 'அந்தமிலான்' என்கின்றாள்.

போர்ப்பறை முழக்கு வீரனுக்கு வீரத்தை உண்டாக்கிப் போருக்குத் தூண்டுவதுபோல, உன் இனிய கீதம் அவனுக்கு என்பால் விருப்பை மிகுவித்து விரைந்துவரச் செய்யவேண்டுமென்பாள் 'வரக் கூவாய்' என்றாள்.

'குயிலே! கூவாய்' என வேண்டிக்கொள்வதன் வாயிலாகத் தமக்குள்ள பிரிவுத் துன்பத்தை விளக்குதலின், உயிர்கள் என்றும் இறைவனைவிட்டுப் பிரிந்திருக்க முடியாமையைக் கூறி இரக்கத்தைக் குறிப்பித்தலின் ஆன்ம இரக்கமாயிற்று.

347 ஏர்தரும் ஏழுல கேத்த எவ்வுரு வுந்தன் னுருவாய்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை யழகமர் வண்டோ தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேயபி ரானைச்
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய். 2

இ - ள்: கடல் சூழ்ந்த அழகிய இலங்கையில் உள்ள அழகிய வண்டோதரிக்கு எழுச்சியை விளைவிக்கும் ஏழுலகத்தவர்களும் போற்றக் காணப்பெறும் எல்லா வடிவங்களும் தன் வடிவேயாய்ப் போந்து பேரருளால் பேரின்பத்தை யளித்த பெருந்துறைக்கண் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமானை, தென்பாண்டிநாட்டானை உனது புகழமைந்த வாயால் வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, இயங்குவ நிற்பவான எவையும் தாமாக விளங்கி, மண்டோதரிக்கும் அருளிய இறைவன் எளிமையை விளக்குகின்றது.

அவனது அடிமுடிகளின் அளவுகடந்தநிலையை எண்ணி, இச்செயல் என்னால் முடியுமோ? என் குரல் அத்துணைத் தூரம் செல்லுமோ? என ஐயுறேற்க; அவன் தென்பாண்டிநாட்டான்,

திருப்பெருந்துறையான், காணப்படும் வடிவெல்லாம் அவன் வடிவே, நீக்கமற நிறைந்த பரிபூரணன், ஆதலால் கூவுக என்றாளாம்.

ஏர் தரும் ஏழ் உலகு - ஒன்றற்கொன்று மேலானதாக எழுச்சியை விளக்குகின்ற பூலோகமுதல் மகாலோகமீறான ஏழு உலகங்களும் ஏனைய மாயாகாரிய உலகங்களுமாகிய எல்லா உலகங்களுமாம். உலகு, இடவாகுபெயராய் உலகத்திலுள்ள பரிபாகமுற்ற ஆன்மாக்களை உணர்த்திற்று. தோன்றிய உயிர்கள் அனைத்தும் இறைவனை ஏத்தும் பண்புடையன அன்மையின் பரிபாகமுடையனவே கொள்க.

சித்தும் சடமுமாகிய எவ்வுருவிலும் இறைவன் கலந்து நிற்கின்றான் என்பாள் 'எவ்வுருவும் தன்னுருவாய்' என்றாள்.

கலி - ஒலி. ஆர் கலி - நிறைந்த ஒலி. இது ஆகுபெயராக ஒலியையுடைய கடலை உணர்த்திற்று. திருப்பெருந்துறையில் குருந்தடியில் குருநாதனாக இருந்து வாதவூரர் முதலானோர்க்கு ஞானம் வழங்கியகாலத்துத் தென்னிலங்கையில் வண்டோதரி தியானிக்க அங்கும் சென்று அவளுக்கு அருண்ஞானம் தந்து பேரின்பம் அளித்தார் என்பது வரலாறு.

கேட்டாரைப் பிணித்து நினைத்ததை நிறைவேற்றுகின்ற தன்மையதாதலின் வாயைப்புகழ்ந்து 'சீரிய வாயால்' என்றாள்.

வண்டோதரிக்கு இன்பம் அளித்த பெருமான் என்றமையால் அவள்பெற்றபேறு அடியேன் பெற்றிலனே என இரங்கிக் கூறினாள் ஆதலின் இது ஆன்ம இரக்கமாதல் காண்க.

348 நீல வுருவிற் குயிலே நீண்மணி மாட நிலாவும்
கோல வழகிற் றிகழும் கொடிமங்கை யுள்ளுறை கோயில்
சீலம் பெரிது மினிய திருவுத் தரகோச மங்கை
ஞாலம் விளங்க விருந்த நாயக னைவரக் கூவாய். 3

இ - ள்: நீலநிறமான குயிலே! நீண்ட இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற மாடங்கள் பல விளங்குவதும், ஒழுக்கத்தால் இனியதுமான திருவுத்தரகோசமங்கையிலே, மிக்க அழகோடு விளங்கும் திருமேனியையுடைய பூங்கொடிபோலும் உமாதேவியார் எழுந்தருளியுள்ள கோயிலிலே உலகமெலாம் சிவஞானம்பெற்று விளங்க வீற்றிருக்கின்ற எமது காதலனை வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, சீலத்தாற் சிறந்த திருவுத்தரகோசமங்கையிலே ஞாலம்விளங்க உமையம்மையாரோடு எழுந்தருளியுள்ள எம் தலைவனை வரக் கூவுக என்கின்றது.

கீதமினிய குயிலே! சீரிய வாயால் கூவாய் என்றெல்லாம் புகழ்ந்தவள், குயில் தன் கரியநிறத்தால் நாணி இறைவன்பாற் செல்லக் கூசுகின்றது என உட்கொண்டு, உன் நிறம் கருமை யன்று, காண்பார்கண்ணுக்கு விருந்தாகும் நீலநிறம் என்பாள் 'நீல உருவிற் குயிலே' என்கின்ருள். உரு - நிறம்.

மாடம் நிலாவும் சீலம்பெரிதும் இனிய உத்தரகோசமங்கை மங்கையுறை கோயிலுள், ஞாலம் விளங்க இருந்த நாயகனை வரக் கூவாய் என இயைத்துப் பொருள் காண்க.

நீள் மணி மாடம் என்பதனை மணி நீள் மாடம் என மாறுக. மணிகள் இழைக்கப்பெற்று உயர்ந்து விளங்குகின்ற மாடங்கள் என்க. நிலாவும் - ஒளிவிடுகின்ற.

உத்தரகோசமங்கைக்குரிய சிறப்பு ஆகம சீலமுடைய சிவ ஞானிகள் பலர் இருப்பது என்பாள், சிவஞானியர் சீலத்தை அவர்களிருக்கும் உத்தரகோசமங்கையென்னும் ஊருக்காக்கிச் சீலத்தால் இனிய உத்தரகோசமங்கை என்ருள்.

குயிலே! நாயகன் உமாதேவியாகிய நாயகியோடு இருப் பான் என அவன் வர இயலாமைக்குரிய காரணத்தைக் குறிப் பாக உணர்த்தி, இருப்பினும் நீ கூவினல் குறித்த பருவம் வந்தது என்ற உணர்வு வரும்; அவன் என்பால் வருவான் என்பாள் 'மங்கையுறை கோயிலுள் இருந்த நாயகன் வரக் கூவாய்' என்கின்ருள்.

உமாதேவியாரின் திருமேனியழகு அவனைப் புறஞ்செல்ல விடாது தகையுந்தன்மையது என்று கருதுபவள் 'கோல உருவில் திகழும் கொடிமங்கை' என்கின்ருள். கோல உரு - அழகான திருமேனி. கொடி மங்கை - பூங்கொடிபோலும் உமா தேவி.

இறைவன் உமையம்மையாரோடு உத்தரகோசமங்கையுள் எழுந்தருளியிருப்பதால் உலகமே விளக்கம்பெற்றது; சிவஞான விளக்கம் உண்டாயிற்று என்பாள் 'ஞாலம் விளங்க இருந்த' என்ருள்.

நீ கூவுகின்ற இனிமை உமைகணவனுகிய சிவனை என்பால் வரச்செய்யும் ஆற்றலதாக இருக்கவேண்டும் என்பது குறிப்பு.

சிவம் சத்தியோடு வீற்றிருப்பதால் உறுதியாகத் திருவருள் சுரக்கும்; என் பிரிவுத்துன்பத்தை நினைவூட்டும் வகையில் நீ சென்று கூவுக என இரங்கிக்கூறுதலின் இது ஆன்ம இரக்க மாதல் காண்க.

349 தேன்பழச் சோலை பயிலுஞ்
சிறுகுயி லேயிது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து
மனிதரை யாட்கொண்ட வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென்
உணர்வது வாயவொ ருத்தன்
மான்பழித் தாண்டமென் னோக்கி
மணாளனை நீவரக் கூவாய். 4

இ - ள்: தேன் ஒழுகும் பழங்களையுடைய சோலையிலேயே பழகுகின்ற சிறிய குயிலே! நான் சொல்லுமிதனைக் கேட்பா யாக; விண்ணுலகை இகழ்ந்து இம்மண்ணுலகை விரும்பி எழுந்தருளி, மக்களனைவரையும் ஆளாகக்கொண்ட வள்ள லும், இவ்வுடலை இகழ்ந்து உயிர்க்குயிராகக் கலந்திருந்து என் உணர்வேயான ஒப்பற்ற பரம்பொருளும் ஆகிய, மானைத் தன் மருட்சியால் இகழ்ந்த மெல்லிய திருநோக்கினையுடையா ளாகிய உமாதேவியை மணந்த நித்தியகல்யாண மூர்த்தியை என்பால்வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, தலைவன் தலையளிசெய்த இன்பநிலையை எண்ணிய தலைவி ஒருத்தி அதனை நினைவுகூர்ந்து அத்தகைய தலைவன் வரக் கூவாய் எனக் குயிலைப் பணிப்பதாக அமைந்துள்ளது.

தேன் பழச்சோலை - தேனையும் பழங்களையுமுடைய சோலை எனலுமாம். உயிர்களின் பண்பு வாழிடங்கட்கேற்ப அமைதல் இயற்கை. குயிலே! நீ வாழ்கின்ற இடம் இனிய பழங்களும் தேனும் நிறைந்த குளிர்ந்த சோலை; ஆதலால், உன்னிடமும் இனிமையும் தன்மையும் விளங்கவேண்டுமே! என்று இங்ஙன ணம் விளித்தாள். பயிலுதல் - இடைவிடாது பழகுதல். பயிலும் - ஒலிக்கும் எனப் பொருள்கொண்டு தேன்பழச் சோலையிலே இருந்தும் அதனை உண்ணாது கூவிக்கொண்டிருக்கும் குயிலே என்பாரும் உளர்.

வான் - போகபூமியாகிய சுவர்க்கம். அங்குவாழ்வார் தாமே தேவர் என்ற சிந்தையால் தருக்கித் திரிபவர்கள். அவர்கட்குச் சிவஞானம் தெரிவித்தாலும் மேட்டுமடையில் நீர்ஏறாததுபோல்

செவியில் ஏருது. ஆகவே, சிவன் அவ்வுலகை இகழ்ந்து. பள்ளம் புகுபுனல்போல் கள்ளமிலா அன்புள்ளம் படைத்த அடியார்கள் வாழ்கிற மண்ணுலகை விரும்பி வந்தானென்பாள் 'வான் பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்' என்ருள். இதன் குறிப்பு உமாகாந்தனை இருப்பி னும் என்னையும் ஏற்பான் என்பதாம்.

ஊன் ஆகுபெயராக உடலையுணர்த்தியது. முன்னெல்லாம் 'என் உடலிடங்கொண்டாய்' என்றவள் ஈண்டுச் சிவானுபவ முதிர அதனல் இறைவன் சடமாகிய உடலில் இல்லை, சித்தாகிய உயிரில் சித்தாகவே கலந்திருக்கிருன் என்ற உண்மை தோன்ற 'ஊன் பழித்து, உள்ளம் புகுந்து என் உணர்வது ஆய ஒருத் தன்' என்ருள்.

தலைவனும் தலைவியும் புணர்ந்தனர் என்றவழித் தலைவன் தலைவியைப் புணர்ந்தானு? தலைவி தலைவனைப் புணர்ந்தாளா? என்பது அறியப்படாது புணர்ச்சி இருவர்மாட்டும் நுகர்ச்சி யாக வெளிப்படுவதுபோல, சிவனுணர்வு தனக்காயிற்ரு? தன் உணர்வாக அவன் ஆயினனு? என்றவேறுபாடு அறியக்கூடா மையால் தன் உணர்வே மிக்குத்தோன்ற 'என் உணர்வு ஆய பிரான்' என்ருள். முத்திநிலையிலும் என்னுணர்வினளவாக அவன் வரின் அல்லது அவனுடைய பேருணர்வினளவாக ஆகும் முதன்மை ஆன்மாக்கட்கு என்றுமில்லை என்ற உண்மை தோன்ற இங்ஙனம் கூறினுள் எனலுமாம்.

மான் மருண்ட பார்வையுடையது. உமாதேவியின் கண்கள் அக்கண்களையும் பழிக்குமளவு மருட்சி வாய்ந்தவை என்பாள் 'மான் பழித்து ஆண்ட மெல்நோக்கி' என்ருள். மணளனை வரக்கூவாய் என்று வேண்டிக்கொண்டது, இறைவன் என்றும் அவள் கண்ணேக்கினுலேயே கவரப்பட்டு இருப்பர், உன் கூவுதல் அவர் கவனத்தை என்மாட்டுத் திருப்புவதாக அமைய வேண்டும் என்பாள் 'மென்னேக்கி மணளனை வரக் கூவாய்' என்கின்ருள்.

இது மென்னேக்கி பெற்ற பேறு எமக்குக் கிடைத்திலதே என இரக்கத்தை உள்ளுறுத்தி, அதனைப் பெற விழைதலின் ஆன்ம இரக்கமாதல் காண்க.

350 சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசைய றுப்பான்
முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். 5

இ-ள்: கண்ணுக்கு அழகையும், உள்ளத்திற்கு இன்பத்தையும் விளைவிக்கும் குயிலே! கிரணங்கள் சூழ்ந்த ஞாயிற்றைப்போல விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி வந்து அடியார்களுடைய ஆசைகளை நீக்குபவனும், முதலும் நடுவும் முடிவுமாகிய மூவராலும் அறியப்படாத சிவந்த திருவடிகளை உடையவனும் ஆகிய ஞானவாளேந்திய வீரனை வரும்படிக் கூவுவாயாக என்றவாறு.

இது உலகத்தை விளக்கும் ஞாயிறுபோல உள்ளத்தை விளக்கும் திருவடியையுடைய தலைவனை வரக் கூவுக என்று குயிலை வேண்டுவதாக அமைந்தது.

சுந்தரம் - அழகு. இது கண் விருந்து. இன்பமாவது நுகர்ச்சிக்கண் விளையும் மன நிறைவு. இது உள்ள விருந்து. இரண்டுமாயது குயில் என்பாள் 'சுந்தரத்து இன்பக்குயிலே' என்றாள்.

அடியவர்கள் மேனிலை எய்தமுடியாத வண்ணம் தடைசெய்து நிற்பது அவா. "அவா என்ப எல்லாவுயிர்க்கும் எஞ் ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" அதனை அறுத்தல் ஒன்றே அடியார்களை உய்விக்குநெறி. அவா அஞ்ஞானத்தின் காரியம். அஞ்ஞானம் ஆணவமலத்தால் விளைவது. ஆதலால் ஆணவ இருளைக் கெடுத்து அறியாமையைப் போக்கினால் ஆசையறும். இதற்குச்சிவஞானோபதேசமும், திருமந்திரசாதனை யுமே சிறந்த சாதனங்கள் எனத் திருவுளங்கொண்டு, அவற்றை அருளச் சிவசூரியன் இவ்வுலகில் ஆசான்மூர்த்தியாக எழுந்தருளினன் என்பாள் 'இங்கு இழிந்து அடியவர் ஆசையறுப்பான்' என்றாள். இங்கு - இம்மண்ணுலகத்தில். இழிந்து - தன்நிலையிலிருந்து கருணையே காரணமாக இறங்கி வந்து. அறுத்தல் - மீண்டும் முளையாதவாறும் கிளையாதவாறும் அறுத்தல். ஆசை கொடிபோல்வது; பலபொருள்களில் அது தாவிப் படர்வது. அதனை அங்ஙனம் செய்யவொட்டாது அறுப்பவன் என்பதாம்.

முந்து, நடு, முடிவு என்பன அவற்றின் செம்பொருளாய முதல் நடு இறுதி என்ற பண்பை உணர்த்தாது ஆகுபெயர்ப் பொருளான முதற்றொழிலாகிய படைப்பையும், நடுத்தொழிலாகிய காத்தலையும், முடிவுத்தொழிலாகிய அழித்தலையும் உணர்த்தின. அவை மூன்றுமாகிய மூவர் பிரம விஷ்ணு உருத்திரர். இவர்கள் இறைவனருளால் செயல்புரியும் சகலான்மாக்களே ஆதலின் இறைவன் திருவடியை அறியார்கள் ஆயினர். இங்ஙனமே பழைய வியாக்கியானமும் கூறும். அன்றிச் சிலர் தோற்றமும் போகமும் ஒடுக்கமும் ஆகிய திருவடி, மூவரும் அறியாத

திருவடி எனத் திருவடிக்கே அடையாக்கி உரை கொள்வர். இறைவன் திருவடியே தோற்றநிலை ஒடுக்கங்கட்கு இடமாதலின் இங்ஙனம் கூறினர் என்க.

சிந்துரம் - சிவந்த சாதிலிங்கப் பொடி. சிந்துரச் சேவடி - சிந்துரம்போலும் சிவந்த அடி. சேவகன் - வீரன். குதிரைச் சேவகனாக எழுந்தருளிய எளிமையை எண்ணச் செய்வதுமாம்.

இதுவும், இறைவன் பெருமையையும், அவன் அடியார்க்காக எழுந்தருளும் எளிமையையும், ஆட்கொண்டருளிய இன்ப நிலையையும் எண்ணி அப்பேறு தமக்குக் கிடைக்கக் குயிலின் உதவியை நாடுதலின் ஆன்ம இரக்கமாதல் காண்க.

351 இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
அன்ப னமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய். 6

இ-ள்: குயிலே! உனக்கு இன்பந்தருவேன்; மாங்கொம்பிலிருந்து கூவுகின்ற குயிலே! ஏழு உலகங்களையும் ஒன்றும் எஞ்சாமே தன் ஆணையின் வண்ணம் நடக்க ஆளுபவனும், அன்பே வடிவானவனும், அடியார்கள் உள்ளத்தில் அமுதம் போலக்கனிந்து இனிமையாகச் சுரக்கின்ற இன்பமானவனும், பேரின்பமே வடிவானவனும், நல்ல பொன்னில் மணி அழுத்திச் செய்யப்பெற்ற சேணங்கள் ஒத்து விளங்குகின்ற நல்ல குதிரைமேல் எழுந்தருளுபவனும் ஆகிய திருவாவடுதுறைக்கண் உள்ள குருமணியை வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, சிவன் ஏழுலகும் ஆளும் பெரியனாக விளங்கினும் அன்பர்க்கு இரங்கிக் குதிரைச்சேவகனாகவும், கோகழிநாதனாகவும் இருப்பன்; அவனைவரக்கூவுக எனக் குயிலைப் பணிப்பதாக அமைந்தது.

உலகில் ஆளை வினைகொள்வார், கூலி கொடுக்கின்றேன் இவ்வேலையைச் செய்கிறாயா? என்பதுபோலத் தலைவி குயிலைக் கேட்கிறாள் குயிலே! இன்பந்தருவன் என்று. ஒரு பறவைக்கு மக்கள் அளிக்கும் இன்பம் அதற்கு விருப்பமான உணவை வேண்டியபடியளித்து விருப்பம்போல உலவவிடுதல், அதனைச் செய்வேன் என்றாள். இங்ஙனம் கூறாது, இன்பத்தைத் தருபவனும் எனச் சிவபெருமானுக்கு ஆக்கி உரைப்பாருமுளர். அதில் குயிலே என்ற விளி பயனின்றிக் கழிதல் காண்க.

முழுதும் ஆளி என்ற முற்றும்மை தொக்கது. ஏழுலகங்களையும் எஞ்ஞான்றும் பொதுச்சொல் பொருது ஆள்பவன் என்பதாம்.

அன்பே சிவம் ஆதலின் 'அன்பன்' என்றாள். தனக்கும் அவனுக்கும் உள்ள இணைப்பு அல்லது பாலம் அன்பு ஒன்றே அதனை உடையவன் எனலும் ஆம்.

இறைவன், ஆன்மாக்களுக்கு இன்ப அன்பை உதவி, அதனால் நினைப்பவர் மனத்தில் சிவானுபவமாகிய அமுதத்தையும் உதவி, ஆனந்தமாகிற இன்ப உணர்வையும் சுரக்கச்செய்கின்றான் என்பாள் 'அமுது அளித்து ஊறும் ஆனந்தன்' என்கின்றாள். இங்ஙனம் அன்றி அமுதம்போல்வதாகிய திருவடியை அளித்த இன்பவடிவினன் ஆயினும் என்று உரை கூறுவாரும் உளர்.

வான் - பெருமை; ஈண்டுப் பேரின்பத்தை உணர்த்திற்று. வான் வந்த தேவன் - பேரின்பமே வடிவான தேவதேவன் என்பர் பழையவுரைகாரர்.

நன் பொன் மணிச்சுவடு ஒத்த நற்பரி - நல்ல பொன்னிலே அழுத்தப்பெற்ற மணிகளையுடைய சேணங்கள் ஒத்து விளங்குகின்ற நல்ல வேதமாகிய குதிரை. சுவடு - ஏறுவார் கால்வைக்கும் கலனை. நல்ல பொன்னையொத்த திருமேனியிலே மணிகளைப் பதித்தால் ஒத்த குறிகளாகிய புள்ளிகளையுடைய குதிரை என்பாரும் உளர். இப்பொருளில் சுவடு - குறி. நன்னலம் பெறுவதான சீவரத்தினப் பிரகாசம் அவன் இரண்டு திருவடிகளும்; ஞானத்தழும்பேற்ற சிவஞானப் புரவி என்பது பழையவுரை. குதிரைகளுக்குக் கால் சுத்தம் பார்த்தலும் மரபாதலின் நன் பொன்னிலே அழுத்தப்பெற்ற மணியணிகளை உடைய காற் சுத்தமான குதிரை என்றலே செம்பொருளாதல் காண்க.

இதுவும் கிடைத்தற்கரியனாய், நுகர்ச்சி ஒன்றற்கேயுரியனாய் விளங்கும் சிவம் குதிரைவீரனாகவும், கோகழிநாதனாகவும் எளிவந்தும் இன்னும் கூடப்பெற்றிலனே என்று இரங்கி, குயிலைப் பணிகொள்ளுதலின் ஆன்ம இரக்கமாதல் காண்க.

352 *உன்னை யுகப்பன் குயிலே உன்றுணைத் தோழியு மாவன்*
*பொன்னை யழித்தநன் மேனிப் புகழிற் றிகழு மழகன்*
*மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய*
*தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய்.* 7

இ - ள் : குயிலே! உன்னை மிக மகிழ்கின்றேன்; உனக்குத் துணையான தோழியுமாவேன்; பொன்னிறத்தைக் கெடுத்த அதனினும் விஞ்சிய நிறத்தையுடைய திருமேனியோடு, புகழால் விளங்குகின்ற பேரழகனும், மன்னனும், குதிரை மேல் எழுந்தருளிவந்த வள்ளலும், திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளிய பாண்டியன் சேரன் சோழன் ஆகிய மூன்று பேரரசரானவனும், புகழமைந்த புயங்கக் கூத்தாடுபவனும் ஆகிய பெருமான் வரக் கூவுவாயாக என்றவாறு.

இது முப்பேரரசாயும், அரசர்க்கு அரசாயும் விளங்கும் தலைவனை வரக் கூவுக எனப் பணிகொள்வதாக அமைந்தது.

தன் மனத்திற்குகந்த பெண் ஒருத்தியைக் கண்டபோது 'உன்னை எனக்கு நிரம்பப் பிடித்திருக்கிறது; நான் உனக்குத் தோழியில்லையா' என்று பேசிக்கொள்வது பெண்கள் இயல்பு. அந்த நிலையில், தலைவி குயிலைப் பார்த்து, குயிலே! உன்னை உகப்பன்; உன் துணைத் தோழியும் ஆவன் என்கின்றாள். தோழியே துணை செய்பவள்; அங்ஙனமிருக்க உன் துணைத் தோழியும் ஆவன் என்கின்றாள்; ஆபத்து சம்பத்து இரண்டிலும் பங்குபற்றி உடனுறையும் உரிமையுடையவள் ஆவேன் என்பதனை விளக்க.

பொன் - பொன் நிறம். பொன்னை அழித்த நல் மேனி - பொன்னிறத்தைத் தன்னிறத்தால் வென்று கெடுத்த நல்ல மேனி. இது கண்ணுக்கு அழகாய் இருத்தலை உணர்த்தியது. 'புகழில் திகழும் அழகன்' என்றது செவிக்கு அழகானவன் என்பதை உணர்த்தியது.

மன்னன் - நிலைபேறுடையவன். இயங்குவ நிற்பவான எவற்றையும் நிலைபெறச்செய்யும் திருவருளுடையவன். அரசர்களுக்கு வரும் மன்னன் என்பது உபசாரவழக்காய் அரசன் என்னும் பொருளது.

பரி - விரைந்த செலவு. இது தொழிலாகுபெயராய் விரை வினையுடைய குதிரையைக் காட்டியது. எளியனாதலும் இரக்க முடைமையும் வள்ளலியல்புகள். இறைவன் அடியார்க்கு எளியனாய்க் குதிரைவீரனாக வந்தமையின் 'வள்ளல்' என்றார்.

தென்னவன் சேரலன் சோழனென்பது மும்முடிமன்னனாகப் பெருந்துறையைத் தலைநகரமாகவும், தென்னாடாகிய பாண்டி நாட்டைத் தன்னாடாகவும் கொண்டு சேரநாட்டையும் சோழ நாட்டையும் தனதாக்கி ஆள்பவன் என்பதாம்.

புயங்கம் - பாம்பு. அதுபோல அசைந்து ஆடும் ஒருவகை நடனம் புஜங்க நடனம் எனப்படும். அந்த நடனமுடையவன் என்பதாம்.

பழையவுரை ஏ குயிலே! இறைவன் அழகன் உன்னைப் பெரிதும் மகிழ்வான்; உனக்கு உயிர்த்தோழியும் ஆவான் எனத் தலைவன்செயலாக்கி உரைக்கும். தோழி என்பதற்குத் திருவருள் என்பது அவ்வுரை.

அழகும் ஆற்றலும் எளிமையும் கருணையும் உடைய இறைவனையின்றி என்வாழ்வு நிரம்பியதாகாது; அவன் வரக் கூவாய் என்றலின் இது ஆன்ம இரக்கமாயிற்று.

353 *வாவிங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி*
*ஓவி யவருன்னி நிற்ப ஒண்டழல் விண்பிளந் தோங்கி*
*மேவியன் றண்டங் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்*
*தாவி வரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய்.* 8

இ - ள் : இளங்குயிலே! இங்கே வா; திருமாலும் பிரமனும் அடிமுடிகளைத் தேடிக் களைத்துப்போய், அவர்கள் என் செய்வது என்று எண்ணிநிற்ப, ஒளிபொருந்திய பேரழற் பிழம்பாக ஆகாயத்தையும் ஊடுருவிக் கொழுந்துவிட்டு எரிந்து எல்லா அண்டங்களையும் மேவிக்கடந்து விரிந்த தீப் பிழம்பாய் நின்ற திருமேனியையுடையவனும், தாவித்தாவி வருகின்ற குதிரைக்குத் தலைவனும், திருவடிவரை தாழ்ந்து தொங்குகிற சடையையுடையவனும் ஆகிய எமது தலைவன் வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, தலைவி குயிலே! இங்கே வா; மாலும் அயனும் அறியாத திருமேனியை உடையவனும், குதிரைச் சேவகனும், தாழ்சடையோனும் ஆகிய எம் தலைவன் வரக் கூவுக எனப் பணித்தாள் என்கின்றது.

பிள்ளை என்பது இளமைப்பெயர். ஆசிரியனொடு மாணக்கன் வந்தான் என்பதுபோல மாலொடு என்பதில் ஒடு உருபு சிறப்பின்கண்ணது; தேடுதலாகிய ஒருவினை கொண்டது.

ஓவி - ஒழிந்து, செயலற்றுக் களைத்து. உன்னி நிற்ப - யாம் இனிச் செய்வது என்ன என்று எண்ணிக்கொண்டு நிற்க. தீ மேலோங்கி எரியும் இயல்பிற்றுதலின், அன்று விண்பிளந்து ஓங்கி அண்டங்கடந்து மேவி ஒண் தழல் விரிசுடராய் நின்ற மெய்யன் என்றார். ஒண் தழல் விரி சுடர் - ஒளிபொருந்திய தழலோடு கூடிய பரந்த தீ -

தலைவனுடைய பெருமைகளைப் புகல்வதன்வாயிலாக, அத் தலைவனது இன்றியமையாமையைப் புலப்படுத்திக் குயிலைக் கூவி வரவழைக்க வேண்டுதலின் ஆன்ம இரக்கமாயிற்று.

354 காருடைப் பொன் திகழ் மேனிக் கடிபொழில் வாழுங்குயிலே
சீருடைச் செங்கம லத்திற் றிகழுரு வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம றுத்தெனை யாண்ட
ஆருடை யம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய். 9

இ - ள்: கருமைநிறம் படைத்த அழகோடு விளங்குகின்ற உடம்பினையுடைய மணம்பொருந்திய சோலையில் வாழுகின்ற குயிலே! சிறப்போடுகூடிய சிவந்த இதயகமலத்தில் விளங்கு கின்ற ஒளியுருவாகிய செல்வனும், இப்பூமியில் திருவடிகளைத் தரிசிப்பித்து என் பாசங்களைப் போக்கி ஆண்டுகொண்ட, அருமையான பொன்போலும் மேனியையுடைய அமுதம் போல்பவனுமாகிய தலைவனை வரக் கூவுவாயாக என்றவாறு.

இது, குயிலே! இதயகமலத்து எழுந்தருளியிருப்பவனும், அடியேற்குத் திருவடிசூட்டி ஆட்கொண்டவனும், பொன்மேனி படைத்த அமுதம்போல்பவனும் ஆகிய என் தலைவன் வரக் கூவுக என்கின்றது.

கார் உடை மேனி, பொன் திகழ் மேனி எனக் கூட்டுக. குயில் கருமையாகவும் அழகாகவும் இருத்தலின் இங்ஙனம் கூறினள். பொன் - அழகு. குயிலின் நிறத்தில் கருமையும் பொன்மையும் கலந்திருத்தலின் இங்ஙனம் கூறினள் என்றலு மாம்.

கடி பொழில் - மணம் வீசுகின்ற சோலை. கடி - மணம்: உரிச்சொல். செங்கமலம் - செந்தாமரை போலும் பதினறு இதழ்களையுடைய இதயத்தாமரை. காமமாதி ஆறு பகைகட்கும் இடனாக இருந்த இதயத்தைச் சீர்திருத்திச் சிவன் குடிபுகும் கோயிலாகச் செய்தமையால் 'சீருடைச் செங்கமலம்' என்றார். இதயத்தாமரையினிடத்து விளங்குகின்ற உரு கட்டைவிரற் பருமனுள்ள ஒளிப்பிழம்பு. சிவபூசைவிதியில், சிவபெருமானை இதயத்தாமரைநடுவில் கட்டைவிரலளவாக விளங்கும் சோதி வடிவாகத் தியானிக்க என்னும் பத்ததி வாக்கியத்தை நினைக்க. இப்பகுதி தியான உருவாகிய ஞானவடிவம் கூறியது.

பார் - பூமி. இப்பூமியில் எம்மை ஆட்கொள்ள வேண்டி ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளித் திருவடித் தாமரைகளைக் காட்டி, இவைகளே பாசவிமோசன வாயில் என்று உணர்த்தி,

பாசம்நீக்கி ஆட்கொண்டான் என்பார் 'பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம் அறுத்து எனை ஆண்ட அமுது' என்றார். ஆர் உடை அம்பொன் - அரும்பொன். அருமையையுடைய அழகிய பொன், பொன்னை ஒத்த மேனி என்க. அமுது - அமுதம்போல் பவன். அமுது வெண்ணிறமானது, இவர் பொன்னிறமான அமுதம் போன்றவர் என ஏனைய அமுதிற்கும் இவர்க்கும் வேற்றுமை கூறியவாரும். அமுதனை எனப் பாடங்கொள்வாரும் உளர்.

பழையவுரை ஆருடை அம்பொனின் மேனி அமுது என்பதற்கு, நெருங்கிய இன்பத் தனக்கச்சு விளங்கும் அழகிய திருமேனியையுடைய அமுது என உரைகூறும். இவ்வுரையில் ஆர் - நெருக்கம், அம் பொன் - அழகிய பொன்போலும் சுணங்கினையுடைய இன்பத் தனக்கச்சு எனக் கொள்க. ஆர் - ஆத்திமாலையும் ஆம்.

நீ கூவுகின்ற இனிமைகேட்டு எனது இன்றியமையாமையை எண்ணி மனம் கனிந்து அவனே வரக் கூவுக என்றாளாம். இதுவும் தன்னை ஆட்கொண்டு பேரின்பளித்த சிறப்பினைக் கூறித் தற்போதைய பிரிவையும் உணர்த்திக் குயிலை வேண்டுதலின் ஆன்ம இரக்கமாயிற்று.

*355 கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயி லேயிது கேள்நீ*
*அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி*
*எந்தம ராமிவ னென்றிங் கென்னையு மாட்கொண் டருளும்*
*செந்தழல் போற்றிரு மேனித் தேவர்பி ரான்வரக்*
*[கூவாய். 10*

திருச்சிற்றம்பலம்

இ - ள்: பூங்கொத்துக்கள் நெருங்கிய சோலைக்கண் இருந்து கூவுகின்ற குயிலே! நீ இதனைக் கேட்பாயாக; இப் பூமியில் ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளி அழகிய திருவடிகளைத் தரிசிப்பித்து, இவன் எம் சுற்றத்தாருள் ஒருவனும் என்று இங்கு என்னையும் அடிமையாக ஏற்றுக்கொண்ட செந்தீப்போலும் சிவந்த திருமேனியையுடைய தேவர்கள் தலைவனாகிய சிவபெருமான் வரக் கூவுவாயாக என்றவாறு.

குயிலே! இறைவன் எம்மை உறவாக ஏற்று ஆட்கொண்டான்; தீவண்ணத் திருமேனி உடையவன்; அவன் வரக் கூவுக என்பது கருத்து.

பொழில் - மனிதர்களாற் புனையப் பெற்ற பூம்பொழில். சோலை - இயற்கையே வளர்ந்த இளமரக்கா. கொந்து - பூங் கொத்து. குயில் நறுமணம் வீசும் பூஞ்சோலையிலிருந்து கூவு வதைக்கண்ட தலைவி, நீ உல்லாசமாகக் கூவிக்கொண்டிருப்ப தற்கு இடையூறாக ஒரு ஏவலிடப் போகிறேன் என்கின்றவள் 'கொந்தணவும் பொழிற்சோலைக் கூங்குயிலே இது கேள்' என்றாள்.

சிவன் குருவாக வந்து ஆட்கொண்டமையே அடிகளார் மனத்தில் என்றும் நிற்பதால் 'அந்தணனாகி இங்கே வந்து சேவடிகாட்டி' என்கின்றார். தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டிய அருமையினையே ஈண்டு 'அழகிய சேவடி காட்டி' என்றார்.

நம்பியாரூரரைச் சிவபெருமான் 'நந்தமர் ஊரன் என்றான்' என்றது போலச் சிவபெருமான் இவன் எந்தமர் ஆம் என்று ஆட்கொண்டான் என்றார். இவன் எம்மவருள் ஒருவன் ஆம் என வேண்டியன வருவித்துப் பொருள் காண்க. என்னையும் என்றதிலுள்ள உம்மை இழிவுசிறப்பு.

செந்தழல்மேனி யென்றது செந்தழல்போல் திருமேனி என்றது வெப்பமும் ஒளியும் உடைய தழலாகாது, தட்பமும் ஒளியும், கண்ணுக்கினிமையும் பயக்கும் தன்மைத்தாதலின் தழல்போல் என ஒளியால் ஒப்பும், ஏனையவற்றால் உயர்வும் தோன்றக் கூறினார்.

உயிர்கள் வேண்டியவற்றையெல்லாம் ஈவோம் என்றிறு மாக்கும் தேவர்கள் வேண்டிற்றையெல்லாம் வழங்கும் தன்மை யனாகலின் 'தேவர் பிரான்' என்றார். பிரான் - வள்ளன்மை யுடையவன்.

குயிலே! இத்துணை அவதிப்படும் நீ தலைவனிருப்பிடம் நாடிச் செல்லலாகாதோ எனக் கேட்பாயாயின், பெண்தன் மைக்கு இழுக்கு தலைவனை நாடித் தான் செல்லுதல் என்பதை நீயும் உணருவாயாதலின் 'அவன் வரக் கூவாய்' என்றாளாம்.

இது, ஆசான்மூர்த்தியாக வந்து திருவடிசூட்டிப் பேரின்ப மளித்த தலைநாள் மணத்தையும் அதனாற்பெற்ற இன்பத்தையும் நினைந்த தலைவி, இஞ்ஞான்று அதனைப்பெற்றிலமே என்று பிரிவுத்துன்பம் பெரிதாகி இரங்கிக் குயிலைக் கூவி அழைக்க வேண்டுதலின் ஆன்ம இரக்கமாயிற்று.

முதல் பாகம் முற்றிற்று



**திருவாசகம்:** அன்பையே கடவுளாகக் கொண்டு விளங்கும் சைவ சமயத்தின் பத்திப்பனுவல்கள் பன்னிரண்டு திருமுறைகளாகப் பகுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் திருவாசகம் என்னும் இது எட்டாந்திருமுறை.

பல்லாயிரம் கல் தொலைவிற்கப்பால் பிறந்து, புறச்சமயத்தொண்டராகச் செந்தமிழ் நாட்டில் அடிவைத்த போப் அவர்களை தனது பொதுமை உணர்ச்சியால் செந்தமிழ் மாணவனாகச் செய்து, சிறந்த மொழி பெயர்ப்பாளராக மாற்றி அமைத்தது திருவாசகமே! தமிழ் மக்களின் தத்துவக் கூறுபாடுகளையும், முத்தி உபாயத்தையும், முத்தி இன்பத்தையும் முற்றும் அனுபவத்திற்கு ஒத்த வகையில் மொழிவது திருவாசகமே! இத்தகைய திருவாசகத்தில் வைத்த ஈடுபாட்டாலன்றோ இறைவன் கடையூழி வருந்தனிமை கழிக்க,மானிட வடிவு தாங்கி கையேட்டெழுத்தாளராகி ஒரு பிரதி எழுதி வைத்துக் கொண்டார்.

இதனை ஒவ்வொரு தமிழனும் ஞானக்கருவூலமாகக் கருத்திலும் கையிலும் எப்போதும் தாங்க வேண்டுவதன் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தே பல பதிப்புக்களைப் பெரியோர்கள் அன்றும் அளித்தார்கள். இன்றும் அளித்து வருகிறார்கள். இன்று நாம் பெறும்பேறு இப்பதிப்பு.

**உரை சிறப்பு:** திருவாசகத்திற்கு எழுந்த உரைகளில் தலைசிறந்தவற்றுள் ஒன்றாக திகழ்வது மகாவித்துவான். ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரைந்த குருவருள் விளக்கம் என்னும் இவ்வுரை.



சைவ மெய்ஞ்ஞானிகளின் மரபை பொன்னேபோல் போற்றுதல் இவ்வுரையின் மாட்சி. முன் உரையாசிரியர்கள் சிறப்பாக பொருள் உரைத்த இடங்களை கோடிட்டு காட்டல் இவ்வுரையின் சிறப்பு. வேதத்தலை பொருளான உபநிடதக் கருத்துக்களுக்கு உண்மை உரை காட்டி, சித்தாந்தத்தோடு பொருத்திக்காட்டி 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்த திறன்' என நிலைநாட்டுவதும், சிவஞான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள் போன்ற சிவானுபூதிமான்கள் தங்கள் நூல்களில் திருவாசகத்தை மேற்கோள்காட்டி வலியுறுத்திய கருத்துக்களை நமக்கு ஆங்காங்கு எடுத்துக்காட்டுவதும், இவ்வுரையின் தனித்துவம்.

**சிவஞான சுவாமிகள் பேரவை**: சிவஞான போதத்து செம் பொருளை விரித்து விளக்கும் 'சிவஞானமாபாடியம்' அருளிய சிவஞான சுவாமிகள் திருநாமத்தை தாங்கியிருக்கும் இப்பேரவை, திருவாவடுதுறை சைவ சித்தாந்த நேர்முக பயிற்சி மையத்தில் பயின்ற மாணவர்களால் திருவருளை முன்னிறுத்தி 2000-ம் ஆண்டு துவங்கப்பெற்றது.

"நம்முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்று தற்போது கிடைத்தற்கரிய தலைசிறந்த சைவ சித்தாந்த ஞான நூல்களை மீண்டும் அச்சிலேற்றி தமிழ்கூறும் நல்லுலகுக்கு கிடைக்கச் செய்வது", இப்பேரவையின் நோக்கங்களில் ஒன்று.

அத்தகைய முயற்சியின் இரண்டாவது வெளியீடாக தற்போது, தேனினும் இனிய திருவாசகத்திற்கு, மகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர் அவர்கள் வரைந்த, தலைசிறந்த இவ்வுரை, வெளிவருகிறது.

சிவ சிந்தனை மேன்மேலும் தழைத்தோங்க விரும்பும் அனைத்து சிவநேயச் செல்வர்களையும், தலைசிறந்த நூல்களை வெளிக்கொணர ஆர்வம் உள்ளவர் களையும், பேரவையில் இணைந்து ஆதரவு தருமாறு அன்புடன் அழைக்கிறோம்.